# ॥ पञ्चदशी ॥

# பஞ்சதசீ

## இரண்டாம் பாகம்

தஞ்சை மாநகரம்
ஸ்ரீ வெ. குப்புஸ்வாமி ராஜு
(ஸ்ரீ ப்ரஹ்மானந்த ஸ்வாமிகள்)
அவர்கள் தமிழில் எழுதிய
சுலோகார்த்தம், வியாக்கியானம், டிப்பணியாகிய
விளக்கவுரையுடன்

2007

ஸ்ரீ ஞானானந்த நிகேதன்
தபோவனம் அஞ்சல் 605 756
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு

॥ श्री गुरुभ्यो नमः ॥

श्रीमत्परमहंस परिव्राजकाचार्य सार्वभौम

श्री भारतीतीर्थ –श्रीविद्यारण्यमुनिप्रणीता

# ॥ पञ्चदशी ॥

# பஞ்சதசீ

## இரண்டாம் பாகம்


தஞ்சை மாநகரம்

ஸ்ரீ வெ. குப்புஸ்வாமி ராஜு

(ஸ்ரீ ப்ரஹ்மானந்த ஸ்வாமிகள்)

அவர்கள் தமிழில் எழுதிய


சுலோகார்த்தம், வியாக்கியானம், டிப்பணியாகிய

விளக்கவுரையுடன்


2007

ஸ்ரீ ஞானானந்த நிகேதன்

தபோவனம் அஞ்சல் 605 756

விழுப்புரம் மாவட்டம்

தமிழ்நாடு

।। श्री गुरुभ्यो नमः ।।

श्रीमत्परमहंस परिव्राजकाचार्य सार्वभौम

श्री भारतीतीर्थ-श्रीविद्यारण्यमुनिप्रणीता

# ।। पञ्चदशी ।।

# பஞ்சதசீ

## இரண்டாம் பாகம்

தஞ்சை மாநகரம்
ஸ்ரீ வெ. குப்புஸ்வாமி ராஜு
(ஸ்ரீ ப்ரஹ்மானந்த ஸ்வாமிகள்)
அவர்கள் தமிழில் எழுதிய
சுலோகார்த்தம், வியாக்கியானம், டிப்பணியாகிய
விளக்கவுரையுடன்

2007
ஸ்ரீ ஞானானந்த நிகேதன்
தபோவனம் அஞ்சல் 605 756
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு



ஆதிசங்கரரும் அவரது சீடர்களும்



ஸ்ரீ வித்யாரண்யர்



ஸ்ரீமான் வெ. குப்புஸ்வாமி ராஜு

ஓம் தத் ஸத் ப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ பஞ்சதசி.

## ௭. § திருப்திதீபம்.

### ஏழாம்பிரகரணம்.

௧. "ஆத்மாவை யெப்போது அறிகின்றானோ" என்னும் சுருதியிலுள்ள 'புருஷன்' 'யான்' என்னும் பதங்களின் அபிப்பிராயம் (பிரயோஜனத்தோடு புருஷனது சொரூபம்) ௫௪௫-௬௦௨.

நூலாரம்பம் ௫௪௫-௫௪௭.

௧. திருப்திதீப முழுவதிலும் வியாக்கியானஞ்செய்தற்குரிய சுருதியைப் படித்தல்.

[௫௪௫] आत्मानं चेद्विजानीयादयमस्मीति पूरुषः ।
किमिच्छन्कस्य कामाय शरीरमनुसंज्वरेत् ॥ १ ॥

(அ-கை.)

இனித் திருப்திதீப மென்னும் பிரகரணத்தை ஆரம்பிப்பவராய் ஸ்ரீபாரதிதீர்த்தகுருவானவர், அத்திருப்திதீபம் சுருதியின் வியாக்கியானவடிவமாயிருத்தலால் அதன்கண் வியாக்கியானஞ்செய்தற்குரிய பிருகதாரணியகவுபநிஷத்திகன்கணுள்ள சுருதியினை முதலிற் படிக்கின்றார்:—

पूरुषः आत्मानं अयं अस्मि इति विजानीयात् चेत् किं इच्छन् कस्य कामाय शरीरं अनुसंज्वरेत् ॥

(சு-ம்.)

புருஷனாகிய ஜீவன் "ஆத்மாவை இது யானாயிருக்கிறேன்" என்று அறிவானாயின், அப்போது எந்தப் போக்கியவிஷயத்தை இச்சித்து எந்தப் போக்தாவின் போகத்தின்பொருட்டுச் சரீரத்தைப் பின்பற்றித் தாபப்படுவன்.

---

§ அநுகூலவஸ்துவின் அநுபவவடிவ போகத்தின் ஆவிருத்தியுண்டாக எந்தச் சுகமுண்டாகின்றதோ அது திருப்தி யெனப்படுகின்றது. அதனைத் தீபத்தைப் போல விளக்குவதாகிய பிரகரணம் திருப்திதீபமாம்.

௨. கிரந்தத்தின் விசாரமும் பயனும்.

[௫௨௬] अस्याः श्रुतेरभिप्रायः सम्यगत्र विचार्यते ।
जीवन्मुक्तस्य या तृप्तिः सा तेन विशदायते ॥ २ ॥

(அ-கை.)

*இனிச் செய்யக்கருதிய நூலின் விசாரத்தையும் அவ்விசாரத்தின் பயனையும் கூறுகின்றார்:—*

अत्र अस्याः श्रुतेः अभिप्रायः सम्यक् विचार्यते । तेन जीवन्मुक्तस्य या तृप्तिः सा विशदायते ॥

(சு-ம்.)

*இங்கு ௫௨௫-வது ச்லோகத்திற் கூறிய இந்தச் சுருதியின் அபிப்பிராயம் செவ்வையாய் விசாரிக்கப்படுகின்றது. அந்த விசாரத்தினால் ஜீவன் முக்தனுடைய திருப்தி எதுவோ அது விளக்கமாகின்றது.*

(வி-ம்.)

*இத்திருப்திதீப மென்னும் நூலில் "* आत्मानं चेत् *ஆத்மாவை யறிவானை யின்" என்பதை முதலாகவுடைய சுருதியின் அபிப்பிராயம் செவ்வையாய் விசாரிக்கப்படுகின்றது. அச்சுருதியின் அபிப்பிராயத்தை விசாரித்தலால் சுருதியின்கட் பிரசித்தமாயுள்ள ஜீவன்முக்தனது திருப்தி யாதோ அது ஸ்பஷ்டமாகின்றது.* (௨)

**௨. 'புருஷ' னென்னும் பதத்தின் அர்த்தத்தில் உபயோக முள்ள சிருஷ்டியைச் சொல்லுதலோடு 'புருஷன்' என்னும் சொற்பொருள் ௫௨௭-௫௩௦.**

௧. ஈசுவரசாதி சிருஷ்டியைக் கூறுதல்.

[௫௨௭] मायाभासेन जीवेशौ करोतीति तत्वत : ।
कल्पितावेव जीवेशौ ताभ्यां सर्वं प्रकल्पितम् ॥ ३ ॥

(அ-கை.)

*" * ௧. பதச்சேதம், பதங்களின் அர்த்தத்தைக் கூறுதல், * ௨. விக்கிரகம், வாக்கியங்களின் * ௩. யோசனை, சங்கைக்குச் சமாதானம் என்னும் ஐந்திலக்கண முடையது வியாக்கியானமா" மென்று சாஸ்திராந்தரங்களில் வியாக்கியானத்தி னிலக்கணம் கூறப்பட்டிருத்தலால்*

---

* ௧. செய்யுட்களின் பதங்களை வேறு வேறுக்கலை **பதச்சேத** மென்பர்.

*௨. தொகையுடையனவும் வேற்றுமையை ஈறாகவுடையனவுமாகிய பதங்களுக்கு ஏற்ற அர்த்தத்தை யனுசரித்து அவற்றை வேறு வேறுக்கி அறிவித்தல் **விக்கிரகம்.**

* ௩. யோசனை = அந்வயம் = பொருத்தம்.

சுலோகம் ௫௮௫-ல் கூறிய சுருதியின்கண்ணுள்ள "புருஷ" னென்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுதற்கு அந்தப் 'புருஷ' னென்னும் பதத்தினது அர்த்தத்தின் உபோற்காதத்தன்மையினால் சிருஷ்டியினைச் சுருக்கமாய்க் காட்டுகின்றார்:—

माया आभासेन जीवेशौ करोति इति श्रुतत्वतः जीवेशौ कल्पितौ एव । ताभ्यां सर्वं प्रकल्पितम् ॥

(சு-ம்.)

"மாயையானது ஆபாஸமாக ஜீவனையும் ஈசனையும் செய்கின்றது." என்று கேட்கப்பட்டிருத்தலால் ஜீவேசுவரர்கள் கற்பிதர்களே. அவ்விருவராலும் யாவும் கற்பிக்கப்பட்டனவாம்.

(வி-ம்.)

சொல்லத்தக்க பொருளைப் புத்தியிற் செவ்வையாகக்கொண்டு அதன் பொருட்டு வேறுபொருளைக் கூறுதல் உபோற்காதமாம். இங்கு மூலசுலோகத்தில் மாயை யென்னும்சொல்லால் சிதாநந்தவடிவமாகிய பிரஹ்மத்தின் பிரதிபிம்பத்தோடுகூடியதும், சத்துவரஜதமோகுணவடிவினதுமான ஜகத்தின் உபாதானமாகிய பிரகிருதி சொல்லப்படுகின்றது. அப்பிரகிருதி சத்துவகுணத்தின் சுத்தி அசுத்திகளால் இருவகைப்பேதத்தை யடைந்து கிரமமாக மாயையும் அவித்தையு மாகின்றது. அம்மாயையவித்தைகளில் பிரதிபிம்பத்தையடைந்த பிரஹ்மசைதன்னியமே ஈசுவர னென்றும் ஜீவ னென்றும் சொல்லப்படுகின்றது. அத்தன்மைய இதனைப் பிரத்தியக்தத்துவவிவேகமென்னும் நூலில் ஸ்ரீ வித்தியாரண்யகுருவானவர் நிரூபணஞ்செய்திருக்கின்றனர்.

"சிதாநந்தமயமாகிய பிரஹ்மம் யாதோ அதன் பிரதிபிம்பத்தோடுகூடியதான தமோரஜோசத்துவகுணவடிவினது பிரகிருதியாம். அப்பிரகிருதி மீண்டும் இருவகைத்தாம். (௧௫)"

"அப்பிரகிருதியின் இருவகையான சத்துவகுணத்தின் சுத்தி அசுத்திகளால் மாயையையும் அவித்தையையும் கொண்டிருக்கின்றனர். மாயையில் பிரதிபிம்பத்தையடைந்த பரமாத்மா அந்த மாயையை வசஞ்செய்து சர்வஞ்ஞ ஈசுவரனாகின்றார். (௧௬)"

"அவித்தையின் வசமாகிய அந்நியன் (ஜீவன்), அவ்வவித்தையின் விசித்திரத்தன்மையினால் அநேகவித மாகின்றான். அவ்வவித்தை காரணசரீரமாகின்றது. அதனிடத் தபிமானமுடையவனான ஜீவன் பிராஞ்ஞனாகின்றான். (௧௭)"

என்னும் பிரத்தியக்தத்துவவிவேகத்தினது சுலோகங்களின் அர்த்தத்தினையே மனதில் வைத்துக்கொண்டு "जीवेशावाभासेन करोति माया चाविद्या च स्वय-

मेव भवति ஜீவேசுவரர்களை ஆபாசமாகச் செய்கின்றது. மாயையும் அவித்தை யும் தானே(பிரகிருதியே)யாகின்றது." என்று சுருதியும் பிரவர்த்தித்தது. ஆதலால் ஜீவேசுவரர்களுக்கு மாயையினுற் கற்பிக்கப்படுந்தன்மை யுண்டு. மற்றைய எல்லா ஜகத்தும் அவ்விருவராலுமே கற்பிக்கப்பட்டனவாம். (க)

[ருஅஅ] ईक्षणादिप्रवेशांता सृष्टिरीशेन कल्पिता ।
जाग्रदादिविमोक्षांतः संसारो जीवकल्पितः ॥४॥

(அ-கை.)

அப்படியானுல் ஜீவேசுவரர் இருவருள்ளும் யாவர் எத்துணைச் சகத்தைக் கற்பித்திருக்கின்றூர்களென அங்குக் கூறுகின்றூர்:—

ईक्षणादिप्रवेशान्ता सृष्टिः ईशेन कल्पिता जाग्रदादिविमोक्षान्तः संसारः जीव-कल्पितः ॥

(சு-ம்.)

"ஈக்ஷண" முதற் "பிரவேச" பரியந்தமான சிருஷ்டியானது ஈசுவரனுல் கற்பிக்கப்பட்டது "ஜாக்கிர" முதல் "மோக்ஷ" பரியந்தமான சம்சாரம் ஜீவனுற் கற்பிக்கப்பட்டது.

(வி-ம்.)

"तदैक्षत बहुस्यां प्रजायेय அந்தப் பிரஹ்மம், 'நான் அநேகமாவேனுக. மிகுதியாக ஆவேனுக.' என்று ஈக்ஷணம் செய்தது" என்னும் சுருதியினுல் சிரவணம்செய்யப்பட்ட ஈக்ஷணமாகிய அவலோகனவடிவ ஞானம் யாதோ அது எதற்கு ஆதியாயிருக்கின்றதோ அப்படிப்பட்ட சிருஷ்டி ஈக்ஷணுதியெனப்படுகின்றது. "अनेन जीवेनात्मनानुप्रविश्य இவர் ஜீவரூப ஆத்மாவாக அதாவது சொரூபமாகப் பின் பிரவேசித்து" என்னும் சுருதியினுல் கேட்கப்பட்ட பிரவேசம் யாதோ அது எதற்கந்தமாயிருக்கின்றதோ அப்படிப்பட்ட சிருஷ்டி பிரவேசாந்தமெனப்படுகின்றது. இவ்வாற்றுல் "ஈக்ஷணுதிப் பிரவேசாந்த" மாயுள்ள இந்தச் சிருஷ்டி யாதோ அது ஈசுவரனுற் கற்பிக்கப்பட்டதாம். ஜாக்கிராவஸ்தை எதற்கு ஆதியாயிருக்கின்றதோ அப்படிப்பட்ட இச்சம்சாரம் ஜாக்கிராதி யெனப்படுகின்றது. விமோக்ஷம் அதாவது முக்தி எதற்கந்தமாயிருக்கின்றதோ அப்படிப்பட்ட சம்சாரம் விமோக்ஷாந்தமெனப்படுகின்றது. இவ்வாற்றுல் "ஜாக்கிராதி விமோக்ஷாந்த" மான சம்சாரம் யாதோ அது ஜீவனுற் கற்பிக்கப்பட்டதாம். ஏனெனின், ஜீவன் அதற்கு அபிமானியாயிருத்தலால் என்பது பொருள். அந்த ஜாக்கிரமுதலியன இவ்வாறு சுருதியிற் கேட்கப்பட்டிருக்கின்றன;—

" स एष मायापरिमोहितात्मा शरीरमास्थाय करोति सर्वं । स्त्रीअन्नपानादिविचित्रभोगैः स एव जाग्रत्परितृप्तिमेति ॥" " स्वप्नेपि जीवः सुखदुःखभोक्ता स्वमायया कल्पितविश्वलोके । सुषुप्तिकाले सकले विलीने तमोऽभिभूतसुखरूपमेति ॥" " पुनश्च जन्मान्तरकर्मयोगात् स एव जीवः स्वपिति प्रबुद्धः । पुरत्रये क्रीडति यश्च जीवस्ततस्तु जातं सकलं विचित्रं ॥" " जाग्रत्स्वप्नसुषुप्त्यादिप्रपञ्चं यत्प्रकाशते । तद्ब्रह्माहमिति ज्ञात्वा सर्वबन्धैः प्रमुच्यते ॥ "

(க) "அந்தச் சீவன் எதன் ஆத்மமாயையினால் நாற்புறமும் மோகிக்கப் பட்டதா யிருக்கின்றதோ, அப்படிப்பட்டவனாய்ச் சரீரத்தை ஆசிரயித்து அதாவது அபிமானித்து,கர்மங்க ளெல்லாவற்றையும் செய்கின்றான். பெண், அன்னம், பானமுதலிய விசித்திரபோகங்களினால் அந்த ஜீவனே ஜாக்கிரத்தில் திருப்தியடைகின்றான்."

(உ) "சொப்பனத்திலும் ஜீவன் தனது மாயையினாற் கற்பிக்கப்பட்ட சகல லோகங்களிலும் சுகதுக்கங்களின் போக்தாவாகின்றான். சுழுத்தியில் எல்லாம் ஒடுங்கத் தமஸாகிய அஞ்ஞானத்தினால் ஆவரிக்கப்பட்டவனாய்ச் சுகரூபத்தை யடைகின்றான்."

(ங) " மீண்டும் ஜன்மாந்திரத்தின் கர்மயோகத்தால் அந்த ஜீவனே சொப்பனத்தை அல்லது ஜாக்கிரத்தை யடைகின்றான். எந்த ஜீவன் மூன் றவஸ்தையாகிய அல்லது சரீரமாகிய புரங்களில் கிரீடை செய்கின்றானோ அவனால் சகலவிசித்திரமாகிய மனோமயமான ஜகத்தும் உண்டாயிருக்கின் றது."

(ச) " ஜாக்கிரசொப்பன சுழுத்திமுதலிய பிரபஞ்சத்தை எது பிரகாசிக்கின்றதோ அந்தப் பிரஹ்மம் நான் என்றறிந்து சர்வபந்தங்களினின் றும் முக்தமாகின்றான்." (ச)

உ. " புருஷன் " என்னும் சொற்பொருள்.

[ருஅக] असमाधिष्ठानभूतात्मा कूटस्थासंगचिद्वपुः ।
अन्योऽन्याध्यासतोऽसंगधीस्थजीवोऽत्र पूरुषः ॥ ६ ॥

(அ-கை.)

இவ்வாறு புருஷ னென்னும் சொல்லினது பொருளின் போதத்தில் உபயோகமுள்ளதாகிய சிருஷ்டியினைக் கூறி, இப்போது புருஷ னென்னும் சொல்லின் பொருளைக் கூறுகின்றார்:—

कूटस्थासंगचिद्वपुः असमाधिष्ठानभूतात्मा अन्योन्याध्यासतः असंगधीस्थजीवः अत्र पूरुषः ॥

(சு-ம்.)

கூடஸ்த அசங்க சித்தாகிய சரீரமுடையது பிரமத்திற்கு அதிஷ்டான வடிவ ஆத்மாவாம். அது அந்நியோந்நியாத்தியாசத்தினால் அசங்கபுத்தியிலிருக்கும் ஜீவனைய் இங்கு ௫௮௫-வது சுலோகத்திற் கூறிய சுருதியில் புருஷன் என்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

அவிகாரியும் அசங்கசேதனசொரூபமும் தேகேந்திரியமுதலியவற்றின் அத்தியாசவடிவப்பிரமத்திற்கு அதிஷ்டானவடிவமாகிய பரமாத்மாயாதோ அவ்வசங்கமே அந்நியோந்நியாத்தியாசத்தினால் அதாவது "பரஸ்பரத்தின் சொரூபத்தினையும் பரஸ்பரத்தின் தர்மங்களையும் * ௪. அத்தியாசஞ்செய்து சகல விவகாரங்களையும் பஜிப்பதாகின்றது." என்று உத்திரமீமாம்சையின் முதலத்தியாயத்தின் முதற்பாதத்திலுள்ள முதற்சூத்திரத்தின் பாஷியத்தில் ஆசாரியர் நிரூபணஞ்செய்திருக்கின்ற தாதாத்மிய அத்தியாசத்தினால் அசங்கபுத்தியிலிருக்கும் அதாவது தன்னோடு பாரமார்த்திகசம்பந்தமின்றிய புத்தியிலிருக்கின்ற ஜீவனைய் இந்த ௫௮௫-வதிற் கூறிய சுருதியில் புருஷனென்று சொல்லப்படுகின்றது. ஏனெனின், "स वा अयं पूरुषः सर्वासु पूर्षु पुरिशयः அந்த இப்புருஷன் சகல சரீரவடிவ புரிகளிலும் பூரணனை

---

* ௪. அதிஷ்டானத்தினும் விஷமசத்தையுடைய அவபாசம் (விஷயமும் ஞானமும்), அல்லது தனது அபாவமுடைய அதிகரணத்தில் தனது அவபாசம் அத்தியாசமெனப்படுகின்றது. அவ்வத்தியாசம் ஞானாத்தியாச அர்த்தாத்தியாசங்களின் பேதத்தால் இருவகையாம்.

(௧) பிறவற்றில் பிறவற்றின் பிரதீதி ஞானாத்தியாசம்.

(௨) அந்தப் பிரமஞானத்தின் விஷயம் அர்த்தாத்தியாசமாம்.

அவற்றுள், பரோக்ஷம் அபரோக்ஷமென்னும் பேதத்தால் ஞானாத்தியாசம் இருவகைத்தாம். அர்த்தாத்தியாசமும் அதாவது விஷயாத்தியாசமும் கேவலசம்பந்த (சம்ஸர்க்க)த்தின் அத்தியாசம்,சம்பந்தவிசிஷ்ட சம்பந்தியின் அத்தியாசம்,கேவல தர்மத்தின் அத்தியாசம், தர்மவிசிஷ்ட தர்மியின் அத்தியாசம் அந்நியோந்நியாத்தியாசம் அந்நியதராத்தியாசம் என்னும் பேதத்தால் ஆறுவகையாம்.

அல்லது கேவலசம்பந்தாத்தியாசம் சம்சர்க்காத்தியாசவடிவமாயிருத்தலாலும், அந்நியோந்நியாத்தியாசம் சகல அத்தியாசங்களிலும் கலந்திருத்தலாலும், அந்நியதராத்தியாசம் கேவல தர்மாத்தியாசம் தர்மசகிததர்மியின் அத்தியாசம் என்பவை சம்பந்தசகிதசம்பந்தத்தின் அத்தியாசவடிவமாதலாலும்,[௧]சொரூபாத்தியாச [௨]சம்சர்க்காத்தியாச பேதத்தால் அர்த்தாத்தியாசம் இருவகைத்தாம். அவற்றில் முற்கூறிய ஆறு பேதங்களும் அடங்கும். இது ஸ்ரீபாலபோதத்தின் ௭௪-வது பிரசங்கத்தில் இலக்ஷணாவலியிலும் எழுதப்பட்டிருக்கிறது.

யிருக்கின்றான்." என்னும் சுருதியினால் புருஷனென்னும் சொல்லிற்குப் பொருள் செய்யப்பட்டது. ஆதலால் புத்திமுதலியவற்றின் கற்பனைக்கு அதிஷ்டானமாகிய கூடஸ்தசைதன்யமே புத்தியில் பிரதிபிம்பவடிவமாய் ஜீவத்தன்மையை அடைந்து புருஷசப்தத்தினாற் சொல்லப்படுகின்றது. சாபாச அந்தக்கரண விசிஷ்டசைதன்யவடிவ ஜீவன் புருஷனென்னும் சொல்லிற்குப் பொருளாம் என்பது அபிப்பிராயம். (௫)

---

[க] (க) "யான் அஞ்ஞனாயிருக்கின்றேன்." என்று அஞ்ஞானத்தின் அத்தியாசம் சுத்தசைதன்னியத்தி லிருக்கின்றது.

(ங) "யானிருக்கிறேன்." என்று அஞ்ஞானவுபகிதசேதனத்தில் அகங்காரமாகிய அந்தக்கரணத்தின் அத்தியாச முண்டாகின்றது.

(ச) "யான் சுகி, யான் துக்கி, யான் கர்த்தா, யான் போக்தா." என்று சுகம், துக்கம், காமம், சங்கற்பமுதலிய அந்தக்கரணதர்மங்களின் அத்தியாசம் அந்தக்கரண உபகிதசேதனத்தில் அத்தியாசமாகின்றது.

(ஞ) "யான் காணன் அதாவது ஒற்றைக்கண்ணன்,குருடன், செவிடன், காண்கின்றேன், கேட்கின்றேன், நடக்கின்றேன், பேசுகின்றேன்." என்று இந்திரியங்களினது தர்மங்களின் அத்தியாசமும் அந்தக்கரணஉபகிதசேதனத்தி லுண்டாகின்றது.

(ட) "யான் மனிதன், பாலகன், யௌவனமுடையோன், பிராஹ்மணன்." என்றல்முதலிய தர்மத்தோடுகூடிய தேகத்தின் அத்தியாசம் அந்தக்கரண இந்திரியங்களினது தர்ம உபகிதசேதனத்தில் உண்டாகின்றது.

(ண) "நான் பருத்தவன், இளைத்தவன், சிவத்தவன், கருத்தவன்." என்றல் முதலியதேகத்தினது தர்மங்களின் அத்தியாசம் தேக உபகிதசேதனத்தி லுண்டாகின்றது.புத்திரன் ஸ்திரீமுதலியவற்றின் சுகதுக்கமுதலிய தர்மங்களது அத்தியாசம் தேகதர்மவுபகிதசேதனத்தி லுண்டாகின்றது.

இந்திரியத்திற்கும் தேகத்திற்கும் சொரூபமாகக் கூடஸ்தனிடத்து அத்தியாசமில்லை ; பிரஹ்மசேதனத்தினிடத்திலேயே இருக்கின்றது. ஆனால் தர்மத்தோடு கூடிய அவற்றின் அபேதப்பிரதீதி கூடஸ்தனிடத்து உண்டாகின்றது. "யான் கண்; யான் தேகம்." என்று கேவல இந்திரியதேகங்களின் அபேதவுணர்ச்சி யுண்டாகிறதில்லை.

இவ்வாற்றால் அஞ்ஞானமுதலியவற்றின் சொரூபாத்தியாசம் சேதனத்திலிருக்கின்றது.

[உ] ஆநந்தமுதலிய தர்மங்களோடுகூடிய சேதனத்தின் சம்சர்க்காத்தியாசம் அஞ்ஞானமுதலியவற்றில் இருக்கின்றது.

எங்குப் பதார்த்தத்தின் சொரூபம் அநிர்வசநீயமாக உற்பத்தியாகின்றதோ அங்குச் சொரூபாத்தியாசம் சொல்லப்படுகின்றது. எங்குப் பதார்த்தத்தின் சொரூபமோ வியாவகாரிகமாவாவது பாரமார்த்திகமாகவாவது முதலிற் பெறப்பட்டதாய் அதன் அநிர்வசநீயசம்பந்தம் உற்பத்தியாகின்றதோ அங்குச் சம்சர்க்காத்தியாசம் சொல்லப்படுகின்றது.

இவ்வாற்றால் ஆத்மாவிற்கும் அநாத்மாவிற்கும் அந்நியோந்நிய அதாவது பரஸ்பர அத்தியாச மிருக்கின்றதென்பது சுருக்கமாகக் காட்டப்பட்டது. இவை சாரீரகத்திலும் அதன் வியாக்கியானங்களிலும் விஸ்தாரமாக இருக்கின்றன.

௬. பந்தமோக்ஷத்தில் அதிஷ்டான கூடஸ்தனோடுகூடிய சிதாபாசனுக் கதிகாரமுண்மை.

[௫௬௦] साधिष्ठानो विमोक्षादौ जीवोऽधिक्रियते न तु ।
केवलो निरधिष्ठानविभ्रांतः क्वाप्यसिद्धितः ॥ ६ ॥

(அ-கை.)

அப்படியானால் இந்தச் சுருதியில் "புருஷ" னென்னும் சொல்லினால் கேவலம் சிதாபாசவடிவ ஜீவனையே சொல்லுதல் வேண்டும். இவ்வதிஷ்டான வடிவ கூடஸ்தசைதன்னியத்தினால் என்ன பிரயோஜனம்? என்றாசங்கித்து, அந்தச் சிதாபாசனுக்கு மோக்ஷமுதலியவற்றில் சம்பந்தமுடைமை சித்தித் தற்பொருட்டு அவ்வதிஷ்டானசைதன்னியமும் அங்கீகரிக்கத்தக்கதாம் என்று கூறுகின்றார்:—

साधिष्ठानः जीवः विमोक्षादौ अधिक्रियते न तु केवलः ॥

(சு-ம்.)

அதிஷ்டானத்தோடுகூடிய ஜீவன் மோக்ஷமுதலியவற்றில் அதிகாரி யாகின்றான்; கேவலனாகிறதில்லை.

(வி-ம்.)

அதிஷ்டானமாகிய கூடஸ்தசைதன்னியத்தோடுகூடிய ஜீவனாகிய சிதாபாசன் மோக்ஷம் சுவர்க்கமுதலிய சாதனங்களை அநுஷ்டித்தலில் அதிகாரியாகின்றான்; கேவல சிதாபாசன் அதிகாரியாகிறதில்லை.

(அ-கை.)

கேவல சிதாபாசன் எதனால் மோக்ஷமுதலியவற்றில் அதிகாரியாகிற தில்லை யெனக் கூறுகின்றார்:—

क्व अपि निराधिष्ठानविभ्रान्तेः असिद्धितः ॥

(சு-ம்.)

ஓரிடத்தும் அதிஷ்டானமின்றிய பிராந்தியின் பெறுதியின்மையால்.

(வி-ம்.)

அதிஷ்டானமின்றிய ஆரோபிதவஸ்துவை உலகத்திற் கண்டதில்லை யாகலின் என்பது தாற்பரியம். (௬)

௩. " அகம் அஸ்மி=யானிருக்கிறேன் " என்னும் பதத்தின் அர்த்தத்தில்
அகம் (யான்) என்னும் பதத்தினது அர்த்தத்தின்
விவேகம் ௫௬௧-௬௦௨.

க. " அகம் " " அஸ்மி " என்னும் பதங்களின் அர்த்தத்தோடு ஜீவனது சம்
ஸாரமும் மோக்ஷத்தின் விபாகமும்.

[௫௬௧] अधिष्ठानांशसंयुक्तं भ्रमांशमवलंबते ।
यदा तदाहं संसारीत्येवं जीवोऽभिमन्यते ॥ ७ ॥

(அ-கை.)

இப்போது அதிஷ்டானத்தோடுகூடிய சிதாபாசனுக்கே சம்ஸாரமுத லியவற்றோடு சம்பந்தமுடைமையா மென்பதனை இரண்டு சுலோகங்களாற் பிரித்துக் காட்டுகின்றார்:—

जीवः यदा अधिष्ठानांशसंयुक्तं भ्रमांशं अवलम्बते । तदा अहं संसारी इति एवं अभिमन्यते ॥

(சு-ம்.)

ஜீவன் எப்போது அதிஷ்டானத்தின் அம்சத்தோடுகூடியதாகிய மயக்க அம்சத்தை ஆசிரயிக்கின்றானோ அப்போது " யான் சம்சாரி " என்று இவ் வாறு அபிமானிக்கின்றான்.

(வி-ம்.)

ஜீவன் எப்போது அதிஷ்டான அம்சவடிவ கூடஸ்தனோடுகூடிய பிரம அம்சவடிவ சிதாபாசனோடுகூடிய இரண்டுசரீரங்களையும் ஆசிரயிக்கின் றானோ அதாவது தனது சொரூபமாக அங்கீகரிக்கின்றானோ அப்போது "யான் சம்சாரி" யென்று அபிமானிக்கின்றான். (எ)

[௫௬௨] भ्रमांशस्य तिरस्कारादधिष्ठानप्रधानता ।
यदा तदा चिदात्माहमसंगोस्मीति बुध्यते ॥ ८ ॥

(அ-கை.)

இதுவுமது:—

यदा भ्रमांशस्य तिरस्कारात् अधिष्ठानप्रधानता । तदा अहं चिदात्मा असङ्गः अस्मि इति बुध्यते ॥

(சு-ம்.)

எப்போது பிரமஅம்சத்தின் நீக்கத்தால் அதிஷ்டானத்தின் பிரதானத்தன்மை ஜீவனால் மதிக்கப்படுகின்றதோ அப்போது யான் சிதாத்மாவாகிய அசங்கனாயிருக்கின்றேன் என்று ஜீவன் அறிகிறான்.

(வி-஘.)

எப்போது மீண்டும் இரண்டு தேகத்தோடுகூடிய சிதாபாசவடிவ பிரமாம்சத்தைத் திரஸ்கரித்தலால் அதாவது மித்தியாத்தன்மைஞானத்தினால் அநாதரஞ்செய்தலால் அதிஷ்டானவடிவ கூடஸ்தனது பிரதானத்தன்மையாகிய ஸ்வசொரூபத்தன்மை ஜீவனால் கொள்ளப்படுகின்றதோ அப்போது "யான் சிதாத்மாவாகிய அசங்கனாயிருக்கின்றேன்" என்று ஜீவன் அறிகின்றான். (அ)

உ. கூடஸ்தனுக்கு "அகம்" என்னும் உணர்ச்சிக்கு விஷயமாதலின்மையின் சங்கையும், "அகம்" என்னும் சப்தத்தின் அர்த்தத்தினது பிரிவால் சமாதானமும்.

[௩௧௯] नासंगेऽहंकृतिर्युक्ता कथमस्मीति चेच्छृणु ।
एको मुख्यो द्वावमुख्यावित्यर्थस्त्रिविधोऽहमः ॥ ९ ॥

(அ-கை.)

அப்படியானால் "அதிஷ்டானசைதன்யத்திற்கு ஜீவனது சொரூபத்தன்மையை அங்கீகாரஞ்செய்து 'நான் சிதாத்மாவாகிய அசங்கனாயிருக்கிறே, னென்று ஜீவன் அறிகின்றான்" என்று சொல்லப்பட்டது. அது அயுக்தமாகும்; அசங்கசேதனமாகிய கூடஸ்தனுக்கு யானென்னும் பிரத்தியயத்திற்கு விஷயமாதலின்மையால் என்றிவ்வாறு வாதி மூலசுலோகத்திற் சங்கிக்கின்றான்:—

असंगे अहंकृतिः युक्ता कथं "अस्मि" इति चेत् ॥

(சு-ம்.)

அசங்கனிடத்து அகங்காரம் பொருத்தமுடையது அன்று; அதனால் எப்படி யான் அசங்கனாயிருக்கின்றேன் என்று ஜீவன் அறிவன்? என்று கூறின்.

(வி-ம்.)

அகம்பிரத்தியயத்திற்கு அதாவது யான் என்னும் வடிவினதாகிய சப்தத்திற்கும் விருத்திக்கும் விஷயமாகாத அசங்கசிதாத்மாவினிடத்து எதனால் அகம்பிரத்தியயம் பொருந்தாதோ, அதனால் எவ்வாறு "யான் அசங்க சிதாத்மா" வென்று ஜீவனறிவான்? எவ்விதத்தாலும் அறியான் என்பது பொருள்.

(அ-கை.)

சப்தத்தின் முக்கியவிருத்தியாகிய சக்திவிருத்தியினால் ஆத்மாவிற்கு அசம்பிரத்தியத்திற்கு (அகம்சப்தத்திற்கு) விஷயமாந்தன்மை யில்லையாயினும், இலக்ஷணாவிருத்தியினால் * ௫. அசம்பிரத்தியத்திற்கு விஷயமாந்தன்மை யுண்டென்று சொல்லக்கருதிய ஆசிரியர் அகம்சப்தத்தின் அர்த்தத்தை விபாகஞ்செய்கின்றார்:—

श्रुणु । एकः मुख्यः द्वौ अमुख्यौ इति अहमः त्रिविधः अर्थः ॥

(ப-ம்.)

வாதியே! கேள். ஒன்று முக்கியம், இரண்டு அமுக்கியம் என்பதுயானென்பதின் மூன்றுவித அர்த்தமாம். (௧)

௫. "அகம்" என்னும் சப்தத்தின் முக்கியார்த்தம்.

[௫௧௮] अन्योन्याध्यासरूपेण कूटस्थाभासयोर्वपुः ।
एकीभूय भवेन्मुख्यस्तत्र मूढैः प्रयुज्यते ॥ १० ॥

(அ-கை.)

அகமெனும் சொல்லின் முக்கியார்த்தம் எத்தன்மையதாம்? என்னும் ஆகாங்க்ஷையாகிய அவாய்நிலையுண்டாக அந்த அகமென்னும் சொல்லின் முக்கியார்த்தத்தைக் காட்டுகின்றார்:—

कूटस्थाभासयोः वपुः अन्योऽन्याध्यासरूपेण एकीभूय मुख्यः भवेत् ॥

---

சக்தியார்த்தம்
* ௫. "அக" மென்னும் சொல்லின் முக்கிய அர்த்தமாகிய சாபாச அந்தக்கரணவிசிஷ்டசேதனமாம்; அதுவே அகமெனும் சொல்லிற்கு விஷயமாம். சுத்தசைதன்னியம் அகமெனும் சொல்லின் முக்கியப்பொருளன்று. ஆதலால் அதன் விஷயமு மன்று. ஆனால் பாகத்தியாகலக்ஷணையினால் ஸாபாஸ அந்தக்கரணம் அல்லது சேதன மென்னும் இரண்டினின்றும் இலௌகிக வைதிகப்பிரசங்காநுசார மாக ஒருபாகத்தை விட்டு மிஞ்சிய ஒருபாகம் யானென்னும் சொல்லின் இலக்ஷியார்த்தமாம். அதுவே அகமென்னும் சொல்லின் அமுக்கியார்த்த மெனப்படுகின்றது. இவ்வாறு இலக்ஷணாவிருத்தியினால் சுத்தசைதன்யத்திற்கு அகமெனும் சொல்லிற்கு விஷயமாந்தன்மை யிருக்கின்றது. விருத்திக்கு விஷயமாந்தன்மையோ சத்தத்தினது விஷயத்தன்மையின் அதீனமாம்; ஆதலால் இலக்ஷணையினால் சேதனத்திற்கு அகமெனும் விருத்திக்கு விஷயமாந்தன்மையும் சொல்லப்படுகின்றது. தன்னைப் பிரகாசிக்கும் சைதன்யத்தினது ஆவரணத்தின் நிவிருத்தியே இங்கு விருத்திக்கு விஷயமாந்தன்மையாம்; வேறுவகையாக இல்லை. இங்கு ஸாபாஸ அந்தக்கரணத்தோடுகூடிய சேதனவடிவ அகமென்னும் சப்தத்தின் வாச்சியார்த்தத்திற்கு நடத்தல்முதலிய உலகவிவகாரத்திலேனும் ஞானதிருஷ்டிவடிவ வைதிகவியவகாரத்திலேனும் சம்பவமின்மையே இலக்ஷணையின் பீஜமாம்.

(சு-ம்.)

கூடஸ்த ஆபாசர்களின் சொரூபம் அந்யோந்யாத்தியாசத்தால் ஒன்றாய் யானென்னும் சொல்லின் முக்கியார்த்தமாகின்றது.

(வி-ம்.)

கூடஸ்தசிதாபாசர்களென்னும் இருவருடைய சொரூபமும் அந்யோந்யாத்தியாசத்தினால் ஒருமையையடைந்திருக்கின்றது. அது யானென்னும் சொல்லிற்கு வாச்சியமாகுதலால் முக்கியார்த்தமாகின்றது.

(அ-கை.)

இந்தக் கலந்த கூடஸ்தசிதாபாசர்களின் சொரூபத்திற்கு முக்கியத்தன்மை எதனாலிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

तत्र मूढैः प्रयुज्यते ॥

(சு-ம்.)

அதனிடத்து மூடர்களால் யானென்னும் சொல் பொருந்தப்படுகின்றது.

(வி-ம்.)

அந்த விவேகிக்கப்படாத கூடஸ்தசிதாபாசர்களின் சொருபத்தில் எதனால் விவேகஞானமின்றிய எல்லா ஜனங்களாலும் யானென்னும் சொல் பொருந்தப்படுகின்றதோ, அதனால் இந்தச் சேர்ந்துள்ள கூடஸ்தசிதாபாசர்களின் சொரூபத்திற்கு முக்கியத்தன்மை அதாவது யானென்னும் சொல்லிற்கு முக்கியப்பொருளாதல் உண்டென்பது பொருள். (௧0)

௭. "அகம்" என்னும் சொல்லின் இருவகை அமுக்கியப்பொருள்.

[ருகூரு] पृथगाभासकूटस्थावमुख्यौ तत्र तत्त्ववित् ।
पर्यायेण प्रयुंक्तेऽहंशब्दं लोके च वैदिके ॥ ११ ॥

(அ-கை.)

இப்போது அமுக்கியமான இரண்டு அகம் சப்தப்பொருள்களையும் காட்டுகின்றார்:—

पृथक् आभासकूटस्थौ अमुख्यौ ॥

(சு-ம்.)

பின்னமான ஆபாச கூடஸ்தர்கள் அகம்சப்தத்தின் அமுக்கியப்பொருளாவர்.

(வி-ம்.)

ஆபாச கூடஸ்தர்கள் ஒவ்வொருவரும் அகம் சப்தத்திற்குப் பொரு
ளாக எப்பொழுது சொல்லக்கருதப்படுகின்றனரோ அப்போது அந்த அகம்
சப்தத்திற்கு அமுக்கியப்பொருள் அதாவது இலக்ஷியப்பொருளாகின்
றனர்.

(அ-கை.)

பின்னான ஆபாச கூடஸ்தர்களிருவர்களின் அமுக்கியத்தன்மையில் காரணத்தைக் கூறுகின்றார்:—

तत्त्ववित् तत्र अहंशब्दं लोके च वैदिके पर्यायेण प्रयुंक्ते ॥

(சு-ம்.)

தத்துவஞானி அவ்விரண்டிலும் இலௌகிக வைதிக வியவகாரங்களில் பரியாயமாக யானென்னும் சொல்லைப் பிரயோகிக்கின்றான்.

(வி-ம்.)

தத்துவஞானியாகிய புருடன் எதனால் அந்தச் சிதாபாச கூடஸ்தர்
ளிடத்து அகம்சப்தத்தை இலௌகிக வைதிக வியவகாரங்களின் பரியா
யமாக அதாவது கிரமமாக உச்சரிக்கின்றானோ, அதனால் ஆபாசனும்
கூடஸ்தனும் தனித்தனி அகம்சப்தத்திற்கு அமுக்கியார்த்தராவர் என்
பது யோசனையாம் அதாவது பொருத்தமாம். இதன் கருத்து இதுவாம்:-
சிதாபாச கூடஸ்தர்களின் விவேகிக்கப்படாத வடிவம் சகல அஞ்ஞானிக
ளின் வியவகாரத்திற்கும் விஷயமாகுதலால் அதற்கு அகம் சப்தத்தின் முக்
கியார்த்தத்தன்மை உண்டு. சிதாபாச கூடஸ்தர்களின் வடிவத்திற்கோ சில
அறிஞரால் எப்போதாயினும் விசாரகாலத்திலேயே வியவகாரம் செய்தலால் (கக)
அகம் சத்தத்தின் அமுக்கியார்த்தத்தன்மை யுண்டு.

[ருகூசா] लौकिकव्यवहारोऽहं गच्छामीत्यादिके बुधः ।
विविच्यैव चिदाभासं कूटस्थात्तं विवक्षति ॥ १२ ॥

(அ-கை.)

"பரியாயமாக அகம் சப்தத்தைப் பிரயோகிக்கின்றான்." என்னும் ருகூரு சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினையே எளிதாய் அறியும்படி இரண்டு சுலோகங்களால் வர்ணிக்கின்றார்:—

बुधः अहंगच्छामि इत्यादिके लौकिकव्यवहारे कूठस्थात् चिदाभासं विवि-
च्य तं एव विवक्षति ॥

(கூ·ம்.)

ஞானி "யான் போகின்றேன்" என்றல் முதலிய இலௌகிகவியவகாரங்களில் கூடஸ்தனிலிருந்தும் சிதாபாசனைப் பிரித்தறிந்து அச்சிதாபாசனையே சொல்லக்கருதுகின்றான்.

(வி ம்.)

அறிஞன் எவனோ அவன் "யான் போகின்றேன்" என்றல் முதலிய இலௌகிகவியவகாரங்களில் கூடஸ்தனிலிருந்தும் சிதாபாசனை விவேகித்து அக்கேவல சிதாபாசனையே அகம்சப்தத்தாற் சொல்லக் கருதுகின்றான். ()

[ருகூள] असंगोऽहं चिदात्माहमिति शास्त्रीयदृष्टितः ।
अहंशब्दं प्रयुंक्तेऽयं कूटस्थे केवले बुधः ॥ १३ ॥

(அ·கை.)

இதுவுமது:—

अयं बुधः शास्त्रीयदृष्टितः केवले कूटस्थे "अहं असंगः अहं चिदात्मा" इति अहंशब्दं प्रयुंक्ते ॥

(கூ·ம்.)

இந்த அறிஞன் சாஸ்திரதிருஷ்டியினால் கேவல கூடஸ்தனிடத்து "யான் அசங்கன்" "யான் சிதாத்மா" என்று யானென்னும் சத்தத்தைப் பிரயோகிக்கின்றான்.

(விம்.)

இவ்வறிஞனே சாஸ்திரதிருஷ்டியினால் அதாவது வேதாந்தசிரவணத்தினாலுண்டாகிய ஞானத்தினால் கேவலசிதாபாசனினின்றும் பிறித்தறியப்பட்ட கூடஸ்தனிடத்து "யான் அசங்கன், யான் சிதாத்மா" வென்று இலக்ஷணையினால் அகம்சத்தத்தைப் பிரயோகிக்கின்றான். ஆதலால் இலக்ஷணையினால் அகம் சத்தத்திற்குப் பொருளாதலால் அகம்பிரத்தியத்திற்கு விஷயமாதல் சம்பவித்தலின் "யான் அசங்க" னென்னும் ஞானம் சம்பவிக்கின்றது. இது சுலோகம்-ருகூங-ல் கூறிய சங்கைக்குச் சமாதானம் சொல்லப்பட்டதென்பது அபிப்பிராயம். (கரு)

ரு. கூடஸ்தனுக்கு வேறான சிதாபாசனுக்கு "யான் கூடஸ்த" னென்னும் ஞான முண்டாதல் தகுதியன்றெனும் சங்கை.

[ருகூசு] ज्ञानिताऽज्ञानिते त्वात्माभासस्यैव न चात्मनः ।
तथा च कथमाभासः कूटस्थोस्मीति बुध्यतां ॥ १४ ॥

(அ-கை)

அப்படியானால் "வேறான ஆபாஸகூடஸ்தர்கள் "அகம்" என்னும் சொல்லின் அர்த்தங்களாவார்கள் என்று தாம் ௫௬-வது சுலோகத்திற் கூறினீர். அந்த ஆபாஸகூடஸ்தரிருவருள்ளும் கூடஸ்தன் அஞ்ஞானநிவிருத்தியின் பொருட்டு "யான் பிரமம்" என்று அறிகின்றானா? அல்லது சிதாபாசன் அறிகின்றானா? என்பது இரண்டு விகற்பமாம். அவற்றுள், கூடஸ்தன் அறிகின்றான் என்னும் முதற்பக்ஷம் பொருந்தாது ஏனெனின், அக்கூடஸ்தன் அசங்கசேதனனா யிருத்தலால் ஞானித்தன்மையும் அஞ்ஞானித்தன்மையும் சம்பவியா. ஆதலால் சிதாபாஸனுக்கு ஞானித்தன்மை முதலிய தர்மங்கள் சொல்லவேண்டும். அவ்வாறு ஞானமுதலியன சிதாபாசனது தர்மமாகவே கூடஸ்தனுக்கு வேறாகிய சிதாபாசன் "யான் கூடஸ்தன்" என்று அறிதற்குரியவனாகானென்று வாதி சங்கிக்கின்றான்:-

ज्ञानिताऽज्ञानिते तु आत्माभासस्य एव न च आत्मनः । तथा च आभासः कूटस्थः अस्मि इति कथं बुध्यताम् ॥

(சு-ம்.)

ஞானித்தன்மை அஞ்ஞானித்தன்மைகளோ ஆத்மாவின் ஆபாஸனுக்கே யுண்டு: ஆத்மாவிற் கில்லை. அப்படியாக ஆபாஸன் "யான் கூடஸ்தன்" என்று எப்படி * ௬. அறிவான்? (௧௪)

௬. கூடஸ்தனின்றும் சிதாபாசன் வாஸ்தவமாக வேறெனல் சித்தியாமையின்சமாதானம்.

[௫௧௧] नायं दोषश्चिदाभासः कूटस्थैकस्वभाववान् ।
आभासत्वस्य मिथ्यात्वात्कूटस्थत्वावशेषणात् ॥ १५ ॥

(அ-கை.)

அந்தச் சிதாபாசனுக்குக் கூடஸ்தன் வேறுதலே சித்தியாததாமென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

अयं दोषः न । चिदाभासः कूटस्थैकस्वभाववान् ॥

---

* ௬. ஏதனால் சிதாபாசன் கூடஸ்தனுக்கு வேறாய்க் கற்பிதனாயிருத்தலால் சிதாபாசனுக்கு "யான் கூடஸ்தன்" என்னும் ஞானம் ஒன்றில். மற்றொன்றன் உணர்ச்சி வடிவமா யிருத்தலால் மயக்கவடிவமாமோ அதனால் அது எப்படிச் சம்பவிக்கும்? என்பது பூர்வபக்ஷியின் சங்கையாம்.

(சு-ம்.)

சிதாபாசன் இக்கூடஸ்தனின் வேறுதல்வடிவ சிதாபாசமில்லை. ஏனெனின், எதனால் சிதாபாசன் கூடஸ்தவடிவ முக்கியசொரூபமுடையவனு யிருக்கின்றானே அதனால்.

(அ-கை.)

அவ்வாபாசன் கூடஸ்தனுகிய முக்கியசுபாவமுடையவன் என்பதில் யுக்தியைக் கூறுகின்றார்:—

आभासत्वस्य मिथ्यात्वात् कूटस्थत्वावशेषणात् ॥

(சு-ம்.)

ஆபாஸத்தன்மை மித்தையா யிருத்தலாலும் கூடஸ்தத்தன்மை மிஞ்சி யிருத்தலாலும்.

(வி-ம்.)

எப்படிக் கண்ணாடியிற்றோற்றும் முகத்தின் ஆபாஸத்திற்குக் கழுத்தி லுள்ள முகமே வாஸ்தவசொரூபமோ, அப்படிச் சிதாபாஸனது பிம்பவடிவ கூடஸ்தனே வாஸ்தவ * எ. சொரூப மென்பது தாற்பரியம். (கரு)

எ. மித்தையான சிதாபாஸனை ஆசிரயித்துள்ள ஞானம் மித்தை யாதலின் சங்கையும், விரும்பியது பெறுதலாற் சமாதானமும்.

[௬௦௦] कूटस्थोऽस्मीति बोधोऽपि मिथ्या चेन्नेति को वदेत् ।
न हि सत्यतयाभीष्टं रज्जुसर्पविसर्पणं ॥ १६ ॥

---

* எ. ஆபாஸவாதத்தின்படி எப்படிக் கண்ணாடியில் முகத்தினது பிரதிபிம்பத்தின் அதிஷ்டானம் கண்ணாடியவச்சின்னசேதனமோ, அப்படியே அந்தக்கரணத்தில் பிரஹ்மசேதனத்தின் பிரதிபிம்பவடிவ சிதாபாசனுக்கு அதிஷ்டானம் அந்தக்கரண அவச்சின்ன கூடஸ்த சேதனமாம். கற்பிதவஸ்து அதிஷ்டானத்தினும் வேருகச் சித்தியாது. ஆதலால் பிரதிபிம்பத்தன்மைவிசிஷ்டப் பிரதிபிம்பத்தினைப் பாதித்து மிஞ்சும் அதிஷ்டான கூடஸ்தசேதனமே பிரதிபிம்பத்தின் சொருபமாம். பிரஹ்மகூடஸ்தர்களுக்கு மகாகாசகடாகாசங்களுக் கிருப்பதுபோல முக்கிய சாமாநாதிகரணிய முண்டு. சிதாபாச கூடஸ்தர்களுக்குப் பாதசாமாநாதிகரணிய முண்டு. ஆதலால் பாதம் (அபாவ) ஞ்செய்தாலன்றிச் சிதாபாசனுக்கும் கூடஸ்தனுக்கும் அபேதமில்லை. ஆனல் பாதஞ்செய்தே அபேதமாகின்றது. சாமாநாதிகரணிய சப்தத்தின்பொருளைப் பிரத்தியக்தத்துவவிவேகத்தின் உக-வது டிப்பணியிலும், உகய-வது சுலோகத்தின் டிப்பணியிலும், மேல் கூஉச-வது சுலோகத்தின் டிப்பணியிலும் காண்க.

(அ-கை.)

அப்படியானல் சிதாபாசன் மித்தையாகவே அந்தச் சிதாபாசனை யாசிரயித்துள்ள "யான் கூடஸ்தன்" என்னும் ஞானமும் மித்தையாகும் என்று வாதி மூலத்திற் சங்கிக்கின்றான்:—

"कूटस्थः अस्मि" इति बोधः अपि मिथ्या चेत् ॥

(சு-ம்.)

"யான் கூடஸ்தன்" என்னும் ஞானமும் மித்தையாகும் என்று கூறின்.

(அ-கை.)

கூடஸ்தனது சொரூபத்திற்கு வேறாகிய சகல பதார்த்தங்களுக்கும் மித்தியாத்தன்மை அங்கீகரிக்கப்பட்டிருத்தலால் அந்தச் சிதாபாசனை யாசிரயித்துள்ள "யான் கூடஸ்தன்" என்னும் வடிவுடைய ஞானத்தின் மித்தியாத்தன்மை அத்வைதவாதியாகிய எமக்கு இஷ்டமே என்பதாகச் சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

न इति कः वदेत् ॥

(சு-ம்.)

ஞானம் மித்தையன்றென்று கூறுபவன் யாவன்?

(அ-கை.)

கூறிய ஞானத்தின் மித்தியாத்தன்மைவடிவ அர்த்தத்தைத் திருஷ்டாந்தத்தினால் வெளிப்படுத்துகின்றார்:—

हि रज्जुसर्पविसर्पणं सत्यतया अभीष्टं न ॥

(சு-ம்.)

ஏதனால் இரஜ்ஜுசர்ப்பத்தின் நகர்தல் முதலியன சத்தியத்தன்மையாக இச்சிக்கப்பட்டனவன்றே, அதனால்.

(வி-ம்.)

எப்படி இரஜ்ஜுவில் கற்பிதசர்ப்பத்தின் நகர்ச்சிமுதலியன தோற்றினும் உண்மையென் றங்கீகரிக்கப்படுகிற தில்லையோ, அப்படியே சிதாபாசனை யாசிரயித்த ஞானமும் உண்மையென்று அங்கீகரிக்கப்படுகிற தில்லையென்பது தாற்பரியம். (௧௬)

அ. மித்தையாகிய சம்ஸாரத்திற்கு மித்தையாகிய ஞானத்தினுல் நிவிருத்தி கூடுமெனல்.

[கூ0௧] तादृशेनापि बोधेन संसारो हि निवर्त्तते ।
यक्षानुरूपो हि बलिरित्याहुर्लौकिका जनाः ॥ १७ ॥

(அ-கை.)

அப்படியானல் ஞானம் மித்தையாயின் அந்த மித்தையாகிய ஞானத்தினுல் சம்சாரத்தின் நிவிருத்தி யுண்டாகாதென்று ஆசங்கித்து, ஞானத்தினுல் நிவிருத்திசெய்யத்தக்க சம்சாரமும் அவ்வாறு மித்தையா யிருத்தலால் சொப்பனத்துள்ள புலியின் காட்சியால் தூக்கம் நீங்குவதுபோல மித்தையாகிய ஞானத்தினுல் மித்தையான சம்சாரத்தின் நிவிருத்தி * அ. சம்பவிக்குமென்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்:—

तादृशेन बोधेन अपि संसारः निवर्तते हि ।

(கு-ம்.)

அவ்விதமான மித்தியாஞானத்தினுலும் சம்ஸாரம் நிவிருத்தியாகின்றது; அந்தச் சம்ஸாரமும் மித்தையா யிருத்தலால்.

(அ-கை.)

மித்தையாகிய ஞானத்தினுல் மித்தையாகிய சம்ஸாரநிவிருத்தியில் "யக்ஷனுக்குத்தக்க பலி" என்னும் இலௌகிகவார்த்தையினைப் பிரமாணமாக்குகின்றார்:—

हि यक्षानुरूपः बलिः इति लौकिकाः जनाः आहुः ।

---

* அ. இங்கு இஃது அபிப்பிராயம்:—சமானசத்தையுடைய பதார்த்தம் ஒன்றற்கொன்று சாதகபாதகமாம்; விஷமசத்தையுடையன வன்று. எப்படியெனின், வியாவகாரிக அன்னத்தினுலாவது ஜலத்தினுலாவது வியாவகாரிகமான பசி அல்லது தாகம் நீங்கிவிடுகிறது; பிராதிபாசிகமான அன்னஜலங்களால் நீங்குகிறதில்லை. வியாவகாரிக இரஜதமுதலியவற்றுல் வியாவகாரிக கடகமுதலிய ஆபரணவடிவகாரியத்தின் சித்தியுண்டாகிறது; பிராதிபாசிகமான இரஜதமுதலியவற்றுல் உண்டாகிறதில்லை. சொப்பனத்திலுள்ள பிராதிபாசிக வியாதி பசிமுதலியவற்றின் நிவிருத்தி பிராதிபாசிகமருந்து அன்னமுதலியவற்றுல் உண்டாகின்றது. வியாவகாரிகமருந்துமுதலியவற்று லுண்டாகிறதில்லை. அப்படியே திருஷ்டிசிருஷ்டிவாதத்தின்படி பிராதிபாசிகவடிவமும் சிருஷ்டிதிருஷ்டிவாதத்தால் வியாவகாரிகவடிவமுமான மித்தையாகிய சம்சாரத்தின் நிவிருத்தி தற்சமான சத்தையுடைய மித்தையான ஞானத்தினுலேயே சம்பவிக்கின்றது; பாரமார்த்திகஞானத்தினு லன்று.

(சு-ம்.)

எதனால் "யக்ஷனுக்குத் தக்க பலி" என்று 'இலௌகிகஜனங்கள்
கூறுகின்றார்களோ அதனாலுமாம். (கஎ)

க. சுலோகம் ருகூ0 முதல் சொல்லப்பட்ட பொருளின் முடிவு.

[ரு0உ] तस्मादाभासपुरुषः सकूटस्थो विविच्य तम् ।
कूटस्थोऽस्मीति विज्ञातुमर्हतीत्यभ्यधाच्छ्रुतिः ॥ १८ ॥

(அ-கை.)

சுலோகம் ருகூ0 முதலாகச் சேகரிக்கப்பட்ட பொருளை முடிக்கின்றார்:-

तस्मात् सकूटस्थः आभासपुरुषः तं विविच्य "कूटस्थः अस्मि" इति विज्ञातुं अर्हति इति श्रुतिः अभ्यधात् ॥

(சு-ம்.)

அதனால் "புருஷன்" என்னும் சொல்லின் வாச்சியமாகிய கூடஸ்த
னோடுகூடிய ஆபாஸன் அந்தக் கூடஸ்தனைத் தன்னின் வேறாக்கி "யான்
கூடஸ்தன்" என்று அறியத்தக்கவனாகின்றான். இந்தப் பொருளைச் சுருதி
"அஸ்மி=இருக்கிறேன்" என்னும் பதத்தால் கூறுகின்றது.

(வி-ம்.)

எதனால் கூடஸ்தனே சிதாபாசனது நிஜசொரூபமோ அதனால் "புரு
ஷன்" என்னும் சொல்லிற்கு வாச்சியமான கூடஸ்தனோடுகூடிய சிதாபா
ஸன் அந்தக் கூடஸ்தனை மித்தியாவடிவமான தன்னின் வேறுபடுத்திப்
பாகத்தியாகலக்ஷணையினால் "யான் கூடஸ்தன்" என்று அறியக்கூடிய
வனாகின்றான் என்னும் அபிப்பிராயமாக இத்தீபத்தின் முதற்சுலோகத்திற்
கூறிய சுருதி "அஸ்மி" என்று கூறியது என்பது பொருள். (கஅ)

உ. முந்திய சுலோகத்திற் கூறிய சுருதியிலுள்ள "ஆத்மாவை அறிவானாயின்" என்
னும் பதங்களோடு "இது" என்னும் பதத்தின் அபிப்பிராயம் (சிதாபாசனது
ஏழவஸ்தைகளின் வர்ணனம்) ரு0௩-எககூ.

க. அபரோக்ஷஞானத்தையும் அதன் நித்தியாபரோக்ஷவிஷயத்தினையும் சேதனத்
தையும் இது என்னும் பதத்தின் அர்த்தத்தாற் கூறுதல் ரு0௩-ரு0ரு.

க. தேகத்தில் யானென்னும் உணர்ச்சியினைப் போல ஆத்மாவில் அபரோக்ஷ
ஞானவடிவ "இது" என்னும் பதத்தின் முக்கிய அபிப்பிராயம்.

[ரு0௩] असंदिग्धाविपर्यस्तबोधो देहात्मनीक्ष्यते ।
तद्वदत्रेति निर्णेतुमित्यभिधीयते ॥ १९ ॥

(அ-கை.)

இப்படிச் சுருதியிலுள்ள "புருஷன்" "அஸ்மி" என்னும் இவ்விரண்டு பதங்களினது பிரயோகத்தின் அபிப்பிராயத்தைக் கூறி "இது" என்னும் பதத்தினது பிரயோகத்தின் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்:—

देहात्मनि असंदिग्धाविपर्यस्तबोधः ईक्ष्यते । अत्र तद्वत् इति निर्णेतुं "अयं" इति अभिधीयते ॥

(சு-ம்.)

எப்படித் தேகவடிவ ஆத்மாவில் சம்சயவிபரீதமின்றிய வுணர்ச்சி காணப்படுகின்றதோ, அதனைப்போல இவ்வாத்மாவில் உணர்ச்சியைச் சம்பாதித்தல் தகுதியாம். இந்நிர்ணயத்தைச் செய்யச் சுருதியினால் "இஃது" என்று சொல்லப்பட்டது.

(வி-ம்.)

இலௌகிகர்களுக்குப் பிரசித்தமான தேகவடிவ ஆத்மாவில் சம்சயவிபரீதபாவனைகளின்றிய "இப்பிராஹ்மணன் மனிதன்முதலியன யான்." என்னும் ஞானம் எப்படிக் காணப்படுமோ, இப்பிரத்தியகாத்மாவினிடத்து அப்படிப்பட்ட ஞானம் முத்திசித்திக்கும்பொருட்டுச் சம்பாதித்தல் தகுதியாம் என்னும் இந்நிச்சயத்தைச் செய்தற்குச் சுருதியினால் "இது" என்று சொல்லப்பட்டது.

உ. சுலோகம் ௨௰-ல் கூறிய ஞானம் முத்திக்குச் சாதனமாதலில் உபதேசசகஸ்ரியின் வாக்கியம் பிரமாணமாதல்.

[௨௰] देहाऽत्मज्ञानवज्ज्ञानं देहात्मज्ञानबाधकम् ।
आत्मन्येव भवेद्यस्य स नेच्छन्नपि मुच्यते ॥ २० ॥

(அ-கை.)

இவ்வித ஞானமே மோக்ஷத்திற்குச் சாதனமாமென்பதில் உபதேசசகஸ்ரியிலுள்ள ஸ்ரீ சங்கராசாரியரது வாக்கியத்தைப் பிரமாணமாக்குகின்றார்:—

देहात्मज्ञानवत् आत्मनि एव देहात्मज्ञानबाधकं । ज्ञानं यस्य भवेत् सः न इच्छन् अपि मुच्यते ॥

(சு-ம்.)

தேகவடிவ ஆத்மாவின் ஞானத்தைப்போல ஆத்மாவினிடத்திலேயே தேகாத்மஞானத்தைப் பாதிக்கும் ஞானம் எவனுக்குண்டாகின்றதோ அவன் இச்சியாதிருந்தும் முக்தனாகின்றான்.

(வி-ம்.)

எப்படி "நான் மனிதன்" என்பதாகத் தேகவடிவ ஆத்மாவை விஷயஞ் செய்யும் நிச்சய முண்டாகின்றதோ, அவ்வாறு பிரத்தியகாத்மாவினிடத்திலேயே "தேகமே ஆத்மா" என்பதாகத் தேகத்துள்ள ஆத்மபாவனை பின் ஞானத்தைப் பாதித்து "நான் பிரஹ்மம்" என்னும் ஞானம் எவனுக்குண்டாகின்றதோ, அந்த வித்வான் விரும்பாதிருந்தும் முக்தனாகின்றான்; சம்ஸாரத்திற்குக் காரணமாகிய அஞ்ஞானம் ஞானத்தால் பாதிக்கப்படுவதாயிருத்தலின் என்பது தாற்பரியம். (உ0)

௯. சேதனத்தின் நித்தியாபரோக்ஷத்தன்மைவடிவ "அயம்" பதத்தின் மற்றோர் பொருள்.

[௯0ரு] अयमित्यपरोक्षत्वमुच्यते चेत्तदुच्यताम् ।
स्वयंप्रकाशचैतन्यमपरोक्षं सदा यतः ॥ २१ ॥

(அ-கை.)

"அயம் இது" என்னும் பதத்தைச் சொல்லுதலின் வேறு அபிப்பிராயத்தை வாதி மூலத்தில் சங்கிக்கின்றான்:—

अयं इति अपरोक्षत्वं उच्यते चेत् ॥

(சு-ம்.)

"இது" என்னும் பதத்தால் ஆத்மாவின் அபரோக்ஷத்தன்மை சொல்லப்படுகின்றதெனின்.

(வி-ம்.)

எப்படி "இது குடம்" என்றல்முதலிய பிரயோகங்களில் இது வெனுந்தன்மையால் சுட்டப்பட்ட வஸ்துவின் அபரோக்ஷத்தன்மை காணப்படுகின்றதோ, அதுபோல "இது நான்" என்னும் வாக்கியத்தைக் கூறுதலினும் சுருதியினால் ஆத்மாவின் அபரோக்ஷத்தன்மை சொல்லப்படுகின்றது என்பது வாதியின் அபிப்பிராயம்.

(அ-கை.)

அவ்வாத்மாவின் அபரோக்ஷத்தன்மையும் எமக்கு இஷ்டமேயாம் என்று சித்தாந்தி கூறுகின்றார்:—

तत् उच्यतां ॥

(சு-ம்.)

அதனைச் சொல்லலாம்.

(அ-கை.)

அப்படியானால் தம்மால் ஆத்மாவின் அபரோக்ஷத்தன்மை என் சொல்லப்படுகின்றதெனக் கூறுகின்றார்:—

यतः स्वयंप्रकाशचैतन्यं सदा अपरोक्षं ।

(சு-ம்.)

எதனால் சுவயம்பிரகாசசைதந்நியம் என்றும் அபரோக்ஷமோ அதனால்.

(வி-ம்.)

வேறு சாதனங்களின் அபேக்ஷையின்றியதாயிருத்தலால் விளங்குகின்ற சைதந்நியம் எதுவோ, அது * க. ஆவரணத்தைச் செய்வதொன்றில்லாமையால் நித்தியாபரோக்ஷமாம்; இவ்வாறு எம்மால் அங்கீகரிக்கப்பட்டிருத்தலின் ஆத்மாவின் அபரோக்ஷத்தன்மை சொல்லப்படுகின்றது என்பது பொருள். (௨௧)

௪. நித்தியாபரோக்ஷசேதனத்தில் பரோக்ஷ அபரோக்ஷஞானமும் அஞ்ஞானமும் தசமனைப்போல் சம்பவிக்குமாறு.

[௩௦௧] परोक्षमपरोक्षं च ज्ञानमज्ञानमित्यदः ।
नित्यापरोक्षरूपेऽपि द्वयं स्याद्दशमे यथा ॥ २२ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மா சுவப்பிரகாசசேதனவடிவமாயிருத்தலால் நித்தியாபரோக்ஷமாதல் அங்கீகரிக்கப்படவே "இது" என்னும் பதத்தைச் சொல்லுதலின் சுலோகம் ௩௦௩-௩௦௫ல் கூறிய அபிப்பிராயவர்ணனத்தை அங்கீரிக்கும்வழியாற் கிடைத்த ஆத்மா பரோக்ஷவிஷயமாதல், அல்லது அபரோக்ஷவிஷயமாதல், அல்லது முன் ௩௪அ-ற்கூறிய ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் ஆசிரயவிஷயமாதல் எதுவோ அது பொருந்தாததாகும் என்றாசங்கித்துப் பத்தாமவனைப்போல எல்லாம் பொருந்துமென்று கூறுகின்றார்:—

---

* க. இங்கு இஃது இரகசியமாம்:—சைதந்நியத்திற்கு ஆவரணமிருக்குமாயின் பிரகாசிப்பிப்பதின்மையால் ஜகத்தினது அந்தத்துவத்தின் (தோற்றாமையின்) பிரசங்கமுண்டாகும். ஆவரணத்தை அங்கீகரியாவிடினும், ஆசாரியர்கள் "நான் அஞ்ஞானி பிரஹ்மத்தை யறியேன்." என்னும் அநுபவாநுசாரமாக அஞ்ஞானம் பிரஹ்மத்தின் ஆசிரிதமும் பிரஹ்மத்தை விஷயஞ்செய்வது (மறைப்பது) மாயிருத்தலின் அதனைச் சுவாசிரய சுவவிஷய யென்று கூறியிருக்கின்றனர். அவ்வாசாரியர்களது வார்த்தைக்குப் பங்கமுண்டாகும். ஆதலால் சாமாந்நியஅம்சத்தின் தோற்றத்தையும் விசேஷ அம்சத்தின் தோற்றாமையையும் அங்கீகரித்தலால் அவிரோதமுமுண்டாகின்றது.

परोक्षं च अपरोक्षं । ज्ञानं अज्ञानं । इति अदः द्वयं यथा दशमे । नित्यापरोक्षरूपे अपि स्यात् ॥

(சு ம்.)

பரோக்ஷாபரோக்ஷம் ஞானாஞ்ஞானம் என்னும் இவ்விரண்டு இரட்டைகளும் எப்படிப் பத்தாமவனிடத்துப் பொருந்துகின்றனவோ அது போல நித்தியாபரோக்ஷவடிவ ஆத்மாவினிடத்தும் பொருந்துகின்றன.

(வி-ம்.)

பரோக்ஷம் அபரோக்ஷம் என்பது ஓர் இரட்டை. ஞானம் அஞ்ஞான மென்பது மற்றோரிரட்டை. இவ்விரண்டிரட்டைகளும் நித்தியாபரோக்ஷ வடிவ ஆத்மாவினிடத்தும் பத்தாவதுபுருடனைப்போலப் பொருந்துகின்றன என்பது பொருள். (உ௨)

தார்ஷ்டாந்தத்தோடு தசமதிருஷ்டாந்தத்தினை ஏழவஸ்தையோடுகூடிய தன்மையாகக் கூறுதல்.

க. தசமனது அஞ்ஞான அவஸ்தை.

[கூ0எ] नवसंख्याहृतज्ञानो दशमो विभ्रमात्तदा ।
न वेत्ति दशमोऽस्तीति वीक्ष्यमाणोपि तान्नव ॥ २३ ॥

(அ-கை.)

தசமனாகிய பத்தாமவன் திருஷ்டாந்தத்தினை முதலிற் கூறுகின்றார்:—

नवसंख्याहृतज्ञानः दशमः तदा तान् नव वीक्ष्यमाणः अपि विभ्रमात् " दशमः अस्मि " इति न वेत्ति ॥

(சு-ம்.)

ஒன்பது எண்களால் கவரப்பட்ட உணர்ச்சியையுடைய பத்தாமவன் அப்போது அவ்வொன்பது புருஷர்களைப் பார்த்தும் மயக்கத்தால் யான் தசமன் என்றறிகிறதில்லை.

(வி-ம்.)

எண்ணத்தக்க புருஷர்களிடத்துள்ள ஒன்பதெண்களால் நாசமாகிய விவேகஞானத்தினையுடைய பத்தாவது புருஷன் அப்போது அவ்வெண்ணத் தக்கவர்களாகிய ஒன்பது சங்கையுடைய புருஷர்களையும் செவ்வையாய்ப் பார்த்துக்கொண்டிருந்தும் மயக்கத்தால் எண்ணுதலைச் செய்யுந் தன்னை " நான் தசமன் " என்று அறிகிறதில்லை என்பது பொருள். (உ௩)

உ. தசமனது இருவகை அஞ்ஞானகாரியவடிவ ஆவரணஅவஸ்தை.

[சு௦அ] न भाति नास्ति दशम इति स्वं दशमं तदा
मत्वा वक्ति तदज्ञानकृतमावरणं विदुः ॥ २४ ॥

(அ-கை.)

இப்படிப் பத்தாமவனிடத்து அஞ்ஞானத்தைக் காட்டி அவ்வஞ்ஞானத்தின் காரியமான ஆவரணத்தைக் காட்டுகின்றார்:—

तदा स्वं दशमं "दशमः न भाति न अस्ति" इति मत्वा वक्ति । तत् अज्ञानकृतं आवरणं विदुः ॥

(சு-ம்.)

அப்போது பத்தாவது புருஷன் பத்தாமவனாகிய தன்னைப் "பத்தாமவன் விளங்கவில்லை, இல்லை." என்று மதித்துக் கூறுகின்றான். அதனைப் பண்டிதர் அஞ்ஞானத்தினாலாகிய ஆவரணமென்றறிகின்றனர்.

(வி-ம்.)

அப்போது அதாவது அஞ்ஞானகாலத்தில் பத்தாவது புருடன் பத்தாமவனாகிய தான் இருந்தும் "பத்தாமவன் தோற்றவில்லை, இல்லை." என்று மதித்துக் கூறுகின்றான். இவ்வாறு கூறுதலும் அறிதலுமாகிய வியவகாரத்திற்குக் காரணம் எதுவோ அதனை அஞ்ஞானத்தினாலாகிய ஆவரணமென்று அறிஞர் அறிகின்றனர். (உச)

ஙு. பத்தாமவனது அஞ்ஞானகாரியமாகிய விக்ஷேபஅவஸ்தை.

[சு௦க] नद्यां ममार दशम इति शोचन्प्ररोदिति ।
अज्ञानकृतविक्षेपं रोदनादिं विदुर्बुधाः ॥ २५ ॥

(அ-கை.)

அஞ்ஞானத்தின் காரியவிசேஷமாகிய விக்ஷேபத்தைக் காட்டுகின்றார்:-

"नद्यां दशमः ममार" इति शोचन् प्ररोदिति । रोदनादिं बुधाः अज्ञानकृतविक्षेपं विदुः ॥

(சு-ம்.)

ஆற்றில் பத்தாமவன் இறந்தானென்று சோகப்பட்டு அழுகின்றான்.

இவ்வமூகைமுதலியவற்றினை அறிஞர் அஞ்ஞானத்தினலாகிய விக்ஷேப மென் றறிகின்றனர். (உரு)

சு. தசமனது பரோக்ஷஞான அவஸ்தை.

[சுகo] न मृतो दशमोऽस्तीति श्रुत्वाऽऽप्तवचनं तदा ।
परोक्षत्वेन दशमं वेत्ति स्वर्गादिलोकवत् ॥ २६ ॥

(அ-கை.)

பத்தாமவனது அசத்துத்தன்மையம்சத்தினை நிவிருத்திக்கும் பரோக்ஷ ஞானத்தினைக் கூறுகின்றார்:—

"दशमः न मृतः अस्ति" इति आप्तवचनं श्रुत्वा तदा स्वर्गादिलोकवत् परोक्षत्वेन दशमं वेत्ति ॥

(சு-ம்.)

"பத்தாமவன் இறக்கவில்லை; இருக்கின்றான்." என்னும் உண்மை உரைப்பவனாகிய ஆப்தபுருஷனது வசனத்தைக் கேட்டு அப்போது சுவர்க்காதிலோகங்களைப் போலப் பரோக்ஷத்தன்மையாகப் பத்தாமவனை யறிகின்றான். (உசா)

ரு. தசமனது அபரோக்ஷஞானம் சோகநிவிருத்தி திருப்தி யென்னும் அவஸ்தைகள்.

[சுகக] त्वमेव दशमोऽसीति गणयित्वा प्रदर्शितः ।
अपरोक्षतया ज्ञात्वा हृष्यत्येव न रोदिति ॥ २७ ॥

(அ-கை.)

அப்பத்தாமவனது * கo. அபானம்சத்தை நிவிருத்திக்கும் அபரோக்ஷஞானத்தைக் காட்டுகின்றார்:—

गणयित्वा "त्वं एव दशमः असि" इति प्रदर्शितः अपरोक्षतया ज्ञात्वा हृष्यति एव । न रोदिति ॥

(சு-ம்.)

எப்போது எண்ணிக்கை செய்து "நீயே பத்தாமவன்" என்று காட்டினனோ அப்போது அபரோக்ஷத்தன்மையாக அறிந்து ஹர்ஷத்தையே அடைகின்றான்; அழுகிறதில்லை.

---

* கo. அபானம்சம்=தோற்றாமைக்கூறு.

(வி-ம்.)

தன்னால் எண்ணப்பட்ட ஒன்பது புருஷர்களோடு தன்னையும் எண்ணி "நீயே பத்தாமவன்" என்று ஆப்தபுருஷன் காட்டியபோது "நான் பத்தாமவன்" என்று அபரோக்ஷத்தன்மையாகப் பத்தாமவனாகிய தன்னை யறிந்து சந்தோஷத்தை யடைந்து அழுதலை விட்டுவிடுகின்றான். (உஎ)

ச. திருஷ்டாந்தத்திற் கூறிய ஏழு அவஸ்தையை அநுவதித்தலோடு ஆத்மாவினிடத்துப் பொருத்துதல்.

[௬௧௨] अज्ञानाऽऽवृतिविक्षेपद्विविधज्ञानतृप्तयः ।
शोकापगम इत्येते योजनीयाश्चिदात्मनि ॥२८॥

(அ-கை.)

இவ்வாறு திருஷ்டாந்தவடிவ பத்தாமவனிடத்து (௬௦எ-௬௧௧ வரையிற்) காட்டப்பட்ட ஏழு அவஸ்தைகளையும் அநுவதித்துத் தார்ஷ்டாந்தவடிவ ஆத்மாவினும் அவ்வேழவஸ்தைகளும் பொருத்தத்தக்கனவா மென்று கூறுகின்றார்:—

अज्ञानावृतिविक्षेपद्विविधज्ञानतृप्तयः शोकापगमः इति एते चिदात्मनि योजनीयाः ॥

(சு-ம்.)

அஞ்ஞானம், ஆவரணம், * ௧௧. விக்ஷேபம், பரோக்ஷ அபரோக்ஷ இருவகை ஞானம், திருப்தி, சோகநிவிருத்தி என்று ஏழவஸ்தைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை சிதாத்மாவிற் பொருத்தத்தக்கனவாம். (உஅ)

ந. சிதாபாசனது ஏழவஸ்தையை வர்ணித்தல் ௬௧௩-௬௩௨.

௧. சிதாபாசனது அஞ்ஞானவஸ்தை.

[௬௧௩] संसारासक्तचित्तः संश्चिदाभासः कदाचन ।
स्वयंप्रकाशकूटस्थं स्वतत्त्वं नैव वेत्त्ययं ॥२९॥

(அ-கை.)

அவ்வாத்மாவில் அஞ்ஞானமுதலிய ஏழவஸ்தைகளைக் கிரமமாக இந்த ௬௧௩-வது முதல் நான்கு சுலோகங்களாற் காட்டுகின்றார்:—

अयं चिदाभासः संसारासक्तचित्तः सन् कदाचन स्वतत्वं स्वयंप्रकाशकूटस्थं न एव वेत्ति ॥

* ௧௧. சோகம் (பிராந்தி).

(சு-ம்.)

இந்தச் சிதாபாசன் சம்சாரத்திற் பற்றிய சித்தமுடையவனும் ஒருகாலும் தனது தத்துவமான சுயம்பிரகாசகூடஸ்தனை அறிகிறதில்லை.

(வி-ம்.)

இச்சிதாபாசன் விஷயத்தைச் சம்பாதித்தல்முதலியவற்றின் தியானத்தில் பற்றுள்ள சித்தமுடையவனும்ச் சுருதிவிசாரத்திற்குமுன் ஒருகாலும் தனது உண்மைவடிவ சுயம்பிரகாசசேதனமாகிய கூடஸ்தனை அறிகிறதில்லை. அறியாமையாகிய இதுவே அஞ்ஞானமாம். (உகூ)

உ. சிதாபாசனது இருவகையான ஆவரணவிக்ஷேப அவஸ்தைகள்.

[௬௧௪] न भाति नास्ति कूटस्थ इति वक्ति प्रसंगतः ।
कर्ता भोक्ताऽहमस्मीति विक्षेपं प्रतिपद्यते ॥ ३० ॥

(அ-கை.)

இதுவுமது:—

प्रसंगतः "कूटस्थः न अस्ति न भाति" इति वक्ति "अहं कर्ता भोक्ता अस्मि" इति विक्षेपं प्रतिपद्यते ॥

(சு-ம்.)

பிரசங்கத்தால் "கூடஸ்தன் இல்லை, தோற்றமில்லை." யென்று கூறுகின்றான். அன்றியும் "நான் கர்த்தா போக்தா" என்று விக்ஷேபத்தை யடைகின்றான்.

(வி-ம்.)

சிதாத்மாவை விஷயஞ்செய்யும் பிரசங்க முண்டாகவே "கூடஸ்தன் இல்லை, தோற்றமில்லை." யென்று மதித்துக் கூறுகின்றான். இவ்வஞ்ஞானத்தின் காரியம் ஆவரணமாம். கூடஸ்தனது அசத்துத்தன்மை அதாவது இன்மை, அபானம் அதாவது தோற்றாமை என்பவற்றைப்போலக் கர்த்திருத்துவமுதலியவற்றை ஆத்மாவில் ஆரோபிக்கின்றான். இவ்வாரோபத்திற் கேதுவாகிய ஸ்தூலசூக்ஷ்மவடிவ இரண்டு தேகங்களோடுகூடிய சிதாபாசன் விக்ஷேபமாம். (௩௦)

௩. சிதாபாசனது பரோக்ஷஞான அபரோக்ஷஞான அவஸ்தைகள்.

[௬௧௫] अस्ति कूटस्थ इत्यादौ परोक्षं वेत्ति वार्तया ।
पश्चात्कूटस्थ एवास्मीत्येवं वेत्ति विचारतः ॥ ३१ ॥

(அ-கை.)

இதுவுமது:—

आदौ वार्तया "कूटस्थः अस्ति" इति परोक्षं वेत्ति । पश्चात् विचारतः "कूटस्थः एव अस्मि" इति एवं वेत्ति ॥

(சு-ம்.)

முதலில் வார்த்தையினால் "கூடஸ்தனிருக்கின்றான்" என்று பரோக்ஷமாக அறிகின்றான். பின் விசாரத்தினால் "கூடஸ்தன் யான்" என்று அபரோக்ஷமாக அறிகின்றான்.

(வி-ம்.)

பிரஹ்மநிஷ்ட சற்குருவாகிய பிறரால் உபதேசத்தைப் பெற்றுக் "கூடஸ்த னிருக்கின்றான்." என்று அறிகின்றான். இது பரோக்ஷஞானம். சிரவண முதலியவற்றின் பரிபாகவசத்தால் * கஉ "கூடஸ்தன் யானே" என்றறிகின்றான். இது அபரோக்ஷஞானம். (௩௧)

௪. சிதாபாசனது சோகநிவிருத்தியும் திருப்தியுமாகிய அவஸ்தைகள்.

[௩௧௩] कर्ता भोक्तेत्येवमादिशोकजातं प्रमुंचति ।
कृतं कृत्यं प्रापणीयं प्राप्तमित्येव तुष्यति ॥ ३२ ॥

(அ-கை.)

இதுவுமது:—

कर्ता भोक्ता इत्येवमादिशोकजातं प्रमुंचति । कृत्यं कृतं प्रापणीयं प्राप्तं इति एव तुष्यति ॥

(சு-ம்.)

"யான் கர்த்தா யான் போக்தா" என்பனமுதலிய சோகங்களின் சமூகத்தை விடுகின்றான். "செய்யத்தக்கனவாயிருந்தன செய்யப்பட்டன.

---

* கஉ. "யான் கூடஸ்தன்" என்பது "துவம்" பதார்த்தகோசர அபரோக்ஷஞானமாம். அவ்வளவுஞானமே சகல அஞ்ஞானமுதலிய அநர்த்தங்களையும் நிவர்த்தித்தற்கு ஏதுவன்று. ஆனால் "தத்" பதார்த்தத்தின் வேறாகாத "துவம்" பதார்த்தத்தைக் கோசரிக்கும் "யான் பிரஹ்மம்" என்னும் அபரோக்ஷஞானம் சகல அநர்த்தங்களையும் நிவர்த்தித்தற் கேதுவாம். என்றாலும் இங்கு "யான் பிரஹ்ம" மென்னும் ஞானம் அபரோக்ஷமாதலை அறிவித்தற்பொருட்டுக் கர்த்திருத்தன்மைமுதலிய காரியவடிவ அநர்த்தத்தை நிவர்த்திப்பதாகிய "கூடஸ்தன் யான்" என்னும் அபரோக்ஷஞானம் உதாரணமாய் அறிவிக்கப்பட்டது.

அடையத்தக்கனவாயிருந்தன அடையப்பட்டன." என்பதாகவே சந்தோஷத்தை யடைகின்றான்.

(வி-ம்.)

கூடஸ்தனும் அதாவது நிர்விகாரமும் அசங்கமுமாகிய ஆத்மாவின் ஞானம் உண்டாகியபின் கர்த்திருத்தன்மைமுதலிய சோகங்களின் சமூகத்தை விடுகின்றான். இச்சோகங்களின் சமூகத்தை விடுதல் எதுவோ அது சோகநாசமாம். செய்யத்தக்கதாகிய கர்த்தவ்வியத்தின் சமூகம் செய்யப்பட்டது அதாவது சம்பாதிக்கப்பட்டது. அடையத்தக்க பலத்தின் சமூகம் அடையப்பட்டது என்று சந்தோஷத்தை யடைகிறான். இது திருப்தியாம் என்பது பொருள். (௩௨)

௫. சிதாபாசவடிவதார்ஷ்டாந்தத்தில் ௩௩-௩௩-ல் கூறிய ஏழு அவஸ்தைகளையும் அநுவதித்தல்.

[௩௩] अज्ञानमावृतिस्तद्वद्विक्षेपश्च परोक्षधीः ।
अपरोक्षमतिः शोकमोक्षस्तृप्तिर्निरंकुशा ॥ ३३॥

(அ-கை.)

தார்ஷ்டாந்தமாகிய சிதாத்மாவிலும் ௩௩-௩௩-ல்கூறிய ஏழு அவஸ்தைகளையும் அநுவதித்துக் கூறுகின்றார் :—

अज्ञानं आवृतिः तद्वत् विक्षेपः च परोक्षधीः अपरोक्षमतिः शोकमोक्षः निरंकुशा तृप्तिः ॥

(சு-ம்.)

அஞ்ஞானமும், ஆவரணமும், அதுபோல விக்ஷேபமும், பரோக்ஷஞானமும், அபரோக்ஷஞானமும், சோகநிவிருத்தியும், நிரங்குசத்திருப்தியுமாகிய இவை ஏழவஸ்தைகளாம். (௩௩)

௬. சுலோகம் ௩௩-ல் கூறிய ஏழவஸ்தைகளும் சிதாபாசனது தர்மமாதலும், வியவஸ்தையோடு பந்தமோக்ஷங்களைத் தருவனவாதலும்.

[௩௪] सप्तावस्था इमाः संति चिदाभासस्य तास्विमौ ।
बंधमोक्षौ स्थितौ तत्र तिस्रो बंधकृतः स्मृताः ॥ ३४॥

(அ-கை.)

அப்படியானால் முற்கூறிய ஏழவஸ்தைகளும் ஆத்மாவின் தர்மமாதல் அங்கீகரிக்கப்படவே, அவ்வாத்மாவினது கூடஸ்தத்தன்மை அதாவது நிர்-

விகாரத்தன்மை வியாகாதத்தை யடையுமே யென்றாசங்கித்து, இவ்வேழவஸ்தைகளும் சிதாபாசனுக்கேயாம் கூடஸ்தனுக் கில்லை யென்று கூறுகின்றார்:—

इमाः सप्तावस्थाः चिदाभासस्य संति ॥

(சு-ம்.)

இவ்வேழவஸ்தைகளும் சிதாபாசனுடையனவாம்.

(வி-ம்.)

" சகலவாக்கியங்களும் அவதாரணத்தோடுகூடியனவாம் அதாவது நிச்சயவாசகமான ஏ என்னுஞ் சொல்லின் பரியாயமான ஏவகாரத்தோடு கூடியனவாம். " என்னும் நியாயத்தால் சப்தாவஸ்தை நிச்சயமாக சிதாபாசனுடையனவாம் கூடஸ்தனுடையன வன்று என்றறியப்படுகின்றது.

(அ-கை.)

அப்படியானால் இவ்வேழவஸ்தைகளையும் இங்கு உபந்யசித்தல் அதாவது சொல்லத்தொடங்குதல் பயனில்லாததாமென் றாசங்கித்து, இவ்வுபந்நியாசம் ஏழவஸ்தைகளும் பந்தமோக்ஷங்களுக்குக் காரணமாம் என்பதனை அறிவித்தலாகிய பயனையுடையதாம். ஆதலால் இவ்வுபந்நியாசம் பயனில்லாததன்று என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்.—

तासु इमौ बंधमोक्षौ स्थितौ ॥

(சு-ம்.)

அவ்வேழு அவஸ்தைகளினும் இப்பந்தமோக்ஷங்க ளிரண்டும் நிலைத்திருக்கின்றன.

(அ-கை.)

இவ்வேழவஸ்தைகள் எல்லாமும் பந்தமோக்ஷங்களுக்குக் காரணமாமோ வென இல்லை யென்று கூறுகின்றார்:—

तत्र तिस्रः बंधकृतः स्मृताः ॥

(சு-ம்.)

அவ்வேழவஸ்தைகளில் அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேப மென்னும் மூன்றவஸ்தைகளும் பந்தத்திற்குக் காரணமாம். (௫௪)

எ. அஞ்ஞானத்தின் சொரூபம்.

[ருகக] न जानामीत्युदासीनव्यवहारस्य कारणम् ।
विचारप्रागभावेन युक्तमज्ञानमीरितम् ॥ ३५॥

(அ-கை.)

இம்மூன்றவஸ்தைகளும் பந்தத்திற்குக் காரணமாதலைக் காட்டுதற் பொருட்டு மூன்றன் சொரூபத்தையும் ஒவ்வொருகாரியத்தைக் காட்டுதலால் விளக்குதற்கு விரும்பிய ஆசாரியர் அஞ்ஞானத்தின் சொரூபத்தினை முதலிற் காட்டுகின்றார்:—

विचारप्रागभावेन युक्तं उदासीनव्यवहारस्य कारणं न "जानामि ।" इति आज्ञानं ईरितम् ॥

(சு-ம்.)

விசாரத்தின் முன்னின்மையோடுகூடியதாய் உதாசீன வியவகாரத்திற்குக் காரணமாய் "யான் அறியேன்" என்று தோற்றுவது அஞ்ஞானமெனப்படும்.

(வி-ம்.)

ஆத்மதத்துவவிசாரத்திற்கு விசாரத்தின் முன்னின்மையோடுகூடியதும், சும்மாவிருத்தலாகிய உதாசீன வியவகாரத்திற்குக் காரணமானதும், யான் அறியேனென்று அநுபவிக்கப்படுவதுமாயுள்ள தெதுவோ அது அஞ்ஞான மெனப்படுகின்றதென்பது பொருள். (௩௫)

அ. ஆவரணத்தின் சொரூபமும் காரியமும்.

[ருஉ0] अमार्गेण विचार्याथ नास्ति नो भाति चेत्यसौ ।
विपरीतव्यवहृतिरावृत्तेः कार्यमिष्यते ॥ ३६॥

(அ-கை.)

ஆவரணத்தின் சொரூபத்தினையும் அதன் காரியத்தினையும் காட்டுகின்றார்:—

अमार्गेण विचार्य अथ "असौ न अस्ति च नो भाति" इति विपरीत-व्यवहृतिः आवृत्तेः कार्यम् इष्यते ॥

(சு-ம்.)

"வழியினைவிட்டு விசாரித்துப் பின் இக்கூடஸ்த னில்லை, தோற்றவில்லை." என்பதாக எந்த விபரீதவியவகாரம் உண்டாகின்றதோ அது ஆவரணத்தின் காரியமென் றங்கீகரிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

சாஸ்திரத்திற் கூறிய விதத்தைக் கடந்து தர்க்கமாத்திரத்தால் விசாரித்துப்பின் உண்டாகும் "கூடஸ்த னில்லை, தோற்றமில்லை." என்னும் வடிவினதாகிய விபரீதவியவகாரம் ஆவரணத்தின் காரியமா மென்பது பொருள்.

௯. விக்ஷேபத்தின் சொரூபமும் காரியமும்.

[௬௨௧] देहद्वयचिदाभासरूपो विक्षेप ईरितः ।
कर्तृत्वाद्यखिलः शोकः संसाराख्योऽस्य बंधकः ॥ ३७॥

(அ-கை.)

விக்ஷேபத்தின் சொரூபத்தினையும் அதன் காரியத்தினையுங் காட்டுகின்றார் :—

देहद्वयचिदाभासरूपः विक्षेपः ईरितः । बंधकः संसाराख्यः कर्तृत्वाद्यखिलः शोकः अस्य ॥

(சு-ம்.)

இரண்டு தேகங்களோடுகூடிய சிதாபாசவடிவம் விக்ஷேப மென்று சொல்லப்படும். பந்தத்திற்கு ஏது, சம்சார மென்னும் பெயர்களையுடைய கர்த்திருத்தன்மைமுதலிய சகல சோகங்களும் இச்சிதாபாசனது காரியமாம்.

(வி-ம்.)

ஸ்தூலம் சூக்ஷ்ம மென்னும் இரண்டு சரீரங்களோடுகூடிய சிதாபாசனே விக்ஷேபமாம். பந்தகாரணம் சம்சார மென்னும் பெயரையுடைய கர்த்திருத்தன்மைமுதலிய சகல சோகங்களும் சிதாபாசனது காரியமாம். இங்குக்காரிய மென்னுஞ் சொல் சுலோகத்திற்குப் புறம்பினின்றும் சொல்லப்பட்டது. கர்த்திருத்தன்மைமுதலியன என்பதன் முதலிய என்னுஞ் சொல்லால் பிரமாதாத்தன்மைமுதலியன கொள்ளப்படும். (௩௭)

௧0. ஏழவஸ்தைகள் சிதாபாசனுடையனவாம், பிரஹ்மத்தினுடையவன்றென்பதில் சங்கைசமாதானம்.

[௬௨௨] अज्ञानमावृतिश्चैते विक्षेपात्प्राक् प्रसिध्यतः ।
यद्यप्यथाप्यवस्थे ते विक्षेपस्यैव नाऽऽत्मनः ॥ ३८॥

(அ-கை.)

அப்படியானால் "ஏழவஸ்தைகளும் சிதாபாசனுடையனவாம்." என்று ௬௧௮-ல் கூறியது பொருந்தாது. ஏனெனின், அஞ்ஞானஆவரணங்கள்

இரண்டு தேகத்தோடுகூடிய சிதாபாசவடிவ விக்ஷேபத்தின் உற்பத்திக்கு முன் இருத்தலாலும், சிதாபாசன் விக்ஷேபத்திற்கு உட்பட்டவனா யிருத்தலாலும் சிதாபாசனுக்கு ஏழுவஸ்தைகளும் பொருந்தா வென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

यद्यपि अज्ञानं च आवृतिः ऐत विक्षेपात् प्राक् प्रसिध्यतः । अथापि ते अवस्थे विक्षेपस्य एव आत्मनः न ॥

(சு-ம்.)

அஞ்ஞானமும் ஆவரணமுமாகிய இவ்விரண்டும் விக்ஷேபத்திற்கு முன் பிரசித்தமாயிருக்கினும், அவ்வவஸ்தை விக்ஷேபத்தினுடையனவே யாம்; ஆத்மாவினுடையவன்று.

(வி-ம்.)

இவ்வஞ்ஞானஆவரணங்கள் விக்ஷேபத்திற்குமுன் பிரசித்தமா யிருக்கினும், அவற்றிற்கு ஆத்மாவின் அவஸ்தையாதல் இல்லை. ஏனெனின், அவ்வாத்மா அசங்கமா யிருத்தலால் அதற்கு அவஸ்தையுடைமை சம்பவியாது. ஆதலால் பரிசேஷத்தால் அவ்வஞ்ஞானஆவரணங்கள் சிதாபாசனது அவஸ்தைகளேயா மென்று கூறுதல்வேண்டு மென்பது தாற்பரியம்.(நஅ)

[சுஉந] विक्षेपोत्पत्तितः पूर्वमपि विक्षेपसंस्कृतिः ।
अस्त्येव तदवस्थात्वमविरुद्धं ततस्तयोः ॥ ३९॥

(அ-கை.)

அப்படியானால் அவஸ்தையுடைய விக்ஷேபம் அப்போது அதாவது தனது உற்பத்திற்குமுன் இல்லாமையால் அஞ்ஞானமும் ஆவரணமும் விக்ஷேபத்தின் அவஸ்தையாமெனல் பொருந்தாதென் றுசங்கித்து, விக்ஷேபம் இல்லாதிருக்கினும் அவ்விக்ஷேபத்தின் சம்ஸ்காரம் அப்போது அதாவது தனது உற்பத்திக்குமுன் இருக்கின்றதாகலின் அஞ்ஞானமும் ஆவரணமும் விக்ஷேபத்தின் அவஸ்தையா மெனல் விரோதத்தையடையாதென் று கூறுகின்றார்:—

विक्षेपोत्पात्तितः पूर्वे अपि विक्षेपसंस्कृतिः ततः तयोः तदवस्थात्वं अविरुद्धं अस्ति एव ॥

(சு-ம்.)

விக்ஷேபத்தின் உற்பத்திக்கு முன்னும் விக்ஷேபத்தின் சம்ஸ்காரம் உள்ளதே. அக்காரணத்தால் அவ்வஞ்ஞானஆவரணங்களை அச்சிதாபாசனது அவஸ்தைகளென வர்ணித்தல் விரோதமின்றியதாம். (நகூ)

[சுஉச] ब्रह्मण्यारोपितत्वेन ब्रह्मावस्थे इमे इति ।
न शंकनीयं सर्वासां ब्रह्मण्येवाधिरोपणात् ॥ ४० ॥

(அ-கை.)

அப்படியானால் பிரசித்தமில்லாத சம்ஸ்காரத்தை அங்கீகரிக்கும்படியாயிலாக அஞ்ஞானத்தினையும் ஆவரணத்தினையும் விக்ஷேபத்தின் அவஸ்தையாக வர்ணித்தலினும் அதிஷ்டானத்தன்மையாகப் பிரசித்தமாயுள்ள பிரஹ்மத்தின் அவஸ்தையாக வர்ணித்தல் சிரேஷ்டமாமென்றாசங்கித்து வேறவஸ்தைகளினும் அதிப்பிரசங்கமுண்டாகுதலால் இவ்வாறு கூறுதல் பொருந்தாதென்று பரிகரிக்கின்றார்:—

"ब्रह्मणि आरोपितत्वेन इमे ब्रह्मावस्थे" इति शंकनीयं न । सर्वासां ब्रह्मणि एव अधिरोपणात् ॥

(சு-ம்.)

பிரஹ்மத்தில் ஆரோபிதமாயிருத்தலால் இவ்வஞ்ஞானம் ஆவரண மிரண்டும் பிரஹ்மத்தின் அவஸ்தைகளாமென்று சங்கை செய்யத்தக்கதன்று; ஏனெனின், எல்லா அவஸ்தைகளும் பிரஹ்மத்தின்கண்ணே ஆரோபமாயிருத்தலின். (௪௦)

[௬௨௫] संसार्यहं विबुद्धोऽहं निःशोकस्तुष्ट इत्यपि ।
जीवगा उत्तरावस्था भांति न ब्रह्मगा यदि ॥ ४१ ॥

(அ-கை.)

அப்படியானால் எல்லா அவஸ்தைகளுக்கும் பிரஹ்மத்தில் ஆரோபிக்கப்பட்டதன்மை சமமாயிருக்கினும், விக்ஷேபத்தின் உற்பத்திக்குப் பிந்தியகாலத்தில் இருப்பதாகிய சம்சாரித்தன்மைமுதலிய அவஸ்தைகள் ஜீவனது ஆசிரிதமாயிருத்தலின் அநுபவத்திற்கு விஷயமாவனவாயிருத்தலின் பிரஹ்மத்தின் அவஸ்தையாகாவென்று வாதி சங்கிக்கின்றான்:—

"अहं संसारी । अहं विबुद्धः । निःशोकः । तुष्टः" इति अपि उत्तरावस्थाः जीवगाः भांति । न ब्रह्मगाः यदि ॥

(சு-ம்.)

நான் சம்சாரி, நான் அறிஞன், நான் சோகமின்றியவன், நான் சந்தோஷமுடையவன் என்று இவ்விதமாகவும் அஞ்ஞான ஆவரணங்களுக்குப் பிந்திய அவஸ்தைகள் ஜீவனிடத்துள்ளனவாகத் தோற்றுகின்றன; பிரஹ்மத்தின்கண் உள்ளனவன்று என்று கூறின்.

(வி-ம்.)

"நான் சம்சாரி அதாவது கர்த்திருத்துவமுதலிய தர்மமுடையவன்." "நான் அறிஞன் அதாவது தத்துவசாக்ஷாத்காரமுடையவன்." "நான்

சோகமில்லாதவன் அதாவது கர்த்திருத்தவமுதலிய துன்பமின்றியவன்" "நான் சந்தோஷமுடையவன் அதாவது மேல் அ௩௯-அ௪உவரையில் சொல்லப்படும் கிருதகிருத்தியத்தன்மைமுதலியவற்றினாலாகிய திருப்தியுடையவன்." என்னும் பின் அவஸ்தைகளும் ஜீவரிடத்துள்ளனவாகத் தோற்றுகின்றன; பிரஹ்மத்தின் ஆசிரிதமன் றென்பது பொருள் (௪க)

[சூ௨௬] तर्ह्यज्ञोऽहं ब्रह्मसत्वभाने मद्दृष्टितो न हि ।
इति पूर्वे अवस्थे च भासेते जीवगे खलु ॥ ४२ ॥

(அ-கை.)

இவ்வாறிருக்கும்பின் அப்போது அஞ்ஞான ஆவரணங்களும் ஜீவனது ஆசிரிதமா யிருத்தலால் அநுபவிக்கப்படுபனவா யிருத்தலின் ஜீவனது அவஸ்தைகளேயா மென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

तर्हि "अहं अज्ञः । ब्रह्मसत्वभाने मद्दृष्टितः न हि" इति पूर्वे अवस्थे च खलु जीवगे भासेते ॥

(சு-ம்.)

அப்போது "நான் அஞ்ஞானி. பிரஹ்மத்தின் சத்தையும் விளக்கமும் எனது திருஷ்டியா வில்லை." என்று முன் அஞ்ஞான ஆவரணமாகிய இரண்டு அவஸ்தைகளும் பிரசித்தமாய் ஜீவனை ஆசிரயித்தனவாகத் தோற்றுகின்றன வாகலின் அவை ஜீவனது அவஸ்தைகளாம். (௪௨)

[சூ௨௭] अज्ञानस्याश्रयो ब्रह्मेत्याधिष्ठानतया जगुः ।
जीवावस्थात्वमज्ञानाभिमानित्वादवादिषम् ॥ ४३ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மத்தை அஞ்ஞானத்தின் ஆசிரய மென்று பூர்வாசாரியர்கள் கூறியதெப்படி என்றாசங்கித்து அவ்வாசிரியர்கள் சொல்லக் கருதியதைக் காட்டுகின்றார்:—

अधिष्ठानतया अज्ञानस्य आश्रयः ब्रह्म इति जगुः ।

(சு-ம்.)

அதிஷ்டானத்தன்மையினால் அஞ்ஞானத்திற் காசிரயம் பிரஹ்ம மென்று ஆசாரியர் கூறினர்.

(வி-ம்.)

பிரஹ்மத்தினை அஞ்ஞானத்தின் அதிஷ்டானமாகக் கூறும் இச்சையினால் அஞ்ஞானத்தின் ஆசிரயமென்று கூறினார் என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் நீர் யாது சொல்லக்கருதி அஞ்ஞானத்தினை ஜீவனது அவஸ்தையாகக் கூறினீரென்றாசங்கித்துத் தாம் சொல்லக்கருதியதனைக் காட்டுகின்றார்:—

अज्ञानाभिमानित्वात् जीवावस्थात्वं अवादिषम् ॥

(சு-ம்.)

ஜீவன் "நான் அஞ்ஞானி" என்று அஞ்ஞானத்தின் அபிமானியாயிருத்தலால் அஞ்ஞானம் ஜீவனது அவஸ்தையாகச் சொல்லப்பட்டது. ()

கக. அஞ்ஞான ஆவரணங்களின் நிவிருத்திவாயிலாக முத்திக்கு ஏதுவாகிய பரோக்ஷஞானம் அபரோக்ஷஞான மென்னும் இரண்டு அவஸ்தைகளையும் கூறல்.

[௬௨அ] ज्ञानद्वयेन नष्टेऽस्मिन्नज्ञाने तत्कृताऽऽवृतिः ।
न भाति नास्ति चेत्येषा द्विविधापि विनश्यति ॥ ४४ ॥

(அ-கை.)

இவ்வாறு பந்தத்திற்குக் காரணமாகிய அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேப மென்னும் மூன்றவஸ்தைகளையும் காட்டி, மிஞ்சி நின்ற நான்கவஸ்தைகளுள் முன் ௬௨0-ல் கூறப்பட்ட அஞ்ஞானவரணங்களின் நிவிருத்தி வாயிலாக முத்திக்கு ஏதுவான இரண்டு அவஸ்தைகளையும் காட்டுகின்றார்:-

ज्ञानद्वयेन अस्मिन् अज्ञाने नष्टे तत्कृता "न भाति । न अस्ति"। इति एषा द्विविधा आवृतिः अपि विनश्यति च ॥

(சு-ம்.)

இரண்டு ஞானங்களாலும் இவ்வஞ்ஞானம் நாசமாகவே அவ்வஞ்ஞானத்தின் காரியமான "இல்லை தோற்றவில்லை" என்னும் இவ்விருவகை ஆவரணமும் நாசமாகின்றன. பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மை வடிவ லக்ஷணமுடைய இரண்டு ஞானங்களாலும் ஆவரணத்திற்குக் காரணமாகிய அஞ்ஞானம் நாசமாக, அவ்வஞ்ஞானத்தினாலுண்டாகிய "இல்லை,

தோற்றவில்லை." என்னும் வியவகாரத்திற்குக் காரணமான இருவகை ஆவ (௪௪)
ரணமும் காரண மின்மையால் நாசமாகின்றன.

[௬௨௯] परोक्षज्ञानतो नश्येदसत्वावृत्तिहेतुता ।
अपरोक्षज्ञाननाश्या ह्यभानावृत्तिहेतुता ॥ ४५॥

(அ-கை.)

எந்த ஞானத்தினால் அஞ்ஞானத்தின் எந்த அம்சத்தின் நிவிருத்தி
யுண்டாகின்றதென்று கேட்கக்கருதியவிடத்து இரண்டு பிரிவாக்கிக் காட்டு
கின்றார்:—

परोक्षज्ञानतः असत्वावृत्तिहेतुता नश्येत् अपरोक्षजाननाश्या अभानावृत्ति-
हेतुता हि॥

(சு-ம்.)

பரோக்ஷஞானத்தால் அசத்துத்தன்மையாவரணத்தின் ஏதுத்தன்மை
நாசமாகின்றது. அபரோக்ஷஞானத்தால் நாசமாகத்தக்க அபானவரணத்
தின் ஏதுத்தன்மையிருக்கின்றது.

(வி-ம்.)

"கூடஸ்தனிருக்கின்றான்" என்னும் வடிவுடைய பரோக்ஷஞானத்
தால் அஞ்ஞானத்தின் "கூடஸ்தன் இல்லை" என்னும் வடிவுடைய அசத்
துத்தன்மையாவரணத்தின் காரணத்தன்மை நீங்குகின்றது. "கூடஸ்தன்
யான்" என்னும் வடிவுடைய அபரோக்ஷஞானத்தினாலோ அஞ்ஞானத்
தினது "கூடஸ்தன் தோற்றவில்லை" என்னும் வடிவுடைய அபானவர (௪௫)
ணத்தின் காரணத்தன்மை நீங்குகின்றது.

௧௨. அபரோக்ஷஞானத்தின் பயனாகிய முதல் அவஸ்தை.

[௬௩0] अभानावरणे नष्टे जीवत्वारोपसंक्षयात् ।
कर्तृत्वाद्यखिलः शोकः संसाराख्यो निवर्तते ॥ ४६ ॥

(அ-கை.)

இப்போது ஞானத்தின் பலமாகிய இரண்டவஸ்தைகளில் முதலாவது
சோகநிவிருத்தியாகிய அவஸ்தையைக் கூறுகின்றார்:—

अभानावरणे नष्टे जीवत्वारोपसंक्षयात् कर्तृत्वाद्यखिलः संसाराख्यः शोकः
निवर्तते ॥

(சு-ம்.)

அபானுவரணம் நாசமாகவே ஜீவத்தன்மையின் அபிராமாணிகத்தன்மை யாய் நசித்தலின் கர்த்திருத்தன்மைமுதலிய வடிவ சகல சம்சாரமென்னுஞ் சோகமும் நீங்குகின்றது.

(வி-ம்.)

அபானுவரணம் நீங்கவே பிராந்தியினுல் தோற்றுகின்ற ஜீவத்தன்மை யும் நீங்குதலால், அந்த ஜீவத்தன்மைவடிவ மித்தையாகையால் கர்த்திருத் தன்மைமுதலியவடிவ சம்சார மென்னும் சோகமுழுவதும் நீங்குகின்றது என்பது பொருள். (௪௬)

௧௩. அபரோக்ஷஞானத்தின் பயனுகிய இரண்டாவது அவஸ்தை.

[௫௩௧] निवृत्ते सर्वसंसारे नित्यमुक्तत्वभासनात् ।
निरंकुशा भवेत्तृप्तिः पुनः शोकासमुद्भवात् ॥ ४७ ॥

(அ-கை.)

இவ்வாறு சோகநிவிருத்திவடிவ அவஸ்தையினைக் காட்டி, இப்போ து நிரங்குசத்திருப்திவடிவ இரண்டாவது அவஸ்தையைக் காட்டுகின்றார்:—

सर्वसंसारे निवृत्ते नित्यमुक्तत्वभासनात् पुनः शोकासमुद्भवात् निरंकुशा तृप्तिः भवेत् ॥

(சு-ம்.)

சகலசம்சாரங்களும் நீங்கவே நித்தியமுக்தத்தன்மை தோற்றுதலால் மீண்டும் சோகம் பிறவாமையின் நிரங்குசத்திருப்தி யென்னும் தடையற்ற ஆநந்த முண்டாகின்றது. (௪௭)

௧௪. முற்கூறிய சுருதியின் வியாக்கியானத்தில் ஏழவஸ்தைகளை நிரூபித்த லின் சம்பந்தம்.

[௫௩௨] अपरोक्षज्ञानशोकनिवृत्त्याख्ये उभे इमे ।
अवस्थे जीवगे ब्रूते आत्मानं चेदिति श्रुतिः ॥ ४८ ॥

(அ-கை.)

அப்படியானுல் "ஆத்மாவை அறிந்தால்" என்னும் வேதமந்திரத் தின் வியாக்கியானத்தில் பிரவிருத்தித்திருத்தலால் அதன் வியாக்கியா னத்தை விட்டு இடையில் அஞ்ஞானமுதலிய ஏழவஸ்தைகளையும் நிரூபித் தல் பிரகிருதத்தில் அதாவது தொடங்கிய அர்த்தத்தில் பொருத்தமின்றி

யதாமென் றாசங்கித்து, எழுவஸ்தைகளின் நிரூபணமும் "ஆத்மாவை யறிந்தால்" என்னுஞ் சுருதியின் தாற்பரியத்தை நிரூபித்தற்கு உபயோகமுள்ளதாகச் சொல்லப்பட்டிருக்தலின் ஏழுவஸ்தைகளையும் நிரூபித்தல் பிரகிருதத்தில் பொருத்தமின்றியதன் றென்னும் அபிப்பிராயமாக ௫அ௫-ல் கூறிய சுருதியின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்:—

अपरोक्षज्ञानशोकनिवृत्त्याख्ये उभे इमे अवस्थे "आत्मानं चेत्" इति श्रुतिः जीवगे ब्रूते ॥

(சு-ம்.)

அபரோக்ஷஞானம் சோகநிவிருத்தி யென்னும் பெயர்களையுடைய இரண்டு அவஸ்தைகளையும் ஆத்மாவை அறிந்தால் என்னுஞ் சுருதி ஜீவனை ஆசிரயித்தனவாகக் கூறுகின்றது.

(வி-ம்.)

சிதாபாசனிடத்துள்ள ஏழு அவஸ்தைகளுள் அபரோக்ஷஞானம் சோகநிவிருத்தி என்னும் இரண்டவஸ்தைகளையும் பிரதிபாதித்தற்கு "ஆத்மாவை அறிந்தால்" என்னும் வேதமந்திரமானது பிரவிருத்தித்திருக்கின்றது என்பது அபிப்பிராயம். (௪அ)

௯. ஆத்மாவிற்குப் பரோக்ஷஞானத்திற்கு விஷயமாந்தன்மை சம்பவித்தல் ௬௯-௬௪௧.

க. ஆத்மா பரோக்ஷஞானத்திற்கு விஷயமாதலைச் சொல்லுதற்பொருட்டு ஏதுவோடு அபரோக்ஷஞானம் இருவகையாதல்.

[௬௯] अयमित्यपरोक्षत्वमुक्तं तद्द्विविधं भवेत् ।
विषयस्वप्रकाशत्वाद्धियाप्येवं तदीक्षणात् ॥ ४९ ॥

(அ-கை.)

"இது என்பதனால் அபரோக்ஷத்தன்மை சொல்லப்படுகின்றது" என்னும் ௬௦௫-வது சுலோகத்தில் "இது" எனும் பதத்தால் ஆத்மாவின் அபரோக்ஷத்தன்மை சொல்லப்படுகின்றது." என்பது சொல்லப்பட்டது. அவ்வாறாகவே ஆத்மாவிற்கு அபரோக்ஷஞானத்திற்கு விஷயமாந்தன்மையே உண்டாகும், பரோக்ஷஞானத்திற்கு விஷயமாந்தன்மை யுண்டாகாதென் றாசங்கித்து, அப்பரோக்ஷஞானத்திற்கு விஷயமாந்தன்மையைச் சம்பாதித்தற்பொருட்டு அபரோக்ஷஞானத்தை விபாகஞ்செய்கின்றார்:—

अयं इति अपरोक्षत्वं उक्तं तत् द्विविधं भवेत ॥

(சு-ம்.)

இது எனும் பதத்தால் ௬௦௩-வது சுலோகத்தில் சொல்லப்பட்ட அபரோக்ஷத்தன்மை எதுவோ அது இருவகையாகின்றது.

(அ-கை.)

அபரோக்ஷத்தன்மை இருவகையாதலிற் காரணத்தைக் கூறுகின்றார்:-

विषयस्वप्रकाशत्वात् । धिया अपि एवं तदीक्षणात् ॥

(சு-ம்.)

விஷயமாகிய ஆத்மா சுவப்பிரகாசமாயிருத்தலாலும் புத்தியினாலும் இவ்வாறு அவ்விஷயத்தைப் பார்த்தலாலும்.

(வி-ம்.)

விஷயமாகிய சித்துவடிவ ஆத்மா சுவப்பிரகாசமாயிருத்தலாலும் அதாவது தனது வியவகாரமாகிய உணர்ச்சியின்பொருட்டு வேறு சாதனங்களின் அபேக்ஷையின்றியதாயிருத்தலாலும், புத்தியினால் இவ்வாறு சொப்பிரகாசத்தன்மையாக அவ்வாத்மவடிவ விஷயத்தை அறிதலாலும், "இது" எனும் பதத்தால் முற்கூறப்பட்ட அபரோக்ஷத்தன்மை விஷயம் அதாவது ஆத்மா, விஷயி அதாவது புத்திவிருத்தி என்னும் பேதத்தால் இருவகையாம் என்பது பொருள். (௪௯)

௨. விஷயத்தின் சொப்பிரகாசத்தன்மையோடு பரோக்ஷஞானத்திற்கு விரோதமின்மை.

[௬௩௪] परोक्षज्ञानकालेऽपि विषयस्वप्रकाशता ।
समा ब्रह्म स्वप्रकाशमस्तीत्येवं विबोधनात् ॥ ५० ॥

(அ-கை.)

அப்படியானால் அபரோக்ஷத்தன்மை இருவகையாகுக. இவ்வளவினால் ஆத்மா பரோக்ஷஞானத்திற்கு விஷயமாதலில் வந்ததென்ன? என்று ஆசங்கித்து, ஆத்மவடிவ விஷயத்தின் சுவப்பிரகாசத்தன்மை பரோக்ஷஞானத்திற்கு விஷயமாந்தன்மைக்கு விரோதியன்றென்று கூறுகின்றார்:-

परोक्षज्ञानकाले अपि विषयस्वप्रकाशता समा ॥

(சு-ம்.)

பரோக்ஷஞானகாலத்திலும் விஷயத்தின் சொப்பிரகாசத்தன்மை சமானமாம்.

(வி-ம்.)

அபரோக்ஷஞானகாலத்தினைப்போலப் பரோக்ஷஞானகாலத்திலும் பிரஹ்மவடிவவிஷயத்தின் சொப்பிரகாசத்தன்மை யுளதேயாம்.

(அ-கை.)

அந்தப்பரோக்ஷஞானகாலத்தில் விஷயத்தின் சொப்பிரகாசத்தன்மையினது இருப்பில் யுக்தியைக் கூறுகின்றார்:—

ब्रह्म स्वप्रकाशं आस्ति इति एवं विबोधनात् ॥

(சு-ம்.)

பிரஹ்மம் சொப்பிரகாசமா மென்று அறிதலால். (ருo)

[சுநரு] अहं ब्रह्मेत्यनुल्लिख्य ब्रह्मास्तीत्येवमुल्लिखन् ।
परोक्षज्ञानमेतन्न भ्रांतं बाधानिरूपणात् ॥ ५१ ॥

கூ. பிரத்யக் அம்சத்தைக் கிரகியாமையினால் பிரத்தியக்கினும் வேறாகாத பிரஹ்மத்தைக் கோசரிக்கும் ஞானத்திற்குப் பரோக்ஷத்தன்மை சம்பவித்தல்.

(அ-கை.)

பிரத்தியக்காகிய அந்தராத்மாவினும் வேறாகாத பிரஹ்மத்தை விஷயஞ் செய்யும் ஞானத்திற்குப் பரோக்ஷத்தன்மை எதனால் உளது என்று ஆசங்கித்து, பிரத்தியக் அம்சத்தைக் கிரகியா மையினால் பிரத்தியக்கினும் வேறாகாத பிரஹ்மத்தைக் கோசரிக்கும் ஞானத்திற்கு பரோக்ஷத்தன்மை யுள தென்று கூறுகின்றார்:—

"अहं ब्रह्म" इति अनुल्लिख्य "ब्रह्म अस्ति" इति एवं उल्लिखन् परोक्षज्ञानम् ॥

(சு-ம்.)

"யான் பிரஹ்மம்" என்று விஷயஞ்செய்யாது, "பிரஹ்மம் இருக்கின்றது" என்று விஷயஞ்செய்வது பரோக்ஷஞானமாகின்றது.

உ. நான்கு விகற்பத்தால் பிரஹ்மத்தினது பரோக்ஷஞானம் மயக்கமுடையதாகாமை.

(அ-கை.)

அப்படியானால் இப்பரோக்ஷஞானம் பிராந்திவடிவமாமென்றாசங்கித்து இப்பரோக்ஷஞானத்தின் பிராந்தத்தன்மை பாதமாகத்தக்க சொருபமாயிருக்கின்றதா? அல்லது பிரஹ்மத்தின் வடிவமாகிய வியக்தியைக் கிரகி

யாமையா லிருக்கின்றதா? அல்லது அபரோக்ஷமாகக் கிரகிக்கத்தக்க பிரஹ்மமாகிய விஷயத்தினைப் பரோக்ஷத்தன்மையினால் கிரகித்தலா லிருக்கின்றதா? அல்லது பிரத்தியக் அம்சத்தைக் கிரகியாமையினா லிருக்கின்றதா? என்று சித்தாந்தி நான்குவகையாக வாதியினை நோக்கி விகற்பித்து, பாதமாகாத்தக்க சொரூபமுடையதாயிருத்தலால் இப்பரோக்ஷஞானத்திற்குப் பிராந்தத்தன்மையுளது என்னும் முதல் விகற்பத்தைக் குறித்துச் சொல்லுகின்றார்:—

एतत् भ्रांतं न । बाधानिरूपणात् ॥

(சு-ம்.)

இப்பரோக்ஷஞானம் பிராந்திவடிவ மன்று. அதன் பாதம் நிரூபிக்கப் படாததாயிருத்தலால். (ருக)

[சுருசு] ब्रह्म नास्तीति मानं चेत्स्याद्बाध्येत तदा ध्रुवम् ।
न चैवं प्रबलं मानं पश्यामोऽतो न बाद्धचते ॥ ५२ ॥

(அ-கை.)

பரோக்ஷஞானம் பிராந்திவடிவ மாகாமையின் "பாதம் நிரூபிக்கப்படாமையால்" என்னும் எந்த ஏது கூறப்பட்டதோ அதனை வர்ணிக்கின்றார்:—

"ब्रह्म न अस्ति" इति चेत् मानं स्यात् तदा बाध्येत । च एवं प्रबलं मानं ध्रुवं न पश्यामः । अतः न बाध्यते ॥

(சு-ம்.)

"பிரஹ்மம் இல்லை" என்று எப்போது பிரமாண முண்டாகின்றதோ அப்போது பரோக்ஷஞானம் பாதத்தை யடைகின்றது. இவ்வாறே பிரபலப்பிரமாணம் நிச்சயமாகக்காணப்படுகிற தில்லை. ஆதலால் பரோக்ஷஞானம் பாதத்தை அதாவது அயதார்த்தத்தன்மையை அடைகிறதில்லை. (ருஉ)

[சுருஎ] व्यक्त्यनुल्लेखमात्रेण भ्रमत्वे स्वर्गधीरपि ।
भ्रांतिः स्याद्व्यक्त्यनुल्लेखात्सामान्योल्लेखदर्शनात् ॥ ५३ ॥

(அ-கை.)

"பிரஹ்மவடிவமாகிய வியக்தியினை விஷஞ்செய்யாதிருத்தலால் பரோக்ஷஞானம் பிராந்திவடிவமாம்." என்னும் இரண்டாவது விகற்பத்தினைச் சுவர்க்கத்தின் ஞானத்தில் அதிப்பிரசங்கத்தினால் தூஷணஞ்செய்கின்றார்:-

व्यक्त्यनुल्लेखमात्रेण भ्रमत्वे व्यक्त्यनुल्लेखात् सामान्योल्लेखदर्शनात् स्वर्गधीः अपि भ्रांतिः स्यात् ॥

(சு-ம்.)

வியக்தியினை விஷயஞ்செய்யாமைமாத்திரத்தால் பரோக்ஷஞானத்திற்குப் பிரஹ்மவடிவத்தன்மையுளதாயின் வியக்தியைக் கிரகியாமையினாலும், சாமாநியவடிவத்தைக் கிரகித்தலைக் காணுதலாலும் சுவர்க்கத்தின் புத்தியும் பிராந்தியாகும்.

(வி-ம்.)

"இது சுவர்க்கம்" என்னும் வடிவமாகக் கிரகியாது "சுவர்க்கம் இருக்கிறது." என்னும் வடிவமாகத் தோற்றுதலால் சுவர்க்கத்தின் உணர்ச்சியும் பிரமவடிவமா மென்னும் பிரசங்க முண்டாகு மென்பது பொருள். (ருங)

[சுருஅ] अपरोक्षत्वयोग्यस्य न परोक्षमतिर्भ्रमः ।
परोक्षमित्यनुल्लेखादर्थात्पारोक्ष्यसंभवात् ॥ ५४ ॥

(அ-கை.)

" அபரோக்ஷத்தன்மையால் கிரகிக்கத்தக்க பிரஹ்மத்தைப் பரோக்ஷமாகக் கிரகித்தலால் பரோக்ஷஞானத்திற்குப் பிராந்தித்தன்மை யுண்டு." என்னும் மூன்றாவது விகற்பத்தினை நிராகரிக்கின்றார் :—

अपरोक्षत्वयोग्यस्य परोक्षमतिः भ्रमः न ॥

(சு-ம்.)

அபரோக்ஷமாகத்தக்கதின் பரோக்ஷபுத்தி பிரமவடிவ மன்று.

(வி-ம்.)

அபரோக்ஷத்தன்மையினால் விஷயஞ்செய்யத்தக்க பிரத்தியகபின்ன பிரஹ்மவடிவ விஷயம் எதுவோ அதன் பரோக்ஷஞானத்திற்குப் பிரமவடிவத்துவம் சம்பவியாது.

(அ-கை.)

பிரஹ்மத்தின் பரோக்ஷஞானத்திற்குப் பிரமவடிவத்துவம் ஏன் சம்பவியாதெனக் கூறுகின்றார் :—

परोक्षं इति अनुल्लेखात् ॥

(சு-ம்.)

பரோக்ஷமா மென்று கிரகிக்கப்படாமையால்.

(வி-ம்.)

பிரஹ்மம் பரோக்ஷமா மென்னும் வடிவமாக அபரோக்ஷமாகத்தக்கப் பிரஹ்மத்தைக் கிரகித்தலின்மையால் பிரஹ்மத்தின் பரோக்ஷஞானம் பிரமரூப மன்று.

(அ-கை.)

அப்போது அந்த ஞானத்திற்குப் பரோக்ஷத்தன்மை எதனாலாம் என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

अर्थात् पारोक्ष्यसंभवात् ॥

(சு-ம்.)

பொருளால் பரோக்ஷத்தன்மை சம்பவித்தலின்.

(வி-ம்.)

"இது பிரஹ்மம்" என்று பிரஹ்மத்தின் வடிவமாகிய வியக்தியை கிரகித்தலின்மையின் சாமர்த்தியத்தால் அந்த ஞானத்தின் பரோக்ஷத் தன்மை சித்திக்கின்றது. (ருச)

[சுருக] अंशाग्रहीतेर्भ्रांतिश्चेद्घटज्ञानं भ्रमो भवेत् ।
निरंशस्यापि सांशत्वं व्यावर्त्यांशविभेदतः ॥ ५५ ॥

(அ-கை.)

"அம்சத்தைக் கிரகியாமையின் பரோக்ஷஞானத்திற்குப் பிராந்தித் தன்மை யுண்டு" என்னும் கடைசியாகிய நான்காவது விகற்பத்தினைப் பிரதிவாதி சங்கிக்கின்றான்:—

अंशाग्रहीतेः भ्रांतिः चेत् ॥

(சு-ம்.)

அம்சத்தைக் கிரகியாமையால் பரோக்ஷஞானம் பிராந்திவடிவமா மெனின்.

(வி-ம்.)

பிரஹ்மவடிவ அம்சம் கிரகிக்கப்படினும் பிரத்தியக்காகிய சாக்ஷிவடிவ அம்சம் கிரகிக்கப்படாமையால் பரோக்ஷஞானம் பிரமவடிவமா மென்பது பொருள்.

(அ-கை.)

இவ்வாறு இருக்குமாயின் அதாவது அம்சத்தைக் கிரகியாமையால் பரோக்ஷஞானத்திற்குப் பிரமவடிவத்துவம் இருக்குமாயின், அப்போது கடமுதலியவற்றின் ஞானமும் பிரமவடிவமா மென்னும் பிரசங்க முண்டாகும் என்பதாகச் சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

घटज्ञानं भ्रमः भवेत् ॥

(சு-ம்.)

கடத்தின் ஞானமும் பிரமவடிவமாகும்.

(வி-ம்.)

கடத்திற்கும் உள் அவயவங்கள் கிரகிக்கப்படாமையால் கடத்தின் ஞானம் பிரமவடிவமா மென்பது அபிப்பிராயம்.

(அ-கை.)

அப்படியானால் கடம் சாவயவமா யிருத்தலின் அதன் சில அம்சங்கள் கிரகிக்கப்படினும் சில அம்சங்கள் கிரகிக்கப்படாமை சம்பவிக்கின்றது. பிரஹ்மமோ நிரவயவமா யிருத்தலின் அதனது அம்சம் கிரகிக்கப்படாமையின் சம்பவம் எவ்வா றுண்டாகுமென் றாசங்கித்து, நிஷேதஞ்செய்யத்தக்க அம்சவடிவ உபாதி எதுவோ அவ்வடிவ நிமித்தகாரணத்தினு லாக்கப்பட்ட அம்சமுடைமை அந்தப் பிரஹ்மத்திற் குண்டாகு மென்று கூறுகின்றார்:—

व्यावर्त्यांशविभेदतः निरंशस्य अपि सांशत्वम् ॥

(சு-ம்.)

நிஷேதஞ்செய்யத்தக்க அம்சங்களின் பேதத்தால் நிரவயவப் பிரஹ்மத்திற்கும் அம்சமுடைமை அதாவது அவயவத்தோடுகூடியதன்மை உண்டாகின்றது. (ருரு)

௯. பரோக்ஷஞானத்தினாலும் அபரோக்ஷஞானத்தினாலும் நிவர்த்திக்கத்தக்க அஞ்ஞான அம்சத்தின் பேதம்.

[கூ௨௦] असत्वांशो निवर्तेत परोक्षज्ञानस्तथा ।
अभानांशानिवृत्तिः स्यादपरोक्षधिया कृता ॥ ५६ ॥

(அ-கை.)

நிவிருத்திக்கத்தக்க அவ்விரண்டம்சங்களைவை என்று கேட்க விரும்பியவிடத்துக் கூறுகின்றார்:—

परोक्षज्ञानतः असत्वांशः निवर्तेत तथा अपरोक्षधिया कृता अभानांश निवृत्तिः ॥

(சு-ம்.)

பரோக்ஷஞானத்தால் அசத்துத்தன்மை அம்சம் அதாவது இல்லையென்னுந்தன்மையைச் சம்பாதிக்கும் அஞ்ஞானம்சம் நிவிருத்தியாகின்றது. அதுபோல அபரோக்ஷஞானத்தால் அபானம்சம் அதாவது தோற்றாமையைச் சம்பாதிக்கும் அஞ்ஞானம்சம் நிவிருத்தியாகின்றது. (௫௬)

௪. அபரோக்ஷத்தன்மையால் கிரகிக்கத்தக்கது பரோக்ஷஞானத்திற்கு விஷயமாதலால் பிராந்தியாகாதென்பதில் திருஷ்டாந்தம்.

[௩௪௧] दशमोऽस्तीत्यविभ्रांतं परोक्षज्ञानमीक्ष्यते ।
ब्रह्मास्तीत्यपि तद्वत्स्यादज्ञानावरणं समम् ॥ ५७ ॥

(அ-கை.)

“ அபரோக்ஷத்தன்மையால் கிரகிக்கத்தக்க வஸ்துவாகிய பிரத்தியகபின்ன பிரஹ்மத்தினை விஷயஞ்செய்யும் பரோக்ஷஞானம் பிரமரூபமன்று.” என்று ௩௩௮-ற் கூறிய ௩-வது விகற்பத்தின் சமாதானத்தைத் திருஷ்டாந்தத்தைக் காட்டுதலாலும் திடப்படுத்துகின்றார்:—

“दशमः अस्ति” इति परोक्षज्ञानं अविभ्रांतं ईक्ष्यते । तद्वत् “ब्रह्म अस्ति” इति अपि स्यात् अज्ञानावरणं समम् ॥

(சு-ம்.)

“ பத்தாமவன் இருக்கின்றான் ” என்னும் பரோக்ஷஞானம் பிராந்தியின்மைவடிவமாகக் காணப்படுகின்றது. அதுபோலப் “பிரஹ்மமிருக்கின்றது” என்னும் பரோக்ஷஞானமும் பிராந்திவடிவமல்லாததாம். இரண்டிலும் அஞ்ஞானத்தின் ஆவரணம் சமமாம்.

(வி-ம்.)

“ பத்தாமவன் இருக்கின்றான் ” என்னும் ஆப்தனது வாக்கியத்தாலுண்டாகிய பரோக்ஷஞானம் எப்படிப் பிராந்தி இன்றியதோ, அதுபோலப் “ பிரஹ்மமிருக்கிறது ” என்னும் வாக்கியத்தாற்றோன்றிய ஞானமும் பிராந்தியின்றியதாம் ; இரண்டிலும் அஞ்ஞானத்தாலாகிய அசத்துவாவரணம்சம் சமானமாயிருத்தலால் என்பது தாற்பரியம். (௫௭)

௫. கேவலவாக்கியத்தால் பரோக்ஷஞானமும் விசாரத்தோடுகூடிய மகாவாக்கியத்தால் அபரோக்ஷஞானமுமாமென்று கூறுதல் ௩௪௨-௩௩௩.

க. வாக்கியார்த்தத்தின் விசாரத்தால் அபரோக்ஷஞானத்தின் உற்பத்தியினைத் தசமனது திருஷ்டாந்தத்தோடு கூறுதல்.

[கூசஉ] आत्मा ब्रह्मेति वाक्यार्थे निश्शेषेण विचारिते ।
व्यक्तिरुल्लिख्यते यद्वद्दशमस्त्वमसीत्यतः ॥ ५८ ॥

(அ-கை.)

அப்படியானால் வாக்கியத்தினால் பரோக்ஷஞான முண்டாகுமாயின், அப்போது அபரோக்ஷஞானம் எதனால் உண்டாகுமென் றாசங்கித்து, விசாரத்தோடுகூடிய வாக்கியத்தினாலேயே அபரோக்ஷஞான முண்டாகின்ற தென்று கூறுகின்றார்:—

"आत्मा ब्रह्म" इति वाक्यार्थे निःशेषेण विचारिते व्यक्तिः उल्लिख्यते ॥

(சு-ம்.)

"ஆத்மா பிரஹ்மம்" என்னும் வாக்கியார்த்தத்தை முழுவதும் விசாரிக்கவே பிரத்தியகபின்ன பிரஹ்மத்தன்மையாகிய வியக்தி அபரோக்ஷமா யறியப்படுகின்றது.

(வி-ம்.)

"இவ்வாத்மா பிரஹ்மம்" என்னும் * கச. மகாவாக்கியத்தின் அர்த்தத்தைச் செவ்வையாய் விசாரிக்கவே முன் "இருக்கிறது" என்று பரோக்ஷத்தன்மையாக அறியப்பட்ட பிரஹ்மம் பிரத்தியக்காகிய அந்த ராத்மாவினும் வேறாகாததன்மை சாக்ஷாத்கரிக்கப்படுகின்றது.

---

* கச. உத்தமாதிகாரிக்கோ சிரவணாதிகள் ஞானத்திற்குச் சாதனங்களாம். மத்திமாதிகாரிக்கு நிர்க்குணப்பிரஹ்மத்தின் அகங்கிரக உபாசனையே ஞானத்திற்குச் சாதனமாம். இது எல்லா அத்வைத நூல்களின் சித்தாந்தம். ஆனால் இரண்டிடங்களிலும் விருத்தியின் பிரவாகவடிவப் பிரசங்கியானமாகிய தியானமே ஞானத்தின் காரணவடிவப் பிரமாணமாம். மத்திமாதிகாரிக்கு நிர்க்குணப்பிரஹ்மவடிவ நிரந்தர விருத்திரூப உபாசனை செய்யத்தக்கதாம். அதுவே பிரசங்கியானமாம். அவ்வாறே உத்தமாதிகாரிக்கும் சிரவணமனனங்களுக்குப்பின் நிதித்தியாசனவடிவப்பிரசங்கியான முளது. அதுவே பிரஹ்மசாக்ஷாத்காரத்தின் அசாதாரணகாரணமாகிய கரணமாம். அறுவகைப்பிரமாணங்களில் பிரசங்கியானம் இல்லையாகலின் அது பிரமையின் கரணமாதல் பொருந்தாதெனினும், சகுணப்பிரஹ்மத்தின் தியானம் சகுணப்பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாதலும், நிர்க்குணப்பிரஹ்மத்தின் தியானம் நிர்க்குணப்பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாதலும் சகல சுருதிஸ்மிருதிகளிலும் பிரசித்தமாம். தேசகாலங்களின் அந்தராயமுடைய ஸ்திரீயின் தியானமாகிய பிரசங்கியானம் ஸ்திரீயின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாதல் உலகில் பிரசித்தமாம். அதனால் நிதித்தியாசனவடிவப் பிரசங்கியானம் பிரஹ்மசாக்ஷாத்காரத்திற்குக் கரணமாதல் பொருந்துகின்றது. அன்றியும் சம்வாதிப்பிரமத்தினைப் போல விஷயம் பாதிக்

(அ-கை.)

அவ்வாக்கியார்த்தத்தின் விசாரத்தால் அபரோக்ஷஞானம் உண்டாகின்றதென்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

**यद्वत् "दशमः त्वं असि" इति अतः ॥**

(சு-ம்.)

எப்படிப் "பத்தாமவன் நீ" என்னும் * ௧௫. வாக்கியத்தால் வியக்தியாகிய பத்தாமவன் அபரோக்ஷமாய் அறியப்படுகின்றானோ.

---

கப்படாமையினாலாவது பிரசங்கியானம் சப்தப்பிரமாணவடிவ மூலமுடையதாயிருத்தலாலாவது பிரசங்கியானத்தினாலுண்டாகிய பிரஹ்மஞானத்திற்குப் பிரமாண ஜந்யத்தன்மை இல்லையாயினும் பிரமாத்தன்மை யிருக்கின்றது என்பது சில நூலாசிரியரின் மதம். வாசஸ்பதியின் மதத்தில் பிரஹ்மஞானத்தின் கரணம் மனமாம். பிரசங்கியானம் மனதிற்குச் சககாரியாம்.

அத்வைத நூல்களின் முக்கியமதம் இதுவாம்:— மகாவாக்கியத்தினால் ஞானமுண்டாகியபின் பிரசங்கியானத்தின் அபேக்ஷை யில்லை. ஆனால் மகாவாக்கியத்தினாலேயே அத்வைதப்பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரமு முண்டாகின்றது. ஆதலால் வேதாந்தவாக்கியவடிவ சப்தமே பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரத்திற்குக் கரணமாம். நிதித்தியாசனவடிவப் பிரசங்கியானத்தாற்றோன்றிய ஏகாக்கிரத்தன்மையோடுகூடிய மனம் அதற்குச் சககாரியமாம். அங்கும் பிறநூலாசிரியர்களது மதத்தில் விசாரத்தோடுகூடிய மகாவாக்கியம் அபரோக்ஷஞானத்திற்குக் காரணமாம். சம்க்ஷேபசாரீரககாரரது மதத்தில் எல்லாவிதத்தாலும் மகாவாக்கியம் அபரோக்ஷஞானத்திற்கே காரணமாம். இது பேதம். பிரமாஞானத்தின் கரணத்தினைப் பிரமாண மென்பர். எதனால் மகாவாக்கியவடிவ சத்தம் பிரத்தியகபின்ன பிரஹ்மத்தைக் கோசரிக்கும் பிரமாஞானத்திற்குக் கரணமாதலால் பிரமாண மாகின்றதோ, அதனால் மகாவாக்கியவடிவப் பிரமாணத்தால் அபரோக்ஷஞானத்தின் உற்பத்தியைக் கூறுதல் தகுதியாம்.

* ௧௫ "பத்தாமவன் யான்" என்னும் வடிவினதாகிய பத்தாமவனது சொரூபத்தின் அபரோக்ஷஞானம் "பத்தாமவன் நீ" என்று பத்தாமவனது சொரூபத்தை யறிவிக்கும் சத்தப்பிரமாணத்தாற்றோன்றியதாம். இந்திரியத்தினாலாவது மனத்தினாலாவது தோன்றியதன்று. ஏனெனின், சரீரவடிவ தசமன் பிற இந்திரியங்களுக்கு யோக்கியனே அல்லன்; ஆனால் நேத்திரேந்திரியத்திற்கு யோக்கியனும். நேத்திரேந்திரியத்தினாலேயே சரீரத்தில் தசமத்தன்மையின் ஞானம் உண்டாகுமாயின், நேத்திரத்தின் வியாபாரமின்றியே மூடியகண்ணுடைய குருடனுக்குப் பத்தாமவன் நீ என்னும் வாக்கியத்தைக் கேட்டுப் பத்தாமவனது ஞானம் உண்டாகின்றது. அது உண்டாகலாகாது. ஆதலால் தசமனது ஞானம் நேத்திரேந்திரியஜந்ய மன்று. மனதில் பாகியபதார்த்தத்தினது ஞானத்தின் சாமர்த்தியமன்று. ஆனால் ஆந்தரபதார்த்தினது ஞானத்தின் சாமர்த்திய மிருக்கின்றது. தேவதத்தன் எஞ்ஞதத்தன் முதலிய பெயர்கள் சூக்ஷ்மசரீரத்தோடுகூடிய ஸ்தூலசரீரத்தினவாம், "நீ" "யான்" என்னும் வியவகாரமும் சூக்ஷ்மத்தோடுகூடிய ஸ்தூலதேகத்தி லுண்டாகின்றது. அந்த ஸ்தூலதேகத்தின் ஞானம் மனதினாற் சம்பவியாது. இவ்வாற்றால் தசமன் ஞானம் சப்தப்பிரமாணஜந்யமாம், அதற்கு நேத்திரமும் மனமும் சககாரியாம்.

(வி-ம்.)

"பத்தாமவன் யான்" என்னும் வாக்கியத்தால் எப்படித் தன்னிலேயே பத்தாமவன்றன்மை சாக்ஷாத்கரிக்கப்படுகின்றதோ அதுபோல என்பது பொருள்.

௨. விசாரத்தோடுகூடிய வாக்கியத்தால் அபரோக்ஷஞானம் உற்பத்தியாகும் விதத்தில் திருஷ்டாந்தம்.

[ரு௫௯] दशमः क इति प्रश्ने त्वमेवेति निराकृते ।
गणयित्वा स्वेन सह स्वमेव दशमं स्मरेत् ॥५९॥

(அ-கை.)

விசாரத்தோடுகூடிய வாக்கியத்தால் அபரோக்ஷஞானம் உண்டாகுந் தன்மையைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

"दशमः कः" इति प्रश्ने "त्वं एव" इति निराकृते । स्वेन सह गणयित्वा स्वं एव दशमं स्मरेत् ॥

(சு-ம்.)

"பத்தாமவன் யாவன்" என்று வினவ "நீயே" என்று அவ்வினா நிராகரிக்கப்படவே தன்னோடு ஒன்பதின்மரை எண்ணித் தன்னையே பத்தாமவனாக நினைக்கின்றான்.

(வி-ம்.)

நீர் "இருக்கின்றான்" என்று நிரூபித்த பத்தாமவன் யாவன் என்று ஆப்தபுருஷனை நோக்கிப் பத்தாமவன் வினவ, அவ்வினாவிற்கு "நீயே பத்தாமவன்" என்று ஆப்தபுருஷன் பரிகரிக்கத் தன்னோடு மற்ற ஒன்பது புருஷர்களையும் எண்ணி "யான் பத்தாமவன்" என்று தானேயாகிய பத்தாமவனை ஸ்மரிக்கின்றான் என்பது பொருள். (ருகூ)

[ருகூக] दशमोऽस्मीति वाक्योत्था न धीरस्य विहन्यते ।
आदिमध्यावसानेषु न नवत्वस्य संशयः ॥६०॥

(அ-கை.)

தசமன் யான் என்னும் ஞானம் விசாரத்தோடுகூடிய வாக்கியத்தால் உண்டானதாயிருத்தலின் விபரீதபாவனைமுதலியவடிவத்தன்மை யில்லை என்று கூறுகின்றார்:—

"दशमः अस्मि" इति वाक्योत्था अस्य धीः न विहन्यते । आदिमध्याव-सानेषु नवत्वस्य संशयः न ॥

(சு-ம்.)

தசமன் யான் என்னும் வாக்கியத்தாலுண்டாகிய இத்தசமனது புத்தி நாசமாகாது. முதலிலும் இடையிலும் கடையிலும் ஒன்பதெனுந்தன்மையின் சம்சயம் உண்டாகாது.

(வி-ம்.)

இத்தசம புருஷனுக்கு "நீயே தசமன்" என்னும் எண்ணிக்கைமுதலியவடிவ விசாரத்தோடுகூடிய வாக்கியத்தினு லுண்டாகிய யான் தசமனென்னும் உணர்ச்சி எதுவோ அது நாசமாகிறதில்லை அதாவது ஒரு ஞானத்தினுலும் பாதத்தை யடைகிறதில்லை. அன்றியும் எண்ணிக்கைவடிவ கிரியையில் ஒன்பது புருஷர்களின் முதல் இடைகளில் பத்தாமவனை நிறுத்தி அவ்வெண்ணிக்கையைச் செய்யினும், யான் பத்தாமவனே அல்லனே என்னும் சம்சயம் உண்டாகிறதில்லை. ஆதலால் அவ்விசாரத்தோடுகூடிய வாக்கியத்தினுலுண்டாகிய "பத்தாமவன் யான்" என்னும் புத்தியாகிய அநுபவம் திட அபரோக்ஷவடிவமா மென்பது பொருள். (௬௦)

௩. முற்கூறிய தசமனது திருஷ்டாந்தத்தைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துதல்.

[௬௧] सदेवेत्यादिवाक्येन ब्रह्मसत्वं परोक्षतः ।
गृहीत्वा तत्त्वमस्यादिवाक्याद्व्यक्तिं समुल्लिखेत् ॥ ६१ ॥

(அ-கை.)

இந்தத் திருஷ்டாந்தத்தில் கூறிய எல்லாப்பொருள்களையும் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார் :—

सत् एव इत्यादिवाक्येन परोक्षतः ब्रह्मसत्वं गृहीत्वा तत्त्वमस्यादिवाक्यात् व्यक्तिम् समुल्लिखेत् ॥

(சு-ம்.)

"முன் சத்தே யிருந்தது" என்றல் முதலியவாக்கியத்தால் பரோக்ஷமாகப் பிரஹ்மத்தின் இருப்பைக் கிரகித்து, தத்துவமசிமுதலியவாக்கியத்தால் பிரத்தியகபின்னபிரஹ்மமாகிய வியக்தியைச் சாக்ஷாத்கரிக்கின்றான்.

(வி-ம்.)

" सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम् ॥ "சௌம்மியனே! முன் இது ஒரே அத்விதீயசத்தாகவே இருந்தது" என்றல்முதலிய அவாந்தர

வாக்கியத்தால் பிரஹ்மத்தின் இருப்பை முதலில் நிச்சயித்து, அது ஜீவரூபமாக தேகத்தில் பிரவேசித்தல்முதலிய யுக்திகளை விசாரித்தலால் அதன் பிரத்தியக்வடிவத்தன்மையைப் பொருத்தி "அது நீ" என்றல்முதலிய மகாவாக்கியத்தினால் அத்துவிதீயப்பிரஹ்மமாகிய ஆத்மாவை "நான் பிரஹ்மம்" என்று முமுக்ஷு சாக்ஷாத்கரிக்கின்றான்.(௬௧)

[௬௨] आदिमध्यावसानेषु स्वस्य ब्रह्मत्वधीरियं ।
नैव व्यभिचरेत्तस्मादापरोक्ष्यं प्रतिष्ठितं ॥ ६२ ॥

(அ-கை.)

இதுவுமது:—

इयम् स्वस्य ब्रह्मत्वधीः आदिमध्यावसानेषु न एव व्यभिचरेत् । तस्मात् आपरोक्ष्यं प्रतिष्ठितम् ॥

(சு-ம்.)

இந்தத் தனது பிரஹ்மத்தன்மையின் புத்தி முதல் இடை கடைகளில் வியபிசாரத்தை யடைகிறதில்லை. ஆதலால் இந்தப் புத்தியின் அபரோக்ஷத் தன்மை நிலைத்திருக்கின்றது.

(வி-ம்.)

எதனால் இவ்வாத்மாவின் பிரஹ்மத்தன்மையின் உணர்ச்சி பஞ்சகோசங்களின் ஆதி நடு அந்தங்களில் ஆத்மாவின் வியவகாரம் உளதாகியும் வேறுவகையாக உண்டாகிறதில்லை. ஆதலால் இந்தப் புத்திக்கு அபரோக்ஷத் தன்மை செவ்வையாய் நிலைத்திருக்கின்றதென்பது பொருள். (௬௨)

௪. கேவலவாக்கியத்தால் பரோக்ஷஞானமும் விசாரத்தோடுகூடிய வாக்கியத்தினால் அபரோக்ஷஞானமும் உண்டாகுவதில் தைத்திரீய சுருதி பிரமாணமாதல்.

[௬௩] जन्मादिकारणत्वाख्यलक्षणेन भृगुः पुरा ।
पारोक्ष्येण गृहीत्वाथ विचाराद्व्यक्तिमैक्षत ॥ ६३॥

(அ-கை.)

அப்படியானால் இப்படி "முதலில் கேவலவாக்கியத்தால் பரோக்ஷஞானமுண்டாய், பின் விசாரத்தோடுகூடிய வாக்கியத்தால் அபரோக்ஷஞானமுண்டாகின்றது" என்பது எதனால் அறியப்படுகின்றதென்றுசங்கித்துத் தைத்திரீயகமுதலிய சுருதியர்த்தத்தை விசாரித்துப்பார்த்தலால் அறியப்படுகின்றதென்று கூறுகின்றார்:—

भृगुः पुरा जन्मादिकारणत्वाख्यलक्षणेन पारोक्ष्येण गृहीत्वा अथ विचारात् व्यक्तिं ऐक्षत ॥

(த-ம்.)

பிருகு ஜன்மமுதலிய காரணத்தன்மைவடிவ இலக்ஷணத்தினுல் முன் பரோக்ஷத்தன்மையினுல் நிச்சயித்து பின் விசாரத்தினுல் வியக்தியைப் பார்த்தார்.

(வி-ம்.)

வருணனென்னும் இருஷியின்புத்திரனுகிய பிருகு என்னும் ஓர் ரிஷி இருந்தார். அவர்முதலில் "यतो वा इमानि भूतानि जायंते येन जातानि जीवंति यत्प्रयंत्यभिसंविशंतीति तद्विजिज्ञासस्व तद्ब्रह्मेति ॥ எதனின்றும் இப்பூதங்கள் உண்டாகின்றனவோ, உண்டானவை எதினுல் ஜீவிக்கின்றனவோ, எதனிடத்து இறந்தன பிரவேசிக்கின்றனவோ அது பிரஹ்மம். அதனை நீ விசேஷமாயறிவாயாக." என்னும் வாக்கியத்தால் கேட்கப்பட்ட ஜகத்தின் ஜன்மமுதலியவற்றிற்குக் காரணமாதல்வடிவ லக்ஷணத்தால் ஜகத்காரணமாகிய பிரஹ்மத்தைப் பின் அந்நமயமுதலிய பஞ்சகோசங்களின் விசாரத்தால் பிரத்தியகாத்மவடிவ பரோக்ஷத்தன்மையாக அறிந்து, பிரஹ்மமாகிய வியக்தியினைச் சாக்ஷாத்கரித்தான் என்பது பொருள். (௬௩)

[௬௪] यद्यपि त्वमसीत्यत्र वाक्यं नोचे भृगोः पिता ।
तथाऽप्यन्नं प्राणमिति विचार्यस्थलमुक्तवान् ॥ ६४ ॥

(அ-கை.)

அப்படியானுல் இச்சுருதியின் பிரசங்கத்தில் "நீ பிரஹ்மம்" என்றல்முதலிய உபதேசவாக்கியங்களில்லாமையால் பிருகுரிஷிக்கு ஆத்மாவின் சாக்ஷாத்காரம் எப்படி உண்டாயிற்று? என்றுசங்கித்து அத்தன்மைய உபதேசவாக்கியம் இல்லையாயினும், ஆத்மசாக்ஷாத்காரத்திற்கு ஏதுவான விசாரிக்கத்தக்க பஞ்சகோசவடிவ ஸ்தலத்தைக் காட்டுதலால் பிருகுவுக்கு ஆத்மசாக்ஷாத்காரமுண்டாயிற்றென்று கூறுகின்றார்:—

यद्यपि अत्र भृगोः पिता "त्वम् असि" इति वाक्यं न ऊचे । तथापि "अन्नं प्रमाणम्" इति विचार्यस्थलम् उक्तवान् ॥

(த-ம்.)

இங்குப் பிருகுவின் பிதா "நீ பிரஹ்மம்" என்னும் வாக்கியத்தினைச் சொல்லாவிடினும், அந்நமயகோசம் பிராணமயகோசமுதலிய பஞ்சகோச வடிவ விசாரஞ்செய்யத்தக்க ஸ்தலத்தினைக் கூறினுர். (௬௪)

[௬௫] अन्नप्राणादिकोशेषु सुविचार्य पुनः पुनः ।
आनंदव्यक्तिमीक्षित्वा ब्रह्मलक्ष्माप्ययूयुजत् ॥ ६५ ॥

(அ-கை.)

அப்படியானால் அந்நமயமுதலிய பஞ்சகோசங்களை விசாரித்தலால் பிரத்தியகாத்மாவாகிய கூடஸ்தனது சாக்ஷாத்காரம் உண்டாகுக; பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரம் எப்படி உண்டாயிற்றென்றாசங்கித்து, பிரத்தியகாத்மாவேபிரஹ்மமாயிருத்தலால் பஞ்சகோசங்களின் விசாரத்தால் ஆநந்தவடிவ ஆத்மாவின் வியக்தியாகிய சொரூபத்தினைச் சாக்ஷாத்கரித்து "आनंदाद्ध्येव खल्विमानि भूतानि जायंते आनंदेन जातानि जीवंति आनंदं प्रयंत्यभिसंविशंति ॥ ஆநந்தத்தினின்றே நிச்சயமாக இப்பூதங்கள் உண்டாயின. ஆநந்தத்தினால் உண்டாயினவை நிலைத்திருக்கின்றன. ஆநந்தத்தின்கண் இறந்து பிரவேசிக்கின்றன" என்னும் பிரஹ்மத்தின் இலக்ஷணத்தையும் பிரத்தியகாத்மாவிலேயே பிருகுவானவர் சேர்த்தனரென்று கூறுகின்றார்:—

अन्नप्राणादिकोशेषु पुनः पुनः सुविचार्य आनंदव्यक्तिं ईक्षित्वा ब्रह्म-लक्ष्म अपि अयूयुजत् ॥

(சு-ம்.)

அந்நமயப்-பிராணமயாதிகோசங்களில் அடிக்கடி விசாரித்து ஆநந்த வியக்தியாகிய ஆத்மாவின் சொரூபத்தைக் கண்டு அதனைப் பிரஹ்மத்தின் இலக்ஷணத்தோடும் பொருத்தினார். (சுரு)

[சுசு] सत्यं ज्ञानमनंतं चेत्येवं ब्रह्मस्वलक्षणम् ।
उक्त्वा गुहाहितत्वेन कोशेष्वेतत्प्रदर्शितं ॥ ६६ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மத்தின் லக்ஷணத்தினை ஆநந்தாத்மவடிவமாகப் பிரத்தியகாத்மாவிற் பொருத்துதல் பொருந்தாது, பிரஹ்மம் தடஸ்தவடிவமாயி (பஞ்சகோசங்களுக்கு வெளியிலி)ருத்தலால் பிரத்தியகாத்மாவாகிய சாக்ஷியினும் வேறாயிருத்தலி னென்றாசங்கித்துச் சத்தியமுதலிய இலக்ஷணமுடைய பிரஹ்மத்திற்குப் பிரத்தியகாத்மவடிவமாக ஸ்திதி கேட்கப்படுதலால் பிரஹ்மமும் பிரத்தியகாத்மவடிவ சாக்ஷியும் வேறெனல் பொருந்தாதென்று கூறுகின்றார்:—

"सत्यं ज्ञानं च अनंतम्" इति एवं ब्रह्मस्वलक्षणं उक्त्वा कोशेषु गुहाहितत्वेन एतत् प्रदर्शितम् ॥

(சு-ம்.)

"சத்திய ஞான அநந்தம் பிரஹ்மமாம்" என்று பிரஹ்மத்தின் தன்னிலக்கணத்தைக் கூறி "பஞ்சகோசங்களில் குகையி லுள்ளதாயிருத்தலா"

லென்பதனல் பிரஹ்மத்தின் பிரத்தியக்வடிவத்தன்மை காட்டப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

"सत्यं ज्ञानमनंतम् ब्रह्म" சத்தியமும் ஞானமும் அநந்தமுமாம் பிரஹ்மம்" என்று பிரஹ்மத்தின் * ககூ. சொரூபலக்ஷணத்தைக் கூறி "यो वेद निहितं गुहायां परमे व्योमन् ॥ அவ்வியாக்ருதமாகிய பரமாகாயத்திலிருக்கின்ற பஞ்சகோசவடிவமாகிய குகையிலுள்ள பிரஹ்மத்தினை எவன் அறிகின்றானோ" என்னும் வாக்கியத்தால் பஞ்சகோசவடிவ குகையிலுள்ளிருப்பதாக அதே பிரஹ்மத்திற்குப் பிரத்தியகாத்மவடிவத்தன்மை அச்சுருதியின் கண்ணுள்ள பிரசங்கத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதென்பது பொருள்.()

---

*ககூ. அசாதாரண (ஒன்றன்கண்ணிருக்கும்) தர்மத்தினை இலக்ஷணமென்பர். அசம்பவம் அவ்வியாப்தி அதிவியாப்தி என்னும் மூன்று குற்றங்களுமில்லாத தர்மத்தினை அசாதாரணதர்மமென்பர். அசாதரணதர்மம்=சிறப்பியல்பு. அந்த இலக்ஷணம் (க) தடஸ்தலக்ஷணம் (உ) சொரூபலக்ஷணம் என்னும் வேறுபாட்டால் இரண்டுவகையினதாம்.

(க) ஒருகாலத்திருப்பதாய் வியாவர்த்தகம் (பிறவற்றினின்றும் வேறுபிரித்தறிவிப்பது) யாதோ அது தடஸ்தலக்ஷணமாம். அதுவே உபலக்ஷணமாம். எப்படிக் "காகமுடையது தேவதத்தனது வீடு" என்னுமிடத்துக் காகத்தோடுகூடியதன்மை ஓர்காலத்திருப்பதாய் மற்றைய வீடுகளின்றும் தேவதத்தனது வீட்டை வேறுபிரித்தறிவிப்பதாம். ஆதலால் அது வீட்டிற்குத் தடஸ்தலக்ஷணமாம். அதுபோல "எதனின்றும் இப்பூதங்கள் உண்டாயினவோ, உண்டாயினவை எதனுல் ஜீவிக்கின்றனவோ, எதன்கண் இறந்து பிரவேசத்தை யடைகின்றனவோ அதனை 'அது பிரஹ்மம்' என்று அறிக" என்று சுருதியிற் கூறியதும், "இச்சகத்தின் பிறப்பு முதலியன எதினின்றும் உண்டாகின்றனவோ" என்னும் வியாசசூத்திரத்திற் கூறியதுமான ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்களின் காரணத்தன்மையும், அதனுல் உபலக்ஷிக்கப்பட்ட சர்வஞ்ஞத்தன்மைமுதலியவற்றோடுகூடியதன்மையும், பிரஹ்மத்தில் ஒரு காலத்து (அஞ்ஞானதசையில்) இருப்பனவாய் மாயை அதன் காரியம் என்பவற்றினின்றும் பிரஹ்மத்தை வேறுபிரிப்பனவாம். ஆதலால் அவை பிரஹ்மத்தின் தடஸ்தலக்ஷணமாம்.

(உ) எப்போது மிருப்பதாகிய வியாவர்த்தகம் சொரூபலக்ஷணமாம் "வெண்ணிறத்தோடுகூடியது தேவதத்தன் வீடு" என்னுமிடத்து வெண்ணிறத்தோடுகூடிய தன்மை கிரகத்தின் சொரூபமாயிருத்தலால் எல்லாக்காலத்திலும் வீட்டிலிருப்பதாய் மற்றக் கருமை பொன்மைமுதலிய நிறமுடைய வீடுகளினின்றும் தேவதத்தன் வீட்டை வேறுபிரித்தறிவிப்பதாயிருத்தலால் அது வீட்டிற்குச் சொரூபலக்ஷணமாம். அவ்வாறே "சத்தியம் ஞானமநந்தம் பிரஹ்ம மிருக்கின்றது" என்னுஞ் சுருதியிற் கூறிய சத்திய ஞானதிவடிவத்தன்மை பிரஹ்மத்தின் சொரூபமாயிருத்தலால் சர்வகாலத்திலும் (ஞானஞ்ஞானதசைகளிலும்) பிரஹ்மத்தி லிருப்பதாய் அந்நியமான அசத்து ஜட பரிச்சின்னமாகிய (இதனுலேயே துக்கவடிவமான) பிரபஞ்சத்தினின்றும் பிரஹ்மத்தை வேறுபிரித்தறிவிப்பதாயிருத்தலால் அது பிரஹ்மத்தின் சொரூபலக்ஷணமாம்.

ஞ. சுலோகம் கசஉ-ற் கூறிய அர்த்தத்தில் சாந்தோக்கியசுருதியின் பிரமாணம்.

[கூருக] पारोक्ष्येण विबुध्येंद्रो य आत्मेत्यादिलक्षणात् ।
अपरोक्षीकर्तुमिच्छंश्चतुर्वारं गुरुं ययौ ॥ ६७॥

(அ-கை.)

இவ்வாறு கூசஎ-கூருO வரையில் எஜுர்வேதத்தின் தைத்திரீயசுருதியை விசாரித்துப் பார்த்தலால் பிருகுவின் பரோக்ஷத்தன்மையின் ஞானபூர்வக சாக்ஷாத்காரத்தின் விசாரத்தாற் றோன்றியதன்மையினைக் காட்டி, சாந்தோக்கியசுருதியை விசாரித்துப் பார்த்தலாலும் அதனைக் காட்டுகின்றார்:—

इंद्रः यः आत्मा इत्यादिलक्षणात् पारोक्ष्येण विबुध्य अपरोक्षीकर्तुं इच्छन् चतुर्वारं गुरुं ययौ ॥

(சு-ம்.)

இந்திரன் "எந்த ஆத்மா" என்றல் முதலியலக்ஷணத்தால் பரோக்ஷத்தன்மையாக அறிந்து அபரோக்ஷஞ்செய்ய விரும்பி நான்குமுறை குருவினிடத்துச் சென்றான்.

(வி-ம்.)

தேவேந்திரன் " य आत्माऽपहतपाप्मा विरजो विमृत्युः विशोकः ॥ எந்த பிரதிசயப்பிரியவடிவ ஆத்மா கர்மம் அதன் ஆசிரயமான ஸ்தூலசூக்ஷ்ம சரீரம் என்பவற்றின் சங்கமின்றியதாய், மூப்பின்றியதாய், மரணமின்றியதாய்ச் சோகமின்றியதா யிருக்கின்றதோ " என்றல் முதலிய வாக்கியங்களால் சொல்லப்பட்ட லக்ஷணத்தால் ஆத்மாவைப் பரோக்ஷத்தன்மையாக அறிந்து விசாரத்தினால் மூன்று சரீரத்தையும் நிராகரித்து அவ்வாத்மாவை சாக்ஷாத்கரித்தற்பொருட்டுப் பிரஹ்மாவாகிய குருவை நான்குமுறை *கஎ. சரணமடைந்தான் என்பது சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷதத்தில் கடைசி அ-வது அத்தியாயத்திற் கேட்கப்பட்டிருக்கின்றது.

கூ. சுலோகம் கூசஉ-ல் கூறிய அர்த்தத்தில் ஐதரேயசுருதி பிரமாணமாதல்.

[கூருஉ] आत्मा वा इदमित्यादौ परोक्षं ब्रह्म लक्षितम् ।
अध्यारोपापवादाभ्यां प्रज्ञानं ब्रह्म दर्शितम् ॥ ६८॥

---

* கஎ. வித்தையைக் கிரகிக்கும்பொருட்டுப் பத்திரபுஷ்பாதிகளைக் கையிற் கொண்டு குருவின் பாதங்களைப் பற்றி " பகவானே! எனக்குபதேசித்தல்வேண்டும்" என்றல் முதலிய மந்திரங்களை உச்சரித்துச் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்தல் எதுவோ அது சரணமடைதலாம். இதனை ஆரியத்தில் உபபத்தியென்றும், உபசந்நத்துவ மென்றும் கூறுவர். அதனை இந்திரன் செய்தான்.

(அ-கை.)

இப்பொழுது ருக்வேதத்தின் ஐதரேயகசுருதியிலும் பரோக்ஷஞான பூர்வக சாக்ஷாத்காரத்தின் விசாரத்தினுற் பெறப்படுந்தன்மையாகிய அதனைக் காட்டுகின்றார்:—

"आत्मा वा इदम्" इत्यादौ परोक्षं ब्रह्म लक्षितं । अध्यारोपापवादाभ्यां प्रज्ञानं ब्रह्म दर्शितं ॥

(சு-ம்.)

"முன் இவ்வொரே ஆத்மா இருந்தது" என்பனமுதலிய பதங்களையுடைய வாக்கியத்தில் பரோக்ஷப்பிரஹ்மம் அறிவிக்கப்பட்டது. பின் அத்தியாரோப அபவாதங்களால் பிரஞ்ஞானமாகிய பிரத்தியகாத்மவடிவப் பிரஹ்மத்தினைக் காட்டினர்.

(வி-ம்.)

"आत्मा वा इदम् एक एवाग्र आसीत नान्यत्किंचन मिषत् முன் இச்சகத்து ஒரே ஆத்மாவாயிருந்தது. சஞ்சலமுடைய மற்றெதுவு மிருந்ததில்லை." என்னும் வாக்கியத்தால் பிரஹ்மத்தின் லக்ஷணத்தைக் கூறி, "स एक्षत लोकान्नु सृजै அவ்வாத்மா யான் உலகத்தைப் படைப்பேனுக என்று கண்டார்." என்று ஆரம்பித்து "तस्य त्रय आवस थास्त्रयः स्वप्रा अयमावसथोऽयमावसथोऽयमावसथः ॥ ஜீவவடிவமாகிய அப்பரமாத்மாவிற்கு வலதுகண், மனம், இதயாகாசம் என மூன்றிடங்களுண்டு. மூன்று அவஸ்தைவடிவ *கனு சொப்பனமுண்டு. இது ஸ்தானம், இது ஸ்தானம், இது ஸ்தானம்". என்னும் வாக்கியத்தால் பரமாத்மாவினிடத்து ஜகத்தினது அத்தியாரோபத்தின் றன்மையினைக் கூறி, "सजातो भूतान्यभिव्यैक्षत् किमिहान्यं वावदिषत् அச்சீவன் தேகாபிமானவடிவ ஜன்மத்தை யடைந்து வெகுகாலம்வரையில் அஞ்ஞானமாகிய நித்திரையிற் றூங்கி கிருபையின் வசத்தினராகிய குருவால் விழிப்பின்பொருட்டு கரணத்தில் வேதாந்தவடிவ மகாபேரியின் முழக்கமுண்டாக விழிப்பையடைந்து ஆகாசாதி பூதங்களை விசாரித்தான். இப்பூதங்களில் ஆத்மாவுக்கு வேருக எதனைச் சொன்னர்? எதனையுஞ் சொல்லவில்லை." என்னும் வாக்கியத்தால் அவ்வாரோபிக்கப்பட்ட ஜகத்தின் அபவாதத்தைக் கூறி, "स ऐतमेव पुरुषं ब्रह्म ततमपश्यत् इदमदर्शम् ॥ அந்த இப்புருஷனுகிய பிரத்தியகாத்மாவையே பரிபூரணபிரஹ்மமாகக் கண்டான். இவ்வாறு இப்பிரத்தியகபின்ன பிரஹ்மத்தை நான் சாக்ஷாத்கரித்தேன்." என்னும் வாக்கியத்தால் பிரத்தியகாத்மாவின் பிரஹ்மவடிவத்தன்மையைக் கூறி, பின் "पुरुषे ह

*கனு. அவித்தியாஜந்யமா யிருத்தலால் மித்தையாகுதலால் மூன்றவஸ்தையும் சொப்பனமாம்,

வா சுவர்க்கத்தினின்றேனும் நரகத்தினின்றேனும் நழுவிய ஜீவனாகிய இவன் முதலில் பிதாவாகிய புருஷனிடத்துக் கர்ப்பவடிவமானான்" என்பன முதலிய வாக்கியத்தால் ஞானசாதனமாகிய வைராக்கியம் உண்டாதற் பொருட்டுக் கர்ப்பவாசமுதலிய துக்கங்களைக் காட்டி "कोऽयमात्मेति वयमुपास्महे எதனை யாம் இவ்வாத்மாவென்று உபாசிக்கவேண்டியது அதாவது அறிய வேண்டியது?" என்றல்முதலிய வாக்கியங்களால் விசாரித்து "தத்" "துவம்" பதங்களின் அர்த்தத்தைச் சோதித்தலோடு "प्रज्ञानं ब्रह्म ॥ பிரஞ்ஞானம் பிரஹ்மம்" என்று பிரஞ்ஞைவடிவ ஆத்மாவின் பிரஹ்மத் தன்மை ஐதரேய உபநிஷத்திற் காட்டப்பட்டிருக்கின்றது. இது பொருள்.

எ. சுலோகம் சுசஉ-சுருஉ ற் கூறியதன்மையினை எல்லாச் சுருதி களிலும் அதிதேசஞ் செய்கின்றார்.

[சுருரு] अवांतरेण वाक्येन परोक्षा ब्रह्मधीर्भवेत् ।
सर्वत्रैव महावाक्यविचारादपरोक्षधीः ॥ ६९ ॥

(அ-கை.)

இவ்வாறு தைத்திரீயம் சாந்தோக்கியம் ஐதரேய மென்னும் உபநிட தங்களிற் சொல்லப்பட்ட தன்மையினை அந்நிய சுருதிகளிலும் அதிதேசஞ் செய்கின்றார்:—

सर्वत्र एव अवांतरेण वाक्येन परोक्षा ब्रह्मधीः भवेत् । महावाक्यविचारात् अपरोक्षधीः ॥

(சு-ம்.)

எலலாச் சுருதிகளிலும் அவாந்தரவாக்கியத்தினால் பரோக்ஷப்பிரஹ்மத்தின் ஞான முண்டாகின்றது. மகாவாக்கியத்தின் விசாரத்தால் * கக அபரோக்ஷஞான முண்டாகின்றது. (சுகூ)

* கக. இந்திரியஜந்நியஞானம் பிரத்தியக்ஷம் அல்லது விஷயசேதனத்திற்கு விருத்திசேதனத்தோடுள்ள அபேதமே பிரத்தியக்ஷஞானமாம். அல்லது பிரமாதாவோடு வர்த்தமானசம்பந்தமுடைய விஷயத்தின் ஞானம் பிரத்தியக்ஷமாம். அல்லது பிரமாதாவோடு வர்த்தமானசம்பந்தமுடைய யோக்கியவிஷயத்தின் யோக்கியப்பிரமாணஜந்நியஞானம் பிரத்தியக்ஷம். அல்லது பிரமாதாசேதனத்தோடு வர்த்தமானசம்பந்தமுடைய யோக்கியவிஷயத்தின் அயோக்கியப்பிரமாண அஜந்நியஞானம் பிரத்தியக்ஷம். அல்லது தனது வியவகாரத்திற் கநுகூலமான மறைக்கப்படாத சைதன்னியத்திற்கு விஷயத்தோடுண்டாம் அபேதம் அபரோக்ஷ ஞானத்தின் லக்ஷணமாம். இவ்விலக்ஷணத்தின் பரீக்ஷை விருத்திப்பிரபாகரத்தில் பிரகரணபேதத்தால் சொல்லப்பட்டிருக்கின்றது. விருத்திரத்நாவலியிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. விஸ்தாரபயத்தால் இங்கு எழுதப்படவில்லை.

அ. மகாவாக்கியத்தின் விசாரம் அபரோக்ஷஞானத்தை உண்டுபண்ணுவதாமென்பதில் வாக்கியவிருத்தியிலுள்ள ஆசாரியரது வாக்கியம் பிரமாணமாதல்.

[௬௫௪] ब्रह्मापरोक्षासिद्ध्यर्थं महावाक्यमितीरितम् ।
वाक्यवृत्तावतो ब्रह्मापरोक्षे विमतिर्न हि ॥ ७० ॥

(அ-கை.)

அப்படியானால் விசாரம் அபரோக்ஷஞானத்தை உண்டுபண்ணுவதாமெனல் தமது *௨௦. கபோலகற்பிதமாமென் றாசங்கித்து வாக்கியவிருத்தி நூலில் ஸ்ரீமத் சங்கராசாரியர்களால் அவ்வாறு சொல்லப்பட்டிருத்தலால் மகாவாக்கியத்தின் விசாரம் அபரோக்ஷஞானத்தை உண்டுபண்ணுவதெனல் எமது கபோலத்தாற் கற்பிக்கப்பட்டதன்றென்று கூறுகின்றார்:—

वाक्यवृत्तौ "ब्रह्मापरोक्ष्यसिद्ध्यर्थं महावाक्यम्" इति ईरितं । अतः ब्रह्मापरोक्षे विमतिः न हि ॥

(சு-ம்.)

வாக்கியவிருத்தியில் பிரஹ்மத்தின் அபரோக்ஷத்தன்மை சித்திக்கும் பொருட்டாம் மகாவாக்கிய மென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால்

---

இவ்வாறு சொல்லப்பட்டப் பிரத்தியக்ஷஞானம் அபிஞ்ஞை பிரத்தியபிஞ்ஞை என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

(க) பிரத்தியக்ஷஞானத்தின் சாமக்கிரியினாற் றோன்றிய ஞானம் அபிஞ்ஞாப்பிரத்தியக்ஷமாம்

(உ) சமஸ்காரத்தோடுகூடிய பிரத்தியக்ஷஞானத்தின் சாமக்கிரியினாற் றோன்றிய ஞானம் பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷமாம்.

அந்த ஒவ்வொரு பிரத்தியக்ஷஞானமும் வெளி உள் என்னும் பேதத்தால் இருவகைத்தாம். சுரோத்திரஜப்பிரமை, துவாசப்பிரமை, சாக்ஷுஷப்பிரமை, ராசனப்பிரமை, கிராணஜப்பிரமை என்னும் பேதத்தால் வெளிப் பிரத்தியக்ஷஞானம் ஐந்துவகைத்தாம். உட்பிரத்தியக்ஷஞானம் ஆத்மகோசரம், அநாத்ம (சுகதுக்காதி) கோசரம் என்னும் பேதத்தால் இருவகையாம். ஆத்மகோசரம் பிரத்தியக்ஷஞானமும் விசிஷ்டாத்ம (நான் ஜீவன் கர்த்தா போக்தாமுதலியவடிவ) கோசரம் சுத்தாத்மகோசர மென்று இருவகைப்படும். சுத்தாத்மகோசரப்பிரத்தியக்ஷஞானமும் "துவம்" பதார்த்தகோசரம், "தத்" பதார்த்தகோசரம், தத்பதார்த்தத்தினும் வேறாகாத துவம்பதார்த்தகோசரம் என்னும் பேதத்தால் மூன்றுவகையாம். இவ்விதத்தால் பிரத்தியக்ஷஞானத்தின் லக்ஷணத்தோடுகூடிய பேதம் சுருக்கமாகக் காட்டப்பட்டது.

* ௨௦. இங்கு "தமது கபோலகற்பிதமாம்" என்று கூறுதலால் சாஸ்திரப்பிரமாணத்தால் சொல்லப்பட்டதன்று; தமது சித்தத்திலும் விசாரிக்கப்பட்டதன்று என்னும் பொருள் சூசிக்கப்பட்டது.

மகாவாக்கியத்தினால் பிரஹ்மத்தின் அபரோக்ஷஞான முண்டாதலில் விவாத மில்லை என்பது பொருள். (௭௧)

[௬௫௫] आलंबनतया भाति योऽस्मत्प्रत्ययशब्दयोः ।
अंतःकरणसंभिन्नबोधः स त्वंपदाभिधः ॥ ७१ ॥

(அ-கை.)

வாக்கியவிருத்தியில் மகாவாக்கியத்தினால் அபரோக்ஷஞானத்தைச் சம்பாதிக்கும் தன்மையினைக் காட்டுகின்றார்.—

यः अंतःकरणसंभिन्नबोधः अस्मत्प्रत्ययशब्दयोः आलंबनतया भाति । सः त्वंपदाभिधः ॥

(சு-ம்.)

எந்த அந்தக்கரணத்தால் வரைந்துகொள்ளப்பட்ட சேதனம் யான் என்னும் உணர்ச்சிக்கும். சப்தத்திற்கும் * உக. ஆசிரயமா யிருத்தலால் விளங்குகின்றதோ அது " நீ " என்னுஞ் சொல்லிற்குப் பொருளாம்.

(வி-ம்.)

எந்த அந்தக்கரணமாகிய உபாதியினையுடைய சிதாத்மா " யான் " என்னும் ஞானத்திற்கும். "யான்" என்னும் சொல்லிற்கும் விஷயமாயிருத்தலால் விளங்குகின்றதோ அத்தன்மைய ஞானமாகிய சேதனம் " நீ "

---

* உக. " கடம் " என்னும் விருத்திக்கும் " கடம் " என்னும் சொல்லிற்கும் விஷயம் கடமாம். அங்குக் கடம் என்னும் விருத்தி அந்தக்கரணத்தி லிருக்கி ன்றது; கடம் என்னுஞ் சொல் வாக்கி லிருக்கின்றது; கடவடிவ விஷயம் பிருதிவியி லிருக்கின்றது. ஆதலால் மூன்றும் வேறுவேறாம். அதுபோல " யான் " என்னும் விருத்திக்கும் " யான் " என்னுஞ் சொல்லிற்கும் விஷயம் அந்தக்கரணவிசிஷ்ட சேதனவடிவ ஜீவனாம். அங்கு யான் என்னும் விருத்தி அந்தக்கரணத்தி லுள்ளது; " யான்" என்னும் சொல் வாக்கி லுள்ளது; இவ்விரண்டற்கும் விஷயமாகிய அந்தக் கரணவிசிஷ்டசேதனம் தனது மகிமையி லுள்ளது. ஆதலால் " யான் " என்னும் விருத்திக்கும் " யான் " என்னுஞ் சொல்லிற்கும் வேறாம். யான் என்னும் விருத்தி அந்தக்கரணத்தின் உள்ளிருப்பதா யிருத்தலின் அது ஜீவனைவிட வேறாதல் சம்பவி யாது ; என்றாலும் கடத்தன்மை கடாகாசத்தன்மைவடிவ தர்மங்களால் கடம் கடா காசம் என்பவற்றிற்குண்டாம் பேதத்தைப்போல அந்தக்கரணத்தன்மை அந்தக்கரண விசிஷ்டசேதனத்தன்மைவடிவ தர்மங்களின் பேதத்தால் அந்தக்கரணத்திற்கும் ஜீவனுக்கும் பேதவியவகார முண்டாகின்றது. ஆதலால் "யான்" எனும் விருத்திக்குச் சீவனோடு பேத முண்டு. யான் என்னுஞ் சொல்லின் லக்ஷியார்த்தமான யான் என் னும் விருத்தியை விளக்கும் கூடஸ்தசைதன்னியமோ " யான் " என்னும் விருத்தி யைவிட முற்றும் வேறாம். இந்த அர்த்தம் பிரசங்கத்தினால் அறிவிக்கப்பட்டது.

என்னும் பதப்பொருளாம். 'நீ' என்னும் பதம் எதற்கு வாசகமா யிருக்கின் றதோ அது "நீ" எனும் பதப்பொரு ளெனப்படுகின்றது. இது பொருள்.

[கூ௲கூ] मायोपाधिर्जगद्योनिः सर्वज्ञत्वादिलक्षणः ।
पारोक्ष्यशबलः सत्याद्यात्मकस्तत्पदाभिधः ॥ ७२ ॥

(அ-கை.)

இப்படித் 'துவம்' பதத்தின் வாச்சியார்த்தத்தைக் கூறி, 'தத்' பதத்தின் வாச்சியார்த்தத்தைக் கூறுகின்றார்:—

मायोपाधिः जगद्योनिः सर्वज्ञत्वादिलक्षणः पारोक्ष्यशबलः ॥

(க-ம்.)

மாயோபாதியினையுடையவரும் ஜகத்யோநியும் சர்வஞ்ஞத்தன்மை முதலிய லக்ஷணமுடையவரும் பரோக்ஷத்தன்மைவடிவ தர்மவிசிஷ்டருமாகிய ஈசுவரன்.

(அ-கை.)

இவ்வாறு தடஸ்தலக்ஷணத்தைக் கூறிச் சொரூபலக்ஷணத்தைக் கூறுகின்றார்:—

सत्याद्यात्मकः तत्पदाभिधः ॥

(க-ம்.)

சத்தியமுதலிய வடிவினராய்த் " தத் " பதப் பொருளாவர்.

(வி-ம்.)

சத்தியம் எந்த ஞானமுதலியவற்றிற்கு முதலாயிருக்கின்றதோ அது சத்தியமுதலிய எனப்படும். அச்சத்திய ஞாநாநந்தமென்பன எதற்குசொரூபமா யிருக்கின்றதோ அது " தத் " பதப்பொருளாம். " தத் " என்னும் பதம் எதற்கு வாசகமோ அது தத் பதப்பொருளெனப்படும். இது பொருள். (எ௨)

[கூ௲எ] प्रत्यक्परोक्षतैकस्य सद्वितीयत्वपूर्णता ।
विरुद्ध्येते यतस्तस्माल्लक्षणा संप्रवर्तते ॥ ७३ ॥

(அ-கை.)

இவ்வாறு 'துவம்' 'தத்' என்னும் பதங்களின் அர்த்தத்தைச்சொல்லி, இப்போது பதசமுதாயவடிவ வாக்கியத்தின் அர்த்தத்தைப் போதித்தற்பொருட்டு லக்ஷணாவிருத்தி ஆசிரயிக்கத்தக்கதா மென்று கூறுகின்றார்:—

प्रत्यक्परोक्षता सद्वितीयत्वपूर्णता एकस्य यतः विरुद्धयेते । तस्मात् लक्षणा संप्रवर्तते ॥

(சு-ம்.)

*பிரத்தியக்தன்மையும் பரோக்ஷத்தன்மையும் அவ்வாறே இரண்டாவதோடுகூடியதன்மையும் பூர்ணத்தன்மையும் ஒரு வஸ்துவிற்கு எதனால் விரோதத்தை யடைகின்றனவோ அதனால் லக்ஷணாவிருத்தி பிரவிருத்திக்கின்றது.*

(வி-ம்.)

*பிரத்தியக்தன்மையும், பரோக்ஷத்தன்மையும், இரண்டாவதோடு கூடியதன்மையாகிய பரிச்சின்னத்தன்மையும், பூரணத்தன்மையுமாகிய தர்மங்கள் ஒரு வஸ்துவிற்கு எதனால் விரோதமுடையனவா யிருக்கின்றனவோ அதனால் லக்ஷணாவிருத்தி ஆசிரயஞ் செய்யத்தக்கதா மென்பது பொருள்.()*

[கூருஅ] तत्त्वमस्यादिवाक्येषु लक्षणा भागलक्षणा ।
सोऽयमित्यादिवाक्यस्थपदयोरिव नापरा ॥ ७४ ॥

(அ-கை.)

*மகாவாக்கியங்களில் ஆசிரயிக்கத்தக்க லக்ஷணையாகிய அது எத்தன்மையது என்னுமிடத்துக் கூறுகின்றார்:—*

तत्त्वमस्यादिवाक्येषु लक्षणा भागलक्षणा ॥

(சு-ம்.)

*'தத்துவமஸி' முதலிய வாக்கியங்களில் ஆசிரயிக்கப்பட்ட லக்ஷணை பாகத்தியாகலக்ஷணையாம்.*

(அ-கை.)

*அந்தப் பாகத்தியாகலக்ஷணையில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—*

सोऽयमित्यादि वाक्यस्थपदयोः इव अपरा न ॥

(சு-ம்.)

*"அவனே இவன்" என்பனமுதலிய வாக்கியங்களிலுள்ள இரண்டு பதங்களிற்போல மகாவாக்கியங்களில் வேறு லக்ஷணை யில்லை.*

(வி-ம்.)

*"அவனே இத்தேவதத்தன்" என்னும் வாக்கியத்திலுள்ள "அவன்" "இவன்" என்னும் இரண்டுபதங்களிலும் ஜகத்ஜகத்வடிவ பாகத்தியாக*

லக்ஷணவிருத்தி ஆசிரயிக்கப்படுகின்றது; மற்றவை அதாவது ஜகத்லக்ஷணையும் அஜகத்லக்ஷணையும் அங்கீகரிக்கப்படுகிறதில்லை. அதுபோல "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்களிலும் "தத்" "துவம்" முதலியபதங்களில் பாகத்தியாகலக்ஷணையே ஆசிரயிக்கப்பட்டிருக்கின்றது; வேறு இலக்ஷணைகளில்லை என்பது பொருள். (எச)

[கூருகூ] संसर्गो वा विशिष्टो वा वाक्यार्थो नात्र संमतः ।
अखंडैकरसत्वेन वाक्यार्थो विदुषां मतः ॥ ७५ ॥

(அ-கை.)

அப்படியானால் "கோவைக் கொண்டுவா" என்றல்முதலிய வாக்கியங்களில் லக்ஷணவிருத்தியின்றியும் வாக்கியார்த்தத்தின் போதம் காணப்படுகின்றது. அதுபோல இங்குத் தத்துவமஸிமுதலிய வாக்கியங்களிலும் ஏன் உண்டாகாதென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

अत्र संसर्गः वा विशिष्टः वा वाक्यार्थः संमतः न । अखंडैकरसत्वेन वाक्यार्थः विदुषां मतः ॥

(சு-ம்.)

இங்கு மகாவாக்கியங்களில் சம்சர்க்கவடிவ அல்லது விசிஷ்டவடிவ வாக்கியார்த்தம் சம்மதமன்று; அகண்டைகரசத்துவமாக வாக்கியத்தினர்த்தம் வித்வான்களால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

உலகத்தில் "ஆவைக் கொண்டுவா" என்பன முதலிய வாக்கியங்களில் "ஆவை" "கொண்டுவா" என்னும் பதங்களால் நினைப்பூட்டப்பட்ட *உஉ. ஆகாங்க்ஷைமுதலியவற்றையுடைய ஆமுதலிய பதார்த்தங்களின் அந்வயமாகிய சம்பந்தம் வாக்கியத்தின் பொருளா யிருத்தலால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும் எப்படி "நீலமும் பெரிதுமாகிய சுகந்தமுடைய புஷ்பமிருக்கிறது" என்பனமுதலிய வாக்கியங்களில் நீலத்தன்மைமுதலியவற்றால் விசிஷ்டமான புஷ்பத்தின் வாக்கியார்த்தத்தன்மை அங்கீகரிக்கப்பட்டிருக்கிறதோ, அவ்வாறு இங்கு மகாவாக்கியங்களில் சம்பந்த

---

* உஉ. சப்தத்தின் சக்திவிருத்தி அல்லது லக்ஷணவிருத்தியின் ஞானம் வாக்கியார்த்தத்தின் ஞானத்திற்குக் காரணமாம். அன்றியும் (க) ஆகாங்க்ஷையின் ஞானம், முதலிய என்னுஞ் சொல்லால் (உ) யோக்கியதைஞானம், (ங) தாற்பரியத்தின் ஞானம், (ச) ஆசத்தி என்னும் நான்கும் சககாரிகளாம்.

(க) கொண்டுகேட்டுதலாகிய அந்வயத்தின் ஞானபரியந்தம் தனது அர்த்தத்தினது உணர்ச்சியின் பொருட்டு உச்சரிக்கப்பட்ட பதத்திற்கு உள்ள வேறுபதத்தின்

வடிவ வாக்கியார்த்தமும் விசேஷணத்தோடுகூடியதாகிய விசிஷ்டமுமாகிய

இச்சை ஆகாங்க்ஷை எனப்படும். இதனை அவாய்நிலை யென்பர். அது உச்சரிக்கப்பட்ட "ஆவை" என்னும் பதத்திற்குள்ள "கொண்டுவா" என்னும் பதத்தின் அபேக்ஷை ஆகாங்க்ஷை யாதல்போலவாம்.

(உ) ஒருபதத்தின் அர்த்தத்திற்கு அந்நியபதத்தின் அர்த்தத்தோடுள்ளசம்பந்தம் யோக்கியதை யெனப்படும். தகுதி யென்பதும் அது. எங்ஙனம்: "ஆவை" என்னும் பதத்தின் அர்த்தத்திற்கு "கொண்டுவா" என்னும் பதத்தின் அர்த்தத்தோடு விஷயவிஷயித்தன்மைவடிவசம்பந்த மிருக்கின்றது. 'ஆ' என்னும் பதத்தின் பொருள் ஆவியக்தி அதாவது கோவின்பிண்டம்; அது "கொண்டுவா" என்னுஞ் சொல்லிற்குப் பொருளாகிய கொண்டுவருதல்வடிவ கிரியைக்கு விஷயமாம்; ஆவியக்தியைக் கொண்டுவருதல்வடிவ கிரியை விஷயியாம். ஆதலால் 'ஆ' என்னும் பதப்பொருளிற்குக் கொண்டுவா என்னும் பதப்பொருளோடு விஷயித்தன்மைவடிவ சம்பந்த மிருக்கின்றது. கொண்டுவா வென்னும் பதப்பொருளிற்கு ஆவை என்னும் பதப்பொருளோடு விஷயத்தன்மைவடிவ சம்பந்த மிருக்கின்றது. இரண்டற்கும் ஒன்றற்கொன்று விஷயவிஷயித்தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. அது யோக்கியதையாம்.

(ஙு) சொல்லுவோனது இச்சையினைத் தாற்பரிய மென்பர். கருத்து என்பது மிது. எங்ஙனம்: "கோவினைக் கொண்டுவா" என்னும் வாக்கியத்தால் சமையற்சமயத்தில் "கோ" வென்னுஞ் சொல்லிற்குப் பொருளாகிய அக்கினியைக் கொண்டு வருதலில் வக்தாவுக்கு இச்சையாம். யுத்தசமயத்தில் கோசப்தத்தின் பொருளாகிய பாணத்தைக் கொண்டுவருதலில் சொல்லுவோனுக்கு இச்சையாம். ஸ்நாநசமயத்தில் கோசப்தத்திற்குப் பொருளாகிய ஜலத்தைக் கொண்டுவருதலில் சொல்லுவோனுக்கிச்சையாம். பால்கறக்குஞ்சமயத்தில் ஆவினைக்கொண்டு வருதலில் சொல்லுவோனுக்கிச்சையாம். இவ்விதத்தால் சொல்லுவோனது இச்சை எதுவோ அது தாற்பரியமாம். இலௌகிகவாக்கியங்களினது தாற்பரியத்தின் ஞானம் பிரசங்கமுதலியவற்றாலுண்டாவதுபோல வைதிகவாக்கியங்களினது தாற்பரியத்தின் ஞானம் ஙுஅடு-வது சுலோகத்தின் டிப்பணத்திற் கூறும் உபக்கிரம உபசம்மாரமுதலிய ஆறுலிங்கங்களால் உண்டாகின்றது. இலௌகிகவாக்கியத்தின் அர்த்தத்தில் புருஷனது இச்சையினைப் போல வைதிகவாக்கியத்தின் அர்த்தத்தில் ஈசுவரனது இச்சை தாற்பரியமாம்.

(சு) பதங்களின் சமீபத்தன்மை ஆசத்தி யெனப்படும். அண்மை எனப்படுவது மதுவே. அதனையே சந்நிதி யென்றுங் கூறுவர். அல்லது யோக்கியபதத்தின் சக்தி அல்லது லக்ஷணாவிருத்திவடிவ சம்பந்தத்தால் மறைப்பின்றிய பதங்களின் அர்த்தத்தின் ஸ்மிருதியை ஆசத்தி யென்பர். எப்படி: "கோவை" "கொண்டுவா" வென்னும் பதங்களின் சமீபத்தன்மை யுண்டாகின்றது. அல்லது சக்திவிருத்தியினால் "கோவை" "கொண்டுவா" என்னும் இரண்டுபதங்களின் மறைப்பின்றிய ஸ்மிருதி யுண்டாகின்றது. அது ஆசத்தியாம்.

இவற்றில் ஆகாங்க்ஷை, யோக்கியதை, தாற்பரிய மென்பவற்றின் ஞானமும் ஆசத்தியின் ஞானமும் அல்லது சொரூபமும் வாக்கியார்த்தத்தின் போதத்தில் காரணமாம். இவையின்றி வாக்கியார்த்தத்தின் ஞானம் உண்டாகிறதில்லை. இவ்வாறே சகலவாக்கியங்களிலும் கண்டுகொள்க. இது பிரசங்கத்தாற் கூறப்பட்டது.

இவ்விரண்டில் ஒன்றன் வாக்கியார்த்தத்தன்மை அங்கீகரிக்கப்படுகிற *உங. தில்லை. ஆனால் அகண்டைகரசமா யிருத்தலால் ஸ்வகதமுதலிய மூன்று பேதங்களுமின்றிய வஸ்துமாத்திரவடிவத்தால் வாக்கியத்தின் அர்த்தம் வித்

---

* உக. எப்படி:" ஆவினைக்கொண்டுவா நீ " என்பது வாக்கியம். அதில் " ஆவினைக்" "கொண்டுவா" "நீ" என்ற மூன்றுபதங்க ளிருக்கின்றன. அவற்றின் பொருள்களுக்கு ஒன்றற்கொன்று சம்பந்த முண்டு. அப்பதார்த்தங்களின் சம்பந்தம் அல்லது சம்பந்தத்தோடுகூடிய பதார்த்தம் வாக்கியார்த்தமாம். ஆதலால் " நீ கோவினைக் கொண்டுவா " என்பது முழுவாக்கியத்தின்பொருளாம். அது சம்சர்க்கவடிவவாக்கியார்த்த மெனப்படுகின்றது. இவ்வாறு லௌகிகவைதிகவடிவ அநேகவாக்கியங்களில் வாக்கியார்த்த முண்டாகின்றது. அவ்வாறு மகாவாக்கியத்தின் அர்த்தம் சம்பவிக்கிற தில்லை. ஏனெனின்,

(க) " நீ " என்னும் சொற்பொருளின் சம்பந்தி " அது " எனுஞ் சொற்பொருளாம், அல்லது " அது " எனுஞ் சொற்பொருளின் சம்பந்தி " நீ " எனும் சொற்பொருளாம் என்று இவ்வாறு அங்கீகரிக்க, " இப்புருஷன் அசங்கன் " என்றல்முதலிய சுருதிவாக்கியங்கள் வேதாந்தங்களிற் சொல்லப்படும் பிரஹ்மத்தின் அசங்கத்தன்மையைக் கூறியிருக்கின்றன; அதற்குப் பாதமுண்டாகும். ஆதலால் மகாவாக்கியத்திற்குச் சம்பந்தவடிவ வாக்கியார்த்தம் பொருந்தாது.

(உ) "நீலமும் பெரும்வாசனையுள்ளதுமாகிய புஷ்பம் " என்பது வாக்கியமாம். இதில் " நீலமும் " " பெரும் வாசனையுள்ளதும் " " புஷ்பம் " என்று மூன்றுபதங்களுண்டு. அவற்றில் நீலமும் பெரும்வாசனையுடையதும் என்னுமிரண்டுபதங்களும் விசேஷணவடிவ குணங்களின் வாசகங்களாம். புஷ்பபதம் கமலத்திரவியத்தின் வாசகமாம். ஆதலால் ,,நீலநிறவிசேஷணமுடையதும் சுகந்தமுடையதும் கமலத்திரவியமா' மென்பது முழுவாக்கியத்தின் பொருள். அது விசிஷ்டவடிவவாக்கியார்த்த மெனப்படும். இவ்வாறு அநேகவாக்கியங்களி லுண்டாகின்றது. அவ்விதமாகவும் மகாவாக்கியத்திற்குப் பொருள் சம்பவியாது. ஏனெனின், ' நீ ' என்னும் பதார்த்த விசிஷ்டம் "அது" எனும் பதப்பொருளாம். அல்லது ' அது ' எனும் பதப்பொருளை அடுத்தது ' நீ ' எனும் பதப்பொருளாம். இவ்வாறு மகாவாக்கியத்திற்குப் பொருள் அங்கீகரிக்க ஒன்றற்கே சர்வஞ்ஞத்தன்மை அற்பஞ்ஞத்தன்மைமுதலிய தர்மங்களோடுகூடியதன்மையால் பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களுக்கு விருத்தமாகும். அன்றியும் " சேதனவடிவம் கேவலநிர்க்குணமாம். ஒரே அத்துவிதீயமாம்." "எவன் அற்பமாயினும்(விசேஷண விசேஷியத்தன்மைவடிவம் அல்லது உபாசிய உபாசகத்தன்மைவடிவமுதலிய) பேதத்தைச் செய்கின்றானோ அவனுக்குப் பின் பய (ஜந்மமுதலியவநர்த்த)முண்டாகின்றது" என்பனமுதலிய சுருதிவாக்கியங்கள் பிரஹ்மத்திற்குக் கேவலத்தன்மை (சர்வதர்மங்களுமின்றியதன்மை), நிர்க்குணத்தன்மை, ஸஜாதீயமுதலிய பேதமின்றியதன்மை, வேற்றுத்தன்மையாலாக்கப்பட்ட பேதகந்தமில்லாமை என்பவற்றைக் கூறியிருக்கின்றன ; அதற்குப் பாதமுண்டாகும். ஆதலால் மகாவாக்கியத்திற்கு விசிஷ்டவடிவவாக்கியார்த்தமும் பொருந்தாது. ஆனால் லக்ஷணையினால் அகண்ட ஏகரசத்தன்மைவடிவ மகாவாக்கியத்தின் அர்த்தத்தினை வித்வான்கள் அங்கீகரித்திருக்கின்றனர்.

வான்களால் அங்கிகரிக்கப்படுகின்றது. ஆதலால் லக்ஷணை ஆசிரயிக்கத் தக்கதா மென்பது பொருள். (எ௭)

[கூகூ0] प्रत्यग्बोधो य आभाति सोऽद्वयानंदलक्षणः ।
अद्वयानंदरूपश्च प्रत्यग्बोधैकलक्षणः ॥ ७६ ॥

(அ-கை.)

அகண்டைகரசவாக்கியத்தின் அர்த்தத்தைக் காட்டுகின்றார் :—

---

இந்த இது பிரசினமாம் :—வாச்சியார்த்தத்திற்கு லக்ஷியார்த்தவடிவ சேதனத்தோடு சம்பந்தம் அங்கீகரிக்கின் லக்ஷியார்த்தத்தில் அசங்கத்தன்மையின் ஹானியுண்டாகும். சம்பந்தம் அங்கீகரிக்காவிடின் லக்ஷணை பொருந்தாது. ஏனெனின்; சக்திய சம்பந்தத்திற்கு அல்லது—போத்தியசம்பந்தத்திற்கு லக்ஷணை யென்று பெயராம். அது அசங்கத்திற் சம்பவியாது.

இதன் உத்தர மிதுவாம் :—"தத்" பத "துவம்" பதங்களினது வாச்சியார்த்தத்தில் சேதனமும் ஜடமுமென இரண்டுபாகங்களுண்டு. அவற்றுள், சேதனபாகத்திற்கு லக்ஷியார்த்தத்தில் தாதாத்மிய(அபேத)சம்பந்த மிருக்கின்றது. ஜடபாகத்திற்கு லக்ஷியத்தோடு அதிஷ்டானத்தன்மைச் சம்பந்த மிருக்கின்றது. கற்பிதத்தின் சம்பந்தத்தினாலாவது அல்லது தனது தாதாத்மிய சம்பந்தத்தினாலாவது லக்ஷியார்த்தமாகிய சேதனத்தின் அசங்கத்தன்மைவடிவ சுபாவத்திற்குக் கேடுண்டாகிற தில்லை.

பிரசினம் :—"தத்" பதம் "துவம்" பதம் இரண்டற்கும் அகண்டசேதனத்தில் லக்ஷணை அங்கீகரிக்கின், "கடம் கடம்" என்னும் வாக்கியத்தினைப்போலப் புநருக்திதோஷத்தால் மகாவாக்கியம் அப்பிரமாணமாகும். இரண்டுபதங்களுக்கும் லக்ஷியார்த்தம் வேறெனக் கொள்ளின் மகாவாக்கியத்திற்கு அபேத அர்த்தத்தை அறிவிக்குந்தன்மை சம்பவியாது.

உத்தரம் :—மாயாவிசிஷ்டசேதனமும் அந்தக்கரணவிசிஷ்டசேதனமும் "தத்" பத "துவம்" பதங்கட்கு வாச்சியார்த்தமாம். மாயா உபஹிதசேதனமும் அந்தக்கரண உபஹிதசேதனமும் இரண்டற்கும் லக்ஷியார்த்தமாம். எந்தப் பிரஹ்மசேதனத்தை இலக்ஷியமெனக் கொள்ளின் புநருக்திதோஷ முண்டாகின்றதோ அந்தப்பிரஹ்மசேதனம் லக்ஷியமன்று. ஆனால் மாயை அந்தக்கரண உபஹிதசேதனம் லக்ஷியமாம். அதற்கு உபாதிபேதத்தால் பேத முண்டு; புநருக்திதோஷமில்லை. மாயை அந்தக்கரண உபஹிதமான இரண்டுசேதனங்கட்கும் வாஸ்தவமாக அபேதமுண்டு. ஆதலால் "தத்" பதார்த்த "துவம்" பதார்த்தங்கட்கு (மகாவாக்கிய விவேகம் கூ-வது டிப்பணத்திற் கூறிய) ஒன்றற்கொன்று உத்தேசவிதேயபாவத்தைக் கொண்டு மகாவாக்கியத்திற்கு அபேத அர்த்தத்தைப் போதிக்குந்தன்மை சம்பவிக்கின்றது. அல்லது இரண்டுபதங்கட்கும் வேறு இலக்ஷகத்தன்மை அங்கீகரிக்கின் புநருக்தியின் சங்கை யுண்டாகின்றது. அந்த வேறுவேறு லக்ஷகத்தன்மை யில்லை. ஆனால் இரண்டுபதங்களுஞ்சேர்ந்து அகண்டப்பிரஹ்மத்தின் லக்ஷகங்களாம். அதனால் புநருக்திதோஷ மில்லை.

இவ்விதத்தால் அகண்ட ஏகரசத்தன்மைவடிவ மகாவாக்கியத்தின் அர்த்தம் சம்பவிக்கின்றது.

यः प्रत्यग्बोधः आभाति सः अद्वयानंदलक्षणः च अद्वयानंदरूपः प्रत्यग्बोधैकलक्षणः ॥

(சு-ம்.)

எந்தப் பிரத்தியக்ஞானவடிவம் விளங்குகின்றதோ அது அத்வயாநந்தவடிவமாம். அவ்வத்வயாநந்தவடிவமோ பிரத்தியக்போதமான ஒரே வடிவமாம்.

(வி-ம்.)

எந்தப் பிரத்தியக்ஞானவடிவம் அதாவது எல்லாவற்றினுமுள்ளாகிய சிதாத்மா விளங்குகின்றதோ அதாவது புத்திமுதலியவற்றிற்குச் சாக்ஷியாகப்பிரகாசிக்கின்றதோ, அது அத்விதீய ஆநந்தவடிவமாகிய பரமாத்மாவாமென்பது பொருள். அத்வயாநந்தவடிவ அத்தன்மைய பரமாத்மா பிரத்தியக்ஞானமாகிய ஒரேவடிவமாம் என்பது பொருள். (எசு)

க. அகண்டார்த்தத்தினது அபரோக்ஷஞானத்தின் பயன்.

[௯௯க] इत्थमन्योऽन्यतादात्म्यप्रतिपत्तिर्यदा भवेत् ।
अब्रह्मत्वं त्वमर्थस्य व्यावर्त्येत तदैव हि ॥ ७७ ॥

(அ-கை.)

இத்தன்மைய அகண்டார்த்தத்தின் போதத்தால் பயன் யாதெனக் கூறுகின்றார்:—

इत्थं अन्योन्यतादात्म्यप्रतिपत्तिः यदा भवेत् । तदा एव त्वमर्थस्य अब्रह्मत्वं व्यावर्त्येत हि ॥

(சு-ம்.)

இவ்வாறு பிரஹ்மாத்மாக்கள் ஒன்றற்கொன்றன் தாதாத்மியமாகிய அபேதத்தின் நிச்சயம் எப்போது உண்டாகின்றதோ அப்பொழுதே "துவம்" பதத்தின் அர்த்தமாகிய பிரத்தியகாத்மாவின் பிரஹ்மத்தன்மையின்மை நீங்குகின்றது. (எஎ)

[௯௯உ] तदर्थस्य च पारोक्ष्यं यद्येवं किं ततः शृणु ।
पूर्णानंदैकरूपेण प्रत्यग्बोधोऽवतिष्ठते ॥ ७८ ॥

(அ-கை.)

இதுவுமது :—

च तदर्थस्य पारोक्ष्यम् ॥

(சு-ம்.)

தத்பதார்த்தத்தின் பரோக்ஷத்தன்மை நீங்குகின்றது.

(வி-ம்.)

"துவம்" பதார்த்தப் பிரத்தியகாத்மாவின் அப்பிரஹ்மத்தன்மையும் அதாவது பிராந்தியினுற் சித்தித்த பிரஹ்மவடிவமாகாமையும், தத்பதார்த்தப் பிரஹ்மத்தின் பரோக்ஷத்தன்மையும் அதாவது ஒரே பரோக்ஷஞானத்திற்கு விஷயமாதலும் நீங்குகின்றன.

(அ-கை.)

" துவம் " பதார்த்தத்தின் அப்பிரஹ்மத்தன்மையும் "தத்" பதார்த்தத்தின் பரோக்ஷத்தன்மையும் நீங்குகின்றன என்னும் அதனுலும் என்ன உண்டாகின்றது? என்று வாதி கேட்கின்முன்:—

यदि एवं ततः किम् ॥

(சு-ம்.)

இவ்வாருயின் அதனுல் என்ன உண்டாகின்றது?

(அ-கை.)

சித்தாந்தி உத்தரங் கூறுகின்முர்:—

शृणु पूर्णानंदैकरूपेण प्रत्यग्बोधः अवतिष्ठते ॥

(சு-ம்.)

கேள். பூரணுநந்த ஒருவடிவத்தால் பிரத்தியக்ஞானமாகிய அந்தராத்மா நிலைக்கின்றது. (எஅ)

௬௦. மகாவாக்கியத்திஞல் அபரோக்ஷஞானத்தின் உற்பத்தியில் சங்கை செய்பவனைப் பரிகசித்தல்.

[௬௬௩] एवं सति महावाक्यात्परोक्षज्ञानमीर्यते ।
यैस्तेषां शास्त्रसिद्धांतविज्ञानं शोभतेतराम् ॥ ७९ ॥

(அ-கை.)

அப்படியானுல் " சமயத்தின் அதாவது நிச்சயிக்கப்பட்ட அர்த்தத்தின் வலியால் செவ்வையான பரோக்ஷஞானத்தின் சாதனம் சாஸ்திரமா" மென்பது ஆகமத்தின் லக்ஷணமாம். ஆதலால் வாக்கியம் அபரோக்ஷத்தை யுண்டுபண்ணுவதா மென்பது தம்மால் எவ்வாறு சொல்லப்படுகின்றது

என்றாசங்கிக்க: சித்தாந்தத்தின் உணர்ச்சியின்றியவன் இவ்வாதி யென்று மனத்திற்கொண்டு பரிகசிக்கின்றார்:—

एवं सति यैः महावाक्यात् परोक्षज्ञानं ईर्यते । तेषां शास्त्रसिद्धांतविज्ञानं शोभतेतराम् ॥

(சு ம்.)

இங்ஙனமாக எந்த ஏகதேசியின் மதத்தை அநுசரித்தவர்களால் மகாவாக்கியத்தினால் பரோக்ஷஞானம் சொல்லப்படுகின்றதோ அவர்களுடைய சாஸ்திர சித்தாந்தத்தின் விஞ்ஞானம் மிகச் சோபிக்கின்றது.

(வி-ம்.)

இவ்வாறு மகாவாக்கியத்தினால் பரோக்ஷஞானம் அவர்கள் சொல்லுகின்றார்களோ அவர்கள் சித்தாந்தத்தின் இரகசியத்தை அறியவில்லை யென்பது பொருள். (எக)

கக. வாக்கியத்தினால் பரோக்ஷஞானம் உண்டாகுதலின் சங்கையும் சமாதானமும்.

[௬௬௪] आस्तां शास्त्रस्य सिद्धांतो युक्त्या वाक्यात्परोक्षधीः ।
स्वर्गादिवाक्यवन्नैवंदशमे व्यभिचारतः ॥ ८० ॥

(அ-கை.)

அப்படியானால் சித்தாந்தம் முதலில் இருக்குக. வாக்கியத்திற்குப் பரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மையோ அநுமானப்பிரமாணத்தால் சித்தித்தது என்று வாதி பூர்வசுலோகத்தில் சங்கிக்கின்றார்:—

शास्त्रस्य सिद्धांतः आस्तां । युक्त्या स्वर्गादिवाक्यवत् वाक्यात् परोक्षधीः ॥

(சு-ம்.)

சாஸ்திரத்தின் சித்தாந்தம் இருக்குக. யுக்தியினால் சுவர்க்கமுதலிய வாக்கியங்களைப்போல வாக்கியத்தினால் பரோக்ஷஞான முண்டாகின்றது.

(வி-ம்.)

விவாதத்திற்கு விஷயமாகிய வாக்கியம் பரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணத்தக்கதாம்; வாக்கியமாயிருத்தலால்; சுவர்க்கமுதலியவற்றைப் பிரதிபாதிக்கும் வாக்கியத்தைப்போல என்னும் அநுமானத்தால் மகாவாக்கியத்திற்குப் பரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மை பெறப்பட்டது என்பது பொருள்.

(அ-கை.)

இவ்வநுமானத்தில் "வாக்கியமா யிருத்தலால்" என்னும் எந்த ஏது சொல்லப்பட்டதோ அது அநைகாந்திகமாம் அதாவது வியபிசாரியா மென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

न एवं दशमे व्यभिचारतः ॥

(சு-ம்.)

இவ்வாறில்லை; பத்தாமவனிடத்துப் பிறத்தலால்.

(வி-ம்.)

"பத்தாமவன் நீ" என்னும் வாக்கியத்தில் வாக்கியத்தன்மை யிருக்க அபரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மை தோற்றுகின்றது. ஆதலால் ஏது வியபிசாரியா யிருத்தலின் அவ்வேதுவினாற் பிறந்த அநுமானத்தால் மகாவாக்கியம் பரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுவதாதல் சித்தியாதென்பது * உஎ. தாற்பரியம். (அ0)

கஉ. "துவம்" பதார்த்தஜீவனது அபரோக்ஷத்தன்மையினது அபாவத்தின் பிரசங்கத்தால் மகாவாக்கியம் பரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுவதாமென்பதை அங்கீகரியாமை.

[கூகூ௫] स्वतोऽपरोक्षजीवस्य ब्रह्मत्वमभिवांछतः ।
नश्येत्सिद्धापरोक्षत्वमिति युक्तिमर्हत्यहो ॥ ८१ ॥

---

* உஎ. சப்தத்திற்கு இது சுபாவமாம்:—அந்தராயத்தோடு (மறைப்போடு) கூடிய வஸ்துவின் பரோக்ஷஞானமே சப்தத்தினா லுண்டாகின்றது. எவ்விதத்தாலும் அபரோக்ஷஞானம் உண்டாகிறதில்லை. எப்படிச் சாஸ்திரவடிவ சப்தத்தால் சுவர்க்கமுதலியன, தர்மாதர்மம் என்பவற்றின் பரோக்ஷஞானமே உண்டாகின்றது. சத்தத்தினால் அந்தராயமின்றிய வஸ்துவின் பரோக்ஷம் அல்லது அபரோக்ஷமென இரண்டு ஞானங்களுமுண்டாம். இவ்விதத்தால் வஸ்துவின் அறிவிக்கும் வாக்கியத்தால் பரோக்ஷஞானம் உண்டாகின்றது. "நீ இருக்கிறாய்" அல்லது "இது இருக்கிறது" என்னும் வஸ்துவை அறிவிக்கும் வாக்கியத்தால் அபரோக்ஷஞான முண்டாகின்றது. எப்படிப் "பத்தாமவன் இருக்கின்றான்." அல்லது மறந்த "கண்டத்தின் ஆபரணமிருக்கின்றது" என்னும் ஆப்தவாக்கியத்தால் மறைப்பின்றிய பத்தாமவன், கழுத்தினாபரணம் என்பவற்றின் பரோக்ஷஞான முண்டாகின்றது. "பத்தாமவன் நீ" அல்லது "கழுத்தினாபரண மிது" என்னும் ஆப்தவாக்கியத்தினால் பத்தாமவன், கண்டபூஷண மென்பவற்றின் அபரோக்ஷஞான முண்டாகின்றது. இவ்வாறு அவாந்தரவாக்கியத்தினால் பிரஹ்மத்தின் பரோக்ஷஞான முண்டாகின்றது; மகாவாக்கியத்தினால் அபரோக்ஷஞான முண்டாகின்றது.

(அ-கை.)

அல்லது "துவம்" பதத்தின் அர்த்தமாகிய ஜீவனது அபரோக்ஷத் தன்மையினது அபாவத்தின் பிரசங்கத்தினாலும் மகாவாக்கியம் பரோக்ஷ ஞானத்தை உண்டுபண்ணுவதென்றிவ்வாறு அங்கீகரிக்கவேண்டியதாமென்று கூறுகின்றார்:—

"स्वतः अपरोक्षजीवस्य ब्रह्मत्वं अभिवांछतः सिद्धापरोक्षत्वं नश्येत्" इति युक्तिः महती अहो ॥

(சு-ம்.)

தானே அபரோக்ஷமாயிருந்து பிரஹ்மபாவத்தை விரும்புகின்ற ஜீவனது சித்தித்த அபரோக்ஷத்தன்மை நாசமாகும்! என்னும் உனது யுக்தி பெருத்த ஆச்சரியவடிவினதாம். (அக)

கக. ஜீவனது அபரோக்ஷத்தன்மையின் நாசத்தால் இஷ்டாபத்தியின் சங்கைக்குப் பரிகாசத்தோடு சமாதானம்.

[கஉ] वृद्धिमिष्टवतो मूलमपि नष्टमितीदृशम् ।
लौकिकं वचनं सार्थं संपन्नं त्वत्प्रसादतः ॥ ८२ ॥

(அ-கை.)

ஜீவனது அபரோக்ஷத்தன்மையின் நாசத்தால் வாதியாகிய எனக்கு விரும்பியதைப் பெறுதலாகிய இஷ்டாபத்தி உண்டாகின்றது என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

वृद्धिं इष्टवतः "मूलं अपि नष्टं" इति ईदृशं लौकिकं वचनं त्वत्प्रसादतः सार्थं संपन्नम् ॥

(சு-ம்.)

வியாபாரவாயிலாகத் தனத்தின் விருத்தியை விரும்பிய புருடனுக்கு "மூலதனம் நஷ்டமாயிற்று" என்று இவ்விதமாக இலௌகிகத்தில் வாக்கியமிருக்கின்றது. அது வாதியே! உன் பிரசாதத்தால் பொருளோடுகூடியதாயிற்று. (அஉ)

கூ. அபரோக்ஷமாகத்தக்க சோபாதிகப் பிரத்தியகபின்ன பிரஹ்மத்தின் மகாவாக்கிய ஜந்நிய அபரோக்ஷஞானத்தினை விருத்திவியாப்தியால் வர்ணித்தல். கூகூஎ-கூஅ௦.

௧. நிருபாதிகமாயிருத்தலால் பிரஹ்மம் அபரோக்ஷமாமென்பதில் சங்கை.

[கூஎ] अंतःकरणसंभिन्नबोधो जीवोऽपरोक्षताम् ।
अर्हत्युपाधिसद्भावान्न तु ब्रह्मानुपाधितः ॥ ८३ ॥

(அ-கை.)

அப்படியானால் * உரு. சோபாதிகமா யிருத்தலால் ஜீவனுக்கு அப ரோக்ஷத்தன்மை பொருந்தும்; நிருபாதிகப் பிரஹ்மத்திற்கோ அவ்வபரோ க்ஷத்தன்மை பொருந்தா தென்று வாதி மூலத்திற் சங்கிக்கின்றான்:—

अंतःकरणसंभिन्नबोधः जीवः उपाधिसद्भावात् अपरोक्षताम् अर्हति ब्रह्म तु अनुपाधितः न ॥

(சு-ம்.)

அந்தக்கரணவிசிஷ்டசேதனமாகிய ஜீவன் உபாதியி னிருப்பால் அப ரோக்ஷமாகத்தக்கதாம். பிரஹ்மம் உபாதியின்மையால் அபரோக்ஷமாகத் தக்க தன்று. (அ௩)

உ. பிரஹ்மத்திற்கு நிருபாதிகத்துவம் சித்தியா தெனல்.

[௬௬அ] नैवं ब्रह्मत्वबोधस्य सोपाधिविषयत्वतः ।
यावद्विदेहकैवल्यमुपाधेरनिवारणात् ॥ ८४ ॥

(அ-கை.)

பிரஹ்மத்திற்கு நிருபாதிகத்தன்மை சித்தியா தென்று சித்தாந்தி பரி கரிக்கின்றார்:—

एवं न ब्रह्मत्वबोधस्य सोपाधिविषयत्वतः ॥

(சு-ம்.)

இவ்வாறு பிரஹ்மத்திற்கு நிருபாதிகத்தன்மை யில்லை; பிரஹ்மத் தன்மையின் ஞானம் சோபாதிக விஷயமுடையதா யிருத்தலின்.

(வி-ம்.)

ஜீவனுக்குப் பிரஹ்மவடிவத்தன்மையின் ஞான மெதுவோ அது சோ பாதிகவஸ்துவாகிய விஷயமுடையதாயி ருத்தலால் அந்த ஞானத்திற்கு விஷயமாகிய பிரஹ்மத்திற்கும் சோபாதிகத்துவ முண்டு. ஞானத்தின் சோபாதிக விஷயமுடைமை ஞேயத்தின் அதாவது பிரஹ்மவடிவ விஷயத் தின் சோபாதிகத்தன்மையின்றிப் பொருந்தா தென்பது தாற்பரியம்.

(அ-கை.)

ஞானத்திற்குச் சோபாதிக விஷயமுடைமையாகிய அது எதனாற் சித் திக்கின்றதெனக் கூறுகின்றார்:—

* உரு. அந்தக்கரண உபாதியோடுகூடியதா யிருத்தலால்.

यावत् विदेहकैवल्यं उपाधेः अनिवारणात् ॥

(சு·ம்.)

விதேககைவல்யம் உண்டாகும் வரையில் உபாதி நீங்காமையால். (அ௪)

௩. ஜீவப்பிரஹ்மங்களின் விலக்ஷண உபாதியைக் கூறல்.

[௯௬௯] अंतःकरणसाहित्यराहित्याभ्यां विशिष्यते ।
उपाधिर्जीवभावस्य ब्रह्मतायाश्च नान्यथा ॥ ८५ ॥

(அ·கை.)

அப்படியானால் அப்போது ஜீவப்பிரஹ்மங்களுக்கு விலக்ஷணமான இரண்டு உபாதிகளைச் சொல்லவேண்டாமென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

जीवभावस्य च ब्रह्मतायाः उपाधिः अंतःकरणसाहित्यराहित्याभ्यां विशिष्यते अन्यथा न ॥

(சு-ம்.)

ஜீவத்தன்மை பிரஹ்மத்தன்மைகளின் உபாதி அந்தக்கரணத்தோடு கூடியதன்மை அந்தக்கரணமின்றியதன்மை என்பவற்றால் வேறுபடுகின்றது; வேறுவகையாக இல்லை.

(வி-ம்.)

ஜீவத்தன்மை பிரஹ்மத்தன்மைகளுக்குக் கிரமமாக அந்தக்கரணத்தோடுகூடியதன்மையும் அந்தக்கரணமின்றியதன்மையுமே உபாதியாம் என்பது பொருள். (அ௫)

௪. அந்தக்கரணமின்றியதன்மைக்கு உபாதித்தன்மை சித்திக்குமாறு.

[௯௭0] यथाविधिरुपाधिः स्यात्प्रतिषेधस्तथा न किम् ।
सुवर्णलोहभेदेन शृंखलात्वं न भिद्यते ॥ ८६ ॥

(அ-கை.)

அப்படியானால் அந்தக்கரணத்தின் சம்பந்தத்திற்கு இருக்கிறது என்னும் உணர்ச்சிக்கு விஷயமாகிய பாவரூபமாயிருத்தலால் உபாதித் தன்மை யிருக்குக. அந்தக்கரணமின்றியதன்மையாகிய இல்லை யென்னும் வியவகாரத்திற்கு விஷயமாகும் அபாவவடிவம் எதுவோ அதற்கு அவ்வுபாதித்தன்மை உசிதமன்றே என்றாசங்கித்து, "எதுவுரையில் காரிய மிருக்

கின்றதோ அதுவரையில் நிலைத்துள்ள பேதத்தின் ஏதுவிற்கு * உசு. உபா தித்தன்மையுண்டு என்று சாஸ்திரத்திற் கூறிய உபாதியின் லக்ஷணம் அந் தக்கரணத்தோடுகூடியதன்மை அந்தக்கரணமின்றியதன்மை என்னு மிர ண்டினு மிருப்பதா யிருத்தலின் அந்தக்கரணமின்றியதன்மையாகிய உபா தித்தன்மை உசிதமா மென்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார் :—

विधिः यथा उपाधिः स्यात् । तथा प्रतिषेधः न किम् ॥

(சு-ம்.)

எப்படி விதி உபாதியாகின்றதோ அப்படி ஏன் நிஷேதமும் உபாதியா காது ?

(வி-ம்.)

பாவவடிவ: அந்தக்கரணசம்பந்தமாகிய விதி எப்படி உபாதியாகின் றதோ, அதுபோல அபாவவடிவ அந்தக்கரணத்தின் வியோகமாகிய நிஷே தம் ஏன் உபாதியாகாது ? ஆகவே செய்யும் என்பது பொருள்.

(அ-கை.)

விதி நிஷேத மிரண்டும் உபாதியாயினும் அவற்றின் பாவாபாவவடிவ இலக்ஷணமுடைய இடைப்பட்ட விலக்ஷணத்தன்மை காணப்படுகின்றதே யென்றுசங்கித்து, அவ்விடைப்பட்ட வேற்றுமை உபாதித்தன்மையை வாதி யாததா யிருத்தலின் அநாதரஞ்செய்யத்தக்கதாம் என்னும் அபிப்பிராய மாகத் திருஷ்டாந்தம் கூறுகின்றார்:—

सुवर्णलोहभेदेन शृंखलात्वं न भिद्यते ॥

(சு-ம்.)

பொன் இரும்பு என்னும் வேற்றுமையால் விலங்குத்தன்மை பேதத்தை யடைகிற தில்லை.

* உசு. இவ்வுபாதியின்லக்ஷணம் அத்வைதசித்தியில் ஸ்ரீமதுசூதனசுவாமிக ளால் எழுதப்பட்டிருக்கின்றது. அது அந்தக்கரணத்தோடுகூடியதன்மை அந்தக் கரணமின்றியதன்மை யென்னும் இரண்டு பக்ஷங்களிலும் பொருந்துகின்றது. ஏனெ னின், எப்படி ஜீவனிடத்து அபரோக்ஷத்தன்மைவடிவ காரியபரியந்த மிருப்பதும் பிரஹ்மத்தோடு ஜீவனுக்குள்ள பேதத்திற்கு ஏதுவானதும் அந்தக்கரணத்தோடு கூடியதன்மையாகிய பாவரூப மாகுமோ, அதுபோல ஜீவனோடு பிரஹ்மத்திற்குள்ள பேதத்திற்கு ஏதுவாவது அந்தக்கரணமின்றியதன்மையாகிய அபாவரூபமுமாம். ஆதலால் ஜீவனது உபாதியாகிய அந்தக்கரணத்தோடுகூடியதன்மையினைப் போல அந்தக்கரணமின்றியதன்மையும் பிரஹ்மத்திற்கு உபாதியாம்.

(வி-ம்.)

புருஷனது சஞ்சாரத்தைத் தடுக்குந்தன்மைவடிவ அம்சத்தில் உப யோகமின்றிய பொன்றன்மை இரும்புத்தன்மைமுதலியவடிவ வேற்றுமை எப்படி அநாதரஞ் செய்யத்தக்கதோ, அதுபோல விதிநிஷேத உபாதியின் பாவாபாவவடிவ விலக்ஷணத்தன்மையும் அநாதரஞ் செய்யத்தக்கதா மென்பது பொருள். (அசு)

ரு. விதி நிஷேத மிரண்டும் போதத்திற்கு உபாயமாதலில் ஆசாரியவசனம்.

[கூஎக] अतद्व्यावृत्तिरूपेण साक्षाद्विधिमुखेन च ।
वेदांतानां प्रवृत्तिः स्याद्द्विधेत्याचार्यभाषितम् ॥ ८७ ॥

(அ-கை.)

விதியினைப் போல நிஷேதமும் பிரஹ்மத்தைப் போதிக்கும் உபாயமா யிருத்தலால் பிரஹ்மத்திற்கு உபாதித்தன்மை யுண்டு என்று திடஞ்செய் தற்கு விதி நிஷேத மிரண்டும் பிரஹ்மத்தை அறிவிக்கும் உபாயமாதலை ஆசாரியர்கள் நிரூபித்திருக்கின்றனர் என்று காட்டுகின்றார்:—

" अतद्व्यावृत्तिरूपेण च साक्षात् विधिमुखेन द्विधा वेदांतानां प्रवृत्तिः स्यात् " इति आचार्यभाषितम् ॥

(சு-ம்.)

அதத்தாகிய ஜகத்தின் நிஷேதமாகிய வியாவிருத்தி வடிவத்தாலும் நேரே விதிமுகத்தாலும் இவ்விரண்டுவகையாலும் வேதாந்தங்களின் பிர விருத்தி யுண்டாகின்றதென்று ஆசாரியர்கள் கூறியிருக்கின்றனர்.

(வி-ம்.)

"தத்" என்னுஞ் சொல்லால் பிரஹ்மம் சொல்லப்படுகின்றது. "அதத்" என்னுஞ் சொல்லால் பிரஹ்மத்தினும் வேறாகிய அஞ்ஞானமுதலிய பிர பஞ்சம் சொல்லப்படுகின்றது. "நேதி நேதி இப்படியன்று இப்படியன்று" என் றல்முதலிய பிரபஞ்சத்தின் நிஷேதமாகிய விலக்கு வியாவிருத்தியாம். எது பிரஹ்மமாகிய " தத் " அன்றோ அது பிரபஞ்சமாகிய "அதத் " தாம். அப் பிரபஞ்சத்தின் வியாவிருத்தி எதுவோ அதுவே உபாயமாம். அப்பிரபஞ் சத்தின் நிஷேதவடிவ உபாயத்தினாலும், சாக்ஷாத்விதிமுகத்தாலும் அதா வது விதி யெனப்படும் "சத்தியஞானாநந்தம் பிரஹ்மம்" என்றல்முதலிய வடிவ சாக்ஷாத் வாசகமான சப்தங்களைக் கூறுதலாகிய விதான மெது வோ அவ்விதிமுகவாயிலாகவும் வேதாந்தங்களுக்குப் பிரஹ்மத்தில் செல் லுதல்வடிவப் பிரவிருத்தி யுண்டாகின்றது. (அஎ)

கூ. நிஷேத உபதேசத்தால் கூடஸ்தனை விடுதலால் ஞானம் உண்டாகாதெனும் சங்கையும் சமாதானமும்.

[கூஎஉ] अहमर्थपरित्यागादहं ब्रह्मेति धीः कुतः ।
नैवमंशस्य हि त्यागो भागलक्षणयोदितः ॥ ८८ ॥

(அ-கை.)

அப்படியானால் வேதாந்தங்களுக்கு அதத்வியாவிருத்தியாகிய பிரபஞ்சத்தின் நிஷேதத்தால் பிரஹ்மத்தைப் போதிக்குந்தன்மையினை அங்கீகரிக்கவே "யான்" என்னுஞ் சொற்பொருளாகிய கூடஸ்தனது நீக்கமும் நேருதலால் "யான் பிரஹ்மம்" என்று சாமாநாதிகரணியத்தால் ஞானம் உதயமாகத்தக்கதன்று என்று வாதி மூலத்திற் சங்கிக்கின்றான்:—

अहमर्थपरित्यागात् "अहं ब्रह्म" इति धीः कुतः ॥

(சு-ம்.)

"யான்" என்னுஞ் சொற்பொருளை விடுதலால் "யான் பிரஹ்மம்" என்னும் ஞானம் எப்படி யுண்டாகும்?

(அ-கை.)

யான் என்னுஞ் சொற்பொருள் முழுவதுமாகிய கூடஸ்தவிசிஷ்ட ஜீவன் நீக்கப்படாமையால் "யான் பிரஹ்ம" மென்னும் ஞானம் உதயமாகத்தக்கதன்றென்று கூறாதே என்பதாகச் சித்தாந்தி பரிசரிக்கின்றார்:—

एवं न हि भागलक्षणया अंशस्य त्यागः उदितः ॥

(சு-ம்.)

இப்படி யான் என்னுஞ் சொற்பொருள் முழுவதனையும் விடுவதில்லை; பாகத்தியாகலக்ஷணையினால் ஒருபாகத்தினை விடுதல் சொல்லப்பட்டிருத்தலின்.

(வி-ம்.)

எக்காரணத்தால் பாகத்தியாகலக்ஷணையினால் "யான்" என்னும் சொற்பொருளின் ஏகதேசவடிவ ஜடாம்சத்தினை விடுதல் சொல்லப்பட்டிருக்கின்றதோ, கூடஸ்தனை விடுதல் சொல்லப்படவில்லையோ, அதனால் "யான் பிரஹ்ம" மென்னும் ஞானம் பொருந்துகின்றது என்பது பொருள். (அஅ)

எ. நிஷேத உபதேசத்தால் ஓர் அம்சத்தை விடுதலால் போதிக்குந்தன்மை.

[கூஎரு] अंतःकरणसंत्यागादवशिष्टे चिदात्मनि ।
अहं ब्रह्मेति वाक्येन ब्रह्मत्वं साक्षिणीक्ष्यते ॥ ८९ ॥

(அ-கை.)

ஐக்கியத்திற்கு விரோதிபாகமான ஜடாம்சத்தை விடுதலால் போதிக்குந்தன்மையினை உருவகமாக்கிக் காட்டுகின்றார்:—

अंतःकरणसंत्यागात् अवशिष्टे चिदात्मनि साक्षिणि "अहं ब्रह्म" इति वाक्येन ब्रह्मत्वं ईक्ष्यते ॥

(சு-ம்.)

"யான்" என்னும் சொற்பொருளாகிய அந்தக்கரணவிசிஷ்டசேதன வடிவ ஜீவனிடத்து அந்தக்கரணத்தை விடுதலால் எஞ்சிநிற்கும் சிதாத்ம வடிவ சாக்ஷியினிடத்து "யான் பிரஹ்மம்" என்னும் வாக்கியத்தால் பிரஹ்மத்தன்மை காணப்படுகின்றது அதாவது அபரோக்ஷமாய் அறியப்படுகின்றது. (அசு)

அ. சொப்பிரகாச சாக்ஷி புத்திவிருத்திக்கு விஷயமாதலும் பலத்திற்கு விஷயமாகாமையும்.

[கூஎச] स्वप्रकाशोऽपि साक्ष्येव धीवृत्त्या व्याप्यतेऽन्यवत् ।
फलव्याप्यत्वमेवास्य शास्त्रकृद्भिर्निवारितम् ॥ ९० ॥

(அ-கை.)

அப்படியானால் கேவலம் பிரத்தியகாத்மா சொப்பிரகாசமாயிருத்தலின் அது புத்திவிருத்திக்கு விஷயமாதல் பொருந்தாதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

साक्षी स्वप्रकाशः अपि अन्यवत् धीवृत्त्या एव व्याप्यते ॥

(சு-ம்.)

சாக்ஷி சொப்பிரகாசமாயினும் அந்நியமான கடமுதலியவற்றைப் போலப் புத்திவிருத்தியினாலேயே வியாப்பியமாம் அதாவது விஷயமாம்.

(வி-ம்.)

"யான் சொப்பிரகாசன்" என்னும் புத்திவிருத்தி சம்பவித்தலினால் புத்திவிருத்திக்கு விஷயமாதலால் சாக்ஷியின் சொப்பிரகாசத்தன்மை பங்கமாகாது என்பது அபிப்பிராயம்.

(அ-கை.)

அப்போது சாக்ஷி விருத்திக்கு விஷயமாமென்பதனை அங்கீகரித்தலால் "ஆத்மா சொப்பிரகாச" மென்னுஞ் சித்தாந்தங்கெடுதலாகிய அபசித்தாந்தத்தின் அடைவுண்டாகுமேயென்றாசங்கித்து, பூர்வாசாரியர்களும்

ஆத்மா விருத்திவியாப்பியமாம் அதாவது விருத்திக்கு விஷயமாமென் பதனை அங்கீகரித்திருக்கின்றனராகலின் இஃது அபசித்தாந்தமன்றெனப் பரிகரிக்கின்றார்:—

फलव्याप्यत्वं एव अस्य शास्त्रकृद्भिः निवारितम् ॥

(சு-ம்.)

இச்சாக்ஷியின் பலவியாப்பியத்தன்மையினையே சாஸ்திரகர்த்தாக்கள் விலக்கியிருக்கின்றனர்.

(வி-ம்.)

விருத்தியிற் பிரதிபிம்பவடிவ சிதாபாசமாகிய பலம் எதுவோ அதன் வியாப்பியத்தன்மையாகிய விஷயத்தன்மையே இப்பிரத்தியகாத்மாவிற்கு நிராகரிக்கப்பட்டதாம்; ஏனெனின் பிரத்தியகாத்மா தானே விளக்கவடிவ மாயிருத்தலின் என்பது தாற்பரியம். (௯௦)

௯. அநாத்மா விருத்தி பலம் என்னுமிரண்டற்கும் விஷயமாதல்.

[௯௧] बुद्धितत्स्थचिदाभासौ द्वावपि व्याप्नुतो घटम् ।
तत्राज्ञानं धिया नश्येदाभासेन घटः स्फुरेत् ॥ ९१ ॥

(அ-கை.)

ஆத்மாவினிடத்து பலமாகிய சிதாபாசனது விஷயமாதலாகிய வியாப்தியின் இன்மையினைக் காட்டுதற்குக் கடாதிஜடபதார்த்தங்களாகிய அநாத்மா விருத்தியினாலும் பலத்தினாலும் வியாப்பியமாதலைக் காட்டுகின்றார்:—

बुद्धितत्स्थचिदाभासौ द्वौ अपि घटं व्याप्नुतः ॥

(சு-ம்.)

புத்தியும் அதன்கண்ணுள்ள சிதாபாசனுமாகிய இரண்டும் கடத்தைக் குறித்து வியாப்தமாம் அதாவது விஷயஞ் செய்வனவாம்.

(அ-கை.)

கடமுதலியவற்றைக் குறித்துப் புத்திவிருத்தி சிதாபாச னென்னும் இரண்டனது வியாப்தியின் பிரயோஜனத்தைக் கூறுகின்றார்:—

तत्र धिया अज्ञानं नश्येत् । आभासेन घटः स्फुरेत् ॥

(சு-ம்.)

அவ்விரண்டனுள் புத்தியினால் அஞ்ஞானமாகிய ஆவரணம் நசிக்கின் றது; ஆபாசனால் கடம் விளங்குகின்றது.

(வி-ம்.)

அப்புத்தியும் சிதாபாசனுமாகிய இரண்டனுள் பிரமாணவடிவத்தினை யடைந்த புத்திவிருத்தியினால் கடத்திலுள்ள அஞ்ஞானம் நாசமாகின்றது. ஏனெனின், புத்திவிருத்திவடிவ ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமிருத்தலின் சிதாபாசனால் "இது கடம்" என்று கடம் விளங்குகின்றது; கடம் ஜடமாயிருத்தலால் தானாகவே விளங்குதல் சம்பவியாமையின் என்பது தாற்பரியம். (கூக)

௯0. ஆத்மாவிலுள்ள அநாத்மாவின் விலக்ஷணத்தன்மை.

[கூ௭கூ] ब्रह्मण्यज्ञाननाशाय वृत्तिव्याप्तिरपेक्षिता ।
स्वयं स्फुरणरूपत्वान्नाभास उपयुज्यते ॥ ९२ ॥

(அ-கை.)

இப்போது ஆத்மாவினிடத்து அவ்வநாத்மாவினும் வேறுதற்றன்மையினைக் காட்டுகின்றார்:—

ब्रह्मणि अज्ञाननाशाय वृत्तिव्याप्तिः अपेक्षिता । स्वयं स्फुरणरूपत्वात् आभासः न उपयुज्यते ॥

(சு-ம்.)

பிரஹ்மத்தில் அஞ்ஞானநாசத்தின்பொருட்டு விருத்திவியாப்தி அபேக்ஷிக்கப்படுவதாம்; தானே விளக்கவடிவமாயிருத்தலின் ஆபாசன் உபயோகப்படுகிறதில்லை.

(வி-ம்.)

பிரத்தியகாத்மப் பிரஹ்மங்களின் ஐக்கியம் அஞ்ஞானத்தால் ஆவரிக்கப்பட்டதாயிருத்தலின் அவ்வைக்கியத்தின் அஞ்ஞானத்தினை நீக்குதற் பொருட்டு மகாவாக்கியத்தினாற் றோன்றிய "யான் பிரஹ்ம" மென்னும் வடிவினையுடைய புத்திவிருத்தியினால் வியாப்தி அபேக்ஷிக்கப்படுகின்றது; பிரஹ்மாத்ம ஐக்கியம் தானே ஸ்புரணவடிவமாயிருத்தலால் அதனை விளக்குதற்பொருட்டுச் சிதாபாசன் அபேக்ஷிக்கப்படுகிறதில்லை. ஆதலால் பிரஹ்மாகாரவிருத்தியோடு பொருந்தியும் சிதாபாசன் பிரத்தியகபின்ன பிரஹ்மத்தில் விளக்கவடிவ உபயோகத்தினை அடைகிறதில்லை யென்பது பொருள். (கூஉ)

௯௧. சுலோகம் கூ௭கூ-ல் கூறிய அர்த்தத்தை திருஷ்டாந்தத்தால் விளக்குதல்.

[கூ௭௭] चक्षुर्दीपावपेक्ष्येते घटादिदर्शने यथा ।
न दीपदर्शने किंतु चक्षुरेकमपेक्ष्यते ॥ ९३ ॥

(அ-கை.)

சுலோகம் ௬௭௪-௬௭௬-ல் கூறிய அர்த்தத்தினைத் திருஷ்டாந்தத்தைக் காட்டுதலால் விளக்குகின்றார்:—

यथा घटादिदर्शने चक्षुर्दीपौ अपेक्ष्येते दीपदर्शने न । किंतु एकं चक्षुः अपेक्ष्यते ॥

(சு-ம்.)

எப்படிக் கடமுதலியவற்றைக் காணுதலில் கண்ணும் விளக்குமாகிய இரண்டும் அபேக்ஷிக்கப்படுவன வாகின்றனவோ தீபத்தைக்காணுதலில் அப்படியாகாது கண்ணொன்றே அபேக்ஷிக்கப்படுவதாகின்றதோ அதுபோல.

(வி-ம்.)

எப்படி இருளால் மறைக்கப்பட்டகுட முதலியவற்றைக் காணுதலில் கண்ணும் விளக்குமாகிய இரண்டும் அபேக்ஷிக்கப்படுகின்றனவோ, ஆனால், தீபத்தைக் காணுதலில் இரண்டும் அபேக்ஷிக்கப்படாது கண்ணொன்றே அபேக்ஷிக்கப்படுகின்றதோ, அதுபோலக் குடமுதலியவற்றில் ஆவரணநிவிருத்தியும் விளக்கவடிவமுமாகிய பிரயோஜனத்தின்பொருட்டு விருத்தியும் சிதாபாசனுமாகிய இரண்டும் அபேக்ஷிக்கப்படுவனவாம், பிரஹ்மத்தின் அஞ்ஞானநாசத்தின் பொருட்டு விருத்திவியாப்தி அபேக்ஷிக்கப்படுவதா மென்று முன் சுலோகத்தோடு சம்பந்தமாம். (௬௩)

௬௨. பிரஹ்மாகாரவிருத்தியில் சிதாபாசனிருந்தும் பிரஹ்மம் அவனுக்கு விஷயமாகாமை.

[௬௭௮] स्थितोऽप्यसौ चिदाभासो ब्रह्मण्येकीभवेत्परम् ।
न तु ब्रह्मण्यतिशयं फलं कुर्याद्घटादिवत् ॥ ९४ ॥

(அ-கை.)

அப்படியானால் புத்தியும் புத்திவிருத்திகளும் சிதாபாசவிசிஷ்டத் தன்மையின் சுபாவமுடையனவா யிருத்தலால் கடமுதலியவற்றின் எப்படிப் பலவியாப்தியுண்டோ, அதுபோல அவற்றிற்குப் பிரஹ்மத்திலும் வலிந்து பலப்பிராப்தி யுண்டாகுமென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

असौ चिदाभासः स्थितः अपि ब्रह्मणि एकी भवेत् । ब्रह्मणि घटादिवत् परं अतिशयं फलं तु न कुर्यात् ॥

(கூ-ம்.)

இச்சிதாபாசன் விருத்தியி லிருக்கினும் பிரஹ்மத்தில் ஒருவனைப்போ லாகின்றான். பிரஹ்மத்தில் கடமுதலியவற்றைப்போல அந்நியமான அதிசயவடிவ பலத்தைச் செய்கிறதில்லை.

(வி-ம்.)

கடமுதலியவடிவ விருத்தியினைப்போல பிரஹ்மாகாரவிருத்தியிலும் சிதாபாசன் இருக்கினும், இச்சிதாபாசன் பிரஹ்மத்திலும் வேறாகத் தோற்றுகிறதில்லை. ஆனால் பிரசண்டமான அதாவது மத்தியானகாலத்து வெயிலின்கண்ணிருக்கும் தீபப்பிரபையினைப்போல பிரஹ்மத்தோடு ஒன்றானதுபோ லாகின்றது. ஆதலால் பிரஹ்மத்தில் ஸ்புரணவடிவ அதிசயத்தையுண்டுபண்ணுவ தன்று என்பது பொருள். (கூச)

கூ. பிரஹ்மம் விருத்திக்கு விஷயமாதலில் சுருதி பிரமாணமாதல்.

[கூஎகூ] अप्रमेयमनादिं चेत्यत्र श्रुत्येदमीरितम् ।
मनसैवेदमाप्तव्यमिति धीव्याप्यता श्रुता ॥ ९५ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மத்தில் பலவியாப்தி யில்லை. விருத்திவியாப்தியோ இருக்கின்றது என்று கூஎச-கூஎஅ ற் கூறியதில் பிரமாணம் யாதென்றாசங்கித்து வேதம் பிரமாணமா மென்று கூறுகின்றார்:—

"अप्रमेयं च अनादिम्" इति अत्र श्रुत्या इदं ईरितम् । "मनसा एव इदं आप्तव्यम्" इति धीव्याप्यता श्रुता ॥

(கூ-ம்.)

" அப்பிரமேயமும் அநாதியுமானதை " என்னும் மந்திரத்தில் சுருதி இவ்வாறு பலவியாப்தியின்றியதன்மையினைக் கூறியிருக்கின்றது. "மனதினாலேயே இது அடையத்தக்கதாம்." என்னுஞ் சுருதியில் விருத்திவியாப்தி கேட்கப்பட்டிருக்கின்றது.

निर्विकल्पमनंतं च हेतुदृष्टांतवर्जितं अप्रमेयमनादिं च यज्ज्ञात्वा मुच्यते बुधः ॥ என்த நிருவிகற்பமும் அநந்தமும் ஏது திருஷ்டாந்தங்களின்றியதும் விஷயாகாரசாபாசவிருத்திவடிவ பிரமாஞானத்திற்கு விஷயமாகாத அப்பிரமேயமும் உற்பத்தியின்றிய அநாதியுமாயுள்ளதனை அறிந்து புத்திமான்கள் முக்தர்களாகின்றார்களோ " என்னும் மந்திரத்தில் சுருதியாகிய அமிர்தபிந்துஉபநிஷத் "அப்பிரமேயம்" என்னுஞ் சப்தத்தால் பலவியாப்தியின்றியதன்மை

யாகிய இது சொல்லப்பட்டிருக்கின்றது. "मनसैवेदमाप्तव्यं न नानास्ति किंचन ॥ மனதினாலேயே இப்பிரஹ்மம் அடையத்தக்கதாம். நாநாவடிவமின்றிய பிரஹ்மமாகிய இதனிடத்து நாநா என்பது சிறிதுமில்லை." என்னுங் கடவல்லியுபநிஷத்தில் பிரஹ்மம் விருத்திக்கு விஷயமாதலாகிய விருத்தி வியாப்பியத்துவம் கேட்கப்பட்டிருக்கின்றதென்பது பொருள். (கூ௫)

கச. முற்கூறிய சுருதியின் அபரோக்ஷஞானத்தைக் கூறுகின்றவர்கள் பாகத்தைக் கூறுதல்.

[கூ௮0] आत्मानं चेद्विजानीयादयमस्मीति वाक्यतः ।
ब्रह्मात्मव्यक्तिमुल्लिख्य यो बोधः सोऽभिधीयते ॥ ९६ ॥

(அ·கை.)

"அபரோக்ஷஞானம் சோகநிவிருத்தி யென்னும் பெயருடைய இவ்விரண்டவஸ்தைகளையும் 'ஆத்மாவை அறியின்' என்னுஞ் சுருதி ஜீவனிடத்துள்ளதாகக் கூறுகின்றது." என்னும் முற்கூறிய கூகூ௨-வது சுலோகத்தால் "ஆத்மாவை அறியின்" என்னும் மந்திரத்தால் அபரோக்ஷஞானம் சோகநிவிருத்தி என்னும் பெயருடைய ஜீவனிடத்துள்ள இரண்டவஸ்தைகளும் சொல்லப்படுகின்றனவென்று கூறப்பட்டிருக்கின்றது. அச்சுருதிமந்திரத்தில் எவ்வளவு அம்சத்தால் அபரோக்ஷஞானம் சொல்லப்படுகின்றது? என்று கேட்கவிரும்பியவிடத்துக் கூறுகின்றார்:—

ब्रह्मात्मव्यक्तिं उल्लिख्य यः बोधः सः "अयं अस्मि" इति आत्मानं विजानीयात् चेत् वाक्यतः अभिधीयते ॥

(சு-ம்.)

பிரஹ்மாத்மாவின் வியக்தியாகிய சொரூபத்தினை விஷயஞ்செய்து எந்தப்போதம் உண்டாகின்றதோ அது "இது நான் என்று ஆத்மாவை அறியின்" என்னும் வாக்கியத்தினால் சொல்லப்படுகின்றது.

(வி·ம்.)

பிரஹ்மாத்ம வியக்தியாகிய சத்யாதி லக்ஷணமுடைய பிரஹ்மாபின்ன பிரத்தியகாத்மாவின் சொரூபத்தினை விஷயஞ்செய்து "யான் பிரஹ்மம்" என்று எந்த ஞானம் உண்டாகின்றதோ அது இச்சுருதிவாக்கியத்தினால் சொல்லப்பட்டிருக்கின்றதென்பது பொருள். (கூகூ)

எ. ஞானம் திடமாதற்பொருட்டுச் சிரவணாதிவடிவ அப்பியாசத்தை வர்ணித்தல் கூ௮க-எகக.

கூ. வாக்கியத்தால் அபரோக்ஷஞானம் சித்தித்தலால் சிரவணாதிகள் வியர்த்தமா மென்னும் சங்கையும் சமாதானமும்.

[கூஅக] अस्तु बोधोऽपरोक्षोऽत्र महावाक्यात्तथाप्यसौ ।
न दृढः श्रवणादीनामाचार्यैः पुनरीरणात् ॥ ९७ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது முன் கூசஉ-கூகூகூ ற் கூறியபடி ஒருமுறை மகாவாக்கியத்தினை விசாரித்தலினாலேயே அபரோக்ஷஞானம் சித்தித்தலால் "आवृत्तिरसकृदुपदेशात् உபதேசத்தின்பின் அடிக்கடி ஆவிருத்திசெய்தல் வேண்டும்" என்னும் * உஎ. வியாசசூத்திரமுதலியவற்றில் விதிக்கப்பட்ட சிரவணமுதலியவற்றின் ஆவர்த்தனம் எதுவோ அது அநுஷ்டானஞ் செய்யத்தக்கதாகாது என்றாசங்கித்து, ஒருமுறை மகாவாக்கியத்தை விசாரித்தலா லுண்டாகிய அபரோக்ஷஞானம் எதுவோ அது திடமாதற்பொருட்டு அச்சிரவணாதிகளது ஆவர்த்தனத்தின் அநுஷ்டானம் ஆசாரியர்களாற் சொல்லப்பட்டதா யிருத்தலின் ஞானமுண்டாகியபின் சிரவணாதிகளின் ஆவர்த்தனம் அநுஷ்டானஞ் செய்யத்தக்கதே யாமென்று கூறுகின்றார்:—

अत्र महावाक्यात् अपरोक्षः बोधः अस्तु । तथापि न असौ दृढः आचार्यैः पुनः श्रवणादीनां ईरणात् ॥

(சு-ம்.)

பிரஹ்மாத்மாவாகிய இதில் மகாவாக்கியத்தினால் அபரோக்ஷஞானம் இருக்குக. அங்ஙனமாயினும் இந்தஞானம் திடமன்று; ஆசாரியர்களால் மீண்டும் சிரவணாதிகள் கூறப்பட்டிருத்தலால்.

(வி-ம்.)

இப்பிரஹ்மாத்மாவினிடத்து ஒருமுறை கேட்கப்பட்ட மகாவாக்கியத்தினால் இவ்வாறு அபரோக்ஷஞானம் உண்டாகுக. அவ்வாறாயினும் இவ்வபரோக்ஷஞானம் திடமன்றாகலின் சிரவணாதிகள் ஆவிருத்தி செய்யத்தக்கனவாம்; ஏனெனின், ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகளால் வாக்கியார்த்தஞானத்தின் உற்பத்திக்குப் பின்னும் ஞானம் திடமாதற்பொருட்டுச் சிரவணாதிகளின் ஆவர்த்தனம் கூறப்பட்டிருத்தலால் என்பது பொருள். (கூஎ)

---

* உஎ. இது பிரஹ்மமீமாம்சையின் நான்காவது அத்தியாயத்திலுள்ள முதற்பாதத்தின் முதற்சூத்திரமாம். இங்கு முதலிய என்னுஞ் சப்தத்தால் "ஓ மைத்திரேயி! ஆத்மா பார்க்கத்தக்கது கேட்கத்தக்கது மனனஞ்செய்யத்தக்கது நிதித்தியாசனஞ் செய்யத்தக்கது." என்னும் சுருதிமுதலியனவும் கொள்ளப்படும்.

௨. அபரோக்ஷஞானம் உண்டாய்ச் சிரவணுதிகள் செய்யவேண்டியனவா மென்பதில் ஆசாரியர்கள் வாக்கியம்.

[சு-அ௨] अहं ब्रह्मेति वाक्यार्थबोधो यावद्दृढीभवेत् ।
समाधिसहितस्तावदभ्यसेच्छ्रवणादिकम् ॥ ९८ ॥

(அ-கை.)

ஆசாரியர்கள் எவ்வாக்கியத்தால் சிரவணமுதலியவற்றின் ஆவர்த்தனம் கூறியிருக்கின்றனரென் ருசங்கித்து அவர்கள் வாக்கியத்தைப் படிக்கின்றார்:—

“अहं ब्रह्म” इति वाक्यार्थबोधः यावत् दृढीभवेत् । तावत् शमादिसहितः श्रवणादिकं अभ्यसेत् ॥

(சு-ம்.)

“யான் பிரஹ்மம்” என்னும் வாக்கியார்த்தஞானம் எதுவரையில் திடமாகுமோ அதுவரையில் சமாதி சாதனங்களோடு கூடியவனாய் முமுக்ஷுவானவன் சிரவணுதிகளை அப்பியசிக்கவேண்டும். (கூஅ)

௩. வாக்கியப்பிரமாணத்தால் உண்டாகும் ஞானம் திடமாகாமையின் காரணம்,

[சு-அ௩] बाढं संति ह्यदार्ढ्यस्य हेतवः श्रुत्यनेकता ।
असंभाव्यत्वमर्थस्य विपरीता च भावना ॥ ९९ ॥

(அ-கை.)

அப்படியானுல் மகாவாக்கியவடிவப் பிரமாணத்தாலுண்டாகிய ஞானம் திடமாகாமை எக்காரணத்தாலென்ருசங்கித்துக் கூறுகின்ருர்:—

हि श्रुत्यनेकता च अर्थस्य असंभाव्यत्वं विपरीता भावना अदार्ढ्यस्य हेतवः बाढं संति ॥

(சு-ம்.)

எதனுல் சுருதிகளின் அநேகத்தன்மை, அர்த்தத்தின் அசம்பாவிதத்தன்மை, விபரீதத்தன்மை என்னும்மூன்றும் அதிடத்தன்மைக்கு முற்றும் ஏதுக்களா யிருக்கின்றனவோ அதனுல்.

(வி-ம்.)

சுருதிகளின் நாநாத்தன்மை பிரமாணத்திலுள்ள சம்சயத்தினை யுண்டு பண்ணுவதாகிய ஒரு ஏதுவாம். அகண்டைகரச அத்துவிதீயப் பிரஹ்மவடிவ மகாவாக்கியத்தின் அர்த்தத்தின் அலௌகிகத்தன்மையால் அசம்

பாவிதத்தன்மை (பிரமேயத்தின்கண்ணுள்ள சம்சயத்தை விஷயஞ்செய்யுந் தன்மை) இரண்டாவது ஏதுவாம். கர்த்திருத்துவமுதலியவற்றின் அபிமான வடிவ விபரீதபாவனை மூன்றாவது ஏதுவாம். இத்தன்மைய மூன்று அதிடத்தன்மையின் ஏதுக்களும் முற்றுமிருக்கின்றன. ஆகலால் அபரோக்ஷ அநுபவத்தின் திடத்தன்மையின்பொருட்டுச் சிரவணாதிகள் ஆவிருத்தி செய்யத்தக்கனவா மென்பது தாற்பரியம். (கூகூ)

ச. சுருதி நாநாத்துவத்தினு லுண்டாகிய அதிடத்தன்மை நீக்குதற்பொருட்டு சிரவணம் செய்யவேண்டியதாமெனல்.

[கூஅச] शाखाभेदात्कामभेदाच्छ्रुतं कर्मान्यथान्यथा ।
एवमत्रापि माशंकीत्यतः श्रवणमाचरेत् ॥ १०० ॥

(அ-கை.)

இப்படி ஞானத்தினது அதிடத்தன்மையின் மூவகை ஏதுக்களை ஆரம்பித்துச், சுருதிகளின் நாநாத்தன்மையாலாகிய அதிடத்தன்மையினை நீக்குதற்பொருட்டுச் சிரவணத்தின் ஆவிருத்தி செய்யத்தக்கதா மென்று கூறுகின்றார்:—

शाखाभेदात् कामभेदात् अन्यथा अन्यथा कर्म श्रुतं । एवं अत्र अपि मा आशंकी । इति अतः श्रवणं आचरेत् ॥

(சு-ம்.)

* உஅ. சாகையின் பேதத்தாலும், காமமாகிய இச்சையின் பேதத்தாலும் வேறு வேறு விதமாகக் கர்மம் கேட்கப்பட்டிருக்கின்றது என்று

---

* உஅ. இருக்குவேதத்திற்கு இருபத்தொரு சாகையும், யஜுர்வேதத்திற்கு கOகூ-சாகையும், சாமவேதத்திற்கு க000 சாகையும், அதர்வணவேதத்திற்கு ருO-சாகையுமுண்டு. எப்படி விருக்ஷத்திற்கு அதிபதியானவன் தனது புத்திரர்களுக்கு விருக்ஷத்தின் சாகைகளை விபாகஞ்செய்து விடுகிறானோ, அதுபோல மந்தபுத்தியுடைய புருஷர்களைப் பார்த்து வியாசபகவான் ஒருவேதத்தினை இருக்கு, யஜுஸ், சாமம், அதர்வம் என்னும் பேதத்தால் நால்வகையாகச் செய்தனர். அவற்றிற்குச் சாகையினைக் கற்பித்து அச்சாகையினை அபிமானிக்கும் பிராஹ்மணர்களுக்குக் கர்மத்தின் பேதமும் நிர்ணயஞ் செய்திருக்கின்றனர். அதனால் " இந்த இருக்குவேதி இன்னசாகையுடைய பிராஹ்மணன் " என்றல்முதலிய வியவகாரமுண்டாகின்றது. அவ்வொவ்வொரு சாகைக்கும் ஒவ்வொரு உபநிஷத்துண்டு. இது முக்திகோபநிஷத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. வெகுவாய்ச் சாகைகளுக்கும் உபநிஷத்துக்களுக்கும் சமானப் பெயருண்டு. எல்லாஞ்சேர்ந்து ககஅO-சாகைகளும் உபநிஷத்துக்களுமாம். அவற்றுள்,

(க) எண்ணூற்றுநாற்பது (அசO) உபநிஷத்துக்கள் கர்மத்தைப் போதிப்பன. அவை கர்மகாண்ட மெனப்படும்.

இன்கும் ஆசங்கை உண்டாகலாகாது. ஆதலால் சிரவணம் செய்யவேண்டும்.

(வி-ம்.)

எப்படி *௨௯. "ஹோத்திரம் எதுவோ அது இருக்குவேதத்தினால் செய்யப்படுகின்றது. *௩௦. அத்வரியவம் யஜுர்வேதத்தினாற் செய்யப்படுகின்றது. *௩௧. உற்கீதம் சாமவேதத்தினாற் செய்யப்படுகின்றது." என்று சாகையின் பேதத்தால் கர்மத்தின் பேதம் கேட்கப்படுகின்றது. அல்லது எப்படி "மழையை விரும்பிய ராஜா *௩௨. காரீரியாகத்தால் யாகஞ் செய்யக்

(௨) இருநூற்றுமுப்பத்திரண்டு (௨௩௨) உபநிஷத்துக்கள் தியேயப்பிரஹ்மத்தை அறிவிப்பன. அவை உபாசனாகாண்ட மெனப்படும். சில நூலாசிரியர் காயத்தினாலாவது வாக்கினாலாவது மனதினாலாவது என்னும் பேதத்தால் மூவகைக் கர்மம் கூறுவர். உபாசனையும் மானசக்கிரியையாதலால் கர்மமே; அதனின் வேறன்று. ஆதலால் கர்மோபாசனைகளைப் பிரதிபாதிக்கும் உபநிஷத்துக்களைச் சேர்த்து ஒரே கர்மகாண்ட மென்பர்.

(௩) நூற்றெட்டு உபநிஷத்துக்கள் ஞேயப்பிரஹ்மத்தைக் கூறுவனவாம். அவை வேதத்தின் அந்தபாகத்தினை அல்லது வேதத்தின் சாரபூதமான அர்த்தத்தினை நிர்ணயஞ்செய்வனவா யிருத்தலின் வேதாந்த மென்றும் ஞானகாண்ட மென்றும் சொல்லப்படும். அவ்வேதாந்தபாகம் சொற்பமாயிருத்தலின் சிந்தாமணிமுதலியவற்றினைப்போல சர்வவேதங்களின் சாரபூதமாம். அந்நூற்றெட்டில், ஈசம், கேநம், கடம், பிரசினம், முண்டகம், மாண்டூக்கியம், தைத்திரீயம், ஐதரேயம், சாந்தோக்கியம், பிருகதாரணியகம் என்னு மிப்பத்து உபநிடதங்களும் முக்கியமாம். அவற்றுள், ஐதரேயம் ருக்குவேதத்தினதாம். ஈசாவாஸியம் பிருகதாரணியக மென்னு மிரண்டும் சுக்கில யஜுர்வேதத்தினவாம். கடவல்லி தைத்திரீயமெனு மிரண்டும் கிருஷ்ணயஜுர் வேதத்தினவாம். கேனம் சாந்தோக்கிய மென்னு மிரண்டும் சாமவேதத்தினவாம். பிரசினம், முண்டகம், மாண்டூக்கிய மென்னு மூன்றும் அதர்வணவேதத்தினவாம்.

எவ்வளவு சாகைகளுண்டோ அவ்வளவு உபநிஷத்துக்கள் உண்டு என்னும்நிர்ணயம் முக்திகோபநிஷத்தினை அநுசரித்த மகாவாக்கியரத்நாவலியிலும் எழுதப்பட்டிருக்கின்றது. இவ்வாறு சாகைகளின் பேத மிருக்கின்றது. அதனால் கர்மத்திற்கும் பேதமுண்டு.

*௨௯. இருக்குவேதமுணர்ந்த இருத்துவிக்வடிவ ஹோதா (ஓமஞ்செய்பவன்) எவனோ அவனது கர்மம் ஹோத்திரமாம்.

*௩௦. எஜுர்வேதத்தைப் படித்த ருத்விக்வடிவ அத்வர்யு எவனோ அவனது கர்மம் அத்வர்யவ மெனப்படும்.

*௩௧. சாமவேதத்தைப் படித்த சாமகாயகனெனும் ருத்துவிக்வடிவ உற்காதா எவனோ அவனது கர்மம் உற்கீதமாம்.

*௩௨. ராஜா பிரஜைகளிடத்திலிருந்தும் வரிவாங்கி எந்த யாகத்தைச் செய்கின்றானோ அல்லது எதன்கண் வம்ச(மூங்கில்)விருக்ஷத்தின் முனைவடிவ கரீரங்களின் ஹோமம் உண்டாகின்றதோ அதனைக் காரீரியாக மென்பர்.

கடவன்." "ஆயுளை விரும்பியவன் *௯௯. சதகிருஷ்ணலம் என்னும் யாகத்தைச் செய்யக்கடவன்." என்றல் முதலிய காமபேதத்தால் கர்மத்தின் பேதம் கேட்கப்பட்டிருக்கின்றது. இவ்வாறு உபநிஷதங்களிலும் பிரதிபாதிக்கத் தக்க தத்துவமாகிய பிரஹ்மாத்மாவின் பேதத்தின் சங்கை யுண்டாக, அச்சங்கையை நிவர்த்தித்தற்பொருட்டு அடிக்கடி சிரவணஞ்செய்யவேண்டுமென்பது பொருள். (௧00)

௫. சிரவணத்தின் லக்ஷணம்.

[௧0௧] वेदांतानामशेषाणामादिमध्यावसानतः ।
ब्रह्मात्मन्येव तात्पर्यमिति धीः श्रवणं भवेत् ॥ १०१ ॥

(அ-கை.)

அந்தச் சிரவணம் யாது ? என்று கேட்கவிரும்பியவிடத்து அச்சிரவணத்தின் லக்ஷணத்தைக் கூறுகின்றார்:—

अशेषाणां वेदांतानां आदिमध्यावसानतः ब्रह्मात्मनि एव तात्पर्यं इति धीः श्रवणं भवेत् ॥

(சு-ம்.)

சர்வவேதாந்தங்களுக்கும் ஆதிமத்தியாந்தமாகப் பிரஹ்மாத்மாவிலேயே தாற்பரியமாம் என்னும் புத்தி சிரவணமாகின்றது.

(வி-ம்.)

சகல உபநிஷதங்களுக்கும் உபக்கிரம உபசம்மாரமுதலிய அறுவகைத் தாற்பரியத்தை நிச்சயிக்கும் * ௯௪. லிங்கங்களை விசாரிக்கப் பிரஹ்மவடிவ

---

* ௯௯. எந்த யாகத்தில் நூறு கிருஷ்ணலமென்னும் பொன்மாஸத்தின் தானம் விதிக்கப்பட்டிருக்கின்றதோ அது சதகிருஷ்ணலயாகமெனப்படும். பொன் மாசம்=ஒர் நிறை.

*௯௪. (௧) உபக்கிரம உபசங்காரங்களின் ஒருவடிவத்தன்மை, (௨) அப்பியாசம், (௩) அபூர்வத்தன்மை, (௪) பலம், (௫) அர்த்தவாதம், (௬) உபபத்தி என்னும் ஆறும் வைதிகவாக்கியத்தினது தாற்பரியத்தின் லிங்கங்களாம். எப்படி அக்கினியின் ஞானம் தூமத்தினால் உண்டாகுதலால் தூமம் அக்கினிக்கு லிங்கமெனப்படுகின்றதோ அது போல வைதிகவாக்கியங்களினது தாற்பரியத்தின் ஞானம் உபக்கிரம உபசங்காரமுதலியவற்றால் உண்டாகுதலால் அவை தாற்பரியத்தின் லிங்கமாம். உபநிஷதங்களுக்கு வேறாகிய கர்மகாண்டத்தைப் போதிக்கும் வேதத்திற்குத் தாற்பரியம் கர்மவிதியிலாம். அதன் உபசங்காரமுதலியன ஜைமினியாராற் செய்யப்பட்ட பன்னிரண்டத்தியாயமுள்ள பூர்வமீமாம்சையில் வெளிப்படையாம். உபநிஷத்வடிவப் பிரஹ்மத்தை யறிவிக்கும் வேதத்திற்குத் தாற்பரியம் அத்வைதப்பிரஹ்மத்திலாம். அதன் உபக்கிரமம் உபசங்காரமுதலியவற்றினைச் சூத்திரபாஷ்யத்தில் உபநிஷதங்களின் வியாக்கியானப்

பித்தியகாத்மாவிலேயே தாற்பரியமாம். இத்தன்மைய நிச்சயம் சிரவணமா

---

பிரசங்கத்தில் பாஷ்யகாரர் விளக்கமாய் எழுதியிருக்கின்றனர்; அப்படியே தத்துவா லோக மென்னும் நூலில் ஆநந்தகிரிசுவாமிகளாலும் ஸ்ரீ பீதாம்பரஜீ அவர்களாற் செய்யப்பட்ட சுருதிஷட்லிங்கசங்கிரக மென்னும் நூலிலும் விளக்கமாய் எழுதப்பட் டிருக்கின்றது. அவ்வெல்லா உபநிஷதங்களின் உபக்கிரம உபசங்காரமுதலியவற்றை எழுதுதலால் நூல்விரியுமாகலின் சாந்தோக்கிய உபநிஷத்தின் உபக்கிரம உபசங்கார முதலியவற்றினை உதாரணமாகக் கூறுவாம்.

(க) எப்படி: சாந்தோக்கியத்தின் ஆறுவது அத்தியாயத்தின் உபக்கிரம (ஆரம்ப)த்தில் "சௌம்மியனே! முன் ஒரே அத்விதீயசத்திருந்தது" என்னும் வாக்கியத்தால் ஜகத்காரணமாகிய அத்விதீயப்பிரஹ்மத்தைப் பிரதிபாதித்தல் உபக்கிரம மெனப்படும். உபசங்காரத்தில் (ஆறுவது அத்தியாயத்தின் முடிவில்) "அந்த இச்சத்துவடிவ ஆத்மாவாகிய சொரூபமுடையது இவ்வெல்லாமுமாம்." என் னும் வாக்கியத்தால் அத்விதீயப்பிரஹ்மத்தைப் பிரதிபாதித்தல் உபசங்கார மெனப் படும். எந்தஅர்த்தம் ஆரம்பத்திலிருந்து அதுவே அந்தத்திலு மிருக்கின்றதோ அங்கு உபக்கிரம உபசங்காரங்களின் ஒருவடிவத்தன்மை சொல்லப்படுகின்றது. அது முதல் லிங்கம். எப்படி ஆதி அந்தங்களில் சமானகதியுடையனவும் இடையில் விசித் திரகதியுடையனவுமாகிய சங்கம் துந்துமிமுதலிய வாத்தியவிசேஷங்களுக்கு ஆதி அந்தங்களின் கதியிலேயே தாற்பரியமோ, அதுபோல ஆதிஅந்தங்களில் அத்விதீயப் பிரஹ்மத்தைப் பிரதிபாதிப்பதும் இடையில் சிருஷ்டிமுதலியவற்றைப் பிரதிபாதிப் பதுமாகிய உபநிஷத்தின் பிரகரணத்திற்கு உபக்கிரம உபசங்காரங்களினது ஒரு வடிவத்தன்மையின் வலியால் அத்விதீயப்பிரஹ்மத்தைப் பிரதிபாதித்தலில் தாற் பரியநிச்சய முண்டாகின்றது.

(உ) மறுபடியும் மறுபடியும் சொல்லுதற்கு அப்பியாச மென்று பெயர். எப் படி: சாந்தோக்கியத்தின் ஆறுவதத்தியாயத்தில் "தத்துவமஸி (அது நீ)" என்னும் வாக்கியத்தினால் ஒன்பதுமுறை அத்துவிதீயப்பிரஹ்மத்தைப் பிரதிபாதித்திருக்கின் றது. அது அப்பியாசவடிவ இரண்டாவது லிங்கமாம். எப்படி அடிக்கடி வேறுவேறு கிரமமாக ஒரே வார்த்தையைக் கூறும் யாசகர்முதலிய புருஷர்களது வாக்கியத் திற்கு அவ்வார்த்தையின் விஷயமாகிய சுவப்பிரயோஜனத்தில் தாற்பரியமோ, அது போல அடிக்கடி வேறு வேறுயுக்திகளால் அத்துவிதீயப்பிரஹ்மத்தைப் பிரதிபாதிக் கும் சுருதிவாக்கியத்திற்கு அத்துவிதீயப் பிரஹ்மத்திலேயே தாற்பரியமா மென்று அறியவேண்டியது.

(ங) சாஸ்திரத்திற்கு அந்நியமான பிரமாணத்தால் விஷயமாகத்தகாமைக்கு அபூர்வதை யென்று பெயர். எப்படி: "அவ்வுபநிஷதங்களால் அறியத்தக்க புருஷனை யான் கேட்கின்றேன்" என்னுஞ் சுருதிவாக்கியத்தினால் அத்துவிதீயப்பிரஹ்மத்திற்கு உபநிஷத்துவடிவ சப்தப்பிரமாணத்திற்கு வேறாகிய பிரத்தியக்ஷமுதலிய பிரமாணத் திற்கு விஷயமாகாமையாகிய அலௌகிகத்தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது, அல்லது பிரஹ்மம் சுயம்பிரகாசவடிவமா யிருத்தலால் அதற்குத் தனது வியவகாரத் தில் வேறுபிரமாணங்களின் அபேக்ஷையின்மை இருக்கின்றது. அது பிரஹ்மத்தின் அபூர்வதைவடிவ மூன்றாவது லிங்கமாம். எப்படி வியாபாரி புருஷன் எந்த வஸ்து வின் அபூர்வத்தன்மையை வர்ணிக்கின்றானோ, அந்த வஸ்துவினை வாங்குகின்றவனுக்

மென்பது பொருள். (௧0௧)

---

குக் கொடுப்பதில் அவனுக்குத் தாற்பரியமோ, அல்லது எப்படி நாடகமாடுவோன் மற்றும் அநேகசெய்கைகளைச் செய்யினும், அவ்வெல்லாச் செய்கைகளுக்கும் அபூர்வ (அலௌகிகமான) விளையாட்டிலேயே தாற்பரியமோ, அதுபோலச் சுருதிவாக்கியமும் எந்த அர்த்தத்தின் அபூர்வதையை வர்ணிக்கின்றதோ அவ்வர்த்தத்திலேயே அவற்றிற்குத் தாற்பரியமாம்.

(௪) சாந்தோக்கியத்தின் ஆறாவது அத்தியாயத்தில் "ஆசாரியனையுடைய புருஷன் அறிகின்றான். அவனுக்கு எவ்வளவுகாலம்வரையில் தேகபாதம் இல்லையோ அவ்வளவுகாலம்வரையிலுமே விதேகமுக்தியில் தாமதமாம். தேகம் விழும் அச்சமயத்திற்றான் சத்தாகிய பிரஹ்மத்தை அடைகின்றான்." என்னும் வாக்கியத்தினால் அத்விதீயப்பிரஹ்மத்தின் ஞானத்தினால் ஜந்மாதி அனர்த்தங்களின் நிவிருத்தியும் பிரஹ்மப்பிராப்தியுமாகிய விதேககைவல்யவடிவ பயன் சொல்லப்பட்டிருக்கின்றது. அது நான்காவது லிங்கமாம். ஏகாதசிமுதலிய விரதங்களின் மகாத்மியத்தில் எந்த விரதத்தின் பயன் வர்ணிக்கப்பட்டிருக்கின்றதோ அவ்விரதத்தின் அநுஷ்டானத்தில் அதற்குத் தாற்பரியமாம். அதுபோல உபநிஷதங்களிலும் அத்துவிதீயப்பிரஹ்மத்தினது ஞானத்தின் பலம் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அதன்கண்ணே அவற்றிற்குத் தாற்பரியமாம்.

(௫) ஸ்துதியினையாவது நிந்தையினையாவது அறிவிக்கும் வாக்கியம் அர்த்தவாத மெனப்படும். சாந்தோக்கியத்தின் ஆறாவது அத்தியாயத்தில் "எதனால் கேட்கப்படாத பிறிதொன்று கேட்கப்பட்டதாகின்றதோ, மனனஞ்செய்யப்படாத ஒன்று மனனஞ்செய்யப்பட்டதாகின்றதோ, நிச்சயிக்கப்படாத தொன்று நிச்சயிக்கப்பட்டதாகின்றதோ அவ்வுபதேசத்தினையும் நீ குருவினிடத்துக் கேட்டிருக்கின்றாய்." என்னும் வாக்கியத்தினால் அத்துவிதீயப்பிரஹ்மத்தினது போதத்தின் ஸ்துதி செய்யப்பட்டிருக்கின்றது. அது அர்த்தவாதவடிவ ஐந்தாவது லிங்கமாம். எப்படி ஓர் புருஷன் மற்றோர் புருஷனைப் பிறரிடத்துத் துதிக்கின்றானோ அதற்குத் துதிசெய்யத்தக்க புருஷனிடத்துக் குரு மித்திரன்முதலிய பாவனையால் தாற்பரியமோ, அதுபோல அத்துவிதீயப்பிரஹ்மத்தின் ஞானத்தினை ஸ்துதிக்கும் சுருதிவாக்கியங்களுக்கும் அத்துவிதீயப்பிரஹ்மத்தைப் பிரதிபாதித்தலில் தாற்பரியமாம்.

(௬) சொல்லப்பட்ட அர்த்தத்திற்கு அநுகூலதிருஷ்டாந்தமாகிய யுக்திக்கு உபபத்தி யென்று பெயர். சாந்தோக்கியத்தின் ஆறாவது அத்தியாயத்தினால் சகல வஸ்துக்களுக்கும் பிரஹ்மத்தோடு அபேதஞ்சொல்லுதற்கு மண் பொன்முதலிய அநேகதிருஷ்டாந்தங்களால் காரியத்திற்கு (ஜகத்திற்கு)க் காரண (பிரஹ்ம)த்தோடு அபேதஞ்சொல்லப்பட்டிருக்கின்றது. அது அபேதத்தைப் பிரதிபாதிக்கும் திருஷ்டாந்தமாகிய உபபத்திவடிவ ஆறாவது லிங்கமாம். புருஷன் எந்த அர்த்தத்தில் திருஷ்டாந்தம் கூறுகின்றானோ, அவ்வர்த்தத்தைத் திடஞ்செய்தலில் அதற்குத் தாற்பரியமாம். அதுபோல உபநிஷதங்களில் அத்வைத அர்த்தத்திற்கு அநுகூலமான திருஷ்டாந்தமுதலியவற்றைக் கூறுதலால் அவற்றிற்கு அத்துவிதீயப்பிரஹ்மத்திலேயே தாற்பரியமாம்.

௬. சிரவணத்தினையும் லக்ஷணசகிதமனனத்தினையும் நிரூபித்தலில் பிரமாணம்.

[௬௮] समन्वयाध्याय एतत्सूक्तं धीस्वास्थ्यकारिभिः ।
तर्कैः संभावनार्थस्य द्वितीयाध्याय ईरिता ॥ १०२ ॥

(அ-கை.)

இத்தன்மைய சிரவணம் எங்கு நிரூபிக்கப்பட்டிருக்கின்றதெனக் கூறுகின்றார் :—

एतत् समन्वयाध्याये सूक्तम् ॥

(சு-ம்.)

சமன்வய அத்தியாயத்தில் இச்சிரவணம் செவ்வையாய்க் கேட்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

இச்சிரவணம் சாரீரகத்தின் முதலாவது சமன்வய மென்னு மத்தியாயத்தில் வியாசர்முதலியோரால் செவ்வையாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்கு முதலியோரென்னுஞ் சொல்லால் பாஷியகாரரும் ஆநந்தகிரிமுதலிய * ௫௫. வியாக்கியானகாரர்களும் கொள்ளப்படுவர்.

---

இவ்வாறு உபக்கிரம உபசம்மாரமுதலிய ஆறுலிங்கங்களின் உதாரணவடிவ சுருதிவாக்கியம் கூறப்பட்டது அது வெகுவாய்ச் சாந்தோக்கியத்தின் ஆறுவது அத்தியாயத்திலுள்ளதாம். அவ்வத்தியாயத்திற்கு வெகுவாய் வியாக்கியானம் "தத்துவமசி மகாவாக்கிய உபதேச" மென்னும் நூலில் எழுதப்பட்டிருக்கின்றது. அங்குக்கண்டுகொள்க. இவ்வாறு கூறிய அறுவகை லிங்கவடிவயுக்தி எவையோ அவற்றால் சர்வவேதாந்தங்களாகிய உபநிஷதங்களுக்கும் அத்வைதப் பிரஹ்மத்திலுள்ள தாற்பரியத்தின் நிச்சயம் சிரவண மெனப்படும். இது அங்கவடிவசிரவணம். அங்கிவடிவசிரவணம் பிரத்தியக்தத்துவவிவேகத்தின் ௧௭௪-வது டிப்பணியில்முன் காட்டப்பட்டிருக்கிறது.

* ௫௫. ஸ்ரீ வியாசபகவானெனவர் பிரஹ்மசூத்திர மென்னும் பெயருடைய பதார்த்தநிர்ணயஞ்செய்யும் ௫௫௫ சூத்திரங்கள் செய்திருக்கின்றனர். அவற்றின் சங்கை இருநூற்றிருபத்தைந்து சுலோகத்தினவாம். அதனைப் பிஹ்மமீமாம்சை யென்றும் உத்தரமீமாம்சை யென்றும் கூறுவர். அதற்கு நான்கு அத்தியாயங்களுண்டு. ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் நான்கு நான்கு பாதங்களுண்டு.

அதற்கு,

(க) ஸ்ரீமத் சங்கராசாரியர்களால் பதினாயிரம் சுலோகசங்கையுள்ள பாஷியஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அதற்குச் சாரீரகபாஷிய மென்று பெயர்.

(உ) அப்பாஷியத்தின்பேரில் பத்மபாதாசாரியர் விஜயாபிநண்டினி என்னும் உரை செய்திருந்தனர். அதனை அவருடைய அம்மான் வீட்டோடு எரித்துவிட்டனர். பின் ஐந்து பாதங்களுக்கு வியாக்கியானம் பாஷியகாரர் சொல்லப் பத்மபாதாசாரியர் எழுதினர். அதற்குப் பஞ்சபாதிகை யென்று பெயர். அது ஐந்நூறு. அதன்பேரில்,

(௫) ஸ்ரீ பிரகாசாத்மசரணரென்னுஞ் சுவாமிகள் விவரண மென்னும் பதினாலாயிரம் சங்கையுள்ள வியாக்கியானம் எழுதியிருக்கின்றனர். அதன்பேரில்,

(௬) அகண்டாநந்தசந்நியாசியாராற் செய்யப்பட்ட விவரணதத்துவதீபனம் என்னும் வியாக்கியானம் இருபத்தையாயிரம் சங்கையாம்.

(௭) விவரணத்தின்பேரில் ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளால் செய்யப்பட்டது விவரணப்பிரமேயசங்கிரகம்.

(௮) பஞ்சபாதிகையின்பேரில் கிருஷ்ணாசிரமரால் செய்யப்பட்ட உரை இருக்கிறது.

(௯) ராமாநந்தசரஸ்வதிகளால் செய்யப்பட்ட விவரணோபந்நியாச மிருக்கின்றது.

(அ) சாரீரகபாஷியத்தின் பேரில் வேறு பாமதீநிபந்தன மென்னும் பன்னீராயிரம் சங்கையுள்ள வியாக்கியானம் வாசஸ்பதிமிசிரராற் செய்யப்பட்டிருக்கின்றது. அதன்பேரில்,

(௯) அமலாநந்த சுவாமியினாற் செய்யப்பட்டது கல்பதரு வென்னும் வியாக்கியானம் பதினாலாயிரம் அதன்பேரில்,

(௰) அப்பையதீக்ஷிதரால் செய்யப்பட்ட பரிமள மென்னும் வியாக்கியானம் ஒன்பதினாயிரம்.

(௧௧) சாரீரகபாஷியத்தின் பேரில் அத்வைதாநந்தராற் செய்யப்பட்ட மற்றோர் பிரஹ்மவித்தியாபரண மென்னும் வியாக்கியானம் இருபத்தாறாயிரம்.

(௧௨) பாஷியத்தின்பேரில் ஆநந்தகிரிசுவாமிகளாற் செய்யப்பட்ட ஆநந்தகிரீ என்னும் வியாக்கியானம் பதினெண்ணாயிரம்.

(௧௩) ராமாசிரமராற் செய்யப்பட்ட ரத்தினப் பிரபா என்னும் வியாக்கியானம் பதினோராயிரம்.

(௧௪) சாரீரகபாஷ்யத்தின்பேரில் சர்வஞ்ஞாத்மமுனிவராற் செய்யப்பட்ட இரண்டாயிரத்தைந்நூறு சுலோகவடிவமான சார்த்திகரூப சம்க்ஷேபசாரீரக மென்னும் வியாக்கியான மிருக்கின்றது. அதன்பேரில்,

(௧௫) மதுசூதனசுவாமிகளாற் செய்யப்பட்டது பதினையாயிரம்.

(௧௬) ராமாசிரம சுவாமிகளாற் செய்யப்பட்டது பன்னீராயிரம். இவ்விரண்டு வியாக்கியானங்களுண்டு.

(௧௭-௧௮) சாரீரகபாஷ்யத்தின்பேரில் நாராயணசரஸ்வதியாற் செய்யப்பட்டதும், அப்படியே பாலகிருஷ்ணாநந்தராற் செய்யப்பட்டதுமான இரண்டு வார்த்திகங்களிருக்கின்றன.

(௧௯) பிரஹ்மசூத்திரபாஷ்யத்தின்பேரில் மதுசூதனசுவாமிகளாற் செய்யப்பட்ட வேதாந்தகற்பலதை யென்னும் நாலாயிரத்தைந்நூறு சங்கையுள்ள கிரந்தம் நான்கு ஸ்தபகவடிவினது.

(௨௰) கேவல பிரஹ்மசூத்திரத்தின்பேரில் ராமாசிரமசுவாமிகளாற் செய்யப்பட்ட ராமாசிரமி என்னும் சூத்திரவிருத்தி ஆறாயிரம்.

(௨௧) நாராயணபட்டராற் செய்யப்பட்ட சூத்திரவிருத்தி நாலாயிரம்.

(௨௨) அப்பையதீக்ஷிதராற் செய்யப்பட்ட சாரீரகந்யாயரக்ஷாமணி என்னும் சூத்திரவிருத்தி இரண்டாயிரம்.

(௨௩) சங்கரானந்தசுவாமிகளாற் செய்யப்பட்ட சூத்திரவிருத்தி ஆயிரத்தைந்நூறு.

(௨௪) பைரவதத்தபண்டிதராற் செய்யப்பட்டது பிரஹ்மசூத்திரதாற்பரியம்.

(௨௫) ராமாநந்த சுவாமிகளாற் செய்யப்பட்டது பிரஹ்மாமிர்தவர்ஷிணீ என்னும் சூத்திரவிருத்தி.

(௨௬) கங்காதரசுவாமியினாற் செய்யப்பட்டது சுவாராஜ்யசித்தி என்னும் நூல்.

(௨௭) பிரஹ்மசூத்திரங்களில் நூற்றுத்தொண்ணூற்றிரண்டு அதிகரணசூத்திரங்க ளிருக்கின்றன. அவற்றின்பேரில் வித்தியாரணியசுவாமிகளாற் செய்யப்பட்ட நானூறு சுலோகவடிவ அதிகரணரத்நமாலை யிருக்கின்றது. அதற்கு உரை நாலாயிரம் ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளாலேயே செய்யப்பட்டிருக்கின்றது.

(௨௮) பிரஹ்மசூத்திரத்தின்பேரில் ரகுநாதசாஸ்திரிகளாற் செய்யப்பட்ட சங்கரபாதபூஷணம் ஏழாயிரம்.

இவைமுதலியவற்றிற்கு வேறாகவும் பிரஹ்மசூத்திரத்தின்பேரில்,

(௨௯) அத்வைதவிருத்தி,

(௩௦) தீத்தர்சிநீ,

(௩௧) அநுபநாராயணராற் செய்யப்பட்ட சமஞ்சஸா,

(௩௨) அன்னம்பட்டராற் செய்யப்பட்ட மிதாக்ஷரா,

(௩௩) ஞானேந்திரசுவாமிகளாற் செய்யப்பட்ட பிரஹ்மசூத்திரார்த்தப்பிரகாசிகா,

(௩௪) நாகேசுவரராற் செய்யப்பட்ட பிரஹ்மசூத்திரேந்திரசேகரம்,

(௩௫) பிரகாசாத்மசரணராற் செய்யப்பட்ட சாரீரக மீமாம்சாந்யாயசங்கிரகம்,

(௩௬) பிரஹ்மாநந்தசரஸ்வதிகளாற் செய்யப்பட்ட வேதாந்தசூத்திரமுக்தாவலி,

(௩௭) பவதேவராற் செய்யப்பட்ட சூத்திரவிருத்தி,

(௩௮) ரங்கநாதராற் செய்யப்பட்ட வித்வஜ்ஜநமநோஹரா,

(௩௯) சுயம்பிரகாசாநந்தராற் செய்யப்பட்ட வேதாந்தவசனபூஷணம்,

(௪௦) ஜகந்நாதயதீசுவரராற் செய்யப்பட்ட பாஷ்யதீபிகை,

(௪௧) அமலாநந்தராற் செய்யப்பட்ட சாரீரக சாஸ்திரதர்ப்பணம்,

(௪௨) கதாதரசுவாமிகளாற் செய்யப்பட்ட சாரீரகசூத்திரசாரார்த்தசந்திரிகை,

இவைமுதலிய அநேகவியாக்கியானவடிவ கிரந்தங்க ளிருக்கின்றன. இவையாவும் சேர்ந்து ௨0௩௪00 க்குமேல் பிரமேயகிரந்தங்க ளெனப்படுகின்றன. இது பிரசங்கத்தால் முமுக்ஷுவிற்குத் தனது சித்தாந்தத்தின் மிகுந்த வன்மையினது ஞானத்தின் பொருட் டறிவிக்கப்பட்டது.

(அ-கை.)

அர்த்தமாகிய பிரஹ்மாத்மாவின் ஐக்கியவடிவப்பிரமேயம் எதுவோ அதன் சம்பவியாமையை நீக்குதற்கு ஏதுவான மனனமோ சாரீரகத்தின் இரண்டாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார் :—

धीस्वास्थ्यकारिभिः तर्कैः अर्थस्य संभावना । द्वितीयाध्याये ईरिता ॥

(சு-ம்.)

புத்தியின் ஸ்திரத்தன்மையைச் செய்யும் தர்க்கங்களால் அர்த்தம் பொருந்துதல் இரண்டாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

பிரமேயத்தின்கண்ணுள்ள சந்தேகநிவிருத்தியாயிலாகப் புத்தியின் சுவசொருபத்தில் ஏகாக்கிரத்தன்மையினைச் செய்யும் அபேதத்தின் சாதகமும் பேதத்தின் பாதகமுமான யுக்தி சப்தத்திற்கு வாச்சியமான தர்க்கங்களால் பிரஹ்மாத்மாவின் ஐக்கியவடிவ அர்த்தத்தின் சம்பாவனையாகிய பொருத்தத்தின் அநுசந்தானவடிவ மனனம் சாரீரகத்தின் இரண்டாவது அத்தியாயத்தில் நிருபிக்கப்பட்டிருக்கின்றதென்பது பொருள். (கOஉ)

எ. விபரீதபாவனையின் சொருபமும் அதன் நிவிருத்தி உபாயமும்.

[சுஅஎ] बहुजन्मदृढाभ्यासाद्देहादिष्वात्मधीः क्षणात् ।
पुनः पुनरुदेत्येवं जगत्सत्यत्वधीरपि ॥ १०३ ॥

(அ-கை.)

இப்போது விபரீதபாவனையையும் அதன் நிவிருத்தி உபாயத்தினையும் காட்டுகின்றார் :—

बहुजन्मदृढाभ्यासात् क्षणात् पुनः पुनः देहादिषु आत्मधीः उदेति । एवं जगत्सत्यत्वधीः अपि ॥

(சு-ம்.)

வெகுஜன்மங்களின் திடாப்பியாசத்தினால் க்ஷணத்திற்கு க்ஷணம் மறுபடியும் மறுபடியும் தேகாதிகளில் ஆத்மபுத்தி யுண்டாகின்றது. இவ்வாறு ஜகத்தினது சத்தியத்தன்மையின் புத்தியும் உதயமாகின்றது. (கOங)

அ. விபரீதபாவனையை நிவிருத்திக்கும் ஏகாக்கிரத்தன்மையின் உபாயம்.

[சுஅஅ] विपरीता भावनेयमैकाग्र्यात्सा निवर्तते ।
तत्त्वोपदेशात्प्रागेव भवत्येतदुपासनात् ॥ १०४ ॥

(அ-கை.)

இதுவுமது :—

इयं विपरीता भावना । सा ऐकाग्र्यात् निवर्तते ॥

(சு-ம்.)

இது விபரீதபாவனையாம். அவ்விபரீதபாவனை சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையினால் நிவிருத்தியாகின்றது.

(அ-கை.)

விபரீதபாவனையை நிவிருத்திக்கும் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை எதுவோ அது எதனாலுண்டாகின்றதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

एतत् तत्त्वोपदेशात् प्राक् एव उपासनात् भवति ॥

(சு-ம்.)

இவ்வேகாக்கிரந்தன்மை தத்துவமாகிய பிரஹ்மத்தின் உபதேசத்திற்கு முன்னரே சகுணப்பிரஹ்மத்தின் உபாசனையினால் உண்டாகின்றது. (க0௪)

[சு-அக] उपास्तयोऽत एवात्र ब्रह्मशास्त्रेऽपि चिंतिताः ।
प्रागनभ्यासिनः पश्चाद्ब्रह्माभ्यासेन तद्भवेत् ॥ १०५ ॥

(அ-கை.)

அப்படியானால் சகுணப்பிராஹ்மமாகிய ஓங்காரமுதலியவற்றின் உபாசனையினால் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை உண்டாகின்றதென்பதனைத் தாம் எதனாலறிந்தீர்? என்றாசங்கித்து, எதனால் உபாசனையின் விசாரம் வேதாந்தசாஸ்திரத்தில் செய்யப்பட்டிருக்கின்றதோ அதனால் அறிந்திருக்கின்றேன் என்று கூறுகின்றார்:—

अतः एव अत्र ब्रह्मशास्त्रे अपि उपास्तयः चिंतिताः ॥

(சு-ம்.)

எதனால் விபரீதபாவனையை நிவிருத்திக்கும் ஏகாக்கிரத்தன்மை உபாசனையினால் உண்டாகின்றதோ, அதனாலேயே இந்தப் பிரஹ்ம (வேதாந்த) சாஸ்திரத்திலும் அநேக உபாசனைகள் விசாரிக்கப்பட்டிருக்கின்றன.

(அ-கை.)

எந்தப் புருஷன் இந்த பிரஹ்மோபதேசத்திற்கு முன் இந்த ஜன்மத்திலாவது ஜன்மாந்தரத்திலாவது உபாசனை செய்யவில்லையோ அவன்

அகிருதோபாஸ்திகன். அவனுக்கு அவ்விபரீதபாவனையை நிவிருத்திக்கும் ஏகாக்கிரத்தன்மையின் உற்பத்தி எதனாலுண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

प्राक् अनभ्यासिनः पश्चात् ब्रह्माभ्यासेन तत् भवेत् ॥

(சு-ம்.)

பிரஹ்மோபதேசத்திற்கு முன் உபாசனையின் அப்பியாசமின்றிய புருஷனுக்குப் பின் பிரஹ்மாப்பியாசத்தினால் அவ்வேகாக்கிரத்தன்மையுண்டாகின்றது. (௧0௫)

௧. பிரஹ்மாப்பியாசத்தின் சொரூபம்.

[௧௧0] तच्चिंतनं तत्कथनमन्योऽन्यं तत्प्रबोधनम् ।
एतदेकपरत्वं च ब्रह्माभ्यासं विदुर्बुधाः ॥ १०६ ॥

(அ-கை.)

பிரஹ்மாப்பியாசம் எத்தன்மையதாம் என்று கேட்கும் விருப்பத்திற் கூறுகின்றார்:—

तच्चिंतनं तत्कथनं अन्योऽन्यं तत्प्रबोधनं च एतदेकपरत्वं बुधाः ब्रह्माभ्यासं विदुः ॥

(சு-ம்.)

ஏகாந்தத்தில் அந்தப் பிரஹ்மத்தினைச் சிந்தித்தல், முமுக்ஷு நேர்ந்தகாலத்து அதனைச் சொல்லுதல், சமான அப்பியாசி நேர்ந்தகாலத்து ஒருவருக்கொருவர் அதனை உசாவுதல் என்றிவ்வாறு இவ்வொன்றன்கண்ணேயே அழுந்துதற்றன்மையாகிய தற்பரத்தன்மையினைப் பண்டிதர் பிரஹ்மாப்பியாசமென்றறிகின்றனர். (௧0௬)

௧0. பிரஹ்மத்தில் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையினைக் கூறும் சுருதியும் ஸ்மிருதியும்.

[௧௧௧] तमेव धीरो विज्ञाय प्रज्ञां कुर्वीत ब्राह्मणः ।
नानुध्यायाद्बहुञ्छब्दान्वाचो विग्लापनं हि तत् ॥ १०७ ॥

(அ-கை.)

இவ்வொன்றன்கண்ணேயே தற்பரமாதலை விளக்குதற்குச் சுருதியைக் கூறுகின்றார்:—

धीरः ब्राह्मणः तम् एव विज्ञाय प्रज्ञां कुर्वीत । बहून् शब्दान् न अनुध्यायात् ॥

(சு-ம்.)

தீரனாகிய பிராஹ்மணன் அதனையே விசேஷமாக அறிந்து பிரஞ்ஞையைச் செய்யவேண்டும். அநேகசப்தங்களைச் சிந்திக்கலாகாது.

(வி-ம்.)

பிரஹ்மசரியாதி சாதனசம்பன்னனாகிய தீரனான பிராஹ்மணன் அதாவது பிரஹ்மமாதற்கிச்சையையுடைய முமுக்ஷு அந்தப் பிரத்தியகாத்ம பரமாத்மாவினையே சம்சயமுதலியவற்றின் இன்மையுண்டாகும் வண்ணம் அறிந்து, பிரஞ்ஞையை அதாவது பிரஹ்மாத்ம ஐக்கியஞானத்தின் சந்ததிவடிவ ஏகாக்கிரத்தன்மையினைச் சம்பாதிக்கவேண்டும். அநாத்மாவினை விஷயஞ்செய்யும் அநேக சப்தங்களைத் தியானிக்கலாகாது. இங்குத் தியான மென்பதனால் சொல்லுதலும் லக்ஷணையினால் அறியப்படுகின்றது. அதனால் அநேகசொற்களைச் சொல்லலாகா தென்னும் பொருள் உண்டாகின்றது. அவ்வாறின்றி அதாவது சப்தங்களைச் சொல்லுதலின்றிச் சப்தங்களைத் தியானித்தலால் வாக்கிற்கு வருத்தம் சம்பவியாதாகலின்.

(அ-கை.)

எதனால் வெகுசப்தங்களைத் தியானிக்கலாகா தென்று கூறுகின்றார்:—

हि तत् वाचः विग्लापनम् ॥

(சு-ம்.)

எதனால் வெகு சொற்களைக் கூறுதலாகிய அது வாக்கிற்கு வருத்தத்தை யுண்டுபண்ணுவதா யிருக்கின்றதோ அதனால்.

(வி-ம்.)

இங்குச் சொல்லுத லென்னும் பதம் நினைத்தற்கும் உபலக்ஷணமாம். வாக்கென்னும் சப்தம் மனதிற்கும் உபலக்ஷணமாம். இதன் அபிப்பிராயம் இதுவாம்:—அநாத்மகோசரமான அந்நியசப்தங்களை ஸ்மரித்தலில் மனதிற்குச் சிரமமுண்டாகின்றது. அச்சொற்களைச் சொல்லுதலிலோ வாக்கிற்குச் சிரமமுண்டாகின்றது. (௧௦௭)

[௯-௨௨] अनन्याश्चिंतयंतो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥ १०८॥

(அ-கை.)

இவ்வாறு ஏகாக்கிரத்தன்மையினைப் பிரதிபாதிக்கும் சுருதியினைக் கூறிப் பகவத்கீதையின் ஒன்பதாவது அத்தியாயத்தின் இருபத்திரண்டாவது சுலோகவடிவ ஸ்மிருதியினையுங் கூறுகின்றார்:—

ये जनाः अनन्याः मां चिंतयंतः पर्युपासते । तेषां नित्याभियुक्तानां अहं योगक्षेमं वहामि ॥

(சு-ம்.)

எவர்கள் அநந்நியமாக என்னைச் சிந்திக்கின்றவர்களாய் எங்குமாய் உபாசிக்கின்றார்களோ அந்த நித்தியம் என்னை நினைக்கின்றவர்களது யோக க்ஷேமத்தை யான் வகிக்கின்றேன்.

(வி-ம்.)

"யான் பிரஹ்மம்" என்னும் ஞானத்தால் எவர்கள் என்னினும் வேறாகாதவர்களாய் அவ்வாறே என்னைச் சிந்தித்து எல்லாக்காலத்திலும் உபாசிக்கின்றார்களோ அதாவது என் வடிவமாயிருக்கின்றார்களோ, அந்த என்றும் என்னிடத்துச் சித்தமுள்ளவர்களது அவ்வடிவாந்தன்மையினால் ஸ்மரித்தற்கு விஷயமாகிய யான் அடையப்படாததனை அடைதலும் அடைந்ததனை இரக்ஷித்தலுமாகிய யோகக்ஷேமத்தைச் சம்பாதிக்கின்றேன் என்பது பொருள். (௧௦அ)

௧௯. சுலோகம் ௧௧௧-௧௧௨ ற் கூறிய சுருதி ஸ்மிருதிகளின் தாற்பரியம்.

[௧௧௩] इति श्रुतिस्मृती नित्यमात्मन्येकाग्रतां धियः ।
विधत्तो विपरीताया भावनायाः क्षयाय हि ॥ १०९ ॥

(அ-கை.)

உதாரணத்தினால் சுருதி ஸ்மிருதி யென்னும் இரண்டன் தாற்பரியத்தையும் கூறுகின்றார்:—

इति श्रुतिस्मृती विपरीतायाः भावनायाः क्षयाय हि आत्मनि नित्यं धियः एकाग्रतां विधत्तः ॥

(சு-ம்.)

இந்தச் சுருதி ஸ்மிருதிகள் விபரீதபாவனை கெடுதற்பொருட்டே ஆத்மாவினிடத்தில் நித்தியம் புத்தியின் ஏகாக்கிரத்தன்மையினை விதிக்கின்றன.

(வி-ம்.)

இந்தச் சுருதியும் ஸ்மிருதியும் விபரீதபாவனை நீங்குதற்பொருட்டு ஆத்மாவினிடத்து எப்போதும் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையைக் கூறுகின்றன என்பது பொருள். (௧0௯)

௧௨. விபரீதபாவனையின் லக்ஷணத்தோடு உதாரணம்.

[௬௯௪] यद्यथा वर्तते तस्य तत्त्वं हित्वाऽन्यथात्वधीः ।
विपरीता भावना स्यात्पित्रादावरिधीर्यथा ॥ ११० ॥

(அ-ணக.)

அப்படியானல் தேகமுதலியவற்றிலுள்ள ஆத்மத்தன்மையின் புத்தியும் ஜகத்தின் சத்தியத்தன்மையின் புத்தியுமாகிய இவ்விரண்டற்கும் விபரீதபாவனைத்தன்மை எதனு லிருக்கின்றது? என்றுசங்கித்து விபரீதபாவனையினது லக்ஷணத்தின் சேர்க்கையால் அவ்விரண்டு புத்திகளுக்கும் விபரீதபாவனைத்தன்மை யிருக்கின்றது என்று காட்டுதற்கு அந்த விபரீதபாவனையின் லக்ஷணத்தைக் கூறுகின்றார்:—

यत् यथा वर्तते । तस्य तत्त्वं हित्वा अन्यथात्वधीः विपरीता भावना स्यात् ॥

(சு-ம்.)

எந்த வஸ்து எப்படி இருக்கின்றதோ அதன் தத்துவத்தை விட்டு உண்டாகும் வேற்றுத்தன்மைப்புத்தி விபரீதபாவனையாம்.

(வி-ம்.)

எந்த வஸ்துவாகிய சுத்திமுதலியன எப்படி அதாவது எச்சுத்திமுதலியவடிவமா யிருக்கின்றனவோ, அவற்றின் தத்துவத்தை அதாவது சுத்திமுதலியவடிவத்தன்மையை விட்டு வேற்றுத்தன்மையாய் இரஜதமுதலியவடிவத்தன்மையாக அறிதல் விபரீதபாவனையாம். மற்றொன்றில் அதாவது சுத்தியில் அல்லது ஆத்மாவிலுண்டாம் மற்றொன்றன் அதாவது வெள்ளியின் அல்லது தேகாதிகளின் புத்தி விபரீதபாவனை என்பது பொருள்.

(அ-கை.)

முற்கூறிய லக்ஷணமுடைய விபரீதபாவனையின் உதாரணத்தாற் கூறுகின்றார்:—

यथा पित्रादौ अरिधीः ॥

(சு-ம்-)

எப்படித் துஷ்டபுத்திரன் முதலியவர்களுக்கும் பிதா முதலியவர்களிடத்தில் சத்துருபுத்தி இருக்கின்றதோ அத்தன்மையது விபரீதபாவனையாம். (கக0)

கசு. முற்கூறிய விபரீதபாவனையை எடுத்துக்கொண்டதன்கண் பொருத்துதல்.

[கூகூ0] आत्मा देहादिभिन्नोऽयं मिथ्या चेदं जगत्तयोः ।
देहाद्यात्मत्वसत्यत्वधीर्विपर्ययभावना ॥ १११ ॥

(அ-கை.)

சுலோகம் கூகூகூ-ற் கூறிய விபரீதபாவனையின் லக்ஷணத்தைப் பிரகிருதத்தில் அதாவது-கூஅஎ-ல் நின்றும் தொடங்கிய தேகாதியவற்றில் ஆத்மத்தன்மைப்புத்தியும் ஜகத்தில் சத்தியத்தன்மைப்புத்தியுமாகிய அர்த்தத்தில் பொருத்துகின்றார்:—

अयं आत्मा देहादिभिन्नः च इदं जगत् मिथ्या । तयोः देहाद्यात्मत्व-सत्यत्वधीः विपर्ययभावना ॥

(சு-ம்.)

இவ்வாத்மா தேகாதிகளின் வேறும். இந்த ஜகத்து மித்தையாம். அவ்விரண்டன்கண்ணுள்ள தேகாதி ஆத்மவடிவத்தன்மை சத்தியத்தன்மைகளின் புத்தி விபரீதபாவனையாம்.

(வி-ம்.)

இவ்வாத்மா உண்மையாகத் தேகாதிகளின் வேறும்; இச்சகத்து மித்தையாமென்றிவ்வாறுண்டாகியும் அவ்வாத்மாவினும் ஜகத்திலும் கிரமமாகவுண்டாகும் தேகாதிவடிவத்தன்மையின் புத்தியும் சத்தியத்தன்மையின் புத்தியும் விபரீதபாவனையாமென்பது பொருள். (ககக)

கசு. விபரீதபாவனையினது நிவிருத்தியின் உபாயத்தை விசேஷவடிவத்தாற் கூறுதல்.

[கூகூகூ] तत्त्वभावनया नश्येत्साऽतो देहातिरिक्तताम् ।
आत्मनो भावयेत्तद्वान्मिथ्यात्वं जगतोऽनिशम् ॥ ११२ ॥

(அ-கை.)

முன் கூஅஅ-ல் "அவ்விபரீதபாவனை ஏகாக்கிரத்தன்மையினால் நீங்குகின்றது" என்று சாமானியமாகக் கூறிய அர்த்தத்தினை விசேஷவடிவமாகக் கூறுகின்றார்:—

सा तत्त्वभावनया नश्येत् । अतः आत्मनः देहादिरिक्ततां तद्वत् जगतः मिथ्यात्वं अनिशं भावयेत् ॥

(க-ம்.)

ஏதனால் அவ்விபரீதபாவனை தத்துவத்தின் பாவனையினால் நாசமாகின்றதோ, அதனால் ஆத்மாவின் தேகாதிகளுக்கு வேறாந்தன்மையினையும் அது போல ஜகத்தின் மித்தியாத்தன்மையினையும் நிரந்தரம் பாவனை செய்ய வேண்டும்.

(வி-ம்.)

அத்தேகாதிகளிலுள்ள ஆத்மத்தன்மையின் புத்தியும் ஜகத்திலுள்ள சத்தியத்தன்மையின் புத்தியுமாகிய விபரீதபாவனை ஆத்மாவின் தேகத்திற்குவேறாந்தன்மையும் ஜகத்தின் மித்தியாத்தன்மையுமாகிய உண்மைப் பொருளான தத்துவத்தின் நிரந்தரம் தியானித்தலாகிய பாவனையினால் நாசமாகின்றது. அதனால் ஆத்மாவின் தேகமுதலியவற்றிற்கு வேறாந்தன்மையினையும் தேகாதிவடிவ ஜகத்தின் மித்தியாத்தன்மையினையும் முமுக்ஷு எப்போதும் பாவனை செய்யவேண்டும் என்பது கூறப்பட்டது. (கக௨)

கடு. விபரீதபாவனையை நிவிருத்திக்கும் தியானத்தில் ஜபமுதலியவற்றினைப் போல நியமத்தினது அபேக்ஷையின் பிரசிநம்.

[ககஎ] किं मंत्रजपवन्मूर्तिध्यानवद्वात्मभेदधीः ।
जगन्मिथ्यात्वधीश्चात्र व्यावर्त्या स्यादुतान्यथा ॥ ११३ ॥

(அ-கை.)

அந்த ஆத்மாவின் தேகாதிகளுக்கு வேறாந்தன்மை ஜகத்தின் மித்தியாத்தன்மை என்பவற்றின் பாவனையாகிய அதன்கண் ஜபமுதலியவற்றினைப்போல நியமத்தின் அபேக்ஷை உண்டா இல்லையா? என்று வாதி கேட்கின்றான்:—

अत्र आत्मभेदधीः च जगन्मिथ्यात्वधीः मंत्रजपवत् किं वा मूर्तिध्यानवत् उत अन्यथा व्यावर्त्या स्यात् ॥

(க-ம்.)

இங்கு ஆத்மாவினது பேதத்தின் புத்தியும், ஜகத்தின் மித்தியாத்தன்மையின் புத்தியும் என்னை? மந்திரஜபத்தினைப்போலவாவது அல்லது மூர்த்தித்தியானத்தினைப்போலவாவது செய்யத்தக்கனவா? அல்லது வேறுவகையாகச் செய்யத்தக்கனவா?

(வி-ம்.)

ஆத்மாவின் தேகாதிகளின் வேறும் புத்தியும் ஜகத்தினது மித்தியாத் தன்மையின் அநுசந்தானமும் முன் கூகூகூ-வது சுலோகத்திற் சொல்லப் பட்டிருக்கின்றது. அது மந்திரஜபத்தினைப்போலவாவது தேவதையின் தியானமுதலியவற்றினைப் போலவாவது நியமமாக அநுஷ்டானஞ்செய்யத் தக்கதா? அல்லது இலௌகிக வியவகாரத்தினைப்போல நியமமில்லாமலும் செய்யத்தக்கதா? இது வாதியின் பிரசினம். (ககக)

கக. திருஷ்டாந்தத்தோடு நியமத்தினின்மையைக் கூறுதல்வடிவ உத்தரம்.

[கூகூஅ] अन्यथेति विजानीहि दृष्टार्थत्वेन भुक्तिवत् ।
बुभुक्षुर्जपवद्भुंक्ते न कश्चिन्नियतः क्वचित् ॥ ११४ ॥

(அ-கை.)

சுலோகம் கூகூகூ-ல் கூறிய தத்துவபாவனைவடிவ சிந்தியாசனம் திருஷ்டபலமுடைய (பிரத்தியக்ஷபலமுடைய)தா யிருத்தலால் இதில் ஓர் நியமமு மில்லை என்று கூறுகின்றார் :—

अन्यथा इति विजानीहि ॥

(சு-ம்.)

சுலோகம் கூகூகூ-ல் கூறிய தத்துவபாவனை வேறுவிதமாக அதாவது நியமமின்றிச் செய்யத்தக்கதாம்.

(அ-கை.)

அதில் ஏதுவைக் கூறுகின்றார் :—

दृष्टार्थत्वेन ॥

(சு-ம்.)

பிரத்தியக்ஷபலமுடையதா யிருத்தலால்.

(அ-கை.)

அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

भुक्तिवत् ॥

(சு-ம்.)

போஜனத்தைப்போல.

(அ-கை.)

பிரத்தியக்ஷபயனுடைய போஜனத்திலும் சுருதி ஸ்மிருதிகளாற் சொல் லப்பட்ட நியமம் காணப்படுகின்றதே என் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

मुमुक्षुः कश्चित् क्वचित् जपवत् नियतः न भुंक्ते ॥

(சு-ம்.)

போஜனஞ்செய்ய விரும்பிய எந்தப் புருஷனும் எங்கும் ஜபத்தினைப் போல நியமமுடையவனாய்ப் போஜனஞ்செய்வதில்லை.

(வி-ம்.)

பசிநிவிருத்தியின்பொருட்டுப் போஜனஞ்செய்ய விரும்பிய புருஷன் ஜபஞ்செய்கிறவனைப்போல நியமமாகப் போஜனஞ்செய்கிறதில்லை. ஆனால் எப்படிப் பசியின் பாதை சாந்தியாகுமோ அப்படிப் போஜனஞ் செய்கின்றானென்பது பொருள். (௧௧௪)

[௬௩௩] अश्नाति वा न वाश्नाति भुंक्ते वा स्वेच्छयान्यथा ।
येन केन प्रकारेण क्षुधामपनिनीषति ॥ ११५ ॥

(அ-கை.)

முன் ௬௩௮-ல் கூறிய திருஷ்டாந்தத்தினையே வர்ணிக்கின்றார்:—

अश्नाति वा न वा अश्नाति वा अन्यथा स्वेच्छया भुंक्ते । येन केन प्रकारेण क्षुधां अपनिनीषति ॥

(சு-ம்.)

பசியுடைய புருஷன் போஜனஞ்செய்கின்றான்; அல்லது போஜனஞ் செய்கிறதில்லை; அல்லது வேறுவகையாகத் தனது இச்சையின்படி புசிக்கின்றான். எந்தெந்தவிதத்தினாலும் போஜன இச்சையாகிய பசியினை நிவிருத்திக்க விரும்புகிறான்.

(வி-ம்.)

பசியுடைய புருஷன் அன்னமிருந்தால் ஒருகால் போஜனஞ்செய்கின்றான்; அல்லது அன்னமில்லையாயின் பசியின்வருத்தத்தினை மறக்கச்செய்யும் சூதுமுதலிய செய்கைகளால் போஜனஞ்செய்யாமலே காலத்தைப் போக்குகிறான்; அல்லது வேறுவகையாக அதாவது உட்கார்ந்துகொண்டேனும் நடந்துகொண்டேனும் உறங்கிக்கொண்டேனும் தனது இச்சையினால் போஜனஞ்செய்கின்றான். இவ்வாறு எந்தெந்தவிதத்தினாலும் அக்காலசம்பந்தியான பசியின் வாதையாகிய துன்பத்தினை ஒழிக்க விரும்புகின்றான். இங்கு இஃது இரகசியமாம்:—பசியின் வாதையின் நிவிருத்திவடிவ திருஷ்டபலத்தின்பொருட்டுப் போஜனமே செய்யத்தக்கதாம். சுருதிஸ்மி

ருதிகளிற் கூறிய நியமமோ பரலோகத்திற் கேதுவாம்; பசியினாற்றோன்றிய துக்கநிவர்த்திக்கு ஏதுவன்று. (௧௧௫)

௧எ. ஜபமுதலியவற்றில் போஜனமாகிய திருஷ்டாந்தத்திலும் விலக்ஷணத் தன்மையிருத்தல்.

[௭00] नियमेन जपं कुर्यादकृतौ प्रत्यवायतः ।
अन्यथाकरणेऽनर्थः स्वरवर्णविपर्ययात् ॥ ११६ ॥

(அ-கை.)

ஜபமுதலியவற்றிலுள்ள போஜனத்தின் வேற்றுமையைக் காட்டுகின்றார்:—

नियमेन जपं कुर्यात् ॥

(சு-ம்.)

நியமமாக ஜெபத்தினைச் செய்க.

(அ-கை.)

நியமமாக ஜபஞ்செய்தலாகிய அதில் காரணத்தைக் கூறுகின்றார்:—

अकृतौ प्रत्यवायतः ॥

(சு-ம்.)

ஜபம் செய்யாமையிற் பாபம் உண்டாகுதலால்.

(அ-கை.)

இவ்வாறு ஜபஞ் செய்யாமையிற் பிரத்தியவாயம் அதாவது பாபம் உண்டாகுக. ஜபத்தை வேறுவிதமாகச் செய்தலிலோ அந்தப் பிரத்தியவாயம் இல்லையே என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

अन्यथाकरणे स्वरवर्णविपर्ययात् अनर्थः ॥

(சு-ம்.)

ஜபம் வேறுவகையாகச் செய்தலில் ஸ்வர எழுத்துக்களின் விபரீதத்தால் அநர்த்தம் உண்டாகின்றது.

(வி-ம்.)

"எடுத்தல் படுத்தல்முதலியனவாகச் சொல்லப்பட்ட சுவரமாவது அல்லது எழுத்தாவது குறைந்த மந்திரம் எதுவோ அது மித்தையான உச்சாரத்தை யடைந்து அவ்விரும்பியபொருளைக் கூறுகிறதில்லை. அந்த வாக்கு

வடிவ வச்சிரம் எஜமானனை நாசஞ்செய்கின்றது. இந்திரன்சத்துருவாகிய விருத்திராசுரன் * ௩௬. சுவரத்தின் குற்றத்தால் நாசமடைந்ததுபோல.'' என்று சாஸ்திரத்திற் கூறப்பட்டிருத்தலால் ஜபத்தை நியமமின்றிச் செய்தலில் சுவரவர்ணங்களின் மாறுபாட்டால் அநர்த்தமுண்டாகின்றதென்பது தாற்பரியம். (௧௧௬)

௩௭. பசியினைப்போல விபரீதபாவனை திருஷ்டதுக்கத்திற்கு ஏதுவாதலோடு அதனை நிவர்த்திக்கும் தியானத்தின் அநுஷ்டானத்தில் நியமமின்மையும்.

[எ0௧] क्षुधेव दृष्टबाधाकृद्विपरीता च भावना ।
जेया केनाप्युपायेन नास्त्यत्रानुष्टितेः क्रमः ॥ ११७ ॥

(அ-கை.)

அப்படியானால் பசியின் துன்பம் பிரத்தியக்ஷதுன்பத்திற் கேதுவாயிருத்தலின் அதை நிவர்த்திக்கும்பொருட்டு நியமமின்றியும் போஜனஞ்செய்யத்தக்கதாம். விபரீதபாவனையோ அத்தன்மையது அதாவது திருஷ்டதுன்பத்திற்கு ஏதுவாவது ஆகாமையின் அவ்விபரீதபாவனையை நிவர்த்திக்கும் தியானம் அதிருஷ்டபலத்தின் பொருட்டு நியமமாக அநுஷ்டிக்கத்தக்கதாமே என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

क्षुधा इव विपरीता भावना च दृष्टबाधाकृत् । केन अपि उपायेन जेया । अत्र अनुष्ठितेः क्रमः न अस्ति ॥

(சு-ம்.)

பசியினைப்போல விபரீதபாவனையும் பிரத்தியக்ஷதுக்கத்தினை யுண்டு பண்ணுவதாம். அது எவ்வுபாயத்தினாலும் ஜயிக்கத்தக்கதாம். இதனை ஜயித்தலில் அநுஷ்டானத்தின் கிரம மில்லை.

(வி-ம்.)

விபரீதபாவனை துக்கத்திற் கேதுவாதல் அநுபவசித்தமாயிருத்தலின் அதனை நிவிருத்திக்கும் தியானம் திருஷ்டதுக்கத்தின் நிவிருத்திவடிவ திருஷ்டப்பலத்தின்பொருட்டு நியமமின்றி அநுஷ்டிக்கத்தக்கதாம் என்பது தாற்பரியம். (௧௧எ)

---

* ௩௬. "இந்திர! சத்துருவே! விருத்தியை யடை." என்று துவஷ்டா என்னும் பெயருடைய சூரியனால் உச்சரிக்கப்பட்ட மந்திரத்தில் இந்திர னென்னுஞ் சொல்லில் உச்சஸ்வரத்தினையும் சத்துரு வென்னும் பதத்தில் நீசஸ்வரத்தினையும் உச்சரித்தலாகிய அபராதத்தால் அந்த விருத்திராசுரனுக்கு இந்திரனே சத்துருவானன்.

ருதிகளிற் கூறிய நியமமோ பரலோகத்திற் கேதுவாம்; பசியொழிதலென்னிய துக்கநிவர்த்திக்கு ஏதுவன்று. (௧௧௫)

௧௭. ஜபமுதலியவற்றில் போஜனமாகிய திருஷ்டாந்தத்தினும் விலக்ஷணத் தன்மையிருத்தல்.

[௭௦௦] नियमेन जपं कुर्यादकृतौ प्रत्यवायतः ।
अन्यथाकरणेऽनर्थः स्वरवर्णविपर्ययात् ॥ ११६ ॥

(அ-கை.)

ஜபமுதலியவற்றிலுள்ள போஜனத்தின் வேற்றுமையைக் காட்டுகின்றார்:—

नियमेन जपं कुर्यात् ॥

(சு-ம்.)

நியமமாக ஜெபத்தினைச் செய்க.

(அ-கை.)

நியமமாக ஜபஞ்செய்தலாகிய அதில் காரணத்தைக் கூறுகின்றார்:—

अकृतौ प्रत्यवायतः ॥

(சு-ம்.)

ஜபம் செய்யாமையிற் பாபம் உண்டாகுதலால்.

(அ-கை.)

இவ்வாறு ஜபஞ் செய்யாமையிற் பிரத்தியவாயம் அதாவது பாபம் உண்டாகுக. ஜபத்தை வேறுவிதமாகச் செய்தலிலோ அந்தப் பிரத்தியவாயம் இல்லையே என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

अन्यथाकरणे स्वरवर्णविपर्ययात् अनर्थः ॥

(சு-ம்.)

ஜபம் வேறுவகையாகச் செய்தலில் ஸ்வர எழுத்துக்களின் விபரீதத்தால் அநர்த்தம் உண்டாகின்றது.

(வி-ம்.)

« எடுத்தல் படுத்தல்முதலியனவாகச் சொல்லப்பட்ட சுவரமாவது அல்லது எழுத்தாவது குறைந்த மந்திரம் எதுவோ அது மித்தையான உச்சாரத்தை யடைந்து அவ்விரும்பியபொருளைக் கூறுகிறதில்லை. அந்த வாக்கு

வடிவ வச்சிரம் எஜமானனை நாசஞ்செய்கின்றது. இந்திரன்சத்துருவாகிய விருத்திராசுரன் *ஙகூ. சுவரத்தின் குற்றத்தால் நாசமடைந்ததுபோல, என்று சாஸ்திரத்திற் கூறப்பட்டிருத்தலால் ஜபத்தை நியமமின்றிச் செய்தலில் சுவரவர்ணங்களின் மாறுபாட்டால் அநர்த்த முண்டாகின்றதென்பது தாற்பரியம். (கககூ)

சஎ. பசியினைப்போல விபரீதபாவனை திருஷ்டதுக்கத்திற்கு ஏதுவாதலோடு அதனை நிவர்த்திக்கும் தியானத்தின் அநுஷ்டானத்தில் நியமமின்மையும்.

[எ0க] क्षुधेव दृष्टबाधाकृद्विपरीता च भावना ।
जेया केनाप्युपायेन नास्त्यत्रानुष्ठितेः क्रमः ॥ ११७ ॥

(அ-கை.)

அப்படியானால் பசியின் துன்பம் பிரத்தியக்ஷதுன்பத்திற் கேதுவாயிருத்தலின் அதை நிவர்த்திக்கும்பொருட்டு நியமமின்றியும் போஜனஞ் செய்யத்தக்கதாம். விபரீதபாவனையோ அத்தன்மையது அதாவது திருஷ்டதுன்பத்திற்கு ஏதுவாவது ஆகாமையின் அவ்விபரீதபாவனையை நிவர்த்திக்கும் தியானம் அதிருஷ்டபலத்தின் பொருட்டு நியமமாக அநுஷ்டிக்கத்தக்கதாமே என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

क्षुधा इव विपरीता भावना च दृष्टबाधाकृत् । केन अपि उपायेन जेया । अत्र अनुष्ठितेः क्रमः न अस्ति ॥

(சு-ம்.)

பசியினைப்போல விபரீதபாவனையும் பிரத்தியக்ஷதுக்கத்தினை யுண்டு பண்ணுவதாம். அது எவ்வுபாயத்தினாலும் ஜயிக்கத்தக்கதாம். இதனை ஜயித்தலில் அநுஷ்டானத்தின் கிரம மில்லை.

(வி-ம்.)

விபரீதபாவனை துக்கத்திற் கேதுவாதல் அநுபவசித்தமா யிருத்தலின் அதனை நிவிருத்திக்கும் தியானம் திருஷ்டதுக்கத்தின் நிவிருத்திவடிவ திருஷ்டப்பலத்தின்பொருட்டு நியமமின்றி அநுஷ்டிக்கத்தக்கதாம் என்பது தாற்பரியம். (ககஎ)

---

*ஙகூ. "இந்திர! சத்துருவே! விருத்தியை யடை." என்று துவஷ்டா என்னும் பெயருடைய ருரியனால் உச்சரிக்கப்பட்ட மந்திரத்தில் இந்திர னென்னுஞ் சொல்லில் உச்சஸ்வரத்தினையும் சத்துரு வென்னும் பதத்தில் நீசஸ்வரத்தினையும் உச்சரித்தலாகிய அபராதத்தால் அந்த விருத்திராசுரனுக்கு இந்திரனே சத்துருவானான்.

௧௧. விபரீதபாவனையின் நிவிருத்தியோடு ௧௧0-வது ச்லோகத்திற் கூறிய உபாயத்தை அறுவதித்தல்.

[௭0௨] उपायः पूर्वमेवोक्तस्तच्चिंताकथनादिकः ।
एतदेकपरत्वेऽपि निर्बन्धो ध्यानवन्न हि ॥ ११८ ॥

(அ-கை.)

அப்போது விபரீதபாவனையை நிவர்த்திக்கும் உபாயம் காட்டத்தக்கதாமென் றாசங்கித்து அவ்வுபாயம் முன் ௧௧0-வது ச்லோகத்திற் காட்டப் பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார் :—

उपायः तच्चिंताकथनादिकः पूर्वं एव उक्तः ॥

(சு-ம்.)

அவ்வுபாயம் அப்பிரஹ்மத்தைச் சிந்தித்தல் சொல்லுதல்முதலியவடிவின தென்று முன்னமே சொல்லப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

அப்படியானால் விபரீதபாவனையை நிவர்த்திக்கும் உபாயத்தில் "கிழக்குத்திசைநோக்கி உட்காரவேண்டும்." என்றல்முதலிய நியமமிருக்கலாகாது. ஆனால் மூர்த்திமுதலியவற்றின் தியானத்தினைப்போல இவ்வொன்றன் தற்பரத்தன்மைவடிவ ஏகாக்கிரத்தன்மையின் நியமமிருக்கின்றதே என்று ஆசங்கித்துக் கூறுகின்றார் :—

एतदेकपरत्वे अपि ध्यानवत् निर्बंधः न हि ॥

(சு-ம்.)

இவ்வொன்றன் தற்பரத்தன்மையிலும் தியானத்தினைப்போல நிர்ப்பந்தம் அதாவது சித்தத்தின் நிரோத மில்லை. (௧௧௮)

௨0. தியானத்தின் சொரூபமும் அதில் மனத்தின் நிரோதமும்.

[௭0௩] मूर्तिप्रत्ययसांतत्यमन्यानंतरितं धियः ।
ध्यानं तत्रातिनिर्बन्धो मनसश्चंचलात्मनः ॥ ११९ ॥

(அ-கை.)

அப்படியானால் தியானம், தியானிக்கப்படுவதனைச் சிந்தித்தல் மாத்திர வடிவினதா யிருத்தலின் அத்தியானத்தில் நிர்ப்பந்தம் யாதென் றாசங்கித்

து தியானத்தில் நிப்பந்தத்தினைக் காட்டுதற்குத் தியானத்தின் சொரூபத்தினை முதலில் கூறுகின்றார் :—

धियः मूर्तिप्रत्ययसांतत्यं अन्यानंतरितं ध्यानम् ॥

(சு-ம்.)

புத்தியினது மூர்த்தியைக் கோசரிக்கும் விருத்தியின் இடையறாத்தன்மை எதுவோ அது அந்நியவிருத்திகளால் இடையின்றியதாய்த் தியான மெனப்படுகின்றது.

(வி-ம்.)

புத்தியின் சம்பந்தியாகிய தேவதாதிமூர்த்தியினை விஷயஞ்செய்யும் விருத்தி எவையோ அவற்றின் இடையீடின்றியதன்மை மற்றைய வேற்றினவிருத்திகளால் மறைக்கப்படாததாய்த் தியான மெனப்படுகின்றது.

(அ-கை.)

இவ்வாறு தியானத்தின் சொரூபத்தினை நிரூபித்து அதில் நிப்பந்தத்தினைக் காட்டுகின்றார் :—

तत्र चंचलात्मनः मनसः अतिनिर्बंधः ॥

(வி-ம்.)

அத்தியானத்தில் சஞ்சலவடிவ மனதிற்கு மிக்க நிர்ப்பந்தம் அதாவது நிரோத முண்டாகின்றது.

(வி-ம்.)

எப்படி எப்போதும் சஞ்சரிக்கும் சுபாவமுடைய யானை குதிரைமுதலியவற்றிற்கு ஓரிடத்தில் ஸ்தம்பமுதலியவற்றிற் கட்டுதலால் நிரோதமுண்டாகின்றதோ, அதுபோலத் தியானத்தில் சஞ்சலமாகிய மனத்திற்கும் நிரோத முண்டாகின்றது என்பது தாற்பரியம். (௧௧௯)

௨௧. மனதின் சஞ்சலத்தன்மைமுதலியவற்றிற் கீதையின் வாக்கியம்.

[௭0௪] चंचलं हि मनः कृष्ण प्रमाथि बलवद्दृढम् ।
तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥ १२० ॥

(அ-கை.)

மனதின் சஞ்சலத்தன்மைமுதலியவற்றில் கீதையின் ஆறுவது அத்தியாயத்திலுள்ள ௩௪-வது சுலோகவடிவ வாக்கியத்தினைப் பிரமாணமாக்குகின்றார் :—

कृष्ण हि मनः चंचलं प्रमाथि बलवत् दृढम् तस्य निग्रहं वायोः इव अहं सुदुष्करं मन्ये ॥

(சு-ம்)

அர்ச்சுனன் சொல்லுகின்றான்:-“ கிருஷ்ணபகவானே! எதனால் மனம் சஞ்சலமுள்ளதும் சோர்வுடையதும் பலமுடையதும் திடமானதுமாயிருக்கின்றதோ அதனால் அம்மனதின் நிக்கிரகம் வாயுவின் நிக்கிரகத்தினைப்போலச் செய்தற்கரியதென மதிக்கின்றேன்.”

(வி-ம்.)

கிருஷ்ணபகவானே! எதனால் இம்மனம் சஞ்சலமாயும் * ௬௭. பிரமாதியாயும், நிக்கிரகஞ் செய்யத்தகாத சாமர்த்தியமுடையதாயும், சத்த சத்து விஷயங்களில் பற்றுவதாகிய திடமுள்ளதாயும் இருக்கின்றதோ அதனால் மீட்கக்கூடியதன்று. ஆதலால் அம்மனதின் நிக்கிரகம் வாயுவின் நிக்கிரகத்தினைப்போல வருந்திச் செய்யத்தக்கதாம். (௧௨0)

௨௨. மனம் வருத்தத்தால் அடக்கப்படுவதாவதில் வாசிஷ்டவாக்கியம்.

[௭0௫] अप्यब्धिपानान्महतः सुमेरून्मूलनादपि ।
अपि वन्ह्यशनात्साधो विषमश्चित्तनिग्रहः ॥ १२१ ॥

(அ-கை.)

மனம் வருத்தத்தால் நிக்கிரகிக்கத்தக்கதா மென்பதில் வாசிஷ்டத்தின் வாக்கியத்தினையும் பிரமாணமாக்குகின்றார் :—

साधो । अब्धिपानात् अपि महतः सुमेरोः उन्मूलनात् अपि वन्ह्यशनात् अपि चित्तनिग्रहः विषमः ॥

(சு-ம்.)

“சாதுவாகிய ராமசந்திரா! சமுத்திரத்தைப் பருகுவதினும், மகாமேருவைப் பிடுங்குவதினும், அக்கினியைப் புசிப்பதினும் சித்தத்தை அடக்குதல் கடினமாம்.” (௧௨௧)

௨௩. பிரஹ்மாப்பியாசம் ௭0௩-வது சுலோகத்திற் கூறிய லக்ஷணமுடைய தியானத்தினும் வேறுதல்.

[௭0௬] कथनादौ न निर्बन्धः शृंखलाबद्धदेहवत् ।
किंत्वनंतेतिहासाद्यैर्विनोदो नाट्यवद्धियः ॥ १२२ ॥

---

* ௬௭. மிகுதியாக மதனஞ்செய்யும் சுபாவமுடையதாம் அதாவது புருஷனுக்கு வியாகூலத்தன்மைக்குக் காரணமாம்.

(அ-கை.)

பிரகிருதத்தில் அதாவது கூகூ0-வது-சுலோகத்தினின்றும் ஆரம்பிக்கப் பட்ட விபரீதபாவனையை நிவர்த்திக்கும் நிதித்தியாசனத்துள்ள அந்தஎ0கூ-வதிற் கூறிய தியானத்திலும் விலக்ஷணத்தன்மையைக் காட்டுகின்றார்:—

कथनादौ शृंखलाबद्धदेहवत् निर्बंधः न ॥

(சு-ம்.)

சொல்லுதல்முதலியவற்றில் விலங்கினாற் றளையப்பட்ட தேகத்தினைப் போல நிர்ப்பந்தமில்லை.

(வி-ம்.)

சங்கிலியினாற் கட்டப்பட்ட தேகத்திற்கு எப்படி நிர்ப்பந்த முண்டாகின்றதோ அப்படிச் சொல்லுதல்முதலியவற்றில் நிர்ப்பந்தமில்லை யென்பது பொருள். இங்கே முதலியவென்னுஞ் சொல்லால் அந்தப் பிரஹ்மத்தின் சிந்தனைமுதலியனவும் கொள்ளப்படும்.

(அ-கை.)

பிரஹ்மத்தைச் சொல்லுதல் சிந்தித்தல் முதலியவற்றில் நிரோதத்தின் அபாவமாத்திரம் இருக்கின்ற தென்ப தில்லை; ஆனால் மாறான புத்திக்கு விநோத முண்டாகின்ற தென்று கூறுகின்றார் :—

किंतु अनंतेतिहासाद्यैः धियः विनोदः ॥

(சு-ம்.)

ஆனால் என்னை? அநந்த இதிகாசமுதலியவற்றால் புத்திக்கு விநோத முண்டாகின்றது.

(வி-ம்.)

முற்காலத்து மகாபுருஷர்களது கதையாகிய இதிகாசம் எதுவோ அதனை ஆதியாகவுடைய லௌகிககதை அநுகூலயுக்தி திருஷ்டாந்தம் என்பவற்றைக் காட்டுதல்முதலியன எவையோ அவை இதிகாசமுதலியனவாம். அநந்த இதிகாசமுதலியன எவையோ அவை அநந்த இதிகாசமுதலியன வெனப்படும். அவ்வநந்த இதிகாசமுதலியவற்றால் புத்திக்கு விநோத முண்டாகின்றது.

(அ-கை.)

அதில் அதாவது அச்சொல்லுதல்முதலியவற்றில் ஆகத்தக்க புத்தியின் விநோதத்தில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

नाट्यवत् ॥

(க-ம்.)

நாட்டியத்தினைப்போல அதாவது ஆடுங்தொழிலினைப் பார்த்தல்போல என்பது பொருள். (கஉஉ)

உச. பிரஹ்மாப்பியாசத்தில் பிரவிருத்தித்தவனுக்குக் கதைமுதலிய வற்றால் பிரஹ்மத்தில் தற்பரமாதல் கெடாமை.

[எ0எ] चिदेवात्मा जगन्मिथ्येत्यत्र पर्यवसानतः ।
निदिध्यासनविक्षेपो नेतिहासादिभिर्भवेत् ॥ १२३ ॥

(அ-கை.)

அப்படியானால் கதைமுதலியவற்றாலும் அவ்வொன்றன் அதாவது பிரஹ்மத்தின் தற்பரத்தன்மைவடிவ நிதித்தியாசனத்திற்குக் கேடுண்டாகுமேயென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

"आत्मा चित् एव । जगत् मिथ्या" इति अत्र पर्यवासानतः इतिहासादिभिः निदिध्यासनविक्षेपः न भवेत् ॥

(க-ம்.)

"சேதனவடிவமே ஆத்மா. ஜகத்து மித்தை." என்னும் அர்த்தத்தில் முடிதலால் இதிகாசமுதலியவற்றால் நிதித்தியாசனத்திற்கு விக்ஷேபமுண்டாகிறதில்லை.

(வி-ம்.)

ஆத்மா சேதனமாத்திரவடிவினதாய்; தேகாதிவடிவினதன்று. தேகாதிவடிவ ஜகத்து மித்தையாமென்னும் அர்த்தத்தில் இதிகாசமுதலியவற்றிற்குத் தாற்பரிய மிருத்தலில் இதிகாசமுதலியவற்றால் இவ்வொன்றன்கண்ணதாந்தன்மைச் சப்தத்திற்கு வாச்சியமான நிதித்தியாசனத்திற்குக் கேடுண்டாகாது என்பது பொருள். (கஉங)

உரு. கிருஷிமுதலியவற்றாலும் காவிய நாடகமுதலியவற்றாலும் தத்துவஸ்மரணத்தின் விரோதம்.

[எ0அ] कृषिवाणिज्यसेवादौ काव्यतर्कादिकेषु च ।
विक्षिप्यते प्रवृत्त्या धीस्तैस्तत्त्वस्मृत्यसंभवात् ॥ १२४ ॥

(அ-கை.)

அப்படியானால் இதிகாசங்கள் அங்கீகரிக்கவே உழவுமுதலியவற்றின் அடைவு உண்டாகுமே என்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

कृषिवाणिज्यसेवादौ च काव्यतर्कादिकेषु प्रवृत्त्या धीः विक्षिप्यते । तैः तत्त्वस्मृत्यसंभवात् ॥

(சு-ம்.)

கிருஷி வாணிஜ்யம் சேவைமுதலியவற்றிலும், காவியம் தர்க்கமுதலிய வற்றிலும் பிரவிருத்தித்தலால் புத்தி விக்ஷேபத்தை யடைகின்றது; ஏனெனின், அக்கிருஷிமுதலியவற்றால் தத்துவத்தின் ஸ்மிருதி சம்பவியாமையால். (கஉ௪)

உரு. போஜனமுதலியவற்றில் தத்துவஸ்மரணம் விரோதியாமை.

[எ0ரு] अनुसंदधतैवात्र भोजनादौ प्रवर्तितुम् ।
शक्यतेऽत्यंतविक्षेपाभावादाशु पुनः स्मृतेः ॥ १२५॥

(அ-கை.)

அப்படியானால் கிருஷிமுதலியன தத்துவஸ்மரணத்திற்கு விரோதிகளாதலின் விடத்தக்கனவாகவே போஜனமுதலியனவும் அத்தன்மையவாகலின் அவையும் விடத்தக்கனவேயா மென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

अनुसंदधत एव अत्र भोजनादौ प्रवर्तितुं शक्यते ॥

(சு-ம்.)

தத்துவாநுசந்தானஞ் செய்யும் புருஷனால் இப்போஜனமுதலியவற்றில் பிரவிருத்தி செய்யக்கூடியதேயாம்.

(அ-கை.)

ஏனெனக் கூறுகின்றார் :—

अत्यंतविक्षेपाभावात् ॥

(சு-ம்.)

போஜனமுதலியவற்றின் பிரவிருத்தியினால் அத்தியந்தவிக்ஷேப மில்லாமையினால்.

(அ-கை.)

போஜனமுதலியவற்றின் பிரவிருத்தியினால் விக்ஷேபமின்மையும் எதனாலெனக் கூறுகின்றார் :—

पुनः आशु स्मृतेः ॥

(சு-ம்.)

போஜனமுதலியவற்றின்பின் தற்காலம் ஸ்மிருதியிருத்தலால். (கஉரு)

[௭௧0] तत्त्वविस्मृतिमात्रान्नानर्थः किंतु विपर्ययात् ।
विपर्येतुं न कालोऽस्ति झटिति स्मरतः क्वचित् ॥ १२६ ॥

(அ-கை.)

அப்படியானல் போஜனதிகாலங்களில் விக்ஷேபங்களில்லாதிருக்கிலும் தத்துவத்தின் மறதி இருத்தலால் புருஷார்த்தத்திற்கு ஹாநியுண்டாகுமேயென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

तत्त्वविस्मृतिमात्रात् अनर्थः न ॥

(சு-ம்.)

சிதாத்மா தேகாதிகளுக்கு வேறாதலும் ஜகத்தின் மித்யாத்தன்மையுமாகிய தத்துவத்தின் மறதிமாத்திரத்தால் புருஷார்த்தத்தின் கேடாகிய அநர்த்தம் உண்டாகாது.

(அ-கை.)

அப்போது எதனால் அநர்த்தம் உண்டாகின்றதெனக் கூறுகின்றார் :—

किं तु विपर्ययात् ॥

(சு-ம்.)

ஆனால் விபரீதஞானத்தால் அநர்த்தம் உண்டாகின்றது.

(அ-கை.)

அப்படியானல் போஜனதி காலங்களில் தத்துவத்தின் மறதியுண்டாய் விபரீதஞானமும் உண்டாகுமேயென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

झटिति स्मरतः विपर्येतुं क्वचित् कालः न अस्ति ॥

(சு-ம்.)

பின் அதேகாலத்தில் ஸ்மரணஞ்செய்யும் முமுக்ஷுவிற்கு விபரியயம் உண்டாதற்பொருட்டு யாதொரு அவகாசமு மில்லை. (கஉசு)

உ௭. நியாயமுதலியவற்றை அப்பியசிக்கப் பிரவிர்த்தித்தவனுக்குத் தத்துவஸ்மரணம் சம்பவியாமை.

[௭௧௧] तत्त्वस्मृतेरवसरो नास्त्यन्याभ्यासशालिनः ।
प्रत्युताभ्यासघातित्वाद्बलात्तत्त्वमुपेक्ष्यते ॥ १२७ ॥

(அ-கை.)

அப்படியானல் போஜனமுதலியவற்றிற் பிரவர்த்தித்த புருஷனைப் போலத் தர்க்கசாஸ்திரமுதலியவற்றின் அப்பியாசத்தில் பிரவிருத்தித்த

புருடனுக்கும் தத்துவத்தின் ஸ்மரணம் ஏன் உண்டாகாதென் றுசங்கித்துக் கூறுகின்றார்:—

अन्याभ्यासशालिनः तत्त्वस्मृतेः अवसरः न अस्ति ॥

(சு-ம்.)

அந்நிய நியாயசாஸ்திரத்தின் அப்பியாசமுடைய புருஷனுக்குத்தத்துவஸ்மிருதியின் அவசர மில்லை.

(அ-கை.)

நியாயசாஸ்திரமுதலியவற்றின் அப்பியாசமுடைய புருஷனுக்குக் கேவலதத்துவாநுசந்தானத்தினது அவசரத்தின் இன்மையே உள தென்பதில்லை. ஆனால் காவியம் தர்க்கமுதலியவற்றின் அப்பியாசம் தத்துவாப்பியாசத்திற்கு விரோதியா யிருத்தலால் காவிய தர்க்கமுதலியவற்றை அப்பியசிக்கும் அக்காலத்தில் ஸ்மரணமுண்டாகியும் தத்துவம் வலிந்து மறக்கப்படுகின்றதென்று கூறுகின்றார்:—

प्रत्युत अभ्यासघातित्वात् बलात् तत्त्वं उपेक्ष्यते ॥

(சு-ம்.)

காவியமுதலியவற்றின் அப்பியாசம் மாறாகத் தத்துவாப்பியாசத்தைக் கெடுப்பதா யிருத்தலின் வலியினால் தத்துவம் உபேக்ஷிக்கப்படுகின்றது.()

உஅ. நியாயமுதலியவற்றின் அப்பியாசம் தத்துவஸ்மிருதிக்கு விரோதியாதலில் சுருதிப்பிரமாணம்,

[எகஉ] तमेवैकं विजानीथ ह्यन्या वाचो विमुंचथ ।
इति श्रुतं तथाऽन्यत्र वाचो विग्लापनं त्विति ॥ १२८ ॥

(அ-கை.)

காவியம் தர்க்கமுதலியவற்றின் அப்பியாசம் தத்துவாநுசந்தானத்திற்கு விரோதியா யிருத்தலால் அது விடத்தக்கதா மென்பதில் பிரமாணமாகுதலால் "“तमेवैकं जानीथ आत्मानमन्या वाचो विमुंचथ अमृतस्यैष सेतुः அவ்வொரு ஆத்மாவினையே அறி, மற்ற வாக்குகளை விடு, இவ்வாத்மா மரணத்தன்மையின்றிய மோக்ஷமாகிய அமிர்தத்திற்குச் சேதுவாம்." என்னுஞ் சுருதிவாக்கியத்தினை அர்த்தத்தினால் படிக்கின்றார்:—

"तम् एव एकं विजानीथ हि अन्याः वाचः विमुंचथ" इति श्रुतम् ॥

(சு-ம்.)

"அவ்வொன்றனையே அறிக, மற்றவாக்குகளை விடுக" என்று சுருதியில் கேட்கப்பட்டிருக்கின்றது.

(அ-கை)

"नानुध्यायाद्बहून् शब्दान् वाचो विग्लापनं हि तत् ॥ அநேக சப்தங்களைச் சிந்திக்கலாகாது. அது வாக்கின் வருத்தத்திற்கு ஏதுவாம்." என்னும் வாக்கியமும் கேட்கப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

तथा अन्यत्र वाचः विग्लापनं तु इति ॥

(சு-ம்.)

அவ்வாறு வேறு சுருதியில் "வாக்கிற்கு வருத்தமாம்" என்று கேட்கப் பட்டிருக்கின்றது. (௧௨அ)

௨௯. வேதாந்தத்திற்கு வேறான சாஸ்திர அப்பியாசத்தில் துராக்கிரகமுடைய வாதியைக் குறித்த விடை.

[௭௧௯] आहारादि त्यजन्नैव जीवेच्छास्त्रांतरं त्यजन् ।
किं न जीवसि येनैवं करोष्यत्र दुराग्रहम् ॥ १२९ ॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவாநுசந்தானத்திற்கு வேறான ஆகாரமுதலியன எப்படி விடப்படுகிறதில்லையோ, அதுபோல வேதாந்தத்திற்கு வேறான சாஸ்திரமுதலியவற்றின் அப்பியாசமும் செய்யவேண்டியதாமென்று ஆக்கிரகஞ்செய்யும் வாதியை நோக்கிக் கூறுகின்றார் :—

आहारादि त्यजन् न एव जीवेत् । शास्त्रांतरं त्यजन् किं न जीवसि । येन एवं अत्र दुराग्रहं करोषि ॥

(சு-ம்.)

ஆகாரமுதலியவற்றை விட்டால் புருஷன் ஜீவியான். அந்நியசாஸ்திரங்களை விட்டால் நீ ஜீவிக்கமாட்டாயா? எதனால் இப்படி இந்த நியாயமுதலிய அந்நியசாஸ்திரங்களில் துராக்கிரகஞ் செய்கின்றாய்? (௧௨௯)

௩௦. ஜனகாதிஞானிகள் ராஜ்ஜியபாலனஞ் செய்தலிற் சங்கைசமாதானம்.

[௭௨௦] जनकादेः कथं राज्यमिति चेद्दृढबोधतः ।
तथा तवापि चेत्तर्कं पठ यद्वा कृषिं कुरु ॥ १३० ॥

(அ-கை.)

அப்படியானால் ஜனகாதி தத்துவஞானிகளுக்கும் ராஜ்ஜியபரிபாலனமுதலியவற்றில் பிரவிருத்தி எப்படியுண்டாயிற்று? என்று வாதி மூலத்திற் சங்கிக்கின்றான்:—

जनकादेः राज्यं कथं इति चेत् ॥

(சு-ம்.)

ஜனகாதிகளுக்கு ராஜ்ஜியம் எப்படி இருந்ததெனின்.

(அ-கை)

திட அபரோக்ஷஞானிக ளாதலின் அச்சனகாதிகளுக்கு ராஜ்ஜியபால னுதிப்பிரவிருத்தி பாதஞ்செய்வதாக வில்லை யென்னும் அபிப்பிராயத்தால் சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

दढबोधतः ॥

(சு-ம்.)

திடஞானத்தால் ஜனகாதியருக்கு ராஜ்ஜிய மிருந்தது.

(அ-கை.)

அப்போது எனக்கும் திடபோத மிருக்கின்றதென்று கூறும் வாதியை நோக்கிச் சித்தாந்தி கூறுகின்றார்:—

तव अपि तथा चेत् । तर्कं पठ यद्वा कृषिं कुरु ॥

(சு-ம்.)

உனக்கும் அப்படித் திடபோத மிருக்குமாயின் தர்க்கத்தினைப் படி. அல்லது கிருஷியினைச் செய். (கஙo)

கக. தத்துவஞானி அசாரமாகிய சம்சாரத்தில் பிரவிருத்தித்தலின் சங்கை சமாதானம்.

[எகரு] मिथ्यात्ववासनादार्ढ्ये प्रारब्धक्षयकांक्षया ।
अक्लिश्यंतः प्रवर्तंते स्वस्वकर्मानुसारतः ॥ १३१ ॥

(அ-கை.)

அப்படியானால், தத்துவஞானி சம்சாரத்தின் அசாரத்தன்மையை அறிந்து எதனால் அச்சம்சாரத்தில் பிரவிருத்திப்பா னென்று ஆசங்கித்து, பிராரப்தம் அவசியம் உண்டாவதாகிய பயனையுடையதா யிருத்தலின் போகத்தால் அந்தந்தப் பிராரத்தகர்மத்தின் க்ஷயத்தின்பொருட்டுத் தத்துவஞானிகளின் பிரவிருத்தி யுண்டாகு மென்று கூறுகின்றார்:—

मिथ्यात्ववासनादार्ढ्ये प्रारब्धक्षयकांक्षया अक्लिश्यंत स्वस्वकर्मानुसारतः प्रवर्तंते ॥

(சு-ம்.)

சம்சாரம் மித்தை யென்பதன் வாசனை திடமாயிருக்க, பிராரப்தக்ஷ

யத்தின் விருப்பால் கிலேசத்தையடையாது தத்தம் கர்மாநுசாரமாக வித்வான்கள் பிரவிருத்திக்கின்றார்கள். (௧௩௧)

௩௨. தத்துவஞானி அநாசாரத்தில் பிரவிருத்தித்தலின் சங்கை சமாதானம்.

[ஏக்கு] अतिप्रसंगो मा शंक्यः स्वकर्मवशवर्तिनाम् ।
अस्तु वा कोऽत्र शक्येत कर्म वारयितुं वद ॥ १३२ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது வித்வான்களுக்கும் அநாசாரத்திலும் பிரவிருத்தியுண்டாகுமே யென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

स्वकर्मवशवर्तिनाम् अतिप्रसंगः मा शंक्यः ॥

(சு-ம்.)

தமது கர்மத்தின் வசத்திருக்கும் ஞானிகளுக்கு அதிப்பிரசங்க முண்டாகு மென்று சங்கியாதே.

(அ-கை.)

ஞானிக்குப் பிராரப்தவசத்தினாலேயே அதிப்பிரசங்கமும் அதாவது அநாசாரத்தில் பிரவிருத்தித்தலால் மரியாதையைக் கடத்தலும் உண்டாகுமே யென்றாசங்கித்து அங்கீகரிக்கின்றார்:—

वा अस्तु । कः अत्र कर्म वारयितुं शक्येत वद ॥

(சு-ம்.)

அல்லது பிராரப்தவசத்தால் அதிப்பிரசங்கம் உண்டாகுக. இங்குக் கர்மமாகிய தீவிரப் பிராரப்தத்தை நீக்கக்கூடியவன் யாவன்? * ௩அ. சொல். (௧௩௨)

---

*௩அ. மனிதன்மாத்திரத்தில் மலத்தைப் புசித்தலிற் பிரவிருத்தித்தல் அதிப்பிரசங்கமாம். ஆனால் மிக்கமந்தப்பிராரப்தத்தின் வசத்தால் யாதேனுமோர் அகோரமந்திரத்தைச் சாதிக்கும் புருஷனுக்குப் பிரவிருத்தி யுண்டாகுமாயின், அல்லது விஷத்தைச் சாப்பிடுதல் முதலியவற்றின் வாயிலாகத் தனது மரணத்தில் ஒருவனுக்குப் பிரவிருத்தி யுண்டாகுமாயின், இங்குக் கர்மத்தைத் தடுப்பவர் யார்? அதுபோல எல்லாவற்றிலும் மேலாகிய பிரஹ்மாநந்தத்தில் மூழ்கிய ஞானிக்கு உலகத்தாரால் நிந்திக்கப்படும் துராசாரத்திற் பிரவிருத்தியுண்டாதல் அதிப்பிரசங்கமாயினும், மிகுந்த பாபவடிவப் பிராரப்தத்தின் வசத்தால் ஒருவனுக்கு துராசாரத்திலும் பிரவிருத்தியுண்டாகுமாயின் இவ்வதிப்பிரசங்கத்திற்குக் காரணமான கர்மத்தினை நிவர்த்திப்பவன் யாவன்? ஒருவனுமில்லை. இப்பிராரப்தத்தினது மான்மியத்தினைப் பிரமாணத்தோடு வர்ணித்தலை மேல் ௭௩௧-௭௩௬ சுலோகங்களிற் காண்க.

௧௧. ஞானி அஞ்ஞானிகளுக்குப் பிராரப்தம் சமமாயினும் அவர்களுக்கு முறையே கிலேசமுண்டாகாமையும் உண்டாதலும்.

[௧௩௩] ज्ञानिनोऽज्ञानिनश्चात्र समे प्रारब्धकर्मणी ।
न क्लेशो ज्ञानिनो धैर्यान्मूढः क्लिश्यत्यधैर्यतः ॥ १३३ ॥

(அ-கை.)

அப்படியானால் ஞானி அஞ்ஞானிக ளிருவருக்கும் பிராரப்தகர்மம் அவசியம் அங்கீகரிக்கத்தக்கதா யிருத்தலால் சமானமாக அவ்விருவருக்கும் எவ்வாறு வேற்றுமை சித்திக்கின்ற தென்றாசங்கித்துக் கூறுகின்றார்:-

ज्ञानिनः च अज्ञानिनः अत्र प्रारब्धकर्मणी समे ज्ञानिनः धैर्यात् क्लेशः न । मूढः अधैर्यतः क्लिश्यति ॥

(சு-ம்.)

ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் இங்குப் பிராரத்தகர்மம் சமானமாயினும் ஞானிக்குத் தைரியத்தினால் கிலேசமுண்டாகிறதில்லை. மூடனாகிய அஞ்ஞானி அதைரியத்தினால் கிலேசமடைகிறான். (௧௩௩)

௧௨. சுலோகம் ௧௩௩-ற் கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்தம்.

[௧௩௪] मार्गे गंत्रोर्द्वयोः श्रांतौ समायामप्यदूरताम् ।
जानन्धैर्याद्द्रुतं गच्छेदन्यस्तिष्ठति दीनधीः ॥ १३४ ॥

(அ-கை.)

அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

मार्गे गंत्रोः द्वयोः श्रांतौ समायाम् अपि अदूरतां जानन् धैर्यात् द्रुतं गच्छेत् । अन्यः दीनधीः तिष्ठति ॥

(சு-ம்.)

வழியிற் செல்லுகின்ற இரண்டு புருடர்களுக்கு இளைப்புச் சமானமாயினும், ஒருவன் விரும்பிய இடம் சமீபமென் றறிந்து தைரியத்தால் விரைவிற் செல்லுகின்றான். விரும்பிய இடம் சமீபித்தது என்றறியாத மற்றைய புருடன் தீனபுத்தியுடையவனாய் அவ்விடத்திலேயே உட்காருகின்றான். (௧௩௪

கூ௫. முதற் சுலோகத்திற் கூறிய சுருதியின் முற்பாதியை அநுவதித்தலும் பயனைக் காட்டுந்தன்மையினதாகிய பிற்பாதியை வெளிப்படுத்தலும்.

[௭கக] साक्षात्कृतात्मधीः सम्यगविपर्ययबाधितः ।
किमिच्छन्कस्य कामाय शरीरमनुसंज्वरेत् ॥ १३५ ॥

(அ-கை.)

இப்படிப் பெறப்பட்ட "ஆத்மாவை அறியின்" என்னும் வேதமந்திரத்தின் முற்பாதியின் பொருளாகிய அபரோக்ஷஞான மெதுவோ அதனை அநுவதிக்கின்றவராய்ச் சோகநிவிருத்தியாகிய பயனைக் காட்டுமியல்புடைய பிற்பாதியை வெளிப்படுத்துகின்றார்:—

सम्यक् साक्षात्कृतात्मधीः अविपर्ययबाधितः किम् इच्छन् कस्य कामाय शरीरं अनुसंज्वरेत् ॥

(சு-ம்.)

செவ்வையான ஆத்மசாக்ஷாத்காரத்தோடுகூடிய புத்தியுடையவனும் விபரீதத்தினால் பாதிக்கப்படாதவனுமாகிய புருஷன் எந்தப் போக்கியத்தை இச்சித்தவனாய் எந்தப் போக்தாவினது காமத்தின்பொருட்டுச் சரீரத்தைத் தொடர்ந்து தாபத்தையடைவான்.

(வி-ம்.)

செவ்வையாக ஆத்மாவைச் சாக்ஷாத்காரஞ்செய்த புத்தியினையுடையவனும் தேகமுதலியவற்றில் ஆத்மத்தன்மைப்புத்தியாகிய விபரீதத்தினால் பாதிக்கப்படாதவனுமென்னுமிரண்டும் ஏதுகர்ப்பிதமாய் ஞானிக்கு விசேஷணங்களாம். (கரு௫)

௬. "எதனை இச்சித்தவனாய்" என்று மூலத்திற் கூறிய சுருதியினது பதத்தின் அர்த்தத்தினால் (போக்கியவிஷயங்களின் ஞின்மையால்) இச்சைக்குக் காரணமான சந்தாபமில்லாமை ௭௨0-௭௭௫.

க. போக்கியங்களில் தோஷதிருஷ்டிபூர்வகமான போகத்தின் இச்சையின்மை ௭௨0-௭௨௬.

௬. இஅ௫-வது சுலோகத்திற் கூறிய சுருதியினது பிற்பாதியின் தாற்பரியம்.

[௭௨0] जगन्मिथ्यात्वधीभावादाक्षिप्तौ काम्यकामुकौ ।
तयोरभावे संतापः शाम्येन्निःस्नेहदीपवत् ॥ १३६ ॥

(அ-கை.)

சுலோகம் எகசுூ-ற் கூறிய இவ்வேதமந்திரத்தினது பிற்பாதியின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்:—

जगन्मिथ्यात्वधीभावात् काम्यकामुकौ आक्षिप्तौ ॥

(சு-ம்.)

ஜகத்தினது மித்தியாத்தன்மையின் புத்தியிருத்தலால் விரும்பப்படுவ தும் விரும்புவோனுமாகிய இரண்டும் நிராகரிக்கப்பட்டன.

(வி-ம்.)

* ௬௯. காமிய விஷயமாகிய போக்கியமும் * ௭௦. காமுகனாகிய போக்தாவுமான இரண்டும் நீக்கப்பட்டன. ஜகத்தின் மித்தியாத்தன்மையினது புத்தியிருத்தலா லென்பதனால் அவற்றினை நிராகரித்தலின் ஏதுவைக் கூறுகின்றார்.

(அ-கை.)

போக்கியத்தினையும் போக்தாவினையும் நிஷேதிப்பதாகிய அதனால் என்ன பயனுண்டாகின்ற தெனக் கூறுகின்றார்:—

तयोः अभावे निःस्नेहदीपवत् संतापः शाम्येत् ॥

(சு-ம்.)

அவ்விரண்டும் இல்லாமற் போகவே எண்ணெயின்றிய தீபத்தைப் போல சந்தாபம் நீங்குகின்றது.

(வி-ம்.)

அக்காமியமும் காமுகனு மில்லாமற்போகவே காமுறுதல்வடிவ நிமித்தத்தினாலாகிய சந்தாப மெதுவோ அது காரணமின்மையால் எண்ணெயின்றிய தீபத்தினைப்போல நீங்குகின்ற தென்பது பொருள். (௧௩௬)

௨. காமியவிஷய மின்மையால் காமுறுத லில்லை யென்பதில் திருஷ்டாந்தம்.

[௭௨௧] गंधर्वपत्तने किंचिन्नैंद्रजालिकनिर्मिते ।
जानन्कामयते किंतु जिहासति हसन्निदम् ॥ १३७॥

---

* ௬௯. விரும்பப்படுவது காமியம்.

* ௭௦. விரும்புகிறவன் காமுகன்.

(அ-கை.)

காமியமில்லாமையால் காமுறுதலில்லாமை எங்ஙருக் கண்டார் என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

ऐंद्रजालिकनिर्मिते गंधर्वपत्तने किंचित् जानन् न कामयते । किंतु इदं हसन् जिहासति ॥

(சு-ம்.)

மாயாவியினாலாக்கப்பட்ட கந்தர்வநகரத்தில் எவ்வஸ்துவினையும் அறிந்த புருஷன் விரும்பான்; ஆனால் இதனைச் சிரித்து விடுகின்றான்.

(வி-ம்.)

மாயாவியினாலாக்கப்பட்ட நகரத்திலுள்ள எவ்வஸ்துவினையும் "இது இந்திரஜாலபுருடனாலாக்கப்பட்டது" என்றறியும் புருடன் விரும்புகிறதில்லை. விருப்பம் இல்லையென்பது மாத்திரமில்லை; ஆனால் யாதாக "இது மித்தை"யென்றறிந்து விட இச்சிக்கின்றான். (கஙௗ)

ஙு. திருஷ்டாந்தத்திற் சித்தித்த அர்த்தத்தைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துதல்.

[எஉஉ.] आपातरमणीयेयु भोगेष्वेवं विचारवान् ।
नानुरज्यति किंत्वेतान्दोषदृष्ट्या जिहासती ॥ १३८ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்திற் கூறிய அர்த்தத்தைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துகின்றார் :—

एवं आपातरमणीयेषु भोगेषु विचारवान् न अनुरज्यति किंतु एतान् दोषदृष्ट्या जिहासति ॥

(சு-ம்.)

இவ்வாறு தோஷதிருஷ்டிபரியந்தம் இரமணீயமாயுள்ள போகங்களில் விசாரமுடையபுருஷன் பிரியத்தைச் செய்கிறதில்லை, ஆனால் இவற்றைத் தோஷதிருஷ்டியினால் விட விரும்புகின்றான்.

(வி-ம்.)

இவ்வாறு தோற்றமாத்திரம் இரம்மியமான மாலை சந்தனம் ஸ்திரீமுதலிய விஷயங்களாகிய போகங்களில் இவ்வாறு விசாரமுடைய அதாவது இவை தோற்றமாத்திரம் இரமணீயமா மென்னும் அநுசந்தானமுடைய

புருஷன் ஆசையைச் செய்கிறதில்லை. ஆனால் தோஷங்களைக் காணுதலால் இப்போகங்களை விட விரும்புகின்றான். (௧௩௮)

௪. விஷயங்களின் தோஷங்களை வர்ணித்தல்.

[௧௨௩] अर्थानामर्जने क्लेशस्तथैव परिपालने ।
नाशे दुःखं व्यये दुःखं धिगर्थान्क्लेशकारिणः ॥ १३९ ॥

(அ-கை.)

அவ்விஷயங்களின் தோஷம் யாவையெனக் கூறுகின்றார்:—

अर्थानां अर्जने क्लेशः । तथा एव परिपालने । नाशे दुःखं व्यये दुःखं । क्लेशकारिणः अर्थान् धिक् ॥

(சு-ம்.)

அர்த்தமாகிய விஷயங்களைச் சம்பாதித்தலிற் கிலேச மிருக்கின்றது. அப்படியே பரிபாலித்தலிற் கிலேச மிருக்கின்றது. நாசத்திலும் துக்க மிருக்கின்றது. செலவு செய்தலிலும் துக்க மிருக்கின்றது. ஆதலால் கிலேசத்தை யுண்டுபண்ணும் * ௪௧. அர்த்தங்கள் இகழத்தக்கனவாம். (௧௩௯)

---

* ௪௧. இங்கு அர்த்த மென்னுஞ் சொல்லால் தனமும் தனத்தினாற் சாதிக்கத்தக்க விஷயங்களும் கொள்ளப்படும். ஸ்ரீ பாகவதத்தின் பதினோராவது ஸ்கந்தத்திலுள்ள இருபத்துமூன்றாவது அத்தியாயத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது:—

அர்த்தத்தின் சாதனத்திலும் சித்தித்த அர்த்தத்திலும் விருத்தி செய்தலிலும் இரக்ஷித்தலிலும் செலவாதலிலும் நாசமாதலிலும் அநுபவித்தலிலும் மனிதர்களுக்கு (௧) ஆயாசமும் (௨) பயமும் (௩) வியாகூலமும் (௪) மயக்கமு முண்டாகின்றன.

(௧) சாதித்தலிலும் விருத்திசெய்தலிலும் ஆயாச முண்டாகின்றது.

(௨) சித்தித்த அர்த்தத்தை இரக்ஷித்தலில் பய முண்டாகின்றது.

(௩) செலவிடுதலிலும் அநுபவித்தலிலும் சிந்தையு(வியாகூலமு)ண்டாகின்றது,

(௪) நாசத்தில் மயக்க முண்டாகின்றது.

அர்த்தப்பிராப்தியின்பொருட்டுத் திருட்டு, ஹிம்சை, பொய்பேசுதல், இடம்பம், விருப்பம், குரோதம் என்று ஆறு அநர்த்தங்க ளுண்டு. கிடைத்த அர்த்தத்தில் கர்வம், மதம் (அபிமானம்), பேதம் (சிநேகத்தைவிடுதல்), வைரம், விசுவாசமின்மை, பிறர் சுகஞ்சகியாமை, ஸ்திரீ, சூது, கள் என்னும் மூன்றனையும் விஷயஞ்செய்யும் மூன்று வியசனங்களென ஒன்பது அநர்த்தங்க ளுண்டு. இவ்வாறு பதினைந்து அநர்த்தங்களுண்டாயின் அப்போது ஒரு அர்த்தம் சித்திக்கின்றது. ஆதலால் இவ்வர்த்தம் அநர்த்தத்திற்கு மூலமாம்.

[௭௨-௪] मांसपांचालिकायास्तु यंत्रलोलेऽगपंजरे ।
स्नाय्वस्थिग्रंथिशालिन्याः स्त्रियाः किमिव शोभनम् ॥ १४० ॥

(அ-கை.)

இவ்வாறு விஷயங்களை நாக்கத்தில் கெடுவாதலைக் காட்டி இப்போது அவற்றின் சோபனமின்மையையும் * ௪௨. பிரதானஸ்தலத்தில் இரண்டு சுலோகங்களாற் கூறிக் காட்டுகின்றார் :—

स्नाय्वास्थिग्रंथिशालिन्याः मांसपांचालिकायाः स्त्रियाः यंत्रलोले अंगपंजरे किं शोभनं इव ॥

(சு-ம்.)

நரம்பு எலும்பு மாம்சத்தின் முடிச்சுகள் என்பவற்றோடுகூடிய தசைப் பொம்மையாகிய ஸ்திரீயின் இயந்திரம்போற் சஞ்சரிக்கும் அங்கபஞ்சரத் தில் யாது சோபனம்போ லிருக்கின்றது?

(வி-ம்.)

நரம்பும் எலும்பும் பிரசித்தம். மாம்சமுடிச்சாவது மாம்சத்தின் சமூகவடிவ நிதம்பமாகிய கடிதடமும் ஸ்தனமுதலியனவுமாம். இவற்றோடு கூடிய மாம்சப்பொம்மைவடிவ ஸ்திரீயின் இயந்திரம்போற் சஞ்சலசுபாவ முடைய விஷயிபுருஷர்களாகிய பக்ஷிகளின் வாசஸ்தானமாகிய அங்கபஞ் சரத்தில் சோபனமுடையதுபோன்றுளது யாது? எதுவு மில்லையென் பது பொருள். (௧௪0)

[௭௨-௫] एवमादिषु शास्त्रेषु दोषाः सम्यक् प्रपंचिताः ।
विमृशन्ननिशं तानि कथं दुःखेषु मज्जति ॥ १४१ ॥

---

* ௪௨. அநேகமல்லர்களில் பிரதானமல்லனது தோல்வியினால் எல்லோருக் கும் தோல்வி யுண்டாகின்றது. அதுபோல் கழிந்த எல்லாஜன்மங்களிலும் ஸ்திரீ புருஷர்களின் சகவாச முண்டாகின்றது. அதனாற்றோன்றிய பிரபலவாசனையினா லும் ஸ்திரீயினிடத்துச் சப்தம் (சுவரம்), ஸ்பரிசம் (ஆலிங்கனம்), ரூபம் (வஸ்திரபூஷ ணாதிகள்), ரசம் (உதட்டைச்சுவைத்தல் முதலியன), கந்தம் (புஷ்பமுதலியவைகள்) என்னும் ஐந்து விஷயங்களின் அடைவால் ஸ்திரீவடிவவிஷயம் சர்வவிஷயங்களிலும் பிரதானமாம். மற்றவிஷயம் அதற்குபகரண (சாதன) மாம். ஆதலால் ஸ்திரீயினிடத் துத் தோஷதிருஷ்டியினால் வைராக்கிய முதயமாகவே சகல விஷயங்களிலும் வைராக் கியமுண்டாமாகலின் ஸ்திரீயினிடத்துத் தோஷதிருஷ்டியின்பொருட்டுச் சோபன மின்மையைக் காட்டுகின்றார்.

(அ-கை.)

இதுவுமது:—

एवमादिषु शास्त्रेषु दोषाः सम्यक् प्रपंचिताः । तानि अनिशं विमृशन् कथं दुःखेषु मज्जति ॥

(சு-ம்.)

இவைமுதலிய சாஸ்திரங்களில் விஷயங்களின் தோஷங்கள் செவ்வையாய் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை நிரந்தரம் விசாரிக்கும் புருடன் எங்ஙனம் துக்கத்தில் மூழ்குவன்?

(வி-ம்.)

இவைமுதலிய சாஸ்திரங்களில் என்னுமிடத்துள்ள முதலியவென்னுஞ் சொல்லால் "துவக்கு, மாம்சம், ரக்தம், கண்ணீர் என்பவற்றை வேறு பிரித்துக்காணுங்கால் ரமணீயமுளதாயின் பார்; ஏன் வீண்மோகத்தையடைகின்றாய்." என்றல்* சஙு. முதலிய அந்நியசாஸ்திரத்திற் கூறிய விஷயங்களும் கொள்ளப்படும். (கசக)

ஞ. விஷயங்களில் தோஷதரிசனமுண்டாயின் போக இச்சை இல்லாமற்போதலில் யுக்தியோடுகூடிய திருஷ்டாந்தம்.

[எஉகூ] क्षुधया पीड्यमानोऽपि न विषं ह्यत्तुमिच्छति ।
मिष्टान्नध्वस्ततृड्जानन्नामूढस्तज्जिघत्सति ॥ १४२ ॥

(அ-கை.)

விஷயங்களில் தோஷதர்சன முண்டாகுங்கால் போகவிருப்ப மில்லாமற்போதலில் யுக்தியோடுகூடிய திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

क्षुधया पीड्यमानः अपि विषं अत्तुं न हि इच्छति । अमूढः मिष्टान्नध्वस्ततृट् जानन् तत् न जिघत्सति ॥

(சு-ம்.)

பசியினால் வருத்தமடைந்தவனாயினும் புருஷன் விஷத்தைப் புசிக்க இச்சிக்கிறதில்லை. அப்போது மதுரான்ன போஜனத்தினால் ஆசையொழிந்த விவேகமுடைய புருஷன் விஷத்தையறிந்து அதனை எவ்வாறு புசிக்கவிரும்புவன்?

---

* சஙு. இங்கு முதலியவெனுஞ் சொல்லால் வாசிட்டத்தின் முதற்பிரகரணம், ஆத்மபுராணத்தின் முதலத்தியாயம், அத்தியாத்மராமாயணத்தின் பிரகரணம் என்பனமுதலிய சாஸ்திரங்களிற் கூறிய தோஷங்கள் கொள்ளப்படும்.

(வி-ம்.)

தான் விவேகியாயும், அறுசுவையுண்டியைப் புசித்தலால் ஆசையொழிந்தவனாயுமுள்ள புருடன் "இது விஷம்" என்றறிந்து அவ்விஷத்தைப் புசிக்க விரும்பான். இவ்வாறே விஷயங்களில் தோஷதிருஷ்டியுண்டாயின் போகத்தின் இச்சை யுண்டாகா தென்பது பொருள். (௧௪௨)

௨. ஞானிக்குப் பிரீதியின்றிப் பிராரப்தபோகம் உளதாதல் ௭௨௭-௭௩௪.

௩. பிரபலப்பிராரப்தத்தால் இச்சையுண்டாயினும் ஞானி கிலேசத்தோடு அநுபவித்தல்.

[௭௨௭] प्रारब्धकर्मप्रावल्याद्भोगेष्विच्छा भवेद्यदि ।
क्लिश्यन्नेव तदाप्येष भुंक्ते विष्टिगृहीतवत् ॥ १४३ ॥

(அ-கை.)

அப்படியானல் பிராரப்தகர்மத்தின் பிரபலத்தன்மையினால் ஞானிக்கும் இச்சை யுண்டாகுமே யென்றாசங்கித்து, இச்சை உண்டாயினும் பிரியத்தோடு ஞானி புசிக்கிறதில்லை யென்று கூறுகின்றார்:—

यदि प्रारब्दकर्मप्रावल्यात् भोगेषु इच्छा भवेत् । तदा अपि एषः विष्टि गृहीतवत् क्लिश्यन् एव भुंक्ते ॥

(சு-ம்.)

பிராரப்தகர்மத்தின் பிரபலத்தன்மையால் ஞானிக்குப் போகங்களில் இச்சையுண்டாயின், அப்போதும் இந்த ஞானி *௪௪. மலங்கிரகிப்பவனைப் போலக் கிலேசத்தை அடைந்துகொண்டே புசிக்கின்றான். (௧௪௩)

[௭௨௮] भुंजानाना अपि बुधाः श्रद्धावंतः कुटुंबिनः ।
नाद्यापि कर्म नश्छिन्नामिति क्लिश्यंति संततम् ॥ १४४ ॥

(அ-கை.)

ஞானி கிலேசத்தை அடைந்தவனாகவே புசிக்கின்றான் என்பது எதனால் அறியப்படுகின்றதென்றாசங்கித்து உலகத்தில் காணப்படுதலால் அறியப்படுகின்றதென்று கூறுகின்றார்:—

---

*௪௪. ஓர் அரசனால் பலவந்தமாக வைக்கப்பட்ட புருஷன் பரவசனாய்ப் பிரியமில்லாது காரியத்திற் பொருந்துகிறான். அதுபோல ஞானி பிராரப்தத்தினால் பிரியமின்றிப் போகத்தைப் புசிக்கின்றான்.

श्रद्धावंतः कुटुंबिनः बुधाः भुंजानाना अपि "अद्य अपि नः कर्म न छिन्नम्" इति संततं क्लिश्यंति ॥

(சு-ம்.)

குரு சாஸ்திரங்களால் உபதேசிக்கப்பட்ட பிரஹ்மவிசாரத்தில் சிரத்தையுடையவனும் குடும்பியுமாகிய கிருகஸ்தஞானி போகங்களைப் புசிக்கினும், "இன்னும் நம்முடைய கர்மம் நாசமாகவில்லையே" என்று சித்தத்தில் எப்போதும் கிலேசத்தைச் செய்கின்றான். (கசச)

உ. ஞானிக்குப் போகங்களில் உண்டாகும் கிலேசம் வைராக்கியமாம் சம்சார தாபமன்றெனல்.

[எஉரு] नायं क्लेशोऽत्र संसारतापः किंतु विरक्तता ।
भ्रांतिज्ञाननिदानो हि तापः सांसारिकः स्मृतः ॥१४५॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவத்தையுணர்ந்த புருஷர்களுக்குச் சம்சாரநிமித்தத்தாலாகிய தாபமானது ஞானம் வியர்த்தமாந்தன்மை நேர்தலின் அயுக்தமாமேயென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

अयं क्लेशः संसारतापः न । किं तु अत्र विरक्तता ॥

(சு-ம்.)

இக்கிலேசம் சம்சாரத்தின் தாபமன்று; ஆனால் இச்சம்சாரத்தில் உண்டாம் வைராக்கியமாம்.

(வி-ம்.)

இன்னும் நமது கர்மம் நாசமாகவில்லையே என்னும் பச்சாதாபவடிவக்கிலேசம் சம்சாரத்தின் தாபமன்று; ஆனால் இச்சம்சாரத்தில் ஆசையின்றிய தன்மையாம்.

(அ-கை.)

சுலோகம் எஉரு-ல் கூறிய கிலேசம் தாபரூபமாகாமையில் யுக்தியைக் கூறுகின்றார்:—

हि सांसारिकः तापः भ्रांतिज्ञाननिदानः स्मृतः ॥

(சு-ம்.)

எதனால் சம்சாரத்தின் தாபம் பிராந்திஞானவடிவ காரணமுடையதாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றதோ அதனால்.

(வி-ம்)

எக்காரணத்தால் சம்சாரத்தினுலாகிய தாபம் பிராந்திஞானவடிவ காரணமுடையதென்று பூர்வாசாரியர்களால் சொல்லப்பட்டிருக்கின்றதோ, இந்த எ௨அ-ற்கூறிய கிலேசமோ விவேகஞானவடிவ காரணமுடையதாயிருத்தலால் அத்தன்மையது அதாவது பிராந்திஞானஜந்திய சம்சாரத்தின் தாபமன்றோ, அதனுல் என்பது பொருள். (கசடு)

கூ. எ௨அ-வது சுலோகத்திற் கூறிய ஞானியின் கிலேசம் விவேகத்தைக் காரணமாகவுடையதெனல்.

[எகூ௦] विवेकेन परिक्लिश्यन्नल्पभोगेन तृप्यति ।
अन्यथानंतभोगेऽपि नैव तृप्यति कर्हिचित् ॥ १४६ ॥

(அ-கை.)

இந்த எ௨அ-ற் கூறிய கிலேசம் விவேகவடிவ காரணமுடையதென்றுவது அல்லது அவிவேகவடிவ காரணமுடையதென்றுவது எதனுலறியப் படுகின்றதென்றுசங்கித்து, காமத்தை நிவர்த்திப்பதாயிருத்தலின் இந்தக் கிலேசம் விவேகவடிவ காரணமுடையதாமென்று கூறுகின்றூர்:—

विवेकेन परिक्लिश्यन्, अल्पभोगेन तृप्यति । अन्यथा अनंतभोगे अपि कर्हिचित् न एव तृप्यति ॥

(சு-ம்.)

தோஷதிருஷ்டியாகிய விவேகத்தினுல் கிலேசத்தை யடைந்த புருஷன் அற்பபோகத்தினுல் திருப்தியை யடைகின்றுன். அவ்வாறில்லையாயின் அதாவது விவேகத்தினுலாம் கிலேசமில்லையாயின் அளவில்லாத போகம் உண்டாகியும் ஒருகாலும் திருப்தியடையான். (கசகூ)

ச. போகம் திருப்திக்கு ஏதுவாகாமையைப் பிரதிபாதிக்கும் சுருதி.

[எகூக] न जातु कामः कामानामुपभोगेन शाम्यति ।
हविषा कृष्णवर्त्मेव भूय एवाभिवर्धते ॥ १४७ ॥

(அ-கை.)

விவேகிக்குப்போல அவிவேகிக்கும் போகத்தினுலேயே திருப்தியுண்டாகும். அதனுல் விவேகம் திருப்திக்குக் காரணமாகாதே யென்றுசங்கித்துப் போகம் திருப்திக்குக் காரணமாதலின்மையைப் பிரதிபாதிக்கும் சுருதியைப் படிக்கின்றூர்:—

कामः कामानां उपभोगेन जातु न शाम्यति । हविषा कृष्णवर्त्मा इव भूयः एव अभिवर्धते ॥

(சு-ம்.)

போகத்தின் இச்சையாகிய காமம் எதுவோ அது விஷயங்களை அநுபவித்தலால் ஒருபோதும் சாந்தியடையாது. ஆனால் நெய்விடப்பட்ட நெருப்பினைப்போல அதிகமாகவே விருத்தியை யடைகின்றது. (கசஎ)

கூ. திருஷ்டாந்தத்தோடு விவேகத்தினாலாகிய போகம் திருப்திக்குக் காரணமாதல் பிரசித்த மெனல்.

[எசஅ] परिज्ञायोपभुक्तो हि भोगो भवति तुष्टये ।
विज्ञाय सेवितश्चोरो मैत्रीमेति न चोरताम् ॥ १४८ ॥

(அ-கை.)

விவேகவடிவ காரணத்தினையுடைய போகம் திருப்திக்குக் காரணமாதல் அநுபவசித்தமா மென்று கூறுகின்றார்:—

परिज्ञाय उपभुक्तः भोगः तुष्टये हि भवति ॥

(சு-ம்.)

அறிந்து புசிக்கப்பட்ட போகம் திருப்தியின்பொருட்டேயாம்.

(வி-ம்.)

"இப்போகம் இவ்வளவினது; இவ்வாறு பிரயாசையினால் சாதிக்கத் தக்கது." என்று அநுபவபூர்வகமாக அநுபவிக்கப்பட்ட போகம் எதுவோ அது திருப்திக்குக் காரணமாகவே காணப்பட்டது.

(அ-கை.)

அப்படியானால் ஆசைக்குக் காரணமாகிய போகம் விவேகம் சகாயமாதல்மாத்திரத்தால் எப்படித் திருப்தியை யுண்டுபண்ணுவதாமென்றுசங்கித்து, ஓர் துணையின் வசத்தால் விபரீதகாரியத்தை உண்டுபண்ணுந்தன்மை லௌகிகஜனங்களிடத்துக் காணப்படுகின்றதென்று கூறுகின்றார்:—

विज्ञाय सेवितः चोरः मैत्रीं एति । चोरतां न ॥

(சு-ம்.)

அறிந்து சேவிக்கப்பட்ட திருடன் சிநேகிதத்தன்மையை யடைகின்றான்; திருடனென்னுந் தன்மையை யடைகிறதில்லை.

(வி-ம்.)

"இவன் திருடன்" னென்றறிந்து அவனோடு கூடியிருக்கும் புருஷனுக்கு அவன் திருடனாகாது மித்திரனாகின்றான் என்பது பொருள். ()

கூ. விதித்தியாசனத்தினுல் அடக்கப்பட்ட மனது அற்பபோகத்தால் திருப்தியாதல்.

[எகூகூ] मनसो निगृहीतस्य लीलाभोगोऽल्पकोऽपि यः ।
तमेवालब्धविस्तारं क्लिष्टत्वाद्बहु मन्यते ॥ १४९ ॥

(அ-கை.)

அப்படியானுல் மனது காமுறுதலில் பிரியமுடையதா யிருத்தலால் சொற்பபோகத்தால் எப்படித் திருப்தி யுண்டாகுமென்ருசங்கித்து, *சடு. விதித்தியாசனத்தினுல் சுவாதீனஞ் செய்யப்பட்ட மனது அவ்வாறு காமுறுதலில் பிரியமுடையதாய் இல்லாமையின் அதற்குச் சொற்பபோகத்தினுல் திருப்தி யுண்டாகவே செய்கின்றதென்று கூறுகின்ருர் :—

निगृहीतस्य मनसः अल्पकः अपि लीलाभोगः यः अलब्धविस्तारं तं एव क्लिष्टत्वात् बहु मन्यते ॥

(சு-ம்.)

நிக்கிரகஞ்செய்யப்பட்ட மனதிற்கு லீலாபோகம் அற்பமாயினும் விஸ்தாரத்தையடையாத அப்போகத்தினையே கிலேசத்தோடுகூடியதா யிருத்தலின் புருஷன் அதிகமாக மதிக்கின்ருன்.

(வி-ம்.)

யோகாப்பியாசத்தினுல் வசமாக்கப்பட்ட மனதிற்கு லீலாபோகம் அற்பமாயினும் விஸ்தாரத்தையடையாத அப்போகத்தினையே தோஷத்தோடுகூடியதா யிருத்தலால் அதிகமென்றறிகின்ருனென்பது பொருள்.()

எ. சுலோகம் எஉகூ-ற் கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்தம்.

[எகூச] बद्धमुक्तो महीपालो ग्राममात्रेण तुष्यति ।
परैरबद्धो नाक्रांतो न राष्ट्रं बहु मन्यते ॥ १५० ॥

(அ-கை.)

நிக்கிரகஞ்செய்யப்பட்ட மனதிற்கு அற்பபோகத்தினுலும் திருப்தி யுண்டாகின்றதென்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்ருர் :—

---

* சடு. எப்படி இரவில் மனிதர்களது சஞ்சாரம் அற்பமாகின்றதோ, அதுபோல விதித்தியாசனத்தின் பரிபக்குவமாகிய அந்தக்கரணத்தின் தர்மமிருத்தலால் உண்டாயினதாயினும் காமாதிகளின் விக்ஷேபம் அற்பமாகின்றது. காமாதி விருத்திகளுக்கு உபாதானமாகிய மனம் தளர்ந்ததா யிருத்தலினென்பது வாசிட்டத்திற் பிரசித்தமாம். இதனுல் ஞானியின் மனதிற்கு அற்பபோகத்தினுல் திருப்தி சம்பவிக்கின்றது.

वद्धमुक्तः महीपालः ग्राममात्रेण तुष्यति । परैः अबद्धः न आक्रांतः राष्ट्रं बहु न मन्यते ॥

(சு-ம்.)

பந்தனத்தை யடைந்து விடுபட்ட அரசன் கிராமமாத்திரத்தால் சந்தோஷத்தை யடைகின்றான். அந்நியனால் பந்தனத்தையும் தோல்வியையும் அடையாம லிருக்கின்ற அரசன் அவ்வந்நியனாகிய சத்துருவாற் கொடுக்கப்பட்ட ராஜ்ஜியத்தை அதிக மென்று மதிக்கின்ற திலலை. (௧௫0)

௩. இச்சை, அநிச்சை, பரஇச்சை யென்னும் மூவகைப் பிராரப்தகர்மத்தின் வர்ணனம் ௭௩௫-௭௪௬.

௧. ஞானிக்குத் தோஷதிருஷ்டி யுண்டாதலின் பிராரப்தத்தினால் இச்சை சம்பவியா தென்னும் சங்கை.

[௭௩௫] विवेके जाग्रति सति दोषदर्शनलक्षणे ।
कथमारब्धकर्मापि भोगेच्छां जनयिष्यति ॥ १५१ ॥

(அ-கை.)

அப்படியானால் "எப்போது பிராரப்தகர்மத்தின் பிரபலத்தன்மையினால் போகத்தில் இச்சையுண்டாகின்றதோ" என்னும் ௭௨௭-வது சுலோகத்தில் கர்மத்தின் வசத்தால் இச்சையுண்டாகின்ற தென்று கூறியது பொருந்தாது. ஏனெனின், இச்சைக்கு விரோதியாகிய விவேகஞானம் இருக்குங்கால் அவ்விச்சையின் உற்பத்தி சம்பவியாமையின் என்றிவ்வாறு வாதி மூலத்திற் சங்கிக்கின்றான்:—

दोषदर्शनलक्षणे विवेके जाग्रति सति आरब्धकर्म अपि भोगेच्छां कथं जनयिष्यति ॥

(சு-ம்.)

தோஷதர்சனம் எதற்கு லக்ஷணமா யிருக்கின்றதோ அப்படிப்பட்ட விவேகம் விழிப்படைந்திருக்கப் பிராரப்தகர்மமும் போகத்தினிச்சையை யெப்படி யுண்டுபண்ணும்? (௧௫௧)

௨. மூவகைப் பிராரப்தங்களின் பெயரோடு முற்கூறிய சங்கையின் சமாதானம்.

[௭௩௬] नैष दोषो यतोऽनेकविधं प्रारब्धमीक्ष्यते ।
इच्छानिच्छापरेच्छा च प्रारब्धं त्रिविधं स्मृतम् ॥ १५२ ॥

(அ-கை.)

தோஷதிருஷ்டியிருக்கினும் பிராரப்தம் பலவகையாயிருத்தலால் இச்சையின் உற்பத்தி சம்பவிக்குமென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

एषः दोषः न । यतः प्रारब्धं अनेकविधं ईक्ष्यते ॥

(சு-ம்.)

எதனால் பிராரப்தம் நாநாவாகக் காணப்படுகின்றதோ அதனால் ௧௫௧-ற் கூறிய இத்தோஷமில்லை.

(அ-கை.)

பிராரப்தம் நாநாவிதமாதலையே காட்டுகின்றார் :—

इच्छा अनिच्छा च परेच्छा प्रारब्धं त्रिविधं स्मृतम् ॥

(சு-ம்.)

இச்சை, அநிச்சை, பரஇச்சை யென்னும் பேதத்தால் பிராரப்தம் மூவகைத்தாம்.

(வி-ம்.)

இச்சையையுண்டுபண்ணுவது, அநிச்சையினால் போகத்தைத்தருவது, பரயிச்சையிற் போகத்தைத்தருவது என்னும் பேதத்தால் பிராரப்தம் மூவகையா மென்பது பொருள். (௧௫௨)

௩. இச்சாப்பிராரப்தத்தின் வர்ணனம்.

[௧௫௩] अपथ्यसेविनश्चोरा राजदाररता अपि ।
जानंत इव स्वानर्थमिच्छंत्यारब्धकर्मतः ॥ १५३ ॥

(அ-கை.)

இச்சாப்பிராரப்தத்தினைக் காட்டுகின்றார் :—

अपथ्यसेविनः चोराः राजदाररताः अपि स्वानर्थं जानंतः इव आरब्धकर्मतः इच्छंति ॥

(சு-ம்.)

அபத்தியத்தைப் புசிக்கின்றவன், திருடன், அரசன்மனைவியிடத்து ஆசையுள்ளபுருஷன் என்பவர் தம் அநர்த்தத்தை அறிந்தவர்களைப்போலிருக்கினும் பிராரப்தகர்மத்தினால் அபத்தியத்தினையும் திருட்டையும் வியபிசாரத்தையும் இச்சிக்கின்றார்கள். (௧௫௩)

௪. சுலோகம் ௭௯௮-ற் கூறிய பிராரப்தம் ஈசுவரனாலும் நீக்கக்கூடாமை.

[௭௯௮] न चात्रैतद्वारयितुमीश्वरेणापि शक्यते ।
यत ईश्वर एवाह गीतायामर्जुनं प्रति ॥ १५४ ॥

(அ-கை.)

அப்படியானால் அபத்தியத்தைப்புசித்தல்முதலியவற்றின் இச்சை பிராரப்தத்தின் பயனாதல் எதனால் அறியப்படுகின்றதென்றாசங்கித்து நீக்கக் கூடாததாயிருத்தலின் அறியப்படுகின்றது' என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்:—

च अत्र एतत् ईश्वरेण अपि वारयितुं न शक्यते ॥

(சு-ம்.)

இங்கு இஃது ஈசுவரனாலும் நிவர்த்திக்கக்கூடியதன்று.

(வி-ம்.)

இவ்வுலகத்தில் அபத்தியமுதலியவற்றை விரும்புகிறார்கள். இஃது ஈசுவரனாலும் நிவர்த்திக்கக்கூடியதன்று.

(அ-கை.)

பிராரப்தபயனாகிய அபத்தியமுதலியவற்றின் விருப்பமெதுவோ அது ஈசுவரனாலும் நிவர்த்திக்கக்கூடியதன்றென்பது எதனால் அறியப்படுகின்றதெனக் கூறுகின்றார்:—

यतः ईश्वरः एव गीतायां अर्जुनं प्रति आह ॥

(சு-ம்.)

எதனால் ஈசுவரனே கீதையில் அர்ச்சுனனை நோக்கிச் சொல்லியிருக்கின்றாரோ அதனால். (௧௫௪)

௫. சுலோகம் ௭௯௮-ற் கூறிய ஈசுவரநீதியில் கீதாவாக்கியத்தைச் சொல்லுதல்.

[௭௯௯] सदृशं चेष्टते स्वस्याः प्रकृतेर्ज्ञानवानपि ।
प्रकृतिं यांति भूतानि निग्रहः किं करिष्यति ॥ १५५ ॥

(அ-கை.)

கீதையின் மூன்றாவது அத்தியாயத்துள்ள ௩௩-வது சுலோகவடிவ வாக்கியத்தினைப் படிக்கின்றார்:—

ज्ञानवान् अपि स्वस्याः प्रकृतेः सदृशं चेष्टते । भूतानि प्रकृतिं यांति । निग्रहः किं करिष्यति ॥

(சு-ம்.)

ஞானவானும் தனது பிரகிருதியை யநுசரித்துச் சேஷ்டை செய்கின்றான். அதனால் சர்வப்பிராணிகளும் பிரகிருதியை யடைகின்றார்கள். நிக்கிரகம் என்ன செய்யும்?

(வி-ம்.)

விவேகஞானமுடைய புருஷனும் தனது பிரகிருதியை அநுசரித்துச் சேஷ்டை செய்கின்றான். முன் செய்யப்பட்ட தர்மாதர்மமுதலியவற்றின் சம்ஸ்காரம் நிகழ்காலப்பிறப்புமுதலியவற்றில் வெளிப்படுதலை யடைகின்றது. அது பிரகிருதி யெனப்படுகின்றது. எப்போது ஞானியும் பூர்வ சம்ஸ்காரத்தை அநுசரித்துச் சேஷ்டை செய்கின்றானோ அப்போது பின் மூர்க்கன் முன்சம்ஸ்காரத்தினை அநுசரித்துச் சேஷ்டை செய்கின்றானென்பதில் என்ன சொல்லவேண்டி யிருக்கிறது? ஆதலால் சர்வபூதங்களும் பிரகிருதியை யடைகின்றன. அதில் ஈசுவரனாகிய என்னாலாவது அந்நிய ஜீவனாலாவது செய்யப்பட்ட நிக்கிரகம் அதாவது பிரவிருத்தி நிவிருத்தியின் நிரோதம் எதுவோ அது என்ன செய்யும்? ஒன்றுஞ் செய்யாதென்பது பொருள். (௧௫௫)

௬. தீவிரப்பிராரப்தம் நீக்கத்தக்கதாகாமையில் அந்நியசாஸ்திரவசனத்தின் சம்மதி.

[௭௯௦] अवश्यंभाविभावानां प्रतिकारो भवेद्यदि ।
तदा दुःखैर्न लिप्येरन्नलरामयुधिष्ठिराः ॥ १५६ ॥

(அ-கை.)

தீவிரப்பிராரப்தம் நிவர்த்திக்கத்தக்கதாகா தென்பதில் அந்நியசாஸ்திர வசனத்தின் சம்மதியைக் கூறுகின்றார்:—

अवश्यंभाविभावानां प्रतीकारः यदि भवेत् । तदा नलरामयुधिष्ठिराः दुःखैः न लिप्येरन् ॥

(சு-ம்.)

அவசியம் ஆகத்தக்கனவாகிய பாவங்களின் அதாவது துக்கமுதலியவற்றின் நிவிருத்தி உபாயம் உண்டாகுமாயின் அப்போது நளராமயுதிஷ்டிரர்கள் துக்கங்களால் பற்றப்பட்டிரார். அவர்களும் துக்கக்கிரஸ்தர்களானார்கள். ஆதலால் அது நிவர்த்திக்கத்தக்கதன்று. (௧௫௬)

எ. பிராரப்தம் நீக்கப்படாததாகவே ஈசுவரனுக்கு அநீசுவரத்தன்மை நேராமை.

[எசா௩] न चेश्वरत्वमीशस्य हीयते तावता यतः ।
अवश्यंभाविताप्येषामीश्वरेणैव निर्मिता ॥ १५७ ॥

(அ-கை.)

அப்படியானால் பிராரப்தம் நீக்கத்தகாததாமாயின் அப்பிராரப்தத்தை நீற் சாமர்த்தியமின்றிய ஈசுவரனுக்கு அநீசுவரத்தன்மையுண்டாகுமே யென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

तावता ईशस्य ईश्वरत्वं च न हीयते ॥

(சு-ம்.)

அவ்வளவினால் அதாவது பிராரப்தம் நீங்காமையால் ஈசுவரனது ஈசுவரத்தன்மை கெடுதலை யடைகிறதில்லை.

(அ-கை.)

எதனால் ஈசுவரத்தன்மைக்கு ஹானியில்லையெனக் கூறுகின்றார்:—

यतः एषां अवश्यंभाविता अपि ईश्वरेण एव निर्मिता ॥

(சு-ம்.)

எதனால் இத்துக்கமுதலியவற்றின் அவசியம் ஆவதாந்தன்மையும் ஈசுவரனாலேயே ஆக்கப்பட்டதா யிருக்கின்றதோ அதனால்.

(வி-ம்.)

எக்காரணத்தினால் இத்துக்கமுதலியவற்றின் அவசியம் ஆவதாந் தன்மையும் ஈசுவரனாலேயே ஆக்கப்பட்டதாம். ஆதலால் இவற்றின் நீக்கப்படாமையினால் ஈசுவரனுக்கு அநீசுவரத்தன்மைப் பிரசங்கமில்லை என்பது பொருள். (கருஎ)

அ. அநிச்சாப்பிராரப்தத்தையும் சொல்லத்தொடங்குதல்.

[எசா௨] प्रश्नोत्तराभ्यामेवैतद्गम्यतेऽर्जुनकृष्णयोः ।
अनिच्छापूर्वकं चास्ति प्रारब्धमिति तच्छृणु ॥ १५८ ॥

(அ-கை.)

இப்படி விஸ்தாரத்தோடு இச்சாப்பிராரப்தத்தினைக் கூறி இப்போது அநிச்சாப்பிராரப்தத்தினைக் கூறத் தொடங்குகின்றார்:—

च "अनिच्छापूर्वकं प्रारब्धं अस्ति" इति एतत् अर्जुनकृष्णयोः प्रश्नोत्तराभ्यां एव गम्यते ॥

(சு-ம்.)

அன்றியும் அநிச்சாப்பிராரப்த மிருக்கின்றது என்பது அர்ச்சுன கிருஷ்ணர்களின் பிரசிேனாத்திரங்களினாலேயே அறியப்படுகின்றது.

(அ-கை.)

அவ்வநிச்சாப்பிராரப்தத்தைச் சொல்லுதற் பொருட்டுச் சிஷ்யனை எதிர்முகமாக்குகின்றார்:—

तत् शृणु ॥

(சு-ம்.)

அவ்வநிச்சாப்பிராரப்தத்தினைக் கேட்பாயாக. (க௫அ)

க. அநிச்சாப்பிராரப்தத்தில் அர்ச்சுனனது வினவடிவ சோவாக்கியம்.

[எசாக] अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।
अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥ १५९ ॥

(அ-கை.)

அவ்வநிச்சாப்பிராரப்தத்தில் கீதையின் மூன்றாவது அத்தியாயத்தி லுள்ள ௩௬-வது சுலோகவடிவ அர்ச்சுனனது பிரசினத்தை முதலில் காட்டு கின்றார்:—

अथ वार्ष्णेय "अयं पूरुषः केन प्रयुक्तः अनिच्छन् अपि बलात् नियोजितः इव पापं चरति" ॥

(சு-ம்.)

பகவானே! இப்புருஷன் எவனால் பிரேரிக்கப்பட்டவனாய் இச்சியா திருந்தும் வலியப் பொருத்தப்பட்ட புருஷனைப்போலப் பாபத்தை ஆசரிக் கின்றான்?

(வி-ம்.)

விருஷ்ணியென்னும் பெயருடைய யாதவன் சம்பந்தியாகிய பகவா னே! இப்புருஷன் எவனால் பிரேரிக்கப்பட்டவனாய் விரும்பாதிருந்தும் இராஜாவினால் வலியப்பொருத்தப்பட்ட தூதனைப்போல் பாபத்தை ஆச ரிக்கின்றான்? (க௫கூ)

௪0. சுலோகம் எ௩௬-ற் கூறிய பிரசினத்தின்பேரில் ஸ்ரீ கிருஷ்ணபகவானது உத்தரவடிவ கீதாவாக்யம்,

[எ௩௪] काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।
महाशनो महापाप्मा विध्येनमिह वैरिणम् ॥ १६० ॥

(அ-கை.)

இப்போது கீதையின் மூன்றாவது அத்தியாயத்திலுள்ள ௩௭-வது சுலோகவடிவ ஸ்ரீ கிருஷ்ணபகவானது உத்தரத்தைக் கூறுகின்றார் :—

"एषः रजोगुणसमुद्भवः कामः एषः क्रोधः महाशनः महापाप्मा इह एनं वैरिणं विद्धि" ॥

(சு-ம்.)

"இது காமம். இது குரோதம். இரஜோகுணத்தினால் உற்பத்தியுடையதும் மகாபோஜனமுடையதும் மகாபாபமுமாகிய இக்காமத்தினை இங்கு வைரியென்றறிக."

(வி-ம்.)

இது புருஷனைப் பிரவிருத்திக்கச் செய்யும் ரஜோகுணத்தால் உற்பத்தியுடைய இச்சாவிசேஷமாகிய காமமாம். பிரசித்தமாகிய இக்காமம் ஒருகால் குரோதவடிவமாகவும் பரிணாமத்தை யடைகின்றது. ஆதலால் குரோதவடிவமாம். அக்காமம் மீண்டும் எப்படியிருக்கின்றதெனின், விஷயங்களின் சமூகவடிவமாகிய பெரியபோஜனம் எதற்கிருக்கின்றதோ அத்தன்மையதும், பாபத்திற் கேதுவா யிருத்தலால் மகாபாபவடிவினதுமாம். உபசாரத்தால் இக்காமத்திற்குப் பாபவடிவத்தன்மையாம். ஆதலால் இச்சம்சாரத்தில் இக்காமவடிவ வைரியினை அறிக. இங்கே இஃது அபிப்பிராயமாம்:— பிராரப்தவசத்தால் விருத்தியடைந்த இந்த இரஜோகுண மெதுவோ அதன் காரியமாகிய காமம் குரோத மென்னு மிரண்டனுள் ஒன்றே புருஷனைப் பிரவிருத்திப்பதா யிருத்தலால் இச்சையின்றியும் பாபத்தில் புருஷனுக்குப் பிரவிருத்தி யுண்டாகின்றது. (க௬0)

[எ௩௫] स्वभावजेन कौंतेय निबद्धः स्वेन कर्मणा ।
कर्तुं नेच्छसि यन्मोहात्करिष्यस्यवशोऽपि तत् ॥ १६१ ॥

(அ-கை.)

அப்படியானால் இந்த எ௩௪-ற் கூறிய கீதையின்வாக்கியத்தில் காமக்குரோதங்களுக்கே புருஷனைப் பிரவர்த்திக்குந்தன்மை காணப்படுகின்றது. அநிச்சாப்பிராரப்தத்திற் கில்லையே யென்றாசங்கித்து, அவ்வநிச்சாப்பிராரப்

நக்கிறிந்தே பிரவிருத்திக்கச் செய்யுந்தன்மையினை பிரதிபாதிக்கும் அக்கி தையின் ௧அ-வது அத்தியாயத்திலுள்ள ௬0-வது சுலோகவாக்கிய வாக்கியத் தினைக் காட்டுகின்றார்:—

"कौंतेय । स्वभावजेन स्वेन कर्मणा निबद्धः यत् कर्तुं न इच्छसि । तत् अपि मोहात् अवशः करिष्यसि" ॥

(சு-ம்.)

"அர்ச்சுனா! சுபாவத்தாற்றோன்றிய தனது கர்மத்தினால் கட்டுப்பட் டவனாகிய நீ எதனைச் செய்ய விரும்புகிறதில்லையோ அதனையும் மோகத்தி னால் வசமிழந்தவனாய்ச் செய்வாய்."

(வி-ம்.)

குந்திபுத்திரா! சுபாவத்தாற்றோன்றியது அதாவது தன்னாலேயே அநுஷ்டிக்கப்பட்டது என்பதனாலேயே தனது பிராரப்தகர்மம் எதுவோ அதனால் பிரேரிக்கப்பட்டவனாய் எந்தயுத்தத்தினைச் செய்ய விரும்பவில் லையோ அதனையும் மோகத்தினால் வசமிழந்தவனாய்ச் செய்வாய். இதனால் அநிச்சாப்பிராரப்தமிருக்கின்றதென்று அங்கிகரிக்கத்தக்கதாமென்பது தாற்பரியம். (௧௬௧)

௧௧. பரேச்சாப்பிராரப்தத்தைக் கூறுதல்.

[௭௪௬] नानिच्छंतो न चेच्छंतः परदाक्षिण्यसंयुताः ।
सुखदुःखे भजन्त्येतत्परेच्छापूर्वकर्म हि ॥ १६२ ॥

(அ-கை.)

இப்போது பரேச்சாப்பிராரப்த மிருக்கிறதென்று கூறுகின்றார்:—

अनिच्छंतः न च इच्छंतः न । परदाक्षिण्यसंयुताः सुखदुःखे भजंति एतत् परेच्छापूर्वकर्म हि ॥

(சு-ம்.)

இச்சியாதிருந்தும் புசிக்கிறதில்லை; இச்சித்தும் புசிக்கிறதில்லை; ஆனால் பரோபகார புத்தியோடுகூடியவனாய்ச் சுகதுக்கங்களைப் புசிக்கின்றான். இப் பரேச்சாபூர்வககர்மம் பிரசித்தமாம்.

(வி-ம்.)

விரும்பாமலும் சுகதுக்கங்களைப் புசிக்கிறதில்லை; விரும்பியும் புசிக் கிறதில்லை; ஆனால் மற்றப் புருஷர்களது உபகார புத்தியோடு கூடியவனாய்

அவர்களது பிரியத்தின்பொருட்டாகவே சுகதுக்கங்களை அநுபவிக்கின்றான். ஆதலால் இச்சுகமுதலிய போகத்திற்கு ஏதுவாகிய பரேச்சாபூர்வகப் பிராரத்தகர்மம் பிரசித்தமாம் என்பது பொருள். இதனாலேயே ஞானிக்கு விஷயங்களில் தோஷதிருஷ்டியிருந்தும் பிராரப்தம் நிவர்த்திக்கப்படாததாயிருத்தலின் அப்பிராரப்தத்திற்குள்ள இச்சையை உண்டுபண்ணுந்தன்மை யதுவோ அதனை நிவர்த்திக்கப் புருஷன் சமர்த்தனல்லன் என்பது தாற்பரியம். (கசுஉ)

ச. ஞானிக்குப் பாதிக்கப்பட்ட இச்சை சம்பவித்தலோடு போகத்தால் வியசனமின்மையும் எசஎ-எருஎ.

க. ஞானிக்கு இச்சையை அங்கீகாரஞ்செய்ய "எதனை இச்சிக்கின்றவனாய்" என்னுஞ் சுருதியினது விரோதத்தின் சங்கையும் திருஷ்டாந்தத்தோடு கூடிய சமாதானமும்.

[எசஎ] कथं तर्हि किमिच्छन्नित्येवमिच्छा निषिध्यते ।
नेच्छानिषेधः किंत्विच्छावाधो भर्जितबीजवत् ॥ १६३ ॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவத்தை யுணர்ந்தவனுக்கும் இச்சையை அங்கீகரிக்கின், "எதனை விரும்பியவனாய்" என்று சுலோகம் ருஅரு-ல் கூறிய சுருதிக்கு விரோத முண்டாகுமென்பதாக வாதி மூலத்திற் சங்கிக்கின்றான்:—

तर्हि "किं इच्छन्" इति एवं इच्छा कथं निषिध्यते ॥

(சு-ம்.)

அப்போது "எதனை விரும்பியவனா" யென்னும் சுருதியினால் இச்சையின் நிஷேதம் எவ்வாறு செய்யப்பட்டது.

(வி-ம்.)

எப்போது ஞானிக்குப் பிராரப்தத்தினால் இச்சை அங்கீகரிக்கப்படுகின்றதோ, அப்போது "எதனை இச்சிக்கின்றவனாய்" என்னுஞ் சுருதிவாக்கியத்தினால் எவ்வாறு இச்சையின் அபாவம் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது என்பது பொருள்.

(அ-கை.)

"எதனை இச்சிக்கின்றவனாய்" என்னுஞ் சுருதிவாக்கியத்தினால் இச்சையின் அபாவம் சொல்லப்படுகிறதில்லை. ஆனால் இச்சை இருக்கினும் அவ்விச்சைக்குச் சாமர்த்தியமுடைய பிரவிருத்தியை யுண்டுபண்ணுஞ்

தன்மை இல்லை யென்று போதிக்கப்படுகின்றது என்பதாகச் சித்தாந்தி பரிகரிக்கின்றார்: —

इच्छानिषेध: न किंतु इच्छाबाध: ॥

(சு-ம்.)

இச்சுருதியினால் இச்சையின் நிஷேதம் எதுவோ அது நாசமாகிற தில்லையென்று சொல்லப்படவில்லை. ஆனால் இச்சையின் பாதம் சொல் லப்படுகின்றது.

(அ-கை.)

சொரூபமாக உண்டாயிருந்தும் இச்சைக்குச் சாமர்த்திய மின்மையில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

भर्जितबीजवत् ॥

(சு-ம்.)

வறுக்கப்பட்ட விதையினைப்போல. (௩௬௫)

[௭௪அ] भर्जितानि तु बीजानि संत्यकार्यकराणि च ।
विद्वदिच्छा तथेष्टव्याऽसत्त्वबोधान्न कार्यकृत् ॥ १६४ ॥

(அ-கை.)

சுருக்கமாக ௭௪அ-வது சுலோகத்திற் சொல்லப்பட்ட அர்த்தத்தினை விஸ்தாரமாகக் கூறுகின்றார்:—

भर्जितानि तु बीजानि अकार्यकराणि च संति । तथा विद्वदिच्छा इष्टव्याऽसत्त्वबोधात् कार्यकृत् न ॥

(சு-ம்.)

வறுக்கப்பட்ட வித்து காரியமாகிய அங்குரத்தின் உற்பத்தியினைச்செய் வதாகாததுபோல வித்துவான்களது இச்சை தனது விஷயத்தின் அசத் துத்தன்மைப் போதத்தால் காரியத்தை யுண்டுபண்ணுவதாகாது.

(வி-ம்.)

வறுக்கப்பட்ட விதை தான் சொரூபமாக இருக்கினும், முளைமுதலிய வடிவினதாகிய காரியத்தை உண்டுபண்ணுவதாகாததுபோல ஞானியின் இச்சை தான் இருப்பதாயிருக்கினும் இச்சையின் விஷயமாகிய பதார்த்தத் தின் மித்தியாத்தன்மையின் ஞானத்தினால் பாதிக்கப்பட்டதாயிருத் தலின் வியசனமுதலிய காரியங்களில் சாமர்த்தியமுடையதாகா தென்பது பொருள். (௧௬௪)

௨. ஞானியின் பாதிக்கப்பட்ட இச்சைக்கும் போகமாகிய பயன் உண்டென்பதில் திருஷ்டாந்தம்.

[எசக] दग्धबीजमरोहेऽपि भक्षणायोपयुज्यते ।
विद्वदिच्छाप्यल्पभोगं कुर्यान्न व्यसनं बहु ॥ १६१ ॥

(அ-கை.)

அப்படியானால் வித்துவானுக்குப் பயனின்மையால் இச்சையே அங்கீகரிக்கத்தக்கதன்றென்றாசங்கித்துப் போகவடிவ பயன் இருத்தலால் வித்துவானது இச்சைக்குப் பயனில்லை யென்பது சித்தியாது என்று திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

दग्धबीजं अरोहे अपि भक्षणाय उपयुज्यते । विद्वदिच्छा अपि अल्पभोगं कुर्यात् बहु व्यसनं न ॥

(சு-ம்.)

வறுத்தவிதை முளையினுற்பத்தி இல்லாததாயினும் புசித்தற்பொருட்டு உபயோகப்படுவதுபோல வித்துவான்களது இச்சையும் அற்பபோகத்தைச் செய்கின்றது; வெகுவிதமான வியசனத்தைச் செய்கிறதில்லை.

(வி-ம்.)

வியசனமென்னுஞ் சொல் விபத்தென்னும் ஆபத்திலும், நரகத்திலும், காமத்தாற் றோன்றுவனவும் குரோதத்தாற் றோன்றுவனவுமாகிய தோஷங்களிலும் நிற்கின்றதென்று கோசத்திற் சொல்லப்பட்டிருத்தலால் விபத்து முதலியவடிவ *சசு. வியசனம் அநேகவிதமாம். (கசரு)

* சசு. (க) ஆசக்தியினாலும் விஷயமுரவியவற்றில் ஒருமுறை யுண்டாம் இனிமையினாலும் பின் அவற்றின் பிரிவால் சித்தத்திற்குச் சுகமுண்டாகிறதில்லை. இத்தன்மையாக அவ்விஷயங்களில் பொருந்துதல் எதுவோ அது ஆபத்துவடிவவியசனமாம்.

(உ) விழுதல், வேற்றுமை, வேறுசித்தமாதல் என்றல் முதலியன பிரம்சவடிவ வியசனமாம். (பிரம்சம்=நழுவுதல்.)

(ங) வேட்டையாடுதல் முதலியன, பகற்றூங்குதல், சூது, புறங்கூறல், வியபிசாரம், கூத்தாடுதல், பாடுதல், வீணைகத்திரிதல், கள்முதலியன குடித்தல் என்னும் க0 வகையான காமஜந்நியதோஷங்களும் புருஷனுக்குச் சேருகின்றன. அவை தனித்தனியே வியசன மெனப்படும்.

(ச) துஷ்டகர்மம், சாகசம் (விசாரமின்றி வினைவில் தொந்தரவு செய்தல்), கஷ்டம், மார்ச்சரம், துவேஷம், கபடம், வைதல், வேலைக்கேடு என்னும் எட்டும் துரோதஜந்நிய தோஷங்களாம். அவை தனித்தனியே வியசன மெனப்படும்.

௯. ஞானியினுடைய கர்மம் வியசனத்தை யுண்டுபண்ணுமையும் போகத்தால் நாசமாதலும் வியசன முண்டாதற்குக் காரணமும்.

[௱௬௬] भोगेन चरितार्थत्वात्प्रारब्धं कर्म हीयते ।
भोक्तव्यसत्यताभ्रांत्या व्यसनं तत्र जायते ॥ १६६ ॥

(அ-கை.)

அப்படியானுல் பிராரப்தகர்மமே போகவாயிலாக வியசனத்தையு முண்டாக்குமென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

प्रारब्धकर्मभोगेन चरितार्थत्वात् हीयते ॥

(சு-ம்.)

பிராரப்தகர்மம் போகத்தினுல் முடிந்ததாதலின் நாசமாகின்றது.

(வி-ம்.)

பிராரப்தகர்மம் போகமாத்திரத்திற்கு ஏதுவாயிருத்தலால் வியசனத்தை யுண்டுபண்ணுவதாவதில்லை யென்பது பொருள்.

(அ-கை.)

அப்போது வியசனம் எதனுற் பிறக்கின்றதெனக் கூறுகின்றார்:—

भोक्तव्यसत्यताभ्रांत्या तत्र व्यसनं जायते ॥

(சு-ம்.)

போகித்தற்குத் தகுதியான விஷயங்களினது சத்தியத்தன்மையின் பிராந்தியினுல் அவ்விஷயங்களில் வியசன முண்டாகின்றது. (௧௬௬)

௰. வியசனத்திற்கு ஏதுவாகிய போக்கியத்தின் சத்தியத்தன்மை யாகிய பிரமத்தின் சொரூபம்.

[௱௬௭] मा विनश्यत्वयं भोगो वर्द्धतामुत्तरोत्तरम् ।
मा विघ्नाः प्रतिबध्नंतु धन्योऽस्म्यस्मादिति भ्रमः ॥ १६७ ॥

(அ-கை.)

வியசனத்திற்கேதுவாகிய பிரமத்தினைக் காட்டுகின்றார் :—

“अयं भोगः मा विनश्यतु । उत्तरोत्तरम् वर्द्धताम् । विघ्नाः मा प्रतिबध्नंतु । अस्मात् धन्यः आस्मि” इति भ्रमः ॥

(சு-ம்.)

"இப்போகங் கெடலாகாது. ஆனால் மேலுமேலும் விருத்தியடைய வேண்டும். இப்போகத்திற்கு விக்கினமாகிய பிரதிபந்தத்தைச் செய்யாதீர்கள். இப்போகத்தால் நான் தன்னியனு யிருக்கின்றேன்." என்பது பிரமம்.

(வி-ம்.)

இப்போகம் விநாசத்தை யடையலாகாது. ஆனால் இது மேலுமேலும் விருத்தியடைய வேண்டும். இப்போகத்திற்கு விக்கினமாகிய பிரதிபந்தத்தினைச் செய்யாதீர்கள். இப்போகத்தினாலேயே நான் தன்னியனு யிருக்கின்றேன் என்னும் வடிவினதாக அஞ்ஞானிக்குப் பிரம முண்டாகின்றது. அந்தப் பிரமத்தினால் வியசன முண்டாகின்ற தென்பது பொருள். (கசுஎ)

ஙு. பிரசங்கத்தினால் சுலோகம் எருக-ற் கூறிய பிரமத்தின் நிவிருத்தியுபாயம்.

[எருஉ] यदभावि न तद्भावि भावि चेन्न तदन्यथा ।
इति चिंताविषघ्नोऽयं बोधो भ्रमनिवर्तकः ॥ १६८ ॥

(அ-கை.)

பிரசங்கத்தால் எருக-ற் கூறிய வியசனத்திற் கேதுவான இந்தப் பிரமத்தினது நிவிருத்தியின் உபாயத்தைக் கூறுகின்றார் :—

यत् अभावि तत् भावि न । भावि चेत् तत् अन्यथा न । इति चिंता-विषघ्नः अयं बोधः भ्रमनिवर्तकः ॥

(சு-ம்.)

எது உண்டாகாததோ அது உண்டாகாது; உண்டாவது எதுவோ அது வேறுவகையாக உண்டாகாது என்பதான சிந்தைவடிவ விஷத்தினை நாசஞ்செய்யும் போத மெதுவோ அது பிரமத்தை நீக்குவதாம்.

(வி-ம்.)

எது ஆகாததோ அது ஆகவே ஆகாது; எது ஆகத்தக்கதோ அது வேறுவிதமாக ஆகாது என்னும் வடிவினதான சிந்தையாகிய விஷத்தினை நாசஞ்செய்வதாகிய அதாவது இவ்வென்னுடைய இஷ்டம் எப்போதுண்டாகும் இவ்வநிஷ்டம் எப்போது நீங்கும் என்றல்முதலியவடிவ சிந்தையே தனது சம்பந்தத்தோடுகூடிய புருஷனுக்கு நாசத்திற்கேதுவா யிருத்தலால் விஷத்தைப்போல விஷமாம். இச்சிந்தைவடிவ விஷத்தினை நாசஞ்

செய்யுந்தன்மையினதாகிய போதம் எதுவோ அது முன் எடுக-ற் கூறிய பிரமத்தை நிவர்த்திப்பதா மென்பது பொருள். (௧௬அ)

௬. ஞானி அஞ்ஞானிகளுக்குப் போகமுடைமை சமமாயினும் வியசன முண்மை வியசனமின்மைகளிற் காரணம்.

[எ௬௯] समेऽपि भोगे व्यसनं भ्रांतो गच्छेन्न बुद्धवान् ।
अशक्यार्थस्य संकल्पाद्भ्रांतस्य व्यसनं बहु ॥ १६९ ॥

(அ-கை.)

அப்படியானால் ஞானி அஞ்ஞானிகள் இருவருக்கும் போகமுடைமை சமானமாக அஞ்ஞானியாகிய ஒருவனுக்கு வியசன முண்டாகின்றது; ஞானிக்கோ அவ்வியசனமுண்டாகிறதில்லை. இப்பேதம் எக்காரணத்தினாலா மென் றாசங்கித்து விபரீத ஞானத்தின் உண்மை இன்மைகளால் அவ் வியசனமுண்டாதல் உண்டாகாமைவடிவ பேதத்தின் சித்தி யுண்டாகின்றதென்று கூறுகின்றார்:—

भोगे समे अपि भ्रांतः व्यसनं गच्छेत् बुद्धवान् न ॥

(சு-ம்-)

போகம் சமானமாயினும் பிராந்தனாகிய அஞ்ஞானி வியசனத்தை யடைகின்றான்; ஞானி வியசனத்தை யடைகிறதில்லை.

(அ-கை.)

அப்படியானால் பிராந்தபுருஷர்களிடத்து வியசனத்தின் காரணத் தன்மை எவ்வாறிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

अशक्यार्थस्य संकल्पात् भ्रांतस्य बहु व्यसनम् ॥

(சு-ம்.)

ஆகக்கூடாத விஷயத்தினைச் சங்கற்பித்தலால் பிராந்தபுருஷனுக்கு வெகுவிதமான வியசன முண்டாகின்றது. (௧௬௯)

[எ௭௦] मायामयत्वं भोगस्य बुध्वास्थामुपसंहरन् ।
भुंजानोऽपि न संकल्पं कुरुते व्यसनं कुतः ॥ १७० ॥

(அ-கை.)

விவேகிக்கு அவ்வியசனத்திற்கு ஏதுவாந்தன்மையின்மையினைக் காட்டுகின்றார்:—

भोगस्य मायामयत्वं बुध्वा आस्थां उपसंहरन् भुंजानः अपि संकल्पं न कुरुते व्यसनं कुतः ॥

(சு-ம்.)

ஞானி போகத்தின் மாயாமயத்தன்மையை அறிந்து அதில் ஆசையைச் சுருக்கி அநுபவிக்கினும் முடியாத பொருளைச் சிந்தித்தலாகிய சங்கற்பத்தைச் செய்கிறதில்லை. ஆதலால் எக்காரணத்தால் வியசனமுண்டாகும். (கஎ0)

எ. அநேகவித தோஷங்களைக் காணுதலால் சுகத்துக்குக் காரணமாகிய போக்யத்திலும் ஆசை நீக்குதல்.

[எ௫௫] स्वप्नेंद्रजालसदृशमचिंत्यरचनात्मकम् ।
दृष्टनष्टं जगत्पश्यन्कथं तत्रानुरज्यति ॥ १७१ ॥

(அ-கை.)

அப்படியானால் மித்தியாவடிவத்தன்மையின் ஞானமுண்டாகியும் போகம் அக்காலசம்பந்தமுள்ள சுகத்திற்கேதுவா யிருத்தலால் ஆசையின் சுருங்குதல் எவ்விதத்தாலுண்டாமென் றுசங்கித்து, வெகுவிதமாகத் தோஷத்தைக் காணுதலால் ஆசையின் சுருங்குதலுண்டா மென்று கூறுகின்றார் :—

स्वप्नेंद्रजालसदृशं अचिंत्यरचनात्मकं दृष्टनष्टं जगत् पश्यन् तत्र कथं अनुरज्यति ॥

(சு-ம்.)

சொப்பனேந்திரஜாலங்களைப் போன்ற சிந்திக்கத்தகாத சிருஷ்டி வடிவ அதாவது அநிர்வசனீயவடிவ *சஎ. திருஷ்டநஷ்டஜகத்தினைக் காண்கின்ற ஞானி அதன்கண் எப்படி விருப்பத்தைச் செய்வன்? (கஎக)

அ. போக்கியத்தில் ஆசக்தி உண்டாகாமையில் உபாயம்.

[எ௫௬] स्वस्वप्नमापरोक्ष्येण दृष्ट्वा पश्यन्स्वजागरम् ।
चिंतयेदप्रमत्तः सन्नुभावनुदिनं मुहुः ॥ १७२ ॥

(அ-கை.)

அப்படியானால் எ௫௫-வது சுலோகத்திற் கூறிய சொப்பன இந்திரஜாலங்களின் ஒப்புமைமுதலியவற்றின் ஞானமுண்டாயின் ஆசக்தி இராது.

---

* சஎ. பார்க்கும்போதே அழியுந்தன்மையினையுடைய.

அச்சொப்பனாதிகளின் ஒப்புமைமுதலியவற்றின் ஞானந்தான் எதனாலுண்டாகுமென்றாசங்கித்து, அச்சாக்கிரஜகத்து சொப்பன மெய்பவற்றின் ஒப்புமையுணர்ச்சி உற்பத்தியாகும் உபாயத்தினை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார் :—

स्वस्वप्नं आपरोक्ष्येण दृष्ट्वा स्वजागरं पश्यन् उभौ अप्रमत्तः सन् अनुदिनं मुहुः चिंतयेत् ॥

(சு-ம்.)

தனது சொப்பனத்தை அபரோக்ஷமாகக் கண்டு தனது ஜாக்கிரத்தைப் பார்க்கின்றவனும் சொப்பன ஜாக்கிர மிரண்டனையும் பிரமாதமின்றியவனாய் நித்தியம் அடிக்கடி சிந்தனை செய்யக்கடவன்.

(வி-ம்.)

தனது சொப்பனத்தை அபரோக்ஷத்தன்மையாற் கண்டு தனது சாக்கிரத்தை அநுபவஞ்செய்கின்றவனும் சொப்பன ஜாக்கிரமிரண்டனையும் சாவதானமாய்ச் "சொப்பன சமானமாம் இச்சாக்கிரம்" என்றடிக்கடி சிந்திக்கக்கடவன். (௧௭௨)

[௭௩௭] चिरं तयोः सर्वसाम्यमनुसंधाय जागरे ।
सत्यत्वबुद्धिं संत्यज्य नानुरज्जति पूर्ववत् ॥ १७३ ॥

(அ-கை.)

இதுவுமது:—

तयोः सर्वसाम्यं चिरं अनुसंधाय जागरे सत्यत्वबुद्धिं संत्यज्य पूर्ववत् न अनुरज्यति ॥

(சு-ம்.)

அச்சொப்பன சாக்கிரங்களின் சகல சமத்தன்மைகளையும் நெடுங்காலம் அநுசந்தானஞ் செய்து ஜாக்கிரத்தில் சத்தியத்தன்மைப் புத்தியை விட்டு முன்போல ஆசையை அடைகிறதில்லை.

(வி-ம்.)

இவ்வாறு சொப்பன ஜாக்கிரங்களின் அக்காலத்திற்றானே போகத்திற் கேதுவாதல் பரிணாமத்தால், ரசமில்லாதனவாதல், விநாசமுடைமைமுதலியவடிவ சகல சமத்தன்மையினையும் வெகுகாலபரியந்தம் சிந்தித்து, ஜாக்கிரத்திலும் சத்தியத்தன்மையின் புத்தியைவிட்டு, ஜாக்கிரவஸ்துக்களிலும்

* ௪௮. முன்போல அதாவது ஜகத்தின் சத்தியத்தன்மையுணர்ச்சிக்காலத்திற்போல பற்றுள்ளவனாகிறதில்லை யென்பது பொருள். (௧௭௩)

௫. பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையுணர்ச்சிக்கும் பிராரப்தபோகத்திற்கும் விரோத மின்மை ௭௫௮-௭௬௮.

௧. பிராரப்தபோகத்திற்கு விஷயத்தின் சத்தியத்தன்மை வேண்டியதில்லையெனல்.

[௭௫௮] इंद्रजालमिदं द्वैतमचिंत्यरचनात्वतः ।
इत्यविस्मरतो हानिः का वा प्रारब्धभोगतः ॥ १७४ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரபஞ்சத்தினை விஷயஞ்செய்யும் மித்தியாத்தன்மையின் உணர்ச்சிக்கும் விஷயத்தின் சத்தியத்தன்மையின் அதீனமான போகத்திற்கும் ஒன்றற்கொன்று விரோதமிருத்தலால் மித்தியாத்தன்மையின் ஞானமிருக்குங்கால் ஞானிக்கு எப்படிப் போகத்தின் சித்தியுண்டாகுமென் றாசங்கித்து,போகத்திற்கு விஷயத்தினது சத்தியத்தன்மையின் அபேக்ஷை யின்மையால் மித்தியாத்தன்மையின் ஞானத்திற்கும் போகத்திற்கும் விரோதமில்லை யென்று பரிகரிக்கின்றார் :—

"इदं द्वैतं अचिंत्यरचनात्वतः इंद्रजालम्" इति अविस्मरतः प्रारब्धभोगतः का वा हानिः ॥

(சு-ம்.)

இத்துவைதமாகிய ஜகத்து சிந்திக்கத்தகாத ஆக்கமுடையதா யிருத்தலால் இந்திரஜாலமா மென்னும் அர்த்தத்தினை மறவாதிருக்கும் ஞானிக்குப் பிராரப்தபோகத்தால் என்ன கேடுண்டாகின்றது ?

(வி-ம்.)

" இத்துவைதமாகிய போக்கியசமூகம் சிந்திக்கத்தகாத ஆக்கமுடையதா யிருத்தலின் இந்திரஜாலத்தைப்போல மித்தையாம்." என்று யுக்தியினால் அறிந்து, இதனை மறவாதிருக்கும் ஞானிக்குப் பிராரப்தபோகத்

* ௪௮. "பாலினின்றும் கடைதலாதி உபாயவாயிலாக வெண்ணெயை எடுத்துப் பின்னர் அந்தப்பால் அல்லது தயிரின்கண் போடப்பட்டதாயின் முன்போலாகிற தில்லை. அதுபோல மித்தியாவடிவு புத்திமுதலியவற்றினின்றும் விவேசனஞ் செய்யப்பட்ட ஞானசொரூப ஆத்மா முன்போலத் தேகி (தேகாபிமானமுடையது) ஆகிறதில்லை. இவ்வாறு வேறு வியவகாரத்தையும் முன்போல் அடைகிறதில்லை." என்று ஆசாரியர் உபதேசசகஸ்ரியில் கூறியிருக்கின்றனர். இதனால் ஞானமுடையவன் முன்போல் விஷயங்களில் பற்றுடையவனாகான் என்னும் பொருள் பொருத்தமுடையதாம்.

தால் அதாவது பிராரப்த கர்மங்களின் பயனாகிய சுகதுக்கங்களின் அநுபவத்தால் மித்தியாத்தன்மையின் ஞானத்திற்கு என்ன கெடுதியுண்டாகின்றது? அல்லது மித்தியாத்தன்மையின் ஞானத்தால் போகத்திற்கென்ன கெடுதியுண்டாகின்றது? மித்தியாத்தன்மையின் ஞானமும் பிராரப்தமுமாகிய இரண்டும் வெவ்வேறு விஷயமுடையனவா யிருத்தலின் அவற்றிற் கொன்றற்கொன்று சிறிதும் விரோதமில்லை யென்பது தாற்பரியம். (௧௭௪)

௨. தத்துவஞானத்திற்கும் பிராரப்தத்திற்கும் பின்னவிஷயமிருத்தல்.

[௭௩௧] निर्बंधस्तत्त्वविद्याया इंद्रजालत्वसंस्मृतौ ।
प्रारब्धस्याग्रहो भोगे जीवस्य सुखदुःखयोः ॥ १७५ ॥

(அ-கை.)

ஜகத்தின் மித்தியாத்தன்மையின் ஞானமும் பிராரப்தமுமாகிய இரண்டன் பின்ன விஷயத்தன்மையினையே காட்டுகின்றார்:—

तत्त्वविद्यायाः इंद्रजालत्वसंस्मृतौ निर्बंधः । प्रारब्धस्य जीवस्य सुखदुःखयोः भोगे आग्रहः ॥

(சு-ம்.)

தத்துவவித்தைக்கு இந்திரஜாலத்தன்மையின் ஸ்மிருதியில் நிர்ப்பந்தமாம். பிராரப்தத்திற்கு ஜீவனுக்குச் சுகதுக்கங்களைப் புசிப்பித்தலில் ஆக்கிரகமாம்.

(வி-ம்.)

தத்துவவித்தைக்கு அதாவது ஜகத்தின் மித்தியாத்துவத்தினை விஷயஞ்செய்யும் ஞானத்திற்கு இந்திரஜாலத்தினைப்போல ஜகத்தினது மித்தியாத்தன்மையின் அநுசந்தானத்தில் ஆக்கிரகமுண்டு; போகத்தின் விநாசத்திலில்லை. பிராரப்தகர்மத்திற்கு ஜீவனுக்குச் சுகதுக்கங்களைத் தருதலில் ஆக்கிரகமுண்டு; போக்கியமாகிய விஷயத்தின் சத்தியத்தன்மையைச் சம்பாதித்தலி லில்லை யென்பது கருத்து. (௧௭௫)

௩. வித்தைக்கும் பிராரப்தத்திற்கும் விரோதமின்மையில் அநுமானம்.

[௭௩௨] विद्यारब्धे विरुध्येते न भिन्नविषयत्वतः ।
जानद्भिरप्यैंद्रजालविनोदो दृश्यते खलु ॥ १७६ ॥

(அ-கை.)

இப்படி மித்தியாத்துவஞானத்திற்கும் பிராரப்தத்திற்கும் பின்ன விஷயமுடைமையைக் காட்டி அதில் அநுமானத்தைக் கூறுகின்றார்:—

विद्यारब्धे न विरुद्धयेते भिन्नविषयत्वतः ॥

(சு-ம்.)

வித்தையும் பிராரப்தமும் விரோதத்தை யடைகிறதில்லை; பின்ன விஷயமுடையனவா யிருத்தலால்.

(வி-ம்.)

வித்தையும் பிராரப்தகர்மமும் ஒன்றற்கொன்று விரோதத்தை யடைகிறதில்லை; பின்னவிஷயமுடையனவா யிருத்தலால்; அநுபவிக்கப்பட்ட பின்னவிஷயமுடைய ரூபரசங்களின் *௬௯. ஞானத்தினைப்போல என்பது பொருள்.

(அ-கை.)

போக்கியத்தினது மித்தியாத்தன்மையின் ஞானம் *௭௦. போகத்திற்குப் பாதகமாகா தென்பதனை எங்குக் கண்டீர் என்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

ऐंद्रजालविनोदः जानद्भिः अपि खलु दृश्यते ॥

(சு-ம்.)

இந்திரஜாலத்தின் விநோதத்தினை அறியும் புருஷர்களாலும் பிரசித்தமாய்க் காணப்படுகின்றது.

(வி-ம்.)

இந்திரஜாலசம்பந்தியான சாமர்த்தியவிசேஷ மெதுவோ அது இந்திரஜாலத்தன்மையினை அறியும் புருஷர்களாலும் பார்க்கப்படுகின்ற தென்பது பிரசித்தம். இது பொருள். (௧௭௬)

௪ பிராரத்தத்திற்கு வித்தையோடு விரோதமின்மை.

[௭௬௧] जगत्सत्यत्वमापाद्य प्रारब्धं भोजयेद्यदि ।
तदा विरोधि विद्याया भोगमात्रान्न सत्यता ॥ १७७ ॥

---

*௬௯. சர்க்கரையில் வெண்மைவடிவமும் மதுரரசமு மிருக்கின்றன. இவ்விரண்டன் ஞானம் பின்ன வஸ்துக்களாகிய குணவடிவங்களை விஷயஞ் செய்வனவாயிருத்தலின் ஒன்றற்கொன்று விரோதத்தை யடைகிறதில்லை. அதுபோல மித்தியாத்தன்மையின் மறதியின்மையும் சுகதுக்கங்களைக் கொடுத்தலுமாகிய பின்னவிஷயங்களையுடைய ஜகத்தின் மித்தியாத்தன்மைஞானத்திற்கும் பிராரப்தகர்மத்திற்கும் ஒன்றற்கொன்று விரோதமில்லை. ஆனால் நிஷ்காமகர்மஜந்நிய ஞானத்திற்கும் தேகாதிகளின் ஸ்திதிக் கேதுவான சகாமகர்மவடிவ பிராரப்தத்திற்கும் சகோதரனது புத்திரனுக்கும் பிதாவினது சகோதரனுக்கும்போலப் பரஸ்பர சிநேக முண்டு.

*௭௦. அநுகூலப்பிரதிகூல விஷயவடிவ நிமித்தத்தாற்றோன்றிய சுகதுக்கங்களின் அநுபவம் போகம்.

(அ-கை.)

அல்லது வித்தைக்கும் பிராரத்தகர்மத்திற்கும் விரோதமுண்டு என்று கூறுகின்ற வாதியினைப் பிராரத்தகர்மம் புத்திக்கு விரோதி யென்று சொல்லுகின்றாயா? அல்லது வித்தை பிராரத்தகர்மத்திற்கு விரோதி யென்று சொல்லுகின்றாயா? என்று கேட்கவேண்டும். இவை இரண்டு விகற்பமாம். அவற்றுள், பிராரத்தகர்மம் வித்தைக்கு விரோதியா மென்னும் முதற்பக்ஷம் பொருந்தாது என்று இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்:—

प्रारब्धं जगत्सत्यत्वं आपाद्य यदि भोजयेत् । तदा विद्यायाः विरोधि ॥

(சு-ம்.)

பிராரப்தம் ஜகத்தின் சத்தியத்தன்மையைச் சம்பாதித்துப் போகத்தைத் தருமாயின் அப்போது வித்தைக்கு விரோதியாம்.

(வி-ம்.)

பிராரப்தகர்மம் போக்கியசமூகமாகிய ஜகத்தின் சத்தியத்தன்மை யாகிய பாதிக்கப்படாததன்மையினைச் சம்பாதித்து, ஜீவனுக்குச் சுகதுக்க போகத்தைத் தருமாயின், அப்போது வித்தைக்கு விஷயமாகிய மித்தியாத் தன்மை நீங்குதலால் வித்தைக்கு விரோதியாம். அவ்வாறு பிராரப்தம் செய்கிறதில்லை. ஆனால் போகத்தினையே கொடுக்கின்றது. ஆதலால் பிராரத்தம் வித்தைக்கு விரோதி யன்றென்பது தாற்பரியம்.

(அ-கை.)

அப்படியானால் போகத்தின் வலியினாலேயே போக்கியத்தின் சத்தியத்தன்மை யுண்டாகுமேயென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

भोगमात्रात् सत्यता न ॥

(சு-ம்.)

போகமாத்திரத்தால் விஷயத்தின் சத்தியத்தன்மை யுண்டாகிறதில்லை.

(வி-ம்.)

விவாதத்திற்கு விஷயமான போக்கியசமூகவடிவ ஜகத்து யாதோ அது சத்தியமாம், போக்கியமா யிருத்தலால் என்னும் அநுமானத்தில் திருஷ்டாந்தத்தின் அபாவ மிருக்கின்றது. ஆதலால் இஃதசத்தநுமான மென்பது தாற்பரியம். (கஎஎ)

[எகஅ] अनूनो जायते भोगः कल्पितैः स्वप्नवस्तुभिः ।
जाग्रद्वस्तुभिरप्येवमसत्यैर्भोग इष्यताम् ॥ १७८ ॥

(அ-கை.)

அப்படியானால் மித்தியாபதார்த்தங்களால் போக முண்டாகின்றதென் பதிலும் திருஷ்டாந்த மில்லையேயென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

कल्पितैः स्वप्नवस्तुभिः अनूनः भोगः जायते । एवम् असत्यैः जाग्रद्वस्तुभिः अपि भोगः इष्यताम् ॥

(சு-ம்.)

எப்படிக் கற்பிதமான சொப்பனவஸ்துக்களால் முழுப்போக முண்டாகின்றதோ, அவ்வாறு அசத்தியமாகிய ஜாக்கிரவஸ்துக்களினாலும் முழுப் போகத்தினையும் அங்கீகரித்தல்வேண்டும். (கஎஅ)

ரு. வித்தைக்குப் பிராரத்தத்தோடு விரோத மில்லாமை.

[எகக] यदि विद्याऽपह्नुवीत जगत्प्रारब्धघातिनी ।
तदा स्यान्न तु मायात्वबोधेन तदपह्नवः ॥ १७९ ॥

(அ-கை.)

"வித்தை பிராரத்தகர்மத்தின் விரோதியாம்." என்று எகசு-வது சுலோகத்தின் விகற்பத்திற் கூறிய இரண்டாவது பக்ஷமும் பொருந்தா தென்று எகக-எகஅ சுலோகபரியந்தம் கூறுகின்றார் :—

विद्या यदि जगत् अपह्नुवीत तदा प्रारब्धघातिनी स्यात् ॥

(சு-ம்.)

வித்தை ஜகத்தினை விலயஞ்செய்யின் அப்போது பிராரப்தத்திற்கு விரோதியாம்.

(வி-ம்.)

பிரபஞ்சத்தினது மித்தியாத்தன்மையின் ஞானமாகிய வித்தை எப் போது ஜகத்தினை நாசஞ் செய்கின்றதோ, * நிக. அப்போது பிராரத்த கர்மத்தினது போகசாதனத்தின் அதாவது போக்கியவிஷயத்தின் நிவி ருத்தியினால் வித்தை பிராரப்தகர்மத்தின் விரோதியாம். அதனை அதாவது

*நிக. "இஃது இரஜதமன்று" என்பதாக இரஜதத்தின் விஷேதத்தினைச் செய் யும் ஞானத்தினைப்போலப் போக்கியத்தின் சொரூபத்தினை வித்தை விலயஞ்செய்யு மாயின்.

பிராரத்தபோகத்தின் சாதனமாகிய போக்கியவடிவ ஜகத்தின் நாசத்தினை வித்தை செய்கிறதில்லை. ஆனால் ஆகாயத்தின் கருமை, கானற்சலம், பிரதிபிம்ப மென்பவற்றின் மித்தியாத்துவ ஞானத்தினைப்போல ஜகத்தின் மித்தியாத்தன்மையினையே போதிக்கின்றது. இதனால் வித்தை பிராரத்தகர்மத்திற்கு விரோதியன் றென்பது தாற்பரியம்.

(அ-கை.)

அப்படியானால் மித்தியாத்தன்மையின் ஞானத்தினாலேயே வித்தை ஜகத்தின் சொரூபத்தினை விலயஞ்செய்யுமேயென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

मायात्वबोधेन तु तदपह्नवः न ॥

(சு-ம்.)

மாயாமயத்தன்மையின் அதாவது மித்தியாத்தன்மையின் ஞானத்தினாலோ அச்சகத்தின் விலய முண்டாகிறதில்லை.

(வி-ம்.)

இந்திரஜாலமுதலியவற்றில் சொரூபத்தின் விலயமின்றியும் மித்தியாத்தன்மையின் ஞானம் காணப்படுகின்றது. ஆதலால் மித்தியாத்தன்மையின் ஞானத்தால் ஜகத்தின் விலய முண்டாகிற தில்லை யென்பது தாற்பரியம் ()

[௧௮௦] अनपह्नुत्य लोकास्तदिंद्रजालमिदं त्विति ।
जानंत्येवानपह्नुत्य भोगं मायात्वधीस्तथा ॥ १८० ॥

(அ-கை.)

இவ்வெழுநூற்றறுபத்துமூன்றாவதிற் கூறிய அர்த்தத்தினையே வர்ணிக்கின்றார்:—

लोकाः तत् अनपह्नुत्य "इदं तु इंद्रजालम्" इति जानंति एव । तथा भोगं अनपह्नुत्य मायात्वधीः ॥

(சு-ம்.)

எப்படி உலகத்தோர் அவ்விந்திரஜாலத்தினை நிஷேதியாது "இது இந்திரஜால" மென்றறிந்து கொண்டிருக்கின்றார்களோ, அப்படியே போகத்தினைக் கெடுக்காது மாயாமயத்தன்மையின் புத்தி யுண்டாகின்றது.

(வி-ம்.)

எப்படி உலகத்தவர் அவ்விந்திரஜாலத்தின் சொரூபத்தினை நிஷேதியாது "இது இந்திரஜால" மென்றறிந்துகொண்டேயிருக்கின்றார்களோ, அப்படியே போகத்தின் நாசஞ்செய்யாது மித்தியாத்தன்மையின் புத்தியுண்டாகின்றதென்பது பொருள். (கஅ0)

[எகூரு] यत्र त्वस्य जगत्स्वात्मा पश्येत्कस्तत्र केन कम् ।
किं जिघ्रेत्किं वदेद्वेति श्रुतौ तु बहु घोषितम् ॥ १८१ ॥

(அ-கை.)

"எந்த அவஸ்தையில் இவ்வித்துவானுக்கு எல்லாம் ஆத்மாவேயாயிற்றோ, அங்கு எக்காரணத்தால் எவ்விஷயத்தைக் காண்பான்?" என்றல் முதலிய சுருதி திருஷ்டா தரிசன திருசியவடிவ திரிபுடியின் அபாவத்தைப் போதிக்கின்றது. ஆதலால் வித்தையானது உற்பத்தியானதாய் ஜகத்தினை விலயஞ் செய்யவேசெய்கின்றது. இவ்வாறாகவே வித்துவானுக்குப் பிராரத்தத்தின் போகம் எப்படி யுண்டாகும்? என்று சுருதியினை ஆசிரயித்து வாதி இரண்டு சுலோகங்களால் மூலத்திற் சங்கிக்கின்றான்:—

"यत्र तु जगत् अस्य स्वात्मा तत्र कः केन कं पश्येत् । किं जिघ्रेत् । किं वा वदेत्" इति श्रुतौ तु बहु घोषितम् ॥

(சு-ம்.)

எவ்வவஸ்தையில் இந்த ஞானிக்கு ஜகத்து தனது ஆத்மாவேயாயிற்றோ, அங்கு எவன் எதனால் எதனைக் காண்பான்? எதனை முகர்வான்? எதனைச் சொல்லுவான்?" என்னுஞ் சுருதியிலோ வெகுமுறை கூறியிருக்கின்றது.

(வி-ம்.)

எந்த ஞானவஸ்தையில் சகல ஜகத்தும் இந்த ஞானிக்குத் தனது ஆத்மாவேயாயிற்றோ அதாவது "எது இவ்வெல்லாமோ அது இவ்வாத்மாவாம்." என்னும் ஞானத்தால் சொரூபமேயாகின்றதோ, அத்தசையில் பார்ப்பவன் யாவன்? எக்கண்ணுகிய சாதனத்தால் எவ்வுருவத்தின் சமூகமான திருசியத்தைக் காண்கின்றான்? இவ்வாறே கிராணேந்திரியவடிவ சாதனத்தால் எப்புஷ்பமுதலியவற்றை முகர்கின்றான்? அல்லது எவ்வாக்கினத்தால் எவ்வாக்கியத்தைக் கூறுகின்றான்? இவ்வாறே மற்ற சொல்லப்படாத இந்திரியங்களின் வியாபாரமின்மையினை அறிவித்தற்பொருட்டு

மூலசுலோகத்தில் யா-வா என்னுஞ் சப்தமிருக்கின்றது. இவ்வாறு அநேக முறை ஞானதசையில் ஜகத்தின் விலயம் சொல்லப்பட்டிருக்கின்றது என்பது பொருள். (கஅக)

[எகூகூ] तेन द्वैतमपह्नुत्य विद्योदेति न चान्यथा ।
तथा च विदुषो भोगः कथं स्यादिति चेच्छृणु ॥ १८२ ॥

(அ-கை.)

அச்சுருதியிற் கூறிய திரிபுடியின் அபாவத்தைச் சொல்லுதலால் என்ன சித்திக்கின்றது? எனப் பூர்வவாதி கூறுகின்றான்:—

तेन द्वैतं अपह्नुत्य विद्या उदेति । च अन्यथा न तथा च विदुषः भोगः कथं स्यात् । इति चेत् ॥

(சு-ம்.)

அவ்வேதுவால் துவைதத்தினை விலயஞ்செய்து வித்தை உதயமாகின்றது; வேறுவிதமா யில்லை. அவ்வாறாயின் வித்துவானுக்குப்போகம் எப்படியுண்டாகு மென்று கூறுவாயாயின்.

(வி-ம்.)

“स्वाप्ययसंपत्योरन्यतरापेक्षमाविष्कृतं हीति சுழுத்தி மோக்ஷ மென்னும் இரண்டனுள் ஒன்றன் அபேக்ஷையுடைமையை எதனால் சுருதி வெளிப்படுத்தியதோ” *ருஉ. என்னும் வியாசசூத்திரத்தில் “எவ்வவஸ்தையில் இவனுக்கு யாவும் ஆத்மாவாயினவோ” என்னும் உதாரணத்தால் சுருதிக்குச் சுழுத்தி மோக்ஷ மென்னு மிரண்டனுள் ஒன்றனை விஷயஞ் செய்வதாகுதலால் வியாக்கியானஞ் செய்யப்பட்டிருத்தலின் வித்தையினால் ஜகத்தின் விலய முண்டாகிற தில்லை யென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

* ருஉ. இது பிரஹ்மசூத்திரத்தின் நான்காவது அத்தியாயத்துள்ள நான்காவது பாதத்தின் பதினாறாவது சூத்திரமாம். எதனால் அச்சுருதியிலேயே சுழுத்தி முத்திகளின் பிரகரணபலத்தால் முற்கூறிய வசனங்களுக்குச் சுழுத்தி முக்தி என்னும் இரண்டவஸ்தைகளுள் ஒன்றன் அபேக்ஷைத்தன்மை வெளிப்படுத்தப்பட்டதோ, அதனால் அவ்விரண்டனுள் ஓர் அவஸ்தையினை அபேக்ஷித்து இவ்விசேஷஞானத்தினது அபாவத்தின் வசன மிருக்கின்றது. அது சிலவிடங்களில் சுழுத்தியவஸ்தையினை அபேக்ஷித்துச் சொல்லப்படுகின்றது, சிலவிடத்துக் கைவல்யாவஸ்தையினை அபேக்ஷித்துச் சொல்லப்படுகின்றது என்று அறியப்படுகின்றது. இது சூத்திரத்தின் அர்த்தம்.

शृणु ॥

(சு-ம்.)

கேள். (௧௮௨)

[௭௬௭] सुषुप्तिविषया मुक्तिविषया वा श्रुतिस्त्विति ।
उक्तं स्वाप्ययसंपत्योरिति सूत्रे ह्यतिस्फुटम् ॥ १८३ ॥

(அ-கை.)

இதுவுமது :—

श्रुतिः तु सुषुप्तिविषया वा मुक्तिविषया इति "स्वाप्ययसंपत्योः" इति सूत्रे अतिस्फुटं हि उक्तम् ॥

(சு-ம்.)

இவ்வெழுநூற்றறுபத்தைந்திற் கூறிய சுருதி சுழுத்தியினை விஷயஞ் செய்கின்றது, அல்லது முக்தியினை விஷயஞ் செய்கின்றது என்று "சுழுத்தி முக்தி யென்னு மிரண்டனுள் ஒன்றன் அபேக்ஷையினையே சுருதி வெளிப்படுத்துகின்றது." என்னும் பிரஹ்மசூத்திரத்தில் எதனுல் மிகவும் வெளிப்படையாகச் சொல்லியிருக்கின்றதோ அதனுல். (௧௮௩)

[௭௬௮] अन्यथा याज्ञवल्क्यादेराचार्यत्वं न संभवेत् ।
द्वैतदृष्टावविद्वत्ता द्वैतादृष्टौ न वाग्वदेत् ॥ १८४ ॥

(அ-கை.)

இவ்வெழுநூற்றறுபத்தைந்திற் கூறிய சுருதிக்குச் சுழுத்தி அல்லது முக்திவடிவ விஷயத்தினை அங்கீகரியாமையில் பாதகத்தினை அதாவது அநிஷ்டத்தன்மையினைச் சம்பாதிக்குந் தர்க்கத்தினைக் கூறுகின்றார்:—

अन्यथा याज्ञवल्क्यादेः आचार्यत्वं न संभवेत् ॥

(சு-ம்.)

இப்படி அங்கீகரியாவிடின் யாஞ்ஞவல்கியர்முதலியோர்களுக்கு ஆசாரியத்தன்மை சித்தியாது.

(அ-கை.)

அதில் யுக்தியைக் கூறுகின்றார்:—

द्वैतदृष्टौ अविद्वत्ता द्वैतादृष्टौ वाक् न वदेत् ॥

(சு-ம்.)

துவைதம் காணப்படின் அஞ்ஞானித்தன்மை யுண்டாம். துவைத மறியப்படாவிடின் வாக்குக் கூறாது.

(வி-ம்.)

யாஞ்ஞவல்கியர்முதலியோர் துவைதத்தைக் காண்பாராயின் அத்வைதஞானமின்மையால் ஆசாரியராகார். துவைதத்தைக் காணாவிடின் போதிக்கத்தக்க சிஷ்யர்முதலியோர் தோற்றாமையால் ஆசாரியரது வாக்குச் சிஷ்யனை நோக்கிப் போதித்தற்பொருட்டுப் பிரவிருத்தியாது. அதனால் வித்தியாசம்பிரதாயத்தினது நாசத்தின் பிரசங்க முண்டாகு மென்பது தாற்பரியம். (கஅச)

கா. அபரோக்ஷவித்தையினது சொரூபத்தின் நிச்சயம் எகாக-எஎ௫.

க. துவைதம் தோற்றாமையால் நிருவிகற்பசமாதியின் அபரோக்ஷவித்தியாத்தன் மையின் சங்கையும், சுழுத்தியில் அதிப்பிரசங்கத்தாற் சமாதானமும்.

[எகாக] निर्विकल्पसमाधौ तु द्वैतादर्शनहेतुतः ।
सैवापरोक्षविद्येति चेत्सुषुप्तिस्तथा न किम् ॥ १८५ ॥

(அ-கை.)

அப்படியானால் யாஞ்ஞவல்கியர்முதலியோர்களுக்கு ஆசாரியதசையில் இருக்கின்ற ஞான மெதுவோ அதற்கு வித்தியாத்தன்மை யுள்ளதே. அவ்வாறாயினும் அந்தஞானத்திற்கு அபரோக்ஷவித்தியாத்தன்மை யில்லை; துவைதத்தோற்ற மிருத்தலால். அன்றியும் நிருவிகற்பசமாதியிலோ அபரோக்ஷவித்தை இருக்கின்றது என்று வாதி சங்கிக்கின்றான்.

निर्विकल्पसमाधौ तु द्वैतादर्शनहेतुतः सा एव अपरोक्षविद्या इति चेत् ॥

(சு-ம்.)

நிருவிகற்பசமாதியிலோ துவைதத்தின் தோற்றமின்மைவடிவ ஏதுவால் அதுவே அபரோக்ஷவித்தையா மென்று கூறின்.

(அ-கை.)

துவைதத்தின் தோற்றமின்மையும் அதிவியாப்திவடிவ அதிப்பிரசங்கத்தைச் சம்பாதிப்பதா யிருத்தலால் அதுவே அபரோக்ஷவித்தையா மென்று கூறுதல் பொருந்தாது என்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

तथा सुषुप्तिः किं न ॥

(சு-ம்.)

அத்தன்மைய துவைதத்தோற்றமின்மையை யுடையது சுழுத்தி என் ஆகாது; ஆகவே ஆகும். அங்கு வித்தையினது லக்ஷணத்தின் அதிவியாப்தியுண்டாகும். (கஅ௯)

உ. சுலோகம் எசுசு-ற் கூறிய அதிப்பிரசங்கத்தினது சங்கையும் துவைதந்தோற்றமைக்கு வேறாகிய ஆத்மஞானம் வித்தையாதலும்.

[எஎ0] आत्मतत्त्वं न जानाति सुप्तौ यदि तदा त्वया ।
आत्मधीरेव विद्येति वाच्यं न द्वैतविस्मृतिः ॥ १८६ ॥

(அ-கை.)

சுழுத்தியிற் கூறிய அதிப்பிரசங்கத்தின் நிவிருத்தியினை வாதி சங்கிக்கின்றான்:—

सुप्तौ आत्मतत्त्वं न जानाति यदि ॥

(சு-ம்.)

சுழுத்தியிற் புருஷன் ஆத்மதத்துவத்தை அறிகிறதில்லை யென்று கொள்ளின்.

(வி-ம்.)

சுழுத்தியில் துவைததரிசனம் இல்லையாயினும் ஆத்மாவை விஷயஞ் செய்யும் ஞானமின்மையால் அச்சுழுத்திக்கு வித்தியாத்தன்மை யில்லை என்பது பொருள்.

(அ-கை.)

அப்போது விவேகஞானத்திற்கு வித்தியாத்தன்மை கிடைத்தது; துவைததரிசனத்தின் இன்மைக்கில்லை என்று சித்தாந்தி கூறுகின்றார்:—

"तदा आत्मधीः एव विद्या द्वैतविस्मृतिः न" इति त्वया वाच्यम् ॥

(சு-ம்.)

அப்போது ஆத்மபுத்தியே வித்தையாம்; துவைதத்தின் விஸ்மிருதி யன்று என்று உன்னாற் சொல்லத்தக்கதாம். (கஅசு)

௩. துவைதந்தோற்றமை ஆத்மஞானம் என்பவை சேர்ந்த இரண்டற்கும் வித்தியாத்தன்மையா மென்னும் சங்கையும் ஜடத்தில் அதிப்பிரசங்கத்தால் சமாதானமும்.

[எஎக] उभयं मिलितं विद्या यदि तर्हि घटादयः ।
अर्धविद्याभाजिनः स्युः सकलद्वैतविस्मृतेः ॥ १८७ ॥

(அ-கை.)

அப்படியானால் துவைதத்தின் தோற்றமின்மையும் ஆத்மஞானமும் சேர்ந்து இரண்டற்குமே வித்தியாத்தன்மை யுண்டு தனித்தனியாக வன்று என்று வாதி சங்கிக்கின்றான்:—

उभयं मिलितं विद्या यदि ॥

(சு-ம்.)

இரண்டுஞ் சேர்ந்து வித்தையா மென்று கூறின்.

(அ-கை.)

துவைதத்தின் விஸ்மிருதியும் வித்தையின் அம்சமா மென்று கொள்ளின், ஜடத்திற்கும் பாதி ஞானத்தன்மையின் பிரசங்க முண்டாகும் என்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

तर्हि घटादयः अर्धविद्याभाजिनः स्युः ॥

(சு-ம்.)

அப்போது கடமுதலியனவும் பாதி வித்தையுடையனவாகும்.

(அ-கை.)

அதில் ஏதுவைக் கூறுகின்றார்:—

सकलद्वैतविस्मृतेः ॥

(சு-ம்.)

கடமுதலியவற்றிற்குச் சகல துவைதத்தின் விஸ்மிருதி யிருத்தலால்()

உ. சமாதியுடைய புருஷர்களினுல் கடாதிகளின் வித்தையின் திடத்தன்மை பூர்வகமான உபஹாசம்.

[எஎஉ] मशकध्वनिमुख्यानां विक्षेपाणां बहुत्वतः ।
तव विद्या तथा न स्याद्घटादीनां यथा दृढा ॥ १८८ ॥

(அ-கை.)

இந்த எஎக-ற் கூறிய பக்ஷத்திலேயே சமாதியுடைய புருஷர்களுக்குப் பாதிஞானமுடைமையும் உண்டாகா தென்று பரிகாசத்தோடு கூறுகின்றார்:—

मशकध्वनिमुख्यानां विक्षेपाणां बहुत्वतः घटादीनां यथा विद्या दृढा तथा तव न स्यात् ॥

(சு-ம்.)

கொசுகுகளின் சப்தம் எவற்றில் முக்கியமா யிருக்கின்றனவோ அத்தன்மைய விக்ஷேபங்களின் மிகுதிப்பாட்டால் எப்படிக் கடாதிகளின் வித்தை திடமா யிருக்கின்றதோ அப்படி உனது திடமாகாது.

(வி-ம்.)

கடாதிகளுக்கு எப்படித் துவைதத்தின் விஸ்மரணம் திடமோ அது போல உனக்குச் சமாதியில் துவைதத்தின் விஸ்மரணம் சம்பவியாது. ஏனெனின், கொசுகுகளின் சப்தமுதலான அநேக விக்ஷேபங்க ளிருத்தலின் என்பது பொருள். (கஅஅ)

இ. ஆத்மஞானத்திற்கு வித்தியாத்தன்மையைச் சங்கிக்கின்றவனுக்கு ஆசீர்வாதமும் தோஷத்தோடுகூடிய சித்தநிரோதத்தின் அங்கீகாரமும்.

[எஎக] आत्मधीरेव विद्येति यदि तर्हि सुखी भव ।
दुष्टचित्तं निरुंध्याच्चेन्निरुंधि त्वं यथासुखम् ॥ १८९ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மஞானத்திற்கே வித்தியாத்தன்மை யுண்டு; துவைதத்தின் மறதிக் கில்லை என்று வாதி துராக்கிரகத்தை விட்டுச் சித்தாந்தத்திற் கநுகூலமான சங்கையைச் செய்கின்றான்:—

आत्मधीः एव विद्या इति यदि ॥

(சு-ம்.)

ஆத்மபுத்தியே வித்தையா மென்று கொள்ளின்.

(அ-கை.)

அவ்வாத்மஞானத்திற்கு வித்தியாத்தன்மை எமக்கிஷ்ட மென்னும் அபிப்பிராயத்தினால் சித்தாந்தி பூர்வவாதிக்கு ஆசீர்வாதஞ் செய்கின்றார்:—

तर्हि सुखी भव ॥

(சு-ம்.)

அப்போது சுகியாகக்கடவாய்.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மஞானமே வித்தையாம். ஆனால் அது விக்ஷேபாதி தோஷத்தோடுகூடிய சித்தத்தில் சம்பவிக்கிறதில்லை. ஆனால் சித்தத்தின் தோஷநிவிருத்தியின்பொருட்டுச் சித்தவிருத்தியின் நிரோதஞ் செய்யத்தக்கதா மென்னும் சங்கையினை வாதி பின்னும் கூறுகின்றான்:—

दुष्टचित्तं निरुंध्यात् चेत् ॥

(சு-ம்.)

துஷ்டசித்தத்தை நிரோதஞ் செய்தல்வேண்டு மென்று கூறின்.

(அ-கை.)

அதனைச் சித்தாந்தி அங்கீகரிக்கின்றார்:—

त्वं यथासुखं निरुंधि ॥

(சு-ம்.)

அப்போது நீ சுகமுண்டாகும்வண்ணம் சித்தத்தை நிரோதஞ் செய் ()

க. துஷ்ட சித்தத்தின் நிரோதத்தால் விரும்பியது கிடைத்தலை அங்கீகரித்து, "எதனை இச்சிக்கின்றவனாய்" என்னும் சுருதி அம்சத்தின் அபிப்பிராய முள்ள அர்த்தத்தினை முடித்தல்.

[எஎ௪] तदिष्टमेष्टव्यमायामयत्वस्य समीक्षणात् ।
इच्छन्नप्यज्ञवन्नेच्छेत्किमिच्छन्नपि हि श्रुतम् ॥ १९० ॥

(அ-கை.)

இதுவுமது:—

तत् इष्टम् ॥

(சு-ம்.)

அத்தோஷத்தோடுகூடிய சித்தத்தின் நிரோதம் எமக்கும் இஷ்டம்.

(அ-கை.)

சித்தத்தின் நிரோதம் உமக்கு எதனால் இஷ்டமென அதற்குக் கூறுகின்றார்:—

एष्टव्यमायामयत्वस्य समीक्षणात् ॥

(சு-ம்.)

இச்சிக்கத்தக்க ஜகத்தின் மாயாமயத்தன்மையைச் செவ்வையாய்க் காணுதலால்.

(வி-ம்.)

எதனால் சித்தநிரோதத்தால் சித்தத்தினது தோஷம் நீங்கவே அத்துவிதீய ஆத்மாவின் ஞானத்தின்பொருட்டு விரும்பிய ஜகத்தின் மித்தியாத்

தன்மையானது செவ்வையாக அறியப்படுகின்றதோ அதனால் அச்சித்தத்தின் நிரோதம் மாமக்கிஷ்டமா மென்பது பொருள்.

(அ-கை.)

இவ்வாறு எஉ0-முதல் எச0-பரியந்தம் "எந்தப் போக்கியத்தை விரும்பியவனாய்" என்னுஞ் சுருதிமந்திரத்தின் பதத்தினால் சொல்லக் கருதிய பொருளினைச் சம்பாதித்து அதனை முடிக்கின்றார்:—

इच्छन् अपि अज्ञवत् न इच्छेत् हि । किम् इच्छन् अपि श्रुतम् ॥

(சு-ம்.)

விரும்புகிறவனாயினும் அதாவது-டுருசு-வது சுலோகத்திற் கூறிய பாதிக்கப்பட்ட இச்சை யுடையவனாயினும், இந்த ஞானி அஞ்ஞானியினைப் போல இச்சிக்கிறதில்லை அதாவது-டுருடு-வதிற் கூறிய அத்தியாசமுள்ள இச்சையினைச் செய்கிறதில்லை. ஆதலால் இவ்வர்த்தநிர்ணயத்தின்பொருட்டு "எதனை இச்சிக்கின்றவனாய்" என்றும் சுருதியிற் சொல்லப்பட்டிருக்கின்றது. (கசுO)

எ. ஞானிக்கு அதிடராகத்தை அங்கீகரித்தல்வடிவ முதற்சுலோகத்திற் கூறிய சுருதியம்சத்தின் அபிப்பிராயத்தை வர்ணித்தலில் காரணம்.

[எஎரு] रागो लिंगमबोधस्य संतु रागादयो बुधे ।
इति शास्त्रद्वयं सार्थमेवं सत्यविरोधतः ॥ १९१ ॥

(அ-கை.)

இவ்வாறு இச்சுருதிபதத்திற்கு அபிப்பிராயத்தை வர்ணித்தலிற் காரணங் கூறுகின்றார்:—

रागः अबोधस्य लिंगं । बुधे रागादयः संतु इति एवं सति शास्त्रद्वयं अविरोधतः सार्थम् ॥

(சு-ம்.)

"திட ஆசையாகிய ராகம் அஞ்ஞானத்திற்குக் குறியாம்" "ஞானியினிடத்து ராகாதிகளிருக்குக." என்பன இரண்டு சாஸ்திரங்கள். இவ்வாறிருக்கின் அவை அவிரோதத்தால் அர்த்தமுடையனவாம்.

(வி-ம்.)

"சித்தத்தின் சஞ்சாரஞ்செய்யும் பூமியாகிய விஷயங்களிலுள்ள இரா

கம் அஞ்ஞானத்தின் * ருக. இலிங்கமாம். " எந்த * ருச. விருக்ஷத்தின் பொந்தில் அக்கினி இருக்கின்றதோ அதற்குப் பசுமை எங்கிருந்துண்டாம்." என்பது தத்துவஞானிக்கு இராகத்தை நிஷேதிக்கும் சாஸ்திரமாம். " சாஸ்திரத்தின் அர்த்தம் முடிதலால் அவ்வளவுமாத்திரத்தாலும் அதாவது அசங்க அத்துவிதீய ஆத்மாவின் ஞானத்தினுலும் ஞானியாகிய உனக்கு முக்தியுண்டாகும். இராகமுதலிய மனதின் தர்மம் எப்படி இச்சையோ அப்படி இருக்குக. அவற்றின் இருப்பு அபராதத்தை யடைகிறதில்லை." என்பது அந்த ஞானிக்கு இராகத்தை அங்கீகரிக்கும் சாஸ்திரமாம். ஆதலால் இவ்வாறு தத்துவஞானிக்குத் திடராகமின்மை யுண்டாகவே இரண்டு சாஸ்திரமும் அர்த்தமுடையனவாம்; ஏனெனின், இரண்டற்கும் விரோதமின்மையால். அதாவது இராகத்தைநிஷேதிக்கும் சாஸ்திரம் திடராகத்தை விஷயஞ் செய்வதாயிருத்தலாலும் அந்த இராகத்தினை அங்கீகரிக்கும் சாஸ்திரம் இராகப்போலியாகிய * ருரு. அதிடராகத்தினை விஷயஞ்செய்வதா யிருத்தலாலும் என்பதுதாற்பரியம். (கசுக)

---

*ருக. எப்படிப் புகை அக்கினியை அறிதற்கு இலிங்கமோ அதுபோல விஷயங்களிலுள்ள ராகம் அஞ்ஞானத்தை யறிதற்கு இலிங்கமாம். இலிங்கம், குறி, அடையாளம், சின்னம் என்பன ஒருபொருட்கிளவி. இங்கே இந்த அநுமானமாம். :—இப்பர்வதம் அக்கினியுடையது; தூமமுடையதாயிருத்தலின்; சமயலிடத்தினைப்போல. இது தூமத்தின் ஞானத்தால் அக்கினியின் ஞானத்தைச் சாதிக்கும் அநுமானம். இவ்வாறு இப்புருடன் அஞ்ஞானி; ராகமுடையவனாயிருத்தலின்; மற்ற அஞ்ஞானியினைப் போல என்பது இராகத்தின் ஞானத்தில் அஞ்ஞானத்தின் ஞானத்தைச் சாதிக்கும் அநுமானமாம்.

*ருச. எப்படி ஓர் நிமித்தத்தால் பொந்தில் அக்கினியையுடைய விருக்ஷமானது ஈரமுடையதாய்க் காணப்படாதோ, அதுபோல அஞ்ஞானவடிவ நிமித்தத்தால் அநுகூலத்தன்மைஞானத்தைச் சாதிக்கும் பேதஞானவாயிலாக உண்டாகிய இராகவடிவ உள் நெருப்பினையுடைய புருஷன் வெகுபிரவிருத்தியினுல் சாந்தியை யடைகிறதில்லை. ஆனுல் விக்ஷேபவடிவ சுவாலையினுல் எரிந்துகொண்டே யிருக்கின்றானென்பது பொருள்.

* ருரு. ஸ்தூல அந்தக்கரணவடிவ உபாதானத்தின் சம்பந்தமிருக்க அநுகூல பதார்த்தவடிவ நிமித்தத்தின் சம்பந்தமுள்ளகாலத்து இடைவிடாத்தன்மையாக இராகமில்லாமை அதிடராக மெனப்படும். இதுவே ஞானியின் லக்ஷணம். இந்த லக்ஷணத்திற்கு இது பரீக்ஷை:—

(க) அந்தக்கரணத்தின் சம்பந்தமோ அஞ்ஞானிக்கு மிருக்கின்றது; ஆனுல் இராகத்தினின்மை யில்லை.

(உ) இராகத்தினின்மையோ எல்லோருக்கும் சுழுத்தியிலு மிருக்கின்றது; ஆனுல் அங்கு அந்தக்கரணத்தின் சம்பந்த மில்லை.

ச. "எவனது போகத்தின்பொருட்டு" என்னுஞ் சுருதியினது அம்சத்தின் அபிப்பிராயம் (போக்தாவின்மையால் போக இச்சையினுலாகிய சந்தாபத்தியின்மை) எஎகூ-அ0கூ.

க. போக்தாவின் நிஷேதபூர்வகமான கூடஸ்த ஆத்மாவின் அசங்கத் தன்மை எஎகூ-எஅச.

க. ஆத்மாவின் அசங்கத்தன்மையினுல் போக்தாவை நிஷேதித்தல்.

[எஎகூ] जगन्मिथ्यात्ववत्स्वात्मासंगत्वस्य समीक्षणात् ।
कस्य कामायेति वचो भोक्त्रभावविवक्षया ॥ १९२ ॥

(அ-கை.)

இப்படி "எதனை இச்சிக்கின்றவனுய்" என்னும் சுருதியின் அபிப்பிராயத்தை வர்ணித்து, இப்போது "எவனது காமத்தின் பொருட்டு" என்னுஞ் சுருதி அம்சத்தின் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்:—

---

(ந) சூக்ஷ்ம(சம்ஸ்காரவடிவ) அந்தக்கரணத்தின் சம்பந்தமும் இராகத்தின் அபாவமுமோ சுழுத்தியிலு மிருக்கின்றது. ஆனுல் அங்கு ஸ்தூல அவஸ்தையுடைய அந்தக்கரணத்தின் சம்பந்தமில்லை.

(ச) ஸ்தூலஅந்தக்கரணத்தின் சம்பந்தம் இருக்க ஒருகால் உத்தியோககாலத்தில் இராகத்தின் அபாவமோ அஞ்ஞானிக்கு மிருக்கின்றது. ஆனுல் அங்கு அநுகூலபதார்த்தத்தின் ஸ்மிருதியாவது சந்நிதியாவது இல்லை.

(கு) ஸ்தூல அந்தக்கரணமும் அநுகூலவஸ்துவின் சம்பந்தமு மிருக்க ஒருகால் (அவிசாரதசையில்) இராகமோ ஞானிக்கு முண்டாகின்றது. ஆனுல் நிரந்தரமாயில்லை.

(கூ) ஸ்தூலஅந்தக்கரணமும் அநுகூலபதார்த்தத்தின் சம்பந்தமு மிருக்க ஒருகால் இராகத்தின் இன்மையோ உபாசகராதி சுத்தசித்தமுடைய அஞ்ஞானிகட்கும் காணப்படுகின்றது. ஆனுல் அவ்வபாவம் புறம்பாக (ஸ்தூலராகத்தினதாக) உண்டாகின்றது; உள்ளாக (சூக்ஷ்மராகத்தினதாக) உண்டாகிறதில்லை. இவ்வார்த்தை "இரச (சூக்ஷ்மராக) மும் இப்புருஷனுக்குப் பர(பிரஹ்ம)த்தை அறிந்து நீங்குகின்றது" என்னும் கீதையின் இரண்டாவது அத்தியாயத்துள்ள ருகூ-வது சுலோகவடிவ வாக்கியத்தினு லறியப்படுகின்றது.

ஆதலால் சொல்லப்பட்ட அதிடராகவடிவ ஞானியின் லக்ஷண மெதுவோ அது தோஷமின்றியதாம். இவ்வாறே அதிட துவேஷமுதலியவற்றினும் அறிந்து கொள்க. இங்கே அதிடராகமுதலிய சப்தத்தால் திடராகமுதலியவற்றின் அபாவம் கொள்ளப்படுகின்றது. ஏனெனின், அதிடராகம் இருக்குக அல்லது இல்லாதிருக்குக. ஆனுல் திடராகத்தின் அபாவமுடையவன் ஞானி யென்னும் ஞானியின் லக்ஷணம் சகலபூமிகளிலும் நிகழ்தலால்,

जगन्मिथ्यात्ववत् स्वात्मासंगत्वस्य समीक्षणात् भोक्त्रभावविवक्षया ॥ "कस्य कामाय" इति वचः ॥

(சு-ம்.)

ஜகத்தின் மித்தியாத்தன்மையினைப்போல ஸ்வாத்மாவின் அசங்கத் தன்மையைச் செவ்வையாய்க் காணுதலால் போக்தாவின் இன்மையைச் சொல்லுங் கருத்தால் "எவனது காமத்தின் பொருட்டு" என்னுஞ் சுருதியின் வசன மிருக்கின்றது.

(வி-ம்.)

எப்படி ஜகத்தின் மித்தியாத்தன்மையின் ஞானத்தால் வாஸ்தவமான போக்கியத்தினின்மையைச் சொல்லுங்கருத்தால் "எதனை இச்சிக்கின்றவனாய்" என்னும் வசனம் சொல்லப்பட்டிருக்கின்றதோ, அவ்வாறு ஆத்மாவினது அசங்கத்தன்மையின் ஞானத்தால் வாஸ்தவ போக்தாத்தன்மையினின்மையைச் சொல்லும் விருப்பால் "எதனது விருப்பத்தின்பொருட்டு" என்னும் வசனத்தை ருஅரு-ற் கூறப்பட்ட சுருதியானது கூறிற்றென்பது பொருள். (கககூஉ)

உ. ஆத்மாவினது பிராந்தியினாற் சித்தித்த போக்திருத்தன்மையை அநுவதிக்குஞ் சுருதி.

[எளஎ] पतिजायादिकं सर्वं तत्तद्भोगाय नेच्छति ।
किं त्वात्मभोगार्थमिति श्रुतावुद्घोषितं बहु ॥ १९३ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவின் போக்திருத்தன்மையின் நிஷேதம் எதுவோ அது அந்த போக்திருத்தன்மையின் அடைவோடு சொல்லத் தக்கதாம். அவ்வாத்மா போக்திருத்தன்மையை யடைதலோ ஆத்மாவிற்கு அசங்கமா யிருத்தலா வில்லை. ஆதலால் அதன் நிஷேதம் எப்படி யுண்டாகுமென் றசங்கித்து, அவ்வாத்மாவின் ஆரோபித போக்திருத்தன்மை தனது அநுபவத்தாற் பெறப்பட்டதா யிருத்தலின் ஆத்மாவிற்குப் போக்திருத்தன்மையின் அடைவில்லை யென்று கூறுதல் பொருந்தாது என்னும் அபிப்பிராயமாக அவ்வாத்மாவின் லோகாநுபவசித்த போக்திருத்தன்மையினை அநுவாதஞ் செய்யும் சுருதியினை அர்த்தத்தால் பின்முறையாய்க் கூறுகின்றார்:—

"पतिजायादिकं सर्वं तत्तद्भोगाय न इच्छति । किंतु आत्मभोगार्थं इति श्रुतौ बहु उद्घोषितम् ॥

(சு-ம்.)

கணவன் மனைவி முதலிய எல்லாவற்றினையும் அந்தந்தக் கணவன் மனைவி முதலியோர்களது போகத்தின்பொருட்டு மனிதர் இச்சிக்கிறதில்லை. ஆனால் "தமது போகத்தின்பொருட்டு இச்சிக்கின்றனர்." என்று இவ்வாறு சுருதியில் வெகுவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

யாஞ்ஞவல்கிய ரிஷியானவர் தனது ஸ்திரீயாகிய மைத்திரேயியை நோக்கி " न वा अरे पत्युः कामाय पतिः प्रियो भवति ॥ ஸ்திரீயே! பதியின் காமத்தின் பொருட்டுப் பதி பிரியனாகிறதில்லை." என்றாரம்பித்து " आत्मनस्तु कामय सर्वं प्रियं भवति ॥ ஆத்மாவின் காமமாகிய போகத்தின் பொருட்டு யாவும் பிரியமாம்,, என்பது பரியந்தம் கூறிய சுருதிவாக்கியசமூகத்தினால் கணவன் மனைவி முதலியபிரபஞ்சம் ஆத்மபோகத்திற்குச் சாதனமாதல் அதாவது போக்கியமாதல் பிரதிபாதிக்கப்படுகின்றது. அதனால் ஆத்மாவிற்குப் போக்திருத்தன்மையின் பிராப்தியுண் டென்பது பொருள். (கசுரு)

க. சுலோகம் எஎஎ-ற் கூறிய ஆத்மாவின் போக்திருத்தன்மையினை நிஷேதித்தற் பொருட்டுப் போக்தாவைக் குறித்த விகற்பம்.

[எஎஅ] किं कूटस्थश्चिदाभासौ यथा किं चोभयात्मकः ।
भोक्ता तत्र न कूटस्थोऽसंगत्वाद्भोक्तृतां व्रजेत् ॥ १९४ ॥

(அ-கை.)

இவ்வாறு ஆத்மாவின் போக்திருத்தன்மையினைக் காட்டி அப்போக்திருத்தன்மையினது நிஷேதத்தின்பொருட்டுப் போக்தாவைக் குறித்து விகற்பிக்கின்றார்:—

किं कूटस्थचिदाभासौ यथा किं च उभयात्मकः भोक्ता ॥

(சு-ம்.)

கூடஸ்தன் போக்தாவா? அல்லது சிதாபாசன் போக்தாவா? அல்லது கூடஸ்தன் சிதாபாசன் இரண்டுஞ்சேர்ந்து போக்தாவா?

(வி-ம்.)

போக்திருத்தன்மை கூடஸ்தனுக்கா? சிதாபாசனுக்கா? அல்லது இருவடிவத்திற்குமா? என்பது விகற்பத்தின் பொருள்.

உ. கூடஸ்தனுக்குப் போக்திருத்துவமென்னும் முதல்விகற்பத்தின் நிஷேதம்.

(அ-கை.)

அம்மூன்று விகற்பங்களில் கூடஸ்தன் போக்தாவா? என்னும் முதல்விகற்பத்தைப்பற்றிக் கூறுகின்றார்:—

तत्र कूटस्थः असंगत्वात् भोक्तृतां न व्रजेत् ॥

(சு-ம்.)

அவற்றுள் கூடஸ்தன் அசங்கனாயிருத்தலால் போக்திருத்தன்மையையடையான். (கககச)

[௭௯௫] सुखदुःखाभिमानाख्यो विकारो भोग उच्यते ।
कूटस्थश्च विकारी चेत्येतन्न व्याहतं कथम् ॥ १९५ ॥

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்தனுக்கு அசங்கத்தன்மை யிருக்குக; போக்திருத்தன்மை யிருக்குக; என்ன தோஷம் என்றாசங்கித்துக் கூறுகின்றார்:-

सुखदुःखाभिमानाख्यः विकारः भोगः उच्यते । कूटस्थः च विकारी च इति एतत् कथं न व्याहतम् ॥

(சு-ம்.)

சுகதுக்கங்களின் அபிமானவடிவ விகாரம் யாதோ அது போக மெனப்படும். ஆதலால் "கூடஸ்தன், விகாரி" என்னும் வசனம் எப்படி வியாகாததோஷத்தோடுகூடியதாகாது; ஆகவே ஆகும்.

(வி-ம்.)

"நான் சுகி நான் துக்கி" என்னும் சுகித்தன்மை துக்கித்தன்மைகளின் அபிமானவடிவ விகாரம் போகமாம். * இசு அது அசங்ககூடஸ்தனுக்குச் சம்பவியாது. ஏனெனின், கூடஸ்தத்தன்மை அதாவது நிர்விகாரத்தன்மை, விகாரித்தன்மை என்னு மிரண்டும் ஓரிடத்திருத்தல் பொருந்தாமையின் என்பது பொருள். (ககரு)

* இசு. "விகாரமின்றி நான் துக்கி" என்னும் பிரதீதியுண்டாகிறதில்லை. சிதாத்மாவிற்கு எவ்விகார மிருக்கின்றது? (எதுவுமில்லை.) ஆனால் புத்தியின் ஆயிரக்கணக்கான விகாரங்களுக்கு நான் சாக்ஷியாய் ஒரே விகாரமின்றியவனாயிருக்கின்றேன்" என்னுஞ் சாஸ்திரவாக்கியத்தினால் அசங்ககூடஸ்தனுக்குச் சுகதுக்கங்களின் அபிமானமென்னும் விகாரவடிவ போகம் சம்பவியாது. ஆதலால் கேவல கூடஸ்தனும் போக்தாவல்லன்.

௬. சிதாபாசனது போக்திருத்தன்மைவடிவ இரண்டாவது விகற்பத்தின் நிஷேதம்.

[௭௱௦] विकारिबुद्ध्यधीनत्वादाभासो विकृतावपि ।
निरधिष्ठानविभ्रांतिः केवला न हि तिष्ठति ॥ १९६ ॥

(அ-கை.)

அப்படியானால் விகாரியாகிய சிதாபாசனுக்குப் போக்திருத்தன்மை இருக்குக என்றாசங்கித்துச் சிதாபாசனுக்கு விகாரித்தன்மை யிருக்கினும் கூடஸ்தவடிவ அதிஷ்டானமின்றி அச்சிதாபாசனே சித்தியாமையால் சிதாபாசனுக்குப் போக்திருத்தன்மை யுண்டென்று கூறுதல் பொருந்தாதென்று பரிகரிக்கின்றார்:—

आभासः विकारिबुद्ध्यधीनत्वात् विकृतौ अपि हि निरधिष्टानविभ्रांतिः केवला न तिष्ठति ॥

(சு-ம்.)

சிதாபாசன் விகாரியாகிய புத்தியின் அதீனமாயிருத்தலால் விகாரியாம். இவ்வாறு தன்னிடத்து விகாரமிருக்கினும் எதனால் அதிஷ்டானமின்றிய பிராந்தி தானாக நிலைத்திராதோ அதனால் சிதாபாசனும் போக்தாவல்லன்.

(வி-ம்.)

சிதாபாசன் விகாரியாகிய புத்தியின் அதீனமாயிருத்தலால் தன்னிடத்து விகாரம் சம்பவிக்கினும், அவ்வாரோபிதசிதாபாசனுக்கு ஆரோபிதத்தின் சொரூபமாயிருத்தலால் அதிஷ்டானவடிவ கூடஸ்தனை விட்டுச் சுவதந்திரத் தன்மையாக அதன் நிலைப்புச் சம்பவியாமையால் கேவல சிதாபாசனுக்கும் போக்திருத்துவம் சம்பவியாதென்பது தாற்பரியம்.　　(௧௯௬)

௭. கூடஸ்தன் சிதாபாசன் என்னுமிரண்டன் போக்திருத்தன்மைவடிவ மூன்றாவது விகற்பத்தின் அங்கீகாரம்.

[௭௱௧] उभयात्मक एवातो लोके भोक्ता निगद्यते ।
तादृगात्मानमारभ्य कूटस्थः शेषितः श्रुतौ ॥ १९७ ॥

(அ-கை.)

அதனால் கேவல கூடஸ்தனுக்காவது சிதாபாசனுக்காவது போக்திருத்தன்மை சம்பவியாமையால் இரண்டுஞ்சேர்ந்து போக்தாவா மென்னும் மூன்றாவது பக்ஷம் பரிசேஷத்தை யடைகின்றது:—

अतः लोके उभयात्मकः एव भोक्ता निगद्यते ॥

(சு-ம்.)

ஆதலால் உலகத்தில் இருவடிவமே போக்தா வெனப்படுகின்றது.

(வி-ம்.)

எதனுல் கூடஸ்தன் சிதாபாசன் என்னும் இரண்டனுள் ஒவ்வொன்றற்கும் போக்திருத்தன்மை சம்பவிக்கிறதில்லையோ, அதனுல் கூடஸ்தவடிவ அதிஷ்டானத்தோடு சிதாபாச னென்னும் இருவடிவமே உலகத்தில் அதாவது வியவகாரதசையில் போக்தா வென்று சொல்லப்படுகின்றது. பரமார்த்தமாகவோ இருவடிவத்தன்மையே மிகழா தென்பது தாற்பரியம்.

எ. கூடஸ்தனது சுருதிப்பிரமாணத்தாற் சித்தித்த அசங்கத்தன்மையினுல் வாஸ்தவமான அபோக்திருத்தன்மை.

(அ-சை.)

அப்படியானுல் "असंगो ह्ययं पुरुषः இப்புருஷன் அசங்கன்" என்றல் முதலியவாக்கியங்களில் ஆத்மாவிற்கு அசங்கத்தன்மையே கேட்கப்படுதலாலும் " योऽयं विज्ञानमयः प्राणेषु யாதொரு இந்த விஞ்ஞானமயன் பிராணன்களி லிருக்கின்றனோ" என்றல் முதலியவாக்கியங்களில் ஆத்மாவிற்குப் புத்தியின் சாக்ஷித்தன்மையும் கேட்கப்பட்டிருத்தலாலும் இருவடிவபோக்தாவின் சொருபமும் பாரமார்த்திகமேயாகும். உலகவியவகாரமாத்திரத்தால் சித்திக்கிறதில்லை யென்றுசங்கித்து, சுருதிக்கு அப்பாரமார்த்திகபோக்திருத்தன்மையில் தாற்பரியமின்மையால் போக்தாவின் சொரூபம் பாரமார்த்திகமா மென்று கூறுதல் பொருந்தா தென்று கூறுகின்றார்:—

तादृक् आत्मानं आरभ्य श्रुतौ कूटस्थः शेषितः ॥

(சு-ம்.)

அப்படிப் போக்தாவடிவ ஆத்மாவை ஆரம்பித்துச் சுருதியில் கூடஸ்தன் எஞ்சவைக்கப்பட்டது.

(வி-ம்.)

அவ்வாறு; புத்தி உபாதியுடைய போக்தாவடிவ ஆத்மாவினை ஆரம்பித்து அதாவது அநுவாதஞ் செய்து பிரகதாரண்ணியமுதலிய சுருதிகளில் புத்திமுதலியவற்றின் கற்பனைக்கு அதிஷ்டானவடிவ சிதாத்மாவாகிய கூடஸ்தன் அவசேஷமாக்கப்படுகின்றுன் அதாவது புத்திமுதலிய அநாத்மாவைத் தள்ளி ருகூ-ற் கூறிய லக்ஷணமுடைய பரிசேஷத்தின் விஷயமாக்கப்பட்ட தென்பது பொருள். (கசூஎ)

[எஅஉ] आत्मा कतम इत्युक्ते याज्ञवल्क्यो विबोधयन् ।
विज्ञानमयमारभ्यासंगं तं पर्यशेषयत् ॥ १९८ ॥

(அ-கை.)

அதில் பிருகதாரண்ணிய உபநிஷத்தின் அர்த்தத்தை முதலில் சுருக்கமாகக் கூறுகின்றார்:—

"कतमः आत्मा" इति उक्ते याज्ञवल्क्यः तं विबोधयन् विज्ञानमयम् आरभ्य । असंगं पर्यशेषयत् ॥

(சு-ம்.)

ஜனகர் "ஆத்மா யாது" என்று கேட்க யாஞ்ஞவல்கியர் அவருக்குப் போதிக்கின்றவராய் விஞ்ஞானமயனை ஆரம்பித்து அசங்கனை மிஞ்சவைத்தார்.

(வி-ம்.)

ஜனகராஜன் "ஆத்மா யாது" என்று ஆத்மாவினைக் கேட்க யாஞ்ஞவல்கியமுனியானவர் அவருக்குப் போதிக்கின்றவராய் "யாதொரு விஞ்ஞானமயன் பிராணன்களி லிருக்கின்றானோ" என்றல் முதலிய வாக்கியங்களால் விஞ்ஞானமயனை ஆரம்பித்து, "இப்புருஷன் அசங்கன்." என்று அசங்ககூடஸ்தனை மிஞ்சவைத்தா ரென்பது பொருள். (ககஅ)

[எஅகூ] कोयमात्मेत्येवमादौ सर्वत्रात्मविचारतः ।
उभयात्मकमारभ्य कूटस्थः शेष्यते श्रुतौ ॥ १९९ ॥

(அ-கை.)

இப்படிப் பிருகதாரணியத்தில் அசங்க ஆத்மாவின் பரிசேஷத்தன்மையினைக் காட்டி ஐதரேயமுதலிய அந்நியசுருதிகளிலும் அவ்வசங்க ஆத்மாவின் பரிசேஷத்தின் தன்மையினைக் காட்டுகின்றார்:—

"कः अयं आत्मा" इति एवमादौ सर्वत्र श्रुतौ आत्मविचारतः उभयात्मकं आरभ्य कूटस्थः शेष्यते ॥

(சு-ம்.)

"இவ்வாத்மா யாது?" என்றல்முதலிய வாக்கியங்களில் சர்வசுருதிகளிலும் ஆத்மாவின் விசாரத்தினால் உபயவடிவ ஆத்மாவினை ஆரம்பித்துக் கூடஸ்தன் மிகுக்கப்படுகின்றது.

(வி-ம்.)

"இவ்வாத்மா யாது? எதை யாம் உபாசிக்கின்றோமோ அவ்வாத்மா யாது?" என்றல் முதலியவாக்கியங்களில் ஆத்மாவின் விசாரத்தால் அந்தக் கரணஉபாதியினையுடைய ஆத்மாவினை ஆரம்பித்து, பிரஞ்ஞானமாத்திரவடிவகூடஸ்தன் ஐதரேய உபநிஷத்தில் பரிசேஷமாக்கப்பட்டது. இவ்வாறு அந்நியசுருதிகளிலும் கண்டுகொள்க. அவ்வாறு யுக்தி சுருதிகளின் விசாரஞ்செய்யப்பட்ட கூடஸ்தனும் சிதாபாசனுமான இருவடிவபோக்தாவின் மித்தியாத்தன்மையும் பாரமார்த்திக அசங்ககூடஸ்தனது அபோக்திருத்தன்மையும் பெறப்பட்டனவாகின்றன. (௧௯௯)

அ. சிதாபாசனுக்கு அவிவேகத்தால் போக்திருத்தன்மையின் உண்மையால் போகத்தை விடுதலின் இச்சையின்மை.

[௭அச] कूटस्थसत्यतां स्वास्मिन्नध्यस्यात्माऽविवेकतः ।
तात्विकीं भोक्तृतां मत्वा न कदाचिज्जिहासति ॥ २०० ॥

(அ-கை.)

அப்படியானால் ௭அக-௭அ௯-ற் கூறியபடி போக்தா மித்தையாகப் பிராணிகளுக்கு அபோக்தாவினிடத்துச் சத்தியத்துவபுத்தி ஏன் உண்டாகின்றதென் றுசங்கித்துக் கூறுகின்றார்:—

आत्मा अविवेकतः कूटस्थसत्यतां स्वास्मिन् अध्यस्य भोक्तृतां तात्विकीं मत्वा कदाचित् न जिहासति ॥

(சு-ம்.)

ஆத்மா அவிவேகத்தால் கூடஸ்தனது சத்தியத்தன்மையினைத் தன்னிடத்து அத்தியசித்துப் போக்திருத்தன்மையினை வாஸ்தவமெனக் கொண்டு ஒருபோதும் விடுதற் கிச்சிக்கிறதில்லை.

(வி-ம்.)

உலகப்பிரசித்த போக்தாவாகிய ஆத்மா அவிவேகத்தினல் அதாவது தான் கூடஸ்தரென்னும் இருவரது விவேகஞான மின்மையால் கூடஸ்தனிடத்துள்ள சத்தியத்தன்மையினைத் தன்னிடத் தாரோபித்து, அதன்வாயிலாகத் தன்னிடத்துள்ள போக்திருத்தன்மையின் சத்தியத்தன்மையினையும் அங்கீகரித்துப் போகத்தை ஒருபோதும் விடுதற்கு விரும்பான். (உ00)

உ. போக்கியங்களில் பிரியத்தை விட்டுப் போக்தாவினிடத்துப் பிரியத்தைச் செய்யவேண்டுமெனல் ௭அரு-௭அஅ.

௧. சுருதியிற் சொல்லப்பட்ட லோகப்பிரசித்தமான போக்தாவுக்குத் தன்பொருட்டுப் போக்கியத்தினது இச்சையின் அநுவாதத்தின் சூசனை.

[எஅரு] भोक्ता स्वस्यैव भोगाय पतिजायादिमिच्छति ।
एष लौकिकवृत्तांतः श्रुत्या सम्यगनूदितः ॥ २०१ ॥

(அ-கை.)

அப்படியானால் எப்போது போக்தாவின் மித்தியாத்தன்மையிருக்கின்றதோ, அப்போது "ஆத்மாவின் காமத்தின்பொருட்டு யாவும் பிரியமாம்." என்று கணவன் மனைவிமுதலியவடிவ போகசாமக்கிரியான போக்கியம் ஆத்மாவிற்குச் சாதனமாதல் சுருதியினால் எப்படிச் சொல்லப்பட்டிருக்கின்றதென் றாசங்கித்து, போக்கியம் கூடஸ்த ஆத்மாவிற்குச் சாதனமாதல் சொல்லப்படவில்லை. ஆனால் உலகப்பிரசித்த உபயவடிவ போக்தாவிற்குச் சாதனமாதலையே சுருதி அநுவதிக்கின்றது என்று கூறுகின்றார்:—

भोक्ता स्वस्य एव भोगाय पतिजायादिम् इच्छति । एषः लौकिकवृत्तांतः श्रुत्या सम्यक् अनूदितः ॥

(சு-ம்.)

போக்தா தனது போகத்தின்பொருட்டே பதி பத்தினிமுதலிய போக்கியத்தினை விரும்புகின்றான் என்னும் இவ்விலௌகிகவிருத்தாந்தம் சுருதியினாற் செவ்வையாக அநுவதிக்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

உலகத்தில் போக்தாவானவன் தனது போகத்தின்பொருட்டே பதி பத்தினிமுதலியவடிவ போகசாதனங்களை விரும்புகின்றான் என்னும் இவ்வுலகப்பிரசித்த விருத்தாந்தம் சுருதியினாற் செவ்வையாய் அநுவதிக்கப்பட்டிருக்கின்றது; பிற அலௌகிக அர்த்தம் சொல்லப்படவில்லை யென்பது பொருள். (உ0க)

௨. சுலோகம் எஅரு-ற் கூறிய அநுவாதத்தின் பிரயோஜனம்.

[எஅசு] भोग्यानां भोक्तृशेषत्वान्मा भोग्येष्वनुरज्यताम् ।
भोक्तर्येव प्रधानेऽतोऽनुरागे तं विधित्सति ॥ २०२ ॥

(அ-கை.)

அப்படியானால் சுருதியானது உ0க-வது சுலோகத்திற் கூறிய அநுவாதத்தினை எதன்பொருட்டுச் செய்திருக்கின்றது என்றாசங்கித்து, போக்தா

வினிடத்திலேயே பிரேமையினைச் செய்தலின் பிரேரணைவடிவ விதானத்தின்பொருட்டுச் சுருதி அநுவாதஞ் செய்திருக்கின்றதென்று கூறுகின்றார்:

भोग्यानां भोक्तृशेषत्वात् भोग्येषु मा अनुरज्यतां । प्रधाने भोक्तरि एव । अतः अनुरागे तं विधित्सति ॥

(சு-ம்.)

போக்கியங்கள் போக்தாவிற்குச் சாதனமாயிருத்தலால் போக்கியங்களில் அநுராகஞ் செய்யலாகாது. ஆனால் முக்கிய போக்தாவினிடத்திலேயே அநுராகஞ் செய்தல்வேண்டும். ஆதலால் போக்தாவினிடத்து அநுராகத்தில் சுருதி அப்போக்தாவிற்கு விதானஞ்செய்ய விரும்புகின்றது.

(வி-ம்.)

பதி பத்தினிமுதலியவடிவ போக்கியங்கள் தானாகிய போக்தாவினது போகத்திற்குச் சாதனமாயிருத்தலின் அமுக்கியவடிவ போக்கியங்களில் பிரியம் செய்யத்தக்கதன்று. ஆனால் பிரதானவடிவ போக்தாவினிடத்திலேயே அநுராகஞ்செய்யத்தக்கதாமென்று இவ்வாறு விதித்தற்பொருட்டுச் சுருதியானது அநுவாதஞ் செய்திருக்கின்றதென்பது பொருள்.(உ0உ)

௩. ஆத்மாவினிடத்துப் பிரியஞ்செய்யவேண்டியதில் திருஷ்டாந்தவடிவ புராண வசனம்.

[எஅஎ] या प्रीतिरविवेकीनां विषयेष्वनपायिनी ।
त्वामनुस्मरतः सा मे हृदयान्मापसर्पतु ॥ २०३ ॥

(அ-கை.)

போக்கியங்களில் பிரேமையை விடுதல்பூர்வகமாக ஆத்மாவினிடத்தில் பிரியஞ் செய்யவேண்டியதா மென்பதில் திருஷ்டாந்தமாதலால் ஈசுவரனிடத்துப் பிரியத்தின் பிரார்த்தனை பூர்வகமான புராணவசன மெதுவோ அதனை உதாரணமாகக் கூறுகின்றார்:—

अविवेकीनां विषयेषु अनपायिनी या प्रीतिः । माप सा त्वां अनुस्मरतः मे हृदयात् सर्पतु यद्वा मा अपसर्पतु ॥

(சு-ம்.)

அவிவேகிஜனங்களுக்கு விஷயங்களில் எப்படிப்பட்ட திடப்பிரியமிருக்கின்றதோ, விஷ்ணுபகவானே! அப்படிப்பட்ட பிரீதி தம்மை ஸ்மரணஞ் செய்யும் என்னுடைய இருதயத்தினின்றும் நீங்குக அல்லது நீங்காதிருக்குக.

(வி-ம்.)

அவிவேகிகளான ஆத்மஞானமின்றிய ஜனங்களுக்கு விஷயங்களில் உள்ள திடமான பிரிய மெதுவோ, அது லக்ஷ்மிபதியே! உன்னை எப்போதுஞ் சிந்திக்கின்ற என்னுடைய இருதயத்தினின்றும் நீங்குக அதாவது என்னுடைய மனம் விஷயங்களில் ஆசையை விட்டு உம்மிடத்திலேயே எப்போதும் நிலைத்திருக்குக என்பது பொருள். அல்லது அவிவேகிகளுக்கு விஷயங்களில் எத்தன்மைய திடப்பிரிய மிருக்கின்றதோ அத்தன்மைய விஷயங்களி லிருக்கும் பிரியம் உம்மை ஸ்மரணஞ்செய்யும் என்னுடைய இருதயத்தினின்றும் நீங்காதிருக்குக அதாவது எப்போது மிருக்குக என்பது பொருள். (௨0௩)

௪. புராணத்திற் கூறியபடி போக்கியத்தில் வைராக்கியத்தினால் போக்கியத்திலுள்ள பிரியம் போக்தாவினிடத்துச் சுருக்குதலைப் போதித்தல்.

[௭௮௮] इति न्यायेन सर्वस्माद्भोग्यजाताद्विरक्तधीः ।
उपसंहृत्य तां प्रीतिं भोक्तर्येव बुभुत्सते ॥ २०४ ॥

(அ-கை.)

இப்படிப் புராணத்தி லிருக்க. இதனால் சுருதியில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

इति न्यायेन सर्वस्मात् भोग्यजातात् विरक्तधीः तां प्रीतिं भोक्तरि एव उपसंहृत्य बुभुत्सते ॥

(சு-ம்-)

இந்த நியாயத்தால் சகல போக்கியசமூகங்களினின்றும் விரக்தியடைந்த புத்தியினையுடைய புருஷன் அந்தப் பிரீதியினைப் போக்தாவினிடத்திலேயே சுருக்கி ஆத்மாவை அறிய விரும்புகிறான்.

(வி-ம்.)

இந்த ௭௮௭-ற் கூறிய புராணவசனத்திற் சொல்லப்பட்ட நியாயத்தால் பதி பத்தினிமுதலியவடிவ சகலபோக்கியசமூகங்களினின்றும் எவனுடைய புத்தி விரக்தியடைந்திருக்கின்றதோ, அப்படிப்பட்ட புருஷன் அப்போக்கியங்களை விஷயஞ்செய்யும் பிரீதியினைப் போக்தாவாகிய ஆத்மாவினிடத்துச் சுருக்கி இப்படி ஆத்மாவை அறிய இச்சிக்கின்றான். (௨0௪)

௫. முமுக்ஷு ஆத்மாவினிடத்துச் சாவதானத்தன்மையினைச் செய்யவேண்டுமென்பது பூர்வகமான போக்தாவினது தத்துவமான வாஸ்தவ வடிவத்தை விவேகித்தல் ௭௮௯-௭௯௯.

க. ஆத்மாவினிடத்துப் பிரியத்தைச் சுருக்குதலில் திருஷ்டாந்தத்தோடு பலிதம்.

[௨௰௫] स्रक्चंदनवधूवस्त्रसुवर्णादिषु पामरः ।
अप्रमत्तो यथा तद्वन्न प्रमाद्यति भोक्तरि ॥ २०५ ॥

(அ-கை.)

இவ்வாறு ஆத்மாவினிடத்திலேயே பிரியத்தைச் சுருக்குதலில் திருஷ்டாந்தத்தோடு பலிதத்தைக் கூறுகின்றார்:—

पामरः स्रक्चन्दनवधूवस्त्रसुवर्णादिषु यथा अप्रमत्तः । तद्वत् भोक्तरि न प्रमाद्यति ॥

(சு-ம்.)

பாமரஜனங்கள் எப்படி மாலை சந்தனம் ஸ்திரீ வஸ்திரம் சுவர்ணமுதலியவற்றில் பிரமாதமின்றியவர்களாகின்றார்களோ, அதுபோல முமுக்ஷு போக்தாவாகிய ஆத்மாவினிடத்துப் பிரமாதத்தைச் செய்கிறதில்லை.

(வி-ம்.)

மோக்ஷமார்க்கத்தினின்றும் வேறுபட்டவர்களாகிய பாமரர்கள் எப்படி மாலைமுதலியவற்றில் சாவதானமாகின்றார்களோ, அவ்வாறு முமுக்ஷுக்களும் ஆத்மாவினிடத்துப் பிரமாதத்தினைச் செய்கிறதில்லை. ஆனால் அவ்வாத்மாவின் சிந்தனையினாலேயே நிலைக்கிறார்கள் என்பது பொருள் (உ0௫)

உ. அநேக திருஷ்டாந்தங்களால் ஆத்மாவிற் பிரமாதமில்லாமையை விளக்குதல்.

[௭௯0] काव्यनाटकतर्कादिमभ्यस्यति निरंतरम् ।
विजिगीषुर्यथा तद्वन्मुमुक्षुः स्वं विचारयेत् ॥ २०६ ॥

(அ-கை.)

ஆத்மாவினிடத்துச் சாவதானத்தன்மையின்மைவடிவ பிரமாதத்தின் அபாவத்தினையே வெகு திருஷ்டாந்தங்களால் வெளியாக்குகின்றார்:—

यथा विजिगीषुः निरंतरं काव्यनाटकतर्कादिम् अभ्यस्यति तद्वत् मुमुक्षुः स्वं विचारयेत् ॥

(சு-ம்.)

எப்படி ஜயத்தை விரும்பிய புருடன் நிரந்தரம் காவிய நாடக தர்க்கமுதலியவற்றினை அப்பியசிக்கின்றானோ அதுபோல முமுக்ஷுவானவன் சொரூபத்தை விசாரிக்கின்றான்.

(வி-ம்.)

எப்படிப் பிரதிவாதியினை ஜயிக்க விரும்பிய இவ்வுலகத்திற் பிரதானமான புருஷன் நிரந்தரம் காவியமுதலியவற்றினை அப்பியாசஞ் செய்கின்றானோ அதுபோல முமுக்ஷுவும் எப்போதும் தனது ஆத்மாவை விசாரிக்கக் கடவன். (உ0சு)

[எகக] जपयागोपासनादि कुरुते श्रद्धया यथा ।
स्वर्गादिवांच्छया तद्वच्छ्रद्दध्यात्स्वे मुमुक्षया ॥ २०७ ॥

(அ-கை.)

இதுவுமது:—

यथा स्वर्गादि वांच्छया जपयागोपासनादि श्रद्धया कुरुते । तद्वत् मुमुक्षया स्वे श्रद्दध्यात् ॥

(சு-ம்.)

எப்படிச் சகாமிபுருஷன் சுவர்க்கமுதலியவற்றின் விருப்பத்தால் ஜபம், யாகம், உபாசனைமுதலியவற்றைச் சிரத்தையோடு செய்கின்றானோ, அது போல முமுக்ஷுவானவன் மோக்ஷ இச்சையினால் தனது சொரூபத்தில் சிரத்தையைச் செய்க.

(வி-ம்.)

எப்படிச் சுவர்க்கமுதலியவற்றில் விருப்புடையோனாகிய வைதிகபுருஷன் அந்தந்த ஜபமுதலிய சாதனங்களைச் சிரத்தையோடு அநுஷ்டிக்கின்றானோ, அதுபோல முமுக்ஷுவும் மோக்ஷ இச்சையினால் தனது சுருதியிற் சொல்லப்பட்ட ஆத்மாவினிடத்து விசுவாசஞ்செய்யக்கடவன். (உ0எ)

[எகஉ] चित्तैकाग्र्यं यथा योगी महायासेन साधयेत् ।
अणिमादिप्रेप्सयैवं विविच्यात्स्वं मुमुक्षया ॥ २०८ ॥

(அ-கை.)

இதுவுமது:—

योगी अणिमादिप्रेप्सया महायासेन चित्तैकाग्र्यं यथा साधयेत् । एवं मुमुक्षया स्वं विविच्यात् ॥

(சு-ம்.)

எப்படி யோகி அணிமாதிகளின் இச்சையினால் பெரும் வருத்தத்தால் சித்தத்தின் ஏகாக்கிரதன்மையைச் சாதிக்கின்றானோ, அதுபோல முமு

க்ஷுவானவன் மோக்ஷஇச்சையினால் சுவசொரூபத்தை விவேசனஞ்செய் கின்றான்.

(வி-ம்.)

யோகாப்பியாசமுடையவன் அணிமாமுதலிய சித்திவடிவ ஐசுவரி யத்தின் லாபஇச்சையினால் பெரும் (அஷ்டாங்கத்தோடு கூடிய சமாதி முதலிய) உழைப்பினால் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையினை எப்படிச் சம் பாதிப்பானோ, அவ்வாறு இம்முமுக்ஷுவும் ஆத்மாவை எப்போதும் விவேசனஞ் செய்யக்கடவன் அதாவது தேகமுதலியவற்றினின்றும் வேறுபிரித்தறியக்கடவன் என்பது பொருள். (உ0அ)

௯. திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களில் அப்பியாசத்தின் பயன்.

[எ௬௯] कौशलानि विवर्धंते तेषामभ्यासपाटवात् ।
यथा तद्वद्विवेकोऽस्याप्यभ्यासाद्विशदायते ॥ २०९ ॥

(அ-கை.)

அப்படியானால் இந்த எ௬0-எ௬உ-ற் கூறியபடி இச்சாஸ்திராப்பியாசி முதலிய புருஷர்களுக்கு எப்போதும் அப்பியசித்தலால் என்ன பயனுண்டா கின்றதெனக் கூறுகின்றார் :—

यथा तेषां अभ्यासपाटवात् कौशलानि विवर्धंते । तद्वत् अस्य अपि अभ्यासात् विवेकः विशदायते ॥

(சு-ம்.)

எப்படிச் சாஸ்திராப்பியாசி, சகாமி, யோகி என்னும் இவர்களுக்கு அப் பியாசத்தின் திடத்தன்மையால் குசலத்தன்மை விருத்தி யடைகின்றதோ, அதுபோல இம்முமுக்ஷுவுக்கும் அப்பியாசத்தினால் விவேகம் தெளிவா கின்றது.

(வி-ம்.)

எப்படி அக்காவியமுதலிய அப்பியாசமுடைய புருஷர்களுக்கு அப் பியாசத்தின் தேர்ச்சியால் அவ்வவ்விஷயங்களில் * நிசு. குசலத்தன்மை

*நிசு. எப்படிக் காவியமுதலியவற்றின் அப்பியாசமுடையவனுக்குச் சாஸ்திரார்த் தத்தில் குசலத்தன்மை (சாமர்த்தியம்) விருத்தியாகின்றதோ, ஜபம் யாகம் முதலிய அநுஷ்டானஞ் செய்கின்றவர்களுக்கு வைதிககர்மத்தில் குசலத்தன்மை அல்லது புண் ணியத்தோடுகூடியதன்மை அல்லது புத்தியின் சுத்தத்தன்மை விருத்தி யாகின்ற தோ, யோகாப்பியாசிக்குச் சித்தத்தின் நிரோதத்திலும் அணிமாதி சித்திகளிலும் குச லத்தன்மை விருத்தியாகின்றதோ அதுபோல முமுக்ஷுவுக்கு அப்பியாசத்தினால் விவேகம் விளக்கமாகின்றது.

விருத்தியடைகின்றதோ, அதுபோல இம்முமுக்ஷுவுக்கும் அப்பியாசத்தினால் விவேகம் அதாவது தேகமுதலியவற்றினும் ஆத்மா வேறென்னும் ஞானம் விளக்கமாகின்றது. (உ0௯)

ச. விவேகத்தினது விளக்கத்தின் பயன்.

[எகச] विविंचता भोक्तृतत्त्वं जाग्रदादिष्वसंगता ।
अन्वयव्यतिरेकाभ्यां साक्षिण्यध्यवसीयते ॥ २१० ॥

(அ-கை.)

விவேகத்தினது விளக்கத்தன்மையின் பயனைக் கூறுகின்றார் :—

अन्वय व्यतिरेकाभ्यां भोक्तृतत्त्वं विविंचता जाग्रदादिषु साक्षिणि असंगता अध्यवसीयते ॥

(சு-ம்.)

அந்வய வியதிரேகங்களால் போக்தாவின் தத்துவத்தை விவேசனஞ் செய்யும் புருஷனால் நனவுமுதலியவற்றில் சாக்ஷியினிடத்து அசங்கத்தன்மை நிச்சயிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

அந்வய வியதிரேகவடிவ யுக்தியினால் போக்தாவின் தத்துவமாகிய பாரமார்த்திக சொரூபத்தினை விவேசனஞ்செய்யும் அதாவது ஜடங்களின் சமூகமான போக்கியங்களினின்றும் வேறுபடுத்தறியும் புருஷனால் ஜாக்கிர சொப்பன சுழுத்தியவஸ்தைகளில் கூடஸ்தனாகிய சாக்ஷியினிடத்து அசங்கத்தன்மை நிச்சயிக்கப்படுகின்றதென்பது பொருள். (உக0)

ரு. சாக்ஷியின் அசங்கததன்மையில் அந்வயவியதிரேகம்.

[எகரு] यत्र यद्दृश्यते द्रष्ट्रा जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।
तत्रैव तन्नेतरत्रेत्यनुभूतिर्हि संमता ॥ २११ ॥

(அ-கை.)

அந்வய வியதிரேகத்தினைக் காட்டுகின்றார் :—

यत्र जाग्रत्स्वप्नसुषुप्तिषु यत् द्रष्ट्रा दृश्यते । तत् तत्र एव इतरत्र न । इति अनुभूतिः संमता हि ॥

(சு-ம்.)

எந்த ஜாக்கிர சொப்பன சுழுத்திவடிவ ஸ்தானத்தில் எது திருஷ்டாவினால் காணப்படுகின்றதோ, அவ்வஸ்து அங்கேயே யுள்ளது, வேறிடத்தி

இல்லை என்னு மநுபவம் பிரசித்தமாய் எல்லோராலும் சம்மதிக்கப்பட்டதாம்.

(வி-ம்.)

ஜாக்கிரமுதலியவற்றினிடையில் எந்த ஜாக்கிரம் அல்லது சொப்பனம் அல்லது சுழுத்திவடிவ ஸ்தானத்தில் ஸ்தூலம், சூக்ஷ்மம், ஆநந்த வடிவம் என்னும் மூவகையான எந்தப் போக்கியம் திருஷ்டாவாகிய சாக்ஷியினால் அறியப்படுகிறதோ அந்தத்திருசியம் அதே அவஸ்தையில் உளதாகின்றது; வேறு அவஸ்தையிலில்லை. திருஷ்டாவோ சகல அவஸ்தைகளிலும் தொடர்ந்ததா யிருத்தலால் இருக்கின்றது என்னு மநுபவம் எல்லோராலும் சம்மதிக்கப்பட்டதாய்ப் பிரசித்தமா மென்பது பொருள். ()

௬. சாக்ஷி அசங்க மென்பதிற் சுருதி.

[எ௬௬] स यत्तत्रेक्षते किंचित्तेनानन्वागतो भवेत् ।
दृष्ट्वैव पुण्यं पापं चेत्येवं श्रुतिषु डिंडिमः ॥ २१२ ॥

(அ-கை.)

அந்வயவ்யதிரேகங்களால் ஆத்மாவை விவேகித்தலில் கேவலம் அநுமானம் பிரமாண மன்று, ஆகமமாகிய வேதமும் பிரமாணமாம் என்னும் அபிப்பிராயத்தினால் "स यत् तत्र किंचित् पश्यत्यनन्वागतस्तेन भवत्यसंगो ह्ययं पुरुषः அவ்வாத்மா அவ்வவஸ்தையில் எந்தெந்தப் போக்கியங்களைக் காண்கின்றதோ அத்திருசியத்தோடு அநுசரித்ததாய் வேறு அவஸ்தையினை அடைகிறதில்லை. இப்புருஷன் அசங்கமாயிருத்தலால்." "स वा एष एतस्मिन् संप्रसादे रत्वा चरित्वा दृष्ट्वैव पुण्यं च पापं च पुनः प्रतिन्यायं प्रतियोन्यां द्रवति । அந்த இவ்வாத்மா இச்சம்பிரசாதமாகிய சுழுத்தியில் இரமித்து உழன்று சொப்பனத்தில் புண்ணியபாபங்களைக் கொள்ளாமலே மறுபடியும் ஜாக்கிரத்தை நோக்கி இந்திரியங்களிடத்து ஓடுகின்றது."என்றல்முதலிய இரண்டு வாக்கியங்களையும் அர்த்தத்தினால் படிக்கின்றார் :—

स तत्र यत् किंचित् ईक्षते । तेन अनन्वागतः भवेत् । पुण्यं च पापं दृष्ट्वा एव । इति एवं श्रुतिषु डिंडिमः ॥

(சு-ம்.)

"அது அங்கு எந்தெந்த வஸ்துவினைக் காண்கின்றதோ அதனோடு சம்பந்தமில்லாததாய்ச் சென்றதாகின்றது." "புண்ணியபாபங்களை பார்த்துக்கொண்டே" என்பது சுருதிகளில் முரசாம்.

(வி-ம்.)

அந்த ஆத்மா அவ்வவ் வவஸ்தையில் எங்கெந்தப் போக்கியவஸ்துக்க ளைக்காண்கின்றதோ, அந்தத் திருசியத்தோ டொட்டியதாய் வேறு அவஸ் தையினை யடைகிறதில்லை. ஆனால் தானே வேறுஅவஸ்தையினை யடைகின்ற தென்பது பொருள். புண்ணியம், புண்ணியத்தின் பயனாகிய சுகம், பாபம், பாபத்தின் பயனாகிய துக்கம் என்பவற்றைப் பார்த்துக்கொண்டே அதாவது கிரகணஞ் செய்யாமலே போகின்றானென்பது பொருள். (உ௧உ)

எ. போக்தாவின் உண்மைவடிவத்தை விவேசனஞ் செய்வதிற் கருத்துடைய அந்நிய சுருதிகள்.

[எ௧௯] जाग्रत्स्वप्नसुषुप्त्यादिप्रपंचं यत्प्रकाशते ।
तद्ब्रह्माहमिति ज्ञात्वा सर्वबंधैः प्रमुच्यते ॥ २१३ ॥

(அ-கை.)

போக்தாவின் வாஸ்தவசொரூபவடி தத்துவத்தை விவேகித்தற் கருத்துடைய பிறசுருதிகளைக் காட்டுகின்றார்:—

यत्जाग्रत् स्वप्नसुषुप्त्यादि प्रपंचं प्रकाशते । "तत् ब्रह्म अहं" इति ज्ञात्वा सर्वबंधैः प्रमुच्यते ॥

(சு-ம்.)

"எந்தப் பிரஹ்மம் சாக்கிரம் சொப்பனம் சுழுத்திமுதலிய பிரபஞ்சத் தினைப் பிரகாசிக்கின்றதோ அந்தப் பிரஹ்மம் யானென்றறிந்து" சர்வபந் தங்களினின்றும் விடுபடுகின்றான்.

(வி-ம்.)

"சத்திய ஞானானந்த லக்ஷணமுடைய எந்தப் பிரஹ்மம் சாக்ஷிவடி வமாக நிலைத்திருக்கின்றதோ அது ஜாக்கிரமுதலிய பிரபஞ்சத்தினைப் பிர காசிக்கின்றது. அந்தப் பிரஹ்மம் யான். புத்தி சிதாபாசன்முதலியன யா னல்லன்." என்றறிந்து அதாவது சுருதியநுபவங்களால் நிச்சயித்துப் பிரமா தாத்தன்மை கர்த்தாத்தன்மைமுதலிய சகல பிரதிபந்தங்களினின்றும் எல் லாவிதத்தானும் விடுபடுகின்றான். (உ௧௩)

[எ௧அ] एक एवात्मा मंतव्यो जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।
स्थानत्रयव्यतीतस्य पुनर्जन्म न विद्यते ॥ २१४ ॥

(அ-கை.)

இதுவுமது:—

जाग्रत्स्वप्नसुषुप्तिषु एकः एव आत्मा मंतव्यः स्थानत्रयव्यतितस्य पुनः जन्मः न विद्यते ॥

(சு-ம்.)

ஜாக்கிர சொப்பன சுழுத்திகளில் ஒரே ஆத்மா மதிக்கத்தக்கதாம் இவ்வாறு அச்சாக்கிரமுதலிய மூன்றுஸ்தானத்தின் வேறுபட்ட ஆத்மாவிற்கு மறுபடியும் பிறப்பில்லை.

(வி-ம்.)

ஜாக்கிரமுதலிய அவஸ்தைகளில் ஒரே ஆத்மா மதிக்கத்தக்கதாம் என்று விவேகஞானத்தால் மூன்று அவஸ்தைகளினின்றும் வேறுபட்ட ஆத்மாவிற்கு மறுபடியும் பிறப்பில்லை அதாவது இச்சரீரம் விழுந்தபின் வேறுசரீரத்தை அடைதலில்லை என்பது பொருள். (உகச)

[எகூகூ] त्रिषु धामसु यद्भोग्यं भोक्ता भोगश्च यद्भवेत् ।
तेभ्यो विलक्षणः साक्षी चिन्मात्रोऽहं सदाशिवः ॥ २१५ ॥

(அ-கை.)

இதுவுமது:—

त्रिषु धामसु यत् भोग्यं यत् भोक्ता च भोगः भवेत् । तेभ्यः विलक्षणः चिन्मात्रः साक्षी सदाशिवः अहम् ॥

(சு-ம்.)

"மூன்றவஸ்தைகளிலும் உள்ள போக்கியம் போக்தா போகம் எவையோ அவற்றின் வேறுயுள்ள சின்மாத்திரசாக்ஷியாகிய சதாசிவம் யான்."

(வி-ம்.)

மூன்றிடங்களிலுமுள்ள ஸ்தூல, சூக்ஷ்ம, ஆநந்தவடிவ போக்கியம், விஸ்வ தைஜஸ பிராஞ்ஞவடிவ போக்தா, அப்போக்கியங்களின் அநுபவ வடிவபோகம் என்பவை எவையோ அந்தஸ்தானமுதலியவற்றினும் விலக்ஷணமான சின்மாத்திரவடிவ சாக்ஷியாகிய சதாசிவம் அதாவது நிரதிசய ஆநந்தவடிவமாதலால் எப்பொழுதும் சோபையுடையதாகிய பரமாத்மா யான் என்பது பொருள். (உகரு)

ச. போக்தாவாகிய சிதாபாசனுக்குத் தனது மித்தியாத்தன்மையின் ஞானத்தால் போகத்தில் ஆக்கிரகமில்லாமை அ00—அ0கூ.

க. சிதாபாசனது தர்மம் போக்தாத்தன்மையெனல்.

[அ00] एवं विवेचिते तत्त्वे विज्ञानमयशब्दितः ।
चिदाभासो विकारी यो भोक्तृत्वं तस्य शिष्यते ॥ २१६ ॥

(அ-கை.)

இவ்வாறு விவேகத்தினால் ஆத்மதத்துவத்தை அசங்கமென்று நிச்சயிக்கின் போக்திருத்தன்மை யாருக்கு? எனக் கூறுகின்றார் :—

एवं तत्त्वे विवेचिते विज्ञानमयशाब्दितः विकारी यः चिदाभासः तस्य भोक्तृत्वं शिष्यते ॥

(சு-ம்.)

இவ்வாறு தத்துவத்தினை விவேசனஞ்செய்யின் விஞ்ஞானமயசப்தத்திற்கு வாச்சியமான விகாரியாகிய சிதாபாசனுக்குப் போக்திருத்துவம் மிஞ்சுகின்றது.

(வி-ம்.)

விஞ்ஞானமயசப்தத்தாற் சொல்லப்படும் சிதாபாசன் விகாரியா யிருத்தலால் அவனுக்குப் போக்திருத்துவ முண்டென்பது பொருள். (உகசு)

உ. போக்தாவாகிய சிதாபாசன் மித்தையெனல்.

[அ௦உ] मायिकोऽयं चिदाभासः श्रुतेरनुभवादपि ।
इंद्रजालं जगत्प्रोक्तं तदंतःपात्ययं यतः ॥ २१७ ॥

(அ-கை.)

அப்படியானால் சிதாபாசனுக்குப் போக்திருவத்துவம் அங்கீகரிக்கின், "எப்போக்தாவின் போகத்தின்பொருட்டு" என்னும் சுருதியின் வசனம் போக்தாவின் இன்மையைச் சொல்லும் விருப்பாலாம்." என்று முன் ௭௭சு-ல் சொல்லப்பட்ட தெதுவோ அது வியாகாதத்தை யடையுமேயென்றுசங்கித்து, அவ்வெழுநூற்றெழுபத்தாறிற் கூறிய வசனம் பாரமார்த்திக போக்தாவின் அபாவத்தைக் குறித்ததா மென்னும் அபிப்பிராயத்தால் போக்தாவாகிய சிதாபாசனது மித்தியாத்தன்மையைச் சாதிக்கின்றார் :—

अयं चिदाभासः मायिकः श्रुतेः अनुभवात् अपि ॥

(சு-ம்.)

இச்சிதாபாசன் சுருதியினாலும் அனுபவத்தினாலும் மாயிகனாம்.

(வி-ம்.)

இச்சிதாபாசன் மாயிகன் அதாவது மித்தியாவடிவன். ஏனெனின், "जीवेशावाभासेन करोति ஜீவேசுவரர்களை ஆபாசமாக மாயை செய்கின்றது." என்னுஞ் சுருதியினாலும், திருஷ்டா தரிசனம் திரிசிய மென்னும் திரிபுடி

யின் இடையிலிருப்பதாகுதலால் அநுபவிக்கப்படுகிறதா யிருத்தலினாலும் சிதாபாசன் மித்தையா மென்பது பொருள்.

(அ-கை.)

அச்சிதாபாசன் மித்தை யென்பதனையே உபபாதனஞ் செய்கின்றார் :—

यतः इंद्रजालं जगत् प्रोक्तं तदंतःपाती अयम् ॥

(சு-ம்.)

இந்திரஜாலவடிவமாக ஜகத்து சொல்லப்பட்டிருக்கின்றது. எதனால் அதனுள்ளிருப்பது இச்சிதாபாசனோ அதனால்.

(வி-ம்.)

இந்திரஜாலத்தைப்போல மித்தியாவடிவ ஜகத்தில் அடங்கியதா யிருத்தலால் இச்சிதாபாசனது மித்தியாத்தன்மையும் அச்சகத்தினைப்போல வித்து வான்களால் அநுபவிக்கப்படுவதாம். எதனால் இச்சிதாபாசன் ஜகத்தி னுள்ளடங்கியதோ அதனால் மித்தையாம் என்பது அந்வயம். (உகஎ)

[அ0௲] विलयोऽप्यस्य सुप्त्यादौ साक्षिणा ह्यनुभूयते ।
एतादृशं स्वस्वभावं विविनक्ति पुनः पुन. ॥ २१८ ॥

(அ-கை.)

ஜகத்தைப்போல விநாசமுடைமையின் அநுபவத்தினாலும் இச்சிதா பாசனுக்கு மித்தியாத்தன்மை யுண்டென்று கூறுகின்றார் :—

हि अस्य विलयः अपि सुप्त्यादौ साक्षिणा अनुभूयते ॥

(சு-ம்.)

எதனால் இச்சிதாபாசனது விநாசமும் சுழுத்திமுதலியவற்றில் சாக்ஷி யினால் அநுபவிக்கப்படுகின்றதோ அதனாலும் மித்தையாம்.

(வி-ம்.)

இங்கு முதலியவென்னும் சொல்லிற்கு மூர்ச்சைமுதலியன பொரு ளாம்.

(அ-கை.)

சிதாபாசனுக்கு மித்தியாத்தன்மை இருக்குக. அதனாலும் என்ன பயன் எனக் கூறுகின்றார் :—

स्वस्वभावं एतादृशं पुमः पुनः विविनक्ति ॥

(சு-ம்.)

தனது சுபாவத்தினை இப்படிப் பின்னும் பின்னும் விவேசனஞ்செய்கின்றான்.

(வி-ம்.)

எப்போது கூடஸ்தனினின்றும் விவேசனஞ் செய்யப்பட்ட சிதாபாசன் மாயிகனென்றறிந்தானோ அப்போது தனது சுபாவமாகிய சொரூபத்தினை இப்படி மித்தியாவடிவமாக அடிக்கடி விவேசனஞ்செய்கின்றான் அதாவது நிஜவடிவ கூடஸ்தனினின்றும் வேறுபடுத்தி அறிகின்றான். (உகஅ)

௬. சிதாபாசனுக்குத் தனது மித்தியாத்தன்மைஞானத்தினால் போகத்தின் இச்சையின்மை.

[அ0௬] विविच्य नाशं निश्चित्य पुनर्भोगं न वांच्छति ।
मुमूर्षुः शायितो भूमौ विवाहं कोऽभिवांच्छति ॥ २१९ ॥

(அ-கை.)

அக்கூடஸ்தனினின்றும் தன்னை விவேகித்தலினாலும் என்ன பயனுண்டாகின்றதெனக் கூறுகின்றார் :—

विविच्य नाशं निश्चित्य पुनः भोगं न वांच्छति ॥

(சு-ம்.)

விவேசனத்தால் தனது நாசத்தை நிச்சயித்து மறுபடியும் போகத்தை இச்சிக்கிறதில்லை.

(அ-கை.)

தனது நாசத்தின் நிச்சயமாயின் போகத்தின் இச்சை இல்லையென்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

मुमूर्षुः भूमौ शायितः कः विवाहं अभिवांच्छति ॥

(சு-ம்.)

மரண இச்சையுடையவனாய்ப் பூமியில் படுக்கையை யடைந்த எந்தப் புருஷன் விவாகத்தை இச்சிப்பான்? ஒருவனும் இச்சியான். (உகக)

௭. ஞானிக்குப் போக்திருத்தன்மையால் போகத்தில் வெட்கத்தினால் இலேசத்தை முன்னிட்ட பிராரப்தபோகம்.

[௨0௯] जिहेति व्यवहर्तुं च भोक्ताऽहमिति पूर्ववत् ।
छिन्ननास इव ह्रीतः क्लिश्यन्नारब्धमश्नुते ॥ २२० ॥

(அ-கை.)

அல்லது முன்போல அதாவது அஞ்ஞானதசையினைப்போல "நான் போக்தா" என்று கூறுதலும் தோற்றுதலுமாகிய வியவகாரத்தைச் செய்தற்கும் ஞானியாகிய சிதாபாசன் லஜ்ஜையினை அடைகின்றான் என்று கூறுகின்றார் :—

च पूर्ववत अहं भोक्ता इति व्यवहर्तुं जिहेति ॥

(சு-ம்.)

முன்போல நான் போக்தா என்னும் வியவகாரத்தைச் செய்தற்கு வெட்கமடைகின்றான்.

(அ-கை.)

அப்போது ஞானத்தின் உற்பத்திக்குப் பின் பிராரப்தத்தின் முடிவுபரியந்தம் ஞானியாகிய சிதாபாசன் எப்படி வியவகாரஞ் செய்கின்றானெனக் கூறுகின்றார் :—

छिन्ननासः इव ह्रीतः क्लिश्यन् प्रारब्धं अश्नुते ॥

(சு-ம்.)

மூக்கறையன்போல் லஜ்ஜையுடையவனுய்க் கிலேசத்தை யடைந்து பிராரப்தத்தை அநுபவிக்கின்றான்.

(வி-ம்.)

மூக்கறையன்போல் லஜ்ஜையுடையவனுய் "இன்னும் என் ஊழ்வினை தொலையவில்லையே" என்று எஉ-அ-ற் கூறிய கிலேசத்தை அநுபவிப்பவனுய்ப் பிராரப்தகர்மத்தின் பயனைப் புசிக்கின்றானென்பது பொருள்.(௨௨0)

ரு. * இள கைமுதிகநியாயத்தால் சாக்ஷியில் போக்திருத்துவமில்லாமை.

[௨0௫] यदा स्वस्यापि भोक्तृत्वं मंतुं जिहेत्ययं तदा ।
साक्षिण्यारोपयेदेतदिति कैव कथा वृथा ॥ २२१ ॥

(அ-கை.)

இப்போது ஞானமுண்டாகியபின் சாக்ஷிக்குப் போக்திருத்துவத்தின்மை கைமுதிகநியாயத்தால் பெறப்பட்டதாமென்று கூறுகின்றார் :—

---

* இள. இதை அகூ-வது சுலோகத்தின் டிப்பணத்திற் காண்க.

अयं स्वस्य अपि भोक्तृत्वं मन्तुं जिह्रेति यदा तदा एतत् साक्षिणि आरोपयेत् इति वृथा कथा का इव ॥

(சு-ம்.)

இந்த ஞானியாகிய சிதாபாசன் எப்போது தனது போக்திருத்தன்மையை அங்கீகரித்தற்கு லஜ்ஜையை யடைகின்றானோ, அப்போது இந்தப் போக்திருத்தன்மையினைச் சாக்ஷியினிடத்து ஆரோபஞ்செய்வான் என்னும் வீணான கதை யாது?

(வி-ம்.)

இச்சிதாபாசன் எப்போது தனது போக்தாத்தன்மையினையும் அங்கீகரித்தற்கு அதாவது "நான் போக்தா"வென் றறிதற்கும் லஜ்ஜையை அடைகின்றானோ அப்போது இந்தன்னிடத்துள்ள போக்திருத்தன்மையினை அசங்கசாக்ஷியினிடத்து ஆரோபஞ்செய்வான் என்னும் பொருளின்றிய வீண்கதை யாது? ஒன்றுமில்லையென்பது பொருள். (உஉக)

க. சுலோகம் அ௦௭ற் கூறிய அர்த்தத்தினைப் பிரகிருதசுருதியால் ஆரூடஞ்செய்தல்.

[அ௦௯] इत्यभिप्रेत्य भोक्तारमाक्षिपत्यविशंकया ।
कस्य कामायेति ततः शरीरानुज्वरो न हि ॥ २२२ ॥

(அ-கை.)

சுலோகம் ௭௦௯-அ௦௭ற் கூறிய அர்த்தத்தினைச் சுருதியினால் ஆரூடஞ் செய்கின்றார்:—

"कस्य कामाय इति" इति अभिप्रेत्य अविशंकया भोक्तारं आक्षिपति ॥

(சு-ம்.)

"எவனுடைய காமத்தின் பொருட்டு" என்னுஞ் சுருதி இவ்வபிப்பிராயத்தினால் சங்கையின்றிப் போக்தாவினை நிஷேதஞ் செய்கின்றது.

(வி-ம்.)

"எவனுடைய காமத்தின் பொருட்டு" என்னுஞ் சுருதி கூடஸ்தனது அல்லது சிதாபாசனது பாரமார்த்திக போக்திருத்தன்மையின் அபாவத்தினை அபிப்பிராயத்திற்கு விஷயமாக்கிச் சங்கையின்றியதன்மையினால் போக்தாவினை நிராகரணஞ் செய்கின்றது.

(அ-கை.)

இவ்வாறு போக்தாவின் நிஷேதம் உண்டாருக, அதனால் என்ன பயன் உண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

ततः शरीरानुज्वरः न हि ॥

(சு-ம்.)

அதனால் ஞானிக்குச் சரீரத்தைப் பின்பற்றிய தாபமில்லை. (உஉஉ)

ரு. ஞானிக்கு மூன்று சரீரத்தின்கண்ணுள்ள ஜ்வரத்தினின்மை (சோக நிவிருத்தி) அ௦௭-அ௩ரு.

க. மூன்று சரீரத்துள்ள ஜ்வரத்தின் சொரூபம் அ௦௭-அ௧உ.

க. சரீரத்தின் பேதபூர்வகமாக அக்கக்கு ஜ்வரமிருத்தல்.

[அ௦௭] स्थूलं सूक्ष्मं कारणं च शरीरं त्रिविधं स्मृतम् ।
अवश्यं त्रिविधोऽस्त्येव तत्र तत्रोचितो ज्वरः ॥ २२३ ॥

(அ-கை.)

தத்துவமுணர்ந்தவனுக்குச் சரீரத்தைப்பற்றிய தாபம் இல்லை யென்பதனைக் காட்டுதற்பொருட்டுச் சரீரத்தின் பேதத்தையும் அவ்வச்சரீரத்தில் ஜ்வரத்தின் இருப்பினையும் காட்டுகின்றார்:—

स्थूलं सूक्ष्मं च कारणं त्रिविधं शरीरं स्मृतं । तत्र तत्र उचितः त्रिविधः ज्वरः अवश्यम् ॥

(சு-ம்.)

ஸ்தூலம் சூக்ஷ்மம் காரண மென்னும் பேதத்தால் மூவகையான சரீரம் கருதப்படுகின்றது. அந்தந்தச் சரீரத்தில் உசிதமான மூவகைஜ்வரம் அவசியமேயாம். (உஉ௩)

உ. ஸ்தூலசரீரத்துள்ள ஜ்வரத்தினைக் கூறுதல்:

[அ௦அ] वातपित्तश्लेष्मजन्यव्याधयः कोटिशस्तनौ ।
दुर्गंधित्वकुरूपत्वदाहभंगादयस्तथा ॥ २२४ ॥

(அ-கை.)

அவற்றுள் ஸ்தூலசரீரத்துள்ள ஜ்வரங்களை முதலிற்காட்டுகின்றார்:—

तनौ कोटिशः वातपित्तश्लेष्मजन्यव्याधयः तथा दुर्गंधित्वकुरूपत्वदाहभङ्गादयः ॥

(சு-ம்.)

ஸ்தூலசரீரத்தில் வாயு பித்த கபவடிவ மூன்றுதோஷங்களாற்றோன்றிய கோடிக்கணக்கான வியாதிக ளிருக்கின்றன. அவ்வாறே தூர்க்கந்தமுடைமை, குரூபத்தன்மை, தாகம், பங்கமுதலியனவும் அத்தூலசரீரத்துள்ள ஜ்வரங்களாம். (உஉச)

ரு. சூக்ஷ்மசரீரத்திலுள்ள சுரங்களைக் கூறுதல்.

[அ0க] कामक्रोधादयः शांतिदांत्याद्या लिंगदेहगाः ।
ज्वरा द्वयेऽपि बाधंते प्राप्त्याऽप्राप्त्या नरं क्रमात् ॥ २२५ ॥

(அ-கை.)

சூக்ஷ்மசரீரத்துள்ள சுரங்களைக் காட்டுகின்றார்:—

कामक्रोधादयः शांतिदांत्याद्याः लिंगदेहगाः ॥

(சு-ம்.)

காமம் குரோதமுதலியனவும், சாந்திதாந்திமுதலியனவும் இலிங்கதேகத்தின்கண்ணுள்ள சுரங்களாம்.

(அ-கை.)

காமம் சாந்திமுதலியவற்றிற்குச் சுரவடிவத்தன்மையினைச் சம்பாதிக்கின்றார் :—

द्वये अपि ज्वराः क्रमात् प्राप्त्या अप्राप्त्या नरं बाधंते ॥

(சு-ம்.)

இருவகைச் சுரங்களும் கிரமமாக அடைவினாலும் அடைவின்மையினாலும் நரனுக்குத் துன்பத்தைச் செய்கின்றன.

(வி-ம்.)

காமாதிகளும் சாந்தியாதிகளுமாகிய இவ்விருவகைச் சுரங்களும் கிரமமாக அடைவு அடைவின்மைகளால் *டூஅ. நரனை வாதிக்கின்றன. ஆத

---

* டூஅ. அஞ்ஞானியாகிய புருஷனுக்கு "என்னுடைய காமம் ஒழியவில்லை, என்னுடைய குரோதம் ஒழியவில்லை." என்று துர்ச்சனபுருஷனைப்போல காமாதிகள் தம் அடைவினால் தபிக்கச்செய்கின்றன. அதுபோல "எனக்கு மனதின் நிக்கிரகமாகிய சாந்தி யுண்டாகவில்லை.இந்திரியநிக்கிரகமாகிய தாந்தி யுண்டாகவில்லை." என்று சஜ்ஜனபுருஷனைப்போலச் சாந்திமுதலியனவும் தம் அடைவின்மையால் அஞ்ஞானியைத் தபிக்கச் செய்கின்றன. ஆதலால் இவ்விரண்டும் சுரத்திற்குச் சமானமாயிருத்தலின் சுர மெனப்படுகின்றன. ஞானியோ "பிரகாசம் (சுத்துவகுணத்தின்காரியம்),

லால் சுரத்திற்குச் சமானமாயிருத்தலின் சுரமெனப்படுகின்றன என்பது பொருள். (உஉ௫)

ஈ. சாந்தோக்கியசுருதியிற் சொல்லப்பட்ட காரணசரீரத்துள்ள சுரத்தினைக் கூறுதல்.

[அகO] स्वं परं च न वेत्त्यात्मा विनष्ट इव कारणे ।
आगामिदुःखबीजं चेत्येतदिंद्रेण दर्शितम् ॥ २२६ ॥

(அ-கை.)

காரணசரீரத்துள்ள சுரம் சாந்தோக்கியசுருதியில் சொல்லப்படுகின்றதென்று கூறுகின்றார்:—

कारणे आत्मा स्वं च परं न वेत्ति च विनष्टः इव च आगामिदुःखबीजं इति इंद्रेण दर्शितम् ॥

(சு-ம்.)

காரணசரீரத்தில் ஆத்மாவாகிய புருஷன் தன்னையும் பிறனையு மறிகிறதில்லை. விநாசத்தை யடைந்தவனைப்போ லாகின்றான். ஆகாமிதுக்கத்தின் சம்ஸ்காரவடிவ பீஜ மிருக்கின்றது என்னும் அர்த்தத்தினை இந்திரன் காட்டியிருக்கின்றார்.

(வி-ம்.)

“இப்புருஷன் இப்போது சுழுத்திகாலத்தில் நிச்சயமாக ‘இது நான்’ என்று ஆத்மாவாகிய தன்னை அறிகிறதில்லை. ஆனால் விநாசத்தையே அடைந்தவனைப் போலாகின்றான்.” “இச்சுழுத்தியில் யான் போக்கியத்தைக் காண்கிறதில்லை” என்னும் வாக்கியத்தினால் தான் பிறரென்னும் உணர்ச்சியின்றியதன்மையும், அஞ்ஞானத்தில் நாசமாகியதைப் போன்ற தன்மையும், மேற்றினங்களில் ஆகந்தக்க துக்கமாகிய சுரத்தினது பீஜவடிவ வாசனையின் இருப்பும் சாந்தோக்கியஉபநிஷத்தின் எட்டாவது அத்

---

பிரவிருத்தி (இரஜோகுணத்தின்காரியம்), மோகம் (தமோகுணத்தின் காரியம்) என்னும் மூன்றும் பிரவிருத்திக்கின், அவற்றைத் துவேஷிக்கிறதில்லை; நிவர்த்தியாயின் அவற்றை இச்சிக்கிறதில்லை.” என்னும் கீதையின் கசு-வது அத்தியாயத்துள்ள உஉ-வது சுலோகவடிவ வாக்கியத்திலுள்ள ஸ்வஸம்வேத்ய (தன்னாலறியப்படுதற்றன்மையாகிய)லக்ஷணத்தினால் குறிக்கப்பட்டதாயிருத்தலின், அச்சாக்ஷிகமுதலிய விருத்திகளின் அநாத்மத்தன்மையினைச் செவ்வையாய்க் காண்பவனாய் ஆத்மாவின் அநுகூலத்தன்மை பிரதிகூலத்தன்மைகளை ஆரோபித்தலால் அவற்றால் பயத்தை அடைகிறதில்லை; அவற்றை இச்சிக்கிறது மில்லை. ஆதலால் ஞானியோ தேகத்தின் சுரங்களால் சுரத்தை யடைகிறதில்லை.

தியாயத்தில் இந்திரனுகிய சிஷ்யனுல் பிரஜாபதியாகிய பிரஹ்மாவடிவ குரு வின்முன் நிவேதிக்கப்பட்டன என்பது பொருள். (உஉகூ)

ரு. சரீரங்களால் சுரங்களின் நிவிருத்தியின்மை.

[அகக] एते ज्वराः शरीरेषु त्रिषु स्वाभाविका मताः ।
वियोगे तु ज्वरैस्तानि शरीराण्येव नासते ॥ २१७ ॥

(அ-ரை.)

இவ்வாறு மூன்று தேகங்களிலும் சுரங்களைக் கூறி அச்சுரங்களின் நிவர்த்திக்கப்படாததன்மையினைக் கூறுகின்றார்:—

त्रिषु शरीरेषु एते ज्वराः स्वाभाविकाः मताः ॥

(சு-ம்.)

மூன்று சரீரங்களிலும் இந்தச் சுரங்கள் சுபாவிகம் அதாவது உடன் ேறான்றிய தர்ம மென்று கொள்ளப்பட்டிருக்கின்றன.

(வி-ம்.)

மூன்று சரீரங்களிலும் தோற்றுகின்ற இச்சுரங்கள் சரீரங்களோடு பிறந்தனவாயிருத்தலின் சுபாவிகமாகக் கொள்ளப்படுகின்றன.

(அ-கை.)

சுரங்களின் சுபாவிகத்தன்மையைச் சுரம் இன்மையால் சரீரமில்லை என்னும் வியதிரேகவாயிலாகத் திடஞ்செய்கின்றார்:—

ज्वरैः व्योगे तु तानि शरीराणि न आसते एव ॥

(சு-ம்.)

சுரங்களினின்று பிரிக்கப்படின் அச்சரீரங்களே இரா.

(வி-ம்.)

எக்காரணத்தால் இச்சுரங்களினின்றும் அச்சரீரங்கள் பிரிக்கப்படின் அச்சரீரங்களே இருக்கமாட்டாவோ, அதனுல் இச்சுரங்கள் சுவாபாவிகமா மென்பது பொருள். (உஉஎ)

கூ. சுலோகம் அகக-ற் கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்தம்.

[அகஉ] तंतोर्वियुज्येत पटो वालेभ्यः कंबलो यथा ।
मृदो घटस्तथा देहो ज्वरेभ्योऽपीति दृश्यताम् ॥ २२८ ॥

(அ-கை.)

அச்சுரங்கள் சுவாபாவிகமா மென்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा तंतोः पटः व्युज्येत । वालेभ्यः कंबलः । मृदः घटः । तथा ज्वरेभ्यः देहः अपि । इति दृश्यताम् ॥

(சு-ம்.)

எப்படி நூலினின்றும் படமும், உரோமங்களினின்றும் கம்பலமும், மண்ணினின்றும் கடமும் வியோகத்தினை யடையின் இராவோ, அதுபோல சுரங்களினின்றும் தேகம் வியோகத்தினை அடையின் இராதென் றறிந்து கொள்க. (உஉ-அ)

உ. சிதாபாசனிடத்து வாஸ்தவ சுரம் இல்லை யென்பதோடு கூடஸ்தனிடத்தும் சுரமில்லை யெனல் அகந—அகக௯.

க. சிதாபாசனிடத்துச் சுர மின்மை.

[அகந] चिदाभासे स्वतः कोऽपि ज्वरो नास्ति यतश्चितः ।
प्रकाशैकस्वभावत्वमेव दृष्टं न चेतरत् ॥ २२९ ॥

(அ-கை.)

இப்போது கூடஸ்தனிடத்துச் சுரமின்மையினைக் * ௫௯. கைமுதிக நியாயத்தால் காட்டுதற்கு விரும்பிய ஆசாரியர் சிதாபாசனிடத்து முதலில் சுரமின்மையைக் காட்டுகின்றார்:—

चिताभासे स्वतः कः अपि ज्वरः न अस्ति ॥

(சு-ம்.)

சிதாபாசனிடத்துச் சுபாவமாக ஒரு சுரமுமில்லை.

(வி-ம்.)

சிதாபாசனிடத்துச் சுபாவமாக அதாவது மூன்றுசரீரத்துள்ள சுர சம்பந்தமின்றி ஒரு சுரமு மில்லை.

---

* ௫௯. காய்ந்த எண்ணெயிலுள்ள ஆகாயத்தின் பிரதிபிம்பத்திற்கும் தாபத்தின் சம்பந்தமில்லையெனின், அப்போது ஆகாயத்தில் தாபத்தின் சம்பந்தம் எங்கிருந்து உண்டாகும்? என்னும் வடிவினதாகிய நியாயத்தினைக் கைமுதிகநியாய மென்பர். அதுபோல இங்குச் சிதாபாசனிடத்திலும் எப்போது வாஸ்தவசுரமில்லையோ அப்போது கூடஸ்தனிடத்துச் சுரம் எங்கிருந்துண்டாகு மென்னு மாகாரமுடையது கைமுதிகநியாயமாம்.

(அ-கை.)

சிதாபாசனிடத்துச் சுபாவமாகச் சுரம் ஏன் இல்லையெனக் கூறுகின்றார்:—

यतः चितः प्रकाशैकस्वभावत्वं एष दृष्टं च इतरत् न ॥

(சு-ம்.)

எதனால் சேதனத்திற்குப் பிரகாசவடிவ ஒரு சுபாவமுடைமையே காணப்படுகின்றதோ, வேறில்லையோ அதனால்.

(வி-ம்.)

பிரகாசவடிவ ஒரு சுபாவமுடைய சேதனம் வித்துவான்களது அநுபவத்தாற் பெறப்பட்டதா யிருத்தலின் அதன் பிரதிபிம்பமாகிய சிதாபாசனுக்கு அப்படிப்பட்டதன்மை அதாவது பிரகாசமாகிய ஒரு சுபாவமுடைமை கொள்ளத்தக்கதா மென்பது தாற்பரியம். (௨௨௯)

௨. சாக்ஷியினிடத்துச் சுரமின்மையோடு சிதாபாசன் மூன்று சரீரத்திலும் ஏகமென்னும் பிராந்தி.

[அ௧௪] चिदाभासेऽप्यसंभाव्या ज्वराः साक्षिणि का कथा ।
एवमप्येकतां मेने चिदाभासो ह्यविद्यया ॥ २३० ॥

(அ-கை.)

எதன்பொருட்டுச் சிதாபாசனிடத்துச் சுரத்தினின்மை உபபாதனஞ் செய்யப்பட்டிருக்கின்றதோ அதன் பயனை இப்போது காட்டுகின்றார்:—

चिदाभासे अपि ज्वराः असंभाव्याः । साक्षिणि का कथा ॥

(சு-ம்.)

எப்போது சிதாபாசனிடத்திலும் சுரங்கள் சம்பவிக்கத்தக்கன வன்றோ, அப்போது சாக்ஷியினிடத்து அவற்றைக் குறித்துச் சொல்லவேண்டியதென்னை?

(வி-ம்.)

எப்போது சிதாபாசனிடத்திலும் சுரம் சம்பவிக்கவில்லையோ அப்போது சாக்ஷியினிடத்துச் சம்பவியா தென்பதிற் சொல்லவேண்டியதென்னென்பது தாற்பரியம்.

(அ-கை.)

அப்படியானால் "யான் சுரத்தை யடைகின்றேன்" என்னும் அநுபவத்திற்குக் கதி யாதெனக் கூறுகின்றார்:—

एवम् अपि चिदाभासः हि अविद्यया एकताम् मने ॥

(சு-ம்.)

இவ்வாறு சுரத்தின் இன்மை உண்டாகியும் சிதாபாசன் அவித்தையினால் சரீரங்களோடு எதனால் ஒருமையை அங்கீகரிக்கின்றானோ அதனால் சுரத்தை யடைகின்றான். (௨௩௰)

[௮௧௫] साक्षिसत्यत्वमध्यस्य स्वेनोपेते वपुस्त्रये ।
तत्सर्वं वास्तवं स्वस्य स्वरूपमिति मन्यते ॥ २३१ ॥

(அ-கை.)

சிதாபாசன் ஐக்கியத்தைக் கொள்ளுகிறானென அகூ-ல் சுருக்கமாகக் கூறிய அர்த்தத்தினை விஸ்தாரமாகக் கூறுகின்றார் :—

स्वेन उपेते वपुस्त्रये साक्षिसत्यत्वं अध्यस्य तत् सर्वं स्वस्य वास्तवं स्वरूपं इति मन्यते ॥

(சு-ம்.)

தன்னோடுகூடிய மூன்று சரீரத்தில் சாக்ஷியின் சத்தியத்தன்மையினை அத்தியசித்து அவ்வெல்லாவற்றினையும் தனது வாஸ்தவசொரூபமென்று மதிக்கின்றான்.

(வி-ம்.)

சிதாபாசன் தன்னோடுகூடிய மூன்று சரீரங்களில் சாக்ஷியின்கண்ணுள்ள சத்தியத்தன்மையினை அத்தியாசஞ்செய்து அவ்வெல்லாவற்றினையும் அதாவது ஜ்வரத்தோடுகூடிய மூன்றுசரீரங்களையும் தனது வாஸ்தவரூபமென்று மதிக்கின்றானென்பது பொருள். (௨௩௧)

௩. சிதாபாசனுக்குத் திருஷ்டாந்தத்தோடு அகடு-வது சுலோகத்திற் கூறிய பிராந்தியின் பயன் (ஜ்வரசம்பந்தம்.)

[௮௧௬] एतस्मिन्भ्रांतिकालेऽयं शरीरेषु ज्वरत्स्वथ ।
स्वयमेव ज्वरामीति मन्यते हि कुटुंबिवत् ॥ २३२ ॥

(அ-கை.)

இப்படிப் பிராந்திஞானமுண்டாக என்ன உண்டாகுமெனக் கூறுகின்றார் :—

अयं एतस्मिन् भ्रांतिकाले शरीरेषु ज्वरत्सु अथ स्वयं एव ज्वरामि । इति मन्यते हि ॥

(சு-ம்.)

இச்சிதாபாசன் இப்பிராந்திகாலத்தில் சரீரங்களில் பொருந்திய ஜ்வர முண்டாகப் பின் "யானே ஜ்வரத்தை யடைகின்றேன்" என்று கொள்ளுகின்றான்.

(வி-ம்.)

இச்சிதாபாசன் இப்பிராந்திகாலத்தில் சரீரத்துள்ள ஜ்வரத்தினைத் தன்னிடத் தாரோபிக்கின்றான் என்பது பொருள்.

(அ-கை.)

அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

कुटुंबिवत् ॥

(சு-ம்.)

புத்திராதிகளின் துக்கத்தால் செவ்வையாய்த் தபிக்கும் குடும்பியினைப் போல. (உகூஉ)

[அகஎ] पुत्रदारेषु तप्यत्सु तपामीति वृथा यथा ।
मन्यते पुरुषस्तद्वदाभासोऽप्यभिमन्यते ॥ २३३ ॥

(அ-கை.)

முற்கூறிய திருஷ்டாந்தத்தினை விளக்குகின்றார்:—

यथा पुरुषः पुत्रदारेषु तप्यत्सु "तपामि" इति वृथा मन्यते । तद्वत् आभासः अपि अभिमन्यते ॥

(சு-ம்.)

எப்படிக் குடும்பியாகிய புருஷன் புத்திரதாரங்கள் தபிக்குங்கால் "யான் தபிக்கின்றேன்" என்று விருதாவாகக் கொள்ளுகின்றானோ, அது போலச் சிதாபாசனும் "யான் தபிக்கின்றேன்" என்று விருதாவாகக் கொள்ளுகின்றான். (உகூகூ)

ச. விவேகதசையில் சிதாபாசனுக்கு ஜ்வரமின்மை.

[அகஅ] विविच्य भ्रांतिमुज्झित्वा स्वमप्यगणयन्सदा ।
चिंतयन्साक्षिणं कस्माच्छरीरमनुसंज्वरेत् ॥ २३४ ॥

(அ-கை.)

இவ்வாறு அவிவேகதசையில் சிதாபாஸனுக்குப் பிராந்தியினால் ஜ்வரத்தைக் காட்டி விவேகதசையில் ஜ்வரமின்மையைக் காட்டுகின்றார்:—

विविच्य भ्रांतिं उज्झित्वा स्वं अपि अगणयन् साक्षिणं सदा चिंतयन् कस्मात् शरीरं अनुसंज्वरेत् ॥

(சு-ம்.)

விவேகித்துப் பிராந்தியினை விட்டுத் தன்னையுங் கணியாது எப்போதும் சாக்ஷியினைச் சிந்திக்குங்கால் சரீரத்தைப் பின்பற்றி எவ்வாறு ஜ்வரத்தை யடைவான்?

(வி-ம்.)

சிதாபாசன் கூடஸ்தனையும் தனது ஸ்வரூபத்தையும் சரீரங்களையும் விவேகித்து அதாவது வேறுபிரித்தறிந்து "இவ்வெல்லாம் எனது வாஸ்தவசொரூப மென்று கொள்ளுகிறான்." என்று அகஉ-வது சுலோகத்திற் கூறிய பிராந்தியினை விட்டுத் தான் ஆபாசவடிவ மென்னு முணர்ச்சியினால் தன்னிடத்தும் ஆதாரத்தைச் செய்யவில்லை. தனது நிஜவடிவமான ஜ்வராதிக ளின்றிய சாக்ஷியினை எப்போதும் சிந்திக்கின்றவன் ஜ்வரமுடைய சரீரத்தினை அநுசரித்துத் தான் எக்காரணத்தால் ஜ்வரத்தினை அடைவான்? அடையவே அடையா னென்பது பொருள். (உகூச)

ரு. பிராந்திஞான தத்துவஞானங்களுக்கு ஜ்வரமும் ஜ்வரமின்மையும் காரணமாதலைத் திருஷ்டாந்தத்தால் விளக்குதல்.

[அகரு] अयथावस्तुसर्पादिज्ञानं हेतुः पलायने ।
रज्जुज्ञानेऽहिधीध्वस्तौ कृतमप्यनुशोचति ॥ २३५ ॥

(அ-கை.)

பிராந்திஞானத்திற்கும் தத்துவஞானத்திற்கும் ஜ்வரமும் ஜ்வரமின்மையும் காரணமாதலைத் திருஷ்டாந்தத்தைக் காட்டுதலால் விளக்குகின்றார்:—

अयथावस्तुसर्पादिज्ञानं पलायने हेतुः । रज्जुज्ञाने अहिधीध्वस्तौ कृतं अपि अनुशोचति ॥

(சு-ம்.)

அயதார்த்தவஸ்துவடிவ சர்ப்பாதிகளின் ஞானம் ஓட்டத்திற்குக் காரணமாம். இரஜ்ஜுவின் ஞானமுண்டாய்ச் சர்ப்பத்தின் புத்தி நாசமாகவே செய்ததற்கும் அதாவது ஓடியதற்கும் சோகிக்கின்றான்.

(வி-ம்.)

இரஜ்ஜுமுதலியவற்றில் கற்பிக்கப்பட்ட சர்ப்பமுதலியவற்றின் ஞானம் ஓட்டமுதலியவற்றிற்குக் காரணமாம். இங்கே முதலிய வென்னுஞ்

சொல்லால் தானுவிற் கற்பிக்கப்பட்ட கள்ளனும் கொள்ளப்படுவன். இரஜ்ஜு முதலியவற்றின் ஞானத்தால் சர்ப்பாதிகளின் புத்தி நிவிருத்தியாகவே அவ்வோடிய ஓட்டத்தினைக் குறித்துச் சோகிக்கின்றான் அதாவது "யான் விருதாவாக ஓடினேன்" என்று பின் இரங்குதலைச் செய்கின்றான் என்பது பொருள். (உகரு)

ரு. சாக்ஷியினிடத் தாரோபிக்கப்பட்ட போக்தாத்தன்மைவடிவ தோஷம் நீங்கும்பொருட்டுச் சிதாபாஸன் சாக்ஷியின் தற்பரனுதல் அஉ௦-அஉகூ.

க. முன் அகஅ-வது சுலோகத்திற் கூறிய சாக்ஷியின் சிந்தனத்தைத் திருஷ்டாந்தத்தோடு விளக்கல்.

[அஉ௦] मिथ्याभियोगदोषस्य प्रायश्चित्तत्वासिद्धये ।
क्षमापयन्निवात्मानं साक्षिणं शरणं गतः ॥ २३६ ॥

(அ-கை.)

"சாக்ஷியை எப்போதும் சிந்திக்குங்கால்" என்று அகஅ-வதிற் கூறிய அர்த்தத்தினைத் திருஷ்டாந்தத்தால் விளக்குகின்றார்:—

मिथ्याभियोगदोषस्य प्रायश्चित्तत्वासिद्धये साक्षिणं आत्मानं क्षमापयन् इव शरणं गतः ॥

(சு-ம்.)

திருட்டுமுதலியதோஷத்தை ஆரோபித்த குற்றத்தின் பிராயச்சித்தம் சித்திக்கும்பொருட்டு மன்னிப்புக் கேட்டுக்கொள்வதைப்போல இவன் சாக்ஷியாகிய ஆத்மாவைச் சரணடைகின்றான்.

(வி-ம்.)

உலகத்தில் ஒருவன்பேரில் திருட்டுமுதலியதோஷங்களை ஆரோபிக்கும் புருஷன் அத்தோஷத்தின் பிராயச்சித்தம் சித்திக்கும்பொருட்டு மித்தையாகக் குற்றஞ்சுமத்தப்பட்ட புருஷனை அடிக்கடி கேட்டுக்கொள்வதைப்போல, இச்சிதாபாசனும் சாக்ஷிவடிவ அசங்க ஆத்மாவினிடத்தில் போக்திருத்தன்மையினை ஆரோபித்தல்வடிவ பொய்யாகிய குற்றஞ்சுமற்றுதலா லுண்டாம் தோஷத்தின் பிராயச்சித்தத்தின்பொருட்டுச் சாக்ஷியாகிய ஆத்மாவினை மன்னிப்புக் கேட்டுக்கொள்வதைப் போலச் சரணடைகின்றான். (உகசு)

உ. சுலோகம் அகக-ற் கூறிய அந்நிய திருஷ்டாந்தம்.

[அஉக] आवृत्तपापनुत्त्यर्थं स्नानाद्यावर्त्यते यथा ।
आवर्तयन्निव ध्यानं सदा साक्षिपरायणः ॥ २३७ ॥

(அ-கை.)

எப்போதும் சாக்ஷியைச் சிந்தித்தலாகிய அதிற்றேனே வேறு திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा आवृत्तपापनुत्त्यर्थं स्नानादि आवर्त्यते । ध्यानं आवर्तयन् इव सदा साक्षिपरायणः ॥

(சு-ம்.)

எப்படி ஆவிருத்திசெய்யப்பட்ட பாபத்தினது நிவிருத்தியின்பொருட்டு ஸ்நாநாதிகளின் ஆவிருத்திசெய்யப்படுகின்றதோ, அதுபோலச் சிதாபாசன் தியானத்தை ஆவிருத்தி செய்கின்றவனைப்போல எப்போதும் சாக்ஷியை நோக்கியவனுகின்றான்.

(வி-ம்.)

எப்படிப் பாபஞ் செய்யும் புருடனால் அப்பியசிக்கப்பட்ட பாபம் நீங்குதற்பொருட்டுச் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட ஸ்நாநாதிவடிவப் பிராயச்சித்தம் மீண்டு மீண்டும் அநுஷ்டிக்கப்படுகின்றதோ, அதுபோல இச்சிதாபாசனும் நெடுங்காலம் சாக்ஷியினிடத்துச் சம்சாரித்தன்மைமுதலியவற்றை ஆரோபித்தல்வடிவ தோஷம் நீங்குதற்பொருட்டுத் தியானம் அடிக்கடி செய்பவனைப்போல எப்போதும் சாக்ஷியில் தற்பரனுகின்றான். (உ௩எ)

௩. ஞானியாகிய சிதாபாஸனுக்குத் தனது குணத்தின் பிரசித்தியில் நாணமுடைமையைத் திருஷ்டாந்தத்தோடு கூறுதல்.

[அஉஉ] उपस्थकुष्ठिनी वेश्या विलासेषु विलज्जते ।
जानतोऽग्रे तथाभासः स्वप्रख्यातौ विलज्जते ॥ २३८ ॥

(அ-கை.)

இவ்வாறு திருஷ்டாந்தங்களால் சிதாபாஸன் சாக்ஷியின் தற்பரனுதலை வர்ணித்துத் தனது கர்த்திருத்துவாதி குணங்களின் பிரக்கியாதியில் நாணமுடைமையைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

उपस्थकुष्ठिनी वेश्या विलासेषु विलज्जते । तथा आभासः जानतः अग्रे स्वप्रख्यातौ विलज्जते ॥

(சு-ம்.)

எப்படி இரகசிய அங்கமாகிய குறியில் குஷ்டமுடைய வேசியானவள் அதனை உணர்ந்தவன்முன் நாணமடைவாளோ, அதுபோலச் சிதாபாஸன் ஞானமுடைய புருஷன்முன் தனது பிரசித்தியில் லஜ்ஜையை யடைகின்றான். (உங அ)

ச. மூன்று சரீரங்களினும் விவேகிக்கப்பட்ட சிதாபாசனுக்கு மீண்டும் அச்சரீரங்களோடு ஒற்றுமைமயக்கம் இல்லை என்பதில் திருஷ்டாந்தம்.

[அஉங] गृहीतो ब्राह्मणो म्लेच्छैः प्रायश्चित्तं चरन्पुनः ।
म्लेच्छैः संकीर्यते नैव तथाभासः शरीरकैः ॥ २३९ ॥

(அ-கை.)

இப்போது மூன்று சரீரங்களினின்றும் விவேகிக்கப்பட்ட சிதாபாசனுக்கு மீண்டும் அச்சரீரங்களோடு தாதாத்மியமாகிய ஒற்றுமைமயக்கமில்லை யென்பதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

म्लेच्छैः गृहीतः ब्राह्मणः प्रायश्चित्तं चरन् पुनः म्लेच्छैः न एव संकीर्यते तथा आभासः शरीरकैः ॥

(சு-ம்.)

எப்படி மிலேச்சர்களால் கவரப்பட்ட பிராஹ்மணன் பிராயச்சித்தத்தைச் செய்துகொண்டு பின் மிலேச்சர்களோடு கலக்கமாட்டானோ, அது போலச் சிதாபாஸன் விவேகமுடையவனுய் மீண்டும் சரீரங்களோடு கலப்புடையவன் அதாவது அத்தியாசமுடையவனுகான். (உஙகூ)

ரு. சிதாபாசனுக்குப் பெரும் இலாபமுண்டாகும்பொருட்டுச் சாக்ஷியின் அநுசாரித் தன்மையினைத் திருஷ்டாந்தத்தோடு கூறுதல்.

[அஉச] यौवराज्ये स्थितो राजपुत्रः साम्राज्यवाञ्छया ।
राजानुकारी भवति तथा साक्ष्यनुकार्ययम् ॥ २४० ॥

(அ-கை.)

சிதாபாசனுக்குக் கேவலம் தனது அபராதம் நீங்குதற்பொருட்டுச் சாக்ஷியை அநுசரித்த லில்லை. ஆனால் பெரும்பிரயோஜனம் சித்தித்தற்

பொருட்டுச் சாக்ஷியை அநுசரித்தலா மென்று *கூ0. ஸிம்மாவலோகந்யா யத்தால் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

यौवराज्ये स्थितः राजपुत्रः साम्राज्यवांछया राजानुकारी भवति । तथा अयं साक्ष्यनुकारी ॥

(சு-ம்-)

ராஜா ஜீவித்திருக்கும்போது ராஜபதவியி லிருத்தலாகிய யுவராஜத் தன்மையி லுள்ள ராஜபுத்திரன் சக்கிரவர்த்தித்தன்மையாகிய சாம்ராஜ்யத் தின் வாஞ்சையினால் ராஜாவை அநுசரித்தவனவதுபோல இச்சிதாபாசன் பிரஹ்மத்தன்மையின் இச்சையினால் சாக்ஷியினை அநுசரிப்பவனாகின் றான். (௨௪0)

கூ. சிதாபாசன் சாக்ஷியை யநுசரித்தவனாதலிற் பயன்.

[அ௨ரு] यो ब्रह्म वेद ब्रह्मैव भवत्येव इति श्रुतिम् ।
श्रुत्वा तदेकचित्तः सन्ब्रह्म वेत्ति न चेतरत् ॥ २४१ ॥

(அ-கை.)

அப்படியானால் யுவராஜனுக்கு ராஜாவை அநுசரித்தவனாதலில் மண் டலேஸ்வரரின் அதிபதித்தன்மையாகிய சாம்ராஜ்ஜியவடிவ பயன் காணப் படுகின்றது. இவ்வாறு சிதாபாசன் சாக்ஷியின் அநுசாரியாதலில் பயன் காணப்படவில்லை. ஆதலால் சாக்ஷியை அநுசரித்தலில் எப்படிப் பிரவிருத் தனாவனென்று கூறுகின்றார்:—

"यः ब्रह्म वेद ब्रह्म एव भवति" इति श्रुत्वा तदेकचित्तः सन् ब्रह्म वेत्ति च इतरत् न ॥

(சு-ம்.)

"எவன் பிரஹ்மத்தை யறிகின்றானோ அவன் நிச்சயமாகப் பிரஹ்மமே யாகின்றான்." என்னுஞ் சுருதியைக் கேட்டு அந்தப் பிரஹ்மமாகிய ஒன் றில் சித்தமுடையவனாய்ப் பிரஹ்மத்தை யறிகின்றான்; வேறொன்றை யறிகி றில்லை.

* கூ0. சிம்மம் எப்படித் தனது ஸ்தானத்தினின்றும் தாவி இடையிலுள்ள பூமி யினைக் கடந்து பின் தனது ஸ்தானத்தைப் பார்க்கின்றதோ, அதுபோல எங்குப் பிரகிரு தஅர்த்தத்தை விட்டு இடையில் வேறு அர்த்தத்தைக் கூறிப் பின் பிரகிருத அர்த்தத் தின் அநுசந்தானமுண்டாமோ, அங்குச் சிம்மாவலோகநியாயம் சொல்லப்படுகின்றது. இங்குச் சிதாபாசனுக்குச் சாக்ஷியை யனுசரித்தலாகிய தற்பரத்தன்மை பிரகிருதமாம். அதனை விட்டு இடையில் இரண்டு சுலோகங்களால் வேறு அர்த்தத்தைக் கூறிப் பின் சாக்ஷியை யநுசரித்தல்வடிவ பிரகிருத அர்த்தத்தைக் கூறுதலால் சிம்மாவலோக நியாயமாம்.

(ஶ்ரு-ம்.)

"स यो ह वै एतत्परमं ब्रह्म वेद ब्रह्मैव भवति । मास्याब्रह्मवित्कुले भवति । तरति शोकं तरति पाप्मानं । गुहाग्रंथिभ्यो विमुक्तोऽमृतो भवति ॥ எவன் நிச்சயமாக இந்தப் பரப்பிரஹ்மத்தை யறிகின்றானோ அவன் நிச்சயமாகப் பிரஹ்மமே யாகின்றான். இந்தப் பிரஹ்மவித்தின் குலத்தில் அதாவது சிஷ்யபரம்பரையில் பிரஹ்மவித்தாகாதவனிரான்; சோகத்தைக் கடக்கின்றான்; பாபத்தைக் கடக்கின்றான்; பஞ்சகோசவடிவ குகையாகிய முடிச்சுகளினின்றும் விடுபட்டவனாய் மரணத்தன்மையின்றிய மோக்ஷவடிவ அமிர்தமாகின்றான்." என்னுஞ் சுருதியில் பிரஹ்மத்தன்மைமுதலியவடிவ பயன் கேட்கப்பட்டிருத்தலால் அந்தப் பலத்தின் இச்சையினால் சிதாபாசனுக்குச் சாக்ஷியை அநுசரித்தலில் பிரவர்த்தித்தல் தகுதியா மென்பது பொருள். (உ௪க)

எ. திருஷ்டாந்தத்தினால் சிதாபாசனுக்குப் பிரஹ்மத்தன்மை யடைதற்பொருட்டுத் தனது நாசத்தில் இச்சையுண்டாகுதல்.

[அஉ௬] देवत्वकामा ह्यग्न्यादौ प्रविशंति यथा तथा ।
साक्षित्वेनावशेषाय स्वविनाशं स वाञ्छति ॥ २४२ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மஞானத்தினால் பிரஹ்மத்தன்மையின் பிராப்தியுண்டாயின் சிதாபாஸத்தன்மையே நாசத்தையடையும். ஆதலால் சிதாபாசன் தனது நாசத்தின்பொருட்டு எப்படிப் பிரவர்த்திப்பான் என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

यथा देवत्वकामाः हि अग्न्यादौ प्रविशंति । तथा साक्षित्वेन अवशेषाय स स्वविनाशं वांछति ॥

(சு-ம்.)

தேவத்தன்மையை விரும்பியவன் அக்கினிமுதலியவற்றிற் பிரவேசிப்பதுபோலச் சாக்ஷித்தன்மையாக மிஞ்சியிருத்தற் பொருட்டு அச்சிதாபாசன் தனது விநாசத்தை இச்சிக்கின்றான்.

(வி-ம்.)

எப்படி உலகத்தில் தேவத்தன்மையின் அடைவை விரும்பிய மனிதன் மலையினுச்சியினின்றும் விழுதல், அக்கினியிலும் பிரயாகைக்கங்கையிலும் பிரவேசித்தல்முதலிய தனது நாசசாதனங்களிற் பிரவர்த்திக்கின்றானோ, அதுபோலச் சாக்ஷிசுவரூபமாக நிலைத்தல்வடிவ அதிசயமிருத்தலால்

சிதாபாசத்தன்மையின் நாசத்திற் கேதுவான பிரஹ்மஞானத்திலும் பிர விருத்தி நிகழவே செய்யு மென்பது *சுக. பொருள். (உசஉ)

சு. ஞானியாகிய சிதாபாசனுக்குப் பிராரப்தபரியந்தம் வியவகாரம் சம் பவித்தலைக் கூறுதல் அஉஎ-அகரு.

க. திருஷ்டாந்தத்தோடு ஞானிக்குப் பிராரப்தபரியந்தம் வியவகாரம் சம் பவிக்குமெனல்.

[அஉஎ] यावत्स्वदेहदाहं स नरत्वं नैव मुंचति ।
यावदारब्धदेहं स्यान्नाभासत्वविमोचनम् ॥ २४३ ॥

(அ·கை.)

அப்படியானால் தத்துவஞானத்தினால் எப்போது சிதாபாசத்தன்மை நிவிருத்தியாகின்றதோ, அப்போது தத்துவஞானிகளுக்கு உலகத்தில் ஜீவத் தன்மையின் வியவகாரம் எப்படி யுண்டாம்? என்றாசங்கித்துப் பிராரப்த கர்மத்தின் க்ஷயபரியந்தம் அச்சிதாபாசத்தன்மை சம்பவித்தலைத் திருஷ் டாந்தத்தோடு கூறுகின்றார்:—

यावत् स्वदेहदाहं सः नरत्वं न एव मुंचति । आरब्धदेहं स्यात् तावत् आभासत्वविमोचनं न ॥

*சுக. தேவத்தன்மையின் அடைவை விரும்பிய புருஷன் அக்கினிமுதலிய வற்றிற் பிரவேசித்தலால் ஸ்தூலதேகத்தின் விநாசத்தை இச்சிக்கின்றான்; ஜீவனு கிய தனது நாசத்தை இச்சிக்கிறதில்லை. இதனால் அவனுக்குத் தெய்வத்தன்மையின் அடைவு சம்பவிக்கின்றது. சிதாபாசனோ தனது விநாசத்தை இச்சிக்கின்றான். ஆத லால் அடைவோனாகிய அவனது இன்மையால் அவனுக்குப் பிரஹ்மத்தன்மையின் பிராப்தி சம்பவியாது. அப்படியானாலும் இங்கு உஉஅ, கூஎ, ருஅகூ முதலிய சுலோகங்களில் கூடஸ்தவிசிஷ்டபுத்தியின்கண்ணுள்ள பிரதிபிம்பவடிவ சிதாபாச னையே ஜீவனென்று கூறியிருக்கின்றது. அவனுக்கே பந்தமோக்ஷமுதலியவற்றில் அதி கார மிருக்கின்றது. ஆதலால் பிரஹ்மஞானத்தினால் புத்தியோடுகூடிய சிதாபாச ஜீவத்தன்மைகள் நாசமாயினும், மிஞ்சிய கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தன்மையின் அடைவு சம்பவிக்கும். அன்றியும், "சிலவிடத்து விசேஷணத்தினது தர்மத்தின் வியவகாரம் விசிஷ்டத்திலும், சிலவிடத்து விசேஷியத்தினது தர்மத்தின் வியவகாரம் விசிஷ்டத்திலும் உண்டாகின்றன." என்னும் சாஸ்திரத்திற் கூறிய நியமத்தால் அந்தக்கரணத்தோடுகூடிய சிதாபாசவடிவ விசேஷணத்தின் நாசத்தால் சாபாச அந்தக்கரணவிசிஷ்ட சேதனவடிவ ஜீவனது நாசத்தின் வியவகார முண்டாகின்றது. கூடஸ்தவடிவ விசேஷியத்திற்குப் பிரஹ்மத்தன்மையின் அடைவால் ஆபாசனோடு கூடிய அந்தக்கரணவிசிஷ்டசேதனவடிவ ஜீவனுக்குப் பிரஹ்மத்தன்மையினது அடைவின் வியவகார முண்டாகின்றது. ஆதலால் இங்கு ஓர் அசம்பவமு மில்லை.

(சு-ம்.)

எதுவரையிலும் தனது தேகத்தின் தாக முண்டாகின்றதோ, அது வரையிலும் அவ்வக்கினிப்பிரவேசமடைந்த புருஷன் மனிதத்தன்மையை விடுகிறதில்லை. அதுபோல எதுவரையில் பிராரத்தத்தின் அதீனமாகத் தேக மிருக்கின்றதோ, அதுவரையில் ஆபாசத்தன்மையின் நிவிருத்தி உண்டாகிற தில்லை.

(வி-ம்)

அக்கினிமுதலியவற்றில் பிரவேசத்தையடைந்த புருஷன் எரிதல் முதலியவற்றால் தனது தேகத்தின் நாசபரியந்தம் நரத்தன்மையை அதாவது நரனென்னும் வியவகாரத்தின் உரிமையை விடுகிறதில்லை. அப்படியே பிராரப்தகர்மத்தின் க்ஷயபரியந்தம் சிதாபாசத்தன்மையின் வியவகாரம் நீங்குகிறதில்லை யென்பது பொருள். (உசங)

உ ஞானிக்குப் பாதமாகிய பிரபஞ்சத்தின் அநுவிருத்தி திருஷ்டாந்தத்தோடு பொருந்துமாறு.

[அஉஅ] रज्जुज्ञानेऽपि कंपादिः शनैरेवोपशाम्यति ।
पुनर्मंदांधकारे सा रज्जुः क्षिप्तोरगी भवेत् ॥ २४४ ॥

(அ-கை.)

அப்படியானால் ஞானிக்குப் போக்திருத்தன்மைமுதலிய பிராந்தியின் உபாதானமாகிய அஞ்ஞானம் நீங்கியிருத்தலின் ஞானம் உண்டாகியபின்னும் போகத்தின் அநுவிருத்தி (பாதமாகிய பின்னிருத்தல்) எப்படி யுண்டாம்? அல்லது நான் மனிதன் என்னும் விபரீதத்தோற்றம் எப்படி யுண்டாம்? என்றுசங்கித்துத் திருஷ்டாந்தத்தைக் காட்டுதலால் இதனை நிகழ்த்துகின்றார்:—

रज्जुज्ञाने अपि कंपादिः शनैः एव उपशाम्यति । पुनः मन्दांधकारे क्षिप्ता सा रज्जुः उरगी भवेत ॥

(சு-ம்.)

எப்படி இரஜ்ஜுவின் ஞானமுண்டாகியும் சர்ப்பபயத்தால் உண்டாகிய நடுக்கமுதலியன சிறிதுகாலத்தால் நீங்குகின்றனவோ, மறுபடியும் மந்தாந்தகாரத்தில் போடப்பட்ட இரஜ்ஜுவானது சர்ப்பமாகின்றதோ. ()

[அஉரு] एवमारब्धभोगोऽपि शनैः शाम्यति नो हठात् ।
भोगकाले कदाचित्तु मर्त्योऽहमिति भासते ॥ २४५ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்தில் சித்தித்த அர்த்தத்தைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்:—

एवं आरब्धभोगः अपि शनैः शाम्यति । हठात् नो भोगकाले कदाचित् तु "अहं मर्त्यः" इति भासते॥

(சு-ம்.)

இப்படிப் பிராரப்தத்தின் போகமும் சிறிதுகாலத்தால் நிவிருத்தியினை யடைகின்றது; ஹடத்தினால் நீங்குகிறதில்லை. போககாலத்தில் ஓர் காலத்து "யான் மனிதன்" என்று தோற்றுகின்றது. (உசரு)

க. பாதிதத்தின் அநுவிருத்தியினால் தத்துவஞானம் பாதிக்கப்படாமை.

[அகூ0] नैतावताऽपराधेन तत्त्वज्ञानं विनश्यति ।
जीवन्मुक्तिव्रतं नेदं किंतु वस्तुस्थितिः खलु ॥ २४६ ॥

(அ-கை.)

அப்படியானால் மறுபடியும் யான் மனிதன் என்னும் புத்தி உதயமாக அதனால் தத்துவஞானம் பாதத்தை யடையுமென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

एतावता अपराधेन तत्त्वज्ञानं न विनश्यति ॥

(சு-ம்.)

"யான் மனிதன்" என்னும் தோற்றவடிவ இத்துணை அபராதத்தால் தத்துவஞானம் விநாசத்தை யடைகிறதில்லை.

(வி-ம்.)

ஒருகால் "நான் மனிதன்" என்னுந்தன்மையினதாகிய ஞானத்தின் உற்பத்திமாத்திரத்தால் வேதவடிவப்பிரமாணத்தாற் றோன்றிய தத்துவ ஞானம் பாதத்தை யடைகிறதில்லை.

(அ-கை.)

"நான் மனிதன்" என்னும் ஞானத்தால் தத்துவஞானம் ஏன் பாதத்தை யடைகிறதில்லை யெனக் கூறுகின்றார்:—

इदं जीवन्मुक्तिव्रतं न किंतु वस्तुस्थितिः खलु ॥

(சு-ம்.)

இது ஜீவன்முக்தியின் விரதமன்று; ஆனால் வஸ்துவின் ஸ்திதியாம்.

(வி-ம்.)

மனிதத்தன்மையின் புத்தியைச் செய்யாமையாகிய இது ஜீவன்முக்தியின் விரதம் அதாவது நியமமாக அநுஷ்டானஞ்செய்யத்தக்கது ஆகாது. ஆனல் நல்ல ஞானத்தால் பிராந்திஞானத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது. இது வஸ்துவின் சுபாவம். ஆதலால் ஒருகால் வியவகாரகாலத்தில் மனிதத்தன்மையின் புத்தி உதயமாயினும் மீண்டும் வேறு தத்துவ ஞானத்தால் அதாவது பிரஹ்மாகாரவிருத்தியால் அம்மனிதத்தன்மைப் புத்தி பாதமாகத்தக்கதா மென்பது * ௬௨. தாற்பரியம். (௨௪௬)

---

* ௬௨. இங்கு இஃது அபிப்பிராயமாம் :— இரஜ்ஜுவின் ஞானத்தால் சர்ப்பப் பிராந்தி பாதமாவதைப்போல பிரத்திபகபின்ன அதிஷ்டானப்பிரஹ்மத்தின் ஞானத்தால் அகங்காராதி ஜகத்பிராந்தி பாதமாயினும், சர்ப்பஞானத்தா லுண்டாகிய நடுக்கமுதலியன காலதாமதத்தால் நீங்குவதுபோலப் பிராரத்தகர்மத்தின் போகம் பிராரத்தத்தின் முடிவுபரியந்தம் காலத்தால் நீங்குகின்றது. வேறு சாதனத்தால் நீங்குகிறதில்லை. மீண்டும் மந்தாந்தகாரத்தில் அமைந்துள்ள இரஜ்ஜு சர்ப்பமாகத் தோற்றுதல்போலப் போககாலத்தில் ஒருகால் "யான் மனிதன்" என்றல்முதலிய உணர்ச்சி பாதிதாநுவிருத்தியா லுண்டாகின்றது.

மித்தியாத்துவ நிச்சயத்தின் பெயர் பாதமாம். எதன் பாத முண்டாகின்றதோ அது (பிரபஞ்சம்) பாதித மெனப்படும். பாதிதத்தின் அநுவிருத்தி (பிராரப்தபரியந்தம் பின்னிருத்தல்) எதுவோ அது பாதிதாநுவிருத்தி யெனப்படும்.

உபாதானமாகிய அஞ்ஞானம் நிவிருத்தியாகியபின் காரியம் (பிரபஞ்சம்) இருத்தல் தகுதியில்லாததாயிருக்கினும், ஆவினிடத்துப் புலி யென்னும் புத்தியால் பாணத்தைவிட்டுப் பின் ஆவின்ஞான முண்டாகப் பச்சாத்தாபத்தாற் வில்லிற்றொடுத்த இரண்டாவது பாணத்தையும் தூணீரத்தி(அம்புப்புட்டியி)லுள்ள பாணங்களையும் நாசமாக்கினும், விடுபட்ட பாணத்தின் வேகம் சாந்தமாகாமல் எதுவரையிலும் வேக மிருக்கின்றதோ, அதுவரையிலும் சென்று பின் நிலைபெறும். அதுபோல வேகத்தின் காரணமாகிய வில்ஸ்தானத்து அஞ்ஞானமும், தொடுக்கப்பட்ட இரண்டாவது பாணஸ்தானத்து ஆகாமியகர்மமும், தூணீரத்துள்ள அநேக பாணங்களின் ஸ்தானத்துச்சஞ்சிதகர்மமும் ஞானத்தால் நாசமாகியும் விடுபட்டபாணஸ்தானத்தும் பிராரப்தகர்மத்தால் பாணத்தின் வேகஸ்தானத்தினதாகிய காரியத்தின் அநுவிருத்தியுண்டாகின்றது.

இங்கு இது சங்கையாம்:— வில்லானது பாணத்தின் வேகத்திற்கு நிமித்தகாரணமா யிருத்தலால் வில் நாசமாயினும்; குலாலாதி நிமித்தகாரணநாசத்தால் கடம் நிலைத்திருத்தல்போலப் பாணத்தின் இருப்புப் பொருந்தும். அஞ்ஞானம் போக்திருத்தன்மைமுதலிய பிரமவடிவ காரியத்தின் உபாதானமா யிருத்தலால், அது நாசமாகவே மண்ணின் நாசத்தால் கடத்தினிருப்புப் பொருந்தாதுபோலக் காரியத்தினிருப்புப் பொருந்தாது.

இதன் சமாதான மிதுவாம்:—வறுத்த விதையினைப் போலப் பிராரப்தத்தின் பலத்தால் போகபரியந்தம் அஞ்ஞானத்தின் ஆவரண விக்ஷேபவடிவ இரண்டம் சங்களும் பாதிக்கப்பட்டனவா யிருக்கின்றன. அதனையே அஞ்ஞானத்தின் இலேச மென்பர். மாயையினுல் உபாதானமிருத்தலின் வியவகாரகாலத்தில் தனது வடிவத்தை மறத்தல்வடிவமான அல்லது சுழுத்திமுதலிய இடங்களில் சித்திரைவடிவமான ஆவரணமும், "யான் இன்னகாரியத்திற்குக் கர்த்தா; இன்னபோகத்திற்குப் போக்தா; யான் மனிதன்; யான் பிராஹ்மணன்; யான் காண்கின்றேன்." என்றல் முதலிய விக்ஷேபவடிவகாரியத்தின் அநுவிருத்தி யுண்டாகின்றது. ஆனுல் ஞானக்கினியினுல் பாதிக்கப்பட்ட அஞ்ஞானம் முளையின் உற்பத்தியில் சாமர்த்தியமின்றிய வறுத்த விதையினைப்போல வர்த்தமான ஜன்மத்தில் ஜீவன் ஈசன்முதலிய பஞ்சபேதத்திற்கும் ஜகத்தின் பாரமார்த்திகசத்தியத்தன்மைப்புத்திக்கும் ஏதுவாகாது; அல்லது பிராரப்தபோகத்திற்குப்பின் வேறு ஜன்மத்திற்கு ஏதுவாகாது. இஃது ஓர் நூலாசிரியரின் மதம்.

அல்லது ஆவரணத்திற் கேதுவாகிய சக்தி, தேகாதிப்பிரபஞ்சமும் அதன் ஞானமுமாகிய விக்ஷேபத்திற்கு ஏதுவான சக்தி என்னுமிவை அஞ்ஞானத்தின் இரண்டு அம்சங்களாம். அவற்றில் ஆவரணசக்தி விசிஷ்ட அம்சமோ தத்துவஞானத்தால் நஷ்டமாகின்றது. விக்ஷேபசக்தி விசிஷ்ட அஞ்ஞானத்தின் அம்சமோ பிராரப்தவடிவப் பிரதிபந்தபரியந்தம் வறுத்த விதையினைப்போலப் பாதிக்கப்பட்டதாய் எஞ்சியிருக்கும். அதுவே அவித்தியாலேசமாம்.

ஆதலால் கண்ணுடியின் ஞானம் உண்டாகியபின் தோற்றும் பிரதிபிம்பத்தினைப் போலத் தத்துவஞானத்திற்குப்பின் வித்துவானுக்குத் தேகாதி விக்ஷேபத்தின் பிரதீதி யுண்டாகின்றது. இதனுல் பிராரப்தபோகமும் பொருந்துகின்றது. ஒருகால் வியவகாரகாலத்தில் "யான் மனிதன், பிராஹ்மணன், செவிடன், குருடன்." என்றல் முதலிய அத்தியாசம் பாதிதாநுவிருத்தியால் உண்டாகின்றது. "நான் தேகம் அல்லது இந்திரியம் அல்லது அந்தக்கரணம்." என்னு மத்தியாசம் ஒருபோது முண்டாகிறதில்லை. ஆவரணசக்தியுடைய அஞ்ஞானும்சத்தின் நாசத்தால் "நான் அஞ்ஞானி; கூடஸ்த னில்லை அல்லது தோற்றவில்லை." என்னுந்தன்மைய ஆவரணம் வித்துவானுக் குண்டாகிறதில்லை. வியவகாரகாலத்தில் ஒருகால் சொரூபத்தின் மறதி யுண்டாம். அது ஆவரணவடிவ மன்று. ஆனுல் அநாத்மாகாரவிருத்தியினுல் உண்டாம் ஆத்மாகாரவிருத்தியின் திரோதானமாம். ஏனெனின், இது நியமமாம்:-

பின்ன விஷயவடிவ அதிகரணங்களையுடைய இரண்டு ஞானம் விசேஷவடிவமாக ஒருகாலத்தில் உண்டாகா. எப்படிக் கடத்தின் விசேஷஞான முண்டாகுங்கால் படத்தின் விசேஷஞானம் உண்டாகாதோ, அதுபோல எப்போது அநாத்மாகாரவிருத்தி யுண்டாகின்றதோ, அப்போது பிரஹ்மாகாரவிருத்தி யுண்டாகிறதில்லை. ஆனுல் அதன் திரோதான முண்டாகின்றது; ஆவரண முண்டாகிறதில்லை. சுழுத்திமுதலிய இடங்களிலிருக்கும் ஆவரணத்திற்குத் தூலாஞ்ஞானத்தால் நிர்வாக முண்டாகின்றதென்பது பஞ்சபாதிகாகாரரான பத்மபாதாசாரியரது கிரமப்படி சமாதானமாம்.

இவ்விதத்தால் வித்துவான்களுக்கு ஞானத்திற்குப்பின் போகத்தின் அநுவிருத்தியும், ஒருகால் போககாலத்தில் "யான் மனிதன்" என்னும் விபரீத உணர்ச்சியும் பொருந்தும்.

௬. தசமதிருஷ்டாந்தத்தில் பாதிதத்தின் அநுவிருத்தியைக் கூறுதல்.

[அ௲௧] दशमोऽपि शिरस्ताडं रुदन् बुध्वा न रोदिति ।
शिरोव्रणं तु मासेन शनैः शाम्यति नो तदा ॥ २४७ ॥

(அ-கை.)

அப்படியானால் இரஜ்ஜு—சர்ப்பமுதலிய இடங்களில் விபரீதஞானம் நிவிருத்தியாகியும், அதன் காரியமாகிய நடுக்கமுதலியவற்றின் அநுவிருத்தி அதாவது காரணம் நாசமாகிய பின்னிருத்தல் இருக்குக. ஏழுஅவஸ்தையின் பிரசங்கத்திற் சொல்லப்பட்ட தசமவடிவ திருஷ்டாந்தத்தில் 'பத்தாமவன் நீ' என்னும் வாக்கியத்தின் விசாரத்தாற்றோன்றிய ஞானத்தினால் பிராந்தி நீங்கியபோது அப்பிராந்தியின் காரியத்தினது அநுவிருத்தி காணப்படுகிறதில்லையேயென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

दशमः अपि शिरस्ताडं रुदन् बुद्ध्वा न रोदिति । शिरोव्रणं तु शनैः मासेन साम्याति । तदा नो ॥

(சு-ம்.)

பத்தாவது புருடனும் தலையை மோதிக் கொண்டழுகின்றவன் அறிந்தபின் அழுகிறதில்லை. தலையின் காயமோ மெல்ல மாதங்களால் நிவிருத்தியாகின்றது; அதேகாலத்தில் நீங்குகிறதில்லை.

(வி-ம்.)

"பத்தாமவன் யான்" என்னும் ஞானம் உண்டாகவே தலையை இடித்துக்கொள்ளுதல் பூர்வகமான அழுகைமாத்திரம் நிவிருத்தியாகின்றது, மோதிக்கொண்டதனால் உண்டாகிய தலையின் காயமோ பின் இருக்கவே செய்கின்றது என்பது பொருள். (உ௪எ)

௭. திருஷ்டாந்தபூர்வகமான ஜீவன்முக்தி லாபத்தோடு பிராரத்த துக்கத்தின் திரோதானத்தைக் கூறுதல்.

[அ௲உ] दशमामृतिलाभेन जातो हर्षो व्रणव्यथाम् ।
तिरोधत्ते मुक्तिलाभस्तथा प्रारब्धदुःखिताम् ॥ २४८ ॥

(அ-கை.)

அப்படியானால் ஞானத்திற்குப் பிந்தியகாலத்திலும் சம்சாரத்தின் அநுவிருத்தி யுண்டாக, ஜீவன்முக்திக்கு எதனால் புருஷார்த்தத்தன்மையிருக்கின்றது? என்றாசங்கித்துத் துக்கத்தை மறைக்கும் ஜீவன்முக்தியின் இலாபத்தாற்றோன்றிய திருப்தியின் உண்மையால் ஜீவன்முக்திக்

குப் புருஷார்த்தத்துவ முண்டு என்று திருஷ்டாந்தபூர்வகமாகக் கூறுகின்றார்:—

दशमामृतिलाभेन जातः हर्षः व्रणव्यथां तिरोधत्ते । तथा मुक्तिलाभः प्रारब्धदुःखिताम् ॥

(சு-ம்.)

பத்தாமவனது மரணமின்மையின் இலாபத்தாலுண்டாகிய சந்தோஷம் காயத்தின் வருத்தத்தைத் திரோதானஞ் செய்கின்றது. அப்படியே முக்தியின் இலாபம் பிராரப்தத்தின் துக்கித்தன்மையைத் திரோதானஞ் செய்கின்றது. (உ௪அ)

சு. திருஷ்டாந்தத்தோடுகூடிய அத்தியாசநிவிருத்தியின்பொருட்டு அடிக்கடி விசாரஞ்செய்யவேண்டுமெனல்.

[அ௫௩] व्रताभावाद्यदाध्यासस्तदा भूयो विविच्यताम् ।
रससेवी दिने भुंक्ते भूयो यथा तथा ॥ २४९ ॥

(அ-கை.)

“மனிதத்தன்மைப் புத்தியைச் செய்யாமையாகிய இது ஜீவன்முக்தியின் விரதமாகாது” என்று அ௫0-ல் கூறிய தெதுவோ அதில் விரதத்தன்மையின் இன்மையில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

व्रताभावात् यदा अध्यासः तदा भूयः विविच्यताम् ॥

(சு-ம்.)

விரதத்தின் இன்மையில் எப்போது அத்தியாசமுண்டாகின்றதோ அப்போது மறுபடியும் விசாரஞ்செய்தல் வேண்டும்.

(அ-கை.)

மறுபடியும் மறுபடியும் விசாரஞ்செய்தலில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा रससेवी दिने भूयः भुंक्ते तथा ॥

(சு-ம்.)

எப்படி இரசத்தைச் சேவிக்கும் புருஷன் பகலில் மறுபடியும் மறுபடியும் போஜனஞ்செய்கின்றானோ, அதுபோல மறுபடியும் மறுபடியும் விசாரஞ் செய்கின்றான்.

(வி-ம்.)

இரசம் தாம்பிரமுதலிய ஓர் இரசத்தினைச் சேவிக்கும் புருஷன் ஒரே தினத்தில் பசியினாலுண்டாகிய துக்கநிவிருத்தியின்பொருட்டு மீண்டு மீண்

டும் போஜனஞ்செய்கின்றான். அதுபோல அத்தியாசநிவிருத்தியின்பொ
ருட்டு ஞானி மறுபடியும் மறுபடியும் பேதஞானவடிவ விவேசனஞ்செய்ய
வேண்டும். அதாவது தேகத்தினின்றும் தன்னை வேறு யறியவேண்டும்
என்பது * சுகூ. பொருள். (உசகூ)

எ. திருஷ்டாந்தபூர்வகமாய்ப் போகத்தினால் பிராரப்தம் நீங்குமெனல்.

[அகூச] शमयत्यौषधेनायं दशमः स्वं व्रणं यथा ।
भोगेन शमयित्वैतत्प्रारब्धं मुच्यते तथा ॥ २५० ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது ஞானத்தால் நிவிருத்தியாகத்தகாத பிரா
ரப்தகர்மத்தின் பயன் எதனால் நீங்குமென் றாசங்கித்து, அடித்துக்கொண்
டதனா லுண்டாகிய காயம் ஔஷதத்தால் நீங்குவதுபோலப் பிராரப்தகன்
மத்தின் பயன் போகத்தினாலேயே நீங்குகின்றது என்று கூறுகின்றார்:—

यथा अयं दशमः औषधेन स्वं व्रणं शमयति । तथा भोगेन एतत्
प्रारब्धं शमयित्वा मुच्यते ॥

(சு-ம்.)

எப்படி இப்பத்தாவது புருஷன் ஔஷதத்தினால் தன்காயத்தை ஆற்று

---

* சுகூ. எப்படி அந்நத்தைப் புசிப்பதனால் பங்கமாகுந்தன்மையினதாய் ஏகா
தசியின் விரத மிருக்கின்றதோ, அதுபோல அத்தியாசத்தின் உற்பத்தியினால் பங்கமா
குந்தன்மையினதாயில்லை ஜீவன்முக்தியின் விரதம். அங்ஙனமாயினும் ரசம் சாப்பிட்ட
புருஷனுக்குப்பசியினாலுண்டாகிய துக்கநிவிருத்தியின்பொருட்டு அடிக்கடி போஜனஞ்
செய்யவேண்டியதைப்போல ஞானிக்கு அத்தியாசத்தினாலுண்டாகிய விக்ஷேபம்
நீங்கும்பொருட்டு அடிக்கடி பிரஹ்மவிசாரஞ் செய்யவேண்டியதாம். இங்கு இஃது இர
கசியம்:—மேல் கூகூசு-௪0௪0-வது பரியந்தம் சொல்லப்படும் பூதபௌஷ்யத்வர்த்தமா
னவடிவ மூவகைப்பிரதிபந்தங்களும் ஞானத்தின் உற்பத்தியில் பிரதிபந்தமாம். சம்
சயமும் விபரீதபாவனையும் ஞானத்தின் உற்பத்தியில் பிரதிபந்தமன்று. ஆனால்
மாதாபிதாக்களின் சேவையில் சக்தியின்றிய ரோகமுடைய புத்திரனது ரோகத்தி
னைப்போல ஞானத்தின் பலத்திலாவது அல்லது பலத்தோடுகூடிய திடஞானத்தி
லாவது பிரதிபந்தமாம். ஞானோற்பத்திக்குப்பின் பிராரப்தபரியந்தம் நஷ்டமாகாத
அவித்தையின் விக்ஷேப எதுவான சக்தியினாற்றோன்றிய அத்தியாசவடிவ விக்ஷே
பம் எதுவோ அது ஞானத்தின்பயனாகிய ஜீவன்முக்தியிலும் விதேகமுத்தியிலும் பிர
திபந்தமன்று; ஆனால் ஜீவன்முக்தியின் விலக்ஷணானந்தத்திற் பிரதிபந்தமாம். ஆத
லால் அத்தியாசத்தைச் செய்யாமைவடிவ விரதம் இல்லாதிருக்கினும் ஜீவன்முக்தி
யின் விலக்ஷணானந்தத்தின்பொருட்டு அடிக்கடி பிரஹ்மவிசாரம் செய்யவேண்டிய
தாம்.

கின்றானே, அப்படிப் போகத்தினால் * கூச. இப்பிராரப்தத்தினை நீக்கி ஞானி விடுபடுகின்றான் அதாவது விதேகமுக்தனாகின்றான். (உருO)

அ. சுலோகம் எஉ0-எஎரு-ற் சொல்லிய சோகநிவிருத்தியினைச் சொல்லுதலோடு ஏழாவது திருப்தி அவஸ்தையைக் கூறுதல்.

[அகூரு] किमिच्छन्निति वाक्योक्तः शोकमोक्ष उदीरितः ।
आभासस्य ह्यवस्थैषा षष्ठी तृप्तिस्तु सप्तमी ॥ २५१ ॥

(அ-கை.)

"ஆத்மாவினை அறியின் என்று ருஅரு-வதிற் கூறிய சுருதி அபரோக்ஷஞானம் சோகநிவிருத்தி என்னும் இவ்விரண்டவஸ்தைகளையும் ஜீவனிடத்துள்ளனவாகச் சொல்லுகின்றது." என்னும் கூகூஉ-வது சுலோகத்தால் "புருஷன் 'இது நான்' என்று ஆத்மாவை எப்போது அறிகின்றானோ அப்போது எதனை இச்சித்தவனாய் எக்காமத்தின்பொருட்டுச் சரீரத்தைப் பின்பற்றிச் சுரத்தையடைவான்." என்று ருஅரு-ற் கூறிய வேதமந்திரத்தில் அபரோக்ஷஞானம் சோகநிவிருத்தி என்னும் பெயரையுடைய இரண்டும் ஜீவனது அவஸ்தைகளெனச் சொல்லப்பட்டிருக்கின்றன வென்று சொல்லப்பட்டது. இப்போது அகூசு-அஅஉ பரியந்தம் அவ்விரண்டவஸ்தைகளையும் சொல்லுதலால் ரூசிப்பிக்கப்பட்ட ஜீவனது ஏழாவது திருப்திவடிவ அவஸ்தையினை நிகழ்ந்த பொருளினை அநுவதித்தல் பூர்வகமாகச் சொல்ல ஆரம்பிக்கின்றார்:—

"किम् इच्छन्" इति वाक्योक्तः शोकमोक्षः उदीरितः ॥

(சு-ம்.)

"எதனை இச்சித்தவனாய்" என்னும் சுருதிவாக்கியத்திற் கூறிய சோகநாசம் கூறப்பட்டது.

(வி-ம்.)

"எதனை விரும்பியவனாய்" என்று ருஅரு-ற் கூறிய வேதமந்திரத்தின் பிற்பாதியாற் சொல்லப்பட்ட சோகநாசம் எஉ0-அகூரு பரியந்தமுள்ள இவ்வளவு கிரந்தசமூகத்தாற் சொல்லப்பட்டது.

* கூச. பத்தாவது புருஷனுக்கு இடித்தல்வடிவ நிமித்தத்தாலுண்டாகியது காயம். அதுபோலப் பிராரப்தவடிவ நிமித்தத்தாலாகிய சரீரத்தினைக் காயம்போற் காண்க. அந்தத்தினைக் காயத்தின் பூச்சுப்போற் காண்க. ஜலத்தினைக் காயத்தினைக் கழுவுதல் போற் காண்க. வஸ்திரத்தினைக் காயத்திற்குப் பட்டியினைப்போற் காண்க. இவ்வாறு அந்த பாநாதி போகவடிவ உபாயவாயிலாய்ப் பிராரப்தம் நீங்குதலால் ஞானி விதேகமுக்தனாகின்றான்.

(அ-கை.)

"அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேபம், பரோக்ஷஞானம், அபரோக்ஷஞானம், சோகநிவிருத்தி, நிரங்குசத்திருப்தி." என்று சுகஎ-வது சுலோகத்தாற் சொல்லப்பட்ட ஜீவனது ஏழு அவஸ்தைகளில் இச்சோகநிவிருத்தி சு-வது அவஸ்தையாமென்று கூறுகின்றார்:—

एषा आभासस्य षष्ठी अवस्था हि तृप्तिः तु सप्तमी ॥

(சு-ம்.)

இச்சோகநிவிருத்தி ஆபாசனது ஆறுவது அவஸ்தையாம். ஏழாவது அவஸ்தையாகிய திருப்தியோ இப்போது வியாக்கியானஞ் செய்யப்படுகின்றது. (உ௯க)

சு. ஞானியாகிய சிதாபாசனது ஏழாவது நிரங்குசத்திருப்தி அவஸ்தையின் வர்ணநம் அ௲சு-அ௲உ.

க. பிரதியோகிகளின் ஸ்மரணபூர்வகமான ஞானியின் கிருதகிருத்தியத்தன்மை (கர்த்தவ்வியத்தின் அபாவம்) அ௲சு-அ௲ம.

க. பிரதியோகியைச் சொல்லுதலோடு அபரோக்ஷஞானத்தாற்றோன்றிய திருப்தியின் நிரங்குசத்தன்மை.

[அ௲சு] सांकुशा विषयैस्तृप्तिरियं तृप्तिर्निरंकुशा ।
कृतं कृत्यं प्रापणीयं प्राप्तमित्येव तृप्यति ॥ २५२ ॥

(அ-கை.)

அபரோக்ஷஞானத்தாற்றோன்றிய திருப்தியின் நிரங்குசத்தன்மையினைக் கர்த்தவ்வியப் பிராப்தவ்வியவடிவப் பிரதியோகியினைக் காட்டுதல்பூர்வகமாகப் பிரதிஞ்ஞை செய்கின்றார்:—

विषयैः तृप्तिः सांकुशा । इयं तृप्तिः निरंकुशा ॥

(சு-ம்.)

விஷயங்களாலுண்டாம் திருப்தி சாங்குசமாம்; இந்த அபரோக்ஷஞானத்தாலுண்டாகிய திருப்தி நிரங்குசமாம்.

(வி-ம்.)

விஷயத்தின் இலாபத்தாற்றோன்றிய திருப்தி வேறு விஷயத்தின் விருப்பத்தால் கெடுக்கப்படுவதாயிருத்தலின் அங்குசத்தோடுகூடியதாம். இவ்வபரோக்ஷஞானத்தாற்றோன்றிய திருப்தியோ அவ்வந்நிய விஷயத்தின் விருப்பாற் கெடுக்கப்படுந்தன்மையின்மையின் அங்குசமில்லாததாம்.

(அ-கை.)

அந்திராங்குசத்தன்மையினையே காட்டுகின்றார்:—

कृत्यं कृतं प्रापणीयं प्राप्तं इति एव तृप्यति ॥

(சு-ம்.)

செய்யத்தக்கதாயிருந்தது செய்யப்பட்டது, அடையத்தக்கதாயிருந்தது அடையப்பட்டது என்றிவ்வாறே ஞானி திருப்தியடைகின்றான். (௨௫௨)

௨. கிருதகிருத்தியத்தன்மையைக் கூறுதல்.

[அகூஎ] ऐहिकामुष्मिकव्रातसिद्ध्यै मुक्तेश्च सिद्धये ।
बहु कृत्यं पुराऽस्याभूत्तत्सर्वमधुना कृतम् ॥ २५३ ॥

(அ-கை.)

ஞானியின் கிருதகிருத்தியத்தன்மையினை உபபாதனஞ் செய்கின்றார்:—

अस्य पुरा ऐहिकामुष्मिकव्रातसिद्ध्यै च मुक्तेः सिद्धये बहु कृत्यं अभूत् । तत् सर्वं अधुना कृतम् ॥

(சு-ம்.)

இந்தஞானிக்கு முன் அஞ்ஞானகாலத்தில் இகலோக பரலோக சம்பந்தியான போகங்களின் சமூகம் சித்தித்தற்பொருட்டும் முக்தி சித்தித்தற்பொருட்டும் வெகுகிருத்தியங்களிருந்தன. அவை யாவும் இப்போது ஞானம் உதித்த பின்னர் செய்யப்பட்டன.

(வி-ம்.)

இந்த வித்துவானுக்குத் தத்துவஞான உதயத்திற்கு முன் இவ்வுலகத்தில் விரும்பியபொருளை அடைதற்பொருட்டும் பிரதிகூலவிஷயங்களாகிய அநிஷ்டபதார்த்தங்களை நிவர்த்தித்தற்பொருட்டும் உழவு வாணிபம் முதலியனவும், சுவர்க்காதிகள் சித்தித்தற்பொருட்டு யாகம் உபாசனை முதலியனவும், மோக்ஷசாதனமாகிய ஞானம் சித்தித்தற்பொருட்டுச் சிரவணாதிகளுமெனப் பல்வகைக்கர்த்தவ்வியங்களிருந்தன. இப்போது ஞானகாலத்திலோ சம்சாரசம்பந்தியான பலத்தின் இச்சையின்மையினாலும் பிரஹ்மாநந்தத்தின் சாக்ஷாத்காரம் சித்தித்திருத்தலால் அவ்வெல்லா உழவு யாகம் சிரவணமுதலிய கர்த்தவ்வியங்களும் செய்யப்பட்டவைபோலிருந்தன; ஏனெனின், இந்த ஞானம் உதித்தபின் அநுஷ்டிக்கத்தக்க சாதனங்களின்மையால் என்பது பொருள். (௨௫௩)

௩. பிரதியோகியின் ஸ்மரணபூர்வகமாக ஞானிக்குத் திருப்தியுண்டாதல்.

[௨௫௮] तदेतत्कृतकृत्यत्वं प्रतियोगिपुरःसरम् ।
अनुसंदधदेवायमेवं तृप्यति नित्यशः ॥ १५४ ॥

(அ-கை.)

இவ்வாறு கிருதகிருத்தியத்தன்மையினை உபபாதனஞ் செய்து அக் கிருதகிருத்தியத்தன்மையின் பலவடிவ திருப்தியினைக் காட்டுகின்றார் :—

अयं तत् एतत् कृतकृत्यत्वं प्रतियोगिपुरःसरम् अनुसंदधत् एव एवं नित्यशः तृप्यति ॥

(சு-ம்.)

இந்தஞானி அச்சுருக்கமாகக் கூறிய விசேஷமாய்ச் சொல்லத்தக்க இக்கிருதகிருத்தியத்தன்மையினைப் பிரதியோகிபூர்வகமாக அநுசந்தானஞ் செய்யவே செய்கின்றான். இவ்வாறு எப்போதும் திருப்தியை யடைகின்றான்.

(வி-ம்.)

“ இந்தஞானி இக்கர்த்தவ்வியத்தின் அபாவத்தினைப் பிரதியோகியின் ஸ்மரணபூர்வகமாக எப்படி இருக்கிறதோ அப்படியே ஸ்மரணஞ் செய்கின்றான்.” என்று ௨௫௯-௨௭௨ வது பரியந்தம் மேற்சொல்லுங்கிரமத்தால் எப்போதும் திருப்தியை அடைகின்றான். (உடுச)

௪. பிரதியோகியின் அநுசந்தானத்தோடு ஞானி இகலோகத்தின் சுகவிருப்பு டையோரினின்றும் தான் விலக்ஷணமாமாறு.

[௨௫௯] दुःखिनोऽज्ञाः संसरंतु कामं पुत्राद्यपेक्षया ।
परमानंदपूर्णोऽहं संसरामि किमिच्छया ॥ २५५ ॥

(அ-கை.)

அந்தக் கர்த்தவ்வியவடிவப் பிரதியோகிபூர்வக கிருதகிருத்தியத்தன்மையின் அநுசந்தானத்தினையே “ துக்கியாகிய அஞ்ஞானி எவனோ ” என்னும் இவ்வெண்ணூற்று முப்பத்தொன்பதாவது சுலோகமுதல் “ கிருதகிருத்தியத்தன்மையினால் திருப்தி யடைந்தான். மீண்டும் பிராப்தப்பிராப்பியத்தன்மையினால் திருப்தி யடைந்தான்.” என்னும் ௨௭௫-வது சுலோக பரியந்தம் மேற்சொல்லும் நூலால் விஸ்தாரமாகச்சொல்லுகின்றார். அங்கு முதலில் இகலோகசம்பந்தியான சுகத்தை விரும்புவோரினும் ஞானி தனது விலக்ஷணத்தன்மையைக் காட்டுகின்றான் :—

दुःखिनः अज्ञाः पुत्राद्यपेक्षया कामं संसरंतु । परमानंदपूर्णः अहं किमिच्छया संसरामि ॥

(சு-ம்.)

துக்கிகளாகிய அஞ்ஞானிகள் புத்திரர்முதலியோரின் விருப்பத்தால் இகலோகசம்பந்தியான வியவகாரத்தை இஷ்டப்படி செய்க. பரமாநந்தத்தாற் பூரணனான யான் எதன் இச்சையால் விவகரிப்பேன்? (௨௫௫)

௫. ஞானி பரலோகவிருப்பினர்களினும் தான் வேறெனநினைத்தல்.

[௨௫௦] अनुतिष्ठंतु कर्माणि परलोकयियासवः ।
सर्वलोकात्मकः कस्मादनुतिष्ठामि किं कथम् ॥ २५६ ॥

(அ-கை.)

சுவர்க்காதிகளின்பொருட்டுக் கர்மாநுஷ்டானஞ் செய்யும் புருஷர்களினும் ஞானி தான் வேறுதலைக் கூறுகின்றான்:—

परलोकयियासवः कर्माणि अनुतिष्ठंतु । सर्वलोकात्मकः कस्मात् किं कथं अनुतिष्ठामि ॥

(சு-ம்.)

பரலோகத்திற்குச் செல்லும் விருப்புடைய புருஷர்கள் கர்மங்களை அநுஷ்டிக்க. சர்வலோகத்தின் சொரூபமாயிராநின்ற யான் எக்காரணத்தால் எக்கர்மத்தினை எவ்வாறு *௬௫. அநுஷ்டிப்பேன்? (௨௫௬)

௬. ஞானிக்கு அதிகாரமின்மையால் பிறர்பொருட்டுப் பிரவிருத்தி இல்லையெனல்.

[௨௫௧] व्याचक्षतां ते शास्त्राणि वेदानध्यापयंतु वा ।
येऽत्राधिकारिणो मे तु नाधिकारोऽक्रियत्वतः ॥ २५७ ॥

---

* ௬௫. அஞ்ஞானிக்கு வர்ணாசிரம அபிமானமும், கர்த்திருத்துவ அத்தியாச முதலிய காணமும், எஞ்ஞாதி கர்மமும், சுவர்க்காதி பலமு மிருத்தலால் கர்மாநுஷ்டானம் தகுதியாம். ஞானியாகிய எனக்குச் சாதனமாகிய கர்மமும் கர்மத்தின் பயனும் ஞானத்தால் பாதமாதலின் கர்மாநுஷ்டானம் தகுதியன்று. இதனாலும் தேகத்திற்கு வேறாய் அகர்த்தாவா யிருத்தலால் சாதன மின்மையினாலும், தேகாதிவடிவ ஜகத்துப் பாதமாதலால் சாமக்கிரியோடு கர்ம மின்மையினாலும், சர்வ உலகவடிவமா யிருத்தலால் கர்மபல மில்லாமையினாலும் "யான் எவ்வாறு அநுஷ்டானஞ் செய்வேன்?" எவ்விதத்தாலும் அநுஷ்டானம் பொருந்தாது.

(அ·கை.)

அப்படியானால் ஞானிக்குத் தன்பொருட்டுப் பிரவிருத்தி இல்லாதிருக்கினும், பிறர்பொருட்டுப் பிரவிருத்தி எவ்வாறுண்டாகாதென் றாசங்கித்து, எனக்கு வியாசர்முதலிய ஆசாரியர்களைப்போல அதிகார மின்மையால் அவ்வுலக சங்கிரகார்த்த முண்டாவதான பிரவிருத்தியு மில்லை யென்று கூறுகின்றார்:—

ये अत्र अधिकारिणः ते शास्त्राणि व्याचक्षतां वा वेदान् अध्यापयंतु । मे तु अक्रियत्वतः अधिकारः न ॥

(க·ம்.)

இப்பரார்த்தப்பிரவிருத்தியின்கண் அதிகாரமுடைய ஆசாரியபுருஷர்கள் எவர்களோ அவர்கள் சாஸ்திரங்களை வியாக்கியானஞ் செய்க; அல்லது வேதங்களை அத்தியயனஞ் செய்விக்க. எனக்கோ அக்கிரியனாயிருத்தலின் பரார்த்தப்பிரவிருத்தியில் அதிகாரமில்லை. (௨௫௭)

௭. தன்னுடைய பார்வையால் ஞானி அக்கிரியனாதல்.

[அசஉ] निद्राभिक्षे स्नानशौचे नेच्छामि न करोमि च ।
द्रष्टारश्चेत्कल्पयंति किं मे स्यादन्यकल्पनात् ॥ २५८ ॥

(அ·கை.)

அப்படியானால் தன் தேகத்தைப் போஷிக்கும்பொருட்டுப் பிக்ஷை கொண்டுவருதல் முதலியனவும் பரலோகத்தின்பொருட்டு ஸ்நாநாதிகளும் ஞானியாகிய உம்மால் செய்யப்படுவனவாகக் காணப்படுகின்றன. ஆதலால் தம்முடைய அக்கிரியத்தன்மை பெறப்படாததாமென் றாசங்கித்து, பிக்ஷைஸ்நாநமுதலிய அவையும் தனது திருஷ்டியி லில்லை, பிற புருஷர்களாலேயே கற்பிக்கப்பட்டுள்ளன என்று கூறுகின்றார்:—

निद्राभिक्षे स्नानशौचे न इच्छामि च न करोमि द्रष्टारः कल्पयंति चेत् अन्यकल्पनात् मे किं स्यात् ॥

(க·ம்.)

நித்திரை, பிக்ஷை, ஸ்நாநம், சௌசம் என்னும் கிரியைகளைச் சிதாத்மாவாகிய யான் இச்சிக்கிறதில்லை; விரும்புகிறதுமில்லை; பார்க்கின்ற புருஷர்கள் கற்பிக்கிறார்களெனின் அந்நியபுருஷர்களது கற்பனையினால் எனக்கு என்ன பாதக முண்டாகும்? (௨௫௮)

௮. அஞ்ஞானியின் கற்பனையினால் ஞானிக்குப் பாதகமின்மையில்

[௨௫௯] गुंजापुंजादि दह्येत नान्यारोपितवह्निना ।
नान्यारोपितसंसारधर्मानेवमहं भजे ॥ २५९ ॥

(அ-கை.)

பிறர் கற்பனையினாலும் பாதகமுண்டாகுமே யென்றாசங்கித்து அவ்வா றியகற்பனையினால் பாதகமின்மையில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்:—

गुंजापुंजादि अन्यारोपितवह्निना न दह्येत एवं अन्यारोपितसंसारधर्मान् अहं न भजे ॥

(சு-ம்.)

அக்கினியைப்போன்ற குன்றிமணிக்கொத்து முதலிய ரக்தபதார்த்தங்கள் அந்நியமாகிய வாநராதிகளால் ஆரோபிக்கப்பட்ட அக்கினியினால் தகிக்கப்படுகிறதில்லை. அதுபோல அந்நியமான அஞ்ஞானி புருஷர்களால் ஆரோபிக்கப்பட்ட சம்சாரத்தின் தர்மங்களை யான் அடைகிற தில்லை. (உ௫௯)

௩. ஞானிக்குச் சிரவண மனனாதிகளில் கர்த்தவ்வியமின்மை.

[௨௬௦] शृण्वन्त्वज्ञाततत्त्वास्ते जानन्कस्माच्छृणोम्यहं ।
मन्यंतां संशयापन्ना न मन्येऽहमसंशयः ॥ २६० ॥

(அ-கை.)

அப்படியானால் உனக்குச் சம்சாரசம்பந்தியான அந்நிய பலத்தினிச்சை இல்லாததாகவே கர்மத்தின் அநுஷ்டானம் இருக்கவேண்டாம், ஆனால் தத்துவசாக்ஷாத்காரத்தின் பொருட்டுச் சிரவணாதிகள் செய்யவேண்டிய தேயாமென் றாசங்கித்து, எனக்கு அஞ்ஞானாதிக ளில்லாமையால் சிரவணாதிகளின் கர்த்திருத்துவமு மில்லை என்று கூறுகின்றார்:—

अज्ञाततत्त्वाः ते शृण्वन्तु अहं जानन् कस्मात् शृणोमि । संशयापन्नाः मन्यंतां अहं असंशयः न मन्ये ॥

(சு-ம்.)

அறியப்படாத தத்துவம் எதுவோ அதனைக் கேட்கவேண்டும். யான் தத்துவத்தை யறிந்தவனாயிருக்க எதன் பொருட்டுச் சிரவணஞ் செய்வேன்? சம்சயத்தை யடைந்தவர் மனனத்தைச் செய்க. சம்சயமின்றிய யான் மனனஞ் செய்யேன்.

(வி-ம்.)

பிரஹமாத்ம ஐக்கியவடிவ தத்துவத்தை எவர்கள் அறியவில்லையோ அத்தன்மைய முமுக்ஷுக்கள் சிரவணஞ் செய்க. தத்துவம் இத்தன்மையதா? அல்லது வேறு தன்மையதா? என்னுஞ் சம்சயமுடைய புருஷர்கள் மனனஞ் செய்க. எனக்கு அஞ்ஞானம் சம்சய மென்னும் அவ்விரண்டு மின்மையால் சிரவணமனன மிரண்டிலும் பிரவிருத்தி யில்லை என்பது பொருள். (உ௬0)

௯0. ஞானிக்கு நிதித்தியாசனத்தின் கர்த்தவ்யமின்மை.

[அ௪௫] विपर्यस्तो निदिध्यासेत्किं ध्यानमविपर्ययात् ।
देहात्मत्वविपर्यासं न कदाचिद्भजाम्यहम् ॥ २६१ ॥

(அ-கை.)

அப்படியானால் உனக்குச் சிரவணமனனங்கள் வேண்டாம்; ஆனால் விபரீதபாவனை நீங்கும்பொருட்டு நிதித்தியாசனஞ் செய்யவேண்டியதாமே யென்றாசங்கித்து, எனக்குந் தேகாதிகளில் ஆத்மத்தன்மைப்புத்திவடிவ விபரியய மின்மையால் அந்நிதித்தியாசனமும் அநுஷ்டானஞ்செய்யத்தக்க தன்றென்று கூறுகின்றார்:—

विपर्यस्तः निदिध्यासेत् । अहं देहात्मत्वविपर्यासं कदाचित् न भजामि । अविपर्ययात् किं ध्यानं ॥

(சு-ம்-)

விபரியயமுடையபுருஷன் நிதித்தியாசனத்தைச் செய்க. நான் தேகத்தில் ஆத்மத்தன்மையின் ஞானவடிவ விபரியயத்தை ஒரு போதும் பஜிக்கிறதில்லை. ஆகலின் எனக்கு விபரியய மின்மையால் எத்தியான முளது? எதுவு மில்லை. (உ௬௧)

௯௧. ஞானிக்கு "யான் மனிதன்" என்பனமுதலிய வியவகாரங்கள் வாசனையினாற் சம்பவிக்குமாறு.

[அ௪௬] अहं मनुष्य इत्यादिव्यवहारो विनाप्यमुम् ।
विपर्यासं चिराभ्यस्तवासनातोऽवकल्पते ॥ २६२ ॥

(அ-கை.)

அப்படியானால் விபரியயம் இல்லாதாகவே 'நான் மனித' னென்னும் வியவகாரம் எப்படி நிகழுமென் றாசங்கித்து, வாசனையின் வசத்தால் நான் மனிதன் பிராஹ்மணன் என்றல் முதலிய வியவகாரம் பாதிக்கப்பட்டதின் அநுவிருத்தியினால் உண்டாகின்றதென்று கூறுகின்றார்:—

अहं मनुष्यः इत्यादिव्यवहारः अमुं विपर्यासं विना अपि चिराभ्यस्त-वासनातः अवकल्पते ॥

(சு-ம்.)

"யான் மனிதன்" என்றல் முதலிய வியவகாரம் இவ்விபரீத மின்றியும் அநாதிகாலத்துப் பழக்கத்தினால் வாசனையினாற் றுபவன்சங்கரத்தின் சுழற்சியினைப்போல உண்டாகின்றது. (உசுஉ)

௬௨. பிராரப்தநிவிருத்தியின்றி வியவகாரம் நிவிருத்தியாகாமை.

[அசஎ] प्रारब्धकर्मणि क्षीणे व्यवहारे निवर्तते ।
कर्माक्षये त्वसौ नैव शाम्येद्ध्यानसहस्रतः ॥ २६३ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது இந்த வியவகாரநிவிருத்தி சித்தித்தற்பொருட்டுத் தியானம் சம்பாதிக்கத்தக்கதாமே யென்றுசங்கித்து, பிராரப்த கர்மத்தின் க்ஷய மின்றி இவ்வியவகாரம் நிவிருத்தியாகாது என்று கூறுகின்றார்:—

प्रारब्धकर्मणि क्षीणे व्यवहारः निवर्तते । कर्माक्षये तु असौ ध्यान-सहस्रतः न एव शाम्येत् ॥

(சு-ம்.)

பிராரப்தகர்மம் க்ஷயமாயின் வியவகாரம் நிவிருத்தியாகின்றது. கர்மம் நாசமாகாதாயின் இந்த வியவகாரம் ஆயிரக்கணக்கான தியானத்தினாலும் நிவிருத்தியாகாது. (உசுஙு)

௬௩. ஞானி வியவகாரம் குறைதற்பொருட்டுத் தியானஞ் செய்யவேண்டிய தில்லையெனல்.

[அசஅ] विरलत्वं व्यवहृतेरिष्टं चेद्ध्यानमस्तु ते ।
अबाधिकां व्यवहृतिं पश्यन् ध्यायाम्यहं कुतः ॥ २६४ ॥

(அ-கை.)

அப்படியானால் பிராரப்தவடிவ நிமித்தமுடைய வியவகாரமும் குறையும்பொருட்டுத் தியானஞ் செய்யவேண்டியதாமே யென்றுசங்கித்து, வியவகாரம் பாதிக்கப்படாமையைக் காணுதலால் அந்த வியவகாரத்தினது நிவிருத்தியின்பொருட்டுத் தியானம் அநுஷ்டிக்கத்தக்கதாகா தென்று கூறுகின்றார்:—

व्यवहृते: विरलत्वं इष्टं चेत् । ते ध्यानं अस्तु । अहं व्यवहृतिं अबाधिकां पश्यन् कुतः ध्यायामि ॥

(சு-ம்.)

வாதி! வியவகாரக்குறைவு ஜீவன்முக்தியினும் விலக்ஷணசுகத்தின் பொருட்டு இஷ்டமாயின் உனக்குத் தியான மிருக்குக. நான், வியவகாரத்தினை "இது ஆத்மா, ஞானம், மோக்ஷம் என்பவற்றைப் பாதிக்காதது" என்று காண்கின்றபடியால் எவ்வாறு தியானஞ்செய்வேன்? (உ௬௪)

௧௪. ஞானிக்குச் சமாதி செய்யவேண்டியதாகாதெனல்.

[அ௪௯] विक्षेपो नास्ति यस्मान्मे न समाधिस्ततो मम ।
विक्षेपो वा समाधिर्वा मनसः स्याद्विकारिणः ॥ २६५ ॥

(அ-கை.)

அப்படியானால் தியானம் செய்யவேண்டியதாகாததாயினும் விக்ஷேபநிவிருத்தியின்பொருட்டுச் சமாதி செய்யவேண்டியதாமேயென் றாசங்கித்து, விக்ஷேபமும் சமாதியுமாகிய இரண்டும் மனதின் தர்மமாயிருத்தலால் ஏகாக்கிரத்தன்மைவாயிலாக விக்ஷேபத்தை நிவர்த்திக்கும் சமாதியிலும் எனக்கு அதிகார மில்லையென்று கூறுகின்றார்:—

यस्मात् मे विक्षेपः न अस्ति । ततः मम समाधिः न । विक्षेपः वा समाधिः वा विकारिणः मनसः स्यात् ॥

(சு-ம்.)

எக்காரணத்தால் எனக்கு விக்ஷேபமு மில்லையோ அக்காரணத்தினால் எனக்குச் சமாதியு மில்லை. விக்ஷேபம் அல்லது சமாதி யென்னு மிரண்டும் விகாரியாகிய மனதிற்காம். (உ௬௫)

௧௫. ஞானி சமாதியினால் அநுபவத்தைச் சம்பாதித்தல் தகுதியன்றென்பதனோடு அ௬௬-அ௯௦ சுலோகங்களிற் சொல்லிய கிருதகிருத்தியத்தன்மையை வெளிப்படுத்துதல்.

[அ௫௦] नित्यानुभवरूपस्य को मे वानुभवः पृथक् ।
कृतं कृत्यं प्रापणीयं प्राप्तमित्येव निश्चयः ॥ २६६ ॥

(அ-கை.)

அப்படியாயினும் சமாதியின் பயனாகிய அநுபவம் சம்பாதிக்கத்தக்கதாகுமேயென் றாசங்கித்து, அவ்வநுபவம் எனது சொரூபமாயிருத்தலால் சம்பாதிக்கத்தக்கதன் றென்று கூறுகின்றார்:—

नित्यानुभवरूपस्य मे कः वा अनुभवः पृथक् ॥

(௬-ம்.)

நித்திய அதாவது உற்பத்தி நாசமின்றிய அநுபவவடிவ எனக்கு வேறாக எவ்வநுபவ மிருக்கின்றது? எதுவுமில்லை.

(அ-ரை.)

இவ்வாறு ௮௫௭-முதல் ௮௯௦-பரியந்தம் சம்பாதிக்கப்பட்ட கிருத கிருத்தியத்தன்மையினைச் சூசிப்பிக்கின்றார் :—

"कृत्यं कृतं । प्रापणीयं प्राप्तं" इति एव निश्चयः ॥

(௬-ம்.)

எது செய்யத்தக்கதாயிருந்ததோ அது செய்யப்பட்டது, எது அடைதற்குரியதா யிருந்ததோ அது அடையப்பட்டது என்று மிதுவே எனது * ௯௯. நிச்சயம். (௨௯௧)

---

* ௯௯. ஞானிக்குக் கர்மம் செய்யவேண்டியதாம் என்று துராக்கிரகஞ்செய்யும் வாதி இது கேட்கத்தக்கவனுவன் :—ஞானிக்குக் கர்மஞ்செய்யவேண்டியது தன்பொருட்டா? அல்லது பிறர்பொருட்டா? தன்பொருட்டென்னும் முதற்பக்ஷத்தைக் கூறினும் இவ்வுலகசம்பந்தியான பலத்தின்பொருட்டா? அல்லது பரலோகசம்பந்தியான பலத்தின்பொருட்டா? என்றிரண்டு பக்ஷங்களாம். அவற்றுள், முதற்பக்ஷத்தைக் கூறினும், (௧) சரீரசம்ரக்ஷணையின் பொருட்டா? (௨) அல்லது புத்திரன் சிஷ்யன்முதலிய பரிக்கிரகங்களை இரக்ஷித்தற்பொருட்டா? (௩) அல்லது விலாசத்தின் பொருட்டா? என்று மூன்று பக்ஷங்களுள.

(௧) முதற்பக்ஷம் பொருந்தாது. ஏனெனின், "வேறுவகையாக அர்த்தம் (தேகநிர்வாகம்) சித்திக்க அத்தேகரக்ஷணைக்கு ஏதுவான கர்மத்தில் பரிசிரமத்தைக் காண்கின்றவனாய் அதிற் பிரயத்தனஞ் செய்வதில்லை." என்னும் பாகவதத்தினது இரண்டாவது ஸ்கந்தத்தின் வசனத்தால் சரீரத்தின் ஸ்திதி பிராரத்தத்தின் அதீனமாயிருத்தலால் அதனை யுத்தேசித்து வித்துவானுக்குக் கர்மம் சம்பவியாமையின்.

(௨) இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், "அந்த இவ்வாத்மாவினை யறிந்து" என்னுஞ் சுருதியினால் பிராந்திஞானமுழுவதும் எவனுக்கு நிவிருத்தியா யிருக்கின்றதோ, அத்தன்மைய பிரஹ்மஞானியாகிய புருஷனுக்குப் புத்திரன் வித்தம் லோகமென்பவற்றைக் கோசரிக்கும் மூன்று ஏஷணையினால் விழிப்புக் கேட்கப்படுதலின், அவற்றால் விழிக்கும் வித்துவானுக்குப் பரிக்கிரகமின்மையால் அப்பரிக்கிரகத்தினை இரக்ஷிக்கும்பொருட்டதான கர்மம் சம்பவியாமையின்.

(௩) மூன்றவது பக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், எல்லாவற்றையும் ஆத்மாவாகக் காண்கின்றவனும், ஆத்மாவினிடத்தில் அந்தக்கரணத்தின் ரமித்தலையுடையவனுமாகிய வித்துவானுக்கு வேறிடத்தில் ரமித்தல் கிடையாதாக விலாசம் சம்பவியாமையின்.

அப்போது பரலோகத்தின்பொருட்டுக் கர்த்தவ்வியம் உளதாகுக என்று கூறின், அங்கும் (க) சுவர்க்கத்தின்பொருட்டா? அல்லது(உ) அபவர்க்கமாகிய மோக்ஷத்தின் பொருட்டா? அல்லது(ங) ஆத்மாவினது சுத்தியின்பொருட்டா? என மூன்றுபக்ஷங் களுள. அவற்றுள்,

(க) முதற்பக்ஷம் பொருந்தாது; ஏனெனின் "பூர்ணகாமனுக்கும் வசமாக்கப் பட்ட மனதையுடையவனுக்கும் இங்குதானே சர்வகாமங்களும் பெரும்பாலும் விலயமா கின்றன." என்னுஞ் சாஸ்திரவாக்கியத்தால் சர்வகாமங்களின் விலயமும் கேட்கப்ப டுதலால் வித்துவானுக்குச் சுவர்க்கவிருப்பஞ் சம்பவியாமையின் அச்சுவர்க்காநுஷ்டா னத்தின்பொருட்டுக் கர்மாநுஷ்டானங்கள் சம்பவியா.

(உ) இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், "கர்மத்தினுலாவது பிரஜையினுலாவது அமிர்தத்தை யடைகிறதில்லை" என்னுஞ் சுருதியினுல் கர்மங் களுக்கு மோக்ஷசாதனத்தன்மை நிஷேதிக்கப்பட்டிருத்தலாலும், வித்துவான் ஜீவன் முக்தனு யிருத்தலாலும் அம்மோக்ஷத்தின்பொருட்டுக் கர்மம் சித்தியாது.

(ங) ஆத்மசுத்தியின்பொருட்டுக் கர்மஞ்செய்யவேண்டியதா மென்னும் மூன்ற வது பக்ஷத்தில் கர்மஞ்செய்யவேண்டியது என்னை?

[க] சரீரசுத்தியின் பொருட்டா? [உ] அல்லது சித்தசுத்தியின் பொருட்டா? [ங] அல்லது ஆத்மசுத்தியின் பொருட்டா? என்னும் மூன்று பக்ஷங்களுள. அவற்றுள்,

[க] முதற்பக்ஷம் பொருந்தாது; ஏனெனின் "களேவரம் மூத்திரபுரீஷங்களி ன் பாத்திரமாம்" என்று சாஸ்திரங்களிற் கேட்கப்பட்டிருத்தலாலும், பிரத்தியக்ஷமா யிருத்தலாலும் மலமாம்ச எலும்புகளையுடைய சரீரத்தின் சுத்தி கர்மத்தால் சம்பவியா மையின்.

[உ] இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; ஏனெனின் "சுத்தசித்தமுடைய யதி எவனே" என்னும் சாஸ்திரவசனம் கேட்கப்பட்டிருத்தலால் சுத்தசித்தமுடைய வனுக இருத்தலினுலேயே ஆத்மஞானம் எவனுக்குச் செவ்வையாய் உண்டாயிருக்கின் றதோ அப்படிப்பட்ட வித்துவானுக்கு அச்சித்தசுத்தியின் அபேக்ஷை சித்தியாது.

[ங] மூன்றவது பக்ஷமும் பொருந்தாது; ஏனெனின் "அவ்வாத்மா நாற்புறமும் சென்றுளது அதாவது வியாபியாம்; சுக்கிரமாம் அதாவது சுத்தஜோதியுடையதாம்; அகாயமாம் அதாவது இலிங்கசரீரமின்றியதாம்; அவ்விரணமும் அஸ்நாவிரமுமாம் அதாவது புண்ணும் நாடிகளுமுடைய ஸ்தூலசரீரமின்றியதாம்; சுத்தமாம் அதாவது மலமின்றியதாம்; தர்மாதர்மாதி பாபமின்றியதாம்." என்னும் ஈசாவாசிய உபநிஷத்து வாக்கியசிரவணத்தினுலும், நிரவயவத்தன்மையால் விஷயமாகாததா யிருத்தலின் கர்மத்தால் ஆத்மாவிற்குச் சுத்தியைக் கற்பித்தல் பொருந்தாமையினுலும் "எவ்வாத் மாவினது ஞானத்தின் பலத்தால் விஷ்ணுருத்திராதிகள் நூறுகோடி அகாரியங் களைச் செய்தும் தாம் சுத்தராகின்றார்களோ, சரணுகதியடைந்த பிறரைச் சுத்தமாக் குகின்றார்களோ, அவ்வாத்மாவை எப்புருஷன் எச்சாதனத்தால் சுத்தமாக்குவான்?" "தானே சுத்தாயுள்ள வஸ்துவின் சுத்தி எவ்வகை அசத்தினுலும் உண்டாகாது." என்னும் வசனங்களால் ஆத்மாவிற்குச் சொரூபமாகவே சுத்தமிருத்தலின் ஆத்மா வினது சுத்தியின்பொருட்டுக் கர்மஞ்செய்யவேண்டியதில்லை.

இவ்வாறு வித்துவானுக்குத் தன்பொருட்டுக் கர்மஞ்செய்யவேண்டியதா மென்று ஆரம்பத்திற் சொல்லப்பட்ட முதற்பக்ஷம் நிஷேதிக்கப்பட்டது. அப்போது வித்துவானுக்குக் கர்மாசரணம் பிறர்பொருட்டே ஆகுக என்று ஆரம்பத்திற் சொல்லப்பட்ட இரண்டாவது பக்ஷத்தைக் கூறின், அப்போது வாதி! நீ இங்கு இது கேட்கத்தக்கவனாவாய்:—எந்த ஞானி லோகத்தின்பொருட்டுக் கர்மஞ்செய்கின்றானோ அவன் அபரோக்ஷஞானியா? பரோக்ஷஞானியா? முதற்பக்ஷத்தில் (க) அவன் சந்நியாசியா? (உ) அல்லது கிரகஸ்தனா? என இரண்டுபக்ஷங்களுண்டு. அவற்றுள்,

(க) பிரதமபக்ஷம் பொருந்தாது; ஏனெனின், அந்தச் சந்நியாசிக்கு நிரபிமானியாயிருத்தலாலும் சகலகர்மங்களையும் அவற்றின் சாதனங்களையும் விட்டிருத்தலாலும் கர்மசப்தம் வாய்க்காமையின். அன்றியும் தேகம் வருணம் ஆசிரமமுதலியவற்றில் "யான் எனது" என்னும் அபிமானம், பிரபஞ்சத்தில் சத்தியத்தன்மைப்புத்தி, இச்சையுடைமை, கர்த்தவ்யத்தன்மைப்புத்தி, செய்யாமையில் பிரத்தியவாயத்தின் பயம், சாஸ்திரத்தின் பயம் என்னும் ஆறும் பிரவிருத்தியின் பீஜங்களாம். அவ்வகையான இவ்வெல்லாமும் அடியோடு பிரஹ்மாத்ம ஐக்கிய விஞ்ஞானமுடைய சுவாத்மாராமயதிக்குப் பெரும்பாலும் சொல்லவும் சம்பவியாவெனின், கர்மத்தில் பிரவிருத்தி சம்பவியாதென்பதில் சொல்லவேண்டியதென்னை? இவ்வர்த்தத்தில் "இந்தப் பிராணன் சர்வபூதங்களோடும் விளங்குகின்றது என்று அறிந்த வித்துவான் அதிவாதியாகான்" என்னுஞ் சுருதி பிரமாணமாம். ஆதலால் பிரஹ்மநிஷ்டனாய் ஆத்மாவில் இரமித்திருக்கும் புருடனுக்குத் தன்பொருட்டாவது பிறர்பொருட்டாவது கர்மத்தில் பிரவிருத்தி சம்பவிக்கிறதில்லை.

(உ) உலகத்தின்பொருட்டுக் கர்மத்தைச் செய்யும் அபரோக்ஷஞானி கிரகஸ்தனென்னும் இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், அநேகமாயிரம் ஜன்மங்களிற் செய்த புண்ணியகர்மபுஞ்சத்தின் பரிபாகத்தாலும் ஈசுவரனது பிரசாதத்தாலும் சர்வதிருசியங்களும் மித்தை யென்னும் நிச்சய பூர்வகமாக "பிரஹ்மமே யான்" என்று பிரஹ்மாத்ம ஐக்கிய விஞ்ஞானம் எப்போது பிரதிபந்தமின்றி உண்டாகின்றதோ, அப்போதே கிரகஸ்தனும் யாஞ்ஞவல்கியர்முதலியோர்களைப்போல் மூன்று ஏஷணையினின்று எழுதலைச் செய்வான். "நான் என" தென்னும் வியவகாரம்செய்யத்தக்கதன்று; ஏனெனின், அந்தவியவகாரத்தின் காரணம் சம்பவியாமையால். அநாத்மதேகாதிகளில் அகம்பாவமும் அதனின் வேறாயவற்றில் எனதென்னுந்தன்மையுமாகிய இரண்டும் நிச்சயமாக சம்சார(வியவகார)த்திற்குக் காரணமாம். அந்த இவ்விரண்டும் எவனுக்குப் பிரஹ்மாத்ம ஐக்கியவிஞ்ஞானத்தால் நாசமாயினவோ அவன் மறுபடியும் சம்சாரத்தின்பொருட்டுச் சமர்த்தனாகான். "பிரஹ்மமே நான்" என்னும் விஞ்ஞானமும் "பிராஹ்மணன் யான், இது என்னுடையது" என்னும் புத்தியுமாகிய இரண்டும் இருளுமொளியும் போல ஒன்றற்கொன்று விருத்தமாயிருத்தலால் ஓரிடத்தில் இருக்கத்தக்கனவன்று. ஆதலால் பிரஹ்மத்துவ விஞ்ஞானவடிவ வாளினால் எவனுடைய இருதயக்கிரந்தி பேதிக்கப்பட்டிருக்கின்றதோ, அப்படிப்பட்ட வித்துவானுக்கு மறுபடியும் யான் எனதென்னும் புத்தியைச் செய்தல் சம்பவியாது ஆதலால் கிருகஸ்தவித்துவானும் சம்சாரத்தினின்று எழுதலையே செய்கின்றான். எப்போது அவன் எழுதலைச் செய்யவில்லையோ அப்போது அவ்வெழாமையே

அவனது அஞ்ஞானத்தினாலும் அதன் காரியத்தினாலும் இரகிக்கப்பட்டதன்மையை அறிவிக்கின்றது.

அப்படியானால் சந்நியாசத்திற்கேதுவாகிய பிராரத்தமில்லாமையால் இரகஸ்தன் பிரஹ்மத்தன்மையை யடைந்தும் உத்தானஞ் (எழுதலைச்) செய்யவில்லையாயின் ஜடபரதனைப்போல வாசஞ்செய்க. "இது நான் இது என்னுடையது" என்னும் சம்சாரத்தன்மை யில்லை; ஏனெனின், மித்தியாத்தன்மைஞானத்திற்கும் சம்சாரமாகிய வியவகாரத்திற்கும் ஒன்றற்கொன்று விரோதமிருத்தலால். எப்படி மருஸ்தலத்தினை நீரின்றியதாகக் கண்டு பின் தூரத்தினின்றுங் காணப்படுகின்ற நீரினைக் கொள்ளவாவது பானஞ் செய்யவாவது விவேகியானவன் செல்லானோ, வலியுடைய ஒருபுருஷனால் அனுப்பப்படினும் வேகத்தோடும் சந்தோஷத்தோடுஞ் செல்லாது, ஐயோ! கஷ்டம்! என்று அழுதுகொண்டு மெல்ல மெல்ல நடப்பானோ, வேறு எவனையும் பிரேரணை செய்யானோ, அதுபோலப் பிரதிகூலப்பிராரத்தமுடையவனாயினும், வித்துவான் அவ்வெல்லாவற்றின் மித்தியாத்தன்மையினையுங் கண்டவனாய் விவகரித்தற்குச் சந்தோஷமுடைய மற்றொருவனைப் பிரேரணையுஞ் செய்யான். ஆனால் இடுப்பொடிந்த பாம்பினைப்போல மந்தகதியுடையவனாவான்; ஏனெனின் பிரவிருத்திக்கு ஏதுவாகிய அநாத்மாவில் யானெனுந்தன்மை யில்லாமையால். "பிரஹ்மமே நான்" என்று பிரஹ்மவடிவமாகப் பிரஹ்மத்திலேயே நிலைத்துள்ள பிரஹ்மவித்தாகிய பிராஹ்மணனுக்குச் சண்டாளனைப்போலச் சரீரத்தைத் தொடுதற்கு உருசியாது. தேகாதிகளோடு தாதாத்மியமின்றி "யான் என" தென்னும் வியவகாரம் செய்யக் கூடியதாகாது. பிரஹ்மவித்துக்களுக்குத் தேகாதிகளோடு தாதாத்மியம் மிகவுந் துக்கரூபமாம். அதன் தாதாத்மியத்தால் "யான் எனது" என்னும் பிரவிருத்தி உண்டாகின்றது. அதனால் மிகத்துக்கமாம். அங்கும் கர்மத்தைச் செய்தல் அத்தியந்த துக்கமேயாம். இவ்வாறு அறிந்து இரகஸ்தனாகிய வித்துவானும் சர்வகர்மங்களையும் விடவே செய்வன். தன்பொருட்டாவது பிறர்பொருட்டாவது கர்மம் செய்யச் சமர்த்தனாகான். ஆதலால் பரோக்ஷஞானியே உலகரக்ஷணையைச் செய்வான். அநாத்மாவில் எவனுடைய அகந்தை முழுதும் நாசமாயிருக்கிறதோ அப்படிப்பட்ட அபரோக்ஷஞானி ஓரிடத்தும் உலகசங்கிரகத்தைச் செய்யான். இவ்வாறாகவே,

அபரோக்ஷஞானிக்கும் உலகசங்கிரகார்த்தமாகக் கர்மஞ்செய்யவேண்டியதாம் என்று சொல்லும் வாதியை இது கேட்கவேண்டும்:— அபரோக்ஷஞானிகள் இருவகைப்படுவர். ஒருவன் சித்தன்; மற்றொருவன் சாதகன். அவர்களுள், என்னை? (க) சித்தனுக்கு உலகசங்கிரகம் சொல்லப்படுகின்றதா? (உ) அல்லது சாதகனுக்குச் சொல்லப்படுகின்றதா?

(க) இதில் முதற்பக்ஷம் பொருந்தாது. ஏனெனின், அந்தச் சித்தன் பிரஹ்மாதி ஸ்தம்பபரியந்தம் சகலப்பிராணிகளோடு தன்னையும் முக்தனாகக் காணுகிறவனாயிருத்தலின் அவனுடைய திருஷ்டியினால் பெத்தர்களில்லாமையால் அவனுக்கு உலகசங்கிரக மில்லை.

(உ) இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. ஏனெனின், சாதகனாகிய முமுக்ஷுவிற்கு உலகசங்கிரகார்த்தம் கர்மஞ்செய்யவேண்டுமென்று விதி (பிரேரகப்பிரமாணம்)

இல்லை. ஆனால் முமுக்ஷுவுக்குப் பிரஹ்மநிஷ்டையே செய்யத்தக்கதா யிருத்தலாற் சுருதிஸ்மிருதிகளிற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் சாதகனாகிய ஆத்மஞானிக்குச் செய்யவேண்டியது சமாதியேயாம். தன்பொருட்டாவது பிறர்பொருட்டாவது சிறோன தஸ்மார்த்த கர்மங்கள் செய்யவேண்டியதில்லை. "சௌச ஆசமந ஸ்நாநங்களை சாஸ்திரத்தின் பிரேரணையால் முமுக்ஷு ஆசரிக்கிறதில்லை. "ஜிஞ்ஞாசையில் (ஆத்ம விசாரத்தில்) செவ்வையாய்ப் பிரவர்த்தித்த புருஷன் கர்மத்தின் பிரேரணையை ஆதரிக்கிறதில்லை." இவ்வாக்கியத்தால் ஜிஞ்ஞாசுவுக்குச் சிரவணாதிவடிவ ஞானத்தின் சாதனமின்றி வேறு கர்த்தவ்விய மில்லை.

எப்போது சாதகனுக்குக் கர்மாதீனமாதற்கு அவகாசமில்லையோ அப்போது சித்தனுக்கு எங்கிருந்து உண்டாகும்? ஆதலால் எவன் வெகுவிதமாகச் சிரவணஞ்செய்து அபாசவடிவ ஆத்மஞானமுடையவனாய் "யான் எனது" என்றல்முதலிய வெளிவாசனையினால் கட்டுப்பட்டவனாயிருக்கும் பரோக்ஷஞானியோ உலகசங்கிரகவசனத்திற்கு விஷயமாவன். அல்லது உலகத்தின் அநுக்கிரகத்தின் (குமார்க்கத்தினின்றும் பிரவிருத்தியை நீக்குதற்) பொருட்டுப் பிரஹ்மாவினால் படைக்கப்பட்ட மகான்களாகிய வியாசர், அகஸ்தியர், பராசரர். வசிஷ்டர் முதலியவர்களாவது அல்லது அவர்களைப் போன்ற வேறு அதிகாரிகளாவது நிக்கிரகாநுக்கிரகங்களில வைர்கள் சமர்த்தர்களோ அவர்கள் உலகசங்கிரக வசனத்திற்கு விஷயமாவர்; சித்தனுமாகான்; சாதகனாகிய முமுக்ஷுவுமாகான். அதனாலே சர்வஞ்ஞராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானானவர் கீதையின் மூன்றாவதத்தியாத்துள்ள பதினேழாவது சுலோகத்தில் "ஆத்மரதியும் ஆத்மதிருப்தனும் ஆத்மசந்துஷ்டனுமான மனிதனாகிய அவனுக்குச் செய்யத்தக்கதில்லை" என்று கூறியிருக்கின்றார். அன்றியும்,

(க) சித்தனாகிய வித்துவானுக்கு அநுஷ்டிக்கப்பட்ட கர்மத்தினால் அடையத்தக்கதான ஒருபொருளு மில்லை; ஏனெனின் வித்துவான் ஆத்மாவினிடத்தில் திருப்தனாயிருத்தலால்.

(உ) எல்லாவற்றின் மித்தியாத்தன்மையைக் காண்பவனாயிருத்தலால் யோகக்கிரியைகளால் அடையத்தக்க ஆகாசகமநம் அணிமாமுதலிய சித்தி அவனால் அபேக்ஷிக்கப்பட்டதன்று.

(௩) சர்வாத்மத்தன்மையின் அடைவால் தபக்கிரியையினா லடையப்படும் பிரஹ்மேந்திராதிகளினது பதங்களின் அபேக்ஷையு மில்லை. அன்றியும்,

(௪) ஜீவன்முக்தனா யிருத்தலின் அவ்வைதிகக்கிரியையா லடையத்தக்க சித்தசுத்திவடிவவாயிலையுடைய மோக்ஷத்தினபேக்ஷையு மில்லை.

ஆதலால் பிரஹ்மவித்துமேலோனுக்கு கர்மத்தாற் சாதிக்கத்தக்க எப்பொருளு மில்லை.

(௫) விகித கர்மத்தினை ஆசரியாமையினால் ஓர் அநர்த்தமும் சம்பவியாது. ஏனெனின், "இந்தத்துவைதம் மாயாமாத்திரமாம்" என்னும் நியாயத்தால் விதியும், அவித்தையினாற் கற்பிக்கப்பட்டமையால் மித்தையா யிருத்தலின் வித்துவானுக்கு விதியைக் கடத்தலிற் றோஷமுமில்லை.

உ. கிருதகிருத்தியமாகிய ஞானியின் ஒழுக்கநிச்சயம் அருசு-அஎரு.

க. கிருதகிருத்தியனாகிய ஞானிக்குத் திவிரப்பிராரப்தத்தின் வசத்தாற் கிடைத்த நியமமின்றிய ஆசாரத்தை அங்கீகரித்தல்.

[அருசு] व्यवहारो लौकिको वा शास्त्रीयो वान्यथापि वा ।
ममाकर्तुरलेपस्य यथारब्धं प्रवर्तताम् ॥ २६७ ॥

(அ-கை.)

அப்படியானல் இவ்வாறு எல்லாவிடத்திலும் அகர்த்திருத்தன்மையை அங்கீகரிக்கின், ஞானிக்கு நியமமின்றியிருத்தல் வாய்க்குமேயென்றாசங்கித்து, பிராரத்தத்தின் வசத்தினாற் கிடைத்த நியமமின்றி யிருத்தலை ஞானி அங்கீகரிக்கின்றான்:—

लौकिकः वा शास्त्रीयः वा अन्यथा अपि वा व्यवहारः अकर्तुः अलेपस्य मम यथाऽऽरब्धं प्रवर्तताम् ॥

---

(சு) முத்தியின் பிரதிபந்தகத்தினை நீக்குதற்பொருட்டாவது அல்லது அத்தியாத்மமுதலிய உபத்திரவங்களை நீக்குதற்பொருட்டாவது உபாசனைவடிவக் கிரியையினால் சிவனையாவது அல்லது விஷ்ணுவையாவது அல்லது பிறிதொன்றனையாவது ஆசிரயிக்கவேண்டியதில்லை.

(எ)சரீரத்தினது யாத்திரையின்(நிர்வாகத்தின்)பொருட்டுப் பிராஹ்மணனையாவது அல்லது க்ஷத்திரியனையாவது அநுசரித்து ஆசிரயஞ் செய்யவேண்டியதில்லை. ஏனெனின் பிரஹ்மநிஷ்டையினால் மேல்வரும் சரீரத்தை அடைவிக்கும் அஞ்ஞானத்தினை நிர்மூலஞ்செய்யும் அதன் காரியத்தினையும் சஞ்சிதாதி சர்வகர்மசமூகங்களினையும் நிர்மூலஞ்செய்திருக்கும் பிரஹ்மவித்திற்கு இவ்விடத்திலேயே முக்தனுயிருத்தலின் இதனின் வேறாய் முக்தியின் பிரதிபந்தகம் சம்பவியாது. ஆதலால் மித்தியாத்தன்மைப்பக்ஷத்தி லகப்பட்ட சிவன் விஷ்ணுமுதலியோர் ஆராதிக்கத்தக்கவர்களாகார். அத்தியாத்மிகமுதலிய உபத்திரவங்களும் சரீரரக்ஷயும் பிராரத்தத்தின் அதீனமாயிருத்தலால் அதில் புருஷப்பிரயத்தினத்தின் வியர்த்தத்தன்மை காணப்படுதலால் அதன் பொருட்டுப் பிராஹ்மணன்முதலிய எவரும் ஆசிரயிக்கத்தக்கவ ரன்று.

ஆதலால் பிரஹ்மவித்துவரிய(சிரேஷ்ட)னாகிய முக்தனுக்கு ஓரிடத்தும் யாதோர்கர்மமும் செய்யவேண்டியதில்லை. எவனுக்குக் கர்த்தவ்விய முண்டோ அவன் பிரஹ்மவித்து மல்லன். ஆங்கு இது ஸ்மிருதியாம்:— "ஞானவடிவ அமிர்தத்தால் திருப்தனும் கிருதகிருத்தியனுமாகிய யோகிக்கு செய்யவேண்டியது சிறிதுமில்லை ; செய்யவேண்டியதுளதாயின் அவன் தத்துவஞானி யல்லன்." இவ்வர்த்தம் கீதையின் மூன்றாவதத்தியாயத்துள்ள கஎ-கஅ வது சுலோகங்களின் வியாக்கியானத்தில் சங்கரானந்தசுவாமிகளால் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் வித்துவானுக்குக் கர்த்தவ்வியமும் பிராப்தவ்வியமு மில்லை யென்பது நிச்சயிக்கத்தக்கதாம்.

(த-ம்.)

இலௌகிக அல்லது சாஸ்திரீய அல்லது இவ்விரண்டினும் வேறாய வியவகாரம் அகர்த்தாவும் அபோக்தாவுமாகிய எனக்குப் பிராரப்தத்தின் படி பிரவிருத்தி உண்டாகுக.

(வி-ம்.)

இலௌகிகமாகிய பிக்ஷைகொண்டுவருதல்முதலியன அல்லது சாஸ்திரீயமாகிய ஜபசமாதிமுதலியன அல்லது வேறுவிதமாய்ச் சித்தித்த இச்சை முதலிய வடிவினவாகிய வியவகாரம் கர்த்திருத்தன்மை போக்திருத்தன்மைகளின்றி என்னுடைய பிராரத்தத்தைக் கடவாது பிரவர்த்திக்க. ஏனெனின் தீவிரப் பிராரத்தத்திற்குப் போகமின்றி நிவிருத்தி இன்மையால் என்பது தாற்பரியம். (உகஎ)

உ. பிரௌடிவாதத்தால் ஞானிக்குச் சாஸ்திரத்திற் கூறிய வழியாகப் பிரவிருத்தியைக் கோள்ளுதல்.

[அ௫உ] अथवा कृतकृत्योऽपि लोकानुग्रहकाम्यया ।
शास्त्रीयेणैव मार्गेण वर्तेऽहं का मम क्षतिः ॥ २६८ ॥

(அ-கை.)

இவ்வாறு வாஸ்தவத்தன்மையைக் கூறி * கஎ. பிரௌடிவாதத்தாற் கூறுகின்றார்:—

अथवा अहं कृतकृत्यः अपि लोकानुग्रहकाम्यया शास्त्रीयेण मार्गेण एव वर्ते । मम का क्षतिः ॥

(த-ம்.)

அல்லது நான் கிருதகிருத்தியனாயும் உலகானுக்கிரகத்தின் இச்சையினால் சாஸ்திரத்திற் சொல்லிய மார்க்கமாகவே இருப்பேன். அதனால் எனக்குக் *கஅ. கெடுதி யாது? ஒன்றுமில்லை யென்றபடி. (உகஅ)

---

* கஎ. வித்துவானுக்கு வாஸ்தவமாக நியமமின்றிய ஆசாரம் வாய்க்கினும் சதாசாரத்தை நிரூபித்து இக்குத் தனது மேன்மையினைக் கூறுதல் பிரௌடிவாதமாம்.

* கஅ மந்திரத்தை யுணர்ந்த எவனுக்கு முட்படுக்கையும் வருத்தத்தைத் தாராதோ அவனுக்குப் புஷ்பப்படுக்கையால் எங்கிருந்து கஷ்டமுண்டாகும்? இவ்வாறு எந்த எனக்குத் தீவிரப்பிராரத்தத்தாற் கிடைத்த அநாசாரத்தாலும் ஞானத்தின் வலியால் ஹானி யுண்டாகிறதில்லையோ, அப்படிப்பட்ட எனக்குச் சதாசாரத்தால் எங்கிருந்து ஹானியுண்டாகும்? என்பது தாற்பரியம்.

௬. சாஸ்திரத்திற் கூறிய ஆசாரத்தினால் ஞானிக்கு அபிமானத்தினலாகிய விகாரமின்மை.

[௨௬௯] देवार्चनस्नानशौचभिक्षादौ वर्ततां वपुः ।
तारं जपतु वाक् तद्वत्पठत्वाम्नायमस्तकम् ॥ २६९ ॥

(அ-கை.)

அப்படியானல் சாஸ்திரத்திற் கூறிய மார்க்கத்திலேயே இருத்தற்கு அங்கீகாரம் எப்போது செய்கின்றனே, அப்போது அந்தச் சாஸ்திரானுசாரியாக நடத்தலின் அபிமானத்தாலாகிய விகாரமுண்டாகுமே என்றுசங்கித்து இரண்டு சுலோகங்களால் உத்தரம் கூறுகின்றார்:—

वपुः देवार्चनस्नानशौचभिक्षादौ वर्ततां । वाक् तारं जपतु तद्वत् आम्नायमस्तकम् पठतु ॥

(சு-ம்.)

தேவதார்ச்சனை ஸ்நாநம் சௌசம் பிக்ஷைமுதலியவற்றில் சரீரம் நிகழ்க. வாக்கு தாரமாகிய பிரணவத்தை ஜபிக்க. அவ்வாறே வேதசிரஸாகிய வேதாந்தசாஸ்திரத்தினைப் படிக்க. (௨௬௯)

[௨௭௦] विष्णुं ध्यायतु धीर्यद्वा ब्रह्मानंदे विलीयताम् ।
साक्ष्यहं किंचिदप्यत्र न कुर्वे नापि कारये ॥ २७० ॥

(அ-கை.)

இதுவுமது:—

धीः विष्णुं ध्यायतु यद्वा ब्रह्मानंदे विलीयतां । साक्षी अहं अत्र किंचित् अपि न कुर्वे । न अपि कारये ॥

(சு-ம்.)

புத்தி விஷ்ணுவைத் தியானிக்க அல்லது பிரஹ்மாநந்தத்தில் விலீனமாகுக. சாக்ஷிவடிவ யான் இங்கு இராஜாவின் அநுசர(வேலைக்கார)னைப் போல எதுவும் செய்கிறதில்லை; ராஜாவைப்போல பிரேரணையினால் செய்விக்கிறதுமில்லை. ஆதலால் எனக்கு நல்லொழுக்கத்தின் அபிமானத்தாற்றோன்றிய விகாரம் உண்டாகாது. (௨௭௦)

௭. ஞானிக்கும் கர்மிக்கும் கலகம் சம்பவியாமையாகிய பலிதார்த்தம்.

[௨௭௧] एवं च कलहः कुत्र संभवेत्कर्मिणो मम ।
विभिन्नविषयत्वेन पूर्वापरसमुद्रवत् ॥ २७१ ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

एवं पूर्वापरसमुद्रवत् विभिन्नविषयत्वेन मम च कर्मिणः कलहः कुत्र संभवेत् ॥

(சு-ம்.)

இவ்வாறாகவே ஞானிக்கும் கர்மிக்கும் பின்ன தேசத்திலிருக்கும் முன் பின் *சுக. சமுத்திரத்தைப் போல பின்ன விஷயமுடையவர்களாயிருத்தலால் ஞானியாகிய எனக்கும் கர்மிஷ்டனுக்கும் கலகம் எங்கே சம்பவிக்கும்? (உஎக)

ஙி. கர்மிக்கும் ஞானிக்கும் வெவ்வேறு விஷயமுண்மை.

[அஙிசு] वपुर्वाग्धीषु निर्बंधः कर्मिणो न तु साक्षिणि ।
ज्ञानिनः साक्ष्यलेपत्वे निर्बंधो नेतरत्र हि ॥ २७२ ॥

(அ-கை.)

ஞானியும் கர்மியும் வெவ்வேறு விஷயமுடையவர்களாதலையே விளக்குகின்றார்:—

**कर्मिणः वपुर्वाग्धीषु निर्बंधः साक्षिणि तु न । ज्ञानिनः साक्ष्यलेपत्वे निर्बंधः इतरत्र न हि ॥**

(சு-ம்.)

கர்மிக்குச் சரீரத்திலும் புத்தியிலும் நிர்ப்பந்தம் அதாவது ஆக்கிரக பூர்வகமாகிய நிச்சயம் இருக்கின்றது; சாக்ஷியினிடத்தில்லை. ஞானிக்குச்

* சுக. எப்படிப் பின்னதேசத்திலுள்ள முன்பின் சமுத்திரங்களின் சப்தம் அல்லது சங்கமம் ஒருமித்தல் பொருந்தாதோ, அதுபோல ஆத்மாவும் அநாத்மாவுமாகிய பின்னதேசங்களில் நிஷ்டையையுடைய கர்மிக்கும் ஞானிக்கும் விவாதம் சம்பவியாது. எப்படி இரண்டுபுருஷர்கள் சமீபத்திலிருக்கும் இரண்டு க்ஷேத்திரங்களுக்கு வேறு வேறு அதிபதிகளாகின்றார்களோ அவருடைய பூமி பரஸ்பரம் தடுக்கப்படுமாயின் அவர்களுக்குக் கலகஞ்செய்தல் தகுதியாமோ, பூமியைத் தடுத்தலின்றிக் கலகஞ்செய்யின் அது நகைக்கத்தக்கதாமோ, அதுபோலஞானிக்கும் கர்மிக்கும் ஆத்மா அநாத்மா வடிவ க்ஷேத்திரம் கர்மத்தில் பிரவர்த்தித்தல் பிரவர்த்தியாமைகளாற் றடுக்கப்படுமாயின் அவர்களுக்குக் கலகஞ்செய்தல் தகுதியாம். ஆனால் அசங்கமாகிய ஆத்மாவிற்கும் மித்தையாகிய அநாத்மாவிற்கும் பிரவிருத்தி பிரவிருத்தியின்மைகளால் விரோதமுண்டாகிறதில்லை. ஆதலால் அவற்றில் நிஷ்டையுடைய ஞானிக்கும் கர்மிக்கும் பரஸ்பரம் கலகஞ்செய்தல் தகுதியன்று. இவ்வாறாக எவர்கள் விருதாவாய்க் கலகஞ்செய்கின்றார்களோ அவர்கள் புத்திமான்களால் நகைக்கத்தக்கவராவர். இஃது இப்பிரசங்கத்தின் தாற்பரியமாம்.

சாக்ஷியின் பற்றின்றியதன்மையில் நிர்ப்பந்த மிருக்கின்றது; சரீரமுத லிய வேறிடத்தி லில்லை. ஆகலால் இருவருக்கும் வேறு வேறு விஷயங்க ளுண்டு. (உஎஉ)

௬. விஷயங்கள் பின்னமாயிருந்தும் ஒருவருக்கொருவர் கலகஞ் செய்து கொள்ளும் ஞானியும் கர்மியும் வித்துவான்களால் பரிகசிக்கத்தக்கவர்களாதல்.

[அ௺எ] एवं चान्योऽन्यवृत्तांतानभिज्ञौ बधिराविव ।
विवदेतां बुद्धिमंतो हसंत्येव विलोक्य तौ ॥ २७३ ॥

(அ-கை.)

இவ்வாறு வேறு வேறாக விஷயங்களி னிருப்பிருக்கினும், ஒருவருக் கொருவர் கலகஞ் செய்துகொள்ளும் ஞானியும் கர்மியுமாகிய இருவரும் வித்துவான்களால் பரிகசிக்கத்தக்கவராவர் என்று கூறுகின்றார்:—

एवं च अन्योऽन्यवृत्तांतानभिज्ञौ बधिरौ इव विवदेतां । तौ विलोक्य बुद्धिमंतः हसंति एव ॥

(சு-ம்.)

இப்படிப் பரஸ்பரம் விருத்தாந்தத்தை அறியாதவர்களாகிய ஞானி யும் கர்மியுமாகிய இருவரும் செவிடனைப்போல விவாதஞ் செய்கின்றார்கள். அவர்களைப் பார்த்துப் புத்திமான்கள் சிரிக்கவே செய்கின்றார்கள். (உஎ௩)

எ. சுலோகம் அ௺எ-ற் கூறியவிதமான ஞானியும் கர்மியும் நகைத்தற்குரிய ராதலிற் காரணம்.

[அ௺அ] यं कर्मी न विजानाति साक्षिणं तस्य तत्त्ववित् ।
ब्रह्मत्वं बुद्ध्यतां तत्र कर्मिणः किं विहीयते ॥ २७४ ॥

(அ-கை.)

பரஸ்பரம் விவாதஞ் செய்துகொள்ளும் ஞானியும் கர்மியும் எதனால் பரிகாசஞ் செய்துகொள்ளத்தக்கவர்களாவ ரென்றாசங்கித்து, விஷயமின் றிக் கலகஞ்செய்பவர்களா யிருத்தலின் அவர்கள் பரிகசித்தற் குரியரா கின்றா ரென்று கூறுகின்றார்:—

यं साक्षिणं कर्मी न विजानाति । तस्य ब्रह्मत्वं तत्त्ववित् बुद्ध्यतां । तत्र कर्मिणः किं विहीयते ॥

(சு-ம்.)

எந்தச் சாக்ஷியினைக் கர்மி அறியானோ அச்சாக்ஷியின் பிரஹ்மத்தன் மையைத் தத்துவஞானி அறிகின்றான். அதில் கர்மிக்கு என்ன கெடுதி உண்டாகின்றது?

(வி-ம்.)

கர்மி எந்தச் சாக்ஷியை அதாவது கர்மத்தின் அநுஷ்டானத்தில் உபயோகியான தேகம், வாக்கு, புத்தி என்பவற்றிற்கு வேறாகிய பிரத்தியகாத்மாவை அறிகிறதில்லையோ, அச்சாக்ஷியின் பிரஹ்மத்தன்மையைத் தத்துவ ஞானியானவன் அறியின், கர்மிபுருஷனது கர்மத்தின் அநுஷ்டானத்தில் என்ன ஹானியுண்டாகின்றது? ஒன்றுமில்லை. (உஎச)

[அ௫கூ] देहवाग्बुद्धयस्त्यक्ता ज्ञानिनाऽनृतबुद्धितः ।
कर्मी प्रवर्तयत्वाभिर्ज्ञानिनो ह्रीयतेऽत्र किम् ॥ २७५ ॥

(அ-கை.)

இதுவுமது:—

ज्ञानिना अनृतबुद्धितः देहवाग्बुद्धयः त्यक्ताः । कर्मी आभिः प्रवर्तयतु । अत्र ज्ञानिनः किं ह्रीयते ॥

(சு-ம்.)

ஞானியினுல் மித்தியாத்தன்மையின் ஞானத்தால் தேகம் வாக்கு புத்தி என்பன விடப்பட்டன. கர்மி இத்தேகாதிகளால் பிரவிருத்தனுகுக. அதில் ஞானிக்கு என்ன கெடுதி உண்டாகின்றது?

(வி-ம்.)

ஞானி மித்தியாத்தன்மையுணர்ச்சியினுல் விடப்பட்ட தேகம் வாக்கு புத்தி என்பவற்றுல் கர்மாநுஷ்டானஞ் செய்தலில் ஞானிக்கு உண்டாகும் கெடுதி யாது? இதனுல் விஷயமின்றிக் கலகஞ்செய்யும் ஞானியும் கர்மியுமாகிய இருவரும் சிரிக்கத்தக்கவர்களாவர் என்பது பொருள். (உஎ௫)

அ. ஞானிக்குப் பிரவிருத்தி நிவிருத்திகளாற் பிரயோஜன மில்லாமை.

[அகூ0] प्रवृत्तिर्नोपयुक्ता चेन्निवृत्तिः क्वोपयुज्यते ।
बोधहेतुर्निवृत्तिश्चेद्बुभुत्सायां तथेतरा ॥ २७६ ॥

(அ-கை.)

அப்படியானுல் கர்மத்தின் அநுஷ்டானம் பிரயோஜனசூந்யமா யிருத்தலால் ஞானியினுல் அங்கீகரிக்கப்படுகிறதில்லை யென்று வாதி சங்கிக்கின்றன்:—

प्रवृत्तिः न उपयुक्ता चेत् ॥

(சு-ம்.)

ஞானிக்குப் பிரவிருத்தியின் உபயோகமில்லை யென்று கூறின்.

(அ-கை.)

ஞானிக்கு உபயோகத்தினின்மை நிவிருத்தியிலும் சமானமா மென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

निवृत्तिः क्व उपयुज्यते ॥

(சு-ம்.)

ஞானிக்கு நிவிருத்தியின் உபயோகம் எங்கிருக்கும்?

(அ-கை.)

நிவிருத்தி ஞானத்திற்கு ஏதுவா யிருத்தலின் அதன் உபயோகம் இல்லை என்ப தில்லை என்று வாதி சங்கிக்கின்றான்:—

बोधहेतुः निवृत्तिः चेत् ॥

(சு-ம்.)

ஞானத்திற்கு ஏது நிவிருத்தியா மென்று கூறின்.

(அ-கை.)

அப்போது சுபகர்மத்தில் பிரவிருத்தியும் சித்தசுத்தி வைராக்கிய வாயிலாக ஞானவிருப்பத்திற்கு ஏதுவாயிருத்தலின் உபயோகமுடையதா மென்று சித்தாந்தி கூறுகின்றார்.—

तथा बुभुत्सायां इतरा ॥

(சு-ம்.)

அவ்வாறே பிரவிருத்தியும் *எ௦. ஜிஞ்ஞாசையில் அதாவது சொரூபத்தை அறியும் இச்சையில் உபயோகியாம். (உஎசு)

---

* எ௦. அநேக சுருதிஸ்மிருதிகளில் கர்மத்தின் சமுச்சயத்தி (கலப்பி)னையுடைய ஞானத்தால் மோக்ஷத்தின் பிராப்தி சொல்லப்பட்டிருக்கின்றது. பாஷியகாரர் அநேக இடங்களில் சமுச்சயவாதத்தின் கண்டனமும் செய்திருக்கின்றனர்; அதன் அபிப்பிராயம் இதுவாம்:—

(க) ஒன்று சமசமுச்சயம்; (உ) மற்றொன்று கிரமசமுச்சயம்.

(க) ஞானம் கர்மம் இரண்டனையும் மோக்ஷசாதன மென்றறிந்து ஒரேகாலத்தில் இரண்டனையும் அநுஷ்டித்தல் சமசமுச்சயம்.

(உ) ஒரேஅதிகாரி முதலில் கர்மத்தை அநுஷ்டித்தலும், பின்சர்வ கர்மங்களையும் விட்டு ஞானத்தின் சாதனமாகிய சிரவணாதிகளை அநுஷ்டித்தலும் கிரமசமுச்சயம்.

சுருதிஸ்மிருதிகளில் ஞானகர்மங்களின் சமுச்சயம் எழுதப்பட்டிருக்கின்றது. அவற்றிற்குக் கிரமசமுச்சயத்தில் தாற்பரியமாம். பாஷியகாரரால் நிஷேதிக்கப்பட்ட

தெதுவோ அது சமசமுச்சயமாம். அந்தப் பாஷியகாரரது சித்தாந்தம் இதுவாம்:- மோக்ஷத்தின் சாக்ஷாத்சாதனம் கர்மமன்று; ஞானமாம். ஞானத்தின்சாதனம் கர்மமாம். ஆனால் நேராகவாவது ஞானவிருப்பத்தின் வாயிலாகவாவது ஞானத்திற்குச் சாதனம் கர்மமாம். இவ்விசேஷவிசாரம் அந்தப் பிரசக்கத்தில் எழுதப்படவில்லை. பாஷியத்திற்கு பாமதீசிபந்தனமென்னும் வியாக்கியானஞ் செய்த வாசஸ்பதிமிசிரர் இவ்வாறு கூறியிருக்கின்றனர்:—அதாவது ஞானவிருப்பத்தின் சாதனம் கர்மமாம்; ஞானவிருப்பவாயிலாக கர்மம் ஞானத்திற்குச் சாதனமாம்; நேர்சாதன மன்று. ஏனெனின் பிரஹ்மமீமாம்சையினது மூன்றாவது அத்தியாயத்தின் வியாக்கியானத்தில் பாஷியகாரர் "ஞானவிருப்பத்தின் சாதனம் கர்மமென்று கூறியிருக்கின்றார்." "வேதாத்தியயனமும் யாகமும் தானமும் கிருச்சிரசாந்திராயணாதிதபமும் உணவின்மையுமாகிய இவற்றால் பிராஹ்மணர்கள் இவ்வாத்மாவை அறிய இச்சிக்கின்றார்கள்." என்னும் கைவல்யசாகையின் சுருதியில் சகலஆசிரமங்களின் கர்மங்களும் ஞானவிருப்பத்திற்குச் சாதனமா மென்று வெளிப்படையாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் ஞானவிருப்பத்திற்கு நேர்சாதனம் கர்மமாம்; ஞானத்தின் நேர்சாதனமன்று இவ்வாறு கொள்ளாவிடின் ஞானத்தின் உற்பத்திபரியந்தம் கர்மாநுஷ்டானப்பிரசக்கத்தால் சாதனத்தோடு கர்மத்தை விடுதலாகிய சந்நியாசத்திற்கு லோப முண்டாகும். இது வாசஸ்பதியின்மதம்.

விவரணகாரர் ஞானத்தின்சாதனம் கர்மமென்று கூறியிருக்கின்றனர். ஞானவிருப்பத்தின் சாதனமன்று. முற்கூறிய சுருதிவாக்கியத்திற்கும் இச்சைக்கு விஷயமாகிய ஞானத்தின்சாதனம் கர்ம மென்பது தாற்பரியம். வைராக்கியத்தோடு தீவிரஞான விருப்பபரியந்தம் கர்மம் செய்யவேண்டியதாம். பின் அதனைவிடுதல்வடிவசந்நியாசம் செய்யவேண்டும். ஆதலால் மூன்றாவது அத்தியாயத்துள்ள பாஷியவசனத்தோடும் விரோதியாது. ஞானவிருப்பபரியந்தம் செய்யப்பட்ட கர்மத்தால் புண்ணியவடிவ சம்ஸ்காரமாகிய அபூர்வத்தின் உற்பத்தி உண்டாகின்றது. அது ஞானத்தின் உதயபரியந்த மிருக்கின்றது; பின் நஷ்டமாகின்றது. ஆதலால் ஞானவிருப்பபரியந்தம் செய்யப்பட்ட கர்மம் அபூர்வவாயிலாக ஞானத்திற்குச் சாதனமாம். இதனால் சந்நியாசத்திற்கு லோபமுண்டாகு மென்னும் பிரசங்கமு மில்லை.

ஆசிரமத்தின் கர்மங்களே வித்தையில் உபயோகமாம்; வர்ணமாத்திரத்தின் தர்மங்கள் உபயோகமாகிறதில்லை என்று சில ஆசிரியர் கூறுகின்றனர்.

கல்பதருகாரர் மதத்தில் சகல நித்தியகர்மங்களும் நிஷ்காம கர்மமாயிருத்தலால் ஞானத்தின் பிரதிபந்தகமான பாபத்தை நிவர்த்திக்கும்வாயிலாக வித்தையில் உபயோகமாம்; காமியகர்மத்தில் உபயோகமன்று.

சம்க்ஷேபசாரீரககாரர் மதத்தில் காமியமும் நித்தியமும் சகலசுபகர்மங்களும் வித்தையில் உபயோகமாம். ஏனெனின் முற்கூறிய சுருதியில் "நித்தியம், காமியம் சாதாரணயஞ்ஞம் என்னும் சப்தங்க ளிருக்கின்றன. "தர்மத்தால் பாபத்தைக் கெடுக்கின்றான்" என்றல் முதலிய வாக்கியங்களால் சகல சுபகர்மங்களுக்கும் பாபத்தைக் கெடுக்குந்தன்மை தோற்றுகின்றது. ஆதலால் ஞானத்தின் பிரதிபந்தமாகிய பாபத்தை நிவர்த்திக்கும் வாயிலாக நித்தியகர்மத்திற்குப்போல காமியகர்மத்திற்கும் வித்தையில் உபயோக முண்டு.

ஆனால் தீவிரஞானவிருப்பபரியந்தம் சகல சுபகர்மங்களும் செய்யத்தக்கனவாம்; பின் இல்லை. இது சகல ஆசாரியர்களது சாதாரணமதமாம். இவ்வாற்றால் பிரவிருத்தி (கர்மாநுஷ்டானம்) ஞானவிருப்பத்தில் உபயோகமுள்ளதாம்.

[அகூக] बुद्धश्चेन्न बुभुत्सेत नाप्यसौ बुद्धयते पुनः ।
अबाधादनुवर्तेत बोधो न त्वन्यसाधनात् ॥ २७७ ॥

(அ-கை.)

அப்படியானால் ஞானிக்கு ஞானவிருப்பமின்மையால் பிரவிருத்தியின் உபயோகமில்லை யென்று மீண்டும் நிவிருத்தியி லாக்கிரகமுள்ள வாதி சங்கிக்கின்றான்:—

बुद्धः न बुभुत्सेत चेत् ॥

(சு-ம்.)

ஞானி ஞானவிருப்பத்தைச் செய்கிறதில்லை. ஆதலால் அவனுக்குப் பிரவிருத்தியின் உபயோகமில்லை யென்று கூறின்.

(அ-கை.)

அப்போது ஞானிக்கு மீண்டும் ஞானமின்மையால் அந்த ஞானத்திற்குக் காரணமாகிய நிவிருத்தியும் ஞானியைக் குறித்து உபயோகமுடையதாகா தென்று கூறுகின்றார்:—

असौ पुनः बुद्धयते अपि न ॥

(சு-ம்.)

இந்த ஞானி மீண்டும் ஞானத்தையு மடையான். ஆதலால் அவனுக்கு நிவிருத்தியின் உபயோகமு மில்லை.

(அ-கை.)

அப்படியானால் ஒருமுறை உண்டாகிய ஞானத்தின் ஸ்திரத்தன்மையின்பொருட்டு நிவிருத்தி அபேக்ஷிக்கப்படுவதா மென்றுசங்கித்து, ஸ்திரத்தன்மை எதுவோ அது பாதஞ்செய்வதினின்மையை அபேக்ஷிக்கின்றது; வேறு சாதனத்தை அபேக்ஷிக்கிறதில்லை யென்று கூறுகின்றார்:—

बोधः अबाधात् अनुवर्तेत । अन्यसाधनात् तु न ॥

(சு-ம்.)

ஒருமுறை உண்டாகிய ஞானம் எதுவோ அது கெடாமையால் பின் இருக்கின்றது; வேறு சாதனத்தா லிருப்பதில்லை.

(வி-ம்.)

மகாவாக்கியமாகிய பிரமாணத்தாற்றோன்றிய ஞானத்திற்குப் வலியுடைய பிரமாணத்தால் பாதமின்மையின் அநுவிருத்தி அதாவது உண்

டாகிய பின்னிருத்தல் இருக்கவே இருக்கின்றது. ஆதலால் ஒருமுறை உண்டாகிய ஞானத்தின் ஸ்திரத்தன்மையின்பொருட்டு வேறு சாதனம் அநுஷ்டிக்கத்தக்கதில்லை என்பது பொருள். (௨௭௭)

௯. பாதிக்கப்பட்ட அவித்தையினாலும் அதன் காரியத்தினாலும் பிரமாணத்தினாலாகிய ஞானத்திற்குப் பாதமின்மை.

[அ௯௨] नाविद्या नापि तत्कार्यं बोधं बाधितुमर्हति ।
पुरैव तत्त्वबोधेन बाधिते ते उभे यतः ॥ २७८ ॥

(அ·கை.)

அப்படியானால் பிரத்தியக்ஷமுதலிய பிற பிரமாணங்களால் ஞானம் பாதிக்கப்படாததாயினும், அவித்தையினாலாவது அல்லது அதன் காரியமாகிய கர்த்திருத்தன்மையின் அத்தியாசத்தினாலாவது ஞானத்திற்குப் பாதமுண்டாகுமேயென்றுசங்கித்துக் கூறுகின்றார் :—

न अविद्या न तत्कार्यं अपि बोधं बाधितुं अर्हति ॥

(சு·ம்.)

அவித்தையும் அதன்காரியமும் ஞானத்தைப் பாதஞ்செய்யத்தக்கனவாகா.

(அ·கை.)

அதில் காரணத்தைக் கூறுகின்றார்:—

यतः ते उभे पुरा एव तत्त्वबोधेन बाधिते ॥

(சு·ம்.)

ஏதனால் அவித்தையும் அதன் காரியமுமாகிய அவ்விரண்டும் முன்னரே தத்துவஞானத்தால் பாதிக்கப்பட்டவையாயினவோ அதனால் ஞானத்தைப் பாதிக்கத்தக்கனவாகா. (௨௭அ)

[அ௯௩] बाधितं दृश्यतामक्षैस्तेन बाधो न दृश्यते ।
जीवन्नाखुर्न मार्जारं हंति हन्यात्कथं मृतः ॥ २७९ ॥

(அ·கை.)

அப்படியானால் அவித்தைக்குப் பாதிக்கப்படுந்தன்மை இருக்கினும், அவ்வவித்தையின் காரியம் யாதென்று தோற்றுகின்றதோ, அதன் பாதம் சம்பவியாமையால் அவ்வவித்தையின் காரியத்தால் போதத்திற்குப் பாதமுண்டாகுமேயென்றுசங்கித்து, உபாதானமாகிய அவித்தை நிவிருத்தியாக

அவ்வவித்தையின் காரியமும் பாதிக்கப்பட்டதாகுதலின், அவ்வவித்தையின் காரியத்தாலும் போதத்தின் பாதமுண்டாகுமென்னும் சங்கை செய்யக் கூடியதன்றென்று கூறுகின்றார்:—

बाधितं अक्षैः दृश्यतां तेन बाधः न दृश्यते ।

(சு-ம்.)

பாதிக்கப்பட்ட அவித்தையின் காரியம் இந்திரியங்களால் தோற்றுக. அதனால் ஞானத்திற்குப் பாதம் காணப்படுகிறதில்லை.

(அ-கை)

அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

जीवन् आखुः मार्जारं न हंति । मृतः कथं हन्यात् ॥

(சு-ம்.)

ஜீவித்திருக்கும் எலி பூனையைக் கொல்லாதெனின் இறந்துபோன எலி எவ்வாறு கொல்லும்? (உஎகூ)

௯௦. துவைததரிசனத்தால் தத்துவபோதத்தின் பாதமின்மையில் திருஷ்டாந்தம்.

[அகூச] अपि पाशुपतास्त्रेण विद्धश्चेन्न ममार यः ।
निष्फलेषुविनुन्नांगो नंक्ष्यतीत्यत्र का प्रमा ॥ २८० ॥

(அ-கை.)

துவைததரிசனத்தால் தத்துவஞானத்திற்குப் பாதமின்மையைக் கைமுதிகநியாயத்தைக் காட்டுதலால் திடஞ்செய்தற்கு அதன் அநுகூலமான திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यः पाशुपतास्त्रेण विद्धः अपि न ममार चेत् । निष्फलेषु विनुन्नांगः नंक्ष्यति । इति अत्र का प्रमा ॥

(சு-ம்)

எவன் பாசுபதாஸ்திரத்தால் வேதிக்கப்பட்டும் இறக்கவில்லையோ, அவன் பயனற்ற பாணத்தினால் வேதிக்கப்பட்ட அங்கமுடையவனாய் நாசத்தை யடைவான் என்பதிற் பிரமாணம் யாது?

(வி-ம்.)

எந்தச் சாமர்த்தியமுள்ள புருஷன் பசுபதிசம்பந்தமுடைய பாசுபதாஸ்திரத்தால் வேதித்தலையடைந்தும் எப்போது இறக்கவில்லையோ, அப்

போது அவன் இரும்பினுற் செய்யப்பட்ட சவ்வியமாகிய பயனின்றிய ...ானத்தால் தேகபீடையினை அடைந்து நாசத்தை யடைவா னென்பதில் ப்ரமாணம் யாது? ஓர் பிரமாணமு மில்லை யென்பது பொருள். (உ௭0)

கக. திருஷ்டார்த்தத்தாற் சித்தித்த பொருளைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துதல்.

[௨௮௫] आदावविद्यया चित्रैः स्वकार्यैर्जृम्भमाणया ।
युध्वा बोधोऽजयत्सोऽद्य सुदृढो बाध्यतां कथं ॥ २८१ ॥

(அ·கை.)

திருஷ்டாந்தத்திற் சித்தித்த பொருளினைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துகின்றார்:—

आदौ चित्रैः स्वकार्यैः जृंभमाणया अविद्यया बोधः युद्ध्वा अजयत् । सः सुदृढः अद्य कथं बाध्यताम् ॥

(சு-ம்.)

ஆதியில் விசித்திரமாகிய தனது காரியங்களால் விருத்தியினையடைந்த அவித்தைபோடு ஞானம் யுத்தஞ்செய்து அதனை ஜயித்தது. அந்த ஞானம் திடமாய் இப்போது எப்படிப் பாதத்தையடையும்?

(வி-ம்.)

முதல் வித்தியாப்பியாசசமயத்தில் வெகுவிதமான பிரமாதாத் தன்மை, கர்த்தாத்தன்மை, போக்தாத்தன்மை முதலிய நன்காரியத்தால் விருத்தியினை யடைந்த அவித்தையோடு போதவடிவ ராஜா யுத்தஞ்செய்து அவ்வவித்தையினை ஜயித்தார். அப்போதமே அப்பியாசத்தின் திடத் தன்மையினுல் மிகத்திடமாகவே இப்போது அவித்தை நிவர்த்தியான காலத்துக் காரணமின்றிய அவ்வவித்தையின் காரியமாகிய அத்தியாசத்தி னுல் எவ்வாறு பாதத்தையடைவான்? எவ்விதத்தாலும் பாதத்தையடை யானென்பது பொருள். (உ௮க)

கஉ. சுலோகம் ௨௭௨-௨௮௫-ல் சம்பாதிக்கப்பட்ட அர்த்தத்தை உருவகத்தாற் சொல்லுதல்.

[௨௮௬] तिष्ठंस्त्वज्ञानतत्कार्यशवा बोधेन मारिताः ।
न भीतिर्बोधसम्राजः कीर्तिः प्रत्युत तस्य तैः ॥ २८२ ॥

(அ-கை.)

சம்பாதிக்கப்பட்ட அர்த்தத்தினைக் கேட்பவனது புத்தியில் பதிப்பிக் கும்பொருட்டு உருவகஞ் செய்து கூறுகின்றார்:—

बोधेन मारिताः अज्ञानतत्कार्यशवाः तिष्ठंतु । तैः बोधसम्राजः भीतिः न । प्रत्युत तस्य कीर्तिः ॥

(க-ம்.)

போதத்தாற் கொல்லப்பட்ட அஞ்ஞானமும் அஞ்ஞானகாரியமுமாகிய சவம் நிற்க. அதனால் போதவடிவ ராஜாவுக்குப் பயமில்லை. ஆனால் அவற்றால் அப்போதத்திற்கு மாறாக *எக. கீர்த்தி உண்டாகின்றது. ()

கக. சுலோகம் அகூ0-ற் கூறியதாய்ப் பிரகிருதத்திற் சித்தித்த பொருளினைக் கூறுதல்.

[அகூஎ] य एवमतिशूरेण बोधेन न वियुज्यते ।
प्रवृत्त्या वा निवृत्त्या वा देहादिगतयास्य किं ॥ २८३ ॥

(அ-கை.)

இவ்வாறு அதாவது போதத்திற்குப் பாதமின்மை உண்டாகுக. இதனால் பிரகிருதத்தில் அதாவது பிரவிருத்தி நிவிருத்திகளின் நியமமில்லாமை வடிவப் பிரசங்கத்தில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

यः एवं अतिशूरेण बोधेन न वियुज्यते । अस्य देहादिगतया प्रवृत्त्या वा निवृत्त्या वा किम् ॥

(சு-ம்.)

எந்தப் புருஷன் இவ்வித அதிசூரவீரமான போதத்தால் வியோகத்தை அடைகிறதில்லையோ, அவனுக்குத் தேகாதிகளிலுள்ள பிரவிருத்தியினலாவது நிவிருத்தியினலாவது இருப்பது என்னை?

(வி-ம்.)

எந்தப் புருஷன் அகூகூ-ற் கூறியவிதமான அதிசூரவீரனை அவித்தையையும் அதன்காரியத்தையும் கொல்லும் போதமாகிய பிரஹ்மாத்மஐக்கிய ஞானத்தால் ஒருபோதும் வியோகமுடையவனுகிற தில்லையோ அந்தப் புருஷனுக்குத் தேகாதிகளிலுள்ள பிரவிருத்தியினலாவது நிவிருத்தியினலாவது இருப்ப தென்னை? இஷ்டம் அநிஷ்டமென்னும் எதுவும் இல்லையென்பது பொருள். (உஅங)

---

* எக. இறந்து பூமியில் விழுந்த பிரபல வீரனைப் பார்த்துச் சூரவீரனுகிய ராஜாவிற்குக் கீர்த்தி உண்டாகின்றது. அதுபோல பாதிக்கப்பட்டுத் தோற்றுக்கொண்டிருக்கும் அஞ்ஞானத்தின் காரியங்களால் "என்னை இப்போதத்தின் பிரபாவம்" என்று முமுக்ஷுமுதலியோரிடத்து வர்ணித்தல்வாயிலாக போதவடிவராஜாவின் கீர்த்தி உண்டாகின்றது.

கச. அஞ்ஞானிக்கு யுக்தியோடு பிரவிருத்தியில் ஆக்கிரகம் தகுதியாதல்.

[அகூஅ] प्रवृत्तावाग्रहो न्याय्यो बोधहीनस्य सर्वथा ।
स्वर्गाय वाऽपवर्गाय यतितव्यं यतो नृभिः ॥ २८४ ॥

(அ-கை.)

அப்படியானால் ஞானிக்குப்போல அஞ்ஞானிக்கும் பிரவிருத்தியில் ஆக்கிரகம் பொருத்தமுடையதன்றென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

बोधहीनस्य सर्वथा प्रवृत्तौ आग्रहः न्याय्यः ॥

(சு-ம்.)

ஞானமின்றியவனுக்கு முற்றும் யாகசிரவணாதிவடிவப் பிரவிருத்தியில் ஆக்கிரகம் தகுதியாம்.

(அ-கை.)

அதில் காரணத்தைக் கூறுகின்றார்:—

यतः नृभिः स्वर्गाय वा अपवर्गाय यतितव्यम् ॥

(சு-ம்.)

எதனால் மனிதனுக்குச் சுவர்க்கமாகிய பரலோகத்தின்பொருட்டாவது அல்லது அபவர்க்கமாகிய மோக்ஷத்தின்பொருட்டாவது பிரயத்தனஞ் *எஉ. செய்யவேண்டியதாயிருக்கிறதோ அதனால். (உஅச)

கரு. கர்மிகளினிடையிலிருக்கும் ஞானியின் செய்கை.

[அகூக] विद्वांश्चेत्तादृशां मध्ये तिष्ठेत्तदनुरोधतः ।
कायेन मनसा वाचा करोत्येवाखिलाः क्रियाः ॥ २८५ ॥

(அ-கை.)

ஞானிக்கு ஆக்கிரகம் பொருத்தமுடையதன்றென்று கூறப்பட்டது.

---

* எஉ. "எதனால் ராத்திரியில் சுகமாக வசிக்கலாமோ அதனைப் பகற்காலத்தாற் செய்யவேண்டும். எதனால் மாரிகாலத்தால் சுகமாக வசிக்கலாமோ அதனை எட்டுமாதங்களால் செய்துகொள்ளவேண்டும். எதனால் விருத்தாவஸ்தையில் சுகமாக வசிக்கலாமோ அதனைப் பூர்வாவஸ்தையில் செய்துகொள்ளவேண்டும். எதனால் மரணத்தின் பின் சுகமாய் வசிக்கலாமோ அதனை ஜீவித்திருக்கும்வரையில் செய்துகொள்ளவேண்டும்." என்னும் மகாபாரதத்துள்ள விதுரவசனத்தினால் அஞ்ஞானி மனிதனுக்கு எதனால் இஷ்டவஸ்துவின் சாதனம் செய்தல் தகுதியோ அதனால் ஞானமின்றியவனுக்குப் பிரவிருத்தியில் ஆக்கிரகம் உசிதமாம்.

அப்போது கர்மிகளின் மத்தியிலிருக்கும் ஞானிக்குச் செய்யவேண்டிய தென்னையென்று கூறுகின்றார்:—

विद्वान् तादृशां मध्ये तिष्ठेत चेत् । तदनुरोधतः कायेन मनसा वाचा अखिलाः क्रियाः करोति एव ॥

(க-ம்.)

வித்வான் அத்தன்மைய புருஷர்களின் மத்தியி லிருப்பானாயின், அப்போது அவர்களை அநுசரித்துச் சரீரத்தினாலும் மனதினாலும் வாக்கினாலும் சர்வகிரியைகளையும் செய்யவே செய்கின்றான்.

(வி-ம்.)

வித்வான் எப்போது அத்தன்மைய கர்மி புருஷர்களின் மத்தியி லிருப்பானோ, அப்போது அவர்களை அநுசரித்துச் சரீரமுதலியவற்றால் சகலக் கிரியைகளையும் செய்யவே செய்கின்றான். அக்கர்மிகளை * எசு. நீக்குகிறதில்லை என்பது பொருள். (உ-அு)

கசு. தத்துவத்தை அறியும் விருப்புடையவர்களின் இடையிலிருக்கும் ஞானியின் கிருத்தியம்.

[அஎ0] एष मध्ये बुभुत्सूनां यदा तिष्ठेत्तदा पुनः ।
बोधायैषां क्रियाः सर्वा दूषयंस्त्यजतु स्वयम् ॥ २८६ ॥

(அ-கை.)

தத்துவத்தை அறியும் விருப்புடைய புருஷர்களின் நடுவிலுள்ள இதே ஞானியின் கிருத்தியத்தைக் கூறுகின்றார்:—

पुनः एषः बुभुत्सूनां मध्ये यदा तिष्ठेत् । तदा एषां बोधाय सर्वाः क्रियाः दूषयन् स्वयं त्यजतु ॥

(க-ம்.)

மீண்டும் இந்த ஞானி எப்போது ஞானவிருப்புடையவர்களின் மத்தியிலிருக்கின்றானோ, அப்போது அவர்களது போதத்தின்பொருட்டுச் சகலக் கிரியைகளையும் தூஷித்துத் தானும் விடுக.

---

* எசு. "அர்ச்சுனா! எப்படி அஞ்ஞானிபுருஷன் கர்மத்தில் பற்றுடையவனாய்ச் செய்கின்றானோ, அதுபோல உலகசங்கிரகஞ் செய்யவேயே விரும்பிய வித்துவான் பற்றின்றியவனாய்ச் (கர்த்திருத்திருத்தன்மைமுதலிய அபிமானம் அல்லது பலேச்சையி) செய்க. (உரு), கர்மத்திற் பற்றுடைய அஞ்ஞர்கள் எவர்களோ அவர்களது புத்தியின் பேதத்தை உண்டாக்குகிறதில்லை, ஆனால் தான் யோகமுடையவனாய்ச் செவ்வையாய் ஆசரித்துச் சர்வகர்மங்களையும் செய்விக்கவேண்டும்.(உசு)" என்னும் கீதையின் மூன்றாவது அத்தியாயத்துள்ள (உரு-உசு)வது சுலோகவடிவ வாக்கியத்தால் இவ்வர்த்தம் அறிவிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

இந்த வித்வான் எப்போது ஜிஞ்ஞாசுக்களின் மத்தியி லிருக்கின்றானோ, அப்போது அந்த ஜிஞ்ஞாசுக்களுக்குத் தத்துவஞானம் பிறத்தற் பொருட்டு அக்கிரியைகளைத் தாஷித்துத் தானும் விடுக. (உஅசு)

கஎ. ஞானிக்கு அசுக-அஎ௦ சுலோகத்திற் சொல்லியவிதமாகக் கர்த்தவ்வியத்தில் திருஷ்டாந்தம்.

[அஎக] अविद्वदनुसारेण वृत्तिर्बुद्धस्य युज्यते ।
स्तनंधयानुसारेण वर्तते तत्पिता यतः ॥ २८७ ॥

(அ-கை.)

வித்வான்களுக்கு இவ்வாறு ஏன் கர்த்தவ்விய மிருக்கின்றது எனக் கூறுகின்றார்:—

अविद्वदनुसारेण बुद्धस्य वृत्तिः युज्यते ॥

(சு-ம்.)

அவித்வான்களை அநுசரித்திருத்தல் ஞானிக்குத் தகுதியாம்.

(வி-ம்.)

ஞானிக்கு அஞ்ஞானிகளை அநுசரித்திருத்தல் உசிதமாம். ஏனெனின், ஞானி கிருபையுடையவனா யிருத்தலாலும் அவ்வஞ்ஞானிகள் கிருபைக்குப் பாத்திரா யிருத்தலாலும் என்க. இது தாற்பரியம்.

(அ-கை.)

இவ்வாறு எங்குக் கண்டிருக்கின்றா யெனக் கூறுகின்றார்:—

यतः स्तनंधयानुसारेण तत्पिता वर्तते ॥

(சு-ம்.)

எதனால் ஸ்தநம்பருகும் பாலகனை அநுசரித்து, அதன் பிதா இருக்கின்றானோ அதனாலென்க. (உஅஎ)

கஅ. திருஷ்டாந்தத்தில் பிதா பாலகனை அநுசரிக்குந்தன்மை.

[அஎஉ] अधिक्षिप्तस्ताडितो वा बालेन स्वपिता तदा ।
न क्लिश्नाति न कुप्येत बालं प्रत्युत लालयेत् ॥ २८८ ॥

(அ-கை.)

பிதா பாலகனை அநுசரித்திருத்தற்றன்மையினையே காட்டுகின்றார்:-

बालेन स्वपिता अधिक्षिप्तः वा ताडितः तदा न क्लिश्नाति । न कुप्येत प्रत्युत बालं लालयेत् ॥

(சு-ம்.)

பாலகனால் அவன் பிதா பூமியில் தள்ளப்படினும் அடிக்கப்படினும் பிதாவானவன் கிலேசத்தை யடைகிறதில்லை; கோபிக்கிறதுமில்லை; ஆனால் மாறாக அப்பாலகனைக் கொஞ்சுகிறான். (உஅஅ)

கக. திருஷ்டாந்தத்தில் ஞானி அஞ்ஞானியை அநுசரிக்குந்தன்மை.

[அஎக] निंदितः स्तूयमानो वा विद्वानज्ञैर्न निंदति ।
न स्तौति किंतु तेषां स्याद्यथा बोधस्तथाचरेत् ॥ २८९ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்திற் கூறிய அர்த்தத்தைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துகின்றார்:—

विद्वान् अज्ञैः निंदितः वा स्तूयमानः न निंदति । न स्तौति किंतु तेषां यथा बोधः स्यात् तथा आचरेत् ॥

(சு-ம்.)

வித்வான் அஞ்ஞானிகளால் நிந்திக்கப்படினும் துதிக்கப்படினும் தான் நிந்திக்கிறதுமில்லை; துதிக்கிறதுமில்லை; ஆனால் அவர்களுக்கு எவ்வாறு போத முண்டாகுமோ அவ்வாறு ஆசரிக்கின்றான்.

(வி-ம்.)

ஞானிபுருஷன் அஞ்ஞானிகளால் நிந்தையினையடையினும் ஸ்துதியினை யடையினும் அவர்களை நிந்திக்கிறதுமில்லை; துதிக்கிறதுமில்லை; ஆனால் அவ்வஞ்ஞானிகளுக்கு எவ்விதமாகப் போத முண்டாகுமோ அவ்விதமாக நடக்கின்றான். (உஅகூ)

உ௦. ஞானிக்கு அஎ௦-அஎக சுலோகங்களிற் கூறிய ஒழுக்கத்தில் நிமித்தம்.

[அஎ௦] येनायं नटनेनात्र बुद्ध्यते कार्यमेव तत् ।
अज्ञप्रबोधान्नैवान्यत्कार्यमस्त्यत्र तद्विदः ॥ २९० ॥

(அ-கை.)

இவ்வாறு அஞ்ஞானியை யநுசரித்து ஞானி ஆசரித்தலில் நிமித்தத்தைக் கூறுகின்றார்:—

अयं अत्र येन नटनेन बुद्ध्यते तत् कार्यं एव ॥

(சு-ம்.)

இவ்வஞ்ஞானி இவ்வுலகத்தில் எவ்வாசரணத்தால் போதத்தை யடைகின்றானோ அது செய்யவேண்டியதேயாம்.

(வி-ம்.)

இவ்வஞ்ஞானி இவ்வுலகத்தில் ஞானியினை எவ்விதமாக ஆசரித்துத் தத்துவஞானத்தை யடைவனோ அவ்வித ஆசரணம் ஞானிக்குச் செய்யத்தக்கதேயாம்.

(அ-கை.)

அப்படியானால் அப்போது அவ்விதமாகவே ஞானிக்கு வேறு கர்த்தவ்வியமும் கிடைப்பதாகுமே யெனக் கூறுகின்றார்:—

तद्विदः अत्र अज्ञप्रबोधात् अन्यत् कार्यं न एव अस्ति ॥

(சு-ம்.)

ஞானிக்கு இவ்வுலகத்தில் அஞ்ஞானிக்குப் போதிப்பதினும் வேறு கர்த்தவ்வியமே இல்லை.

(வி-ம்.)

எதனால் தத்துவஞானிக்கு இவ்வுலகத்தில் அஞ்ஞானிகளுக்கு உபதேசித்தலினும் வேறு கர்த்தவ்விய மின்றோ, அதனால் அவ்வஞ்ஞானியை அநுசரித்துத் தத்துவஉபதேசஞ் செய்யவேண்டியதா மென்பது பொருள்.

௨௧. சொல்லப்பட்டனவும் சொல்லப்படுவனவுமாகிய அர்த்தங்களின் தாற்பரியம்.

[௨௭௰] कृतकृत्यतया तृप्तः प्राप्तप्राप्यतया पुनः ।
तृप्यन्नेवं स्वमनसा मन्यतेऽसौ निरंतरम् ॥ २९१ ॥

(அ-கை.)

௨௱௯௰-௨௱௭௰ பரியந்தம் சொல்லப்பட்டனவும் ௨௱௭௰-முதல் ௨௱௯௰ பரியந்தம் சொல்லப்படுவனவுமாகிய பொருள்களிரண்டின் தாற்பரியத்தையும் கூறுகின்றார்:—

असौ कृतकृत्यतया तृप्तः पुनः प्राप्तप्राप्यतया तृप्यन् स्वमनसा निरंतरं एवं मन्यते ॥

(சு-ம்.)

இந்த ஞானி கிருதகிருத்தியத்தன்மையினால் திருப்தியடைந்து மீண்டும் பிராப்தப்பிராப்பியத்தன்மையினால் திருப்தனாய்த் தனது மனதினால் நிரந்தரம் இப்படி மதிக்கின்றான்.

(வி-ம்.)

இந்த வித்துவான் முன் அருசு-அஎச பரியந்தம் கூறியவிதமாகக் கிருதகிருத்தியத்தன்மையினால் அதாவது செய்யத்தக்கவற்றின் சமூகங்களை எவன் செய்திருக்கிறானோ, அவன் கிருதகிருத்திய னெனப்படுவன்; அவனது தன்மை கிருதகிருத்தியத்தன்மையெனப்படும்; அதனால் திருப்தியை யடைந்தவனாய் மேல் அஎசு-முதல்-அஅஉ பரியந்தம் சொல்லும்விதமான பிராப்தப்பிராப்பியத்தன்மையினால் அதாவது அடையத்தக்கனவாகிய ஞானாதிகளை அடைந்தவன் பிராப்தப்பிராப்பிய னெனப்படுவன்; அவனது தன்மை பிராப்தப்பிராப்பியத்தன்மையெனப்படும்; அதனால் திருப்தனாய்த் தனது மனதால் நிரந்தரம் இவ்வாறு மதிக்கின்றான். (உகூக)

ங. ஞானியின் பிராப்தப்பிராப்பியத்தன்மை அஎசு-அஅஉ.

க. ஞானமும் அதன் பயனுமாகிய நிமித்தங்களால் கிடைத்த திருப்தியைக் கூறுதல்.

[அஎசு] धन्योऽहं धन्योऽहं नित्यं स्वात्मानमंजसा वेद्मि ।
धन्योऽहं धन्योऽहं ब्रह्मानंदो विभाति मे स्पष्टम् ॥ २९२ ॥

(அ-கை.)

ஞானி என்ன மதிக்கின்றானெனக் கூறுகின்றார்:—

नित्यं स्वात्मानं अंजसा वेद्मि । अहं धन्यः अहं धन्यः ॥

(சு-ம்-)

எதனால் நித்தியமான தனது ஆத்மாவை நேரே அறிகின்றேனோ அதனால் யான் தந்நியன்! யான் தந்நியன்!

(வி-ம்.)

எதனால் நித்தியம் தனது ஆத்மாவை அதாவது தேசகாலமுதலியவற்றால் சிதைபடாத நிஜவடிவ பிரத்தியகாத்மாவை அபரோக்ஷமாயறிகின்றேனோ, அதனால் யான் தந்நியன்! தந்நியன்! இங்கு நித்தியமென்றது நிரந்தரம். தந்நிய னென்பது கிருதார்த்தன். இங்கு இருமுறை தந்நியனென்று கூறியது ஆதரவின்பொருட்டாம்.

(அ-கை.)

இவ்வாறு ஆத்மஞானத்தின் இலாபவடிவ நிமித்தத்தாலுண்டாகிய திருப்தியைக் கூறி அவ்வாத்மஞானத்தின் பயனாகிய பரமாநந்த ஆவிற்பாவத்தின் இலாபவடிவ நிமித்தத்தால் உண்டாகிய சந்தோஷத்தினைக் காட்டுகின்றார்:—

ब्रह्मानंदः मे स्पष्टं विभाति । अहं धन्यः । अहं धन्यः ॥

(சு-ம்.)

"பிரஹ்மானந்தம் எனக்குச் செவ்வையாய் விளங்குகின்றது. அதனால் யான் தந்நியன்! யான் தந்நியன்!"

(வி-ம்.)

எதனால் பிரஹ்மவடிவ ஆநந்தம் எனக்கு விளங்குமாறு ஸ்புரிக்கின்றதோ அதனால் நான் தந்நியன் என்பது பொருள். (உ௯உ)

உ. விரும்பப்படாததின் நிவிருத்தியால் ஞானிக்குத் திருப்தியைக் கூறுதல்.

[அஎஎ] धन्योऽहं धन्योऽहं दुःखं सांसारिकं न वीक्षेऽद्य ।
धन्योऽहं धन्योऽहं स्वस्याज्ञानं पलायितं क्वापि ॥ २९३ ॥

(அ-கை.)

இவ்வாறு இஷ்டமாகியதின் அடைவில் திருப்தியைக் காட்டி அநிஷ்டமாகிய அநர்த்தத்தின் நிவிருத்தியினாலும் ஞானி சந்தோஷத்தை அடைகின்றானென்று கூறுகின்றார்:—

अद्य सांसारिकं दुःखं न वीक्ष्ये । अहं धन्यः । अहं धन्यः ॥

(சு-ம்.)

"எதனால் இப்போது சம்சாரசம்பந்த துக்கத்தை யான் காண்கிறதில்லையோ அதனால் நான் தந்நியன்! நான் தந்நியன்!"

(வி-ம்.)

இப்போது துக்க சொரூபமான சம்சாரத்தினை யான் காண்கிறதில்லை. அதனால் நான் தந்நியன் என்பது பொருள்

(அ-கை.)

துக்கம் தோற்றாமையிற் காரணம் கூறுகின்றார்:—

स्वस्य अज्ञानं क्व अपि पलायितं । अहं धन्यः अहं धन्यः ॥

(சு-ம்.)

"எதனால் எனது அஞ்ஞானம் எங்கேனும் ஓடிப்போய்விட்டதோ அதனால் நான் தந்நியன்! நான் தந்நியன்!"

(வி-ம்.)

இவ்வாறு சொல்லுதலால் எதனால் கர்மவாசனைகளின் ஜாலமாகிய அதாவது ஆசிரயமாகிய அஞ்ஞானம் எங்கேனும் ஓடிப்போய்விட்டதோ,

அதனால் கர்மவாசனைகளாற்றோன்றிய சம்சாரதுக்கமின்மையின் யான் கிரு தார்த்தனென்பது பொருள். (உகூங)

௩. அஞ்ஞானநிவிருத்தியின் பயனைக் கூறுதல்.

[அஎஅ] धन्योऽहं धन्योऽहं कर्तव्यं मे न विद्यते किंचित् ।
धन्योऽहं धन्योऽहं प्राप्तव्यं सर्वमद्य संपन्नम् ॥ २९४ ॥

(அ-கை.)

அஞ்ஞானநிவிருத்தியின் பயனாகிய செய்யவேண்டியது செய்யப் பட்டதென்னும் கிருதகிருத்தியத்தன்மையினையும், அடையவேண்டியது அடையப்பட்டதென்னும் பிராப்தப்பிராப்யத்தன்மையினையும் காட்டு கின்றார்:—

मे किंचित् कर्तव्यं न विद्यते । अहं धन्यः । अहं धन्यः । प्राप्तव्यं सर्वं अद्य संपन्नं । अहं धन्यः अहं धन्यः ॥

(சு-ம்.)

"எனக்குச் செய்ய வேண்டியது சிறிது மில்லை. அதனால் நான் தந்நி யன்! நான் தந்நியன்! அடையவேண்டுவனவெல்லா மடைந்தேன். அதனால் நான் தந்நியன்! நான் தந்நியன்!" (உகூச)

௪. சுலோகம் அகூகூ-அஎஅ ல் கூறிய திருப்தியின் நிரங்குசத்தன்மை.

[அஎகூ] धन्योऽहं धन्योऽहं तृप्तेर्मे कोपमा भवेल्लोके ।
धन्योऽहं धन्योऽहं धन्यो धन्यः पुनः पुनर्धन्यः ॥ २९५ ॥

(அ-கை.)

இப்போது கிருத்கியத்தன்மை முதலியவற்றா லுண்டாகிய திருப்தி யின் நிரதிசயத்தன்மையினை அதாவது மற்றெல்லாத் திருப்திகளினும் அதி கமாதற்றன்மையினைக் கூறுகின்றார்:—

अहं धन्यः । अहं धन्यः मे तृप्तेः लोके का उपमा भवेत् ॥

(சு-ம்.)

"தந்நியன் யான்! தந்நியன் யான்! எனது திருப்திக்கு உலகத்தில் எது நிகராகும்? எதுவுமாகாது."

(அ-கை.)

இதன்பின் சொல்லத்தகுந்தது தோற்றமையால் திருப்தியே நாற்பு றத்தாலும் விளங்குகின்றதென்று காட்டுகின்றார்.—

अहं धन्यः । अहं धन्यः । धन्यः धन्यः पुनः पुनः धन्यः ॥

(சு-ம்.)

"தந்நியன் யான்! தந்நியன் யான்! தந்நியன் யான்! தந்நியன் யான் மீண்டு மீண்டும் தந்நியன் யான்!" (உகூ௫)

௫. சுலோகம் அஎ௬-அஎகூ-ற் கூறிய பலத்தின் ஏதுவாகிய புண்ணியத்தினையும் அதனைச் செய்த தன்னையும் ஸ்மரித்தலால் ஞானிக்குத் திருப்தியுண்டாகுதல்.

[அஅ0] अहो पुण्यमहो पुण्यं फलितं फलितं दृढम् ।
अस्य पुण्यस्य संपत्तेरहो वयमहो वयम् ॥ २९६ ॥

(அ-கை.)

இவ்வெல்லா ஞானநிவ்ருத்தி பயனுக்கும் காரணமாகிய புண்ணிய சமூகத்தின் பரிபாகத்தினைப் பின் ஸ்மரித்து ஞானி திருப்தியடைகின்றானென்று கூறுகின்றார்:—

पुण्यं अहो । पुण्यं अहो । दृढं फलितं फलितम् ॥

(சு-ம்.)

"என்னுடைய புண்ணியம் அகோ! எல்லாவற்றின் மேலானதாம். புண்ணியம் அகோ! திடமாய்ப் பலித்தது! பலித்தது!"

(அ-கை.)

இவ்விதமான புண்ணியத்தைச் சம்பாதித்த தன்னை நினைந்து திருப்தியடைகின்றான்:—

अस्य पुण्यस्य संपत्तेः वयं अहो वयं अहो ॥

(சு-ம்.)

"இப்புண்ணியத்தைச் சம்பாதித்தலால் யாம் அகோ! யாம் அகோ! அதாவது சர்வோத்தமமாயிருக்கின்றேம்." (உகூகா)

சூ. நன்ஞானத்திற்கு ஏதுவாகிய சாஸ்திரம், குரு, சாஸ்திரஜந்நியஞானம், சுகம் என்பவற்றை வியந்தலால் ஞானிக்குத் திருப்தியுண்டாகுதல்.

[அஅக] अहो शास्त्रमहो शास्त्रमहो गुरुरहो गुरुः ।
अहो ज्ञानमहो ज्ञानमहो सुखमहो सुखम् ॥ २९७ ॥

(அ-கை.)

இப்போது நன்ஞானத்திற்குச் சாதனமாகிய வேதாந்தசாஸ்திரத்தினையும் அதன் உபதேசஞ்செய்யும் ஆசாரியனையும் ஸ்மரித்துத் திருப்தியையடைகின்றான்:—

शास्त्रं अहो । शास्त्रं अहो । अहो गुरुः अहो गुरुः ॥

(சு-ம்.)

சாஸ்திரம் அகோ! சாஸ்திரம் அகோ! அதாவது சர்வசாஸ்திரங்களின் சிரோமணியாம். குருவானவர் அகோ! குருவானவர் அகோ! அதாவது எல்லோராலும் பூசிக்கப்படுபவர்.

(அ-கை.)

மீண்டும் சாஸ்திரஜந்நியஞானத்தினையும் அதன் சுகத்தினையும் ஸ்மரித்து ஞானி சந்தோஷத்தை யடைகின்றான் :—

ज्ञानं अहो ज्ञानं अहो । सुखं अहो सुखं अहो ॥

(சு-ம்.)

ஞானம் அகோ! ஞானம் அகோ! அதாவது சர்வசாஸ்திரங்களின் பயன்வடிவினதாம். சுகம் அகோ! சுகம் அகோ! அதாவது நிரதிசயமாம்.

எ. திருப்திதீபநூலினது அப்பியாசத்தின் பயன்.

[அஅஉ.] तृप्तिदीपमिमं नित्यं येऽनुसंदधते बुधाः ।
ब्रह्मानंदे निमज्जंतस्ते तृप्यंति निरंतरम् ॥ २९८ ॥

(அ-கை.)

திருப்திதீபநூலினது அப்பியாசத்தின் பயனைக் கூறுகின்றார் :—

ये बुधाः इमं तृप्तिदीपं नित्यं अनुसंदधते । ते ब्रह्मानंदे निमज्जंतः निरंतरं तृप्यंति ॥

(சு-ம்.)

எந்தச் சுத்தபுத்தியுடைய புருஷர்கள் இந்தத் திருப்திதீபத்தினை நித்தியம் அநுசந்தானஞ் செய்கின்றார்களோ அவர்கள் பிரஹ்மாநந்தத்தில் மூழ்கியவர்களாய் நிரந்தரம் திருப்தியை யடைகின்றனர். (உகூஅ)

திருப்திதீபமென்னும்

ஏழாம் பிரகரணம்

முடிந்தது.

௮

ஓம்தத்ஸத்பிரமணேநம:

# ஸ்ரீ பஞ்சதசி.

---

## கூடஸ்ததீபம்.

### எட்டாம்பிரகரணம்.

க. தேகத்தின் வெளியிலும் உள்ளிலும் சிதாபாசனை பிரஹ்மகூடஸ்தர்களினின்றும் வேறுபடுத்தி நிரூபித்தல் ௮௮௫-௯௨௩.

க. 'துவம்' பதத்தின் இலக்ஷியவாச்சியங்களைச் சொல்லுதலோடு தேகத்தின் வெளியில் சிதாபாசனுக்கும் பிரஹ்மத்திற்குமுள்ள பேதங்கூறுதல். ௮௮௫-௮௯௮.

க. திருஷ்டாந்தத்தோடு துவம்பதத்தின் வாச்சியலக்ஷியங்களைக் கூறுதல்

[௮௮௫] स्वादित्यदीपिते कुड्ये दर्पणादित्यदीप्तिवत् ।
कूटस्थभासितो देहो धीस्थजीवेन भास्यते ॥ १ ॥

(அ-கை.)

இச்சம்சாரத்தில் முமுக்ஷுபுருஷர்களுக்கு மோக்ஷத்தின் சாதனமாகிய பிரஹ்மாத்ம ஐக்கியஞானம் 'துவம்' பதார்த்தத்தின் சோதனபூர்வகமா யிருத்தலின் 'தத்துவமசி' மகாவாக்கியத்துள்ள 'துவம்' பதார்த்தத்தின் சோதனத்தைக் குறித்துக் கூடஸ்ததீபமென்னும் நூலினை ஆரம்பிக்கின்றவராகிய ஆசிரியர் இக்கூடஸ்ததீபநூலானது வேதாந்தசாஸ்திரத்தின் பிரகரணமா யிருத்தலின் அவ்வேதாந்தசாஸ்திரத்தின் விஷயமுதலிய நான்கு அநுபந்தங்களால் இதற்கு அநுபந்தமுடைமை சித்திக்கின்றதென்னும் அபிப்பிராயத்தால் 'துவம்' பதத்தின் இலக்ஷியவாச்சியவடிவ கூடஸ்தஜீவர்களை திருஷ்டாந்தத்தோடு வேறுபடுத்திக் கூறுகின்றார்:—

स्वादित्यदीपिते कुड्ये दर्पणादित्यदीप्तिवत कूटस्थभासितः देहः धीस्थजीवेन भास्यते ॥

(சு-ம்.)

ஆகாயத்துள்ள ஆதித்தியனால் பிரகாசிக்கப்படும் சுவரில் கண்ணாடியிலுள்ள ஆதித்தனது பிரகாசத்தினைப்போலக் கூடஸ்தனால் விளங்கப்படும் தேகம் புத்தியிலுள்ள ஜீவனால் விளங்கப்படுகின்றது.

(வி-ம்.)

ஆகாயத்தில் பிரசித்தமாகிய சூரியனிருக்கிறது. அதனல் இங்கு அதன் சம்பந்தியான ஆலோகம் அதாவது பிரகாசம் அறியப்படுகிறது. அவ்வாகாசத்துள்ள சூரியனது பிரகாசத்தால் பிரகாசிக்கப்படும் சுவரில் கண்ணுடியிலுள்ள ஆதித்தனது பிரகாசத்தினைப்போல அதாவது அநேகம் கண்ணுடிகளில் விழுந்து பின் திரும்பிச் சுவரோடு சம்பந்தத்தை யடைந்த ஆதித்தகிரணங்களால் சுவர் பிரகாசிப்பதுபோல அவிகாரிசைதந்நியமாகிய கூடஸ்தனல் பிரகாசிக்கப்படும் தேகம் புத்தியிலுள்ள சிதாபாசவடிவ ஜீவனல் பிரகாசிக்கப்படுவதாகின்றது. இவ்வாறு சொல்லுதலால் சாமாந்நியமாகவும் விசேஷமாகவும் சுவரினைப் பிரகாசிக்கும் சூரியனது இரண்டு பிரகாசங்களைப்போலத் தேகத்தினைச் சாமாந்நியமாகவும் விசேஷமாகவும் பிரகாசிக்கும் இரண்டு சைதந்நியங்களுள என்னும் பொருள் பிரதிஞ்ஞை செய்யப்பட்டது. (க)

உ. முதல் சுலோகத்திற் கூறிய திருஷ்டாந்தத்தின் வர்ணநம்.

[அஅச] अनेकदर्पणाऽऽदित्यदीप्तीनां बहुसंधिषु ।
इतरा व्यज्यते तासामभावेऽपि प्रकाशते ॥ २ ॥

(அ-கை.)

அப்படியானல் அச்சுவரில் கண்ணுடிச்சூரியப்பிரகாசத்தின் வேருக ஆகாயச்சூரியனது பிரகாசம் காணப்படவில்லையே யென்ருசங்கித்து, அக் கண்ணுடிப்பிரகாசத்தினின்றும் அவ்வாகாயச்சூரியனது பிரபையினைப் பிரித்துக் காட்டுகின்ருர்:—

अनेकदर्पणादित्यदीप्तीनां बहुसंधिषु इतरा व्यज्यते । तासां अभावे अपि प्रकाशते ॥

(சு-ம்.)

அநேக கண்ணுடிகளிலுள்ள சூரியனது பிரகாசங்களின் அநேக சந்திகளில் அந்நியமான சூரியனது பிரபை வெளிப்படையாய்க் காணப்படுகின்றது. அது அவை இல்லாதபோதும் பிரகாசிக்கின்றது.

(வி-ம்.)

அநேக கண்ணுடிகளாற் ருேன்றியனவாய்ச் சுவரில் அங்கங்கு வட்டவடிவினவாய் எவ்விசேஷப்பிரபைகள் காணப்படுகின்றனவோ, அவற்றின் சந்தியாகிய இடையில் மற்ருேர் சாமாந்நியப்பிரகாசவடிவ ஆகாயத்துள்ள சூரியனது பிரபை வெளிப்படையாகத் தோற்றுகின்றது. அவ்வாகாயத

துள்ள சூரியனது பிரபை அக்கண்ணாடியினின்றுந்தோன்றிய அநேகப்பிரபைகள் இல்லாதபோது அதாவது கண்ணாடியின் நாசமுதலியவற்றால் அவை இல்லாதபோது தான் சுவர்முழுவதினும் பிரகாசிக்கின்றது. (உ)

௩ திருஷ்டாந்தத்தில் சித்தித்த பொருளினைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துதல்.

[அஅ௩] चिदाभासविशिष्टानां तथाऽनेकधियामसौ ।
संधिं धियामभावं च भासयन्प्रविविच्यताम् ॥ ३ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்தில் சித்தித்த பொருளினைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துகின்றார்:—

तथा चिदाभासविशिष्टानां अनेकधियां संधिं च धियां अभावं भासयन् असौ प्रविविच्यताम् ॥

(சு-ம்.)

அவ்வாறு சிதாபாசவிசிஷ்ட அநேகபுத்திவிருத்திகளின் சந்தியினையும் புத்திவிருத்திகளின் அபாவத்தினையும் பிரகாசிக்கும் இது கூடஸ்தன் என்று விவேகிக்கவேண்டியது.

(வி-ம்)

அவ்வாறு அந்தத் தர்ப்பணத்தில் கூறியபிரகாரமாகவே சிதாபாசவிசிஷ்ட அதாவது சேதனப்பிரதிபிம்பத்தோடுகூடிய அநேக கடாதிஞானத்தின் வாச்சியமான புத்திவிருத்திகளின் * க. சந்திகளை ஜாக்கிரமுதலியவற்றிலும் அதே புத்திவிருத்திகளின் அபாவத்தினைச் சுழுத்திமுதலியவற்றிலும் பிரகாசிக்கிறதாய் இக்கூடஸ்தன் அதாவது சாமானியசேதனம் நிலைத்திருக்கின்றது என்று விவேசனஞ் செய்தல்வேண்டும் அதாவது அச்சிதாபாசனோடுகூடிய புத்திவிருத்திகளினின்றும் வேறுபடுத்தி அறியவேண்டுமென்பது பொருள். (௩)

*க. வெளியில் கடாகாரவிருத்தி நஷ்டமாய்ப் படாகாரவிருத்தி உண்டாகாதிருக்க அதன் மத்தியிலிருக்கும் அவகாசம் எதுவோ அது அவ்விருத்திகளின் சந்தியாம். உள்ளே இச்சைவடிவ விருத்தி நஷ்டமாய், குரோதவடிவவிருத்தி உண்டாகாதிருக்க அதன் இடையிலிருக்கும் அவகாசம் எதுவோ அது சந்தியாம். இது ஜாக்கிராவஸ்தையின் முடிவும் சொப்பனம் அல்லது சுழுத்தியின் ஆதியும், சொப்பனத்தின் அந்தமும் சுழுத்தி அல்லது ஜாக்கிரத்தின் ஆதியும், சுழுத்தியின் அந்தமும் ஜாக்கிரம் அல்லது சொப்பனத்தின் ஆதியுமாகிய இவற்றிலுள்ள அவகாசவடிவ சந்திகளின் உபலக்ஷணமாம். இச்சந்திகளில் விருத்தியின் ஸ்புரணமின்மையால் சிதாபாசனது இன்மை இருக்கின்றதாகலின் கேவலம்சாமானியசைதன்னியவடிவ கூடஸ்தனே பிரகாசிக்கின்றது.

௪. சிதாபாசனால் கடமும் பிரஹ்மத்தால் கடத்தின் ஞாதத்தன்மைவடிவ தர்மமும் பிரகாசிக்கப்படுந்தன்மை.

[அஅ௬] घटैकाकारधीस्था चिद्धटमेवावभासयेत् ।
घटस्य ज्ञातता ब्रह्मचैतन्येनावभासते ॥ ४ ॥

(அ-கை.)

இப்போது தேகத்தினுள் கூடஸ்தசிதாபாசர்களின் பேதத்தைக் காட்டுதற்பொருட்டுத் தேகத்திற்கு வெளியிலும் சிதாபாசப்பிரஹ்மங்களைப் பிரித்துக்காட்டுகின்றார் :—

घटैकाकारधीस्था चित् घटं एव अवभासयेत् । घटस्य ज्ञातता ब्रह्मचैतन्येन अवभासते ॥

(சு-ம்.)

கடத்தின் சமானவடிவமாகிய புத்தியிலுள்ள சேதனம் கடத்தினையே பிரகாசிக்கின்றது. கடத்தின் ஞாதத்தன்மை பிரஹ்மசைதந்நியத்தினால் விளங்குகின்றது.

(வி-ம்.)

கடத்தின் சமானவடிவம்போன்ற வடிவம் எதற்கிருக்கின்றதோ அப்படிப்பட்ட புத்தியிலிருக்கும் சிதாபாசன் ' இது கடம் ' என்று கடத்தினையே பிரகாசிக்கின்றது. அந்தக் கடத்தின் ஞாதத்தன்மையாகிய அதாவது ஞானத்திற்கு விஷயமாந்தன்மையாகிய அவ்வடிவ தர்மம் எது கடத்தை யறிந்தேனென்னும் வியவகாரத்திற்கும் ஏதுவாயிருக்கிறதோ, அது கடத்தின் கற்பனைக்கு அதிஷ்டான சாதனவடிவப் பிரஹ்மசைதந்நியத்தால் பிரகாசிக்கப்படுவதாகின்றது என்பது பொருள். (௪)

௫. கடத்தின் ஞாதத்தன்மை அஞ்ஞாதத்தன்மைகளின் பேதத்தின் பொருட்டு புத்தியின் உபயோகம்.

[அஅஎ] अज्ञातत्वेन ज्ञातोऽयं घटो बुद्ध्युदयात्पुरा ।
ब्रह्मणैवोपरिष्टात् ज्ञातत्वेनेत्यसौ भिदा ॥ ५ ॥

(அ-கை.)

அப்படியானால் ஞாதத்தன்மையைப் பிரகாசிக்கும் சைதந்நியத்தினாலேயே கடத்தின் பிரதீதி சம்பவித்தலால் புத்தி எதன்பொருட்டாமென்றுசங்கித்துப் புத்தி கடத்தின் ஞாதத்தன்மை அஞ்ஞாதத்தன்மையின் பேதம் சித்திக்கும்பொருட்டாம் என்று கூறுகின்றார்:—

बुद्ध्युदयात् पुरा अयं घटः ब्रह्मणा एव अज्ञातत्वेन ज्ञातः उपरिष्टात् तु ज्ञातत्वेन इति असौ भिदा ॥

(க-ம்.)

புத்தியின் உதயத்திற்குமுன் இக்கடம் பிரஹ்மத்திஞலேயே அஞ்ஞாதத்தன்மையாக அறியப்பட்டது, பின்னரோ ஞாதத்தன்மையிஞலறியப்பட்டது என்னு மிதுவே பேதமாம்.

(வி-ம்.)

கடவடிவமாகிய புத்தியின் உற்பத்திக்குமுன் இக்கடம் பிரஹ்மசைதந்நியத்திஞலேயே "கடத்தை யான் அறியவில்லை" என்று அஞ்ஞாதத்தன்மையாகப் பிரகாசிக்கப்படுவதாகின்றது. புத்தியின் உற்பத்திக்குப்பின் "கடத்தை யான் அறிகின்றேன்" என்று ஞாதத்தன்மையாக இக்கடம் பிரஹ்மசைதந்நியத்திஞலேயே பிரகாசிக்கப்படுவதாகின்றது. புத்தி ஆகாமையிலும் ஆதலிலும் இவ்வளவே பேதம் பிறிதில்லை *உ. என்பது பொருள். (ரு)

க. ஒரு கடத்தினது ஞாதத்தன்மை அஞ்ஞாதத்தன்மைகளின் நிமித்தம் ஞான அஞ்ஞானங்களின் சொரூபமெனல்.

[அஅஅ] चिदाभासांतधीवृत्तिर्ज्ञानं लोहांतकुंतवत् ।
जाड्यमज्ञानमेताभ्यां व्याप्तः कुंभो द्विधोच्यते ॥ ६ ॥

(அ-கை.)

அப்படியாஞல் ஒரேகடத்திற்கு ஞாதத்தன்மை அஞ்ஞாதத்தன்மைச் சொரூபமாகிய இரண்டு வடிவம் எப்படிச் சம்பவிக்குமென்றுசங்கித்து,அவ்விரண்டு வடிவங்களின் போதனத்தின் பொருட்டு ஞாதத்தன்மை அஞ்ஞாதத்தன்மைகளின் நிமித்தமாகிய ஞான அஞ்ஞானங்களின் சொரூபத்தை முதலில் காட்டுகின்றூர்:—

चिदाभासांतधीवृत्तिः लोहांतकुंतवत् ज्ञानं । जाड्यं अज्ञानं एताभ्यां व्याप्तः कुंभः द्विधा उच्यते ॥

---

* உ. எப்படி அஞ்ஞானவடிவ விசேஷணவிசிஷ்ட "அஞ்ஞாதகடம் அல்லது மேருமுதலியவற்றினை யான் அறியேன்" என்று பிரஹ்மசைதந்நியம் பிரகாசிக்கின்றதோ அதுபோல ஞானவடிவ விசேஷணத்தால் விசிட்டமான "அறியப்பட்ட கட முதலியவற்றினை யான் அறிகின்றேன்." என்று பிரஹ்மசைதந்நியமே பிரகாசிக்கின்றது. ஆதலால் புத்தி உதயமாகாமையால் கடத்தில் அஞ்ஞாதத்தன்மை யிருக்கின்றது. புத்தியின் உதயத்தால் கடத்தில் அஞ்ஞாதத்தன்மை நஷ்டமாய் ஞாதத்தன்மை தோற்றுகின்றது. இது புத்தியின் ஆதல் ஆகாமையிஞலாகிய பேதம்; பிறிதன்று.

(சு-ம்.)

லோகாந்தகுந்தத்தினைப்போல எதனுடைய அந்தத்தில் சிதாபாச னிருக்கின்றானோ அப்படிப்பட்ட புத்திவிருத்தி ஞானமாம்; ஜடத் தன்மை அஞ்ஞானமாம். இவ்விரண்டினாலும் வியாபிக்கப்பட்ட கும்பம் இருவகையாகச் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

சேதனத்தின் பிரதிபிம்பமாகிய சிதாபாசன் எதனுடைய அந்தத்தி லிருக்கின்றதோ அப்படிப்பட்ட புத்திவிருத்தி ஞானமெனப்படுகின்றது; "போதத்தில் சாக்ஷாத் புத்தி இருக்கின்றது" என்று ஆசாரியர்களால் சொல்லப்பட்டிருத்தலால். அதில் திருஷ்டாந்தம்:— இரும்பினாற் செய்யப் பட்ட பயன் எதன் நுனிப்பாகத்தி லிருக்கிறதோ அப்படிப்பட்ட ஈட்டி என் னும் பெயரையுடைய சஸ்திரவிசேஷத்தினைப்போல. ஜடத்தன்மையா கிய தானாகவே விளக்கமின்றிய தன்மை எதுவோ அது அஞ்ஞானமெனப் படுகின்றது. இந்த ஞானஞ்ஞானங்களிரண்டினாலும் கிரமமாக முழுவ தும் சம்பந்தத்தை யடைந்த கடம் ஞாதமும் அஞ்ஞாதமுமென்று இருவ கையாகச் சொல்லப்படுகின்றதென்பது பொருள். (சு)

எ. அஞ்ஞாத கடத்தினைப்போல ஞாதகடமும் பிரஹ்மத்தினால் பிரகாசிக்கப் படுவதாதல்.

[அஅகூ] अज्ञातो ब्रह्मणा भास्यो ज्ञातः कुंभस्तथा न किम् ।
ज्ञातत्वजननेनैव चिदाभासपरिक्षयः ॥ ७ ॥

(அ-கை.)

அப்படியானால் அறியப்படாத கடம் அஞ்ஞானத்தால் வியாபிக்கப் பட்டதாயிருத்தலின் பிரஹ்மத்தினால் விளங்கத்தக்கதன்மை அதற்கிருக் குக. ஞானத்தினால் வியாபிக்கப்பட்ட ஞாதகடத்திற்கு எதனால் பிரஹ்ம சைதந்யத்தால் விளங்கத்தக்கதன்மை யிருக்கின்றது? என்றாசங்கித்து, அஞ்ஞானம் கடத்தில் அஞ்ஞாதத்தன்மைவடிவ தர்மத்தை உண்டுபண் ணுதலால் கிருதார்த்தமாதல்போல ஞானமும் ஞாதத்தன்மைவடிவ தர் மத்தை யுண்டுபண்ணுதல் மாத்திரத்தால் கிருதார்த்தமாயிருத்தலால் அஞ் ஞாதகும்பத்தினைப்போல ஞாதகும்பத்திற்கும் பிரஹ்மத்தால் விளங்கத் தக்கதன்மை யுண்டென்று கூறுகின்றார்:—

अज्ञातः ब्रह्मणा भास्यः तथा ज्ञातः कुंभः न किम् ॥

(சு-ம்.)

எப்படி அஞ்ஞாதகும்பம் பிரஹ்மத்தினால் விளங்கத்தக்கதா யிருக் கின்றதோ அதுபோல ஞாதகும்பமும் ஏன் விளங்கத்தக்கதாகாது?

(வி-ம்.)

எப்படி அஞ்ஞாதகடம் பிரஹ்மத்தினால் விளங்கத்தக்கதாயிருக்கின்றதோ அதுபோல ஞாதகடம் பிரஹ்மத்தால் ஏன் விளங்கத்தக்கதாகாது? விளங்கத்தக்கதேயாம்.

(அ-கை.)

ஞாதகடம் எக்காரணத்தால் பிரஹ்மத்தால் விளங்கத்தக்கதாமெனக் கூறுகின்றார்:—

ज्ञातत्वजननेन एव चिदाभासपरिक्षयः ॥

(சு-ம்.)

எதனால் ஞாதத்தன்மையை உண்டுபண்ணுதல்மாத்திரத்தினாலேயே சிதாபாசனுக்குக் கிருதார்த்தத்தன்மை யுண்டாகின்றதோ அதனால் ஞாதகடமும் பிரஹ்மத்தால் விளங்குகின்றது. (எ)

அ. சிதாபாசனின்றிய புத்தியினால் கடத்தின் ஞாதத்தன்மையினை உண்டுபண்ணுதல் சம்பவியாது.

[அசுo] आभासहीनया बुद्ध्या ज्ञातत्वं नैव जन्यते ।
तादृग्बुद्धेर्विशेषः को मृदादेः स्याद्विकारिणः ॥ ८ ॥

(அ-கை.)

அப்படியானால் அஞ்ஞாதத்தன்மை யுண்டாதற்பொருட்டு அஞ்ஞானத்தினைப்போல ஞாதத்தன்மை யுண்டாதற்பொருட்டும் புத்தியே பூரணமாம். இச்சிதாபாசனால் என்ன பிரயோஜனம்? என்றுசங்கித்து, சிதாபாசனின்றிய புத்தி கடமுதலியவற்றினைப்போல ஜடரூபமாயிருத்தலால் ஞாதத்தன்மையை யுண்டுபண்ணுதல் சம்பவியாது என்று கூறுகின்றார்:—

आभासहीनया बुद्ध्या ज्ञातत्वं न एव जन्यते तादृग्बुद्धेः विकारिणः मृदादेः कः विशेषः स्यात् ॥

(சு-ம்.)

ஆபாசனின்றிய புத்தியினால் ஞாதத்தன்மையின் ஜனனமே யுண்டாகிறதில்லை. ஆதலால் அத்தன்மைய சிதாபாசனின்றிய புத்திக்கும் விகாரியாகிய அதாவது பூச்சுவடிவ பரிணாமத்தினையடைந்த மிருத்திகைமுதலியவற்றிற்கும் என்ன பேதமாகும்? ஒன்று மாகாது. (அ)

க. சிதாபாசனின்றிய புத்தியால் வியாபிக்கப்பட்ட கடத்தின் ஞாதத்தன்மை யினின்மையில் திருஷ்டாந்தம்.

[அ௯௧] ज्ञात इत्युच्यते कुंभो मृदा लिप्तो न कुत्रचित् ।
धीमात्रव्याप्तकुंभस्य ज्ञातत्वं नेष्यते तथा ॥ ९ ॥

(அ-கை.)

சிதாபாசனின்றிய புத்தியினால் வியாபிக்கப்பட்ட கடத்தின் ஞாதத் தன்மையின் அபாவத்தினைத் திருஷ்டாந்தத்தைக் காட்டுதலால் விளக்கு கின்றார்:—

कुत्रचित् मृदा लिप्तः कुंभः ज्ञातः इति न उच्यते तथा धीमात्रव्याप्तकुंभस्य ज्ञातत्वं न इष्यते ॥

(சு-ம்.)

ஓரிடத்தும் மண்ணினாற் பூசப்பட்ட கடம் அறியப்பட்டதென்று சொல்லப்படுகிறதில்லை. அதுபோலப் புத்திமாத்திரத்தால் வியாபிக்கப்பட்ட கடத்தின் ஞாதத்தன்மையும் அங்கீகரிக்கப்படுகிறதில்லை.

(வி-ம்)

உலகத்தில் ஓரிடத்திலும் கடமானது வெண்மை கருப்புவடிவ மண்ணினாற் பூச்சினையடைந்து அறியப்பட்டதென்று சொல்லப்படுகிறதில்லை. அது போலச் சிதாபாசனின்றிய புத்தியினால் வியாபிக்கப்பட்ட கடத்தின் ஞாதத் தன்மையும் அங்கீகரிக்கப்படுகிறதில்லையென்பது தாற்பரியம். (௯)

௧௦. பலித்த பொருள்.

[அ௯௨] ज्ञातत्वं नाम कुंभे तच्चिदाभासफलोदयः ।
न फलं ब्रह्मचैतन्यं मानात्प्रागपि सत्वतः ॥ १० ॥

(அ-கை.)

பலித்த பொருளினைக் கூறுகின்றார்:—

तत् कुंभे चिदाभासफलोदयः ज्ञातत्वं नाम ॥

(சு-ம்.)

அதனால் கடத்தில் சிதாபாசவடிவ பலத்தின் உதயமே ஞாதத்தன் மையாதல் பிரசித்தம்.

(வி-ம்.)

எதனால் கேவலபுத்திக்கு ஞாதத்தன்மையை யுண்டுபண்ணுதலில்

சாமர்த்தியமின்மையிருக்கின்றதோ, அதனால் கடத்தில் சிதாபாசவடிவபலத்தின் உற்பத்தியே ஞாதத்தன்மையாவது பிரசித்த மென்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானல் அப்போதும் பிரஹ்மசைதந்நியவடிவமே பலமாயிருத்தலால் சிதாபாசன் கற்பிக்கத்தக்கவனல்ல னென்ருசங்கித்துக் கூறுகின்ருர்:—

ब्रह्मचैतन्यं फलं न ॥

(சு-ம்.)

பிரஹ்மசைதந்நியம் பலமன்று.

(வி-ம்.)

பிரஹ்மசைதந்நியம் கடமுதலியவற்றை விளக்குதலாகிய பலமன்று.

(அ-கை.)

பிரஹ்மசைதந்நியம் எதனுற் பலமன்றெனக் கூறுகின்ருர்:—

मानात् प्राक् अपि सत्वतः ॥

(சு-ம்.)

பிரமாணத்திற்கு முன்னுமிருத்தலால்.

(வி-ம்.)

பிரமாணத்தின் பிரவிருத்திக்கு முன்னும் பிரஹ்மமிருத்தலாலும் பலம் கடாதிகளின் ஸ்புரணத்திற்குப் பிரமாணத்தின் பிரவிருத்திக்குப் பிற்காலத்திலேயேயிருக்கும் நியமமிருத்தலாலும் பிரஹ்மசைதந்நியம் பலமன்றென்பது * ௩. தாற்பரியம். (௧௦)

---

* ௩. இங்கு இது பிரக்கிரியையின் பேதமாம்:—ஏரியில் நிரப்பிய ஜலம் கலிங்கின்வாயிலாக வெளிப்பட்டு வாய்க்கால்வடிவமாய் வயலிற் சென்று அதன் சமான வடிவுடைய தாகின்றது. அதுபோலத் தேகத்தினுள்ளிருக்கும் அந்தக்கரணம் இந்திரியமாகிய கலிங்கின்வாயிலாக வெளிப்பட்டு வாய்க்காலின் சமானவடிவமாய் வயல்ஸ்தானத்துக் குடமுதலியவிஷயங்களின் சமானவடிவ மாகின்றது. அதில்,

அவச்சேதவாதத்தின்படி

௧. அந்தக்கரணவிசிஷ்டசேதனம் பிரமாதாசேதனமாம்.

௨. இந்திரியமுதல் விஷயபரியந்தமுள்ள விருத்திவிசிஷ்டசேதனம் பிரமாணசேதனமாம்.

௩. கடமுதலியவற்ருல் அவச்சின்னசேதனமும் அறியப்படாததாயிருக்குங்கால் விஷயசேதன மென்றும், பிரமேயசேதன மென்றும் சொல்லப்படும்.

௪. அதுவே அறியப்பட்டதாகுங்கால் பலசேதன மெனப்படும். அதனையே பிரமிதிசேதன மென்றும், பிரமாசேதன மென்றும் கூறுவர்.

இவ்வாறு நால்வகைச் சேதன முண்டு.

கக. பின்னமாகிய சிதாபாசவடிவபலத்தின் சித்தி.

[அகூரு] परागर्थप्रमेयेषु या फलत्वेन संमता ।
संवित्सैवेह मेयोऽर्थो वेदांतोक्तिप्रमाणतः ॥ ११ ॥

(அ-கை.)

அப்படியானல் இந்தப் பிரஹ்மத்திற்கு வேறான சிதாபாசவடிவ பலத்தைக் கூறுதல் "பராக் அர்த்தவடிவப்பிரமேயங்கள் உளபோது" என்றல் முதலிய சுரேசுவராசாரியரது வார்த்திகத்திற்கு விருத்தமாமே யென்று சங்கித்து, அச்சுரேசுவராசாரியர்கள் கூறுவதின் கருத்தை யறியாத அவச்சேதவாதியின் பிரசிகமா மிஃது என்று பரிகரிக்கின்றார்:—

परागर्थप्रमेयेषु या फलत्वेन संमता संवित् सा एव इह वेदांतोक्तिप्रमाणतः मेयः अर्थः ॥

(சு-ம்.)

பராக்அர்த்தப்பிரமேயங்களில் பலத்தன்மையாக அங்கிகரிக்கப்பட்ட சம்வித் (ஞானம்) எதுவோ அதுவே இங்கு வேதாந்தவாக்கியமாகிய பிரமாணத்தால் பிரமேயமாகிய பொருளாம்.

(வி-ம்.)

இங்கு வார்த்திககாரரது வசனத்திற்கு இது பொருளாம்:-பராக் அர்த்தமாகிய வெளிக்கடமுதலியபதார்த்தங்கள் பிரமாணத்திற்கு விஷயமாகுங்கால் பிரமாணத்தின் பலவடிவாக அங்கீகரிக்கப்பட்ட சேதனம் எதுவோ அதுவே இங்கு வேதாந்தசாஸ்திரத்தில் வேதாந்தவாக்கியவடிவப் பிரமாணத்தினல் பிரமேய அர்த்தமாம் அதாவது அறியத்தக்கபொருளாம். (கக)

[அகூசு] इति वार्तिककारेण चित्साद्दश्यं विवक्षितम् ।
ब्रह्मचित्फलयोर्भेदः सहस्रयां विश्रुतो यतः ॥ १२ ॥

---

ஆபாசவாதத்தின்படி.

க. சிதாபாசனேடுகூடிய அந்தக்கரணவிசிஷ்டசேதனம் பிரமாதாசேதனமாம்.

உ. ஆபாசனேடுகூடிய விருத்திவிசிஷ்ட.சேதனம் பிரமாணசேதனமாம்.

ங. கடமுதலியவற்ருலவச்சின்னசேதனம் விஷயசேதனமாம். அதனையே பிரமேயசேதன மென்றும் கூறுவர்.

ச. விருத்தியின் சம்பந்தத்தால் கடமுதலியவற்றில் உண்டாகும் சேதனத்தின் பிரதிபிம்பம் அதாவது ஆபாசம் பலசேதனமாம். கடமுதலியவற்ருலவச்சின்ன பிரஹ்மசேதனம் பலமன்று. இவ்வளவு பேதமுண்டு.

(அ-கை.)

இதுவுமது:—

इति वार्तिककारेण चित्साद्दश्यं विवक्षितम् ॥

(கூ-ம்.)

இவ்வாறு வார்த்திககாரரால் சேதனத்தின் ஒப்பானது சொல்லக் கருதப்பட்டதாம்.

(வி-ம்.)

இவ்வார்த்திகவடிவ வசனத்தால் பிரஹ்மசைதந்யத்திற்குச் சமான மான சிதாபாசன் பிரமாணத்திற்குப் பலமாயிருத்தலால் சொல்லக்கருதப் பட்டதாம், பிரஹ்மசைதந்ய மன்றென்பது தாற்பரியம்.

(அ-கை.)

வார்த்திககாரர் கூறுதலின் கருத்து இத்தன்மையதென்று எதனு லறியப்படுகின்றதென்றுசங்கித்து, அவ்வார்த்திககாரரது குருவாகிய ஸ்ரீ மத்சங்கராசாரியர்களால் உபதேசசகஸ்ரி என்னும் ஸ்லோகத்தில் பிரஹ்ம சைதந்யத்திற்கும் சிதாபாசனுக்கும் பேதம் சொல்லப்பட்டிருத்தலால் வார்த்திககாரர்கள் சொல்லியதன் கருத்து இத்தன்மையதென்று அறியப் படுகின்றதென்று கூறுகின்றார்:—

यतः ब्रह्मचित्फलयोः भेदः सहस्त्र्यां विश्रुतः ॥

(கூ-ம்.)

எதனால் பிரஹ்மத்திற்கும் சிதாபாஸனாகிய சித்பலத்திற்கும் பேதம் உபதேசசகஸ்ரியில் கேட்கப்பட்டிருக்கின்றதோ அதனால் இது அறியப் படுகின்றது. (கஉ)

கஉ. ஞாதத்தன்மைக்குச் சிதாபாசனால் உற்பத்தியும் பிரஹ்மத்தால் விளங்கப்படுந் தன்மையும்.

[அகூடு] आभास उदितस्तस्माज्ज्ञातत्वं जनयेद्घटे ।
तत्पुनर्ब्रह्मणा भास्यमज्ञातत्ववदेव हि ॥ १३ ॥

(அ-கை.)

இவ்வாறாகவே பிரகிருதமாகிய கடத்தின் ஞாதத்தன்மையில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

तस्मात् घटे उदितः आभासः ज्ञातत्वं जनयेत् । तत् पुनः अज्ञातत्ववत् ब्रह्मणा एव भास्यं हि ॥

கக. பின்னமாகிய சிதாபாசவடிவபலத்தின் சித்தி.

[அகூரு] परागर्थप्रमेयेषु या फलत्वेन संमता ।
संवित्सैवेह मेयोऽर्थो वेदांतोक्तिप्रमाणतः ॥ ११ ॥

(அ-கை.)

அப்படியானால் இந்தப் பிரஹ்மத்திற்கு வேறான சிதாபாசவடிவ பலத்தைக் கூறுதல் "பராக் அர்த்தவடிவப்பிரமேயங்கள் உளபோது" என்றல் முதலிய சுரேசுவராசாரியரது வார்த்திகத்திற்கு விருத்தமாமே யென்று சங்கித்து, அச்சுரேசுவராசாரியர்கள் கூறுவதின் கருத்தை யறியாத அவச்சேதவாதியின் பிரசிதமா மிஃது என்று பரிகரிக்கின்றார்: —

परागर्थप्रमेयेषु या फलत्वेन संमता संवित् सा एव इह वेदांतोक्तिप्रमाणतः मेयः अर्थः ॥

(சு-ம்.)

பராக்அர்த்தப்பிரமேயங்களில் பலத்தன்மையாக அங்கீகரிக்கப்பட்ட சம்வித் (ஞானம்) எதுவோ அதுவே இங்கு வேதாந்தவாக்கியமாகிய பிரமாணத்தால் பிரமேயமாகிய பொருளாம்.

(வி-ம்.)

இங்கு வார்த்திககாரரது வசனத்திற்கு இது பொருளாம்:-பராக் அர்த்தமாகிய வெளிக்கடமுதலியபதார்த்தங்கள் பிரமாணத்திற்கு விஷயமாகுங்கால் பிரமாணத்தின் பலவடிவாக அங்கீகரிக்கப்பட்ட சேதனம் எதுவோ அதுவே இங்கு வேதாந்தசாஸ்திரத்தில் வேதாந்தவாக்கியவடிவப் பிரமாணத்தினால் பிரமேய அர்த்தமாம் அதாவது அறியத்தக்கபொருளாம்.(கக)

[அகூச] इति वार्तिककारेण चित्सादृश्यं विवक्षितम् ।
ब्रह्मचित्फलयोर्भेदः सहस्र्यां विश्रुतो यतः ॥ १२ ॥

---

ஆபாசவாதத்தின்படி.

க. சிதாபாசனோடுகூடிய அந்தக்கரணவிசிஷ்டசேதனம் பிரமாதாசேதனமாம்.

உ. ஆபாசனோடுகூடிய விருத்திவிசிஷ்டசேதனம் பிரமாணசேதனமாம்.

ஙா. கடமுதலியவற்றாலவச்சின்னசேதனம் விஷயசேதனமாம். அதனையே பிரமேயசேதன மென்றும் கூறுவர்.

ச. விருத்தியின் சம்பந்தத்தால் கடமுதலியவற்றில் உண்டாகும் சேதனத்தின் பிரதிபிம்பம் அதாவது ஆபாசம் பலசேதனமாம். கடமுதலியவற்றாலவச்சின்ன பிரஹ்மசேதனம் பலமன்று. இவ்வளவு பேத முண்டு.

(அ-கை.)

இதுவுமது:—

इति वार्तिककारेण चित्साहश्यं विवक्षितम् ॥

(சு-ம்.)

இவ்வாறு வார்த்திககாரரால் சேதனத்தின் ஒப்பானது சொல்லக் கருதப்பட்டதாம்.

(வி-ம்.)

இவ்வார்த்திகவடிவ வசனத்தால் பிரஹ்மசைதந்யத்திற்குச் சமான மான சிதாபாசன் பிரமாணத்திற்குப் பலமாயிருத்தலால் சொல்லக்கருதப் பட்டதாம், பிரஹ்மசைதந்ய மன்றென்பது தாற்பரியம்.

(அ-கை.)

வார்த்திககாரர் கூறுதலின் கருத்து இத்தன்மையதென்று எதனு லறியப்படுகின்றதென்றுசங்கித்து, அவ்வார்த்திககாரரது குருவாகிய ஸ்ரீ மத்சங்கராசாரியர்களால் உபதேசசகஸ்ரி என்னும் கிரந்தத்தில் பிரஹ்ம சைதந்யத்திற்கும் சிதாபாசனுக்கும் பேதம் சொல்லப்பட்டிருத்தலால் வார்த்திககாரர்கள் சொல்லியதன் கருத்து இத்தன்மையதென்று அறியப் படுகின்றதென்று கூறுகின்றார்:—

यतः ब्रह्मचित्फलयोः भेदः सहस्रयां विश्रुतः॥

(சு-ம்.)

எதனுல் பிரஹ்மத்திற்கும் சிதாபாஸனுகிய சித்பலத்திற்கும் பேதம் உபதேசசகஸ்ரியில் கேட்கப்பட்டிருக்கின்றதோ அதனுல் இது அறியப் படுகின்றது. (௧௨)

௧௨. ஞாதத்தன்மைக்குச் சிதாபாசனுல் உற்பத்தியும் பிரஹ்மத்தால் விளங்கப்படுந் தன்மையும்.

[அகூ௫] आभास उदितस्तस्माज्ज्ञातत्वं जनयेद्घटे ।
तत्पुनर्ब्रह्मणा भास्यमज्ञातत्ववदेव हि ॥ १३ ॥

(அ-கை.)

இவ்வாருகவே பிரகிருதமாகிய கடத்தின் ஞாதத்தன்மையில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

तस्मात् घटे उदितः आभासः ज्ञातत्वं जनयेत् । तत् पुनः अज्ञातत्ववत् ब्रह्मणा एव भास्यं हि ॥

(சு-ம்.)

அதனுல் கடத்தில் உதயமாகிய ஆபாசன் ஞாதத்தன்மை பெறுகின்ருன். அந்த ஞாதத்தன்மை மீண்டும் அஞ்ஞாதத்தன்மையினைப்போல பிரஹ்மத்திருலேயே விளங்கப்படுவதாகின்றதென்பது பிரசித்தம்.

(வி-ம்.)

எதனுல் பிரஹ்மத்திற்கும் சிதாபாசவடிவ பலத்திற்கும் பேதம் பிரசித்தமாயிருக்கின்றதோ அதனுல் புத்திவிருத்திவிசிஷ்ட கடத்திலுண்டாகிய சிதாபாசன் அந்தக் கடத்தின் ஞாதத்தன்மையினை அறிகின்ருன். உண்டாகிய அந்த ஞாதத்தன்மை அஞ்ஞாதத்தன்மையினைப்போலப் பிரஹ்மத்திருலேயே விளங்கத்தக்கதாமென்பது பிரசித்தம். இது பொருள். (௧௩)

௧௩. சிதாபாசபிரஹ்மங்களுக்குச் சம்பாதிக்கப்பட்ட பேதத்தினை விஷயத்தைக் காட்டலால் விளக்குதல்.

[அ௯௯] धीवृत्त्याभासकुंभानां समूहो भास्यते चिता ।
कुंभमात्रफलत्वात्स एक आभासतः स्फुरेत् ॥ १४ ॥

(அ-கை.)

இவ்வாறு பிரஹ்மத்திற்கும் சிதாபாசனுக்கும் யுத்தியினுற் சொல்லப்பட்ட பேதத்தினை விஷயத்தைக் காட்டுதலால் விளக்குகின்ருர் :—

धीवृत्त्याभासकुंभानां समूहः चिता भास्यते । कुंभमात्रफलत्वात् आभासतः सः एकः स्फुरेत् ॥

(சு-ம்.)

இந்திரியவாயிலாக வெளிப்பட்ட புத்திவிருத்தி, ஆபாசன், கடம் என்னும் மூன்றன் சமூகமும் சித்திருல் விளங்குகின்றது. சிதாபாசன் கடமாத்திரத்திலிருக்கும் பலவடிவமாயிருத்தலின் அவ்வாபாசனுல் அக்கடமொன்றே விளங்குகின்றது.

(வி-ம்.)

சித்தாலென்பதற்கு பிரஹ்மசைதந்நியத்தாலென்பது பொருள். (௧௪)

௧௪. கடம் சிதாபாசன் பிரஹ்மமென்னுமிரண்டினுலும் விளங்கப்படுவதாயிருத்தலில் ஏதுவும் நையாயிகர்களாற் சொல்லப்பட்ட பிரஹ்மத்திற்கு வேறுபெயரால் வியவகாரமும்.

[அ௯எ] चैतन्यं द्विगुणं कुंभे ज्ञातत्वेन स्फुरत्यतः ।
अन्येऽनुव्यवसायाख्यमाहुरेतद्यथोदितम् ॥ १५ ॥

(அ·கை.)

கடம் சிதாபாசன் பிரஹ்ம மென்னு மிரண்டினாலும் விளக்கப்படுவதா யிருத்தலில் இலிங்கமாகிய ஏதுவினைக் கூறுகின்றார் :—

अतः कुंभेः ज्ञातत्वेन द्विगुणं चैतन्यं स्फुरति ॥

(சு-ம்.)

ஆதலால் கடத்தில் ஞாதத்தன்மையாக இருவகைச் சைதந்நியம் விளங்குகின்றது.

(வி-ம்.)

ஆதலால் கடம் பிரஹ்மம் சிதாபாசன் என்னும் இரண்டினாலும் விளங் கப்படுவதா யிருத்தலின் அக்கடத்தில் ஞாதத்தன்மையால் பிரஹ்மசிதா பாசவடிவ இருவகைச்சைதந்நியம் பிரகாசிக்கிறது.

(அ·கை.)

இந்தக் கடத்தின் ஞாதத்தன்மையினைப் பிரகாசிக்கும் சைதந்நியமா கிய பிரஹ்மம் நையாயிகர்களால் வேறு பெயரால் விவகரிக்கப்படுகின்ற தென்று கூறுகின்றார் :—

यथोदितं एतत् अन्ये अनुव्यवसायाख्यं आहुः ॥

(சு-ம்.)

உள்ளவாறு சொல்லப்பட்ட இச்சேதனத்தினை அந்நியவாதி அநுவிய வசாய மென்னும் பெயருடையதாகக் கூறுவர்.

(வி-ம்.)

எவ்வித மிருக்கின்றதோ அவ்விதமாகச் சொல்லப்பட்ட இப்பிரஹ்ம சைதந்நியத்தினையே அந்நியதார்க்கிகர் *சு. அநுவியவசாய மென்னும் பெயருடைய இரண்டாவது ஞான மென்ப ரென்பது யோஜனை. (கரு)

கசு. கடத்தின் விவகாரபேதத்தால் சிதாபாசப்பிரஹ்மங்களின் பேதம்.

[௲கூ௬] घटोऽयमित्यसावुक्तिराभासस्य प्रसादतः ।
विज्ञातो घट इत्युक्तिर्ब्रह्मानुग्रहतो भवेत् ॥ १६ ॥

(அ·கை.)

"இது கடம்" "அறியப்பட்டது கடம்" என்னும் வியவகாரபேதத்

---

* சு. ஞானத்தின் ஞானத்தினை அநுவியவசாய ஞான மென்பர். பஞ்சகோச விவேகத்தின் உ௲-வது டிப்பணத்திற் காண்க.

தாலும் சிதாபாசனுக்கும் பிரஹ்மத்திற்கும் பேதம் அறியத்தக்கதா மென்று கூறுகின்றார்:—

"अयं घटः" इति असौ उक्तिः आभासस्य प्रसादतः "विज्ञातः घटः" इति उक्तिः ब्रह्मानुग्रहतः भवेत् ॥

(சு-ம்.)

"இது கடம்" என்னும் இக்கூற்று ஆபாசத்தின் பிரசாதத்தால் உண்டாகின்றது. "அறியப்பட்டது கடம்" என்று கூறுதல் பிரஹ்மத்தின் அநுக்கிரகத்தா லுண்டாகின்றது. (கசு)

உ. தேகத்தினுள் கூடஸ்த சிதாபாசர்களின் பேதம் அகூகூ-கூ0அ.

க. முற்கூறிய அர்த்தத்தின் அநுவாதபூர்வகமாகத் தேகத்தினுள் கூடஸ்த சிதாபாசர்களது விவேசனத்தின் பிரேரணை.

[அகூகூ] आभासब्रह्मणी देहाद्बहिर्यद्वद्विवेचिते ।
तद्वदाभासकूटस्थौ विविच्येतां वपुष्यपि ॥ १७ ॥

(அ-கை.)

தேகத்தின் வெளியில் சிதாபாசப் பிரஹ்மங்கள் எப்படி விவேகிக்கப் படுகின்றனவோ அதுபோலத் தேகத்தினுள்ளும் சிதாபாசகூடஸ்தர் விவேகஞ்செய்யத்தக்கவராவ ரென்று கூறுகின்றார்.—

देहात् बहिः आभासब्रह्मणी यद्वत् विवेचिते । तद्वत् वपुषि अपि आभास-कूटस्थौ विविच्येताम् ॥

(சு-ம்.)

தேகத்திற்கு வெளியே ஆபாசனும் பிரஹ்மமும் எப்படி விவேசனஞ் செய்யப்படுகின்றனவோ அதுபோலத் தேகத்தினுள்ளும் ஆபாசனையும் கூடஸ்தனையும் விவேசனஞ் செய்தல்வேண்டும். (கஎ)

உ. திருஷ்டாந்தத்தால் தேகத்தினுள் விருத்திகளில் சிதாபாசனை வர்ணித்தல்.

[கூ00] अहंवृत्तौ चिदाभासः कामक्रोधादिकेषु च ।
संव्याप्य वर्तते तप्ते लोहे वह्निर्यथा तथा ॥ १८ ॥

(அ-கை.)

அப்படியானால் தேகத்திற்கு வெளியே சிதாபாசனால் வியாபிக்கப் பட்ட கடாகாரவிருத்தியினைப்போலத் தேகத்தினுள் விஷயகோசரவிருத்தி களின்மையால் அவ்விருத்திகளில் வியாபகசிதாபாசன் தம்மால் எவ்

வாறு அங்கீகரிக்கப்படுகின்றனென்றுசங்கித்து, தேகத்தினுள் விஷய கோசரவிருத்திக ளில்லாதிருக்கினும் யானெனல்முதலிய விருத்திகளி ருத்தலால் அந்த யானெனல்முதலிய விருத்திகளின் வியாபக சிதாபா சன் அங்கீகரிக்கக்கூடியவனுவ னென்று திருஷ்டாந்தத்தோடு கூறுகின் றூர்:—

यथा तप्ते लोहे वह्निः संव्याप्य वर्तते तथा अहंवृत्तौ च कामक्रोधादिकेषु चिदाभासः ॥

(சு-ம்)

எப்படிக் காய்ச்சிய இரும்பில் அக்கினி வியாபித்திருக்கின்றதோ அது போல யான்எனும் விருத்தியிலும் காமக்குரோதாதிவிருத்திகளிலும் சிதாபாசன் செவ்வையாய் வியாபித்திருக்கின்றான். (கஅ)

௯. ௯௦௦-வது சுலோகத்திற் கூறிய திருஷ்டாந்தத்தினை விஸ்தரித்தலால் சிதா பாசனுக்கு விருத்திகளையே விளக்குந்தன்மை யுளதெனல்.

[௯௦௧] स्वमात्रं भासयेत्तप्तं लोहं नान्यत्कदाचन ।
एवमाभाससहिता वृत्तयः स्वस्वभासिकाः ॥ १९ ॥

(அ-கை.)

யானெனல்முதலிய விருத்திகளுக்கு சிதாபாசனால் விளங்குதற் குரியதன்மையா மென்பதனை ௯௦௦-வது சுலோகத்திற் கூறிய திருஷ்டாந்த த்தை வர்ணித்தலால் விளக்குகின்றார்:—

तप्तं लोहं स्वमात्रं भासयेत् । अन्यत् कदाचन न । एवं आभाससहिताः वृत्तयः स्वस्वभासिकाः ॥

(சு-ம்)

காய்ச்சிய இரும்பு தன்னைமாத்திரமே பிரகாசிக்கின்றது; வேறு வஸ் துவினை ஒருபோதும் பிரகாசிக்கிறதில்லை. அதுபோலச் சிதாபாசனோடு கூடிய நான்முதலிய விருத்திகளும் தத்தம்மையே விளக்குவனவாம்; * ஞ. பிறவிஷயங்களை விளக்குகிறதில்லை. (கக)

*ஞ. தத்துவாநுசந்தானமுதலிய நூல்களில் விளக்குவ(ஆவரணத்தை நிவர்த் திப்ப)தாகிய மாயை அந்தக்கரணங்களின் பரிணாமம் விருத்தி யென்று கூறப்பட்டிருக் கின்றது. விருத்திப்பிரபாகரத்தில் இருக்கிறது என்னும் வியவகாரத்திற்கு ஏதுவான அவித்தை அந்தக்கரணங்களின் பரிணாமம் விருத்தி என்று சொல்லப்பட்டிருக்கின் றது. ஆதலால் மாயை அந்தக்கரணங்களின் ஞானவடிவபரிணாமமே விருத்தி யென் னுஞ் சொல்லிற்குப்பொருளாம்; பரிணாமமாத்திரமன்று. ஆதலால் குரோதம் சுகமுத லிய அநேகபரிணாமங்களை விருத்தியென்று கொண்டு விருத்திக்கு விஷயமின்மையைக் கூறுதல் பொருந்தாது. ஆனால் அவ்வெல்லாப்பரிணாமங்களுமே விருத்தியின் விஷயங்

ச. கூடஸ்தனை அறிவித்தலில் உபயோகமுள்ள விருத்திகளின்மையின் காலம்

[கூ0உ] क्रमाद्विच्छिद्य विच्छिद्य जायंते वृत्तयोऽखिलाः ।
सर्वा अपि विलीयंते सुप्तिमूर्छासमाधिषु ॥ २० ॥

(அ·கை.)

இவ்வாறு தேகத்தினுள் சிதாபாசனை அறிவித்துக் கூடஸ்தனது சொரூபத்தை அறிவித்தற்பொருட்டு அதில் உபயோகியான விருத்திகளின்மைக்காலத்தைக் காட்டுகின்றார்:—

क्रमात् विच्छिद्य विच्छिद्य अखिलाः वृत्तयः जायंते । सुप्तिमूर्छासमाधिषु सर्वाः अपि विलीयंते ॥

(சு-ம்.)

ஜாக்கிரசொப்பனங்களில் கிரமமாக இடைவிட்டு இடைவிட்டு எல்லாவிருத்திகளும் உண்டாகின்றன. சுழுத்தி மூர்ச்சை சமாதிகளில் எல்லாவிருத்திகளும் விலயத்தை யடைகின்றன. (உ0)

ரு. விருத்திகளினின்மை சாக்ஷித்தன்மையினால் கூடஸ்தனுக்குத் தோற்றுதல்.

[கூ0௩] संधयोऽखिलवृत्तीनामभावाश्चावभासिताः ।
निर्विकारेण येनासौ कूटस्थ इति चोच्यते ॥ २१ ॥

(அ-கை.)

அப்படியானால் இவ்வாறு சமாதிமுதலியவற்றில் விருத்திகளின் விலயமுண்டாகுக. இதனால் கூடஸ்தன் எப்படி அறியப்படுகின்றானென்றாசங்கித்து, விருத்திகளினின்மைக்குச் சாக்ஷியாயிருத்தலால் இவன் கூடஸ்தனென்று அறியப்படுகின்றானென்று கூறுகின்றார்:—

अखिलवृत्तीनां संधयः च अभावाः येन निर्विकारेण अवभासिताः असौ कूटस्थः इति च उच्यते ॥

---

களாயிருக்கின்றன. அவற்றினைப் பிரகாசிக்கும் சத்துவகுணத்தின் பரிணாமவடிவ விருத்தி அவற்றின் வேறாயிருக்கின்றது. அவ்வாறாயினும் சுகம், துக்கம், காமம்,குரோதம், திருப்தி,க்ஷமை, திருதி(தைரியம்),அதிருதி, நாணம், பயமுதலிய எல்லா அந்தக்கரணபரிணாமங்களுக்கும் அநேக விடங்களில் விருத்திசப்தத்தால் வியவகாரம் எழுதப்பட்டிருக்கின்றது. அதனால் ஸ்தூலபுத்தியுடைய அதிகாரிகளுக்குச் சுலபமாய் அறிவித்தற்பொருட்டு இந்நூலாசிரியரும் அந்தக்கரணத்தின் பரிணாமமாத்திரத்தினை விருத்திசப்தத்தால் வியவகாரஞ்செய்திருக்கின்றனர். ஆதலால் யான்எனல்முதலியவிருத்திகளுக்கு விஷயவடிவத்தன்மை அல்லது விஷயமுடைமை இல்லாமையால் அவ்விருத்திகள் அந்நியவிஷயங்களைப் பிரகாசிப்பனவாகா வென்று சொல்லுதல் சம்பவிக்கின்றது.

(சு-ம்.)

சகல விருத்திகளின் சந்தியும் அபாவமும் எந்த நிர்விகாரத்தினுல் விளங்குகின்றனவோ அச்சைதந்நியம் கூடஸ்தனென்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

விருத்திகளின் சந்திகளும் விருத்திகளின் அபாவமும் எச்சைதந்நியத்தால் விளங்குகின்றனவோ அது கூடஸ்தனென்று அறியத்தக்கதாமென்பது பொருள். (உக)

சு. சந்திகளினும் விருத்திகளிலுள்ள அதிக சொச்சத்தன்மைவடிவ பலிதம்.

[கூ0ச] घटे द्विगुणचैतन्यं यथा बाह्ये तथांऽतरे ।
वृत्तिष्वपि ततस्तत्र वैशद्यं संधितोऽधिकम् ॥ २२ ॥

(அ-கை.)

இவ்வாறாக என்ன பலித்ததெனக் கூறுகின்றார்:—

बाह्ये घटे यथा द्विगुणचैतन्यं तथा आन्तरे वृत्तिषु अपि ॥

(சு-ம்.)

எப்படி வெளிக்கடத்தில் இருவகைச்சைதந்நிய முண்டோ அதுபோல உள்விருத்தியிலும் இருவகைச்சைதந்நிய முண்டு.

(வி-ம்.)

வெளிக்கடத்தில் எப்படிக் கடமாத்திரத்தைப் பிரகாசிப்பது சிதாபாசனும் கடத்தின் ஞாதத்தன்மையினைப் பிரகாசிப்பது பிரஹ்மசைதந்நியமுமாகச் சைதந்நியம் இரண்டுவகை யாகின்றதோ, அதுபோல உள் அகங்காராதிவிருத்திகளிலும் கூடஸ்தசைதந்நியமும் விருத்திகளை விளக்கும் சிதாபாசனுமாக இருவகைச்சைதந்நிய முண்டு.

(அ-கை.)

அதில் காரணத்தைக் கூறுகின்றார்:—

ततः संधितः तत्र वैशद्यं अधिकम् ॥

(சு-ம்.)

அதனுல் சந்திகளினும் அவ்விருத்திகளில் பிரகாசம் அதிகமாம்.

(வி-ம்.)

எதனுல் இருவகைச்சைதந்நிய முண்டோ அதனுல் சந்திகளைவிட விருத்திகளில் பிரகாசம் அதிகமாகக் காணப்படுகின்றது.

இங்கே காணப்படுகின்ற தென்னும் பதம் வருவிக்கப்பட்டது. (உஉ)

எ. விருத்திகளில் கடத்திற்போல ஞாதத்தன்மையும் அஞ்ஞாதத்தன்மையு மின்மை.

[கூ0ரு] ज्ञातताऽज्ञातते न स्तो घटवद्वृत्तिषु क्वचित् ।
स्वस्य स्वेनाग्रहीतत्वात्ताभिश्चाज्ञाननाशनात् ॥ २३ ॥

(அ-கை.)

அப்படியானல் இவ்விருத்திகளிலும் கடாதிகளிற்போல ஞாதத்தன்மை அஞ்ஞாதத்தன்மைகளை விளக்குவதா யிருத்தலால் கூடஸ்தன் ஏன் அங்கீகரிக்கப்படுகிறதில்லை யென்ருசங்கித்து, அவ்விருத்திகளில் ஞாதத்தன்மைகளின்மையினலேயே அவற்றைவிளக்குவதா யிருத்தலால் கூடஸ்தன் அங்கீகரிக்கப்படுகிறதில்லை யென்று கூறுகின்ருர்:—

घटवत् वृत्तिषु क्वचित् ज्ञातताऽज्ञातते न स्तः ॥

(சு-ம்,)

கடத்தைப்போல விருத்திகளிலும் எப்போதும் ஞாதத்தன்மை அஞ்ஞாதத்தன்மைக ளில்லை.

(அ-கை.)

அதிற் காரணத்தைக் கூறுகின்ருர்:—

स्वस्य स्वेन अग्रहीतत्वात् च ताभिः अज्ञाननाशनात् ॥

(சு-ம்.)

விருத்தியாகிய தான் தன்னலேயே கிரகிக்கப்படாததா யிருத்தலாலும் அவ்விருத்திகளால் அஞ்ஞானம் நாசமாதலாலுமாம்.

(வி-ம்.)

ஞானஅஞ்ஞானங்களின் வியாப்தியினல் ஞானத்திற்கு விஷயமாதலாகிய ஞாதத்தன்மையும் அஞ்ஞானத்திற்கு விஷயமாதலாகிய அஞ்ஞாதத்தன்மையும் உண்டாகின்றன. விருத்திகளுக்கோ கடமுதலியவற்றை அபேக்ஷித்துச் சொப்பிரகாசமா யிருத்தலால் ஞானத்தின் வியாப்தியாகிய விஷயத்தன்மையு மில்லை, அவ்விருத்திகளால் தனது உற்பத்திமாத்திரத்தால் தன்னைக் கோசரிக்கும் அஞ்ஞானம் நிவிருத்தியாதலால் அஞ்ஞானத்தின் வியாப்தியு மில்லை யென்பது தாற்பரியம். (உங)

அ. சிதாபாசனுக்குக் கூடஸ்தத்தன்மையின்மையிலும் ஆத்மாவிற்குக் கூடஸ்தத்தன்மை யிருத்தலிலும் ஏது.

[கூ0கூ] द्विगुणीकृतचैतन्ये जन्मनाशानुभूतितः ।
अकूटस्थं तदन्यत्तु कूटस्थमविकारितः ॥ २४ ॥

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்தசிதாபாசர் இருவருக்கும் சேதனத்தன்மை சமானமாயிருக்க, ஒருவருக்குக் கூடஸ்தத்தன்மையாகிய அவிகாரித்தன்மையும் மற்றொருவருக்கு அகூடஸ்தத்தன்மையாகிய விகாரித்தன்மையுமான பேதம் எதனாலிருக்கின்றது என்றாசங்கித்துச் சிதாபாசனிடத்துள்ள ஜன்மநாசம் அநுபவிக்கப்படுவனவா யிருத்தலின் இச்சிதாபாசனுக்குக் கூடஸ்தத்தன்மையின்மையும் மற்றைய சாக்ஷிக்கு விகாரியாதலிற் பிரமாணமின்மையால் கூடஸ்தத்தன்மையு மிருக்கின்றதென்று கூறுகின்றார்:-

द्विगुणीकृतचैतन्ये जन्मनाशानुभूतितः तत् अकूटस्थं अन्यत् तु अविकारितः कूटस्थम् ॥

(சு-ம்.)

இருவகைப்பட்ட சைதந்நியத்தில் சிதாபாசனது ஜன்மநாசத்தின் அநுபவத்தால் அவன் அகூடஸ்தனும். மற்றைய சைதந்நியமோ * கூ. அவிகாரியாயிருத்தலால் கூடஸ்தனும். (உச)

கூ. ஆசாரியர்களால் உபதேசசகஸ்ரியில் கூடஸ்தன் நிரூபிக்கப்படுதல்.

[கூ0எ] अन्तःकरणतद्वृत्तिसाक्षीत्यादावनेकधा । -
कूठस्थ एव सर्वत्र पूर्वाचार्यैर्विनिश्चितः ॥ २५ ॥

---

*கூ. எப்படி ஜலபிம்பவடிவ சந்திரன் இருக்கிறதாயிருக்கவும் பக்ஷமும் திதியுமாகிய காலத்தால் அதனிடத்துச் சூரியனது பிரதிபிம்பமாகிய கலையின்வளர்ச்சி குறைதல்வடிவ பரிணாம முண்டாகின்றதோ, எப்படி விருக்ஷ மிருந்துகொண்டிருக்கவும் பலங்களுக்கு ஜன்மாதி ஷட்விகாரவடிவ பரிணாம முண்டாகின்றதோ, அதுபோலக் கூடஸ்தன் நிர்விகாரமாயிருக்கவும் தேகாதிகளுக்கு ஜன்மாதி ஷட் விகாரவடிவ பரிணாம முண்டாகின்றது. கூடஸ்தனுக்குப் பரிணாம மிருக்குமாயின் அவனுக்குச் சேதனத்தன்மையின் பங்கத்தால் ஜடத்தன்மையின் பிராப்தியுண்டாகும். ஏனெனின் முன் அவஸ்தையை விடுதலைமுன்னிட்ட வேறவஸ்தையின் கொள்கைக்குப் பரிணாம மென்று பெயர். அதனையே விகார மென்றுங் கூறுவர். இந்த இலக்ஷணத்தின் யோகத்தாலும் இவ்வாறு அங்கீகரிக்கப்பட்ட தேகாதிவடிவ ஜகத்தினைப் பிரகாசிப்பிப்பதினின்மையினாலும் ஜகத்தினது அந்தத்தன்மையின் பிரசங்கமுண்டாகும். ஆதலால் கூடஸ்தனை விகாரி யென்று சொல்லுதல் பொருந்தாது. ஆனால் அவன் அவிகாரியாம். ஜன்மாதி இரண்டு தேகங்களோடுகூடிய சிதாபாசன் விகாரியாம்.

(அ-கை.)

சிதாபாசனுக்குவேறாகக் கூடஸ்தனை அங்கீகரித்தல் தமது கபோல கற்பிதமா மென்றாசங்கித்து ஸ்ரீமச்சங்கராசாரியசுவாமிகள் உபதேச சகஸ்ரிமுதலிய நூல்களில் கூடஸ்தனை நிரூபித்திருத்தலின் கூடஸ்தனது அங்கீகாரம் சுவகபோலகற்பித மன்றென்று கூறுகின்றார்:—

पूर्वाचार्यैः अंतःकरणतद्वृत्तिसाक्षीत्यादौ अनेकधा सर्वत्र कूटस्थः एव विनिश्चितः ॥

(சு-ம்.)

பூர்வாசாரியர்களால் "அந்தக்கரணத்திற்கும் அதன் விருத்திகளுக்கும் சாக்ஷி" என்றல்முதலிய வாக்கியங்களில் அநேகவிதமாக எங்கும் கூடஸ்தனே நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

"அந்தக்கரணத்திற்கும் அதன்விருத்திகளுக்கும் சாக்ஷியாகிய சைதந்நிய சொரூபமும் ஆநந்தரூபமும் சத்தியரூபமுமான நீ ஆத்மாவாகிய தன்னை ஏன் அடைகிறதில்லை?" என்றல்முதலிய வாக்கியங்களில் என்பது பொருள். (உரு)

௬௦. கூடஸ்தனுக்கு வேறாகச் சிதாபாசனை ஆசாரியர் வர்ணித்தல்.

[கூ௦அ] आत्माभासाश्रयाश्चैवं मुखाभासाश्रया यथा ।
गम्यते शास्त्रयुक्तिभ्यामित्याभासश्च वर्णितः ॥ २६ ॥

(அ-கை.)

கூடஸ்தனுக்கு வேறாக அச்சிதாபாசனும் அந்த ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளால் உபதேசசகஸ்ரியிற்றானே வர்ணிக்கப்பட்டிருக்கின்றான் என்று கூறுகின்றார்:—

यथा मुखाभासाश्रयाः एवं आत्माभासाश्रयाः च शास्त्रयुक्तिभ्यां गम्यन्ते इति आभासः च वर्णितः ॥

(சு-ம்.)

எப்படி முகம், ஆபாசம், ஆசிரயம் என்பன பிரத்தியக்ஷமாய் அறியப்படுகின்றனவோ, அதுபோல ஆத்மா, ஆபாசன், ஆசிரயம் என்பன சாஸ்திரயுக்திகளா லறியப்படுகின்றன வென்று ஆபாசன் வர்ணிக்கப்பட்டிருக்கின்றான்.

(வி-ம்.)

எப்படிப் பிரசித்தமாகிய முகம், முகத்தின் பிரதிபிம்பமாகிய ஆபாசன், கண்ணாடிமுதலியனவாகிய ஆசிரயம் என்னும் மூன்றும் பிரத்தியக்ஷமா யறியப்படுகின்றனவோ, அதுபோலக் கூடஸ்தராகிய ஆத்மா சித்துப் போலியாகிய ஆபாசன், அந்தக்கரணமுதலியனவாகிய ஆசிரய மென்னும் மூன்றும் சாஸ்திரயுக்திகளா லறியப்படுகின்றன என்பது பொருள்.

இவ்வுபதேசசகஸ்ரியின் வாக்கியத்தில் ஆபாசசப்தத்தால் கூடஸ்தருக்கு வேறாகச் சிதாபாசன் வர்ணிக்கப்பட்டிருக்கின்றா னென்பது தாற்பரியம். "मनसः साक्षी बुद्धेः साक्षी மனதின் சாக்ஷியாம் புத்தியின் சாக்ஷியாம்" என்பது புத்திக்குச் சாக்ஷியாகிய கூடஸ்தனைப் பிரதிபாதிக்கும் சுருதியாம். "रूपं रूपं प्रतिरूपो बभूव உருவங்கள்தோறும் அதாவது அந்தக்கரணாதி உபாதிகள்தோறும் பிரதிரூபம் அதாவது பிரதிபிம்பஸ்வரூபம் உண்டாயிற்று." என்பது சிதாபாசனைப் பிரதிபாதிக்கும் சுருதிவடிவசாஸ்திரமாம். விகாரித்தன்மைமுதலியவடிவ யுக்தி முன் கூ0சு-வது சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற தென்பது தாற்பரியம். (உசு)

ந. சிதாபாசனது நிரூபணம் கூ0கூ—கூஉகூ.

க. சிதாபாசனைக் குறித்த ஆக்ஷேபம்.

[கூ0க] बुद्धयवच्छिन्नकूटस्थो लोकांतरगमागमौ ।
कर्तुं शक्तो घटाकाश इवाभासेन किं वद ॥ २७ ॥

(அ-கை.)

அதில் சிதாபாசனைக்குறித்து அவச்சேதவாதாநுசாரி ஆக்ஷேபமாகிய நிஷேதத்தைச் செய்கின்றார்: —

बुध्यवच्छिन्नकूटस्थः घटाकाशः इव लोकान्तरगमागमौ कर्तुं शक्तः । आभासेन किं वद ॥

(சு-ம்.)

புத்தியவச்சின்ன அதாவது புத்திவிசிஷ்ட கூடஸ்தவடிவ ஜீவன் கடவிசிஷ்ட ஆகாயத்தினைப்போல லோகாந்தரத்திற் செல்லுதல் வருதல் களைச் செய்யக்கூடியவனாகலின் சித்தாந்தியாரே! சிதாபாசனால் என்ன பிரயோஜனம்? அதனைச் சொல்லீராக.

(வி-ம்.)

தன்னிடத்திற் கற்பிதமாகிய புத்தியினால் அவச்சின்ன அதாவது அந்நிய சேதனத்தினும் வேறுபாட்டையடைந்த கூடஸ்தனே கடவாயிலாகக்

கடாகாசத்தினைப்போலப் புத்தியின்வாயிலாக அந்நியலோகங்களிற் செல்லுதல்வருதல்களைச் செய்யச் சமர்த்தனுகின்முன். ஆதலால் சிதாபாசனைக் கற்பித்தலில் கௌரவதோஷமா * எ. மென்பது தாற்பரியம். (உஎ)

உ. சுலோகம் கூoகூ-ற் கூறிய ஆக்ஷேபத்திற்குச் சமாதானம்.

[கூஅO] शृण्वसंगः परिच्छेदमात्राज्जीवो भवेन्न हि ।
अन्यथा घटकुड्याद्यैरवच्छिन्नस्य जीवता ॥ २८ ॥

(அ·கை.)

அசங்க கூடஸ்தனுக்குப் புத்தியினுல் அவச்சேதமாத்திரத்தால் ஜீவத்தன்மை நிகழாது. அங்ஙனமின்றேல் அதாவது புத்தியவச்சின்னசேதனத்திற்கே ஜீவத்தன்மை யங்கீகரிக்கின் கடாதியவச்சின்னசேதனத்தில் ஜீவத்தன்மையின் அதிவியாப்தியுண்டாமாகலின் என்றிவ்வாறு சித்தாந்தி பரிகரிக்கின்முர்:—

शृणु हि असंगः परिच्छेदमात्रात् जीवः न भवेत् । अन्यथा घटकुड्याद्यैः अवच्छिन्नस्य जीवता ॥

(சு-ம்.)

அவச்சேதவாதி! கேள். எதனுல் அசங்கமாகிய கூடஸ்தன் பிறவற்றினின்றும் வேறுபடுத்தலாகிய பரிச்சேதமாத்திரத்தால், ஜீவனுகிறதில்லையோ, அதனுல் சிதாபாசனுல் பிரயோஜனமாம். அங்ஙனமின்றேல் அதாவது புத்தியில் சிதாபாசனை அங்கீகரியாவிடின் குடம் சுவர்முதலியவற்றுல்

---

எ. அவச்சேதவாதத்தின்படி அந்தக்கரணவிசிஷ்ட சேதனமே ஜீவன். அந்தக்கரணத்தில் சிதாபாசனது அங்கீகாரமில்லை. அவ்வந்தக்கரணம் கர்மத்தின் வசத்தால் எங்கெங்குப் போகுதல் வருதலைச் செய்கின்றதோ, அங்கங்கு முன்னமே இருக்கின்ற சேதனம் எதுவோ அது அவ்வந்தக்கரணவிசிஷ்டமாய்ச் சம்சாரிஜீவ னென்னும் வியவகாரத்திற்கு விஷயமாகின்றது. அங்கு அந்தக்கரணவடிவ விசேஷணபாகத்தில் சம்சார மிருக்கின்றது. கூடஸ்தவடிவ விசேஷியபாகத்தில் வாஸ்தவ சம்சாரமில்லை; ஆனுல் பிராந்தியினுல் தோற்றுகின்றது. "விசேஷணத்தினது தர்மத்தின் வியவகாரமும் விசிஷ்டத்தி லுண்டாகின்றது," என்னும் சாஸ்திரத்தின் சங்கேதத்தால் அந்தக்கரணத்தின் தர்மமாகிய சம்சாரத்தின் வியவகாரம் அந்தக்கரண விசிஷ்ட சேதனத்தில் சம்பவித்தலால் அந்தக்கரணவிசிஷ்டசேதனம் சம்சாரிஜீவ னெனப்படுகின்றது. ஆதலால் சிதாபாசனின்றியே சர்வவியவகாரமும் சம்பவிப்பதாயிருக்க ஆபாசவாதத்தில் சிதாபாசனைக் கற்பித்தலால் கௌரவதோஷமாம். இது அவச்சேதவாதியின் சங்கை.

அவச்சின்னசேதனத்திற்கும் ஜீவத்தன்மை *அ. யுண்டாகும். (உஅ)

௯. புத்தி சுவர்களின் விஷமத்தன்மையினது சங்கை சமாதானம்.

[௯௧௧] न कुड्यसदृशा बुद्धिः स्वच्छत्वादिति चेत्तथा ।
अस्तु नाम परिच्छेदे किं स्वाच्छ्येन भवेत्तव ॥ २९ ॥

(அ·கை.)

புத்தி சுவரென்னும் இரண்டற்கும் கிரமமாகச் சொச்சத்தன்மை சொச்சத்தன்மையின்மைகளாலுள்ள விலக்ஷணத்தன்மையினை வாதி சங்கிக்கின்றான்:—

कुड्यसदृशी बुद्धिः न स्वच्छत्वात् इति चेत् ॥

(சு-ம்.)

புத்தி சொச்சமா யிருத்தலால் சுவர்போன்ற தன்றெனின்.

(அ·கை.)

கூறிய புத்தியின் சொச்சத்தன்மை அச்சுவர்முதலிய அவச்சேதசேதனத்தினும் புத்தியவச்சின்ன சேதனத்தின் விலக்ஷணத்தன்மைவடிவ பரிச்சேதத்திற்குக் காரணமாகா தென்று சித்தாந்தி கூறுகின்றார்:—

तथा अस्तु नाम । स्वाच्छ्येन तव परिच्छेदे किं भवेत् ॥

(சு-ம்.)

அவ்வாறு புத்தியின் சொச்சத்தன்மை பிரசித்தமாயிருக்க வாதி! அந்த சொச்சத்தன்மையினால் உனது பக்ஷத்தில் சேதனத்தின் பரிச்சேதத்தில் என்ன அதிக முண்டாயிற்று? ஒன்று மில்லை. (உ௯)

---

* அ. எப்படி ஜலகாஷ்டாதிவடிவ முழுசாமக்கிரிகளுள் ஒருவஸ்து குறைந்தாலும் ஆகாத பாகத்தின் சித்தியை முழுசாமக்கிரியினாலும் செய்தலிலுள்ள கௌரவம் தோஷவடிவினதன்றோ, அதுபோல் சிதாபாசனின்றிப் புத்தியின் பரிச்சேதமாத்திரத்தால் உண்டாகாததாகிய ஜீவபாவத்தினைச் சிதாபாசனை அங்கீகரித்தலால் சித்திசெய்தலில் எக்கௌரவ முண்டோ அது தோஷவடிவினதன்று. அவச்சேதவாதத்தில் எப்படி அந்தக்கரணவிசிஷ்டசேதனத்தை ஜீவனென்று கொள்ளுதலால் குடம் சுவர்முதலிய விசிஷ்டசேதனத்தில் ஜீவத்தன்மையின் அதிவியாப்திவடிவ தோஷமுண்டோ, அதுபோல இவ்வுலகத்திலிருக்கும் அந்தக்கரணவிசிஷ்டசேதனம் அந்நியலோகத்துள்ள அந்தக்கரணவிசிஷ்டசேதனம் என்பவற்றின் பேதத்தால் ஒருவனால் செய்யப்பட்ட கருமத்தின்பயன் மற்றொருவனுக்குப் போகமாதல் வடிவ அசம்பவதோஷ மிருக்கின்றது. இது முன் இத்தீபத்தின் எ-வது டிப்பணத்திற்கூறிய சங்கையின் சமாதானமாம்.

௯. சுலோகம் கூகக-ற் கூறிய அர்த்தத்தைத் திருஷ்டாந்தத்தால் விளக்குதல்.

[கூகஉ] प्रस्थेन दारुजन्येन कांस्यजन्येन वा न हि ।
विक्रेतुस्तंडुलादीनां परिमाणं विशिष्यते ॥ ३० ॥

சுலோகம் கூகக-ற் கூறிய அர்த்தத்தினைத் திருஷ்டாந்தத்தால் விளக்குகின்றார்:—

दारुजन्येन वा कांस्यजन्येन प्रस्थेन विक्रेतुः तण्डुलादीनां परिमाणं न हि विशिष्यते ॥

(சு-ம்)

மரத்தினாலாகிய அல்லது வெண்கலத்தினாலாகிய மரக்கால் விற்கின்றவனுக்கு அரிசிமுதலிய தானியங்களின் அளவு குறைவும் அதிகமுமாகிய பேதத்தை யடைகிறதில்லை.

(வி-ம்)

கட்டையினாலாகியதும் வெண்கலத்தினாலாகியதுமான தானியமளக்கும் பாத்திரமாகிய மரக்காலின் சொச்சத்தன்மை சொச்சத்தன்மையின்மைக ளவையோ, அவை அரிசியின் அளவில் குறைதல் மிகுதல்களுக்கு ஏதுவாவதில்லை யென்பது பொருள். (௩0)

ம. திருஷ்டாந்தத்தில் பிரதிபிம்பம் சித்தித்தலால் புத்தியில் வன்மையால் ஆபாசனை அங்கீகரித்தல்.

[கூகங] परिमाणाविशेषेऽपि प्रतिबिंबो विशिष्यते ।
कांस्ये यदि तदा बुद्धावप्याभासो भवेद्बलात् ॥ ३१ ॥

(அ-கை.)

அப்படியானால் வெண்கலத்தினாலாகிய மரக்காலில் அரிசியின் அளவு அதிகமாதலில்லையாயினும் பிரதிபிம்பவடிவ மிகுதிப்பாடுண் டென்றுசங்கித்து, அப்போது புத்தியில் சிதாபாசன் உம்மால் அங்கீகரிக்கப்பட்டவனாகின்றானென்று கூறுகின்றார்:—

यदि कांस्ये परिमाणाविशेषे अपि प्रतिबिंबः विशिष्यते । तदा बुद्धौ अपि आभासः बलात् भवेत् ॥

(சு-ம்.)

வெண்கலப்பாத்திரத்தில் பரிமாணம் அதிகமாகாவிடினும் பிரதிபிம்பம் அதிகப்படுகின்றது என்று சொல்வாயாயின் அப்போது புத்தியினும் ஆபாசன் வலிந்து உம்மால் அங்கீகரிக்கப்பட்டதாகின்றது. (௩க)

௩. பிரதிபிம்ப ஆபாச சப்தங்களினது வாச்சியார்த்தத்தின் ஏகத்துவம்.

[௬௧௪] ईषद्भासनमाभासः प्रतिबिंबस्तथाविधः ।
बिंबलक्षणहीनः सन्बिंबवद्भासते स हि ॥ ३२ ॥

(அ-கை.)

அப்படியானல் எங்களால் பிரதிபிம்பத்தின் அங்கீகாரஞ்செய்யப்படவே சிதாபாசன் எப்படி அங்கீகாரஞ்செய்யப்பட்டதாம் என்று *௩. பிம்

---

௩. சாரீரகபாஷ்யத்தின் பஞ்சபாதிகை யென்னும் உரையினது வியாக்கியானமான விவரணகிரந்தத்தில் ஸ்ரீ பிரகாசாத்மசரணசுவாமிகள் பிம்பப்பிரதிபிம்பவாதம் எழுதியிருக்கின்றனர். அதன் தன்மை இதுவாம்:— எங்குக் கண்ணடியில் முகத்தினது பிரதிபிம்பத்தின் விளக்க முண்டாகின்றதோ அங்குக் கண்ணடியில் முகத்தின் சாயையும் பிராதிபாசிக அல்லது வியாவகாரிகப் பிரதிபிம்பத்தின் உற்பத்தியுமில்லை. ஆனல் கண்ணடியை விஷயஞ்செய்யும் நேத்திரத்தின் விருத்தி கண்ணடியிற்பட்டுத் திரும்பிக் கழுத்திலுள்ள முகத்தையே விஷயஞ் செய்கின்றது. அப்படிக் கழுத்திலுள்ள முகத்தின்கண்ணேயே பிம்பப்பிரதிபிம்பத்தன்மை தோற்றுகின்றது. அம்முகம் சத்தியமாம். அதனல் முகவடிவ பிம்பப்பிரதிபிம்பங்களின் சொரூபமும் சத்தியமாம். ஆனல் கழுத்திலுள்ள முகத்தில் பிம்பத்தன்மைப் பிரதிபிம்பத்தன்மைவடிவதர்மங்கள் அநிர்வசநீய மித்தையா யிருக்கின்றன. அவற்றின் அதிஷ்டானம் முகமேயாம். எங்குச் சுவர்முதலியவற்றிற் கெதிரில் கண்ணடிவடிவ உபாதி இருக்கின்றதோ அங்குக் கண்ணின் விருத்தி கண்ணடியோடு பொருந்திச் சுவர்முதலியவற்றினையே விஷயஞ்செய்கின்றது. எங்கு ஜலத்தில் சூரியனது பிரதிபிம்பம் உண்டாகின்றதோ அங்கு நேத்திரத்தின் விருத்தி ஜலவடிவ உபாதியோடு சம்பந்தப்பட்டுத் திரும்பி ஆகாயத்திலுள்ள சூரியனை விஷயஞ்செய்கின்றது. ஆகாயத்திலுள்ள சூரியனை விஷயஞ்செய்தற்பொருட்டுச் சக்ஷுவின் விருத்தி மேற்சென்றிருக்குமாயின் ஜலத்தில் சூரியனது பிரதிபிம்பமும் மணலுமாகிய இவற்றேடு தோற்றுகின்றது. அது தோற்றலாகாது. ஆதலால் ஜலத்திலேயே யுண்டாகிய சூரியனது பிரதிபிம்பத்தை விருத்தி விஷயஞ்செய்கின்றது. ஆகாயத்திலுள்ள சூரியனை விஷயிக்கிறதில்லை. அங்ஙனமாயினும் ஜலவடிவ உபாதியின் சாமர்த்தியத்தால் எரிகொள்ளிக்கட்டையைச் சுழற்றுதலாலாகிய அலாதசக்கரம்போல் விருத்தியின் சுழற்சியுண்டாகின்றது. அதனல் க்ஷணபேதத்தால் ஆகாயத்திலுள்ள சூரியனும் ஜலத்தின்கண்ணுள்ள மணலுமாகிய இரண்டினையும் நேத்திரத்தின் விருத்தி விஷயஞ்செய்கின்றது. ஆனல் க்ஷணத்தின் சூக்ஷ்மத்தன்மையால் காலத்திற்குப் பேதம் தோற்றுகிறதில்லை.

இவ்விதத்தால் எங்கும் பிம்பப்பிரதிபிம்பங்களின் பேதமும் மித்தியாத்துவமுமில்லை. ஆனல் பிரதிபிம்பத்துவமும் பிம்பத்தினும் வேறுபட்டதன்மையும் எதிர்முகத்தன்மையும் பிரதிபிம்பத்தின் அபேக்ஷையால் பிம்பத்தன்மையுமாகிய இவைமுதலிய தர்மங்களே பிராந்திசித்தமாயிருத்தலின் மித்தையாம். இவ்வாறு கண்ணடிஸ்தானத்திலுள்ள அஞ்ஞானத்தின் சந்நிதியால் சுத்தசேதனத்தில் பிம்பஸ்தானத்து ஈசுவரனுக்கும் பிரதிபிம்பஸ்தானத்து ஜீவனுக்கும் பேதமும் மித்தியாத்துவமுமில்லை. ஆனல் சுத்தசேதனவடிவ ஜீவேசுவர சொரூபம் சத்தியமாம். பிரதிபிம்பத்தின் அபேக்ஷ

பப் பிரதிபிம்பவர்தத்தின் அநுசாரியின் ஆசங்கையினால் பிரதிபிம்ப ஆபாச சப்தங்களால் வாச்சியமாகிய அர்த்தம் ஒன்றாயிருத்தலின் பிரதிபிம்பத்தை அங்கீகரிக்கவே சிதாபாசனும் அங்கீகரிக்கப்பட்டதேயாமென்று கூறுகின்றார் :—

ईषद्भासनं आभासः तथाविधः प्रतिबिंबः ॥

(சு-ம்.)

சிறிது விளங்குதலே ஆபாசசத்தத்திற்குப் பொருளாம். அத்தன்மையதே பிரதிபிம்பத்திற்கும் பொருளாம்.

(அ-கை.)

அப்படியானால் பிரதிபிம்பத்திற்கு ஆபாசத்தன்மை எவ்வாறிருக்கின்றதென்றாசங்கித்துப் பிரதிபிம்பத்தில் ஆபாசத்தினிலக்ஷணம் பொருந்துதலால் பிரதிபிம்பத்திற்கு ஆபாசத்தன்மையிருக்கின்றதென்று கூறுகின்றார்:-

हि सः बिंबलक्षणहीनः सन् बिंबवत् भासते ॥

(சு-ம்.)

எதனால் அந்தப் பிரதிபிம்பம் பிம்பத்தின் இலக்ஷணமில்லாததாய்ப் பிம்பத்தைப்போல் விளங்குகின்றதோ அதனால்.

(வி-ம்.)

எக்காரணத்தால் பிரதிபிம்பம் பிம்பலக்ஷணமின்றியதாய்ப் பிம்பம்போல் தோற்றுகின்றதோ அதனால் பிம்பாபாசனென்பது தாற்பரியம்(௩௨

எ. பிரதிபிம்பத்தில் ஆபாசனது இலக்ஷணஞ்சேர்தலை விளக்குதல்.

[௩௧௫] ससंगत्वविकाराभ्यां बिंबलक्षणहीनता ।
स्फूर्तिरूपत्वमेतस्य बिंबवद्भासनं विदुः ॥ ३३ ॥

(அ-கை.)

பிரதிபிம்பத்தில் ஆபாசனது இலக்ஷணம் சம்பந்தமுடையதாதலையே விளக்குகின்றார் :—

---

யால் பிம்பத்தன்மைவடிவ ஈசுவரத்தன்மையும் பிரதிபிம்பத்தன்மைவடிவ ஜீவத்தன்மையும் ஈசுவரனினும் வேறுபட்டதன்மையும் பரிச்சின்னத்தன்மையுமாகிய இத்தர்மங்கள் மித்தையாம். இவற்றின் அதிஷ்டானம் சுத்தசேதனமாம். எப்படிக் கண்ணாடிமுதலிய உபாதிகளின் இலகுத்தன்மை பீதத்தன்மைமுதலிய தர்மங்களின் ஆரோபம் பிரதிபிம்பத்திலுண்டாகின்றதோ பிம்பத்திலுண்டாகிறதில்லையோ, அதுபோல ஆவரணசுபாவமுடைய அஞ்ஞானத்தினாலாகிய அற்பஞ்ஞத்தன்மைமுதலியன ஜீவனிடத்திலிருக்கின்றன. பிம்பவடிவ ஈசுவரனிடத்துச் சொரூபப்பிரகாசத்தால் சர்வஞ்ஞத்தன்மையிருக்கின்றது. இது பிம்பப்பிரதிபிம்பவாதத்தின் கிரமமாம்.

एतस्य ससंगत्वविकाराभ्यां बिंबलक्षणहीनता स्फूर्तिरूपत्वं बिंबवत् भासनं विदुः॥

(சு-ம்.)

இச் சிதாபாசனுக்குச் சங்கத்துவ விகாரத்தோடுகூடிய தன்மைகளால் பிம்பலக்ஷணமில்லாததன்மையும், விளக்கவடிவத்தன்மை எதுவோ அது பிம்பத்தைப்போலத் தோற்றுதலுமா மென்று வித்துவான்க ளறிகின்றார்கள்.

(வி-ம்.)

இச்சிதாபாசனுக்குச் சங்கத்தன்மைவிகாரத்தன்மைகளால் பிம்பவடிவஅசங்க அவிகாரி சைதந்யத்தின் இலக்ஷணமின்றியதன்மையும், ஸ்புரணவடிவத்தன்மை பிம்பத்தைப்போல் விளங்குதலுமா மென்பது பொருள். ஏதுவின் இலக்ஷணமின்றியதாய் ஏதுவைப்போலத் தோற்றுவதெதுவோ அது ஏதுவாபாச மெனப்படும். அதுபோல இச்சிதாபாசன் சேதனவடிவப் பிம்பத்தின் இலக்ஷணமின்றியதாய்ப் பிம்பத்தைப்போலத் தோற்றுகின்றதாகலின் பிம்பாபாசமா மென்பது பொருள். (கூரு)

அ. சிதாபாசனுக்குப் புத்தியோடுள்ள பேதத்தைச் சாதித்தற்குப் பூர்வபக்ஷமும் தடைவசனத்தால் சமாதானமும்.

[கூகக] न हि धीभावभावित्वादाभासोऽस्ति धियः पृथक् ।
यथा मृदल्पमेवोक्तं धीरप्येवं स्वदेहतः ॥ ३४ ॥

(அ-கை.)

இவ்வாறு சிதாபாசனது அவசியமின்மைவடிவ அப்பிரயோஜகத்துவத்தை நிராகரித்து, இப்போது சிதாபாசனது புத்திக்கு வேறான இருப்பிணைச் சாதித்தற்கு அவச்சேதவாதியின் பூர்வபக்ஷத்தைக் கூறுகின்றார்:—

यथा मृत् धीभावभावित्वात् आभासः धियः पृथक् न हि अस्ति ॥

(சு-ம்.)

எப்படி மண்ணுளது இருக்கின்றதோ அதுபோலப் புத்தியின் இருப்பால் இருப்பிணையுடையதாயிருத்தலின் சிதாபாசன் புத்தியைவிட வேறல்லன்.

(வி-ம்.)

எப்படி மண்ணிருக்கும்போதே இருப்பதாகிய கடம் மண்ணினும் பேதத்தை யடைகிறதில்லையோ, அதுபோலப் புத்தியின் இருப்பிலேயே இருப்பதாய சிதாபாசன் புத்தியைவிட வேறல்லன் என்பது தாற்பரியம்.

(அ-கை.)

இவ்வாறிருக்குமாயின் அப்போது தேகத்திற்கு வேறாகப் புத்தியு மில்லையென்பது சித்திக்குமென்று சித்தாந்தி வார்த்தையாகிய கட்டினுல் பரிகரிக்கின்ருர் :—

अल्पं एव उक्तं एवं धीः अपि स्वदेहतः ॥

(சு-ம்.)

வாதி! உன்ருற்சொல்லப்பட்டது அற்பமே. ஏனெனின் தேகம் இருந் தால்மாத்திரம் புத்தி இருத்தலின் புத்தியும் தனதுதேகத்தைவிட வே றன்று. (௩௪)

க. வார்த்தை வடிவபந்தனத்தினின்று விடுபடச் சங்கையும் சமாதானமும்.

[௩௩௭] देहे मृतेऽपि बुद्धिश्चेच्छास्त्रादस्ति तथा सति ।
बुद्धेरन्यश्चिदाभासः प्रवेशश्रुतिषु श्रुतः ॥ ३५ ॥

(அ-கை.)

பூர்வவாதி வார்த்தைவடிவ பந்தனமாகிய பிரதிபந்தியினின்றும் விடுப டுதற்குச் சங்கிக்கின்ருன் :—

देहे मृते अपि शास्त्रात् बुद्धिः अस्ति चेत् ॥

(சு-ம்.)

தேகம் இறக்கினும் சாஸ்திரப்பிரமாணத்தால் புத்தி யிருக்கின்றதெ ன்று கூறின்,

(வி-ம்)

தேகத்திற்கு வேருகப் புத்தி "स विज्ञानो भवति விஞ்ஞானமாகிய புத்தி யோடுகூடியதாகின்றது" என்றல் முதலிய சுருதியினுல் பெறப்பட்டதா யிருத்தலின் தேகம் மரித்தபின் அஃதில்லை யென்பதில்லை என்பது தாற்ப ரியம்.

(அ-கை.)

சுருதியின் வலியால் தேகத்திற்கு வேருகப் புத்தியை அங்கீகரிக்கின், அப்போது பிரவேச சுருதியின் வலியால் புத்திக்கு வேருகச் சிதாபாசனும் அங்கீகரிக்கத்தக்கவனுவ னென்று சித்தாந்தி கூறுகின்ருர் :—

तथा सति बुद्धेः अन्यः चिदाभासः प्रवेशश्रुतिषु श्रुतः ॥

(சு-ம்.)

அவ்வாருயின் புத்திக்கு வேருகச் சிதாபாசனும் பிரவேசசுருதிகளில் கேட்கப்பட்டிருக்கின்றது. (௩௫)

கம். புத்தியை உபாதியாகவுடைய சிதாபாசனது பிரவேசத்தின் சங்கையும் சமாதானமும்.

[கூகஅ] धीयुक्तस्य प्रवेशश्चेन्नैतरेये धियः पृथक् ।
आत्मा प्रवेशं संकल्प्य प्रविष्ट इति गीयते ॥ ३६ ॥

(அ-கை)

அப்படியானல் புத்தியை உபாதியாகவுடையவனுக்கே பிரவேசம் சம்பவிக்கின்றது. மற்றைய புத்தியின்றியவனுக்கில்லை யென்பதாக வாதி சங்கிக்கின்றான் :—

धीयुक्तस्य प्रवेशः चेत् ॥

(சு-ம்)

புத்தியோடு கூடியவனுக்கே பிரவேசம் சம்பவிக்கின்றதெனின்.

(அ-கை)

ஐதரேயசுருதியில் புத்திக்கு வேறுகப் பரமாத்மாவிற்கே பிரவேசம் கேட்கப்படுதலால் புத்தியின்றியவனுக்குப் பிரவேசம் சம்பவியாதென்று சொல்லாதே யென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

न ऐतरेये धियः पृथक् आत्मा प्रवेशं संकल्प्य प्रविष्टः इति गीयते ॥

(சு-ம்)

பொருந்தாது. ஏனெனின் ஐதரேய உபநிஷத்தில் "புத்திக்கு வேறாக ஆத்மா பிரவேசத்தைச் சங்கற்பித்துப் பிரவேசத்தை யடைந்தது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (கூசு)

கக. சுலோகம் கூசு-ற்கூறிய பிரவேசசுருதியை அர்த்தத்தால் படித்தல்.

[கூகக] कथं त्विदं साक्षदेहं मद्दते स्यादितीरणात् ।
विदार्य मूर्द्धसीमानं प्रविष्टः संसरत्ययम् ॥ ३७ ॥

(அ-கை)

அவ்வைதரேய உபநிஷத சுருதியினை அர்த்தத்தினல் படிக்கின்றார் :-

"अयं साक्षदेहं इदं मद्दते कथं तु स्यात् इति ईरणात् मूर्धसीमानं विदार्य प्रविष्टः संसरति" ॥

(சு-ம்)

இப்பரமாத்மா அக்ஷமும் தேகமுங்கூடிய இச்சடசமூகம் என்னையின்றி எப்படியிருக்கும் என்னுஞ் சங்கற்பத்தால் மஸ்தகத்தின் சீமையைப் பிளந்துகொண்டு பிரவேசித்துச் சம்சரிக்கின்றார்.

(வி-ம்)

இப்பரமாத்மா இந்திரிய தேகங்களோடு கூடியிருக்கும் இச்சடசமுதாயம் சேதனவடிவ னென்னைவிட்டு எங்ஙனமிருக்கும்? எவ்விதத்தாலும் நிர்வாகத்தினையடையாது என்று சங்கற்பித்து, மஸ்தகத்தின் * க0. சீமையாகிய மூன்று கபாலங்களின் மத்தியதேசத்தைப் பிளந்து அதாவது தனது சந்நிதிமாத்திரத்தாற் பேதித்துப் பிரவேசத்தையடைந்து சம்சரிக்கின்றார் அதாவது ஜாக்கிரதாதிகளை அநுபவிக்கின்றார் என்பது பொருள்.

கஉ. அசங்க ஆத்மாவினது பிரவேசத்தின் சங்கையும் சமாதானமும்.

[கூஉ0] कथं प्रविष्टोऽसंगश्चेत्सृष्टिर्वास्य कथं वद ।
मायिकत्वं तयोस्तुल्यं विनाशश्च समस्तयोः ॥ ३८॥

(அ-கை)

அப்படியானால் அசங்க ஆத்மாவின் பிரவேசமும் அயுக்தமாமென்று வாதி சங்கிக்கின்றான் :—

असंगः कथं प्रविष्टः चेत् ॥

(சு-ம்)

அசங்கன் எப்படிப் பிரவேசத்தை யடைந்தானெனின்.

(அ-கை)

சித்தாந்தி இவ்வினை சிருஷ்டியிலும் சமானமாமென்று கூறுகின்றார்:—

अस्य सृष्टिः वा कथं वद ॥

(சு-ம்.)

அப்போது இவ்வசங்கனுக்குச் சிருஷ்டியும் எப்படி உண்டாகிறது? அதனை வாதியே சொல்வாயாக.

(அ-கை)

அப்படியானால் சிருஷ்டிகர்த்தா மாயிகனாயிருத்தலின் ஜகத்வடிவமாய் உற்பத்தியாதலாகிய இவனது சிருஷ்டியில் தோஷமில்லை யென்றாசங்கித்து, இச்சமாதானம் பிரவேசகர்த்தாவினும் சமானமாமென்று கூறுகின்றார் :-

तयोः मायिकत्वं तुल्यम् ॥

---

க0. ஸ்திரீகளின் கேசத்தினது விபாகத்தின் மத்தியின் இரேகைவடிவ சீமந்தம் எதுவோ அதன் முடிவு எங்குண்டாகின்றதோ அது அல்லது தூர்ப்பலமான மனிதனது மஸ்தகத்தில் முண்டனஞ்செய்தகாலத்து எந்த மூன்றுகபாலங்கள் தோற்றுகின்றனவோ அவற்றின் மத்தியதேசம் எதுவோ அது மஸ்தகத்தின் சீமை யெனப்படும்.

(சு-ம்)

அச்சிருஷ்டிகர்த்தா பிரவேசகர்த்தாவாகிய இருவருக்கும் மாயிகத்துவம் சமானமாம்.

(அ-கை)

இவ்விருவரது மாயிகத்தன்மையில் மாயையின் நிவிருத்தியினால் நிவர்த்தியாதல்வடிவ ஏதுவும் சமானமா மென்று கூறுகின்றார்:—

च तयोः विनाशः समः ॥

(சு-ம்)

அவர்களது நிவிருத்தியும் சமானமாம். (கூ-அ)

கூ. ஜீவனது ஔபாதிக வடிவத்தின் விநாசமுடைமையைப் பிரதிபாதிக்கும் சுருதி.

[கூ௨௧] समुत्थायैष भूतेभ्यस्तान्येवानुविनश्यति ।
विनष्टमिति मैत्रेय्यै याज्ञवल्क्य उवाच हि ॥ ३९ ॥

(அ-கை)

"प्रज्ञानघन एवैतेभ्यो भूतेभ्यः समुत्थाय तान्येवानुविनश्यति न प्रेत्य संज्ञास्ति"॥ பிரஞ்ஞானகநமாகிய அதிசய ஞானவடிவ ஆத்மாவே இத்தேகாதி பூதங்களினின்றும் செவ்வையாக எழுந்து அதாவது அவற்றின் பிறப்பால் பிறப்பினையடைந்து அவற்றைத் தொடர்ந்தே நாசத்தை யடைகின்றது. நாசத்திற்குப்பின் இதற்கு ஞானமென்னும் பெயர் இருக்கிறதில்லை." என்று ஔபாதிகவடிவத்திற்கு விநாசமுடைமையைப் பிரதிபாதிக்கும் சுருதியினைக் காட்டுகின்றார்:—

"एषः भूतेभ्यः समुत्थाय तानि एव अनुविनश्यति" इति विनष्टं याज्ञवल्क्यः मैत्रेय्यै हि उवाच ॥

(சு-ம்)

"இவ்வாத்மா பூதங்களாலெழுந்து அவற்றின்பின்னரே நாசத்தை யடைகின்றது." இவ்வாறு விநாசத்தையடைந்த இவ்வுபாதியினையுடைய ஆத்மாவினை யாஞ்ஞவல்கியமுனியானவர் மைத்திரேயியின்பொருட்டுக் கூறினார்.

(வி-ம்)

இம்மிக்க ஞானகநமாகிய ஆத்மா இத்தேகேந்திரியாதிவடிவ பஞ்சபூதங்களின் காரியமாகிய நிமித்தவடிவ உபாதிகளால் எழுந்து அதாவது ஜீவத்தன்மையின் அபிமானத்தை யடைந்து அத்தேகாதிகள் நாசமாகிய

பின் நாசத்தையடைகின்றது அதாவது தேகாதிகளாலாகிய ஜீவத்தன்மையின் அபிமானத்தை விடுகின்றது. இவ்வாறு தேகாதி உபாதியோடு கூடிய ஆத்மாவின் சொரூபத்திற்கு விநாசமுடைமையை யாஞ்ஞவல்கிய முநியானவர் மைத்திரேயியென்னும் தனது ஸ்திரீக்குச் சொன்னார் என்பது பொருள். (கூக)

சச. சுருதியினால் கூடஸ்தனது விவேசனமும் அவரது
அவிநாசித்தன்மையில் ஏதுவும்.

[கூஉஉ] अविनाश्ययमात्मेति कूटस्थः प्रविवेचितः ।
मात्रासंसर्ग इत्येवमसंगत्वस्य कीर्तनात् ॥ ४० ॥

(அ-கை.)

"अविनाशी वा अरेऽयमात्माऽनुच्छित्तिधर्मा மைத்திரேயி! இவ்வாத்மா அவிநாசி வரையறுத்தலின்றிய தர்மமுடையதாம்." என்னுஞ் சுருதியினால் கூடஸ்தராகிய நிருபாதிக ஆத்மா அச்சோபாதிக சிதாபாசவடிவத்தினும் வேறெனக் காட்டப்படுகின்றதென்று கூறுகின்றார்:—

अयं आत्मा अविनाशी इति कूटस्थः प्रविवेचितः ॥

(சு-ம்)

"இவ்வாத்மா அவிநாசி" என்று கூடஸ்தர் விவேசனஞ் செய்யப்பட்டது அதாவது சோபாதிகவடிவத்தினின்றும் வேறுபடுத்துக்காட்டப்பட்டது.

(அ-கை)

"मात्रासंसर्गस्त्वस्य भवति இக்கூடஸ்த ஆத்மாவிற்கு மாத்திரையாகிய தேகாதிகளோடு சம்பந்தமின்மை யிருக்கின்றது" என்னுஞ் சுருதியினால் ஆத்மாவின் அவிநாசித்தன்மையால் அசங்கத்தன்மைவடிவ ஏதுவினை யாஞ்ஞவல்கியமுனி கூறினாரென்று கூறுகின்றார்:—

मात्रासंसर्गः इति एवं असंगत्वस्य कीर्तनात् ॥

(சு-ம்)

மாத்திரையோடு சம்சர்க்கமின்மை யிருக்கின்றதென்பதாக ஆத்மாவின் அசங்கத்தன்மையைக் கூறுதலால்.

(வி-ம்)

பிரமாஞானத்தின் விஷயமாக்கப்படும் தேகாதிகள் எவையோ அவை இங்கு மாத்திரை யெனப்படுகின்றன. அவற்றோடு இவ்வாத்மாவிற்குச் சம்பந்தமின்மை யிருக்கின்றது என்பது பொருள். (சο)

௪௫. ஜீவனது ஔபாதிகவடிவத்தின் அவிநாசித்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதியின் அபிப்பிராயம்.

[௬௨௩] जीवापेतं वाव किल शरीरं म्रियते न सः ।
इत्यत्र न विमोक्षोऽर्थः किंतु लोकांतरे गतिः ॥ ४१ ॥

(அ-கை.)

அப்படியானால் "जीवापेतं वाव किल इदं म्रियते न जीवो म्रियते ஜீவனின்றியபிரசித்த இச்சரீரம் இறக்கின்றது. ஜீவன் இறப்பதில்லை." என்னுஞ் சுருதியினால் இந்த ஔபாதிக ஆத்மாவிற்கும் அவிநாசித்தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது என்று ஆசங்கித்து, அந்தச் சுருதி அந்நியதேகத்தால் அடையப்படும் பரலோகத்தை விஷயஞ்செய்வதாயிருத்தலால் ஆத்தியந்திகநாசவடிவ ஜீவனது மோக்ஷத்தின் அபாவவடிவ விஷயமுடையதாயில்லை என்று கூறுகின்றார்:—

जीवापेतं वाव शरीरं किल म्रियते सः न इति अत्र विमोक्षः अर्थः न किंतु लोकान्तरे गतिः ॥

(சு-ம்.)

"ஜீவனின்றிய பிரசித்தமாய இச்சரீரமே மரிக்கின்றது. அச்சீவன் மரிக்கிறதில்லை." என்னுமிச்சுருதியில் ஜீவனுக்கு முன் ௩௯-வது சுலோகத்திற் கூறிய ஜீவனது மோக்ஷத்தினைப்போன்ற மோக்ஷவடிவ அர்த்தம் சொல்லப்படவில்லை. ஆனால் லோகாந்தரத்திற் செல்லுதல் கூறப்பட்டிருக்கின்றது. (௪௧)

௪௬. விநாசிஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு அபேதஞானம் சம்பவியாமையின் சங்கையும் சமாதானமும்.

[௬௨௪] नाहं ब्रह्मेति बुध्येत स विनाशीति चेन्न तत् ।
सामानाधिकरण्यस्य बाधायामपि संभवात् ॥ ४२ ॥

(அ-கை.)

அப்படியானால் ஜீவனுக்கு விநாசித்தன்மையுளதாயின், "யான் பிரஹ்ம" மென்று அவிநாசியாகிய பிரஹ்மத்தோடு அபேதஞானம் நிகழாது என்பதாக வாதி மூலத்திற் சங்கிக்கின்றான் :—

विनाशी सः "अहं ब्रह्म" इति न बुध्येत इति चेत् ॥

(சு-ம்.)

அந்தச் சீவன் விநாசியாயின் "நான் பிரஹ்ம" மென்று அறியானெனின்.

(அ-கை.)

விநாசியாகிய அச்சீவன் "நான் பிரஹ்மம" மென்று பிரஹ்மவடிவமாகத் தன்னை யறியான்; ஏனெனின் விநாசியாகிய ஜீவன், அவிநாசியாகிய பிரஹ்மம் என்னும் பிரண்டன் ஐக்கியத்திற்கும் விரோதமிருத்தலால். இவ்வாறு கூறின் முக்கியசாமாநாதிகரணியத்தின் அபாவ மிருக்கினும், பாதத்தில் சாமானாதிகரணியம் சம்பவித்தலால் ஜீவத்தன்மையைப் பாதித்துப் பிரஹ்மத்தன்மை அறியக்கூடியதாம் என்று சித்தாந்தி கூறுகின்றார்:-

तत् न सामानाधिकरण्यस्य बाधायां अपि संभवात् ॥

(சு-ம்.)

அவ்வாறு கூறுதல் பொருந்தாது; ஏனெனின் * கக. சாமாநாதிகரணியம் பாதத்திலும் சம்பவித்தலால். (சஉ)

---

* கக. பரியாயமல்லாத பதங்களுக்கு ஒரு விபக்தியுடைமை யுளதாக ஒரு பொருளிலுண்டாம் பிரவிருத்தி (தாற்பரியவடிவ சம்பந்தம்) **சாமாநாதிகரணிய** மெனப்படும். அல்லது சிலவிடத்து ஓர் அதிகரண(ஆசிரய)த்தில் இருக்கும் தர்மங்களுக்குள்ள ஓர் அதிகரணமுடைமைவடிவச்சம்பந்தம் **சாமாநாதிகரணிய** மெனப்படும். அல்லது சிலவிடத்துப் பரஸ்பரம் அபின்னமாகிய இரண்டு பதார்த்தங்களின் அபின்னத்தன்மைவடிவச்சம்பந்தமும் **சாமாநாதிகரணிய** மெனப்படும். சாமாநாதிகரணியமுடைய இரண்டு பதம் அல்லது தர்மம் அல்லது பதார்த்தம் **சமாநாதிகரணமாம்**. அவற்றின் சம்பந்தம் **சாமாநாதிகரணிய** மெனப்படும். அது க. முக்கியசாமாநாதிகரணியம், உ. பாதசாமாநாதிகரணியம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

க. எந்த வஸ்துவிற்கு எதனோடு எப்போதும் அபேத மிருக்கின்றதோ அந்த வஸ்துவிற்கு அதனோடு **முக்கியசாமாநாதிகரணியம்** சொல்லப்படும். அதனையே **அபேதசாமாநாதிகரணிய** மென்றும் கூறுவர். எங்ஙனம் கடாகாசத்திற்கு மகாகாசத்தோடு சதா அபேத மிருக்கின்றதோ, அதனால் கடாகாசத்திற்கு மகாகாசத்தோடு **முக்கியசாமாநாதிகரணிய** மிருக்கின்றதோ, அங்ஙனமே கூடஸ்தருக்குப் பிரஹ்மத்தோடு எப்போதும் அபேத மிருக்கின்றது. அதனால் கூடஸ்தருக்குப் பிரஹ்மத்தோடு **முக்கியசாமாநாதிகரணிய** மிருக்கின்றது.

உ. எந்த வஸ்துவிற்குப் பாத முண்டாய் எதனோடு அபேத முண்டாகின்றதோ, அந்தவஸ்துவிற்கு அதனோடு **பாதசாமாநாதிகரணியம்** சொல்லப்படுகின்றது. எங்ஙனம்: தாணு அல்லது பிரதிபிம்பத்திற்குப் பாதமுண்டாய்ப் புருஷனோடாவது அல்லது பிம்பத்தோடாவது அபேதமுண்டாகின்றது. ஆதலால் தாணு அல்லது பிரதிபிம்பத்திற்குப் புருஷனோடு அல்லது பிம்பத்தோடு **பாதசாமாநாதிகரணிய** மிருக்கின்றது. இவ்வாறு சிதாபாசனுக்கும் பாதமுண்டாய்க் கூடஸ்தனோடாவது பிரஹ்மத்தோடாவது அபேதமுண்டாகின்றது. ஆதலால் சிதாபாசனுக்குக் கூடஸ்தனோடாவது அல்லது பிரஹ்மத்தோடாவது பாதசாமாநாதிகரணிய முண்டு.

கஎ. வார்த்திககாரரால் பாதசாமாநாதிகரணியத்தின்றன்மை திருஷ்டாந்தத்தோடு நிரூபிக்கப்படுதல்.

[கூஉ௫] योऽयं स्थाणुः पुमानेषः पुंधिया स्थाणुधीरिव ।
ब्रह्मास्मीति धियाऽप्येषा ह्यहं बुद्धिर्निवर्त्यते ॥ ४३ ॥

(அ-கை.)

பாதசாமாநாதிகரணியத்தால் வாக்கியார்த்தம் நிச்சயிக்குந்தன்மையினை வார்த்திககாரர் திருஷ்டாந்தத்தோடு கூறிய அர்த்தத்தினை அவர் வாக்கியத்தினை உதகரித்தலோடு கூறுகின்றார் :—

"यः अयं स्थाणुः एषः पुमान् पुंधिया स्थाणुधीः इव ब्रह्म अस्मि" इति धिया अपि एषा हि अहं बुद्धिः निवर्त्यते ॥

(சு-ம்.)

"இத்தாணு யாதோ அதுவே இப்புருடன்" என்னுமிடத்துப் புருஷபுத்தியினால் ஸ்தாணுபுத்தியினைப்போல "யான் பிரஹ்ம" மென்னும் புத்தியினாலும் இந்த யான் என்னும் புத்தி நிவிருத்திக்கப்படுகின்றது.

(வி-ம்.)

சாமாநாதிகரணியத்தின் பாதப்பொருட்டன்மை இவ்வகைத்தாம் :—தாணு இப்புருடனென்னும் வாக்கியத்தில் எப்படிப் புருஷத்தன்மையின் ஞானத்தால் ஸ்தாணுத்தன்மையின் புத்தி நிவர்த்திக்கப்படுகின்றதோ, அது போல "யான் பிரஹ்மம்" என்னும் ஞானத்தினால் "யான் கர்த்தா" என்றல் முதலிய வடிவினதாகிய அகம்புத்தி முழுவதும் நிவிருத்திக்கப்படுகின்றது. (௪௩)

கஅ. சுலோகம் கூஉ௫-ற்கூறிய அர்த்தத்தின் சமாப்தியும் பலிதமும்.

[கூஉ௬] नैष्कर्म्यसिद्धावप्येवमाचार्यैः स्पष्टमीरितम् ।
सामानाधिकरण्यस्य बाधार्थत्वमतोऽस्तु तत् ॥ ४४ ॥

(அ-கை.)

இதுவுமது :—

एवं आचार्यैः नैष्कर्म्यसिद्धौ अपि सामानाधिकरण्यस्य बाधार्थत्वं स्पष्टं ईरितम् ॥

(சு-ம்.)

இவ்வாறு வார்த்திககாரராகிய ஆசாரியர்களால் நைஷ்கர்மியசித்தியிலும் சாமாநாதிகரணியத்தின் பாதார்த்தத்தன்மை தெளிவாய்க் கூறப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார் :—

अतः तत् अस्तु ॥

(சு-ம்.)

ஆதலால் அது இருக்குக.

(வி-ம்.)

இக்காரணத்தால் "நான் பிரஹ்ம" மென்னும் வாக்கியத்தில் அச்சாமானாதிகரணியத்திற்குப் பாதார்த்தத்தன்மை இருக்குக என்பது பொருள். (௪௪)

கக. சுருதியினால் பாதசாமானாதிகரணியத்தைக் கூறுதல்.

[௬௨௭] सर्वं ब्रह्मेति जगता सामानाधिकरण्यवत् ।
अहं ब्रह्मेति जीवेन सामानाधिकृतिर्भवेत् ॥ ४५ ॥

(அ-கை.)

அப்படியானால் இவ்வாறு வார்த்திககாரரால் சொல்லப்பட்டிருக்கினும், சுருதிகளில் பாதத்தில் சாமானாதிகரணியம் ஓரிடத்தும் காணப்படவில்லையே யென்றாசங்கித்து, "सर्वं खल्विदं ब्रह्म இவ்வெல்லாமாகிய ஜகத்து நிச்சயமாகப் பிரஹ்மம்" என்னுஞ் சுருதிவாக்கியத்தில் பாதத்தில் சாமானாதிகரணியம் காணப்படுகின்றமையான், இங்கு மகாவாக்கியத்திலும் அச்சாமானாதிகரணிய முண்டாகு மென்று கூறுகின்றார் :—

"सर्वं ब्रह्म" इति जगता सामानाधिकरण्यवत् "अहं ब्रह्म" इति जीवेन सामानाधिकृतिः भवेत् ॥

(சு-ம்.)

"சகல ஜகத்தும் பிரஹ்மம்" *கஉ. என்னுஞ் சுருதிவாக்கியத்தில் ஜகத்தோடு பிரஹ்மத்திற்குச் சாமானாதிகரணிய முண்டாதல்போல "நான்

---

* கஉ. "சகல ஜகத்தும் பிரஹ்மம்" என்னுஞ் சுருதிவாக்கியத்தில் ஜகத்திற்கு பிரஹ்மத்தோடு ஒருமைவடிவ சாமானாதிகரணியம் கூறப்பட்டிருக்கின்றது. அங்கு முக்கிய சாமானாதிகரணியம் அங்கீகரிக்கப்படின், பிரஹ்மத்தில் திருசியத்தன்மை விநாசித்தன்மை விகாரித்தன்மைமுதலிய ஜகத்தர்மங்களின் பிராப்திவடிவ அநர்த்தமுண்டாகும். ஆதலால் ஜகத்திற்குப் பாதத்தினால் பிரஹ்மத்தோடு ஒருமைவடிவ பாதசாமானாதிகரணியம் சம்பவிக்கின்றது. ஆதலால்,

(க) "ஜகத்தின் அபாவமுடையது பிரஹ்மம்" (உ) அல்லது "ஜகத்தின் அபாவம் பிரஹ்மம்" என்பது சுருதியின் பொருளாம்.

(க) எவர்மதத்தில் ஆரோபிதத்தின் அபாவம் (நிவிருத்தி) அதிஷ்டானத்தினும் வேறாமோ அவர்மதத்தில் "ஜகத்தின் அபாவமுடையது பிரஹ்ம" மென்னும் போத முண்டாகின்றது.

பிரஹ்ம" மென்னும் வாக்கியத்தில் ஜீவனோடு பிரஹ்மத்திற்குச் சாமாநாதி கரணிய முண்டாகும். (௪௫)

௨௰. சாமாநாதிகரண்ணியநிராகரணத்தின் அபிப்பிராயம்.

[௬௨அ] सामानाधिकरण्यस्य बाधार्थत्वं निराकृतम् ।
प्रयत्नतो विवरणे कूटस्थत्वाविवक्षया ॥ ४६ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது விவரணாசாரியரான ஸ்ரீ பிரகாசாத்மசரணசுவாமியானவர் விவரணமென்னும் கிரந்தத்தில் பாதசாமாநாதிகரணியத்தினை எதனால் நிராகரித்திருக்கின்றாரென்று ஆசங்கித்து, அவ்விவரணாசாரியருக்கு அகம்சப்தத்தால் கூடஸ்தரைச் சொல்லுதலில் கருத்தாமாகலின் நிராகரித்திருக்கின்றாரென்று கூறுகின்றார்:—

विवरणे कूटस्थत्वविवक्षया सामानाधिकरण्यस्य बाधार्थत्वं प्रयत्नतः निराकृतम् ॥

(சு-ம்.)

* கூ. விவரணகிரந்தத்தில் கூடஸ்தத்தன்மையினைக் கூறும் விருப்பத்தினால் சாமாநாதிகரணியத்தின் பாதார்த்தத்தன்மை அதாவது பிரஹ்மத்திற்குச் சிதாபாசனது அபாவமுடைமை அல்லது அபாவ அர்த்தவடிவத்தன்மை பிரயத்னத்தால் நிராகரிக்கப்பட்டிருக்கின்றது. (௪௬)

---

(உ) எவர்மதத்தில் ஆரோபிதத்தின் அபாவம் அதிஷ்டானவடிவமோ அவர்மதத்தில் "ஜகத்தின் அபாவம் பிரஹ்ம" மென்று சுருதியின் அர்த்தஞான முண்டாகின்றது.

இவ்வாறு சாமாநாதிகரணியத்திற்குப் பாதார்த்தவடிவத்தன்மை சுருதியில் கேட்கப்பட்டிருக்கின்றது. இவ்வாறே "நான் பிரஹ்ம" மென்னும் வாக்கியத்திலு மறிந்துகொள்க.

* கூ. விவரணகிரந்தத்தில் மகாவாக்கியத்தில் பாதசாமாநாதிகரண்ணியத்தினை நிராகரித்திருப்பது எதுவோ அதற்குச் சமாதான மிதுவாம்:—"அகம் (நான்)" "துவம் (நீ)" முதலிய சப்தங்களின் அர்த்தமாகிய சிதாபாசவிசிஷ்ட புத்திவடிவ ஜீவன் வியபிசாரியாயிருத்தலால் அத்தியஸ்தமாம். "சுவயம்" சப்தத்தின் அர்த்தமாகிய கூடஸ்தன் எங்கும் அநுகதமாயிருத்தலால் அதிஷ்டானமாம். கூடஸ்தனிடத்து ஜீவனது சொரூபாத்தியாசமும் ஜீவனிடத்துக் கூடஸ்தனது சம்பந்தாத்தியாசமும் இருக்கின்றன. இவ்வாறு கூடஸ்தஜீவர்களின் அந்நியோந்நியாத்தியாசத்தால் பரஸ்பரம் விவேக முண்டாகிறதில்லை. ஆதலால் பிரஹ்மத்தோடு கூடஸ்தனுக்குள்ள முக்கியசாமாநாதிகரணியத்தினை ஜீவனிடத்து வியவகரிக்கின்றனர். ஜீவனிடத்துக் கூடஸ்ததர்மத்தின் ஆரோ

[கூஉகூ] शोधितस्त्वंपदार्थो यः कूटस्थो ब्रह्मरूपताम् ।
तस्य वक्तुं विवेरण तथोक्तमितरत्र च ॥ ४७ ॥

(அ-கை.)

"கூடஸ்தத்தன்மையினைச் சொல்லுங்கருத்தால்" என்று கூஉஅ-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினை வர்ணிக்கின்றார்:—

शोधितः त्वंपदार्थः यः कूटस्थः तस्य ब्रह्मरूपतां वक्तुं विवरणे च इतरत्र तथा उक्तम् ॥

(சு-ம்.)

சோதிக்கப்பட்ட துவம்பதத்தின் அர்த்தமாகிய கூடஸ்தனுக்குப் பிரஹ்மவடிவத்தன்மையைச் சொல்லுதற்பொருட்டு விவரணத்திலும் பிறநூல்களிலும் அவ்வாறு கூறியிருக்கின்றது.

(வி-ம்.)

புத்திமுதலியவற்றினின்றும் விவேகிக்கப்பட்ட துவம்பதத்தின் லக்ஷியமாகிய அதாவது மேல் கூங0-வது சுலோகத்தில் கூறும் லக்ஷணமுடைய கூடஸ்தனது சத்தியாதிலக்ஷணப் பிரஹ்மவடிவத்தன்மையினைச் சொல்லுதற்பொருட்டு விவரணமுதலிய கிரந்தங்களில் பாதசாமாநாதிகரணியத்தின் நிராகரணபூர்வகமான முக்கியசாமாநாதிகரணியம் கூறப்பட்டிருக்கின்றது என்பது பொருள். (சஎ)

---

பமின்றி மித்தியாஜீவனுக்குச் சத்தியப்பிரஹ்மத்தோடு முக்கியசாமாநாதிகரண்ணியம் சம்பவியாது. ஆதலால் ஜீவனது ஆசிரயமாகிய அந்தக்கரணத்தின் அதிஷ்டானமாகிய கூடஸ்தனது தர்மத்தைச் சொல்லுங்கருத்தால் ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய சாமாநாதிகரண்ணியம் விவரணகாரரால் எழுதப்பட்டிருக்கின்றது. இவ்வாறு வித்தியாரண்ணியசுவாமிகளால் சித்திரதீபத்தில் விவரணகாரரது வசனத்தோடு விரோதமின்றியதன்மை எழுதப்பட்டிருக்கின்றது. ஙகூஉ முதல் ஙகூ வரைச் சுலோகங்களிற் காண்க. ஆனால் விவரணகாரர் மதத்தில் சிதாபாசவடிவ ஜீவன் கூடஸ்தனிடத்து ஆரோபிதமன்று. பிம்பத்தின் சொரூபமே பிரதிபிம்பமாகலின் பிரதிபிம்பவடிவ ஜீவத்தன்மையோ மித்தையாம். பிரதிபிம்பவடிவ ஜீவனது சொரூபம் சத்தியமாம். ஆதலால் ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கியசாமாநாதிகரண்ணியம் சம்பவிக்கின்றது. வித்தியாரண்ணியசுவாமிகள் விவரணகிரந்தத்திற்கு முற்கூறிய அபிப்பிராயத்தைக் கூறியது பிரௌடிவாதத்தாற் கூறியதாம். பிரதிபிம்பத்தினை மித்தையாகக் கொண்டும் ஜீவனிடத்துக் கூடஸ்தத்தன்மையினைக் கூறுங் கருத்தால் மகாவாக்கியங்களில் விவரணத்திற் கூறிய முக்கிய சாமாநாதிகரண்ணியம் சம்பவிக்கின்றது. ஆதலால் முக்கியசாமாநாதிகரண்ணியம் சம்பவியாமையால், பிரதிபிம்பத்திற்குச் சத்தியத்தன்மையை அங்கீகரித்தல் தகுதியன்றென்று தனது மேன்மையால் வாதஞ்செய்திருக்கின்றார். ஆதலால் இது பிரௌடிவாதமாம்.

௨. கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவம் நிகழ்தற்பொருட்டு அதன் விவேசனபூர்வக ஜீவன்முதலிய ஜகத்தின் மித்தியாத்தன்மை ௬௩௦-௬௫௮.

க. கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவ முண்டாதற்பொருட்டுப் புத்திமுதலியவற்றினின்றும் விவேகித்தல் ௬௩௦-௬௪௧.

க. கூடஸ்தசப்தத்தின் அர்த்தம்.

[௬௩௦] देहेंद्रियादियुक्तस्य जीवाभासभ्रमस्य या ।
अधिष्ठानचितिः सैषा कूटस्थाऽत्र विवक्षिता ॥ ४८ ॥

(அ-கை.)

இப்போது கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவம் நிகழச்செய்தற்குக் கூடஸ்தசப்தத்தினால் கருதப்பட்ட பொருளைக் கூறுகின்றார் :—

देहेंद्रियादियुक्तस्य जीवाभासभ्रमस्य या अधिष्ठानचितिः सा एषा अत्र कूटस्था विवक्षिता ॥

(சு-ம்.)

தேகேந்திரியமுதலியவற்றோடுகூடிய ஜீவாபாசவடிவப்பிரமத்தின் அதிஷ்டானமாகிய சைதந்நியம் எதுவோ அது இங்குக் கூடஸ்தனென்று கருதப்படுகிறது.

(வி-ம்.)

இவ்வாறாகவே தேகேந்திரியாதி இரண்டு சரீரங்களோடு கூடிய சிதாபாசவடிவப்பிரமத்தின் அதிஷ்டானசைதந்நியம் எதுவோ அது இங்கு வேதாந்தசாஸ்திரங்களில் கூடஸ்தத்தன்மையாற் சொல்லக்கருதியதாம்.

ஆதிசப்தத்தால் மனமுதலியன கொள்ளப்படுகின்றன. (௪௮)

௨. பிரஹ்மசப்தத்தின் அர்த்தம்.

[௬௩௧] जगद्भ्रमस्य सर्वस्य यदधिष्ठानमीरितम् ।
त्रय्यंतेषु तदत्र स्याद्ब्रह्मशब्दविवक्षितम् ॥ ४९ ॥

(அ-கை.)

பிரஹ்மசப்தத்தின் அர்த்தத்தினைக் கூறுகின்றார் :—

सर्वस्य जगद्भ्रमस्य अधिष्ठानं यत् त्रय्यंतेषु ईरितम् । तत् अत्र ब्रह्मशब्द-विवक्षितं स्यात् ॥

(சு-ம்.)

சகலஜகத்பிரமத்துக்கும் அதிஷ்டானமாகிய எந்தச் சைதந்நியம் உபநிடதங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றதோ அது இங்குப் பிரஹ்மசப்தத்தால் சொல்லக்கருதியதாம்.

(வி-ம்.)

சகலஜகத்தின் கற்பனைக்கும் அதிஷ்டானமாகிய எந்தச் சைதந்நியம் வேதாந்தங்களில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றதோ அது இங்குப் பிரஹ்மசப்தத்திறுற் சொல்லக்கருதியதாம். (சகூ)

௯. ஜீவனுக்குக் கைமுதிகநியாயத்தால் ஆரோபிதத்தன்மை.

[கூ௫௨] एतस्मिन्नेव चैतन्ये जगदारोप्यते यदा ।
तदा तदेकदेशस्य जीवाभासस्य का कथा ॥ ५० ॥

(அ-கை.)

அப்படியானுல் " ஜீவவடிவப் பிரமத்தின் அதிஷ்டானசைதன்னியம் கூடஸ்தனும்." என்று கூ௫௧-வது சுலோகத்திற் கூறியது பொருந்தாது; ஜீவனுக்கு ஆரோபிதத்தன்மை சித்தித்தலா லென்முசங்கித்து, அந்த ஜீவனது ஆரோபிதத்தன்மையினைக் கைமுதிகநியாயத்தாற் சாதிக்கின்ருர்:—

एतस्मिन् एव चैतन्ये यदा जगत् आरोप्यते । तदा तदेकदेशस्य जीवाभासस्य का कथा ॥

(சு-ம்.)

இதே சைதந்நியத்தில் எப்போது ஜகத்து ஆரோபிதமாகின்றதோ, அப்போது ஜகத்தின் ஏகதேசவடிவ சிதாபாசனது ஆரோபிதத்தன்மையில் என்ன சொல்லவேண்டியதிருக்கிறது ?

(வி-ம்.)

" अनेन जीवेनानुप्रविश्य இந்தச் சீவவடிவத்தால் பின்னர்ப் பிரவேசித்து" என்றல்முதலிய சுருதியினுல் சீவனுக்கு ஜகத்தின் ஏகதேசவடிவத்தன்மை சித்தித்திருக்கின்றது. (௫0)

௭. "தத்" "துவம்" பதங்களினது அர்த்தத்தின் ஔபாதிக பேதமும் வாஸ்தவ அபேதமும்.

[கூ௫௫] जगत्तदेकदेशाख्यसमारोप्यस्य भेदतः ।
तत्त्वंपदार्थौ भिन्नौ स्तो वस्तुतस्त्वेकता चितेः ॥ ५१ ॥

(அ-கை.)

அப்படியானால் ஜகத்தின் அதிஷ்டானமாகிய சைதந்நியம் ஒன்றாயிருத்தலின் "தத் துவம்" என்னு மிரண்டு பதங்களினது அர்த்தங்களுக்கும் பேதமின்மை யுளதாகத் "தத் துவம்" பதங்களின் அர்த்தங்களைப் பின்னமாகக் கூறுதலால் புநருத்தி யுண்டாகு மென்றாசங்கித்து, அந்தத் "தத் துவம்" பதங்களின் அர்த்தங்களுக்கு உபாதியினாலாகிய பேதமும் வாஸ்தவ அபேதமு மிருத்தலால் புநருத்திதோஷ மில்லை யென்று கூறுகின்றார்:—

जगत्तदेकदेशाख्यसमारोप्यस्य भेदतः तत्त्वंपदार्थौ भिन्नौ स्तः वस्तुतः तु चितेः एकता ॥

(சு-ம்.)

ஜகத்து, ஜகத்தின் ஏகதேசம் என்னும் பெயரையுடைய ஆரோப்பிய வஸ்துவாகிய உபாதியின் பேதத்தால் "தத் துவம்" பதங்களின் அர்த்தம் பின்னமாம். உண்மையாகவோ சேதனத்துக்கு ஏகத்துவ மிருக்கின்றது.

(வி-ம்.)

ஜகத்து, ஜகத்தின் ஏகதேச மென்னும் இரண்டு தேகங்களோடுங் கூடிய சிதாபாசன் என்னும் பெயர் எதற்கிருக்கின்றதோ அத்தன்மைய ஆரோப்பியத்தின் பேதத்தால். இங்கு ஆரோப்பியசப்தத்திற்கு ஜாதியில் ஒருமையாம். (௫௧)

௫. சிதாபாசனுக்கு அதிஷ்டானம் ஆரோப்பிய மென்னு மிரண்டன் தர்மத்தோடு கூடியதன்மையால் ஆரோபிதத்தன்மை.

[௬௩௪] कर्तृत्वादीन्बुद्धिधर्मान्स्फूर्त्याख्यां चात्मरूपतां ।
दधद्विभाति पुरत आभासोऽतो भ्रमो भवेत् ॥ ५२ ॥

(அ-கை.)

அப்படியானால் சிதாபாசனுக்குச் சுத்தியின் இரஜதமுதலியவற்றினைப் போல * ௧௪. அதிஷ்டான ஆரோப்பிய மென்னு மிரண்டன் தர்மமுடைமை தோற்றாமையால் எப்படி ஆரோபிதத்தன்மை யுண்டென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

*௧௪. சுத்தியில் ஆரோபிக்கப்பட்ட இரஜதத்தில் அதிஷ்டானசுத்தியின் இதந்தையும் ஆரோப்பிய இரஜதத்தின் இரஜதத்தன்மையுமாகிய இரண்டு தர்மங்களும் தோற்றுகின்றன. ஆதலால் இரஜதம் ஆரோபிதமாம். அவ்வாறே கூடஸ்தனிடத்து ஆரோபித சிதாபாசனிடத்திலும் ஆரோபிதத்தன்மை சித்தித்தற்பொருட்டு அதிஷ்டான ஆரோப்பியங்களினது தர்மத்தின் பிரதீதி சொல்லவேண்டு மென்பது சங்கையின் அபிப்பிராயம்.

बुद्धिधर्मान् कर्तृत्वादीन् च स्फूर्त्याख्यां आत्मरूपतां दधत् पुरतः विभाति । अतः आभासः भ्रमः भवेत् ॥

(சு-ம்)

புத்தியின் தர்மங்களாகிய கர்த்திருத்துவமுதலியவற்றையும், விளக்க மென்னும் ஆத்மவடிவத்தன்மையினையும் தரிக்கின்றவனாய் முன் விளங்கு கின்றானாதலால் ஆபாசன் பிரமவடிவ மாகின்றான்.

(வி-ம்.)

புத்தியுபாதிவாயிலாக ஆரோபிதமாகிய கர்த்திருத்துவபோக்திருத்து வம் பிரமாத்திருத்துவமுதலியவற்றையும் ஸ்புரணசொரூப ஆத்மாவின் வடி வத்தன்மையினையும் தரிக்கின்றவனாய் வெளிப்படையாகக் காணப்படுகின் றானாதலால் ஆபாசன் கற்பிதன் என்பது பொருள். (ருஉ)

சு. சுலோகம் கூகூச-ல் கூறிய பிரமவடிவ சம்சாரப்பிரமத்தின் காரணம்.

[கூஙடு] का बुद्धिः कोऽयमाभासः को वात्मात्र जगत्कथम् ।
इत्यनिर्णयतो मोहः सोऽयं संसार इष्यते ॥ ५३ ॥

(அ-கை.)

இந்தப் பிரமத்திற்குக் காரணம் யாது? என்று கேட்குமிடத்துப் புத்தி முதலியவற்றினது சொரூபத்தின் அஞ்ஞானமே காரணமா மென்று கூறு கின்றார் :—

"बुद्धिः का अयं आभासः कः वा आत्मा कः अत्र जगत् कथं" इति अनिर्ण-यतः मोहः ॥

(சு-ம்.)

"புத்தி யாது? இவ்வாபாசன் யாது? அல்லது ஆத்மா யாது? இங்கு ஜகத் எப்படி இருக்கின்றது?" என்னும் நிச்சயமின்மையால் பிரம முண் டாகின்றது.

(அ-கை.)

அந்த மோகம் நிவிருத்திசெய்யத்தக்க தாகுதற்பொருட்டு அநர்த்த ஹேதுவைக் கூறுகின்றார் :—

सः अयं संसारः इष्यते ॥

(ச-ம்.)

அந்த இப்மோகம் சம்சார மெனப்படும். (ருரு)

எ. சுலோகம் ருஉ-ல் கூறிய சம்சாரத்தினை நிவர்த்திக்கும் விவேகம்.

[கூருசு] बुद्ध्यादीनां स्वरूपं यो विविनक्ति स तत्त्ववित् ।
स एव मुक्त इत्येवं वेदांतेषु विनिश्चयः ॥ ५४ ॥

(அ-கை.)

இப்பிரமத்தினை நிவர்த்திப்பது யாதென்று கேட்கும்விருப்பத்தில் புத்தியாதிசொரூபவிவேகமே நிவர்த்திப்பதா மென்று அபிப்பிராயப்பட்டு; அப்புத்தி முதலியவற்றின் விவேகமுடையவனே ஞானி; அதனாலேயே அநர்த்தநிவிருத்தி உண்டாகின்ற தென்று கூறுகின்றார்:—

बुद्ध्यादीनां स्वरूपं यः विविनक्ति सः तत्त्ववित् सः एव मुक्तः इति एवं वेदांतेषु विनिश्चयः ॥

(ச-ம்.)

புத்திமுதலியவற்றின் சொரூபத்தினை எவன் விவேகிக்கின்றானோ, அவன் தத்துவவித்து அவனே முத்த னென்று வேதாந்தத்தில் நிர்ணயித்திருக்கின்றது. (ருச)

அ. பந்தமோக்ஷங்களின் மித்தியாத்தன்மையில் நையாயிகர்முதலியோரால் செய்யப்பட்ட குதர்க்கத்தாற்றோன்றிய ஹாஸியங்கள் கண்டிக்கத்தக்கனவாதல்.

[கூருஎ] एवं च सति बंधः स्यात्कस्येत्यादिकुतर्कजाः ।
विडंबना दृढं खंड्याः खंडनोक्तिप्रकारतः ॥ ५५ ॥

(அ-கை.)

இவ்வாறு பந்தமோக்ஷங்களுக்கு அவிவேகவடிவமூலமுடைமையுள்ளதாக அத்வைதவாதத்தில் யாருக்குப் பந்தம் அல்லது யாருக்கு மோக்ஷம் என்றல்முதலிய ஆகாரமுடைய நையாயிகராற் செய்யப்படும் குதர்க்க வடிவமூலமுடைய பரிஹாசவிசேஷம் யாதோ அது ஸ்ரீஹர்ஷமிசிராசாரியராற் செய்யப்பட்ட கண்டனகண்டகாத்தியம் என்னும் கிரந்தத்திற் கூறிய யுக்திகளால் அந்நையாயிகர்களுக்கு விடையின்றியதன்மையினைச் சம்பாதித்துப் பரிகாரஞ் செய்யத்தக்கதா மென்று கூறுகின்றார்:—

एवं च सति कस्य बंधः स्यात् इत्यादि कुतर्कजाः विडंबनाः खंडनोक्तिप्रकारतः दृढं खंड्याः ॥

(சு-ம்.)

இவ்வாறாகப் பந்தம் யாருக்குண்டாகும் என்றல் முதலிய குதர்க்கங்களால் உண்டாகிய பரிகாசவிசேஷம் எதுவோ அது கண்டனகிரந்தத்தின் வார்த்தையின்படி திடமாகும்வண்ணம் * கடு. கண்டனம் செய்யத்தக்கதாம். (ருரு)

க. புராணங்களிற்கூறிய கூடஸ்தனது விவேகத்தின் அநுவாதம்.

[கூகூஅ] वृत्तेः साक्षितया वृत्तिप्रागभावस्य च स्थितः ।
बुभुत्सायां तथाज्ञोऽस्मीत्याभासाज्ञानवस्तुनः ॥ ५६ ॥

(அ-கை.)

இப்படிச் சுருதியினாலும் யுக்தியினாலும் கூடஸ்தனைப் புத்திமுதலியவற்றினின்றும் வேறுபடுத்திக் காட்டிப் புராணங்களிலும் அக்கூடஸ்தனது விவேகம் செய்யப்பட்டிருக்கின்றதென்று இதுமுதல் மூன்று சுலோகங்களாற் கூறுகின்றார்:—

वृत्तेः च वृत्तिप्रागभावस्य बुभुत्सायां तथा अज्ञः अस्मि इति आभासज्ञानवस्तुनः साक्षितया स्थितः ॥

(சு-ம்.)

விருத்திக்கும், விருத்தியின் பிராகபாவத்திற்கும், சொரூபத்தையறிய இச்சையுண்டாகுங்காலத்தும், அப்படியே "நான் அஞ்ஞன்" என்று விளங்குகின்ற அஞ்ஞான வஸ்துவிற்கும் சாக்ஷியாகுதலால் நிலைத்திருக்கின்றான்.

(வி-ம்.)

விருத்தி உற்பத்தியாகுங்கால் அவ்விருத்திக்குச் சாக்ஷியா யிருத்தலாலும், விருத்தியின் உதயத்திற்குமுன் அவ்விருத்தியின் பிராகபாவத்திற்குச் சாக்ஷியா யிருத்தலாலும், சொரூபத்தையறியும் இச்சையுண்டாகியபோது அதற்குச் சாக்ஷியா யிருத்தலாலும், அந்த ஞானவிருப்பத்திற்குமுன் "யான் அஞ்ஞானி" என்றநுபவிக்கப்படும் அஞ்ஞானத்திற்குச் சாக்ஷியாதலாலும் சிவமே (கல்யாணவடிவகூடஸ்தனே) நிற்கின்றான். (ருசா)

---

* கடு. பரம ஆஸ்திக அதிகாரி எவனோ அவனுக்குப் போதிக்குந்தன்மை இந்நூலிலேயே எழுதப்பட்டிருக்கின்றது. எவனுக்கு நையாயிகர்முதலியோராற் செய்யப்பட்ட குதர்க்கத்தாற்றோன்றிய பரிகாசபுத்தியில் சம்சயவடிவ விக்ஷேபத்தை யுண்டுபண்ணுகின்றதோ, அவனுக்குக் கண்டனமுதலிய ஆகரகிரந்தங்களில் கூறிய பிரகாரமாக அத்தர்க்கங்கள் கண்டனஞ் செய்யத்தக்கனவாம் என்பது பொருள்.

[கூருகூ] असत्यालंबनत्वेन सत्यः सर्वजडस्य तु ।
साधकत्वेन चिद्रूपः सदा प्रेमास्पदत्वतः ॥ ५७ ॥

[கூசo] आनंदरूपः सर्वार्थसाधकत्वेन हेतुना ।
सर्वसंबंधवत्त्वेन संपूर्णः शिवसंज्ञितः ॥ ५८ ॥

(அ-கை.)

இதுவுமது:—

(१) असत्यालंबनत्वेन सत्यः । (२) सर्वजडस्य तु साधकत्वेन चिद्रूपः । (३) सदा प्रेमास्पदत्वतः आनंदरूपः । (४) सर्वार्थसाधकत्वेन हेतुना सर्वसंबंधवत्त्वेन संपूर्णः शिवसंज्ञितः ॥

(சு-ம்.)

*(க) அச்சிவம் அசத்தியத்திற்குப் பற்றுக்கோடா யிருத்தலால் சத்தியமாம். (உ) சர்வ ஜடத்திற்கும் சாதகமாயிருத்தலால் சித்ரூபமாம். (ந) எப்போதும் பிரேமைக்கு விஷயமா யிருத்தலால் ஆநந்தரூபமாம். (ச) சர்வ அர்த்தங்களையும் சாதிக்குந்தன்மைவடிவ ஏதுவினுலும், எல்லாவற்றின் சம்பந்தியா யிருத்தலாலும் சம்பூர்ண மென்று சொல்லப்படுகின்றது.*

(வி-ம்.)

*அன்றியும் அச்சிவம் அசத்தியஜகத்திற்கு அதிஷ்டானமா யிருத்தலால் சத்தியமாம்; சர்வஜடங்களையும் விளக்குவிப்பதா யிருத்தலால் சித்துரூபமாம். எப்போதும் பிரேமைக்கு விஷயமா யிருத்தலால் ஆநந்தரூபமாம்; எல்லாவிஷயங்களையும் விளக்குந்தன்மைவடிவ ஏதுவினுலும், எல்லாவற்றின் சம்பந்தியா யிருத்தலாலும் சம்பூர்ண மென்று சொல்லப்படுகின்றது.*

*இங்கு இது அபிப்பிராயமாம்:—*

*விவாதத்திற்கு விஷயமாகிய சிவம் விருத்திமுதலியவற்றினும் பேதத்தை யடைகின்றது; விருத்திமுதலியவற்றிற்குச் சாக்ஷியா யிருத்தலால்; யாது யாது விருத்திமுதலியவற்றினும் பேதத்தை யடையவில்லையோ, அது அது விருத்திமுதலியவற்றிற்குச் சாக்ஷியாகிறதில்லை; * கசு. விருத்திமுதலியவற்றினைப்போல.*

---

* கசு. *விருத்திமுதலியன தம்மின் வேருகா; ஆதலால் தமது சாக்ஷியுமாகா; இவ்வாறு கூடஸ்தர் விருத்திமுதலியவற்றின் வேறன்றென்ப தில்லை; ஆதலால் விருத்திமுதலியவற்றின் சாக்ஷி அன்றென்ப தில்லை; ஆனுல் சாக்ஷியேயாம் என்பது வியதிரேகிதிருஷ்டாந்தத்தோடுகூடிய வியதிரேகி அநுமானத்தின் வடிவமாம். இவ்வாறே பிறவற்றிலும் அறிந்துகொள்க.*

(க) விவாதத்திற்கு விஷயமாகிய சிவம் சத்தியமாகத்தக்கதாம்; மித்தைக்கு அதிஷ்டானமாயிருத்தலால்; அசத்தியரஜதத்திற் கதிஷ்டானமாகிய சுத்தியினைப்போல.

(உ) விவாதத்திற்கு விஷயமாகிய சிவம் சித்ரூபமாம்; ஜடமாத்திரத்தினை விளக்குவதா யிருத்தலின்; யாது சித்ரூபம் ஆகாதோ, அது சர்வ ஜடங்களையும் விளக்குவது மாகாது; குடமுதலியவற்றைப்போல.

(ங) விவாதத்திற்கு விஷயமாகிய சிவம் பரமாநந்தவடிவமாம்; மேலான பிரியத்திற்கு விஷயமாதலால்; யாது பரமாநந்தவடிவ மன்றோ அது மேலான பிரியத்திற்கு விஷயமாதலு மின்று; குடமுதலியவற்றினைப்போல.

(ச) விவாதத்திற்கு விஷயமாகிய சிவம் பரிபூரணமாம்; எல்லாவற்றின் சம்பந்தியா யிருத்தலால்; விண்போல. இது அந்வயிஅநுமானம். இதனின் வேறாய யாவும் இங்கு வியதிரேகியாம். இதற்குச் சர்வசம்பந்தித்தன்மை சகலஅர்த்தங்களையும் விளக்குவதா யிருத்தலா லிருக்கின்றது. விவாதத்திற்கு விஷயமாகிய சிவம் யாதோ அது எல்லாவற்றோடும் * கஎ. ஆத்

* கஎ. பிரகாசமின்றிப் பதார்த்தங்களின் இருப்பில்லை; பிரகாசியாத முயற்கோடு முதலியவற்றின் இருப்புக் காணப்படாமையின். ஆதலால் ஜடஜகத்திற்குச் சேதனசம்பந்தமின்றித் தானாகவே விளக்கமில்லை. ஜடத்திற்குத் தானாகவே விளக்க முண்டாயின் ஜடத்தன்மையினது அபாவத்தின் பிரசங்க முண்டாகும்; ஆதலால் ஜடவடிவ சகல ஜகத்தோடும் சேதனத்திற்குச் சம்பந்தம் கொள்ளுதல்வேண்டும். அச்சம்பந்தம் ஆத்யாசிக அதாவது அத்தியாசத்தினாலாகிய வடிவமாகவே சம்பவிக்கின்றது; வேறு விதமாகச் சம்பவிக்கிறதில்லை. ஜடசேதனங்களுக்கு ஆத்யாசிக சம்பந்தத்தினும் வேறாய சம்பந்தங் கூறுவோனை இது கேட்குதல்வேண்டும் :— ஜடசேதனங்களின் சம்பந்தம் என்னை? (க) சையோகமா? (உ) அல்லது சமவாயமா? (ங) அல்லது தாதான்மியமா? (ச) அல்லது விஷயவிஷயித்தன்மையா? இவை நான்கு பக்ஷங்கள். இவற்றுள்,

(க.) முதற்பக்ஷமாகிய சையோகம் பொருந்தாது, ஏனெனின் இரண்டு திரவியங்களுக்கே சையோக முண்டாகின்றது. குணங்களின் ஆசிரயம் எதுவோ அது திரவிய மெனப்படும். சேதனம் நிர்க்குணமா யிருத்தலால் திரவிய மன்று. ஆதலால் ஜடசேதனங்களுக்குச் சையோகசம்பந்தம் பொருந்தாது.

(உ) இரண்டாவது பக்ஷமாகிய சமவாயமும் பொருந்தாது; ஏனெனின் குணகுணிமுதலியவற்றிற்குச் சமவாயசம்பந்த முளதாகின்றது. ஜடசேதனங்கட்குக் குணகுணிமுதலியதன்மை இல்லை. இதனை இந்நூலின் ககடு-வது சுலோகத்தின் டிப்பணியிற் காண்க. ஆதலால் சமவாயசம்பந்தமும் பொருந்தாது. தந்துபடங்களுக்குப்போலச் சேதன ஜடங்கட்குக் காரியகாரணத்தன்மையாற் சம்பந்த முண்டெனின்; அது பொருந்தாது. ஏனெனின், தந்துபடங்களின் சமவாயத்தில் அவயவஅவயவித்தன்மைகட்கே காரணத்தன்மையால் காரியகாரணத்தன்மையின் அகாரணத்தன்மை யிருக்கின்றது. அங்ஙன மில்லையாயின் துரிபடங்கட்கும் சமவாயத்தின் பிரசங்கமுண்டாகும். ஆதலால் சேதனஜடங்கட்கு அவயவ அவயவித்தன்மையின்மையால் அவற்றிற்குச் சமவாயம் சம்பவியாது.

யாசிகசம்பந்த முடையதாம்; எல்லாவற்றையும் விளக்குவதா யிருத்த லால்; யாது எல்லாவற்றோடும் சம்பந்தமுடைய தன்றோ அது எல்லாவற் றையும் விளக்குவது மாகாது? தீபமுதலியவற்றினைப்போல. (ருஎ-ருஅ)

கo. உதாகரிக்கப்பட்ட புராணவாக்கியத்தின் தாற்பரியம்.

[கூசக] इति शैवपुराणेषु कूटस्थः प्रविवेचितः ।
जीवेशत्वादिराहितः केवलः स्वप्रभः शिवः ॥ ५९ ॥

(அ-கை.)

உதாகரிக்கப்பட்ட புராணத்தினது வாக்கியத்தின் தாற்பரியத்தைக் கூறுகின்றார் :—

इति शैवपुराणेषु जीवेशत्वादिरहितः केवलः स्वप्रभः शिवः कूटस्थः प्रविवेचितः॥

(சு-ம்.)

இவ்வாறு சைவபுராணத்தில் ஜீவேசுவரத்தன்மைமுதலியவைக ளின் றிய கேவலம் தானாய் விளங்கும் கூடஸ்தனது விவேகம் செய்யப்பட்டிருக் கின்றது.

(வி-ம்.)

சொல்லப்பட்ட இத்தன்மையாகச் சூதசம்கிதைமுதலிய புராணங்க ளில் ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மைமுதலியவற்றின் கற்பனையின்றிய கேவ லாத்துவிதீய சுயம்பிரகாச சைதந்நியமான கல்யாணவடிவ கூடஸ்தன் விவேசனம் செய்யப்பட்டிருக்கின்றதென்பது அந்வயம். (ருகூ)

உ. கூடஸ்தனது அத்துவிதீயத்தன்மை நிகழ்தற்பொருட்டு ஜீவாதிஜகத்து மாயிகமெனல் கூசஉ-கூருஅ.

க. ஜீவேசுவரர்களுக்கு மாயிகத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதியும், அவை தேவாதிகளுக்கு விலக்ஷணமாதலும்.

[கூசஉ] मायाभासेन जीवेशौ करोतीति श्रुतत्वतः ।
मायिकावेव जीवेशौ स्वच्छौ तौ काचकुंभवत् ॥ ६० ॥

---

(ஈ) மூன்றாவது பக்ஷமாகிய தாதான்மியமும் பொருந்தாது; ஏனெனின் ஒன் றற்கொன்று விலக்ஷணமான வஸ்துக்களுக்குத் தாதான்மியம் சம்பவியாமையால்.

(ச) நான்காவது பக்ஷமாகிய விஷயவிஷயித்தன்மையும் பொருந்தாது; ஏனெனின், விஷயவிஷயித்தன்மைச் சம்பந்தங்கள் அவயவஅவயவிகளின் தாதான்மிய முதலியவடிவ மூலசம்பந்தத்தை முன்னிட்டவைகளா யிருத்தலானும், கூறிய அத்தா தான்மியமுதலியவடிவ மூலசம்பந்தம் சம்பவியாமை அடுத்தே கூறப்பட்டிருத்தலா னும் அது பொருந்தாது.

ஆதலால் ஜடஜகத்தோடு சேதனத்திற்கு ஆத்யாசிகமாகவே அதாவது கற்பிதமாக வே சம்பந்த முண்டென்று கூறுதல்வேண்டும்.

(அ-கை.)

கூடஸ்தனுக்கு ஜீவேசுவரத்தன்மைமுதலியனவின்றியதன்மை எதனு லிருக்கின்றதென்றாசங்கித்துச் சுருதியினால் அச்சீவேசுவரத்தன்மை மாயையினாற் கற்பிக்கப்பட்டதாகக் காணப்படுதலின் கூடஸ்தனுக்கு ஜீவேசுவரத்தன்மைமுதலியனவின்றியதன்மை உளதென்று கூறுகின்றார்:—

"माया आभासेन जीवेशौ करोति" इति श्रुतत्वतः जीवेशौ मायिकौ एव ॥

(சு-ம்.)

"மாயை ஆபாசமாக ஜீவேசுவரர்களைச் செய்கின்றது" என்று சுருதியிற் கேட்கப்பட்டிருத்தலின் ஜீவேசுவரர்கள் மாயிகரேயாவர்.

(வி-ம்.)

"जीवेशावाभासेन करोति माया चाविद्या च स्वयमेव भवति ஜீவேசுவரர்களை ஆபாசமாகச் செய்கின்றது. மாயையும் அவித்தையும் தானே அதாவது மூலப்பிரகிருதியேயாகின்றது" என்னும் சுருதி மாயைஅவித்தைகளின் அதீனமான சிதாபாசவடிவ ஜீவேசுவரர்களின் மாயிகத்தன்மையைப் பிரதிபாதிக்கின்றது என்பது தாற்பரியம்.

(அ-கை.)

ஜீவேசுவரர்களுக்கு மாயிகத்தன்மை யுளதாயின் அவர்களுக்குத் தேகாதி ஜடங்களின் வேறுதற்றன்மை யுண்டாகாது என்றாசங்கித்துப் பிருதிவியின் காரியத்தன்மை சமானமாயினும், ஆடிக்குடத்திற்குக் குடமுதலியவற்றினும் வேறுதற்றன்மை யிருத்தல்போல அச்சீவேசுவரர்களுக்கும் தேகாதிகளின் வேறுதற்றன்மை யுளதாகு மென்று கூறுகின்றார்:—

तौ काचकुंभवत् स्वच्छौ ॥

(சு-ம்.)

அங்ஙனமாயினும், அச்சீவேசுவரர் ஆடிக்குடம்போல் சொச்சமா யிருக்கின்றார்கள். (௬௦)

உ. ஜீவேசுவரர்களுக்குள்ள ஜகத்தின் விலக்ஷணத்தன்மைக்குச் சாதகமான திருஷ்டாந்தம்.

[௯௪௩] अन्नजन्यं मनो देहात्स्वच्छं यद्वत्तथैव तौ ।
मायिकावपि सर्वस्मादन्यस्मात्स्वच्छतां गतौ ॥ ६१ ॥

(அ-கை.)

அப்படியானால் கடத்தினையும் ஆடிக்குடத்தையும் உண்டபண்ணும் மிருத்திகைவிசேஷத்தின் பேதத்தால் அவற்றின் விலக்ஷணத்தன்மை உசிதமாம். ஜகத்து ஜீவேசுவரர்களின் பேதத்திற் கேதுவாகிய மாயை ஒன்

றுயிருத்தலின் அச்சீவேசுவரர்களுக்கு ஜகத்தோடுள்ள விலக்ஷணத்தன்மை அநுசிதமாமென் றாசங்கித்து, அந்நத்தாற் பிறந்த தேகத்திற்கும் மனதிற்கும் எப்படி விலக்ஷணத்தன்மை யிருக்கின்றதோ, அதுபோல மாயாகற்பித ஜகத்திற்கும் ஜீவேசுவரர்கட்கும் விலக்ஷணத்தன்மை யுண்டென்று கூறுகின்றார் :—

अन्नजन्यं मनः यद्वत् देहात् स्वच्छं । तथा एव तौ मायिकौ अपि अन्यस्मात् सर्वस्मात् स्वच्छतां गतौ ॥

(சு-ம்.)

அந்நத்தினின் றுண்டாகிய மனம் எப்படித் தேகத்தைவிடச் சொச்சமோ, அதுபோல அச்சீவேசுவரர்கள் மாயிகர்களாயினும் மற்றைய ஜகத்தெல்லாவற்றினும் சொச்சத்தன்மையை யடைந்திருக்கின்றனர். (சுக)

ரு. ஜீவேசுவரர்களது சேதனத்தன்மை.

[கூஎஅ] चिद्रूपत्वं च संभाव्यं चित्त्वेनैव प्रकाशनात् ।
सर्वकल्पनशक्ताया मायाया दुष्करं न हि ॥ ६२ ॥

(அ-கை.)

ஆடிமுதலியவற்றினைப்போல ஜீவேசுவரர்களுக்குச் சொச்சத்தன்மை இருக்குக. ஆனால் சேதனத்தன்மை எதனு லிருக்கின்றதென் றாசங்கித்து, அநுபவஞானத்தால் இவர்களுக்குச் சேதனத்தன்மை யிருக்கின்றதென்று கூறுகின்றார் :—

चित्त्वेन एव प्रकाशनात् चिद्रूपत्वं च संभाव्यम् ॥

(சு-ம்.)

சித்துத்தன்மையாகவே பிரகாசித்தலின் சித்ரூபத்தன்மை சம்பவிக்கத் தக்கதாம்.

(அ-கை.)

சித்ரூபத்தன்மையால் பிரகாசித்தலும் மாயாகற்பித ஜீவேசுவரர்கட்குப் பொருந்தாதென் றாசங்கித்து, அம்மாயை ஆகாதகாரியத்தை ஆக்குவதாயிருத்தலின் மாயிகர்களுக்கும் சித்துவடிவமாகுதலால் பிரகாசித்தல் பொருந்துமென்று கூறுகின்றார் :—

हि सर्वकल्पनशक्तायाः मायायाः दुष्करं न ॥

(சு-ம்.)

எதனால் எல்லாவற்றையும் கற்பித்தலிற் சாமர்த்தியமுடைய மாயைக் குச் செய்தற்கரிய தில்லையோ அதனால் இவர்களுக்குச் சித்ரூபத்தன்மை சம் பவிக்கின்றது. (சுஉ)

[கூசங] अस्मन्निद्रापि जीवेशौ चेतनौ स्वप्नगौ सृजेत् ।
महामाया सृजत्येतावित्याश्चर्यं किमत्र ते ॥ ६३ ॥

(அ-கை.)

முன் சுஉ-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினைக் கௌமுதிகநியா யத்தாற் உறுதிப்படுத்துகின்றார் :—

अस्मन्निद्रा अपि स्वप्नगौ चेतनौ जीवेशौ सृजेत् । महामाया एतौ सृजति इति अत्र ते किं आश्चर्यम् ॥

(சு-ம்.)

நமது ஜீவர்களது நித்திரையும் சொப்பனத்துள்ள சேதனவடிவ ஜீவேசுவரர்களைச் சிருஷ்டிக்குமாயின், மூலப்பிரகிருதி இச்சேதனவடிவ ஜீவேசுவரர்களைச் சிருஷ்டிக்கிற தென்னும் இதில் உனக்கு ஆச்சரிய மென்னையுளது? ஒன்று மில்லை. (சுங)

ச. யுக்தியால் ஈசுவரனது சர்வஞ்ஞத்தன்மைமுதலியன
மாயையினாற் கற்பிக்கப்பட்டனவாமெனல்.

[கூசச] सर्वज्ञत्वादिकं चेशे कल्पयित्वा प्रदर्शयेत् ।
धर्मिणं कल्पयेद्यास्याः को भारो धर्मकल्पने ॥ ६४ ॥

(அ-கை.)

ஈசுவரனுக்கும் மாயிகத்தன்மை யுளதாயின், அவனுக்கு ஜீவனைப் போலச் சர்வஞ்ஞத்தன்மையின்மைமுதலிய தர்மங்கள் உண்டாகுமேயென் றாசங்கித்து, ஈசுவரனது சர்வஞ்ஞத்தன்மைமுதலியவற்றினையும் மாயையே கற்பிக்கின்றதென்று கூறுகின்றார் :—

च ईशे सर्वज्ञत्वादिकं कल्पयित्वा प्रदर्शयेत् ॥

(சு-ம்.)

அன்றியும் ஈசுவரனிடத்துச் சர்வஞ்ஞத்தன்மைமுதலியவற்றினைக் கற் பித்துக் காட்டுகின்றது.

(அ-கை.)

அதில் யுக்தியினைக் கூறுகின்றார் :—

या धर्मिणं कल्पयेत् अस्याः धर्मकल्पने कः भारः ॥

(சு-ம்.)

எந்தமாயை ஈசுவரவடிவ தர்மியினைக் கற்பிக்கின்றதோ, அம்மாயைக்குச் சர்வஞ்ஞத்தன்மைமுதலிய தர்மங்களைக் கற்பித்தலில் என்ன வருத்தமிருக்கின்றது? ஒன்றுமில்லை. (௬௪)

௫. கூடஸ்தனது மாயிகத்தன்மையின் சங்கையும் பிரமாணமின்மையாற் சமாதானமும்.

[௬௪௭] कूटस्थेऽप्यतिशंका स्यादिति चेन्मातिशंक्यतां ।
कूटस्थमायिकत्वे तु प्रमाणं न हि विद्यते ॥ ६५ ॥

(அ-கை.)

அப்படியானால் ஈசுவரனைப்போலக் கூடஸ்தனுக்கும் மாயிகத்தன்மை வாய்க்குமென்பதாக வாதி சங்கிக்கின்றான் :—

कूटस्थे अपि अतिशंका स्यात् इति चेत् ॥

(சு-ம்.)

கூடஸ்தனிடத்தில் மாயிகத்தன்மையினது அதிசங்கை யுண்டாகுமென்று கூறின்.

(அ-கை.)

பிரமாணமின்மையால் இவ்வாறு கூறுதே யென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

हि कूटस्थमायिकत्वे तु प्रमाणं न विद्यते । मा अति शंक्यताम् ॥

(சு-ம்.)

எதனால் கூடஸ்தனுக்கு மாயிகத்தன்மையில் பிரமாண மில்லையோ அதனால் அதிசங்கை செய்யாதே. (௬௫)

௬. கூடஸ்தனது வாஸ்தவத்தன்மையில் சர்வசுருதிகளும் பிரமாணமாதல்.

[௬௪௮] वस्तुत्वं घोषयंत्यस्य वेदांताः सकला अपि ।
सपत्नरूपं वस्त्वन्यन्न सहन्तेऽत्र किंचन ॥ ६६ ॥

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்தனது வாஸ்தவத்தன்மையிலும் பிரமாணம் காணப்படவில்லையே யென்றாசங்கித்துக் கூடஸ்தனது வாஸ்தவத்தன்மையில் சர்வசுருதிகளும் பிரமாணமா மென்று கூறுகின்றார் :—

वेदांताः सकलाः अपि अस्य वस्तुत्वं घोषयंति । अत्र सपत्नरूपं अन्यत् वस्तु किंचन न सहंते ॥

(சு-ம்.)

சகல வேதாந்தங்களும் இக்கூடஸ்தனது வஸ்துத்தன்மையைக் கோஷிக்கின்றன. இதில் விரோதிவடிவ வேறு எவ்வஸ்துவினையும் சுருதிகள் சகிக்கிறதில்லை. (இக்கூடஸ்தனது பாரமார்த்திகத்தன்மையில் பிரதி பக்ஷவடிவ வேறு எவ்வஸ்துவினையும் சுருதிகள் சகியா வென்பது பொருள்.) (சுசு)

எ. சுலோகம் கூசஉ முதல் கூசஅ பரியந்தம் சொல்லப்பட்ட அர்த்தத்தில் தார்க்கிகர்களது சங்கைக்கு அவகாச மின்மை.

[கூசகூ] श्रुत्यर्थं विशदीकुर्मो न तर्काद्वच्मि किंचन ।
तेन तार्किकशंकानामत्र कोऽवसरो वद ॥ ६७ ॥

(அ-கை.)

அப்படியானால் கூடஸ்தனுக்கும் ஜீவேசுவரர்களுக்கும் உள்ள வாஸ்தவத்தன்மை அவாஸ்தவத்தன்மைகளைச் சாதித்தலில் தம்மால் சுருதிகள் மாத்திரம் படிக்கப்பட்டன, தர்க்கத்தினால் எதுவும் சாதிக்கப்படவில்லையே யென்றாசங்கித்து, முமுக்ஷுக்களுக்குச் சுருதியின் அர்த்தத்தினை விளக்குதற்பொருட்டு யாம் பிரவர்த்தித்தோமாகலின் தர்க்கத்தைச் சொல்லுதற் காரம்பிக்கவில்லை யென்று கூறுகின்றார் :—

त्य र्थं विशदीकुर्मः तर्कात् किंचन न वच्मि । तेन तार्किकशंकानां अत्र कः अवसरः वद ॥

(சு-ம்.)

சுருதிகளின் அர்த்தத்தினை விளக்குகின்றோம். தர்க்கத்தால் ஒன்றும் சொல்லுவதில்லை. அதனால் தார்க்கிகர்களது குதர்க்கங்களுக்கு இங்கு என்ன அவகாசமிருக்கின்றது? சொல். ஒன்று மில்லை யென்றபடி. (சுஎ)

அ. முமுக்ஷுக்களுக்குத் தர்க்கத்தை விடுதலோடு சுருதியினர்த்தத்தை ஆசிரயஞ் செய்தல் தகுதியாமெனல்.

[கூ௫0] तस्मात्कुतर्कं संत्यज्य मुमुक्षुः श्रुतिमाश्रयेत् ।
श्रुतौ तु माया जीवेशौ करोतीति प्रदर्शितम् ॥ ६८ ॥

(அ-கை.)

அச்சுருதியின் அர்த்தத்தை விளக்குதலால் என்ன சித்தித்ததெனக் கூறுகின்றார்:—

तस्मात् मुमुक्षुः कुतर्कं संत्यज्य श्रुतिं आश्रयेत् ॥

(சு-ம்.)

அதனால் முமுக்ஷு குதர்க்கத்தினை விட்டுச் சுருதியினை ஆசிரயிக்க வேண்டும்.

(அ-கை.)

முமுக்ஷுக்களுக்குச் சுருதியினர்த்தம் எவ்வாறு அநுசந்தானஞ் செய்யத்தக்கதாமெனக் கூறுகின்றார்:—

श्रुतौ तु माया जीवेशौ करोति इति प्रदर्शितम् ॥

(சு-ம்.)

சுருதியிலோ மாயை ஜீவேசுவரர்களைச் செய்கின்றதென்று காட்டப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

சுருதிகளில் ஜீவேசுவரர்களது * கஅ. மாயிகத்தன்மை ஸ்பஷ்டமாம். (கூஅ)

க. ஈசஜீவர்களாலாக்கப்பட்ட ஜகத்தைக் கூறுதல்.

[கூ௰க] ईक्षणादिप्रवेशांता सृष्टिरीशकृता भवेत् ।
जाग्रदादिविमोक्षांतः संसारो जीवकर्तृकः ॥ ६९ ॥

(அ-கை.)

இதுவுமது:—

ईक्षणादि प्रवेशांता सृष्टिः ईशकृता भवेत् जाग्रदादि विमोक्षांतः संसारः जीवकर्तृकः ॥

(சு-ம்.)

ஈக்ஷணாதிப்பிரவேசபரியந்தமான சிருஷ்டி ஈசுவரனாற் செய்யப்பட்டதாம். ஜாக்கிரமுதல் மோக்ஷபரியந்தமான சம்சாரம் ஜீவனாற் செய்யப்பட்டதாம்.

(வி-ம்.)

ஈக்ஷணமுதல் பிரவேசபரியந்தமான சிருஷ்டிக்கு ஈசனது காரியத்தன்மையும், ஜாக்கிர சொப்பன சுழுத்திவடிவ பந்தமும் மோக்ஷமுமாகிய சம்சாரத்திற்கு ஜீவனது காரியத்தன்மையு முண்டு. (கூகூ)

---

* கஅ. ஜீவேசுவரர்களுக்கு மாயிகத்தன்மை யுண்டு. இங்குள்ள மாயிக மென்னும் சொற்பொருளினை ௬௯௧-வது சுலோகத்தின் டிப்பணியிற் காண்க.

௬0. முமுக்ஷுக்கள் விசாரிக்கத்தக்க அர்த்தத்தினைக் கூறல்.

[கூ௫௨] असंग एव कूटस्थः सर्वदा नास्य किंचन ।
भवत्यातिशयस्तेन मनस्येवं विचार्यताम् ॥ ७० ॥

(அ-கை.)

இதுவுமது :—

कूटस्थः असंगः एव अस्य किंचन अतिशयः न भवति । तेन एवं सर्वदा मनसि विचार्यताम् ॥

(சு-ம்.)

கூடஸ்தன் அசங்கனே. இவனுக்கு ஜன்மாதிவடிவ அதிசயம் ஒன்றும் உண்டாகிறதில்லை. அக்காரணத்தால் இவ்வாறு எப்போதும் மனதில் விசாரஞ் செய்யவேண்டும்.

(வி-ம்.)

கூடஸ்தனுக்கு அசங்கத்தன்மைமுதலியனவும் மரண ஜன்மாதிவடிவ விவகாரமுழுதுமின்மையும் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் முமுக்ஷு இவ்வர்த்தத்தினையே எப்பொழுதும் விசாரிக்கவேண்டு மென்பது அபிப்பிராயம். (எ0)

௬௧. கூடஸ்தனுக்கு ஜன்மமுதலியவற்றி னின்மையைப் பிரதிபாதிக்கும் சுருதி.

[கூ௫௩] न निरोधो न चोत्पत्तिर्न बद्धो न च साधकः ।
न मुमुक्षुर्न वै मुक्त इत्येषा परमार्थता ॥ ७१ ॥

(அ-கை.)

கூடஸ்தனது ஜன்மாதிவடிவ அதிசயத்தின் அபாவம் எதனு லறியப்படு கின்றதென்று சங்கித்துச் சுருதிவாக்கியத்தினு லறியப்படுகிறதென்னு மபிப்பிராயமாக அச்சுருதிவாக்கியத்தினைப் படிக்கின்றார் :—

निरोधः न च उत्पत्तिः न बद्धः न च साधकः न मुमुक्षुः न वै मुक्तः न इति एषा परमार्थता ॥

(சு-ம்.)

“ * ௧௯. நிரோதமு மில்லை, உற்பத்தியு மில்லை, பெத்தனு மில்லை, சாதகனு மில்லை, முமுக்ஷுவு மில்லை, முக்தனு மில்லை என்னுமிது பரமார்த்தத் தன்மையாம்”. (எ௧)

* ௧௯. இச்சுருதியின் விளக்கமான வியாக்கியானம் ௭௨௯-வது சுலோக உரையிற் காண்க.

௧௨. மனோவாக்குக்கு விஷயமாகாத ஆத்மாவைப் போதித்தற்பொருட்டு ஜீவேசுவராதி ஜகத்தின் ஆரோபத்தைக் கூறுதல்.

[௯௫௪] अवाङ्मनसगम्यं तं श्रुतिर्बोधयितुं सदा ।
जीवमीशं जगद्वापि समाश्रित्य प्रबोधयेत् ॥ ७२ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது சுருதிகளில் ஜீவேசுவரன்முதலிய ஜகத்தின் சொரூபத்தைப் பிரதிபாதித்தல் எதன்பொருட்டென் றாசங்கித்து, வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகாத ஆத்மாவினைப் போதித்தற்பொருட்டாம் ஜீவேசுவரர்களது சொரூபத்தின் பிரதிபாதனமென்று கூறுகின்றார்:

अवाङ्मनसगम्यं तं बोधयितुं श्रुतिः सदा जीवं ईशं वा जगत् अपि समाश्रित्य प्रबोधयेत् ॥

(சு-ம்.)

வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகாத அவ்வாத்மாவை அறிவித்தற்காகச் சுருதி எப்போதும் ஜீவேசுவரர்களையேனும் ஜகத்தையேனும் *௨௦. ஆசிரயித்து அறிவிக்கின்றது. (எ௨)

௧௩. சுருதிகள் வேறுவேறாகக் கூறுதற்குச் சுரேசுராசாரியர் கூறிய உபயோகம்.

[௯௫௫] यया यया भवेत्पुंसां व्युत्पत्तिः प्रत्यगात्मनि ।
सा सैव प्रक्रियेह स्यात्साध्वीत्याचार्यभाषितम् ॥ ७३ ॥

(அ-கை.)

அப்படியானால் ஒரே அத்வைதவடிவ தத்துவம் சுருதியினால் போதிக்கத்தக்கதாயிருக்கச் சுருதிகளில் *௨௧. விகானம் அதாவது நாநாவிதமாகச் சொல்லுதலாகிய விவாதம் ஏன் காணப்படுகின்றதென் றாசங்கித்து, பிரஹ்மாத்மஐக்கியமும் பிரபஞ்சமித்தியாத்துவமுமாகிய தத்துவத்தில் விகானமில்லை; ஆனால் அத்தத்துவத்தை யறிவிக்கும் வகையாகிய பிரக்கிரியை எதுவோ அதில் விகானமுண்டு. அதுவும் அறிவிக்கத்தக்க புருஷர்களது சித்

* ௨௦. எதனால் பெயர் ஜாதிமுதலிய சப்தங்கள் சத்தவாயிலாக மனது பிரவிர்த்தித்தற்கு நிமித்தமாகிய தர்மங்களின்றியதா யிருத்தலால் அத்வைதப் பிரஹ்மம் வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகாததா யிருத்தலின் நேரே அறிவிக்கக்கூடாததா யிருக்கின்றதோ, அதனால் ஜீவேசுவரர்களையும் ஜகத்தையு மாரோபித்துச் சாகையில் சந்திரனை அறிவிக்கும் புருஷனைப்போலச் சுருதியானது அத்வைதப்பிரஹ்மத்தினை இலக்ஷணையினாலறிவிக்கின்றது.

௨௧. பரஸ்பரத்தின் பிரக்கிரியையில் தூஷணையைத் தருதலாகிய விவாதத்திற்கு வாச்சியமான விகான மெதுவோ அது அநேக அத்வைதக்கிரந்தங்களி லிருக்கின்றது. அதனை அப்பையதீக்ஷிதர் சித்தாந்தலேசசங்கிரகத்தில் எல்லாவற்றின் தூஷண பூஷணங்களைக் காட்டுதல்பூர்வகமாக விளக்கமா யெழுதியிருக்கின்றனர். அறிய விரும்புவோர் சித்தாந்தலேசசங்கிரகத்திலாவது அதனை அநுசரித்துள்ள விருத்திப்பிரபாகரத்தின்-அ-வது பிரகாசத்திலாவது காண்க.

தத்தின் விலக்ஷணத்தன்மையை யநுசரித்துச் சுரேசுராசாரியர்களால் சொல்லப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார் :—

"यया यया पुंसां प्रत्यगात्मनि व्युत्पत्तिः भवेत् सा सा एव प्रक्रिया इह साध्वी स्यात्" इति आचार्यभाषितम् ॥

(சு-ம்.)

எந்தெந்தப் பிரக்கிரியையால் புருஷர்களுக்குப் பிரஹ்மாபின்னப்பிரத்தியகாத்மாவில் தெளிவான போதமுண்டாகுமோ, அந்தந்தப் பிரக்கிரியையே இங்கு அத்வைதசாஸ்திரத்தில் நலமுடையதாகும் என்று ஆசாரியர்கள் கூறியிருக்கின்றனர். (எ௩)

க௪. சுருதிகளின் ஒருமைவடிவ அர்த்தத்தில் மூடர்களின் விவாதத்திற்கும் மூடமில்லாதவர்களது விவாதமின்மைக்கும் காரணம்.

[கூ௬௪] श्रुतितात्पर्यमखिलमबुध्वा भ्राम्यते जडः ।
विवेकी त्वखिलं बुध्वा तिष्ठत्यानंदवारिधौ ॥ ७४ ॥

(அ-கை.)

அப்படியானல் சுருதிகளின் அர்த்தம் ஒருவடிவமாயிருக்க, அவற்றினைப் பிரதிபாதிக்கும் அந்நிய பேதவாதிகளுக்குமாத்திரம் ஏன் விவாதமுண்டாகின்றதென்றாசங்கித்துச் சுருதிதாற்பரியத்தின் ஞானமில்லாதவர்களாகிய புருஷர்களுக்கே விவாதமுண்டாம். அதனை அறிகின்றவர்களுக்குண்டாகாதென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

जडः अखिलं श्रुतितात्पर्यं अबुध्वा भ्राम्यते । विवेकी तु अखिलं बुध्वा आनंदवारिधौ तिष्ठति ॥

(சு-ம்.)

ஜடனாகிய மூர்க்கன் சுருதியின் தாற்பரியமுழுவதனையு மறியாது பிராந்தியினை யடைகின்றான். விவேகியோ சுருதியின் தாற்பரியமுழுவதனையு மறிந்து ஆநந்தசமுத்திரத்தில் நிலைக்கின்றான். (எ௪)

க௫. விவேகியினது நிச்சயத்தின் வடிவம்.

[கூ௬எ] मायामेघो जगन्नीरं वर्षत्वेष यथा तथा ।
चिदाकाशस्य नो हानिर्न वा लाभ इति स्थितिः ॥ ७५ ॥

(அ-கை)

அப்போது விவேகியின் நிச்சயம் எவ்வகைத்தென்று கேட்கும்விருப்பத்திற் கூறுகின்றார் :—

एषः मायामेघः जगन्नीरं यथा तथा वर्षतु चिदाकाशस्य हानिः नो वा लाभः न इति स्थितिः ॥

(சு-ம்.)

இந்த மாயைவடிவ அதாவது விவேகிகளுக்குப் பாதிதமா யிருக்கின்ற அஞ்ஞானலேசவடிவ மேகம் ஜகத்தாகிய ஜலத்தினை எப்படியோ அப்படி வருஷிக்க. அதனால் பிரஹ்மவடிவ சிதாகாசமாகிய எனக்கு ஹானியு மில்லை; லாபமு மில்லை என்பது ஸ்திதியாம் அதாவது ஞானிகளது நிச்சயமாம். ()

கசு. கூடஸ்ததீப மென்னும் கிரந்தாப்பியாசத்தின் பயன்.

[கூரு அ] इमं कूटस्थदीपं योऽनुसंधत्ते निरंतरम् ।
स्वयं कूटस्थरूपेण दीप्यतेऽसौ निरंतरम् ॥ ७६ ॥

(அ-கை.)

கூடஸ்ததீபக்கிரந்தத்தினது ஆவிருத்திவடிவ அப்பியாசத்தின் பயனைக் கூறுகின்றார்:—

यः इमं कूटस्थदीपं निरंतरं अनुसंधत्ते असौ स्वयं कूटस्थरूपेण निरंतरं दीप्यते ॥

(சு-ம்.)

எந்தப் புருஷன் இக்கூடஸ்ததீபத்தினை நிரந்தரம் அநுசந்தானஞ் செய்கின்றானோ அதாவது விசாரிக்கின்றானோ, அந்தப்புருஷன் தான் கூடஸ்தரூபமாக நிரந்தரம் பிரகாசிக்கின்றான். (எசு)

கூடஸ்ததீபமென்னும்

எட்டாம் பிரகரணம்

முடிந்தது.

---

ஓம்தத்ஸத்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ பஞ்சதசி.

## க௯. $ தியானதீபம்

### ஒன்பதாம் பிரகரணம்.

க. ஸம்வாதிப்பிரமத்தினைப்போலப் பிரஹ்மதத்துவத்தின் உபாசனையினலும் முக்தியைச் சொல்லுதல் பூர்வகமான பரோக்ஷஞானத்தால் பிரஹ்மத்தினது உபாசனையின்றன்மை ௯௱௯-௯௮௭.

க. ஸம்வாதிப்பிரமத்தினைப்போலப் பிரஹ்மதத்துவத்தின் உபாசனையினலும் முக்தி சம்பவித்தல் ௯௱௯-௯௭க.

க. திருஷ்டாந்த பிரமாணங்களோடு பிரஹ்மதத்துவத்தின் உபாசனையினல் முக்தி யுண்டாகு மென்னும் பிரதிஞ்ஞை.

[௯௱௯] संवादिभ्रमवद्ब्रह्मतत्त्वोपास्त्याऽपि मुच्यते ।
उत्तरे तापनीयेऽतः श्रुतोपास्तिरनेकधा ॥ १ ॥

(அ-கை.)

இங்கு முதலில் *க. வேதாந்தசாஸ்திரத்தில் *உ. நித்தியாநித்தியவஸ்துவிவேகமுதலிய சாதனசதுஷ்டயத்தோடுகூடியவனும் செவ்வையாகச்

$ தியானத்தினை (நிர்க்குண உபாசனையினை)ப் பிரகாசிக்கும் பிரகரணம்.

* க. உபநிஷதங்களில்.

* உ. (க) நித்தியவஸ்துவாகிய பிரஹ்மாத்மாவும், அநித்தியவஸ்துவாகிய அநாத்மவடிவ ஜகத்துமாகிய இவற்றின் விவேகமாகிய அவிகாரித்தன்மை விகாரித்தன்மை முதலிய பேதஞானவடிவ விசாரமாகிய முதற்சாதன மெதுவோ அது சர்வசாதனங்களின் காரணமாம்.

(உ) முதலியவெனுஞ் சப்தத்தால் தியாகத்தின் இச்சை அல்லது இச்சையின்மைவடிவ வைராக்கியமும்,

(௩) சமம் அதாவது வெளிவிஷயத்தினின்றும் மனதை நிக்கிரகித்தல், தமம் அதாவது விஷயங்களினின்றும் புற இந்திரியங்களை நிக்கிரகித்தல், உபரதி அதாவது விட்டவஸ்துவின் இச்சையில்லாமை, திதிக்ஷை அதாவது சீதோஷ்ணமுதலிய துவந்துவங்களைச் சகிக்கும் சுபாவம், சிரத்தை அதாவது குரு வேதாந்தவாக்கியங்களில் விசுவாசம், சமாதானம் அதாவது பிரஹ்மவடிவ லக்ஷியத்தி லுண்டாம் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை என்னும் ஷட்சம்பத்தியும்,

(௪) தீவிரமான மோக்ஷத்தின் இச்சையுமாகிய இவை கொள்ளப்படும். இவை நான்கு சாதனங்களாம். இவற்றோடுகூடிய புருஷன் அதிகாரியாவன்.

சிரவணமனனநிதித்தியாசனங்களை *ந. அநுஷ்டிக்கும் அதிகாரிக்குத் "தத்துவம்" பதங்களின் அர்த்தமாகிய பிரஹ்மாத்மாவினை விவேகித்தல்பூர்வகமான மகாவாக்கியத்தின் அர்த்தவடிவப் பிரஹ்மாத்ம அபரோக்ஷஞானத்தால் பிரஹ்மத்தன்மைவடிவ மோக்ஷமுண்டாகின்றதென்று பிரதிபாதிக்கப்பட்டது. அதில் உபதிஷ்டதங்களைச் சிரவணஞ்செய்த அதிகாரிக்கும் புத்திமந்தத்தன்மைமுதலிய யாதேனும் ஓர் * ச. பிரதிபந்தத்தால் மகாவாக்கியத்தின் அர்த்தத்தினை விஷயஞ்செய்யும் யதார்த்த அநுபவவடிவ அபரோக்ஷப்பிரமை உற்பத்தியாகாதாயின், அவ்வபரோக்ஷப்பிரமையினது உற்பத்திவாயிலாக மோக்ஷபயனையுடைய உபாசனையைக் காட்டக் கருதிய ஆசாரியர், ஆதியில் முதலில் திருஷ்டாந்தத்தோடுகூடிய பிரஹ்மதத்துவத்தின் உபாசனையினாலும் மோக்ஷமுண்டாமென்று பிரதிஞ்ஞைசெய்கின்றார் :—

संवादिभ्रमवत् भ्रमतत्त्वोपास्त्या अपि मुच्यते ॥

(ப-ம்.)

சம்வாதிப்பிரமத்தினைப்போலப் பிரஹ்மதத்துவத்தின் உபாசனையினாலும் புருஷன் முக்தனாகின்றான்.

(வி-ம்.)

எப்படிச் சம்வாதிப்பிரமத்தினால் பிரவர்த்தித்த புருஷனுக்கு விரும்பிய பொருள் கிடைக்கின்றதோ, அதுபோலப் பிரஹ்மதத்துவத்தின் உபாசனையினாலும் முமுக்ஷுவுக்கு விரும்பிய பிரஹ்மத்தன்மைவடிவ மோக்ஷமுண்டாகின்றதென்பது பொருள்.

(அ-கை.)

"பிரஹ்மதத்துவத்தின் உபாசனையினாலும் மோக்ஷமுண்டாகின்றது" என்பதில் பிரமாணம் யாதெனக் கூறுகின்றார் :—

अतः उत्तरे तापनीये अनेकधा उपास्तिः श्रुता ॥

---

* ந. சிரவணத்தின் இலக்ஷணத்தினைப் பிரத்தியக்தத்துவவிவேகத்தின் ருந-வது திருப்திதீபத்தின் ௯0க-வது சுலோகங்களிற் காண்க. மனனத்தின் இலக்ஷணத்தினைப் பிரத்தியக்தத்துவவிவேகத்தின் ருந-வது திருப்திதீபத்தின் ௯0௨-வது சுலோகங்களிலும், நிதித்தியாசனத்தின் லக்ஷணத்தினைப் பிரத்தியக்தத்துவவிவேகத்தின் ருச-வது திருப்திதீபத்தின் ௯0௩-௧௧௨ சுலோகங்களிலும் காண்க. இம்மூன்றையும் அநுஷ்டிக்கும் அதிகாரிக்கு.

* ச. பிரதிபந்தத்தின் சொரூபத்தினை ௯௯௩ முதல் ௯0௧௧ சுலோகம் வரையிற் காண்க.

(சு-ம்.)

ஆதலால் உத்தரதாபநீயத்தில் அநேகவிதமான உபாசனை கேட்கப் பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

எதனால் உபாசனையினாலும் மோக்ஷமுண்டோ, அதனால் தாபநீய மென்னும் உபநிஷத்தில் அநேகவிதமான பிரஹ்மதத்துவத்தின் *டு. உபாசனை சொல்லப்பட்டிருக்கின்றதென்பது பொருள். (க)

உ. சம்வாதிப்பிரமத்தினைப் பிரதிபாதிக்கும் வார்த்திகத்தினைப் படித்தல்.

[௬௬0] मणिप्रदीपप्रभयोर्मणिबुद्ध्याभिधावतोः ।
मिथ्याज्ञानाविशेषेऽपि विशेषोऽर्थक्रियां प्रति ॥ २ ॥

(அ-கை.)

"சம்வாதிப்பிரமத்தினைப்போல" என்னும் முதற்சுலோகத்திற் கூறிய திருஷ்டாந்தத்தினை வர்ணித்தற்குச் சம்வாதிப்பிரமத்தினைப் பிரதிபாதிக்கும் வார்த்திகத்தினைப் படிக்கின்றார் :—

मणिप्रदीपप्रभयोः मणिबुद्ध्या अभिधावतोः मिथ्याज्ञानाविशेषे अपि अर्थक्रियां प्रति विशेषः ॥

---

* டு. அந்நியவஸ்துவின் வடிவமாம் விருத்தியாகிய அந்தராயமின்றிய உபாஸ்ய வஸ்துவின் ஆகாரமான விருத்தியின் நிரந்தரப்பிரவாகத்தினை உபாசன மென்றும், உபாசனை யென்றும் கூறுவர். அது சகுணம் நிர்க்குண மென்னும் பேதத்தால் இரு வகைத்தாம். அவ்வ ஒவ்வொன்றும் (க) பிரதீகவடிவம், (உ) தியேயாநுசாரம் என்னும் வேறுபாட்டால் இருவகையாம்.

(க) ஓர் வஸ்துவில் பிறிதொன்றன்புத்தியாக உண்டாவது எதுவோ அது **பிரதீகவடிவ உபாசனையாம்.** எங்ஙனம்: சாலிக்கிராமத்தில் விஷ்ணுபுத்தியாகவும், நர்மதேசுர(பாண)த்தில் சங்கரபுத்தியாகவும், மேல் இத்ன் ௧௧-வது சுலோகத்திற் சொல்லப்படும் ஸ்திரீமுதலியவற்றில் அக்கினிபுத்தியாகவும் உபாசனை யுண்டாகின்றது. அது **பிரதீகவடிவ உபாசனை.** அது அநேகவகைப்படும்.

(உ) உபாஸியவஸ்துவின் யதார்த்தசொரூபத்தைச் சிந்தித்தல் எதுவோ அது **தியேயாநுசாரமான உபாசனையாம்.** எங்ஙனம்: நிர்க்குணப்பிரஹ்மத்தின் அகங்கிரக வடிவ உபாசனையும், சாஸ்திரத்தில் நிச்சயிக்கப்பட்ட ஈசுவரனது சொரூபத்தின் தியானமும் **தியேயாநுசாரமான உபாசனைகளாம்.** இவ்விதமாக உபாசனையின் அநேகபேதமுண்டு. அவை பாஷியகாரர்முதலிய ஆசாரியர்களால் அந்தந்த உபநிஷதமுதலியவற்றின் வியாக்கியானத்தில் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. முமுக்ஷுக்களுக்கு உபயோகமுள்ள நிர்க்குண உபாசனை எதுவோ அதன் நிச்சயம் இத்தியானதீபப்பிரகரணத்தில் வெளிப்படையா யிருக்கின்றது.

(சு-ம்.)

மணியின் பிரபையிலும் தீபத்தின் பிரபையிலும் மணிபுத்தியால் ஓடும் இரண்டு புருஷர்களது மித்தியாஞானவடிவப் பிராந்திஞானம் சமானமாக உண்டாயினும், அர்த்தக்கிரியையாகிய சபலப்பிரவிருத்தியினைக் குறித்துப் பேத முண்டு.

(வி-ம்.)

மணிப்பிரபையிலும் தீபத்தின் பிரபையிலு முண்டாம் மணிபுத்தி யாதோ அது மித்தியாஞானமேயாம்; ஏனெனின் இரத்தினமாகிய மணியின்மையில் மணியின் புத்தி யிருத்தலால். அவ்வாறாயினும் மணியின் பிரபையிலுள்ள மணிபுத்தி அர்த்தக்கிரியையினைச் செய்வதாம் அதாவது சபலப்பிரவிருத்தியினை உண்டுபண்ணுவதாம்; ஆதலால் மணியின் பிரபையில் மணிபுத்தியால் ஓடும் புருஷனுக்கு மணியின் லாப முண்டாகின்றது. தீபத்தின் பிரபையில் மணிபுத்தியால் ஓடும் மற்றைய புருஷனுக்கோ மணியின் லாப முண்டாகிறதில்லை. இவ்விதத்தால் லாபத்திற் கேதுவான பிரவிருத்தி வடிவ அர்த்தக்கிரியையில் பேத மிருக்கின்றது என்பது பொருள். (உ)

ங. இரண்டாவது சுலோகத்திற் கூறிய வார்த்திகத்தின் வியாக்கியானம்.

[கூசுக] दीपोऽपवरकस्यांतर्वर्तते तत्प्रभा बहिः ।
दृश्यते द्वार्यथान्यत्र तद्वद्दृष्टा मणेः प्रभा ॥ ३ ॥

(அ-கை.)

இரண்டாவது சுலோகத்திற் கூறிய வார்த்திகத்திற்கு மூன்று சுலோகங்களால் வியாக்கியானஞ் செய்கின்றார் :—

अपवरकस्य अंतः दीपः वर्तते । तत्प्रभा बहिः द्वारि दृश्यते । अथ तद्वत् अन्यत्र मणेः प्रभा दृष्टा ।

(சு-ம்.)

உள்வீட்டினுள் தீப மிருக்கின்றது. அதன்பிரபை வெளிவாயிலிற் காணப்படுகின்றது. அதுபோல வேறுவீட்டில் உள்வீட்டினுள் இரத்தின மிருக்கின்றது. அதன்பிரபை வாயிலில் காணப்படுகின்றது.

(வி-ம்.)

ஓர் வீட்டில் நடுமனையில் அதாவது கர்ப்பக்கிரகத்தில் தீப மிருக்கின்றது. அதன் பிரபை வெளியே வாயிலிடத்தில் இரத்தினமாகிய மணியினைப்போல உருட்சிவடிவமாய்க் காணப்படுகின்றது. அதுபோல வேறு வீட்டில் நடுமனையிலுள்ள இரத்தினப்பிரபை வெளியிடத்தில் தீபத்தின் பிரபையினைப்போல இரத்தினசமானமாகக் காணப்படுகின்றது. (ங)

[௩௩௨] दूरे प्रभाद्वयं दृष्ट्वा मणिबुद्ध्याभिधावतोः ।
प्रभायां मणिबुद्धिस्तु मिथ्याज्ञानं द्वयोरपि ॥ ४ ॥

(அ-கை.)

இதுவுமது :—

प्रभाद्वयं दूरे दृष्ट्वा मणिबुध्या अभिधावतो द्वयोः अपि प्रभायां मणिबुद्धिः तु मिथ्याज्ञानं ॥

(சு-ம்.)

தூரத்தில் இரண்டு பிரபையினையும் பார்த்து மணி புத்தியினால் (இரத்தின மென்னும் நிச்சயத்தால்) ஓடுகின்ற இரண்டு புருஷர்களுக்கும் பிரபையினிடத்துள்ள மணிபுத்தி எதுவோ அது மித்தியா ஞானமே யாம்.

(வி-ம்.)

அத்தன்மைய இரண்டு பிரபையினையும் தூரத்தினின்று பார்த்து "இது மணி, இது மணி" யென்னும் புத்தியினால் இருவரும் ஓடினார்கள். அவ்விருவருக்கும் பிரபையினிடத்துண்டாகிய மணியின் ஞானமெதுவோ அது பிரமரூபமே யாம். (௪)

[௩௩௩] न लभ्यते मणिर्दीपप्रभां प्रत्यभिधावता ।
प्रभायां धावतावश्यं लभ्यतैव मणिर्मणेः ॥ ५ ॥

(அ-கை.)

இதுவுமது :—

दीपप्रभां प्रत्यभिधावता मणिः न लभ्यते । मणेः प्रभायां धावता अवश्यं मणिः लभ्यते एव ॥

(சு-ம்.)

தீபப்பிரபையில் மணிபுத்தியைச் செய்து ஓடுகின்ற புருஷனால் மணி அடையப்படுகிறதில்லை. மணியின் பிரபையில் மணியென்னும் புத்தியி னால் ஓடும் புருஷனுக்கு மணி அவசியம் கிடைக்கின்றது.

(வி-ம்.)

ஆயினும் தீபத்தின் பிரபையில் மணிபுத்தியினால் ஓடுகின்ற புருஷனுக்கு மணியின் இலாப முண்டாகிறதில்லை. மணியின் பிரபையில் மணி புத்தியினால் ஓடுகின்ற புருஷனுக்கு மணியின் இலாபம் உண்டாகவே செய்கின்றது. (௫)

௬. விசம்வாதிப்பிரமம் பிரகிருதசம்வாதிப்பிரம மென்பவற்றின் சொரூபம்.

[௬௯௬] दीपप्रभामणिभ्रांतिर्विसंवादिभ्रमः स्मृतः ।
मणिप्रभा मणिभ्रांतिः संवादिभ्रम उच्यते ॥ ६ ॥

(அ-கை.)

இவ்வாறு இரண்டாவது சுலோகத்திற் கூறப்பட்ட வார்த்திகத்தின் அர்த்தம் இருக்குக. இதனால் பிரகிருத சம்வாதிப்பிரமத்தின் சொரூபத்தில் வந்த தென்னையெனக் கூறுகின்றார் :—

दीपप्रभामणिभ्रांतिः विसंवादिभ्रमः स्मृतः । मणिप्रभा मणिभ्रान्तिः संवादिभ्रमः उच्यते ॥

(சு-ம்.)

தீபத்தின் பிரபையில் மணியின் பிராந்தி விசம்வாதிப்பிரம மெனப்படும். மணியின் பிரபையில் மணியின் பிராந்தி சம்வாதிப்பிரம மெனப்படும்.

(வி-ம்.)

தீபத்தின் பிரபையி லுண்டாகும் மணியின் பிராந்தி எதுவோ அது வித்துவான்களால் * ௬-ம் விசம்வாதிப்பிரமம் எனப்படும்; ஏனெனின், மணியின் இலாபவடிவ அர்த்தமாகிய பயன் எதுவோ அதனையுடைய கிரியையாகிய பிரவிருத்தியில்லா திருத்தலின். மணியின் பிரபையி லுண்டாம் மணிபுத்தி எதுவோ அது மணியின் இலாபவடிவ அர்த்தமுடைய கிரியையோடுகூடியதா யிருத்தலின் * எ. சம்வாதிப்பிரம மெனப்படுகின்றது என்பது பொருள். (௬)

௭. அநுமானத்தின் விஷயத்தில் சம்வாதிப்பிரமம்.

[௬௯௭] बाष्पं धूमतया बुध्वा तत्रांगारानुमानतः ।
वह्निर्यदृच्छया लब्धः स संवादिभ्रमो मतः ॥ ७ ॥

(அ-கை.)

இவ்வாறு பிரத்தியக்ஷப்பிரமாணத்தின் விஷயத்தில் சம்வாதிப்பிரமத்தினைக் காட்டி இப்போது அநுமானப்பிரமாணத்தின் விஷயத்திலும் அந்தச் சம்வாதிப்பிரமத்தினைக் காட்டுகின்றார் :—

बाष्पंधूमतया बुध्वा तत्र अंगारानुमानतः यदृच्छया वह्निः लब्धः सः संवादिभ्रमः मतः ॥

---

* ௬. நிஷ்பலப்பிரவிருத்தி(பயனில் முயற்சி)யை யுண்டுபண்ணும் பிராந்திஞானத்தினையும் அதன் விஷயத்தினையும் **விசம்வாதிப்பிரம** மென்பர்.

* எ. சபலப்பிரவிருத்தியினை யுண்டுபண்ணும் பிராந்திஞானத்தினையும் அதன் விஷயத்தினையும் **சம்வாதிப்பிரம** மென்பர்.

(சு-ம்.)

நீராவியினைப் புகையாக வறிந்து அவ்விடத்தில் நெருப்பின் அநுமானத்தினால் தற்செயலாக நெருப்பு இலபிப்பது எதுவோ அது சம்வாதிப்பிரம மென்று மதிக்கப்படும்.

(வி-ம்.)

ஓரிடத்திலுள்ள நீரின் ஆவியைப் புகையெனக் கண்டு அந்த ஆவியின் மூலமான இடத்தில் "இந்த ஸ்தலம் நெருப்புடையது; புகையுடையதாயிருத்தலின்" என்னும் அநுமானத்தின்பொருட்டுப் பிரவிருத்தித்த புருஷனுக்குத் தெய்வகதியால் அங்கு நெருப்புக் கிடைக்குமாயின், அப்போது அந்த ஆவியை விஷயஞ்செய்யும் புகையின் ஞானம் சம்வாதிப்பிரம மெனப்படும். (எ)

௬. சாஸ்திரத்தின் விஷயத்தில் சம்வாதிப்பிரமம்.

[கூ ௩௭ அ] गोदावर्युदकं गंगोदकं मत्वा विशुद्धये ।
संप्रोक्ष्य शुद्धिमाप्नोति स संवादिभ्रमो मतः ॥ ८ ॥

(அ-கை.)

சாஸ்திரத்தின் விஷயத்திலும் அச்சம்வாதிப்பிரமத்தினைக் காட்டுகின்றார்:—

गोदावर्युदकं गंगोदकं मत्वा विशुद्धये संप्रोक्ष्य शुद्धिं आप्नोति सः संवादिभ्रमः मतः ॥

(சு-ம்.)

கோதாவரியின் ஜலத்தை கங்காஜல மென்று மதித்துச் சுத்தியின் பொருட்டுத் தெளித்துக்கொண்டு சுத்தியை யடைகின்றான். அது சம்வாதிப்பிரம மென்று கொள்ளப்படுகின்றது.

(வி-ம்.)

கோதாவரியின் ஜலத்திற்கும் சுத்திக்குக்காரணமாந்தன்மை சாஸ்திரத்தால் பெறப்படுதலின் அந்தக்கோதாவரியின் ஜலத்தின் புரோக்ஷணையினை (தெளித்தலா)லும் சுத்தி யிருக்கிறது. அப்படியானாலும் கோதாவரியின் ஜலத்திலுள்ள கங்காஜலத்தின் புத்தி எதுவோ அது பிராந்தியாம். (அ)

[கூ ௩௭ ௭] ज्वरणार्तः सन्निपातं भ्रांत्या नारायणं स्मरन् ।
मृतः स्वर्गमवाप्नोति स संवादिभ्रमो मतः ॥ ९ ॥

(அ-கை.)

சாஸ்திரவிஷயத்தில் வேறு உதாரணங் கூறுகின்றார் :—

**ज्वरेण सन्निपातं आप्तः भ्रान्त्या नारायणं स्मरन् मृतः स्वर्गं अवाप्नोति । सः संवादिभ्रमः मतः ॥**

(சு-ம்.)

ஜ்வரத்தினால் சந்நிபாதத்தை யடைந்த புருஷன் பிராந்தியினால் நாராயணனை ஸ்மரித்துக்கொண்டு இறந்து சுவர்க்கத்தை யடைகிறான். அது சம்வாதிப்பிரம மென்று மதிக்கப்படுகிறது.

(வி-ம்.)

ஜ்வரமாகிய தாபத்தினால் சந்நிபாத மென்னும் வாதபித்தகபங்களின் பிரகோபத்தை யடைந்த புருஷன், "இந்த நாராயணனது ஸ்மரணம் எனக்குச் சுவர்க்கத்திற்குச் சாதனம்" என்னும் உணர்ச்சியில்லாமலும் சந்நிபாதத்தினாலாகிய மபக்கவசத்தால் சாதாரணபுருஷத்தன்மையாகச் சிசுபாலன் * அ. முதலியோர்களைப்போல நாராயணனை ஸ்மரிக்கின்றவனாய் இறந்து சுவர்க்கமடையவே செய்கின்றான். "துஷ்டசித்தமுடைய புருஷர்களாலும் ஸ்மரணஞ்செய்யப்பட்ட ஹரியானவர் பாபங்களைக் கெடுக்கின்றார்; இச்சையில்லாமலும் தொடப்பட்ட அக்கினி சுடுவதுபோல." அன்றியும், பாபமுடைய அஜாமிளனும் "நாராயணா? வென்று புத்திரனை அழைத்துக்கொண்டே இறந்து சாலோக்கியரூப அல்லது இயமதண்டத்தின் நிவிருத்திவடிவ முத்தியினை யடைந்தான்" என்றல் முதலிய புராணங்களின் வசனங்களால் பிராந்தியினாலாம் நாராயணனது ஸ்மரணம் உத்தம லோகத்தின் அடைவிற்குச் சாதனமாதல் அறியப்படுகின்றது. இந்த அஜாமிளனது பிரசங்கத்திலும் நாராயணனது நாமத்தினைப் புத்திரனது நாமமாக அறிதல் பிராந்தியாம். (௬)

---

* அ. இங்கு முதலிய வென்னும் சொல்லால் தந்தவக்கிரன்முதலியோர் கொள்ளப்படுவர். இவர்களுக்கு ஈசுவரத்தன்மையின்றித் துவேஷமுதலியவற்றால் நாராயணனை ஸ்மரித்தலால் உத்தமகதியின் அடைவுண்டாயிருக்கின்றது. அது ஸ்ரீமத்பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது:—கோபிகை காமத்தினாலும், கஞ்சன் பயத்தினாலும், சிசுபாலன்முதலிய ராஜாக்கள் துவேஷத்தினாலும், யாதவர் சம்பந்தத்தினாலும், (பாண்டவர்களாகிய) நீங்கள் சிநேகத்தினாலும், (நாரதாதிரிஷிகளாகிய) நாங்கள் பக்தியினாலும் பகவானுடைய ஸ்மரணஞ்செய்து பகவானை யடைந்தனம். சந்தனமுதலியவிருக்ஷங்கள் வெட்டப்படும் சம்பந்தத்தினால் சுகந்தத்தினைத் தருகின்றன. அதுபோலப் பகவானும் துவேஷமுதலியதன்மைகளால் ஸ்மரிக்கப்பட்டவராய்ப் பயனைத் தருபவராகின்றாரென்று அறிக.

எ. சுலோகம் ௧௩௦—௧௩௭-ல் கூறிய மூவகைச் சம்வாதிப்பிரமத்தின் உதாகரணத்தோடு சித்தித்தபொருளைக் கூறுதல்.

[௧௩௮] प्रत्यक्षस्यानुमानस्य तथा शास्त्रस्य गोचरे ।
उक्तन्यायेन संवादिभ्रमाः संति हि कोटिशः ॥ १० ॥

(அ-கை.)

இவ்வாறு மூவகைச் சம்வாதிப்பிரமத்தின் உதாகரணத்தினால் சித்தித்தபொருளைக் கூறுகின்றார்.—

प्रत्यक्षस्य अनुमानस्य तथा शास्त्रस्य गोचरे उक्तन्यायेन कोटिशः संवादिभ्रमाः सन्ति हि ॥

(சு-ம்.)

பிரத்தியக்ஷம், அநுமானம், அப்படியே சாஸ்திரம் என்பவற்றின் விஷயங்களிற் சொல்லப்பட்ட நியாயத்தினால் கோடி சம்வாதிப்பிரமம் பிரசித்தமாம். (௧௦)

அ. விபக்ஷத்தில் பாதகத்தால் ௧௩௦—௧௩௮ சுலோகங்களிற் கூறிய அர்த்தத்தின் திடத்தன்மை.

[௧௩௯] अन्यथा मृत्तिकादारुशिलाः स्युर्देवताः कथं ।
अग्नित्वादिधियोपास्याः कथं वा योषिदादयः ॥ ११ ॥

(அ-கை.)

சம்வாதிப்பிரமத்தினை அங்கீகரியாமைவடிவ விபக்ஷத்தில் அநிஷ்டத்தினைச் சம்பாதித்தல்வடிவ தர்க்கமாகிய பாதத்தினைக் காட்டுதலால் ௧௩௦-௧௩௮ சுலோகத்திற் கூறிய பொருளினைத் திடஞ்செய்கின்றார்:—

अन्यथा मृत्तिकादारुशिलाः देवताः कथं स्युः ॥

(சு-ம்.)

அவ்வாறில்லையாயின் மண் கட்டை கல் என்பவை எப்படித் தேவதைகளாகும்?

(வி-ம்.)

சம்வாதிப்பிரம மில்லையாயின் மண்முதலியன பயன்சித்திக்கும் பொருட்டுத் தெய்வத்தன்மையாகப் பூஜிக்கப்படுவனவாகா. ஏனெனின், மண்முதலியவற்றிற்குச் சொரூபமாகத் தேவதையாத லில்லாமையால், சம்வாதிப்பிரமத்தினாலேயே தேவதைத்தன்மை யுண்டு என்பது பொருள்.

(அ-கை.)

சம்வாதிப்பிரமம் அங்கீகரியாமையிலாம் வேறு பாதகத்தினைக் கூறுகின்றார் :—

**वा योषिदादयः अग्नित्वादिधिया कथं उपास्याः ॥**

(சு-டீ.)

அல்லது ஸ்திரீமுதலியன அக்கினித்தன்மை முதலியவற்றின் புத்தியினால் எப்படி உபாசனை செய்யத்தக்கவைகளாகும் ?

(வி-ம்.)

சாமவேதத்தினது சாந்தோக்கியவுபநிஷத்தின் நான்காவது அத்தியாயத்துள்ள பஞ்சாக்கினிவித்தையில் "योषा वाव गोतमाग्निः पुरुषो वाव गोतमाग्निः पृथिवी वाव गोतमाग्निः पर्जन्यो वाव गोतमाग्नि रसौ वाव द्युलोको गोतमाग्निः ॥ கௌதமனே ! ஸ்திரீ அக்கினியாம். கௌதமனே ! புருஷன் அக்கினியாம். கௌதமனே ! பிருதிவி அக்கினியாம். கௌதமனே ! மேகம் அக்கினியாம். கௌதமனே ! இச்சுவர்க்கலோகம் அக்கினியாம்." இவை முதலியவாக்கியங்களினாலேயே ஸ்திரீ, புருஷன், பிருதிவி, மேகம், சுவர்க்கலோக மென்னும் ஐந்தனையும் *க. அக்கினித்தன்மையாக உபாசித்தல்

---

*க. இவ்வைந்து அக்கினிகள் சாந்தோக்கியத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. அதனைச் சுருக்கமாகக் காட்டுவோம் :—

(க) கௌதமனே ! இச்சுவர்க்கலோகம் அக்கினியாம். அதற்கு ஆதித்தி (சூரி)யனே சமித்தாம் (சுடரச்செய்வதால் இந்தனமாம்). சூரியனது கிரணம் புகையாம். பகல் ஜ்வாலையாம் (சுடராம்). சந்திரன் (சூரியனும் பகலுமாகிய இந்தனமும் ஜ்வாலையும் இரவிலில்லாமையால் வெளிப்படையா யிருத்தலின்) நெருப்பாம். நக்ஷத்திரங்கள் பொறிகளாம். இவ்வக்கினியில் தேவர்கள் (யஜமானனது பிராணவடிவ அத்தியாத்மம் அக்கினியாதிவடிவ அதிதெய்வம்) சிரத்தைவடிவ ஜலத்தை ஹோமஞ்செய்கின்றார்கள். அவ்வாகுதியினின்றும் சோமராஜனென சந்திர னுண்டாகின்றான்.

(உ) கௌதமனே ! இந்திரன் (மழையின் அபிமானிதேவதை) அக்கினியாம். அதற்கு வாயுவே சமித்தாம் (விறகாம்.) மேகம் புகையாம். மின்னல் ஜ்வாலையாம். அசனி (வஜ்ஜிரவடிவ) நெருப்பாம். கர்ஜனையாகிய சப்தம் பொறிகளாம். இவ்வக்கினியில் முன்கூறிய தேவர் சோமராஜனென சந்திரனை ஓமிக்கின்றார்கள். அவ்வாகுதியினின்றும் மழை யுண்டாகின்றது.

(ங) கௌதமனே ! பிருதிவியே அக்கினியாம். அதற்குச் சம்வத்ஸரமே (ஆண்டுகளே) சமித்தாம். (சம்வத்ஸரவடிவ காலத்தினால் நெல்முதலியவற்றின் உற்பத்தியில் உபயோகமுடையதா யிருத்தலால்) ஆகாயம் புகையாம். இரவு ஜ்வாலையாம். திசை நெருப்பாம். அவாந்திர(மத்திய)திசைகள் பொறிகளாம். இவ்வக்கினியில் முற்கூறிய தேவர் வருஷத்தினை (மழையினை) ஓமிக்கின்றார்கள். அவ்வாகுதியினின்றும் அந்ந முண்டாகின்றது.

சொல்லியிருக்கிறது. வீரியம், அந்நம், மழை, சந்திரன், சிரத்தை என்னும் ஐந்தனையும் ஆகுதிவடிவமாக உபாசனை சொல்லியிருக்கிறது. அது பிரஹ்மலோகத்தின் அடைவுவடிவ பயனுடையதாகாது என்பது பொருள். மூலசுலோகத்திலுள்ள ஆதி யென்னும் சொல்லினால் "मनो ब्रह्मेत्युपासीत । மனம் பிரஹ்மமென்று உபாசிக்கவேண்டும்." "आदित्यो ब्रह्मेत्यादेशः । ஆதித்தியன் பிரஹ்மம் என்பது உபதேசம்" என்னும் * ௧0. இவைமுதலிய உபாசியங்கள் (உபாசனையின் விஷயங்கள்) கிரகிக்கப்படுகின்றன. (௧௧)

௧. சுலோகம் ௧௩௦-௧௩௧-ல் கூறிய சம்வாதிப்பிரமத்தினைச் சுருக்கமாகக் கூறுதல்.

[௧௭0] अयथावस्तुविज्ञानात्फलं लभ्यत ईप्सितम् ।
काकतालीयतः सोऽयं संवादिभ्रम उच्यते ॥ १२ ॥

(அ-கை.)

இப்போது வெகு கிரந்தங்களால் எடுத்துச் சொல்லப்பட்ட சம்வாதிப்பிரமத்தினை எளிதா யறியும்பொருட்டுச் சுருக்கிக் காட்டுகின்றார்:—

अयथावस्तुविज्ञानात् ईप्सितं फलं काकतालीयतः लभ्यते । सः अयं संवादि-भ्रमः उच्यते ॥

(சு-ம்.)

அயதார்த்தவஸ்துவின் விஞ்ஞானத்தால் விரும்பியபயன் காகதாலீயநியாயத்தால் கிடைக்கின், அது இச்சம்வாதிப்பிரம மெனப்படும்.

---

(ச) கௌதமனே! புருஷன் அக்கினியாம். அதற்கு வாக்கிந்திரியம் சமித்தாம். பிராணன் புகையாம். நாக்கு ஜ்வாலையாம். சக்ஷு (கண்) நெருப்பாம். சுரோத்திரம் பொறிகளாம். இவ்வக்கினியில் முற்கூறிய தேவர் அந்நத்தை ஓமிக்கின்றார்கள். அவ்வாகுதியினின்றும் ரேதசு (வீரியம்) உண்டாகின்றது.

(ரு) கௌதமனே! ஸ்திரீயே அக்கினியாம். அவள் உபஸ்தமே சமித்தாம். இரகசியமாய்ப் பேசுதல் புகையாம். யோனி ஜ்வாலையாம். உள்ளில் செய்வது எதுவோ அதுவே நெருப்பாம். சுகத்தின் இலேசம் (அற்பம்) பொறிகளாம். இவ்வக்கினியில் முற்கூறிய தேவர் இரேதசை (வீரியத்தை) ஓமிக்கின்றார்கள். அவ்வாகுதியால் கர்ப்பமுண்டாகின்றது.

உரையாசிரியர் பிறழ்ச்சியான முறை காட்டியது மூலசுலோகத்தை யநுசரித்ததாம். இங்குள்ள நேரான முறை யாதோ அது சுருதியிலுள்ள பிரசங்கத்தை யநுசரித்ததாம்.

* ௧0. இங்கு ஆதிசப்தத்தினால் ஈசுவராதித்தன்மையினால் உபாசிக்கத்தக்க பதி (கணவன்) முதலிய அநேக உபாசியங்களைத் தெரிந்துகொள்க.

சம்வாதிப்பிரமத்தினால் அங்கீகரியாவிடின், சாஸ்திரத்திற் கூறிய இவ்வெல்லா உபாசியங்களும் நிஷேதிக்கப்படும். அது அநிஷ்டமாம் (விரும்பப்படாததாம்). ஆதலால் சம்வாதிப்பிரமத்தினைக் கொள்ளுதல்வேண்டும்.

(வி-ம்.)

விகித (சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட) அல்லது அவிகித (சாஸ்திரத்தில் விதிக்கப்படாத) எந்த அயார்த்த வஸ்துவின் விஞ்ஞானத்தால் அதாவது விபரீதவுணர்ச்சியால் விரும்பியபயன் * கக. காகதாலீயநியாயத்தால் அதாவது தெய்வகதியால் கிடைக்கின், அது இச்சம்வாதிப்பிரமமா மென்பது பொருள். (கஉ)

கம. சுலோகம் கூ௬௦—கூ௬௩-ல் கூறிய திருஷ்டாந்தத்தினைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துதல்.

[கூ௭க] स्वयं भ्रमोऽपि संवादी यथा सम्यक् फलप्रदः ।
ब्रह्मतत्त्वोपासनापि तथा मुक्तिफलप्रदा ॥ १३ ॥

(அ-கை.)

அயதார்த்தவஸ்துவினை விஷயஞ்செய்யும் பிரஹ்மத்தி னுபாசனையானது நல்லஞானத்தால் சாத்தியமுத்திவடிவ பயனைத் தருதல் எவ்வாறென் றுசங்கித்துச் சம்வாதிப்பிரமத்தினைப்போலவே பிரஹ்மத்தின் உபாசனையும் பயனைத் தரு மென்று கூறுகின்றார் :—

यथा संवादी स्वयं भ्रमः अपि सम्यक् फलप्रदः तथा ब्रह्मतत्त्वोपासना अपि मुक्तिफलप्रदा ॥

(சு-ம்.)

எப்படிச் சம்வாதி அதாவது பயனுடைப்பிரவிருத்தியை யுண்டுபண்ணும் ஞானம் தான் பிரமவடிவ மாயினும் நல்லபயனைத் தருவதா யிருக்கின்றதோ, அதுபோலப் பிரஹ்மதத்துவோபாஸனையும் முத்திவடிவ பயனைத் தருவதா யிருக்கின்றது. (கங)

உ. பரோக்ஷஞானத்தினால் பிரஹ்மதத்துவத்தினை உபாசிக்குமுறை கூ௭உ-கூ௮௭.

க. சாஸ்திரவாயிலாகப் பரோக்ஷத்தன்மையால் அறியப்பட்ட பிரஹ்மம் உபாசிக்கப்படுவதாதல்.

[கூ௭உ] वेदांतेभ्यो ब्रह्मतत्त्वमखंडैकरसात्मकम् ।
परोक्षमवगम्यैतदहमस्मीत्युपासते ॥ १४ ॥

---

* கக. (க) ஒரு புருஷன் இரண்டு கைகளினாலும் தாளம் போடுங்காலத்து அவனது கைகளின் இடையில் தெய்வகதியாகக் காகபக்ஷி வந்துவிடுமாயின் அது காகதாலீயநியாய மெனப்படும்.

உ. அல்லது தாலவிருக்ஷம் (பனைமரம்) விழத்தக்கதாயிருக்க அதன்பேரில் காகம் வந்து உட்காரவே பனை விழுந்துவிடுமாயின் அதனைக் காகதாலீயநியாய மென்பர்.

அதனைப்போலப் பிராந்திஞானத்தினால் விரும்பிய பயன் கிடைத்தலால் அது சம்வாதிப்பிரம மெனப்படுகின்றது.

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மதத்துவத்தினை யறிந்து உபாசனை செய்யப்படுகின்றதா? அல்லது அறியாது உபாசனை செய்யப்படுகின்றதா? என்னும் இவை இரண்டு பக்ஷமாம். அவற்றுள், முதற்பக்ஷத்தில் உபாசனை வியர்த்தமாகும்; ஏனெனின், மோக்ஷத்தின் சாதனமாகிய ஞானமே யிருத்தலால். இரண்டாவது பக்ஷத்தில் விஷயத்தை யறியாததினால் உபாசனையே நிகழாது என்றுசங்கித்துக் கூறுகின்றார் :—

वेदांतेभ्यः अखंडैकरसात्मकं ब्रह्मतत्त्वं परोक्षं अवगम्य "एतत् अहं अस्मि" इति उपासते ।।

(சு-ம்.)

வேதாந்தத்தினால் அகண்ட ஏகரசப் பிரஹ்மதத்துவத்தினைப் பரோக்ஷமா யறிந்து "இவ்வகண்டைகரசப்பிரஹ்மம் நான்" என்று உபாசிக்க வேண்டும்.

(வி-ம்.)

இங்கு இஃது அபிப்பிராயமாம் :—பிரஹ்மாத்மாவின் ஒருமையால் அபரோக்ஷஞானவடிவ மோக்ஷசாதன முண்டாகாமையால் உபாசனை வியர்த்தமாகாது. சாஸ்திரத்தினால் பிரஹ்மத்தினைப் பரோக்ஷத்தன்மையாக அறிந்திருத்தலால் பிரஹ்மம் உபாசனைக்கு விஷயமாம். ஆதலால் பிரஹ்மத்தின் உபாசனை கூடும். (௧௪)

உ. திருஷ்டாந்தத்தோடு உபாசியத்தினைக் கோசரிக்கும்
பரோக்ஷஞானத்தின் சொரூபம்.

[௬௭௩] प्रत्यग्व्यक्तिमनुल्लिख्य शास्त्राद्विष्ण्वादिमूर्तिवत् ।
अस्ति ब्रह्मेति सामान्यज्ञानमत्र परोक्षधीः ॥ १५ ॥

(அ-கை.)

உபாசிய (உபாசனை செய்யத்தக்க) பிரஹ்மத்தினைக் கோசரிக்கும் பரோக்ஷஞானத்தின்வடிவம் யாது என்று கேட்குமிடத்துக் கூறுகின்றார்:-

प्रत्यग्व्यक्तिं अनुल्लिख्य शास्त्रात् "ब्रह्म अस्ति" इति सामान्यज्ञानं अत्र परोक्षधीः । विष्ण्वादिमूर्त्तिवत् ॥

(சு-ம்.)

உள் ஆத்மாவின் சொரூபத்தை விஷயஞ் செய்யாது, சாஸ்திரத்தினால்

"பிரஹ்மமிருக்கிறது" என்றுண்டாகும் சாமானியஞானம் இங்குப் பரோக்ஷஞானமாம்; விஷ்ணுவாதியர் வடிவத்தினைப்போல.

(வி-ட.)

புத்திமுதலியவற்றின் சாக்ஷியாகிய ஆநந்தவடிவ ஆத்மாவினை விஷயஞ் செய்யாது, "சத்தியஞானாநந்தம் பிரஹ்மம்" என்றல் முதலிய வாக்கிய சமூகமான சாஸ்திரத்தினால் "பிரஹ்மம் இருக்கிறது" என்று சாமானிய வடிவமாக வுண்டாகும் ஞானம் இவ்வுபாசனையில் பரோக்ஷஞான மென்று சொல்லக் கருதியதாம் என்பது பொருள். அதில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—விஷ்ணுவாதியரின் வடிவத்தினைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரத்தினா லுண்டாகிய பரோக்ஷஞானத்தினைப்போல என்பது பொருள்.(கஞ)

௩. திருஷ்டாந்தவடிவ விஷ்ணுவாதி வடிவத்தின் ஞானம் பரோக்ஷமாதல்.

[கஎச] चतुर्भुजाद्यवगतावपि मूर्तिमनुल्लिखन् ।
अक्षैः परोक्षज्ञान्येव न तदा विष्णुमीक्षते ॥ १६ ॥

(அ-கை.)

அப்படியானால் சாஸ்திரத்தினால் விஷ்ணுமுதலியோரின் வடிவத்திற்கு நாற்புயத்தன்மைமுதலிய விசேஷந் தோற்றுதலால், அந்த விஷ்ணுவாதியர்வடிவத்தின் ஞானத்திற்கும் பரோக்ஷத்தன்மை ஏன் இருக்கின்றதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

चतुर्भुजाद्यवगतौ अपि अक्षैः मूर्त्तिं अनुल्लिखन् परोक्षज्ञानी एव ॥

(சு-ம்.)

சதுர்ப்புஜமுதலியவற்றின் ஞான முண்டாகியும், இந்திரியங்களால் மூர்த்தியை (வடிவத்தை) அறியாது புருஷன் பரோக்ஷஞானியே யாவன்.

(வி-ம்.)

சாஸ்திரத்தினால் நாற்புயத்தன்மைமுதலிய விசேஷதர்மத்தின் தோற்ற முண்டாகியும், நேத்திரமுதலியவற்றால் விஷ்ணுவாதியரின் மூர்த்தியினை அறியாது புருஷன் பரோக்ஷஞானியே யாகின்றான்.

(அ-கை.)

அங்குச் சம்பவித்தலைக் கூறுகின்றார்:—

तदा विष्णुं न ईक्षते ॥

(சு-ம்.)

அப்போது விஷ்ணுவைப் பார்க்கிறதில்லை.

(வி-ம்.)

அப்போது உபாசனைகாலத்தில் உபாசியமாகிய விஷ்ணுவைக் காண்கிறதில்லை அதாவது இந்திரியங்களால் விஷயஞ்செய்கிறதில்லை என்பது பொருள். (௧௬)

௪. சுலோகம் ௧௭௪-ல் கூறிய பிரமாணசித்த
பரோக்ஷஞானம் பிரம மாகாமை.

[௬௭௫] परोक्षत्वापराधेन भवेन्नातत्त्ववेदनम् ।
प्रमाणेनैव शास्त्रेण सत्यमूर्तेर्विभासनात् ॥ १७ ॥

(அ-கை.)

அப்படியானால் விஷ்ணுமுதலியோரை விஷயஞ்செய்யும் ஞானத்திற்கு வியக்தியாகிய வடிவத்தைக் கிரகித்தலின்மையின் பிரமவடிவத்தன்மை யுண்டாகுமென்றாசங்கித்து, விஷ்ணுவாதியரின் ஞானம் பிரமாணத்தாற்றோன்றியதா யிருத்தலின் பிரமவடிவ மாகா தென்று கூறுகின்றார்:—

परोक्षत्वापराधेन अतत्त्ववेदनं न भवेत् । प्रमाणेन शास्त्रेण एव सत्यमूर्तेः विभासनात् ॥

(சு-ம்.)

பரோக்ஷத்தன்மையின் அபராதத்தினால் இந்த ஞானம் அதத்துவ ஞான மென்னும் பிரமவடிவ மாகாது; இங்குப் பிரமாணவடிவ சாஸ்திரத்தினாலேயே சத்தியமான மூர்த்தி விளங்குதலால் பிரமவடிவ மன்று.

(வி-ம்.)

பரோக்ஷஞானத்தன்மை பிராந்திஞானத்திற் காரணமாகாது. ஆனால் விஷயத்தின் அசத்தியத்தன்மை பிராந்திஞானத்திற் காரணமாம். இங்கு உபாசனையிலோ பிரமாணவடிவ சாஸ்திரத்தினாலேயே யதார்த்தவடிவ விஷ்ணுவாதியரின் மூர்த்தி தோற்றுதலால் பரோக்ஷஞானம் பிரமவடிவ மன்று என்பது பொருள். (௧௭)

௫. பிரத்தியக்கு (உள்) வியக்தியை விஷயஞ்செய்யாமையால்
௬௭௬-வது சுலோகத்திற் கூறிய சாஸ்திரஜந்நிய
பிரஹ்மஞானம் பரோக்ஷமாதல்.

[௬௭௬] सच्चिदानंदरूपस्य शास्त्राद्भानेप्यनुल्लिखन् ।
प्रत्यंचं साक्षिणं तत्तु ब्रह्म साक्षान्न वीक्षते ॥ १८ ॥

(அ-கை.)

சச்சிதாநந்த சொரூபத்தை விஷயஞ்செய்யும் சாஸ்திரத்தினா லுண்டாகியதா யிருந்தும் பிரஹ்மதத்துவத்தின் ஞானத்திற்கு எதனால் பரோக்ஷத்தன்மை யிருக்கின்றது? என்றாசங்கித்துப் பரோக்ஷத்தன்மைக்குக் காரணமான பிரத்தியக்குவடிவ சாக்ஷியினைக் கிரகியாமை யிருத்தலால் அந்தப் பிரஹ்மத்தின் ஞானத்திற்குப் பரோக்ஷத்தன்மை யிருக்கின்ற தென்று கூறுகின்றார் :—

शास्त्रात् सच्चिदानंदरूपस्य भाने अपि प्रत्यञ्चं साक्षिणं अनुल्लिखन् तत् ब्रह्म तु साक्षात् न वीक्षते ॥

(சு-ம்.)

சாஸ்திரத்தினால் சச்சிதாநந்தவடிவம் தோற்றியும் பிரத்தியக்கான சாக்ஷியை விஷயஞ்செய்யாமையால் புருஷன் அந்தப் பிரஹ்மத்தையோ சாக்ஷாத்தாக (நேராக) அறிகிறதில்லை.

(வி-ம்.)

“सत्यज्ञानानन्तं ब्रह्म சத்தியஞானாநந்தம் பிரஹ்மம்.” “नित्यः शुद्धो बुद्धः सत्यो मुक्तो निरञ्जनः நித்திய சுத்த புத்த சத்திய முக்த நிரஞ்சனமாம்.” “सद्धीदं सर्वं तत्सत् காரியகாரணவடிவ சத்து அசத்தென்னும் இவ்வெல்லா ஜகத்தும் சத்துவடிவமாம்.” “चिद्धीदं सर्वं प्रकाशते சித்துருபமாக இவ்வெல்லாம் பிரகாசிக்கின்றது” என்னும் இவைமுதலிய சாஸ்திரங்களினால் சச்சிதாநந்தவடிவப் பிரஹ்மம் தோற்றினும், பிரத்தியக்கு (ஆந்தர) சாக்ஷியைவிஷயஞ்செய்யாத அதாவது அந்தப் பிரஹ்மத்தின் பிரத்தியகாத்மவடிவத்தன்மையை அறியாத புருஷன் அந்தப் பிரஹ்மத்தை நேராக அறிகிறதில்லை. (கஅ)

சு. சுலோகம் கஎகூ-ல் கூறிய பிரஹ்மகோசரஞானம் தத்துவஞான மாதல்.

[கூஎஎ] शास्त्रोक्तेनैव मार्गेण सच्चिदानंदनिश्चयात् ।
परोक्षमपि तज्ज्ञानं तत्त्वज्ञानं न तु भ्रमः ॥ १९ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது அத்தன்மைய பிரஹ்மத்தின் பிரத்தியகாத்மவடிவத்தன்மையைக் கிரகியாத பிரஹ்மகோசரஞானத்திற்குத் தத்துவ (யதார்த்த) ஞானத்தன்மை எப்படி யிருக்கின்றதென் றாசங்கித்துச் சாஸ்திரவடிவப் பிரமாணத்தினாற் றோன்றியதா யிருத்தலின் அதற்குத் தத்துவஞானத்தன்மை யுண்டென்று கூறுகின்றார் :—

शास्त्रोक्तेन एव मार्गेण सच्चिदानंदनिश्चयात् परोक्षमपि तत् ज्ञानं तत्त्वज्ञानं। भ्रमः तु न ॥

(சு-ம்.)

சாஸ்திரத்திற் கூறிய மார்க்கத்தினலேயே சச்சிதாநந்தத்தின் நிச்சயத்தினல் பரோக்ஷமாயினும் அந்த ஞானம் தத்துவஞான(பிரமா)ரூபமாம்; பிரம(மயக்க)வடிவ மன்று.

(வி-ம்.)

அந்த ஞானம் பரோக்ஷமாயினும் சாஸ்திரத்திற் கூறியபடியே பிரஹ்மத்தின் சச்சிதாநந்தவடிவத்தின் நிச்சயஞ்செய்விப்பதா யிருத்தலால் செவ்வையான ஞானமேயாம்; பிரமவடிவ மன்று என்பது பொருள். (கக)

எ. விசாரமின்றிய நரனுக்குக் கேவல மகாவாக்கியத்தால் பிரஹ்மம் அறியப்படாமை.

[கூஎஅ] ब्रह्म यद्यपि शास्त्रेषु प्रत्यक्त्वेनैव वर्णितम् ।
महावाक्यैस्तथाप्येतद्दुर्बोधमविचारिणः ॥ २० ॥

(அ-கை.)

அப்படியானல் "சத்திய ஞானநந்தம் பிரஹ்மம்" என்றல்முதலிய அவாந்திரவாக்கியங்களால் பிரஹ்மத்தின் சச்சிதாநந்தவடிவத்தன்மையினைப்போலத் "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்களால் இப் பிரஹ்மத்தின் பிரத்தியக்குசொரூப சாக்ஷிவடிவத்தன்மையும் அறிவிக்கப்படுகின்றது. ஆதலால் சாஸ்திரஜந்யஞானமும் பிரத்தியகாத்மாவை விஷயஞ்செய்வதா யிருத்தலால் அபரோக்ஷமே யாகுமென் றுசங்கித்துக் கூறுகின்றார்:—

यद्यपि शास्त्रेषु महावाक्यैः ब्रह्म प्रत्यक्त्वेन एव वर्णितं तथाऽपि एतत् अविचारिणः दुर्बोधं ॥

(சு-ம்.)

சாஸ்திரங்களில் மகாவாக்கியங்களால் பிரஹ்மம் பிரத்தியக்குவடிவமாதலினலேயே வர்ணிக்கப்பட்டிருக்கினும், இந்தப் பிரத்தியக்குவடிவத்தன்மை அவிசாரி (விசாரமில்லாத) புருஷர்களுக்கு அறிதற்கரியதாம்.

(வி-ம்.)

வேதாந்தங்களில் மகாவாக்கியங்களால் பிரஹ்மம் பிரத்தியகாத்மவடிவமா யிருத்தலினலேயே உபதேசிக்கப்பட்டிருக்கினும், இந்தப் பிரஹ்மத்தின் பிரத்தியகாத்மத்தன்மை அந்வயவியதிரேகங்களால் "தத், துவம்"

பதார்த்தங்களின் விவேகமில்லாத புருஷர்களுக்கு அறிதற்கரியதாம். ஆதலால் கேவல அதாவது விசாரமின்றிய வாக்கியத்தினுல் அபரோக்ஷஞான முண்டாகா தென்பது பொருள். (உ0)

அ. தேகமுதலியவற்றில் ஆத்மபுத்தி (தானென்னும் உணர்ச்சி) யிருக்க, மந்தபுத்தியுடையவனுக்கு அடத்தால் ஆத்மவடிவமாகப் பிரஹ்மத்தை யறியக்கூடாமை.

[கூஎகூ] देहाद्यात्मत्वविभ्रांतौ जाग्रत्यां न हठात्पुमान् ।
ब्रह्मात्मत्वेन विज्ञातुं क्षमते मंदधीत्वतः ॥ २१ ॥

(அ-கை.)

அப்படியானுல் செவ்வையான ஞானம் பிரமாண பிரமேயங் (வஸ்துக்) களின் அதீனமாயிருத்தலாலும், "தத்துவமஸி" முதலிய வாக்கியவடிவப் பிரமாண மிருத்தலாலும், பிரஹ்மாத்மவடிவவஸ்து இருத்தலாலும் விசாரத்தினுலன்றிப் பிரஹ்மத்தினது பிரத்தியகாத்மவடிவத்தன்மையின் அறிதற்கரியதன்மை எதனு லிருக்கின்றது? என்ருசங்கித்துக் கூறுகின்ருர்:—

देहाद्यात्मत्वविभ्रांतौ जाग्रत्यां पुमान् मंदधीत्वतः हटात् ब्रह्म आत्मत्वेन विज्ञातुं न क्षमते ॥

(சு-ம்.)

தேகமுதலியவற்றில் ஆத்மத்தன்மையினது பிராந்தியின் ஜாக்கிரத்தில் அதாவது பிராந்தி இருக்குங்காலத்துப் புருஷன் மந்தபுத்தியுடையவனுயிருத்தலால் அடத்தால் பிரஹ்மத்தினை ஆத்மவடிவமாக அறியச் சமர்த்தனுகான்.

(வி-ம்.)

பிரஹ்மாத்ம ஐக்கியத்தன்மையின் அபரோக்ஷஞானத்திற்கு விரோதியும் விசாரத்தினுல் நிவர்த்திக்கத்தக்கதுமான தேகேந்திரியாதிகளிலுள்ள ஆத்மத்தன்மையின் பிராந்தி எதுவோ, அஃதிருத்தலால் அந்தப் பிரமம் நீங்கும்பொருட்டு விசாரம் அபேக்ஷிக்கப்படுவ தாகின்றது என்பது பொருள். (உக)

கூ. அபரோக்ஷத்துவைதப்பிரமத்திற்கும் பரோக்ஷ அத்வைத ஞானத்திற்கும் விரோதமின்மை.

[கூஅ0] ब्रह्ममात्रं सुविज्ञेयं श्रद्धालोः शास्त्रदर्शिनः ।
अपरोक्षद्वैतबुद्धिः परोक्षाद्वैतबुद्ध्यनुत् ॥ २२ ॥

(அ-கை.)

அப்படியானால் தேகேந்திரியாதிகளை விஷயஞ்செய்யும் துவைதப்பிரம மிருத்தலால், அத்விதீயப் பிரஹ்மகோசர பரோக்ஷஞானமும் உதயமாகாது என்றாசங்கித்து, அபரோக்ஷவடிவத்துவைதத்தின் பிரமம் பரோக்ஷவடிவ அத்வைதத்தின் ஞானத்திற்கு விரோதியாகாததா யிருத்தலின், சிரத்தையுடைய புருஷனுக்குச் சாஸ்திரத்தினால் பரோக்ஷஞான முண்டாகவே செய்கின்றது என்று கூறுகின்றார்:—

अपरोक्षद्वैतबुद्धिः परोक्षाद्वैतबुद्ध्यनुत् श्रद्धालोः शास्त्रदर्शिनः ब्रह्ममात्रं सुविज्ञेयं ॥

(சு-ம்.)

அபரோக்ஷத்துவைதத்தின் புத்தி பரோக்ஷ அத்வைதபுத்திக்கு அவிரோதியா யிருத்தலால் சிரத்தையுடைய சாஸ்திரமுணரும் புருஷனால் பிரஹ்மமாத்திரம் சுகமாய் அறியத்தக்கதாம்.

(வி-ம்.)

அபரோக்ஷவடிவத் துவைதத்தின் ஞானம் எதனால் பரோக்ஷவடிவ அத்வைதத்தின் ஞானத்திற்கு * கஉ. அவிரோதியா யிருக்கின்றதோ, அதனால் பிரஹ்மமாத்திரம் எளிதில் அறியத்தக்கதாம் என்பது அந்வயம். ()

கo. சுலோகம் கூஅo-ல் கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்தம்.

[கூஅக] अपरोक्षशिलाबुद्धिर्न परोक्षेशतां नुदेत् ।
प्रतिमादिषु विष्णुत्वे को वा विप्रतिपद्यते ॥ २३ ॥

(அ-கை.)

அபரோக்ஷப்பிரமம் பரோக்ஷமாகிய செவ்வையான ஞானத்திற்கு விரோதியாகாமையில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

अपरोक्षशिलाबुद्धिः परोक्षेशतां न नुदेत् ॥

---

கஉ. இது நியமமாம்:—ஒரு வஸ்துவினை விஷயஞ்செய்யும் பின்னவடிவமுடைய இரண்டு ஞானங்கள் ஒரு அந்தக்கரணத்தி லிரா. ஆதலால் ஒரே துவைதத்தின் அல்லது அத்வைதத்தின் அபரோக்ஷஞானமும் பரோக்ஷஞானமும் ஒரு அந்தக்கரண(உள்ள)த்திருத்தல் விரோதமாம். ஆனால் துவைதத்தின் அபரோக்ஷஞானத்திற்கும் அத்வைதத்தின் பரோக்ஷஞானத்திற்கும் விரோத மில்லை. ஆதலால் உபாசகர்களுக்குத் தேகாதிவடிவத் துவைதத்தின் அபரோக்ஷப்பிராந்தி யிருந்தும் பரோக்ஷத்தன்மையாக அத்வைதப்பிரஹ்மத்தின் ஞானம் கூடும்.

(சு-ம்.)

அபரோக்ஷவடிவ கல்லென்னும் புத்தியானது பரோக்ஷமான ஈசுவரத் தன்மையின் புத்தியோடு விரோதத்தை யடைகிறதில்லை.

(அ-கை.)

விரோதமின்மையினையே உதாரணத்தினால் காட்டுகின்றார் :—

प्रतिमादिषु विष्णुत्वे कः वा विप्रतिपद्यते ॥

(சு-ம்.)

பிரதிமைமுதலியவற்றிலும், விஷ்ணுத்தன்மைமுதலியவற்றிலும் எந்த ஆஸ்திகபுருஷன் விவாதஞ் செய்வன்? ஒருவனும் செய்யான். (௨௩)

கக. சுலோகம் ௬௨௰-ல் கூறிய திருஷ்டாந்தத்தி லுண்டாம் சங்கையின் பரிகாரம்.

[௬௮௨] अश्रद्धालोरविश्वासोर्नोदाहरणमर्हति ।
श्रद्धालोरेव सर्वत्र वैदिकेष्वधिकारतः ॥ २४ ॥

(அ-கை.)

ஓர் நாஸ்திகபுருஷன் விவாதஞ்செய்வதாகக் காணப்படுகின்றதேன் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

अश्रद्धालोः अविश्वासोः उदाहरणं न अर्हति ॥

(சு-ம்.)

சிரத்தை இல்லாதவனும் விசுவாசமில்லாதவனுமாகிய புருஷனது உதாரணம் கொடுத்தற்குரிய தாகாது.

(அ-கை.)

எதனாலெனக் கூறுகின்றார்:—

सर्वत्र वैदिकेषु श्रद्धालोः एव अधिकारतः ॥

(சு-ம்.)

சிரத்தையுடையவனுக்கே சகல வைதிககர்மங்களிலும் அதிகார மிருத்தலால்.

(வி-ம்.)

வேதத்திற் கூறியுள்ள சகல அனுஷ்டானங்களிலும் சிரத்தையுடைய புருஷனே அதிகாரியாதலால் சிரத்தையும் விசுவாசமு மில்லாத புருஷனது உதாகரணம் தகுதியில்லாததா மென்பது பொருள். (௨௪)

கஉ. உலகாநுபவத்தோடு ஒரு முறை ஆப்தவுபதேசத்தால் பரோக்ஷஞான முண்டாதல்.

[கூஅரு] सकृदाप्तोपदेशेन परोक्षज्ञानमुद्भवेत् ।
विष्णुमूर्त्युपदेशो हि न मीमांसामपेक्षते ॥ २५ ॥

(அ-கை.)

கூஎஉ-கூஅஉ சுலோகம்வரையிற் சொல்லப்பட்ட பரோக்ஷஞானத்தில் என்ன வந்தது என்னுமிடத்துக் கூறுகின்றார் :—

सकृत् आप्तोपदेशेन परोक्षज्ञानं उद्भवेत् ॥

(சு-ம்.)

ஒருமுறை ஆப்தனாகிய உண்மையுரைப்போனது உபதேசத்தால் பரோக்ஷஞான முண்டாகிறது.

(அ-கை.)

முற்கூறிய அர்த்தத்தினை உலகாநுபவத்தினால் திடமாக்குகின்றார் :—

हि विष्णुमूर्त्युपदेशः मीमांसां न अपेक्षते ॥

(சு-ம்.)

எதனால் விஷ்ணுவினது மூர்த்தியின் உபதேசம் பரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுதலில் விசாரத்தினை அபேக்ஷிக்கிறதில்லையோ, ஆனால் விசாரமின்றியே பரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுகிறதோ, அதனால். (உரு)

கரு. சந்தேகம் சம்பவித்தலால் கர்மோபாசனைகள் விசாரிக்கத்தக்கன வாதல்.

[கூஅச] कर्मोपास्ती विचार्येते अनुष्ठेयाविनिर्णयात् ।
बहुशाखाविप्रकीर्णं निर्णेतुं कः प्रभुर्नरः ॥ २६ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது சாஸ்திரங்களில் விசாரம் எதனால் செய்யப்படுகின்றது? என்றாசங்கித்து, அநுஷ்டானஞ்செய்யத்தக்க கர்மோபாசனைகளில் சந்தேகம் சம்பவித்தலால் அவற்றை நிச்சயித்தற்பொருட்டுச் சாஸ்திரத்தில் விசாரஞ்செய்யப்படுகின்றதென்று கூறுகின்றார் :—

अनुष्ठेयाविनिर्णयात् कर्मोपास्ति विचार्येते ॥

(ஸ-ம்.)

அநுஷ்டானஞ்செய்யத்தக்க கர்மோபாசனைகளின் நிர்ணயமின்மையால் கர்மோபாசனைக ளிரண்டும் சாஸ்திரங்களில் விசாரிக்கப்படுகின்றன.

(அ-கை.)

கர்மோபாசனைகளில் சந்தேகம் சம்பவித்தலையே உபபாதனஞ்செய்கின்றார் :—

बहुशाखाविप्रकीर्णं निर्णेतुं नरः कः प्रभुः ॥

(ஸ-ம்.)

வெகு சாகைகளில் கலந்துள்ள கர்மோபாசனைகளை நிச்சயித்தற்கு எந்த நரன் பிரபுவாவன் ?

(வி-ம்.)

* கரு. அநேக சாகைகளில் அங்கங்கு வெவ்வேறிடங்களில் சொல்லப்பட்ட கர்மத்தினையாவது உபாசனையையாவது ஒரிடத்திற் சேர்த்து நிர்ணயஞ்செய்தற்கு என்னைப்போன்ற தற்கால மனிதர்களில் சாமர்த்தியமுடையவர் யாவர் ? ஒருவருமில்லை யென்பது பொருள். (உ௬)

கச. கற்பசூத்திரங்களால் நிர்ணயிக்கப்பட்ட அர்த்தத்தினால் விசுவாசமுடையவனுக்கு விசாரமின்றிக் கர்மாநுஷ்டானங்கள்
கூடுமொறு.

[௬அ௭] निर्णीतोऽर्थः कल्पसूत्रैर्ग्रथितस्तावतास्तिकः ।
विचारमंतरेणापि शक्तोऽनुष्ठातुमंजसा ॥ २७ ॥

(அ-கை.)

அப்படியானால் எப்போது நிர்ணய மில்லையோ, அப்போது கர்மோபாசனைகள் அநுஷ்டிக்கத்தக்கன வாகாமை கிடைத்ததேயென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

निर्णीतः अर्थः कल्पसूत्रैः ग्रथितः तावता आस्तिकः विचारं अन्तरेण अपि अंजसा अनुष्ठातुं शक्तः ॥

(ஸ-ம்.)

எந்த நிர்ணயிக்கப்பட்ட பொருள் கற்பசூத்திரங்களில் கோர்க்கப்பட்டிருக்கிறதோ, அவ்வளவினாலேயே ஆஸ்திகபுருஷன் விசாரமின்றியே அநாயாசமாக அநுஷ்டிக்கச் சமர்த்தனாகின்றான்.

* கரு. சாகைகளின் பேதக்கிரமத்தினை ௬௪0-வது பக்கத்தின் உஅ-வது டிப்பணத்திற் காண்க.

(வி-ம்.)

ஜைமினியாதி பூர்வாசாரியர்கள் நிச்சயித்த அநுஷ்டானத்தின் கிரமமாகிய பொருள் * கச. கற்பசூத்திரங்களினால் கோர்க்கப்பட்டிருக்கின்றது. அத்துணைக்கற்பசூத்திரங்களினால் கோர்க்கப்பட்ட காதலினாலேயே அக்கற்பசூத்திரங்களில் விசுவாசமுடைய புருஷன் விசாரமின்றியும், கர்மத்தைச் செவ்வையாய் அநுஷ்டித்தற்குச் சமர்த்தனாகவே செய்கின்றான். ()

கரு. ஆர்ஷநூல்களில் நிர்ணயிக்கப்பட்ட உபாசனையின் விசாரமின்றியவன் குருமுகமாகக் கேட்டலால் அநுஷ்டித்தல்.

[கூஅச] उपास्तीनामनुष्ठानमार्षग्रंथेषु वर्णितम् ।
विचाराक्षममर्त्याश्च तच्छ्रुत्वोपासते गुरोः ॥ २८ ॥

(அ-கை.)

அப்படியானால் அக்கற்பசூத்திரங்களில் உபாசனையின் விசாரமில்லாமையால் அவ்வுபாசனையின் அநுஷ்டானம் சம்பவியாதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

आर्षग्रंथेषु उपास्तीनां अनुष्ठानं वर्णितं विचाराक्षममर्त्याः च तत् गुरोः श्रुत्वा उपासते ॥

(சு-ம்.)

உபாசனைகளின் அநுஷ்டானம் ஆர்ஷநூல்களில் அதாவது சர்வஞ்ஞர்களாகிய ரிஷிகளாற் செய்யப்பட்ட நூல்களில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் விசாரத்தில் சாமர்த்தியமில்லாத மனிதன் அவ்வுபாசனையைக் குரவனிடத்துக் கேட்டு உபாசிக்கின்றான்.

(வி-ம்)

ஆர்ஷநூல்களாகிய பிராஹ்மம் வாசிஷ்டமுதலிய * கரு. மந்திரகற்பங்

---

* கச. ஜைமினீயம் (ஜைமினி ரிஷியினாற் செய்யப்பட்டது), ஆசுவலாயனம் (ஆசுவலாயன ரிஷியினாற் செய்யப்பட்டது), ஆபஸ்தம்பம் (ஆபஸ்தம்ப ரிஷியினாற் செய்யப்பட்டது), போதாயனம் (போதாயன ரிஷியினாற் செய்யப்பட்டது), காத்தியாயனீயம் (காத்தியாயனி ரிஷியாற் செய்யப்பட்டது), வைகாநஸீயம் (வைகாநஸ ரிஷியாற் செய்யப்பட்டது) என்னும் பேதத்தால் கற்பசூத்திரம் அறுவகையாம். இவற்றுள் வைதீககர்மத்தின் அநுஷ்டானக் கிரமம் காட்டப்பட்டிருக்கிறது. இது வேதத்தின் ஆறங்கங்களுள் ஒரு அங்கமாம்.

* கரு. பிராஹ்ம (பிரஹ்மதேவனாற் செய்யப்பட்ட) கற்பம், வாசிஷ்ட (வசிஷ்ட முனிவராற்செய்யப்பட்ட) கற்பம் என்னும் இவைமுதலிய தந்திரநூல்கள் எவையோ, அவற்றில் உபாசனையை யநுஷ்டிக்கும் கிரமம் காட்டப்பட்டிருக்கின்றது.

களில் உபாசனையின் கிரமம் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் விசாரத்திற் சாமர்த்தியமின்றிய மனிதன் எவனோ, அவன் கற்பநூல்களிற் கூறிய அவ்வுபாசனையினைக் குருமுகமாகக் கேட்டறிந்து அநுஷ்டிக்க வேண்டும் என்பது தாற்பரியம். (உஅ)

கக. ஆப்தோபதேசமாத்திரத்தால் உபாசனையின் அநுஷ்டானம் சம்பவித்தல்.

[கூஅஎ] वेदवाक्यानि निर्णेतुमिच्छन्मीमांसतां जनः ।
आप्तोपदेशमात्रेण ह्यनुष्ठानं हि संभवेत् ॥ २९ ॥

(அ-கை)

அப்படியானால் அப்போது தற்கால நூலாசிரியர்களாலும் வேதவாக்கியத்தின் விசாரம் ஏன் செய்யப்படுகின்றதென் றாசங்கித்து, தத்தம் புத்தியினது சந்தோஷத்தின்பொருட்டே அவர்களால் வேதவாக்கியங்களின் விசாரம் செய்யப்படுகின்றது; அநுஷ்டானம் சித்திக்கும்பொருட்டன்றென்று கூறுகின்றார் :—

जनः वेदवाक्यानि निर्णेतुं इच्छन् मीमांसतां हि । आप्तोपदेशमात्रेण अनुष्ठानं हि संभवेत् ॥

(சு-ம்.)

வித்துவான்கள் எவர்களோ அவர்கள் வேதவாக்கியத்தின் நிர்ணயத்தை விரும்பியவர்களாய்ச் செவ்வையாய் விசாரத்தினைச் செய்க. ஆனால் ஆப்தபுருஷனது உபதேசமாத்திரத்தால் உபாசனையின் அநுஷ்டானம் சம்பவிக்கின்றது. (உக)

உ. விசாரத்தினால் அபரோக்ஷஞானத்தின் உற்பத்தியினைச் சொல்லுதலோடு அதன் பிரதிபந்தத்தினைச் சொல்லுதல் கூஅஅ-௪௦கக.

க. விசாரத்தினால் அபரோக்ஷஞானத்தின் உற்பத்தியினைக் கூறுதல் கூஅஅ-கூகூ௫.

க. விசாரமின்றி அபரோக்ஷஞானம் சம்பவியாமை.

[கூஅஅ] ब्रह्मसाक्षात्कृतिस्त्वेवं विचारेण विना नृणाम् ।
आप्तोपदेशमात्रेण न संभवति कुत्रचित् ॥ ३० ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மத்தின் உபாசனையினைப்போலப் பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரமும் உபதேசமாத்திரத்தினாலேயே ஏன் சித்தியாது என்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

एवं नृणां ब्रह्मसाक्षात्कृतिः तु विचारेण विना आप्तोपदेशमात्रेण कुत्राचित् न संभवति ॥

(சு-ம்.)

இவ்வாறு மனிதர்களுக்குப் பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரமோ விசாரமின்றி ஆப்தோபதேசமாத்திரத்தினால் ஓரிடத்தும் சம்பவியாது.

(வி-ம்)

ஆப்தபுருஷனது உபதேசமாத்திரத்தினால் உபாசனையையநுஷ்டித்தலில் உபயோகமுள்ள பரோக்ஷஞானம் உண்டாகின்றது. அபரோக்ஷஞானமோ விசாரமின்றி யுண்டாகிறதில்லை என்று கஎஉ-கூ௮எ சுலோகம் வரையிற் சொல்லப்பட்டது. (௩௰)

உ. சுலோகம் கூ௮௮-ல் கூறிய அர்த்தத்திற் காரணம்.

[கூ௮க] परोक्षज्ञानमश्रद्धा प्रतिबध्नाति नेतरत् ।
अविचारोऽपरोक्षस्य ज्ञानस्य प्रतिबंधकः ॥ ३१ ॥

(அ-கை.)

விசாரமின்றி ஆப்தனது உபதேசமாத்திரத்தால் அபரோக்ஷஞானமுண்டாகிறதில்லை யென்பதில் காரணத்தைக் கூறுகின்றார் :—

अश्रद्धा परोक्षज्ञानं प्रतिबध्नाति इतरत् न । अविचारः अपरोक्षस्य ज्ञानस्य प्रतिबंधकः ॥

(சு-ம்.)

அசிரத்தை பரோக்ஷஞானத்தினைப் பிரதிபந்தி(தடு)க்கின்றது; மற்றைய அவிசாரம் தடுக்கிறதில்லை. அவிசாரம் அபரோக்ஷஞானத்தின் பிரதிபந்தகமாம் (தடையாம்).

(வி-ம்.)

விசுவாசமின்மையே பரோக்ஷஞானத்தினைப் பிரதிபந்திக்கின்றது; அவிசாரம் பிரதிபந்திக்கிறதில்லை. ஆதலால் அந்த அவிசுவாசம் நீங்கவே ஒருமுறை யுபதேசத்தினாலேயே பரோக்ஷஞானத்தின் பிறப்புச் சம்பவிக்கின்றது. அவிசாரவடிவப் பிரதிபந்தமுடைய அபரோக்ஷஞானத்திற்கோ விசாரவாயிலாக அவ்வவிசாரத்தின் நீக்கமின்றி யுற்பத்தி சம்பவியாது. ஆதலால் அபரோக்ஷஞானத்தினது உற்பத்தியின்பொருட்டு விசாரம் செய்யத்தக்கதாம் என்பது அபிப்பிராயம். (௩க)

க. விசாரத்தினால் அபரோக்ஷஞான முண்டாகாவிடின் அடிக்கடி விசாரஞ் செய்யவேண்டுமெனல்.

[கககo] विचार्याप्यापरोक्षेण ब्रह्मात्मानं न वेत्ति चेत् ।
आपरोक्ष्यावसानत्वाद्भूयो भूयो विचारयेत् ॥ ३२ ॥

(அ-கை.)

அப்படியானால் விசாரஞ்செய்தும் எப்போது அபரோக்ஷமுண்டாக வில்லையோ, அப்போது செய்யவேண்டியது யாதெனக் கூறுகின்றார் :—

विचार्य अपि ब्रह्मात्मानं अपरोक्षेण न वेत्ति चेत् अपरोक्ष्यावसानत्वात् भूयः भूयः विचारयेत् ॥

(சு-ம்.)

விசாரஞ்செய்தும் பிரஹ்மாபின்ன ஆத்மாவை அபரோக்ஷமாக அறியவில்லையெனின், அப்போது விசாரமானது அபரோக்ஷத்தன்மையினைத் தனக்கு முடிவாகக்கொண்டுள்ளதாகலின் அடிக்கடி விசாரத்தினைச் செய்ய வேண்டும்.

(வி-ம்.)

"தத்" பத "துவம்" பதங்களின் அர்த்தமாகிய பிரஹ்மத்தினையும் ஆத்மாவினையும் செவ்வையாய் விசாரித்தும், வாக்கியார்த்தவடிவப் பிரஹ்மாத்மாவின் ஏகத்துவத்தை அபரோக்ஷத்தன்மையினால் அறிகிறதில்லையெனினும் அடிக்கடி விசாரமே செய்யவேண்டியதாம். ஏனெனின், அந்நிய அதாவது விசாரத்திற்கு வேறான அபரோக்ஷஞானத்திற்கு ஏதுவான அசாதாரண அந்தரங்கசாதனமின்மையால் என்பது பொருள். (௩உ)

பிரதிபந்தமிருக்கின் முன் செய்யப்பட்ட விசாரத்தினால் ஜன்மாந்தரத்தில் அபரோக்ஷஞான முண்டாமெனல்.

[கககந] विचारयन्नामरणं नैवात्मानं लभेत चेत् ।
जन्मांतरे लभेतैव प्रतिबंधक्षये सति ॥ ३३ ॥

(அ-கை.)

அப்படியானால் அடிக்கடி விசாரஞ்செய்தும் இந்த ஜன்மத்தில் சாக்ஷாத்கார முண்டாகாமையால் விசாரம் பயனில்லாததாமே யென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

आमरणं विचारयन् आत्मानं न एव लभेत चेत् । जन्मान्तरे प्रतिबंधक्षये सति लभेत एव ॥

(சு-ம்.)

மரணபரியந்தம் விசாரஞ்செய்தும் எப்போது ஆத்மாவை யடைய (அறிய)வில்லையோ, அப்போது ஜன்மாந்தரத்தில் பிரதிபந்தம் நாசமாக ஆத்மாவை அடையவேசெய்வன். ஆதலால் விசாரம் வியர்த்தமாகாது ()

ரு. சுலோகம் ககக-ல் கூறிய அர்த்தத்தில் வியாசசூத்திரமும் சுருதிப்பிரமாணமும்.

[ககஉ] इह वाऽमुत्र वा विद्येत्येवंसूत्रकृतोदितम् ।
शृण्वंतोऽप्यत्र बहवो यन्न विद्युरिति श्रुतिः ॥ २४ ॥

(அ-கை.)

அப்படியானல் பிரதிபந்தமிருக்கின் இந்த ஜன்மத்தில் ஞானமுண்டாகாது, ஜன்மாந்திரத்தில் பிரதிபந்தம் க்ஷயமாகும்போது ஞானமுண்டாகு மென்பதனைத் தாம் எந்தப் பிரமாணத்தினல் அறிந்தீர்களென் றுசங்கித்துப் பிரஹ்மசூத்திரங்களின் கர்த்தாவான ஸ்ரீ வியாசபகவான் "ऐहिकमप्यप्रस्तुतप्रतिबंधे तद्दर्शनात् பிரஸ்தாபிக்கப்பட்ட பிரதிபந்தமில்லையாயின். இந்த ஜன்மத்திலும் ஞான முண்டாகு மென்று சுருதி ஸ்மிருதிகளில் அது காணப்படுதலால்" * கரு. என்னும் சூத்திரத்திற் சொல்லியிருக்கின்றனர். அதனல் யாம் தெரிந்துகொண்டோம் என்று கூறுகின்றார் :—

इह वा अमुत्र वा विद्या इति एवं सूत्रकृता उदितं ॥

---

* கரு. இது சாரீரகத்தின் மூன்ருவது அத்தியாயத்திலுள்ள நான்காவது பாதத்தின் ருக-வது சூத்திரமாம். எப்புருஷனும் அந்நியஜன்மத்தில் எனக்கு ஞான முண்டாகவேண்டுமென் றிச்சித்துச் சிரவணுதிகளிற் பிரவிருத்திக்கிறதில்லை. ஆனல் இந்த வர்த்தமான ஜன்மத்தில் ஞான முண்டாகவேண்டு மென்னும் இச்சையினல் பிரவிருத்திக்கிருன். ஆதலால் இந்த ஜன்மத்திலுண்டாவதாம் வித்தையின் பிறப்பு. அவ்வாருயின் பிரஸ்தாபிக்கப்பட்ட பிரதிபந்தம் இல்லையாயின் இந்த ஜன்மத்தில் வித்தையின் உற்பத்தியுண்டாகின்றது என்பது சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வாறு சுருதி ஸ்மிருதிகளிற் காணுதலால். "வெகு புருஷர்களால் கேட்கும்பொருட்டும் இது (பரமாத்மா) கிடைக்கிறதில்லை" "வெகு புருஷர்கள் கேட்டும் எதனை யறிகிறதில்லையோ" "இதன் (ஆத்மாவின்) வக்தா ஆச்சரியரூபமா யிருக்கிருன். அடையப்படுவ (சாக்ஷாத்காரமுடைய)து குசலமாம் (சாமர்த்தியமுடையதாம்). ஞாதா (பரோக்ஷமாகவும் அறிகிறவன்) ஆச்சரியவடிவமாவன். குசல(சமர்த்தராகிய ஆசாரிய)ரால் உபதேசத்தினை யடைந்தும்." என்னும் இவைமுதலிய சுருதி ஆத்மாவின் துர்ப்போதத் (அறிதற்கரிய) தன்மையினை யறிவிக்கின்றது. சுலோகம் கooரு-கoo௮ வரையில் சொல்லப்பட்ட வாக்கியங்களால் கீதாஸ்மிருதியிலும் அப்பொருள் காட்டப்படுகின்றது. இது சூத்திரத்தின் சுருக்கமான பொருள்.

(சு-ம்)

இந்த ஜன்மத்திலாவது அல்லது வேறு ஜன்மத்திலாவது வித்தையாகிய ஞான முண்டாகு மென்று சூத்திரகாரர் கூறியிருக்கின்றனர்.

(அ-கை.)

பிரதிபந்தமிருக்குங்காலத்து இந்த ஜன்மத்தில் ஞானமுண்டாகாமையில் சுருதியினைக் காட்டுகின்றார் :—

बहवः श्रृण्वंतः अपि यत् अत्र न विद्युः इति श्रुतिः ॥

(சு-ம்)

" அநேக புருஷர்கள் சிரவணஞ்செய்யினும் பிரதிபந்தமிருக்கின் எந்த ஆத்மாவினை இந்த ஜன்மத்தில் அறியார்களோ " என்பது சுருதி. (௩௪)

௩. இந்த ஜன்மத்தில் சிரவணாதிகளோடுகூடியவனுக்கு வேறு ஜன்மத்தில் ஞான முண்டாதலில் திருஷ்டாந்தத்தோடு சுருதி.

[௩௩௫] गर्भे एव शयानः सन्वामदेवोऽवबुद्धवान्
पूर्वाभ्यस्तविचारणे यद्वदध्ययनादिषु ॥ ३५ ॥

(அ-கை.)

இந்த ஜன்மத்தில் சிரவணாதிகளைச் செய்பவராகிய முமுக்ஷுக்களுக்கு ஜன்மாந்தரத்தில் அபரோக்ஷஞான முண்டாகின்றது என்னும் அர்த்தத்திலும் "இவ்வதிகாரிகளுக்குள் கர்ப்பத்தில் வசிக்கின்றவராய், வாமதேவரிஷி பின் ஒன்பதாவது மாதத்தில் 'गर्भे न सन्नन्वेषामहं देवानां जनिमानि विश्वा நான் எல்லாத்தேவர்களின் உற்பத்திமுதலியவற்றைச் செய்பவனாயிருக்கின்றேன்' என்று அறிந்தார்" என்பனமுதலிய பதங்களையுடைய சுருதியினை அர்த்தத்திறைக் கூறுகின்றார் :—

गर्भे एव शयानः सन् वामदेवः पूर्वाभ्यस्तविचारेण अवबुद्धवान् ॥

(சு-ம்.)

கர்ப்பத்திலேயே வாசஞ்செய்துகொண்டு வாமதேவரிஷி பூர்வாப்பியாச (முற்பழக்க)த்தின் விசாரத்தினால் அறிந்தார்.

(அ-கை.)

இந்த ஜன்மத்தில் உண்டாகாத ஞானம் காலாந்தரத்தில் உண்டாவதில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

यद्वत् अध्ययनादिषु ॥

(த-ம்.)

எப்படி அத்தியயனாதிகளில் பூர்வாப்பியாசத்தின் விசாரத்தினால் புருஷன் அறிகின்றானோ அதுபோல. (௩௫)

எ. சுலோகம் ௩௩௩-ல் கூறிய திருஷ்டாந்தத்தினை விரித்தல்.

[௩௩௪] बहुवारमधीतेऽपि यदा नायाति चेत्पुनः ।
दिनांतरेऽनधीत्यैव पूर्वाधीतं स्मरेत्पुमान् ॥ ३६ ॥

(அ-கை.)

சுலோகம் ௩௩௩-ல் கூறிய திருஷ்டாந்தத்தினை வர்ணிக்கின்றார் :—

बहुवारं अधीते अपि यदा न आयाति चेत् । पुनः दिनान्तरे अनधीत्य एव पूर्वाधीतं पुमान् स्मरेत् ॥

(த-ம்.)

அநேகமுறை அத்தியயனஞ் செய்யப்பட்டும் எப்போது வேதவாக்கியத்தின் பாடம் வரவில்லையோ, அப்போது பின் மறுநாளில் அத்தியயனஞ் செய்யாமலே முன் அத்தியயனஞ்செய்த வேதவாக்கியத்தைப் புருஷன் ஸ்மரிக்கின்றான். அதுபோல இந்த ஜன்மத்தி லுண்டாகாத ஞானம் காலாந்தரத்தி லுண்டாகும். (௩௬)

அ. சுலோகம் ௩௩௩-௩௩௪-ல் கூறிய திருஷ்டாந்தத்தினைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துதலோடு வேறு திருஷ்டாந்தம்.

[௩௩௫] कालेन परिपच्यंते कृषिदर्भादयो यथा ।
तद्वदात्मविचारोऽपि शनैः कालेन पच्यते ॥ ३७ ॥

(அ-கை.)

சுலோகம் ௩௩௩-ல் கூறிய ஆதியென்னும் சொல்லால் கிரகிக்கப்பட்ட வேறு திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

यथा कृषिदर्भादयः कालेन परिपच्यन्ते ॥

(த-ம்.)

எப்படிக் கிருஷி தர்ப்பைமுதலியன காலத்தால் பரிபக்குவம் (பயனுடையன) ஆகின்றனவோ.

(அ-கை.)

திருஷ்டாந்தத்திற் கூறிய அர்த்தத்தினைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துகின்றார் :—

तत्वत् आत्मविचारः अपि शनैः कालेन पच्यते ॥

(சு-ம்.)

அதுபோல ஆத்மாவின் விசாரமும் மெல்லக் காலத்தால் பரிபக்குவம (ஞானவடிவ பயனுடையது) ஆகின்றது. (௩௭)

உ. அபரோக்ஷஞானத்தின் உற்பத்தியில் மூவகைப் பிரதிபந்தத்தினைக் கூறுதல்
௩௩௬-௩௦௧௧.

க. அநேகமுறை தத்துவவிசாரஞ்செய்தும் பிரதிபந்தத்தினால் சாக்ஷாத்கார முண்டாகாமையில் வார்த்திகநூலினைச் சூசிப்பித்தல்.

[௩௩௬] पुनः पुनर्विचारेपि त्रिविधप्रतिबंधतः ।
न वेत्तितत्त्वमित्येतद्वार्तिके सम्यगीरितम् ॥ ३८ ॥

(அ-கை.)

அநேகமுறை தத்துவவிசாரஞ் செய்தும் பிரதிபந்தத்தின் வலியால் சாக்ஷாத்கார முண்டாகிறதில்லை யென்னும் பொருளை வார்த்திககாரரும் நிரூபித்திருக்கின்றா ரென்று கூறுகின்றார் :—

"पुनः पुनः विचारे अपि त्रिविधप्रतिबंधतः तत्त्वं न वेत्ति" इति एतत् वार्तिके संयक् ईरितं ॥

(சு-ம்.)

"அடிக்கடி விசாரித்தும் மூவகைப்பிரதிபந்தத்தினால் தத்துவத்தினை அறிகிறதில்லை.." என்னும் இப்பொருள் வார்த்திகத்தில் வெளிப்படையாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

உ. உதாகரணத்தோடு மூவகைப் பிரதிபந்தத்தினை யறிவிக்கும் வார்த்திகத்தின் ஆரம்பம்.

[௩௩௭] कुतस्तज्ज्ञानमिति चेत्तद्धि बंधपरिक्षयात् ।
असावपि च भूतो वा भावी वा वर्ततेऽथवा ॥ ३९ ॥

(அ-கை.)

அவ்வார்த்திகத்தினை ௩௩௭-வது முதல் ௧௦௦௩-வது சுலோகம்வரையில் சொல்லப்படும் கிரந்தபாகத்தினால் உதாரணமாக்குகின்றார். அதில் முதலில் பூர்வஜன்மத்தி லுண்டாகாத ஞானம் இப்போது வர்த்தமானஜன்மத்தி லுண்டாதலில் வாதி காரணத்தைக் கேட்கின்றான் :—

कुतः तत् ज्ञानं इति चेत् ॥

(சு-ம்.)

அந்தப் பூர்வஜன்மத்தி லுண்டாகாத ஞானம் எதனு லுண்டாகின்றது? என்று கூறின்.

(அ-கை.)

சித்தாந்தி உத்தரம் கூறுகின்றார் :—

तत् हि बंधपरिक्षयात्

(சு-ம்.)

அந்த ஞானம் பந்தத்தின் க்ஷயத்தா லுண்டாகின்றது.

(வி-ம்.)

பந்தமாவது பிரதிபந்தம் ; அதன் க்ஷயத்தால் அதாவது அடியோடு கெடுதலால் என்பது பொருள்.

(அ-கை.)

அந்தப் பிரதிபந்தமும் பூதம் பவிஷ்யத் வர்த்தமானம் (இறந்தது, வருவது. நிகழ்வது) என்னும் பேதத்தால் மூவகைப்படு மென்று கூறுகின்றார் :—

असौ अपि च भूतः वा भावी वा अथवा वर्तते ॥

(சு-ம்.)

இப்பிரதிபந்தமும் பூதம், அல்லது பாவி (வருவது), அல்லது வர்த்தமானமாம். (௩௧)

௩. சுலோகம் ௧௧௭-ல் கூறிய பிரதிபந்தத்தில் சுருதிப்பிரமாணம்.

[௧௧௮] अधीतवेदवेदार्थोऽप्यत एव न मुच्यते ।
हिरण्यनिधिदृष्टांतादिदमेव हि दर्शितम् ॥ ४० ॥

(அ-கை.)

இப்படி மூவகைப் பிரதிபந்த மிருக்குக. அதனுல் என்ன உண்டாகு மென் றுசங்கித்து அங்குக் கூறுகின்றார் :—

अधीतवेदवेदार्थः अपि अतः एव न मुच्यते ॥

(சு-ம்.)

வேதத்தினையும் வேதார்த்தத்தினையும் கற்றுணர்ந்த புருஷனும் இதனுற்றான் (பிரதிபந்த மிருத்தலாற்றான்) விடுபடுகிறதில்லை.

(அ-கை.)

பிரதிபந்த மிருக்கின் ஞான முதயமாகா தென்னும் அர்த்தத்தினை "यथा हिरण्यनिधिं निहितमक्षेत्रज्ञा उपर्युपरि संचरन्तो न विन्देयुः एवमेवेमाः सर्वा प्रजाः अहरहर्ब्रह्मलोकं गच्छंत्य एवं ब्रह्मलोकं न विदंत्यनृतेन हि प्रत्यूढा நிலத்திற் புதைத்த பொன்நிதியையும் அது புதைபட்டுள்ள இடத்தினையும் அறியாத புருஷர்கள் மேல்மேலாக நடக்கின்றவர்களாய் அறிகிறதில்லை. அதுபோலவே இவ்வெல்லா ஜீவர்களும் நாள்தோறும் சுழுத்திகாலத்தில் பிரஹ்மலோகமாகிய பிரஹ்மசொரூபத்தனை யடைகின்றார்கள். எதனால் மித்தியாஞானவடிவப் பிரதிபந்தத்தினால் தடுக்கப்பட்டிருக்கின்றார்களோ; அதனால் இந்தப் பிரஹ்மலோகத்தை யறிகிறதில்லை.'' என்னும் சுருதியானது காட்டியிருக்கின்ற தென்று கூறுகின்றார் :—

हि हिरण्यनिधिदृष्टांतात् इदं एव दर्शितं ॥

(சு-ம்.)

எதனால் பொன்நிதியின் திருஷ்டாந்தத்தால் இவ்வர்த்தத்தினையே சுருதியானது காட்டியிருக்கின்றதோ, அதனால் பிரதிபந்தகம் இருக்க ஞானமுண்டாகாது என்பது சித்தித்தது. (௪0)

௪. பூதப்பிரதிபந்தத்தின் திருஷ்டாந்தத்தோடு நிவிருத்தி உபாயம்.

[௬௬௬] अतीतेनापि महिषीस्नेहेन प्रतिबंधतः ।
भिक्षुस्तत्त्वं न वेदेति गाथा लोके प्रगीयते ॥ ४१ ॥

(அ-கை.)

அப்படியானால் சென்ற வஸ்துவானது பிரதிபந்தஞ் செய்தலைக் கண்டதில்லையேயென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

"अतीतेन अपि महिषीस्नेहेन प्रतिबंधतः भिक्षुः तत्त्वं न वेद" इति गाथा लोके प्रगीयते ॥

(சு-ம்.)

"முற்காலத்தில் செய்த எருமையின் சிநேகத்(பிரியத்)தாலாகிய பிரதிபந்தத்தினால் சந்நியாசி தத்துவத்தை யறியவில்லை'' யென்னும் கதை உலகத்திற் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

இதன்பொருள் இதுவாம்:—"ஓர் சன்னியாசி முன் கிரஸ்தாசிரமத்தில் ஓர் எருமையினிடத்தில் பிரியம் வைத்துப் பின் சந்நியாசஞ் செய்து

கொண்டு சிரவணத்திற் பிரவர்த்தித்தும், அதே சிநேகத்தி (அன்பி) னலாகிய பிரதிபந்தத்தினல் குருவானவர் உபதேசித்த தத்துவத்தையும் அறியவில்லை.'' என்று இவ்விதமான கதை (வார்த்தை) உலகத்தில் சொல்லப்படுகின்றது; புராணமுதலியவற்றிற் சொல்லப்படவில்லை யென்பது பொருள்.()

[கOOO] अनुसृत्य गुरुः स्नेहं महिष्यां तत्त्वमुक्तवान् ।
ततो यथावद्वेदैष प्रतिबंधस्य संक्षयात् ॥ ४२ ॥

(அ-கை.)

அப்போது அவ்விதமான பூதப்பிரதிபந்தமுடைய அச்சந்நியாசிக்கு எப்படி ஞான முண்டாயிற்றெனக் கூறுகின்றார் :—

गुरुः स्नेहं अनुसृत्य महिष्यां तत्त्वं उक्तवान् ततः एषः प्रतिबंधस्य संक्षयात् यथावत् वेद ॥

(சு-ம்.)

குருவானவர் சிநேகத்தை யநுசரித்து எருமையினிடத்துத் தத்துவத்தைக் கூறினர். அதனல் அந்தப் பிரதிபந்தத்தின் நாசத்தால் உள்ளபடி தத்துவத்தை யறிந்தான்.

(வி-ம்.)

அப்போது அவனுக்குத் தத்துவத்தினை யுபதேசிக்கும் குருவானவர் அவனற் செய்யப்பட்ட எருமையின் சிநேக(பிரிய)த்தை யநுசரித்து, அந்த எருமையினிடத்திலேயே அவ்வெருமையாகிய உபாதியினையுடைய பிரஹ்மவடிவ தத்துவத்தை உபதேசித்தார். அதனல் அச்சன்னியாசியும் எருமையின் சிநேகவடிவப்பிரதிபந்தம் நாசமாகக் குருவுபதேசித்த தத்துவத்தை உள்ளவாறே அதாவது சாஸ்திரத்திற் கூறியவிதமாகவே யறிந்தான் என்பது பொருள். (சஉ)

ட. வர்த்தமானப்பிரதிபந்தத்தின் நான்கு பேதமும்
அவற்றின் நிவிருத்தியுபாயமும்.

[கOOக] प्रतिबंधो वर्त्तमानो विषयासक्तिलक्षणः ।
प्रज्ञामांद्यं कुतर्कश्च विपर्ययदुराग्रहः ॥ ४३ ॥

(அ-கை.)

இப்படிப் பூதப்பிரதிபந்தத்தினைக் காட்டி வர்த்தமானப்பிரதிபந்தத்தினைக் காட்டுகின்றார் :—

वर्तमानः प्रतिबंधः विषयाशक्तिलक्षणः प्रज्ञामांद्यं कुतर्कः च विपर्ययदुराग्रहः ॥

(சு-ம்.)

வர்த்தமானப்பிரதிபந்தம் விஷயாசக்திவடிவினது, பிரஞ்ஞையின் மந்தத்தன்மை, குதர்க்கம், விபரியயதுராக்கிரக மென்னும் பேதத்தால் நான்குவகையினதாம்.

(வி-ம்.)

௧. வர்த்தமானப்பிரதிபந்தம் விஷயங்களில் பற்றுதல்வடிவினது ஒன்று.

௨. பிரஞ்ஞை(புத்தி)யின் மந்தத்தன்மை யென்னும் கிரகித்தல் தரித்தல் என்பவற்றின் சாமர்த்தியவடிவ கூர்மையில்லாமை இரண்டாவது.

௩. சுஷ்கதர்க்கமுடையவனு யிருத்தலால் சுருதிகளின் அர்த்தத்தினை வேறுவகையாகக் கற்பித்தல் குதர்க்கமாகிய மூன்றுவது.

௪. விபரியயதுராக்கிரகம் அதாவது ஆத்மா கர்த்திருத்துவ முதலிய தர்மங்களோடுகூடிய தென்னும் ஞானவடிவ விபரியயத்தில் யுக்தியில்லாத ஹடம் (பிடிவாதம்) நான்காவது.

இந்நான்கு வர்த்தமானப்பிரதிபந்தங்களுள் ஒன்றிருக்கினும் ஞானமுதயமாகாது என்பது பொருள். (௪௩)

[௧௦௦௨] शमाद्यैः श्रवणाद्यैश्च तत्र तत्रोचितैः क्षयम् ।
नीतेऽस्मिन्प्रतिबंधेऽतः स्वस्य ब्रह्मत्वमश्नुते ॥ ४४ ॥

(அ-கை.)

இந்த வர்த்தமானப்பிரதிபந்தமும் எந்த உபாயத்தினுல் நிவிருத்தியாகுமெனக் கூறுகின்றார் :—

शमाद्यैः च श्रवणाद्यैः तत्र तत्र उचितैः अस्मिन् प्रतिबंधे क्षयं नीते अत स्वस्य ब्रह्मत्वं अश्नुते ॥

(சு-ம்.)

சமமுதலியனவும் சிரவணமுதலியனவுமாகிய அவ்வவ்விடத்திற்கேற்கும் சாதனங்களால் இவ்வர்த்தமானப்பிரதிபந்தத்தினைக் கெடுக்கவே இதனுல் தனது பிரஹ்மத்தன்மையினை யடைகின்றான்.

(வி-ம்.)

“ शांतो दान्त उपरतस्तितिक्षुः समाहितो भूत्वा சமமுடையவனும் தமமுடையவனும் உபரதியுடையவனும் திதிக்ஷையுடையவனும் சமாதானமுடையவனுமாய்” என்னும் சுருதியினுல் சொல்லப்பட்ட சமதமாதிகளும், “श्रोतव्यो

मंतव्यो निदिध्यासितव्यः ஆத்மா சிரவணஞ்செய்யத்தக்கது, மனனஞ்செய்யத் தக்கது, நிதித்தியாசனஞ் செய்யத்தக்கது'' என்னும் சுருதியினுல் சொல்லப்பட்ட சிரவணுதிகளுமான அவ்வப்பிரதிபந்தத்தினை நிவர்த்திக்கத்தக்க இச்சாதனங்களால் அவ்வப்பிரதிபந்தத்தினைக் கெடுக்க, இப்பிரதிபந்த நாசத்தினுலேயே பிரத்தியகாத்மாவின் பிரஹ்மத்தன்மையைப் புருஷன் அடைகின்றுன் என்பது பொருள். (௪௪)

கூ. ஆகாமிப்பிரதிபந்தத்தின் நிவிருத்தியில் காலத்தின் நியமமில்லாமை.

[௧௦௦௩] आगामिप्रतिबंधश्च वामदेवे समीरितः ।
एकेन जन्मना क्षीणो भरतस्य त्रिजन्मभिः ॥ ४५ ॥

(அ-கை.)

இப்போது பாவீ (பவிஷ்யத்) பிரதிபந்தத்தினைக் காட்டுகிறுர் :—

च आगामिप्रतिबंधः वामदेवे समीरितः ॥

(சு-ம்.)

பாவீ (ஆகாமி) பிரதிபந்தம் வாமதேவரிடத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

ஜன்மாந்தரத்திற்குக் காரணமாகிய பிராரப்தசேஷம் (எஞ்சிய பிராரப்தம்) ஆகாமிப்பிரதிபந்தமா மென்பது பொருள்.

(அ-கை.)

அவ்வாகாமிப்பிரதிபந்தம் போகமின்றி நீங்காமையால் அதன் நிவிருத்தியில் காலத்தின் நியம மில்லை யென்று கூறுகின்றுர் :—

एकेन जन्मना क्षीणः भरतस्य त्रिजन्मभिः

(சு-ம்.)

அந்தப்பிரதிபந்தம் வாமதேவருக்கு ஒரு ஜன்மத்தினுலும், பரதருக்கு மூன்று ஜன்மத்தினுலும் நாசமாயிற்று.

(வி-ம்.)

அவ்வாகாமிப்பிரதிபந்தம் வாமதேவருக்கு ஒரு ஜன்மத்தினுல் நாசமாயிற்று; பரதருக்கு மூன்று ஜன்மத்தினுல் நாசமாயிற்று. (௪௫)

எ. சுலோகம் ௧௦௦கூ-ல் கூறிய அர்த்தத்தினைச் சொல்லுதலோடு முன் செய்யப்பட்ட விசாரம் வியர்த்தமாகாமை.

[௧௦௦ச] योगभ्रष्टस्य गीतायामतीते बहुजन्मनि ।
प्रतिबंधक्षयः प्रोक्तो न विचारोऽप्यनर्थकः ॥ ४६ ॥

(அ-கை.)

அப்படியானால் "ஒரு ஜன்மத்தினாலாவது மூன்று ஜன்மத்தினாலாவது நாசமாயிற்று." என்று ஆகாமிப்பிரதிபந்தத்தினது நிவிருத்தியின் காலநியமம் தம்மாலேயே சொல்லப்படுகின்றது என்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

गीतायां योगभ्रष्टस्य बहुजन्मनि अतीते प्रतिबंधक्षयः प्रोक्तः ॥

(சு-ம்.)

கீதையில் யோகப்பிரஷ்டபுருஷனுக்கு வெகு ஜன்மங்கள் கழிந்தபோது பிரதிபந்தத்தின் நாசம் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

யோகப்பிரஷ்டன் அதாவது தத்துவசாக்ஷாத்காரபரியந்தம் விசாரமில்லாதவன் என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் அப்போது தத்துவவிசாரம் பயனில்லாததாகுமே என்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

विचारः अपि अनर्थकः न ॥

(சு-ம்.)

விசாரமும் நிஷ்பலமாகாது.

(வி-ம்.)

பிரதிபந்தத்தினது நிவிருத்தியின் பின்னரே அபரோக்ஷஞானவடிவ பயனிருத்தலால் முன் ஜன்மத்திற் செய்த விசாரம் நிஷ்பலமாகாது என்பது *கஎ. தாற்பரியம். (சகூ)

* கஎ. இங்கு இந்த இரகசியம் :—ஒரு கர்மம் அநேக ஜன்மத்திற்கு ஏதுவாம். எப்படி ஒரே பிரஹ்மஹத்திவடிவ கர்மம் நரகத்துன்பம் அநுபவித்த பின்னர் நாய், பாம்பு, புலிமுதலிய பத்து ஜன்மத்திற்கு ஏதுவாகும், ஒரே கார்த்திகைப் பௌர்ணமியின் தினத்துச் செய்த கார்த்திகேயஸ்வாமியின் தரிசனவடிவ கர்மம் தனுதி விபூதியோடு கூடிய ஏழு பிராஹ்மணஜன்மத்திற்கு ஏதுவாகும் என்று சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதுபோல அனேக ஜன்மத்திற்கு ஏதுவான ஒருகர்மம் பிராரப்தவடிவமாகப் பலத்தினை ஆரம்பிப்பதாயின் அது ஆகாமிப்பிரதிபந்தமாம்.

அ. கீதையிற் பிரதிபாதிக்கப்பட்ட யோகப்பிரஷ்டனது பயன்வடிவ அர்த்தத்தினைக் கூறுதல்.

[௧00௫] प्राप्य पुण्यकृताँल्लोकानात्मतत्त्वविचारतः ।
शुचीनां श्रीमतां गेहे साभिलाषोऽभिजायते ॥ ४७ ॥

(அ-கை.)

கீதையில் ௬-வது அத்தியாயத்திலுள்ள ௪௧-௪௫ சுலோகம்வரையிற் சொல்லப்பட்ட அர்த்தத்தினை ௧00௫-வது சுலோகம் முதல் ௧00அ-வது சுலோகம்வரையில் காட்டுகின்றார் :—

आत्मतत्त्वविचारतः पुण्यकृताँल्लोकान् प्राप्य साभिलाषः शुचीनां श्रीमतां गेहे अभिजायते ॥

(சு-ம்.)

யோகப்பிரஷ்டன் ஆத்மதத்துவத்தின் விசாரத்தினால் புண்ணியம் செய்தவர்களது லோகத்தையடைந்து பின் அபிலாஷையோடுகூடியவனாயின் சுசியுள்ள ஸ்ரீமான்புருஷனது வீட்டிற் பிறக்கின்றான்.

---

சிரவணாதி விசாரவடிவ ஞானசாதனங்களிற் பிரவர்த்தித்த புருஷனுக்கும் இந்தப்பிரதிபந்த மிருக்குமாயின் ஞானத்தின் உற்பத்தி யுண்டாகாது. ஆதலால் இக்கர்மத்தின் பயன்வடிவ முடிவான பிறப்பிலேயே ஞான முண்டாகும் என்று கொள்ளவேண்டியது. ஏனெனின்,

(௧) பயனைத் தருதற் காரம்பித்த பிராரப்த கர்ம மெதுவோ அது போகமின்றிக் கெடாது என்பது ஈசுவரனது சங்கற்பம்.

(௨) "இந்த ஞானியின் பிராணன் தேகத்திற்கு வெளியில் வருகிறதில்லை. ஆனால் இத்தேகத்திலேயே ஒடுங்குகின்றது." என்னும் சுருதியினாலும், "அந்த ஞானிக்கு எதுவரையில் தேகம் விழவில்லையோ அதுவரையிலும் நீட்சி (மோக்ஷ முண்டாதலிற் றாமதம்) இருக்கின்றது. பின் (தேகம் விழுந்தபின்) சத்தாகிய பிரஹ்மத்தை யடைகின்றான்." என்னும் சாந்தோக்கியசுருதியினாலும் ஞானிக்கு வேறு ஜன்ம முண்டாகிற தில்லை. இது ஞானத்தின் பெருமை.

(௧) ஆதலால் இடைப்பட்ட ஜன்மத்தில் ஞானத்தின் உற்பத்தியை யங்கீகரித்து வேறு ஜன்மத்தை யங்கீகரியாவிடின், பிராரப்தத்திற்கு வியர்த்தத்தன்மை யுண்டாய் ஈசுவரனது சங்கற்பம் கெடும்.

(௨) வேறு ஜன்மத்தை யங்கீகரிக்கின் ஞானத்தின் பெருமை குன்றும்.

இவ்விரண்டும் அநிஷ்டமாம். ஆதலால் முடிவான பிறப்பில் ஞானத்தின் உற்பத்தி அங்கீகரிக்கவேண்டும். இதனால் ஈசுவரசங்கற்பத்திற்கும் ஞானத்தின் பெருமைக்கும் கேடுண்டாகாது. முன்செய்த விசாரமும் வியர்த்தமாகாது பயனுடையதேயாகும்.

(வி-ம்.)

யோகப்பிரஷ்டன் ஆத்மதத்துவத்தின் சிரவணுதிமயப் பிரஹ்மாப்பியாசவடிவ விசாரத்தின் வலியினுல் புண்ணியஞ் செய்தவர்களுடைய லோகமான சுவர்க்கவிசேஷத்தினை யடைந்து, அங்கு வெகுகாலம் சுகத்தை யநுபவித்து, அப்போகத்தின் முடிவில் இவ்வுலகத்தின் இச்சையுடையவனு யிருந்தால் இவ்வுலகத்தில் மாதாவினுலும் பிதாவினுலும் சுத்தனுன ஸ்ரீமான்புருஷனது வீட்டில் அதாவது அவன் குலத்தில் பிறக்கின்றுன். (சஎ)

[கOOஅ] अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।
निस्पृहो ब्रह्मतत्त्वस्य विचारात्तद्धि दुर्लभम् ॥ ४८ ॥

(அ-கை.)

இரண்டாவது இச்சையின்றிய யோகப்பிரஷ்டனது பக்ஷத்தைக் கூறுகின்றுர் :—

अथवा निस्पृहः ब्रह्मतत्त्वस्य विचारात् एव धीमतां योगीनां कुले भवति ॥

(சு-ம்.)

அல்லது நிஸ்புருஹ(இச்சையின்றியவ)னுயின் பிரஹ்மதத்துவ விசாரத்திறுலேயே புத்திமானுகிய யோகியின் குலத்தில் பிறக்கின்றுன்.

(வி-ம்.)

அல்லது அதிவிரக்த (சிறிதும் பற்றில்லாதவ)னுயிருந்தால் பிரஹ்மதத்துவத்தின் விசாரத்தினுலேயே ஆத்மதத்துவத்தினது நிச்சயத்தின் விசாரத்தோடுகூடிய புத்திமானுன சித்த ஏகாக்கிரமுடைய யோகிபுருஷனது குலத்தில் பிறக்கின்றுன் என்பது பொருள்.

(அ-கை.)

முற்பக்ஷத்தினும் இப்பக்ஷத்தில் விசேஷம் யாதெனக் கூறுகின்றுர் :-

हि तत दुर्लभम् ॥

(சு-ம்.)

எதனுல் அந்தப் பிறப்புத் துர்லபமோ.

(வி-ம்.)

எக்காரணத்தால் அந்த யோகியின் குலத்தில் பிறத்தல் துர்லபமோ அதாவது அற்ப புண்ணியத்தால் அடையப்படாததோ அதனுல் அது விசேஷமாம் என்பது பொருள். (சஅ)

[௬00எ] तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयस्तस्मादेतद्धि दुर्लभम् ॥ ४९ ॥

(அ-கை.)

அந்த யோகியின் குலத்திற் பிறத்தல் அரிதென்பதனை யெடுத்துக் காட்டுகின்றார் :—

हि तत्र पौर्वदेहिकं तं बुद्धिसंयोगं लभते च ततः भूयः यतते तस्मात् एतत् दुर्लभं ॥

(சு-ம்.)

எதனால் அந்த ஜன்மத்தில் அந்தப் பூர்வதேகத்திலாகிய புத்தியின் சையோகத்தினை யடைகின்றானோ, அதனால் அதிகமுயற்சி செய்கின்றானோ, அதனால் இந்த ஜன்மம் துர்லபமாம்.

(வி-ம்.)

எந்தக் காரணத்தினால் அந்த யோகியின் குலத்தி லுண்டாகிய ஜன்மத்தில் பூர்வதேகத்தி லாகிய தத்துவவிசாரத்தை விஷயஞ்செய்யும் புத்தியின் சம்பந்தத்தினைத் தற்காலம் அடைகின்றானோ, கேவலம் புத்தியின் சம்பந்த மாத்திரத்தின் இலாப மில்லாமல் அந்த முன்ஜன்மப்பிரயத்தினத்தினால் அதிக முயற்சியைச் செய்கின்றானோ, அக்காரணத்தினால் இந்த யோகியின் குலத்தில் பிறத்தல் துர்லபம் (கிடைத்தற்கரிது) என்பது பொருள். (௪௯)

[௬00அ] पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।
अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥ ५० ॥

(அ-கை.)

அதிக அப்பியாசத்தில் காரணத்தைக் கூறுகின்றார் :—

सः तेन पूर्वाभ्यासेन एव हि अवशः अपि ह्रियते । अनेकजन्मसंसिद्धः ततः परां गतिं याति ॥

(சு-ம்.)

அவன் அந்த முன் அப்பியாசத்தினாலேயே வசமிழந்தவனாயினும் இழுக்கப்படுகின்றான். இப்படி அநேக ஜன்மங்களிற் செவ்வையாகச் சித்தித்த அந்த ஞானத்தினாற் பரமகதியை யடைகின்றான்.

(வி-ம்.)

அந்த யோகப்பிரஷ்டன் அந்த முன் அப்பியாசத்தினாலேயே இப்

பிறப்பில் போகத்தால் வசமில்லாதவனு யிருந்தும் * சஅ. ஆகர்ஷிக்கப்படு கின்றான் அதாவது அதிக அப்பியாசத்தில் இழுக்கப்படுகின்றான். இப்படி அநேக ஜன்மங்களில் செய்த முயற்சியினுல் செவ்வையான. தத்துவ ஞான முடையவனுய், அத்தத்துவஞானத்தினுல் பரமகதியாகிய முக்தியை யடைகின்றான் என்பது பொருள். (௯0)

௧. அந்திய ஆகாமிப்பிரதிபந்தத்தினைக் கூறுதல்.

[௧00௧] ब्रह्मलोकाभिवांछायां सम्यक् सत्यां निरुध्य तां ।
विचारयेद्य आत्मानं न तु साक्षात्करोत्ययम् ॥ ९१ ॥

(அ-கை.)

இரண்டாவது ஆகாமிப்பிரதிபந்தத்தைக் காட்டுகின்றார் :—

ब्रह्मलोकाभिवांछायां सम्यक् सत्यां तां निरुध्य यः आत्मानं विचारयेत् अयं तु न साक्षात् करोति ॥

(சு-ம்.)

பிரஹ்மலோகத்தின் இச்சை செவ்வையா யிருக்கின், அந்த இச்சை யினைத் தடுத்து, ஆத்மாவை விசாரிப்பானுயின் அவன் சாக்ஷாத்கரிக்கிற தில்லை.

(வி-ம்.)

பிரஹ்மலோகத்தினது பிராப்தியின் இச்சை செவ்வையாய்த் திடமா யிருக்கின், அந்த இச்சையைத் தடுத்து, எந்தப் புருஷன் ஆத்மாவை விசா ரிக்கிறானோ, அவனுக்குச் சாக்ஷாத்கார முண்டாகிற தில்லை யென்பது பொருள். (௯௧)

[௧0௧0] वेदांतविज्ञानसुनिश्चितार्था इति शास्त्रतः ।
ब्रह्मलोके स कल्पांते ब्रह्मणा सह मुच्यते ॥ ५२ ॥

---

* சஅ. எப்போது யோகாப்பியாசத்தினு லுண்டாகிய சம்ஸ்காரத்தினும் அதிக வலியுடைய அதர்மமுதலியவடிவ கர்மம் செய்திரானோ, அப்போது யோகாப்பியாசத்தினுற் பிறந்த சம்ஸ்காரத்தினுல் யோகப்பிரஷ்டபுருஷன் சம்சித்தியில் பிரவிருத்திக்கின்றான். எப்போது அதர்மம் வலியுடையதாய்ச் செய்திருக்கின்றானோ, அப்போது அதனுல் யோகத்தாற்றோன்றிய சம்ஸ்காரமும் தோல்வியடைகின்றது. அத்தோல்வி கெடுமிடத்தோ யோகஜன்னிய சம்ஸ்காரம் தானே காரியத்தை யாரம்பிக்கின்றது. நெடுங்காலமாக நிலைத்துள்ள அச்சம்ஸ்காரமும் நாசமாகாது. ஆதலால் அச்சம்ஸ்காரத்தால் பரவச (வசமிழந்தவ) னுகியே யோகப்பிரஷ்டன் அதிக முயற்சியின்கண் இழுக்கப்படுகின்றான். இவ்வாறு கீதையின் வியாக்கியானத்தில் பாஷ்யகாரர் எழுதியிருக்கின்றனர்.

(அ-கை.)

அப்படியானால் அப்போது அந்தப் பிரஹ்மலோகப்பிராப்தியின் இச்சையுடையவனுக்கு எக்காலத்திலும் முக்தி யுண்டாகாதோவென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

"वेदांतविज्ञानसुनिश्चितार्थाः" इति शास्त्रतः सः ब्रह्मलोके कल्पांते ब्रह्मणा सह मुच्यते ॥

(சு-ம்.)

"வேதாந்தத்தின் விஞ்ஞானத்தினால் செவ்வையாய் அர்த்தநிச்சயஞ் செய்பவர்களாகிய யதிகள்" என்னும் சுருதிவடிவ சாஸ்திரத்தினால் அந்தப் புருஷன் பிரஹ்மலோகத்தில் கற்பத்தின் முடிவில் பிரஹ்மாவினோடு முக்தனாகின்றான்.

(வி-ம்.)

"वेदांतविज्ञानसुनिश्चितार्थाः संन्यासयोगाद्यतयः शुद्धसत्वाः । ते ब्रह्मलोके तु परांतकाले परामृतात् परिमुञ्चन्ति सर्वे" "ब्रह्मणा सह ते सर्वे संप्राप्ते प्रतिसंचरे परस्यांते कृतात्मानः प्रविशांति परं पदम्" "வேதாந்தத்தின் விஞ்ஞானத்தினால் செவ்வையாய் அர்த்தமாகிய மோக்ஷவடிவப் பிரயோஜனத்தை நிச்சயஞ்செய்தவர்களும், சந்நியாசயோகத்தால் சுத்தியடைந்த அந்தக்கரணமுடையவர்களுமாகிய சந்நியாசிகள் எவர்களோ, அவர்கள் பிரஹ்மலோகத்தில் பிரஹ்மாவின் முடிவுகாலத்தில் பிரஹ்மாவினால் உபதேசிக்கப்பட்ட அல்லது தானேயாகிய ஞானத்தினால் எல்லோரும் முக்தியை யடைகின்றார்கள்." "அவர்களெல்லோரும் பிரளய காலம் வந்தபோது பிரஹ்மாவுக்கு முடிவுண்டாகுங்கால் பிரஹ்மாவோடு சுத்தசொரூப முடையவர்களாய்ப் பரமபதத்தில் பிரவேசிக்கின்றார்கள்." என்பனமுதலிய சுருதிவடிவ சாஸ்திரவசத்தால் பிரஹ்மலோகத்தினை யடைந்தபிறகு தத்துவத்தினைச் சாக்ஷாத்கரித்துப் பிரஹ்மாவோடு அவனுக்கு முக்தி யுண்டாகுமென்பது பொருள். (௫உ)

௧௦. விசாரத்தின் பிரதிபந்தம்.

[௧௦௧௧] केषांचित्स विचारोऽपि कर्मणा प्रतिबध्यते ।
श्रवणायापि बहुभिर्यो न लभ्य इति श्रुतेः ॥ ५३ ॥

(அ-கை.)

இப்படித் தத்துவவிசாரஞ்செய்தும் பிரதிபந்தத்தின் வசத்தால இந்த ஜன்மத்தில் சாக்ஷாத்கார முண்டாகிற தில்லை யென்பதனைக் கூறித் தீவிர பாபமுடைய புருஷர்களுக்கு அந்த விசாரமும் துர்லபமா மென்று கூறுகின்றார்:—

केषांचित्सः विचारः अपि कर्मणा प्रतिबध्यते ॥

(சு-ம்.)

சில புருஷர்களுக்கு அவ்விசாரமும் தீவிரபாபவடிவ கர்மத்தினால் பிரதிபந்தத்தினை யடைகின்றது.

(அ-கை.)

அவ்விசாரத்தின் பிரதிபந்தத்தில் சுருதிவடிவப் பிரமாணத்தினைக் கூறுகின்றார்:—

यः बहुभिः श्रवणाय अपि न लभ्यः इति श्रुतेः ॥

(சு-ம்.)

வெகு புருஷர்களுக்குச் சிரவணத்தின்பொருட்டும் கிடைக்கிறதில்லையென்னும் சுருதியினால்.

(வி-ம்.)

பரமாத்மா வெகுபுருஷர்களால் சிரவணஞ்செய்தற்கும் துர்லபமாம் என்பது பொருள். (௫௩)

௩, நிர்க்குணவுபாசனையின் சம்பவமும், அதன் கிரமத்தோடு அறிவித்தலும், உபாசனையின் விலக்ஷணத்தன்மையும் ௧0௧௨-௧0௬௩.

௧. ஞானத்தினைப்போல நிர்க்குணவுபாசனை சம்பவித்தலும் அதன் கிரமமும் ௧0௧௨-௧0௩௧.

௧. விசாரத்திற் சாமர்த்தியமில்லாத முமுக்ஷுவின் கர்த்தவ்வியம்.

[௧0௧௨] अत्यंतबुद्धिमांद्याद्वा सामग्र्या वाऽप्यसंभवात् ।
यो विचारं न लभते ब्रह्मोपासीत सोऽनिशम् ॥ ५४ ॥

(அ-கை.)

இவ்வளவு அதாவது ௯௯௬-௧0௧௧ சுலோகபரியந்தம் சொல்லப்பட்ட கிரந்தங்களால் பிரதிபந்தமிருக்கின்,தத்துவத்தின் சாக்ஷாத்காரமும் அதன் சாதனமாகிய விசாரமும் சம்பவியா வென்பதனைக் கூறி, இப்போது விசாரத்திற் சாமர்த்தியமின்றிய மோஹ(விருப்ப) முடைய புருஷனால் செய்யத்தக்கது யாது? என்று கேட்கும்விருப்பத்து, "விசாரத்திற் சாமர்த்தியமின்றியவர்கள் குருமுகமாக அவ்வுபாசனையைக் கேட்டு உபாசனை செய்க." என்னும் ௯அ௯-சுலோகத்தில் முன் பிரதிஞ்ஞைசெய்யப்பட்ட உபாசனை எதுவோ அதனை உபபாதனம் செய்கின்றார்:—

अत्यन्तबुद्धिमांद्यात् वा सामग्र्याः असंभवात् अपि वा यः विचारं न लभते ।
सः अनिशं ब्रह्म उपासीत ॥

(சு-ம்.)

அத்தியந்த புத்தியின் மந்தத்தன்மையாலாவது அல்லது விசாரத்தினது சாமக்கிரியின் அசம்பவத்தினாலாவது எந்தப் புருஷன் விசாரத்தை யடைகிறதில்லையோ, அவன் நிரந்தரம் (இடைவிடாது) பிரஹ்மத்தை உபாசிக்கக்கடவன் அதாவது சிந்திக்கக்கடவன்.

(வி-ம்.)

விசாரத்தினது சாமக்கிரியின் அசம்பவத்தினால் என்பதற்கு அந்தத் தத்துவத்தின் விசாரத்தினை உபதேசிக்கும் குரு அல்லது அத்தியாத்மசாஸ்திரம் அல்லது அநுகூலமான தேசகாலாதிகள் சம்பவியாமையால் என்பது பொருள். (௫௪)

உ. நிர்க்குணவுபாசனை சம்பவித்தலின் பிரதிஞ்ஞை.

[௧0௧௯] निर्गुणब्रह्मतत्त्वस्य न ह्युपास्तेरसंभवः ।
सगुणब्रह्मणी वात्र प्रत्ययावृत्तिसंभवात् ॥ ५५ ॥

(அ-கை.)

அப்படியானால் நிர்க்குணப்பிரஹ்மதத்துவம் குணமில்லாததா யிருத்தலால் அதன் உபாசனை பொருந்தாதென் றாசங்கித்து, உபாசனை விருத்திகளின் ஆவிருத்திவடிவமா யிருத்தலால் சகுணப்பிரஹ்மத்தினைப்போல நிர்க்குணப்பிரஹ்மத்திலும் அவ்விருத்திகளின் ஆவிருத்திவடிவ உபாசனை சம்பவிக்கின்றதென்று கூறுகின்றார் :—

निर्गुणब्रह्मतत्त्वस्य उपास्तेः असंभवः न हि सगुणब्रह्मणि इव अत्र प्रत्यायवृत्तिसंभवात् ॥

(சு-ம்.)

நிர்க்குணதத்துவத்தின் உபாசனை சம்பவியாதென்பதில்லை. ஏனெனின், சகுணப்பிரஹ்மத்தினைப்போல இந்நிர்க்குணப்பிரஹ்மத்தில் விருத்திகளின் ஆவிருத்தி சம்பவித்தலால். (௫௫)

௩. வாக்கிற்கும் மனத்திற்கு மெட்டாத பிரஹ்மம் உபாசிக்கப்படுவதா மென்பதில் சங்கையும், முற்கூறிய தோஷம் ஞானத்திற் சமமாதலும்.

[௧0௨0] अवाङ्मनसगम्यं तन्नोपास्यमिति चेत्तदा ।
अवाङ्मनसगम्यस्य वेदनं न च संभवेत् ॥ ५६ ॥

(அ-கை.)

அப்படியானல் நிர்க்குணப்பிரஹ்மம் வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகாமையால் உபாசனைசெய்தற்குரிய தன்று என்றுசங்கித்து, ஞானபக்ஷத்திலும் இத்தோஷம் சமமா மென்று கூறுகின்றார் :—

अवाङ्मनसगम्यं तत् उपास्यं न इति चेत् तदा अवाङ्मनसगम्यस्य वेदनं च न संभवेत् ॥

(சு-ம்.)

வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகாத நிர்க்குணப்பிரஹ்மமாகிய அது உபாசிய மன்றென்று கூறின், அப்போது வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத நிர்க்குணப்பிரஹ்மத்தின் ஞானமும் சம்பவியாது. (௫௬)

௪. ஞானத்தில் தோஷநிவாரணத்தின் சங்கையும், அவ்வாறே உபாசனையில் தோஷநிவாரணத்தின் சமாதானமும்.

[௧௦௧௫] वागाद्यगोचराकारमित्येवं यदि वेत्त्यसौ ।
वागाद्यगोचराकारमित्युपासीत नो कुतः ॥ ५७ ॥

(அ-கை.)

அப்படியானல் "பிரஹ்மம் வாக்கிற்கும் மனதிற்கு மெட்டாததாம்" என்று அறியக்கூடியதா யிருக்கின்றதே என்றுசங்கித்து, இவ்வாறே உபாஸனையும் செய்யக்கூடியதா யிருக்கின்ற தென்று கூறுகின்றார் :—

वागाद्यगोचराकारं इति एवं यदि असौ वेत्ति वागाद्यगोचाराकारं इति कुतः न उपासीत ॥

(சு-ம்.)

"வாக்குமுதலியவற்றிற் கெட்டாத வடிவமுடையது அதாவது சொரூபமுடையது பிரஹ்மம்" என்று எப்போது இப்புருஷன் அறிகின்றானே, அப்போது "வாக்குமுதலியவற்றிற் கெட்டாத வடிவமுடையது பிரஹ்மம்" என்று ஏன் உபாசிக்கமாட்டான்? ஆனல் செய்யவே செய்வன். (௫௭)

௫. உபாஸியப்பிரஹ்மம் சகுணமா மென்னும் சங்கையும், ஞேயத்திலும் சமமா மென்பதனல் சமாதானமும்.

[௧௦௧௬] सगुणत्वमुपास्यत्वाद्यदि वेद्यत्वतोऽपि तत् ।
वेद्यं चेल्लक्षणावृत्त्या लक्षणं समुपास्यताम् ॥ ५८ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மம் உபாஸியமாயின் சகுணத்துவம் வாய்க்குமே யென்றுசங்கித்து, வேத்தியத்துவம் அதாவது அறியத்தக்கதன்மை யிருக்கினும் அது சகுணத்துவமா மென்று கூறுகின்றார் :—

उपास्यत्वात् यदि सगुणत्वं वेद्यत्वतः अपि तत् ॥

(சு-ம்.)

பிரஹ்மம் உபாஸிய மாதலால் அதாவது உபாஸனைக்கு விஷயமாதலால் எப்போது சகுணத்துவ முண்டாகுமோ, அப்போது வேத்தியத்துவம் (அறியப்படுந்தன்மை) ஆகுதலாலும் அச்சகுணத்துவ முண்டாகும்.

(அ-கை.)

அப்படியானால் இலக்ஷணாவிருத்தியினை ஆசிரயித்தலால் அறியப்படுந்தன்மையில் சகுணத்தன்மையின் பிரசங்க முண்டாகா தென்றுசங்கித்து, உபாசனையும் அவ்வாறே இலக்ஷணாவிருத்தியின் ஆசிரயத்தினாலேயே செய்யவேண்டியதா மென்று கூறுகின்றார்:—

लक्षणावृत्त्या वेद्यं चेत् लक्षणं समुपास्यताम् ॥

(சு-ம்.)

எப்போது இலக்ஷணாவிருத்தியினால் வேத்திய (ஞேய) மாகின்றதோ, அப்போது இலக்ஷணை மென்னும் இலக்ஷியரூபப் பிரஹ்மம் செவ்வையாய் உபாஸிக்கப்படுக. (ருஅ)

கூ. சுருதியினால் பிரஹ்மத்தினது உபாஸியத்தன்மையினை நிஷேதித்தலின் சங்கை.

[கoகஎ] ब्रह्म विद्धि तदेव त्वं न त्विदं यदुपासते ।
इति श्रुतेरुपास्यत्वं निषिद्धं ब्रह्मणो यदि ॥ ५९ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மத்தின் உபாஸியத்தன்மை சுருதியினால் நிஷேதிக்கப்படுகின்றதென்று வாதி மூலத்திற் சங்கிக்கின்றான் :—

त्वं तत् एव ब्रह्म विद्धि यत् तु उपासते इदं न इति श्रुतेः ब्रह्मणः उपास्यत्वं निषिद्धं यदि ॥

(சு-ம்.)

"நீ அதனையே 'இது பிரஹ்மம்' என்று அறி. எதனைப் புருஷன் உபாசிக்கின்றானோ அதனைப் பிரஹ்ம மென்று அறியாதே" என்னும் சுருதியி

ளுல் பிரஹ்மத்தின் உபாஸியத்தன்மை நிஷேதம் செய்யப்பட்டிருக்கிற தென்று கூறின்.

(வி-ம்.)

"यन्मनसा न मनुते येनाहुर्मनो मतं। तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते மனத்திளுல் எது மனனஞ் செய்யப்படுகிற தில்லையோ, எது மனதின் மனனத்தைச் செய்திருக்கின்றதோ, என்று எதனை வித்துவான்கள் கூறுகின்றார்களோ அதனையே நீ 'இது பிரஹ்ம'மென்று அறி. எதனைப் புருஷர்கள் உபாசிக்கின்றார்களோ, அதனைப் பிரஹ்மமென்று அறியாதே" என்னும் சுருதி உபாசிய வஸ்துவின் பிரஹ்மத்தன்மையை நிஷேதிக்கின்றது என்பது பொருள். "நீ எது வாக்கிற்கும் மனத்திற்கு மெட்டாததோ அதனையே 'இது பிரஹ்மம்' என்று அறி. எதனைப் புருஷன் உபாசிக்கின்றானே, அதனைப் பிரஹ்மமென்று அறியாதே" என்பது அந்வயம். . (௫௯)

எ. பிரஹ்மத்தின் வேத்தியத்தன்மையில் சுலோகம் ௧௦௧எ-ல் கூறிய தோஷத்தின் சமத்தன்மையால் சமாதானம்.

[௧௦௧அ] विदितादन्यदेवेऽति श्रुतेर्वेद्यत्वमस्य न।
यथाश्रुत्यैव वेद्यं चेत्तथा श्रुत्याप्युपास्यताम् ॥ ६० ॥

(அ-கை.)

உபாஸிய வஸ்துவினைப் போல ஞானத்தின் விஷயமான வஸ்துவிற்கும் பிரஹ்மத்தன்மையின் நிஷேதம் சமானமாம் என்று சித்தாந்தி கூறுகின்றார் :—

विदितात् अन्यत् एव इति श्रुतेः अस्य वेद्यत्वं न ॥

(சு-ம்.)

"அறியப்பட்டதினும் வேறேயாம்" என்னும் சுருதியில் இந்தப் பிரஹ்மத்தின் வேத்தியத்தன்மை நிஷேதிக்கப்படவில்லையா? என்னே? நிஷேதிக்கப்பட்டே யிருக்கிறது.

(வி-ம்.)

"अन्यदेव तद्विदितादथो अविदितादधि அந்தப் பிரஹ்மம் அறியப்பட்டதினும் வேறும்; அறியப்படாததினும் வேறும்." என்னும் சுருதி பிரஹ்மத்தின் வேத்தியத்தன்மையினையும் நிவிருத்திக்கின்றது.

(அ-கை.)

ஞானத்தின் விஷயமான அறியப்பட்டதினும் அஞ்ஞானத்தின் விஷயமான அறியப்படாததினும் வேறும் பிரஹ்மம் என்று சுருதி சொல்லுமா

யின், அப்போது அறியப்பட்டதும் அறியப்படாததுமாகிய வஸ்துக்களின் வேறாகவே அந்தப் பிரஹ்மத்தை அறியவேண்டுமென் றுசங்கித்து, உபாசனையிலும் இச்சமாதானம் சமானமா மென்று கூறுகின்றார்:—

यथा श्रुत्या एव वेद्यं चेत् तथा श्रुत्या अपि उपास्यतां ॥

(சு-ம்.)

சுருதியநுசாரமாக எப்போது பிரஹ்மம் வேத்தியம் அதாவது அறியத்தக்கது ஆகின்றதோ, அப்போது சுருதியநுசாரமாகப் பிரஹ்மத்தின் உபாசனையும் செய்யவேண்டும். (௬௦)

அ. வேத்தியத்தன்மையினைப்போல உபாசியத்தன்மையின் மித்தியாத்தன்மையும் விருத்திவியாப்திவடிவத்தன்மையும்.

[௧௦௬௧] अवास्तवी वेद्यता चेदुपास्यत्वं तथा न किम् ।
वृत्तिव्याप्तिर्वेद्यता चेदुपास्यत्वेऽपि तत्समम् ॥ ६१ ॥

(அ-கை.)

பிரஹ்மத்தின் வேத்தியத்தன்மை வாஸ்தவமன்று என்றாசங்கித்துப் பிரஹ்மத்தின் உபாசியத்தன்மையும் அவ்வாறே வாஸ்தவமல்லாததேயாமென்று கூறுகின்றார் :—

वेद्यता अवास्तवी चेत् उपास्यत्वं किं तथा न ॥

(சு-ம்.)

அறியப்படுந்தன்மை வாஸ்தவமல்லாததாயின், அப்போது உபாசிக்கப்படுந்தன்மை ஏன் அவ்வாறு வாஸ்தவமல்லாததாகாது ? ஆகவே செய்யும்.

(அ-கை.)

அப்படியானால் ஞானபக்ஷத்தில் விருத்திக்குப் பிரஹ்மவடிவத்துவமிருக்கின்றது, உபாசனையில் இல்லையே யென்றாசங்கித்துச் சப்தத்தின் வலியால் விருத்திக்குப் பிரஹ்மாகாரத்தன்மையானது ஞானம் உபாசனையென்னும் இரண்டிலும் சமானமா மென்று கூறுகின்றார் :—

वृत्तिव्याप्तिः वेद्यता चेत् उपास्यत्वे अपि तत् समम् ॥

(சு-ம்.)

விருத்திவியாப்தி அதாவது விருத்தியின் விஷயம் வேத்தியத்துவமாயின், அப்போது உபாசியத்தன்மையிலும் அந்த விருத்திக்கு விஷயமாந்தன்மை சமானமாம். (௬௧)

௧. யுக்தியின்றிய உபாலம்பம் இரண்டு பக்ஷங்களிலும் சமானமாதலும், உபாசனையிற் பிரமாணமும்.

[௧0௨0] का ते भक्तिरुपास्तौ चेत्कस्ते द्वेषस्तदीरय ।
मानाभावो न वाच्योऽस्यां बहुश्रुतिषु दर्शनात् ॥ ६२ ॥

(அ-கை.)

யுக்தியின்றிய உபாலம்பமாகிய கேட்டல் எதுவோ அது உனது பக்ஷத்திலும் சமானமா மென்று கூறுகின்றார்.—

ते उपास्तौ का भक्तिः चेत् ते कः द्वेषः तत् ईरय ॥

(சு-ம்.)

சித்தாந்தி! உனக்கு உபாசனையில் என்ன பக்தி அதாவது விசுவாசம்? என்று சொல்லுவாயாயின், வாதியே! உனக்கு என்ன துவேஷம்? அதனைச் சொல்லு.

(அ-கை.)

அப்படியானால் நிர்க்குண வுபாசனையில் பிரமாண மில்லையென்றாசங்கித்து, அநேகசுருதிகளில் நிர்க்குணவுபாசனையைக் காண்டலால் நிர்க்குண உபாசனையில் பிரமாண மில்லை யென்று கூறுதல் பொருந்தாது என்று கூறுகின்றார் :—

बहुश्रुतिषु दर्शनात् अस्यां मानाभावः वाच्यः न ॥

(சு-ம்.)

வெகு சுருதிகளில் காணுதலால் இந்த நிர்க்குணவுபாசனையில் பிரமாணமின்மை சொல்லத்தக்கதன்று. (௬௨)

௧0. நிர்க்குணவுபாசனையில் பிரமாணவடிவ உபநிஷதங்களைக் கூறுதல்.

[௧0௨௧] उत्तरस्मिंस्तापनीये शैब्यप्रश्नेऽथ काठके ।
मांडूक्यादौ च सर्वत्र निर्गुणोपास्तिरीरिता ॥ ६३ ॥

(அ-கை.)

வெகுசுருதிகளிற் காணுதலால் இந்த ௧0௨0-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினை வர்ணிக்கின்றார் :—

उत्तरस्मिन् तापनीये शैब्यप्रश्ने अथ काठके च माण्डूक्यादौ सर्वत्र निर्गुणोपास्तिः ईरिता ॥

(சு-ம்.)

உத்தரதாபநீயத்திலும், சௌப்பியப்பிரசினத்திலும், கடவல்லியிலும், மாண்டூக்கியமுதலியவற்றிலும் எல்லாவிடங்களிலும் நிர்க்குணவுபாசனை சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

தாபநீயவுபநிஷதத்தில் முதலில் "देवा ह वै प्रजापतिमब्रुवन्नणोरणीयांसामिममात्मानमोंकारं नो व्याचक्ष्व தேவர்கள் பிரஹ்மதேவனைப் பார்த்துக் கேட்டதாவது சூக்ஷ்மத்திலும் அதிசூக்ஷ்மமான இவ்வோங்காரவடிவ ஆத்மாவினை எங்களுக்குச் சொல்லியருளல்வேண்டும். அதனை யாங்கள் உபாசிக்கின்றோம்." என்றல் முதலியவாக்கியங்களால் வெகுவிதமாக நிர்க்குணவுபாசனை சொல்லப்படுகின்றது. பிரசினோபநிஷத்தின் ஐந்தாவது பிரசினத்தில் "यः पुनरेत त्रिमात्रेणोमित्यनेनैवाक्षरेण परं पुरुषमभिध्यायीत எந்தப்புருஷன் மறுபடியும் அகாரம் உகாரம் மகார மென்னும் மூன்றுமாத்திரைகளை யுடைய ஓம் என்னும் அக்ஷரத்தினாலேயே இப்பரமபுருஷனாகிய பிரஹ்மத்தைத் தியானிக்கின்றானோ." என்றல் முதலிய வாக்கியங்களால் நிர்க்குண உபாசனை சொல்லப்படுகின்றது. கடவல்லியில், "सर्वे वेदा यत्पदमामनन्ति சகலவேதங்களும் எவனுடைய சொரூபத்தைக் கூறுகின்றனவோ" என்பது முதலாகத் தொடங்கி, "एतद्ध्येवाक्षरं ब्रह्म एतदालंबनं श्रेष्ठं இவ்வக்ஷரமே பிரஹ்மம். இவ்வாலம்பனம் அதிலுது தியேயம் சிரேஷ்டமாம்." என்றல்முதலிய வசனங்களால் ஓங்காரத்தின் உபாசனை சொல்லப்படுகின்றது. மாண்டூக்கியவுபநிஷதத்தில் "ओमित्येतदक्षरमिदं सर्वं ஓம் என்னும் இவ்வக்ஷரம் இவ்வெல்லாமுமாம்" என்றல்முதலிய வசனங்களால் மூன்று அவஸ்தைகளுக்கதீதமான துரியசாக்ஷிவடிவப் பிரஹ்மத்தின் உபாசனையே சொல்லப்படுகின்றது என்பது பொருள். மூலத்திலுள்ள आदि முதலிய என்னும் சொல்லால் தைத்திரீயம் முண்டகமுதலியவுபநிஷதங்களும் கொள்ளப்படுகின்றன. அவற்றிலும் நிர்க்குணவுபாசனை சொல்லப்படுகின்றது. (சுரு)

கக. உபாசனையை யநுஷ்டித்தலின் கிரமத்தைச் சூசிப்பித்தலும் அது ஞானத்திற்குச் சாதனமாதலும்.

[கOஉஉ] अनुष्ठानप्रकारोऽस्याः पंचीकरण ईरितः ।
ज्ञानसाधनमेतच्चेन्नेति केनात्र वारितम् ॥ ६४ ॥

(அ-கை.)

அப்படியானல் நிர்க்குணவுபாசனை எவ்விதமாக அநுஷ்டிக்கத்தக்கதாமென்னுமிடத்துக் கூறுகின்றார் :—

अस्याः अनुष्ठानप्रकारः पंचीकरणे ईरितः ॥

(சு-ம்.)

இந்நிர்க்குணோபாசனையின் அநுஷ்டானக்கிரமம் சுரேசுவராசாரிய ரால் செய்யப்பட்ட * ௧௧. பஞ்சீகரணத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

அப்படியானால் இந்நிர்க்குணப்பிரஹ்மத்தின் உபாசனை ஞானத்தின் சாதனமேயாம்; முக்தியின் சாதனமன்றென் றாசங்கித்து "अमृतस्योपास्त्यापि मुच्यते பிரஹ்மதத்துவோபாசனையினாலும் புருஷன் முக்தனாகின்றான்" என்று முதல் சுலோகத்திற் கூறியவிதமாகக் கூறும் எமக்கு இந்த உன் வார்த்தை அநுகூலமா மென்று கூறுகின்றார்:—

एतत् ज्ञानसाधनं चेत् । अत्र न इति केन वारितं ॥

(சு-ம்.)

இந்நிர்க்குணோபாசனை ஞானத்திற்குச் சாதனமாகுமாயின், அப் போது இங்கு இல்லை யென்று யாவரால் நிவிருத்திக்கப்படும்? ஒருவரா லும் நிவிருத்திக்கப்படாது. (௬௪)

௧௨. திருஷ்டாந்தத்தோடு நிர்க்குணவுபாசனை உலகத்தாரால் அநுஷ்டிக்கப் படாமையால் நிஷேதிக்கக்கூடாததா மெனல்.

[௧0௨௬] नानुतिष्ठति कोऽप्येतदिति चेन्मानुतिष्ठतु ।
पुरुषस्यापराधेन किमुपास्तिः प्रदुष्यति ॥ ६५ ॥

(அ-கை.)

அப்படியானால் எல்லாப்புருஷர்களாலும் சகுணவுபாசனையே அநுஷ் டிக்கப்படுகின்றது. நிர்க்குணவுபாசனை அநுஷ்டிக்கப்படுகிறதில்லை யென் றாசங்கித்து, உபநிஷத்வடிவப்பிரமாணத்தினால் நிச்சயிக்கப்பட்ட நிர்க்குண வுபாசனை யெதுவோ அதன் நிஷித்தம் பொருத்தமுடைய தன்றென்று கூறுகின்றார்:—

---

* ௧௧. சுலோகம் ௧0௨௪-ல் கூறிய அநேக உபநிஷதங்களில் சுருக்கமாக நிர்க்கு ணோபாசனை சொல்லப்பட்டிருக்கின்றது. மாண்டூக்கிய வுபநிஷதத்தில் விசேஷமாகச் சொல்லப்படுகின்றது. அதன் வியாக்கியானத்தில் பாஷியகாரரும் ஆநந்தகிரிஸ்வாமி களும் நிர்க்குணவுபாசனையின் கிரமத்தினைத் தெளிவாய் எழுதியிருக்கின்றார்கள். அதே கிரமத்தினைச் சுரேசுவராசாரியர்களும் பஞ்சீகரணத்தில் கூறியிருக்கின்றனர். விசாரசா கரத்தின் ஐந்தாவது தரங்கத்திலும் தெளிவாய் எழுதப்பட்டிருக்கின்றது. அறியவி ரும்புவோர் அங்குக் காண்க. விரிவஞ்சி இங்கு எழுதப்படவில்லை.

कः अपि एतत् न अनुतिष्ठति इति चेत् मा अनुतिष्ठतु । पुरुषस्य अपराधेन उपास्तिः प्रदुष्यति किम् ॥

(சு-ம்.)

எவரும் இந்நிர்க்குணவுபாசனையை அநுஷ்டிக்கிறதில்லையேயென்று கூறின் அநுஷ்டானஞ் செய்யவேண்டாம். புருஷனது அபராதத்தினால் உபாசனை தூஷிக்கப்படுவதாகுமா? என்னை? தூஷிக்கப்படுவதாகாது. ()

[கoஉசு] इतोऽप्यतिशयं मत्वा मंत्रान्वश्यादिकारिणः ।
मूढा जपंतु तेभ्योऽतिमूढाः कृषिमुपासताम् ॥ ९६ ॥

(அ-கை.)

பிரமாணத்தினாற் சித்தித்த நிர்க்குணவுபாசனை அநுஷ்டானமின்மையால் தள்ளத்தக்கதாகாதென்பதில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:-

इतः अपि अतिशयं मत्वा मूढाः वश्याधिकारिणः मंत्रान् जपन्तु । तेभ्यः अतिमूढाः कृषिं उपासताम् ॥

(சு-ம்.)

இச்சகுணோபாசனையினும் மேலானதாகக் கருதி மூடன் வசியமுதலியவற்றைச் செய்யும் மந்திரங்களை ஜபிக்க. அவனினும் அதிக மூடன் வயலையுழுது பயிரிடுக.

(வி-ம்.)

இங்கு இஃது அபிப்பிராயம்:—எப்படிக் காலாந்தரத்திலாகும் பரலோகவடிவ பயனையுடைய சகுணோபாசனையினும் வசியமுதலியவற்றைச் செய்யும் மந்திரங்களில் இவ்வுலகசம்பந்தியான பலத்தைத் தரும் மேன்மையைக் கண்டு மூடனுக்கு அம்மந்திரத்தின் ஜபமுதலியவற்றில் பிரவிருத்தி யுண்டாயினும், சாஸ்திரசம்ஸ்காரமுடைய விவேகிபுருஷனால் சகுணவுபாசனை தள்ளப்படுவதில்லையோ, அல்லது எப்படி விரும்பியபலத்தின் நியமமின்மையையும் அநுஷ்டானத்தின் அபேக்ஷையையுமுடைய அம்மந்திரங்களைவிட வயல்முதலியவற்றில் மிக்க நியமமாக இச்சைசெய்யத்தக்க பயனை யறிந்து அதிமூடர்களுக்கு அந்த வயல்முதலியவற்றில் பிரவிருத்தியிருந்தும், அவற்றால் அம்மந்திரங்களின் அநுஷ்டானம் பரித்தியாகஞ் செய்யப்படுகிறதில்லையோ, அதுபோலச் சம்சாரசம்பந்தியான பலேச்சையுடைய புருஷர்களுக்கு நிர்க்குணவுபாசனையின் அநுஷ்டானமில்லாதிருந்தாலும் முமுக்ஷுபுருஷர்களால் நிர்க்குணோபாசனை விடப்படுகிறதில்லை. ()

கரு. உபாசனை ஒன்று யிருத்தலால் வேறுவேறு சுருதிகளில் கூறிய உபாசியத்தின் குணங்களை ஒருங்கே முடித்தல்.

[கOஉ௫] तिष्ठंतु मूढाः प्रकृता निर्गुणोपास्तिरीर्यते ।
विध्यैक्यात्सर्वशाखास्थान् गुणानत्रोपसंहरेत् ॥ ९७ ॥

(அ-கை.)

இவ்வாறு பிரசங்கத்தால் கிடைத்தபொருளை முடித்து இங்கு எடுத்துக்கொண்ட நிர்க்குணவுபாசனையை யநுசரிக்கின்றார் :—

मूढाः तिष्ठन्तु । प्रकृता निर्गुणोपास्तिः ईर्यते ।

(சு-ம்.)

மூடபுருஷன் இருக்குக. எம்மால் பிரகிருத அதாவது ஆரம்பிக்கப்பட்ட நிர்க்குணோபாசனை சொல்லப்படுகின்றது.

(அ-கை.)

" सर्ववेदांतप्रत्ययं चोदनाद्यविशेषात् சகல உபநிஷதவடிவ வேதாந்தத்திலும் உபாசனை ஒன்றே; விதிமுதலியவற்றின் பேதமின்மையால்." என்னும் உத்தரமீமாம்ஸையின் மூன்றுவது அத்தியாயத்திலுள்ள மூன்றுவது பாதத்தில் கூறிய நியாயத்தால் அதாவது *உO. முதற்சூத்திரத்தால் நிர்க்குணவுபா

---

* உO. "சொற்ப எழுத்துக்களையுடையதும், சந்தேகமில்லாத சாரமான அர்த்தமுடையதும், எல்லாவிடத்தும் பிரவிருத்திப்பதும், எதனுலும் தடுக்கமுடியாததும், தோஷமில்லாததுமா யிருப்பது எதுவோ அதனைச் சூத்திரலக்ஷணமுணர்ந்த புருஷர்கள் சூத்திர மென்று சொல்லுகிறார்கள். இது சூத்திரத்தின் லக்ஷணம். எல்லாப்பெயர்களும் பேதத்திற்கு ஏதுவாதல் பிரசித்தம். இங்கு வேறு வேறு உபநிஷதங்களில் கூறியுள்ள உபாசனைகளின் பெயரின் பேதமும் கர்மத்தின் பேதத்தினைச் சொல்லுவதாமென்பது பிரசித்தம். அதுபோலவே புநருக்திமுதலியனவும் பேதத்திற்கு ஏதுவாயிருக்கின்றன. ஆதலால் ஒவ்வொரு உபநிஷத்திலும் உபாசனையின் பேத மிருக்கும் என்னும் சங்கை நேரவே ஆசாரியர் கூறுகின்றார் :—

சகல வுபநிஷதங்களாலும் தோற்றப்படுகின்றது (முற்கூறிய) விஞ்ஞானமாம் (உபாசனையாம்). அவை அந்தந்த வுபநிஷதங்களில் அதுவே(ஒரேவடிவமே)யாதற்குரியனவாம். ஏனெனின், சோதனைமுதலியவற்றின் விசேஷமில்லாததா(ஒருவடிவமா)தலால். இங்கே ஆதி யென்னும் சப்தத்தால் அந்நியசாகைகளின் (கூறிய பெயர்முதலியவற்றால் அக்கினிஹோத்திரமுதலிய கர்மங்களின் (பேதம் சாகைகள் தோறும் கிடைத்தலால் அந்தச்சாகைகளின்) அதிகரணவடிவ சித்தாந்தசூத்திரத்திற் கூறிய கர்மங்களின் அபேதத்தின் ஹேது எவையோ அவை கிரகிக்கப்படுகின்றன. ஆதலால் சையோகவடிவ சோதனை (பிரேரணை)வடிவ பெயர்களின் அவிசேஷ (அபேத)த்தால் (அநேக வுபநிஷதங்களிலுள்ள உபாசனை ஒன்றேயாம்). இது சூத்திரார்த்தம்.

சனைக்கு ஒருவடிவாந்தன்மை யிருத்தலால் அந்தந்தச் சாகைகளிலும் கேட்கப்பட்ட உபாசியப்பிரஹ்மத்தின் குணங்களை ஒரிடத்தில் உபசங் காரஞ்செய்து (சேர்த்து) உபாசனை செய்யவேண்டியதா மென்று கூறுகின் ரூர் :—

विद्यैक्यात् सर्वशाखास्थान् गुणान् अत्र उपसंहरेत् ॥

(சு-ம்.)

வித்தையாகிய நிர்க்குணவுபாசனை ஒரு வடிவமாயிருத்தலால் சகல சாகைகளிலுமுள்ள குணங்களை ஒரிடத்து * உக. உபசங்காரஞ் செய்ய வேண்டும். (சுஎ)

கச. வியாசசூத்திரத்தினுல் விதிக்கப்படுவனவும் நிஷேதிக்கப்படுவனவுமாகிய குணங்களின் வர்ணனம்.

[க0உசு] आनंदादेर्विधेयस्य गुणसंघस्य संहृतिः ।
आनंदादय इत्यस्मिन्सूत्रे व्यासेन वर्णिता ॥ ६८ ॥

(அ-கை.)

அவ்வுபாசியங்களின் குணம் பெயர் தர்மம் என்பவை விதேயமும் நிஷேத்தியமும் அதாவது விதிவாக்கியத்தால் அறிவிக்கப்படுவனவும் நிஷேதவாக்கியத்தால் போதிக்கப்படுவனவுமென இருவகைப்படும். அவற்றுள், "आनंदो ब्रह्म" "विज्ञानमानन्दं ब्रह्म" "नित्यः शुद्धो बुद्धः सत्यो मुक्तो निरंजनो वि-. भुरद्वय आनन्दः परः प्रत्यगेकरसः ॥" "ஆனந்தரூபம் பிரஹ்மம்" "விஞ்ஞானந்தரூபம் பிரஹ்மம்" "நித்திய சுத்த புத்த (ஞானவடிவ) சத்திய முக்த நிரஞ்சன விபு (வியாபக) அத்வய ஆநந்த பர (எல்லாவற்றிலும் மேலான) பிரத்தியக்கு (சர்வாந்தரம்) ஏகரசம்." என்றல்முதலிய விதேயகுணங்க ளெவையோ அவற்றின்உபசங்காரம் அதாவது ஒரிடத்திற் சேர்த்தல் "अनन्दादयः प्रधानस्य ஆநந்தமுதலியன பிரதானமாகிய பிரஹ்ம மெதுவோ

* உக. அந்தப் பிரஹ்மத்தின் வாசகமான ஆநந்தமுதலிய பதங்களை ஒருவாக்கிய வடிவ மாயிருக்கும்படி உச்சரித்தல் உபசங்கார மெனப்படும். அது குணோபசங்கார நியாயத்தாலாகின்றது. எங்ஙனம்: ஓர் நான்கு புருஷர்கள் ஆயிரமாயிரம் ரூபாய்களைச் சேர்த்துக் கூட்டுவியாபாரஞ் செய்தார்கள். அவர்களுள் ஒவ்வொருவனையும் ஒருவன் "நீ எவ்வளவு முதல் வைத்து வியாபாரஞ்செய்கிறாய்" என்று கேட்டால் அப்போது ஒவ்வொருவனும் எல்லாத்தொகையினையும் ஒன்ருய்ப் புத்தியிற் கூட்டி நான் நாலாயிர ரூபாய்க்கு வியாபாரஞ்செய்கிறேன் என்று சொல்லுகிருன். அதுபோல வெவ்வேறு சாகைகளிலுள்ள குண(தர்ம)ங்கள் அல்லது அங்க(சாதன)ங்கள் அல்லது விசேஷணங் கள் ஒன்றென்பதனைப் புத்தியிற் பதியவைத்தலைக் குணோபசங்காரநியாய மென்பர்.

அதன் (தர்மம் என்று அறிக.)" என்னும் * உஉ. அதிகரணசூத்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிற தென்று கூறுகின்றார்:—

"आनन्दादेः विधेयस्य गुणसंघस्य संहृतिः आनन्दादयः" इति अस्मिन् सूत्रे व्यासेन वर्णिता ॥

(சு-ம்)

ஆநந்தமுதலிய விதேயவடிவ குணங்களினது சமூகத்தின் உபசங்காரத்தினை "ஆநந்தமுதலியன பிரதானமாகிய பிரஹ்மத்தினவாம்." என்னும் சூத்திரத்தில் வியாசபகவான் வர்ணித்திருக்கின்றார். (சுஅ)

[க0உஎ] अस्थूलादेर्निषेध्यस्य गुणसंघस्य संहृतिः ।
तथा व्यासेन सूत्रेऽस्मिन्नुक्ताक्षरधियां त्विति ॥ ६९ ॥

(அ-கை.)

"अस्थूलमनण्वह्रस्वं" "यत्तदद्रश्यमग्राह्यमशब्दमस्पर्शमरूपमव्ययं" "ஸ்தூலமல்லாதது அணுவல்லாதது குறுகியதல்லாதது" "யாதொரு அது காணப்படாதது, கிரகிக்கப்படாதது, சப்தமல்லாதது, ஸ்பரிசமல்லாதது, ரூபமல்லாதது, வியயம் (குறைவு நிறைவு) இல்லாதது." என்றல்முதலிய எந்த நிஷேத்தியகுணங்கள் அந்தந்தச் சாகைகளில் கேட்கப்படுகின்றனவோ, அவற்றின் உபசங்காரம்,"अक्षरधियां त्वविरोधः सामान्यतद्भावाभ्यामौपसदवत्तदुक्तं அக்ஷரபுத்தியாகிய பிரஹ்மரூப தர்மியில் துவைதத்தினை நிஷேதிக்கும் புத்தி யாதோ அதற்கு எது சப்தங்களின் உபசங்காரமாம். சாமானியத்தாலும் அதன் பாவத்தினாலும் ஔபசதத்தினைப்போல அதாவது புரோடாசப்பிரதானத்தின் சம்பந்தத்தினைப்போல என்னும் திருஷ்டாந்தத்தின் தன்மையினை ஜைமினிரிஷியானவர் பூர்வகாண்டத்திற் கூறியிருக்கின்றனர்." என்னும் * உ௩. அதிகரணசூத்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது என்று கூறுகின்றார்:—

---

* உஉ. இஃது உத்தரமீமாம்ஸையின் மூன்றாவது அத்தியாயத்திலுள்ள மூன்றாவது பாதத்தின் பதினோராவது சூத்திரம். இச்சூத்திரத்தின் உரையினை மேல் இத்தீபத்தின் உசு-வது டிப்பணியில் எழுதுவாம்.

* உ௩. இது பிரஹ்மமீமாம்ஸையின் மூன்றாவது அத்தியாயத்துள்ள மூன்றாவது பாதத்தின் ௩௩-வது சூத்திரமாம். எல்லாம் சேர்ந்து ருருரு சூத்திரங்களாம். அவற்றில் கசுஉ அதிகரணங்களிருக்கின்றன. அவற்றினுள்ளடங்கி யிருத்தலால் இஃது அதிகரணசூத்திர மெனப்படும்.

(க) வாஜஸனேயசாகையில் "கார்க்கியே! இவ்வக்ஷரப்பிரஹ்மத்தினைப் பிராஹ்மணர்களாகிய பிரஹ்மஞானிகள் அஸ்தூலம் (பருமனில்லாதது), அல்லது அணுவல்லாதது, குறுமையில்லாதது, நீட்சியில்லாதது, செம்மையில்லாதது, சிநேகமில்லாதது என்று சொல்லுகிறார்கள். (என்றல் முதலியனவும்)" என்று கேட்கப்படுகின்றது.

तथा अस्थूलादेः निषेध्यस्य गुणसंघस्य संहृतिः "अक्षरधियां तु" इति अस्मिन् सूत्रे व्यासेन उक्ता ॥

(௬-ம்.)

அவ்வாறே அஸ்தூலமுதலிய நிஷேத்தியவடிவ குணங்களின் சமூகத்தின் உபசங்காரம் "அக்ஷரத்திற்கும் புத்திகளுக்குமோ அவரோத முண்டு." என்னும் இச்சூத்திரத்தில் வியாசபகவான் கூறியிருக்கின்றார். (௬௧)

௧௫. நிர்க்குணத்தில் குணங்களின் உபசங்காரம் சம்பவியாமையின் உபாலம்பம் வியாசருக்குரியதாதல்.

[௧௦௨-அ] निर्गुणब्रह्मतत्त्वस्य विद्यायां गुणसंहृतिः ।
न युज्येतेत्युपालंभो व्यासं प्रत्येव मां न तु ॥ ७० ॥

---

(உ) அதர்வண(முண்டக) உபநிஷதத்தில் "எதனால் அந்த அக்ஷரப்பிரஹ்மம் அறியப்படுகின்றதோ, அந்த வித்தை பரமாம் அதாவது சிரேஷ்டமாம். அந்த அக்ஷரப் பிரஹ்மம் அதிருசியம் (காணப்படாதது), அக்கிராகியம்(கிரகிக்கப்படாதது), அகோத்திரம் (கோத்திரமில்லாதது), அவர்ணம் (நிறமில்லாதது) என்றல் முதலியன" என்று கேட்கப்படுகின்றது.

அதுபோலவே அந்நியசாகைகளிலும் விசேஷ(துவைத)த்தின் நிராகரண வடிவ வாயிலால் அக்ஷரவடிவப் பரப்பிரஹ்மம் கேட்கப்படுகின்றது.

அங்குச் சிலவிடத்துச் சில பின்னவிசேஷம் அதாவது தர்மம் நிஷேதஞ்செய்யப் படுகின்றது. அவ்வெல்லா விசேஷணங்களின் நிஷேதபுத்திகளுக்கும் என்னை எல் லாவிடத்தும் அடைவிருக்கின்றதா? அல்லது வியவஸ்தையுண்டா? என்னும் சம்சயத் தில் சுருதிகளின் விபாகத்தால் வியவஸ்தை வாய்க்கவே கூறப்படுகின்றது:—

அக்ஷரப்பிரஹ்மத்தினை விஷயஞ்செய்யும் விசேஷத்தின் நிஷேதபுத்திகள் எல்லாவிடத்தும் உபசங்காரஞ்செய்யத்தக்கனவாம். சாமானியத்தினாலும் அதன் றன்மையினாலும் அதாவது எங்கும் விசேஷத்தின் நிராகரணவடிவப் பிரஹ்மத்தினைப் பிரதிபாதிக்குந்தன்மை சமானமாம். அன்றியும் அதுவே எங்கும் பிரதிபாதிக்கத்தக்கப் பிரஹ்மாபின்ன மென்று அறியப்படுகின்றது. இவ்விரண்டு ஏதுக்களால் இங்கு அந் நிய சாகையில் கேட்கப்பட்ட விசேஷத்தினை நிஷேதிக்கும் விசேஷணவடிவ சேஷங் களின் அந்நியசாகைகளிலுள்ள சேஷியாகிய பிரஹ்மத்தினோடு சம்பந்தத்தில் ஔபச தத்தினைப்போல வென்பது திருஷ்டாந்தமாம். எப்படி ஜமதக்கினியினா லாக்கப்பட்ட சதுராத்திர மென்னும் யாகத்தில் விதிக்கப்பட்ட புரோடாசத்தின் பிரதானத்தில் (கொடையில்) உத்காதாவின் வேத(சாமவேத)த்தில் உண்டாகிய மந்திரங்களுக்கும் அத்துவரியுக்களோடு (யஜுர்வேதத்தைப் படிப்பவர்களாகிய ரித்துவிக்குகளோடு) சம் பந்த முண்டாகின்றது. (உத்காதா=சாமவேதத்தினைப்படிப்பவன்.) ஏனெனின், யவ (வாற்கோதுமை)முதலியவற்றினது மாவின் பிண்டத்தை நெய்யில் வறுத்து ஹோமத் திரவியமாகக் கொள்வதனைப் புரோடாச மென்பர். அதன் பிரதானம் (அதனைக் கொடுத் தல்) அத்துவரியுவின் காரியமாதலாலும், அங்கங்கள் முக்கியாதிகாரியின் அதீனமாயிருத் தலாலும், இப்படி இங்கும் வேண்டியவிடத்து உண்டாகும் விசேஷணங்களுக்கு அக்ஷ ரப்பிரஹ்மத்தின் அதீனமாயிருத்தலால் அக்ஷரப்பிரஹ்மத்தோடு எங்கும் சம்பந்த மிருக் கின்றது. அந்த முற்கூறிய திருஷ்டாந்தத்தின் கிரமம் பூர்வமீமாம்ஸையில் ஜைமினிரி ஷியாற் சொல்லப்பட்டிருக்கிறது. இது சூத்திரார்த்தம்.

(அ-கை.)

அப்படியானால் நிர்க்குணப்பிரஹ்மவித்தையில் குணங்களின் உபசங்காரமே சம்பவியாது; நிர்க்குணவித்தைத்தன்மை விரோதமிருத்தலால் என்றுசங்கித்துச், சூத்திரகாரராகிய ஸ்ரீ வேதவியாசர் இவ்வாறு கூறிய உபசங்காரமே எம்மாற் சொல்லப்பட்டதாகலின் எம்மை நோக்கி இப்பிரசினஞ் செய்தல் உசித மன்று என்று கூறுகின்றார்:—

निर्गुणब्रह्मतत्त्वस्य विद्यायां गुणसंहृतिः न युज्येत इति उपालंभः व्यासंप्रति एव मां तु न ॥

(சு-ம்.)

நிர்க்குணப்பிரஹ்மதத்துவத்தின் வித்தையாகிய உபாசனையில் குணங்களின் உபசங்காரம் சம்பவியாது என்னும் இவ்விதமான உபாலம்பமாகிய பிரசினஞ்செய்தல் யாதோ அது வியாசருக்கே உரியதாம்; என்னை நோக்கிச் செய்தற்குரிய தன்று. (எ0)

கக. மூர்த்திகளைச் சொல்லாமையால் நிர்க்குணோபாசனையின் விரோதமின்மை.

[க0உக] हिरण्यश्मश्रुसूर्यादिमूर्तीनामनुदाहृतेः ।
अविरुद्धं निर्गुणत्वमिति चेत्तुष्यतां त्वया ॥ ७१ ॥

(அ-கை.)

பொன்மயமான தாடியோடுகூடியதன்மை என்னும் இவைமுதலிய குணவிசிஷ்டமூர்த்திகளைக் கூறாமையால் இது நிர்க்குணோபாசனையே என்று கூறின், அப்போது நிர்க்குணோபாசனைத்தன்மைக்கு விரோத மில்லையென்று கூறுகின்றார்:—

हिरण्यश्मश्रुसूर्यादिमूर्तीनां अनुदाहृतेः निर्गुणत्वं अविरुद्धं इति चेत् त्वया तुष्यतां ॥

(சு-ம்.)

சுவர்ணமய தாடியுடைய சூரியன்முதலியோரது மூர்த்திகள் உதாகரிக்கப்படாமையால் நிர்க்குணத்தன்மைக்கு விரோதமின்மை யுளதென்று கூறின், அப்போது உன்னால் சந்தோஷிக்கப்படுக.

(வி-ம்.)

பொன்மயமான தாடியினையுடைய அதாவது மோவாய்க்கட்டையின் கீழுள்ள கேசத்தினையுடைய சூரியன்முதலிய தேவர்களின் மூர்த்திகளைச் சொல்லாமையால் உபாசனையின் நிர்க்குணத்தன்மை விரோதமில்லாததாம். (எக)

௧௭. ஆநந்தாதிகுணங்களால் லக்ஷியமான பிரஹ்மம் உபாசிக்கப்படுவதாதல்.

[௧0௩0] गुणानां लक्षकत्वेन न तत्त्वेऽतः प्रवेशनम् ।
इति चेदस्त्वेवमेव ब्रह्मतत्त्वमुपास्यताम् ॥ ७२ ॥

(அ-கை.)

அப்படியானல் ஆநந்தமுதலியனவும் அஸ்தூலமுதலியனவுமாகிய குணங்களுக்கு உபாசிக்கப்படுந்தன்மை உளதாயின், பிரஹ்மத்தினுள் அவற்றின் பிரவேசமின்மையால் அக்குணவிசிஷ்டத்தன்மையாக எப்படி உபாசியத்தன்மை யுண்டாகுமென் ருசங்கித்து, அக்குணங்கட்குப் பிரஹ்மதத்துவத்தினுள் பிரவேசமில்லாதிருந்தும் அவற்றிற்கு இலக்ஷகத்தன்மை சம்பவித்தலால் அக்குணங்களால் இலக்ஷிக்கப்பட்ட பிரஹ்மோபாசனை செய்யத்தக்கதா மென்று கூறுகின்றார்:—

गुणानां लक्षकत्वेन तत्त्वे अंतः प्रवेशनं न इति चेत् । अस्तु एवं एव ब्रह्मतत्त्वं उपास्यताम् ॥

(சு-ம்.)

குணங்களுக்கு இலக்ஷகத்தன்மையால் தத்துவமாகிய இலக்ஷியவடிவப் பிரஹ்மத்தின்கண் *௨௭. உட்பிரவேச மில்லை யென்று கூறின், அப்போது இத்தன்மைய இலக்ஷியவடிவமேயான பிரஹ்மதத்துவம் உபாசனை செய்யத்தக்கதாகுக. (எ௨)

---

* ௨௭. இப்பிரகரணத்தின் ௨௨-வது டிப்பணத்தில் "ஆநந்தாதிகள் பிரதானத்தினவாம்." என்னும் சூத்திரத்தின் அர்த்தத்தினை எழுதுவதாகப் பிரதிஞ்ஞை செய்யப்பட்டது. அதன் அர்த்தத்தினை இப்போது காட்டுவோம்:—பிரஹ்மசொரூபத்தினைப் பிரதிபாதிப்பதாகிய சுருதிகளில் ஆநந்தரூபத்துவம் விஞ்ஞானகனத்துவம் எல்லாவற்றினுமிருத்தற்றன்மை சர்வாத்மத்தன்மை என்னும் இனமுடைய பிரஹ்மத்தின் தர்மங்கள் சிற்சிலவிடத்துக் கேட்கப்படுகின்றன. ஞேயப்பிரஹ்மம் ஒன்றாயிருத்தலாலும், நிர்விசேஷமாய் அதாவது சர்வதர்மமு மில்லாததா யிருத்தலாலும் அந்தத் தர்மங்களில் சம்சய மிருக்கின்றது.

ஆநந்தாதி பிரஹ்மத்தின் தர்மங்கள் எங்கு எத்தனை கேட்கப்படுகின்றனவோ அத்தனையே நிச்சயஞ்செய்யத்தக்கனவா? அல்லது சகலதர்மங்களும் எங்கும் நிச்சயிக்கத்தக்கனவா?

அங்கு எவ்வாறு சுருதிகளின் பிரிவிருக்கின்றதோ அவ்வாறு தர்மங்களின் நிச்சயம் வாய்க்குமாயின் இது சொல்லப்படுகின்றது:—"ஆநந்தாதி பிரதான (பிரஹ்ம)த்தின் தர்மங்கள் எங்கும் அதாவது எல்லாச்சாகைகளிலும் நிச்சயஞ்செய்யத்தக்கனவாம். ஏனெனின், எல்லாவற்றின் அபேதமாதலாலே எங்குமே எதனுல் அவ்வொருபிரதான விசேஷியப்பிரஹ்மமே பேதத்தினை யடைகிறதில்லையோ, அதனுல் பிரஹ்மத்தின் தர்மங்களாகிய விசேஷணங்கட்கு எங்கும் ஒரு ஞானத்திற்கு விஷயமாந்தன்மை யிருக்கின்றது. அது அதே முன்னதிகரணசூத்திரத்திலுள்ள தேவதத்தனது சௌரியம் அதாவது சூரவீரத்தன்மைமுதலிய குணங்களின் திருஷ்டாந்தத்தால் அறியவேண்டியதாம்.

[௪0௬௪] आनंदादिभिरस्थूलादिभिश्चात्मात्र लक्षितः ।
अखंडैकरसः सोऽहमस्मीत्येवमुपासते ॥ ७३ ॥

(அ-கை.)

அவ்வாறு உபாசித்தலின் கிரமத்தினையே காட்டுகின்றார்:—

---

முற்கூறியதன் தாற்பரியம் இதுவாம்:—ஆநந்தத்தன்மை, சத்தியத்தன்மை, ஞானத்தன்மைமுதலிய சாமானிய பெயர் ஜாதிகளின் வாசகமான பதங்கள் எவையோ, அவை பிரஹ்மத்தில் கற்பித்த தர்மங்களாம். அவற்றிற்கு எல்லாச்சாகைகளிலும் உபசங்கார முண்டு. ஆநந்தம், சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம், சுத்தம், அத்துவயம், ஆத்மா வென்பன ஒரு பொருளில் தாற்பரியமுடைய சமானாதிகரணபதங்களாம். அவ்வாநந்தத்துவாதிகள் சாதிவடிவ விருத்ததர்மங்களை விட்டு எல்லாவற்றின் அதிஷ்டானவடிவ ஏகமான அகண்ட (சஜாதியாதி பேதமின்றிய) வியக்தியினை (அத்வயவஸ்துமாத்திரத்தினை) இலக்ஷணையினால் போதிக்கின்றன.

ஒரே பதத்தினால் இலக்ஷியம் சித்தித்தலால் வேறு பதம் வியர்த்தமா மென்பது சொல்லக்கூடிய தன்று; ஏனெனின், ஒரே பதத்தில் விரோதமின்மையால் இலக்ஷணை சம்பவியாமையின். இரண்டு பதங்களிலும் இலக்ஷணை சம்பவிக்கினும் "ஆநந்தம் பிரஹ்மம்" என்று சொல்லவே துக்கத்துவம் அற்பத்தன்மை (பரிச்சின்னத்தன்மை) என்பவை நிஷேதிக்கப்படினும், அசத்துவம் ஜடத்துவமுதலியவற்றின் பிராந்தி யுண்டாகின்றது. ஆதலால் அவற்றை நிஷேதிக்கும்பொருட்டுச் சத்தியஞானமுதலிய பதங்கள் சொல்லத்தக்கனவாம். பிரஹ்மம் அவதியில்லாததா யிருத்தலால் வாக்கியம் முடிவில்லாததாகும் என்பது சொல்லத்தக்கதன்று; ஏனெனின், " சச்சிதாநந்தவடிவ சர்வதர்மங்களுமில்லாத அத்வய அவிகற்பப் பிரஹ்மம் நான் " என்னும் விசேஷதர்சன முண்டாதலே சகலப்பிரமங்களும் நிஷேதிக்கப்படுதலால். அவ்விசேஷதரிசனம் எவ்வளவு பதங்களா லுண்டாகுமோ அவ்வளவு பதங்கள் உபசங்காரஞ்செய்யத்தக்கனவாம்.

தேவதத்தனது சௌரியமுதலியவற்றின் திருஷ்டாந்தத்தின் வர்ணனம் இதுவாம்:—எப்படித் தேவதத்தன் என்னும் ஓர் புருஷன் சௌரியமுதலிய குணங்களுடையவனா யிருத்தலால் சுவதேசத்தில் பிரசித்தனாயிருந்து, அவன் வேறு தேசத்தை யடையின் அப்போது அத்தேசவாசிகளாகிய புருஷர்களால் அவனது குணங்கள் நிச்சயிக்கப்படாமையால் அக்குணங்களில்லாதவனைப்போ லாகின்றான். பழக்கமிகுதியால் அங்கு அந்நியதேசத்திலும் தேவதத்தனது குணங்கள் பிரசித்தமாகின்றன. இப்படி வேறு சாகையிலும் எந்த வுபாசியத்தின் குணங்கள் கேட்கப்படுகின்றனவோ அவை அந்நிய சாகையிலு மிருக்கின்றன; குணமுடையது அபேதமாதலால். அதனால் ஒரு பிரஹ்மத்தோடு சம்பந்தமுடைய தர்மங்கள் ஓரிடத்தில் உச்சரிக்கப்படினும், எங்குமே உபசங்காரஞ்செய்யத்தக்கனவாம். இது சூத்திரத்தின் பொருள்.

இவ்வாறு ௪0௬௩-வது சுலோகத்திற்கூறிய விதேயவிசேஷணவடிவ பதங்களும் ௪0௬௭-வது சுலோகத்திற்கூறிய நிஷேத்தியவிசேஷணவடிவ பதங்களும் ஒரே அத்விதீயப்பிரஹ்மத்தின் இலக்ஷகங்களாம்; வேறுவேறு பொருளை யறிவிப்பனவாகா. ஏனெனின்,

अत्र अखंडैकरसः आत्मा आनन्दादिभिः च अस्थूलादिभिः लक्षितः "सः अहं अस्मि" इति एवं उपासते ॥

(௬-ம்.)

இங்கு ஆநந்தாதி அஸ்தூலாதிகுணங்களால் இலக்ஷிதமான அகண்டைகரஸ ஆத்மா எதுவோ "அது நான்" என்றிவ்வாறு உபாசிக்கின்றான்.

---

(க) இப்புருஷன் இன்னான் பிதா; இன்னான் புத்திரன்; இன்னான் பௌத்திரன்; இன்னான் மருமகன்; இன்னான் சகோதரன் என்றல்முதலிய பிதிருத்தன்மை, புத்திரத்தன்மை, பௌத்திரத்தன்மையாதி விசேஷணங்கள் எப்படி ஒரே புருஷனை யறிவிப்பனவாய்ப் பிறனை நிஷேதிப்பனவா யிருக்கின்றனவோ, அவ்வாறே சத்துச் சித்து ஆநந்தமுதலிய பதங்க ளெவையோ, அவை விதிமுகமாக முதலில் சொரூபத்தை யறிவித்துப் பின் பிரபஞ்சத்தின் வியாவிருத்தியாகிய நிஷேதத்தினை அறிவிக்கின்றன.

(உ) இப்புருஷன் குண்டலமுடையவனல்லன், கரியனல்லன், வெள்ளைப்பாகை யுடையவனல்லன் என்பனமுதலிய விசேஷணங்கள் எப்படி அந்நிய புருஷர்களது தர்மங்களை நிஷேதித்து, அவ்வொரு புருஷனையே அறிவிப்பன வாகின்றனவோ, அது போல அத்விதீய அஸ்தூலமுதலிய சப்தங்கள் எவையோ அவை சாக்ஷாத் பிரபஞ்சத்தின் தர்மங்களின் வியாவிருத்தியாகிய நிஷேதத்தினைக் கூறிப் பொருளால் சொரூபத்தை அறிவிக்கின்றன.

ஆதலால் ஒரே வஸ்துவின் இலக்ஷகங்களாம்.

சத்துச் சித்து ஆநந்தமுதலிய பதங்களின் வாச்சியமான சச்சிதாநந்தவடிவப் பிரஹ்மம் விவாதமின்றிச் சித்தித்தலாலும், சத்துமுதலிய வாசகபதங்களாலேயே அசத்துத் தன்மைமுதலிய பிரபஞ்சத்தினின்று வேறுபிரிக்கப்படுதலாலும் இலக்ஷணைக்குப் பிரயோசன மில்லை. ஆதலால் இப்பதங்களுக்கு இலக்ஷகத்தன்மை பொருந்தாது.

அங்ஙனமாயினும், பாரமார்த்திக வியாவகாரிகப் பிராதிபாஸிகவடிவ சத்தின் பேதம் காணப்படுகின்றது. சேதனவடிவஞானத்திற்கும் அநேக புத்திவிருத்திவடிவஞானத்திற்கும் பேதம் காணப்படுகின்றது. பிரிய மோதப் பிரமோதமுதலிய ஆநந்தத்தின் பேதம் தோற்றுகின்றது. இவைமுதலிய எவையெவை வாக்கிற்கும் அதன் வாயிலாக மனதிற்கும் சாக்ஷாத்விஷயமான வஸ்துக்களோ, அவை துவைதத்தின் அபேக்ஷையுடையனவாம். அந்தத் துவைதத்தின் வியாவிருத்தியினால் பாரமார்த்திக சத்தாகிய சேதனவடிவ அகண்டாநந்தாதி ரூபமுடைய பிரஹ்மத்தினைப் போதிக்கும்பொருட்டுச் சத்துமுதலிய சொற்களினும் இலக்ஷணாவிருத்தியினை ஆசிரயித்தல்வேண்டும். இதனாலே சுருதி மனவாக்குகளுக்கு விஷயமாகாத பிரஹ்மத்தினைக் கூறுகின்றது.

சச்சிதாநந்தாதி பதங்களால் இலக்ஷிதமான சத்துமுதலிய தர்மங்கள் ஒன்றற்கொன்று அபின்னமாய் ஒரே பிரஹ்மத்தில் இருந்தால், அவற்றிற்கும் பிரஹ்மத்திற்கும் தர்மதர்மித்தன்மையால் பேதவியவகாரம் பொருந்தாது. என்றாலும் தர்மதர்மித்தன்மையோ அசுவத்தினைப்போல அத்தியந்த பின்னங்கட்கும் அல்லது கடகலசங்களைப் போல அத்தியந்த அபின்னங்கட்கும் சம்பவியாது. ஆனால் பேதம் அபேதம் இரண்டினையும் அபேக்ஷிக்கும் தர்மதர்மித்தன்மைக ளிருக்குமாயின், அவற்றில் சத்துமுதலிய

(வி-ம்.)

இச்சுருதிகளில் யாதொரு அகண்டைகரஸ ஆத்மா ஆநந்தமுதலியனவும் அஸ்தூலமுதலியனவுமாகிய குணங்களால் இலக்ஷணையினால் அறிவிக்கப்பட்டிருக்கின்றதோ, "அது நான்" என்றிவ்வாறு முமுக்ஷுக்கள் உபாசிக்கின்றார்கள். (எ௩)

உ. போதவுபாசனைகளின் பேதத்தைப் பிரசினத்தோடு கூறுதல்.

௧0௩உ-௧0௪௩.

௧. போதவுபாசனைகளின் பேதத்தின் பிரசினபூர்வகமாகப் பேதத்தினைக் கூறுதல்.

[௧0௩உ] बोधोपास्त्योर्विशेषः क इति चेदुच्यते शृणु ।
वस्तुतंत्रो भवेद्बोधः कर्तृतंत्रमुपासनम् ॥ ७४ ॥

(அ-கை.)

அப்படியானால் இப்படியாகவே போதத்திற்கும் உபாசனைக்கும் எதனால் பேதமிருக்கின்றது? என்றாசங்கித்து, வஸ்துவின் அதீனமும் கர்த்தாவின் அதீனமுமா யிருத்தலால் போதத்திற்கும் உபாசனைக்கும் *உ௫. பேதமிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

வற்றிற்கும் பிரஹ்மத்திற்கும் பாரமார்த்திக அபேதம் வாய்த்திருந்தும், அவ்விதமாகப் பேதம் சித்தியாமையால் அது சித்திரதீபத்தின் ௧௫0-வது சுலோகத்திற் கூறிய பெத்தமுக்தநியாயத்தால் கற்பிதபேதத்தினாலும் சந்தோஷத்தை யடையும் என்று கொள்ளப்படுகின்றது.

எப்படி வீட்டில் தூங்கும் புருஷன் சொப்பனத்தில் இராஜமண்டலத்தைப் பார்த்துப் பிரமாணிகபுருஷர்களால் இது துவைதத்தோடுகூடியதா மென்று வியவகாரம் செய்கிறதில்லையோ, அதுபோலக் கற்பிதபேதத்தினால் பிரஹ்மத்தினைத் துவைதத்தோடுகூடியதாகாது என்று வாஸ்தவபேத கற்பித அபேதத்தினால் தர்மதர்மிகளுக்கும் பேதத்தின் வியவகாரம் பொருந்துகின்றது.

இவ்வாறு சத்துத்தன்மை சேதனத்தன்மை ஆநந்தத்தன்மைமுதலிய ஜாதிவடிவ குண(தர்ம)ங்கள் கற்பிதமா யிருத்தலால் அவற்றிற்கு அத்விதீயப்பிரஹ்மத்தினுட்பிரவேசமில்லாமையால் அவற்றால் இலக்ஷிதமான அதாவது பாகத்தியாகலக்ஷணையால் போதிக்கப்பட்ட பிரஹ்மம் நான் என்று உபாசிக்கத்தக்கதாம்.

* உ௫. சுலோகம் ௧0௩உ-௧0௪௫ பரியந்தம் மேல் சொல்லப்படும் பிரகரணமுழுவதற்கும் தாற்பரியம் இதுவாம்:— சாதாரணஞானமாத்திரம் வஸ்துவின் அதீனமாம். அவற்றில் பிரமஞானமோ அயதார்த்தவஸ்துவின் அதீனமாம். பிரமாஞானம் பிரமேய(யதார்த்தவஸ்து) பிரமாணங்களின் அதீனமாம்; விதி, புருஷனது இச்சை, அடம், விசுவாச மென்பவற்றின் அதீன மன்று. எனெனின், வழியிலுள்ள புல் முதலியன அல்லது பாத்திரபதசுத்த (புரட்டாசி சுக்கிலபக்ஷ) சதுர்த்தி சந்திரன்வடிவப் பிரமேயத்திற்குச் சக்ஷு-வடிவப் பிரமாணத்தோடு சம்பந்த முண்டாகவே விதி, புருஷனது

बोधोपास्त्योः कः विशेषः इति चेत् उच्यते । श्रुणु वस्तुतंत्रः बोधः कर्तृतंत्रं उपासनं भवेत् ॥

(சு-ம்.)

போதத்திற்கும் உபாசனைக்கும் பேதம் யாதென்றுகூறின், அப்போது சொல்லப்படுகின்றது ; கேள். வஸ்துவின் அதீனமாய் ஞான மிருக்கின்றது. கர்த்தாவின் அதீனமாய் உபாசனை யிருக்கின்றது. (எச)

இச்சைமுதலியவையின்றியே பிரத்தியக்ஷஞான முண்டாகின்றது. இப்படியே பிரஹ்மத்தின் பிரத்தியக்ஷஞானமும் விதிமுதலியவற்றின் அபேக்ஷையின்றிய பிரத்தியக பின்னப் பிரஹ்மரூபப் பிரமேயத்தினை விஷயஞ்செய்யும் மகாவாக்கியவடிவப் பிரமாணத்தினைக் குருமுகமாகக் கேட்டவிளைவேயே யுண்டாகின்றது.

(க) "ஆத்மா அறியத்தக்கது" என்னும் சுருதிப் பிரேரகமானப் பிரமாணவடிவமாகுதலால் விதி யிருக்கின்றது.

(உ) ஜிஞ்ஞாஸைவடிவ புருஷனது இச்சை யிருக்கின்றது.

(ங) சிரவணாதிகளினது பிரயத்தினத்தின் ஹேதுவாகிய அடம் யிருக்கிறது.

(ச) குரு வேதாந்த வாக்கியங்களில் சிரத்தைவடிவ விசுவாச மிருக்கின்றது.

இச்சாமக்கிரிகள் ஆத்மஞானத்தில் அபேக்ஷிக்கப்படுவனவாம்.

அங்ஙனமாயினும்,

(க) ஆத்மஞானம் பிரமேயப் பிரமாணங்களின்றிப் புருஷனது இச்சையின் அநுசாரமா யுண்டாகக்கூடாததா யிருத்தலாலும், புருஷனது அதீனமாயிருக்கின்ற வஸ்துவில் விதிசம்பவித்தலாலும் இச்சுருதிவாக்கியம் ஆத்மஞானத்தின் விதியின்கண்ணில்லை. ஆனால் புருஷனது பிரவிருத்தியின்பொருட்டு ஆத்மஞானத்தினைச் சம்பாதிக்கத்தக்க யோக்கியதையின் கண்ணதாம்.

(உ) ஜிஞ்ஞாஸைவடிவ இச்சையும் மகாவாக்கியவடிவப் பிரமாணமின்றிப் போதத்தி னுற்பத்தியில் சாமர்த்தியமுடைய தன்று. ஆதலால் கடத்தின் காரணமான குலாலன்முதலியோர்களைப்போல ஞானத்தின் நியமிதகாரண மன்று. ஆனால் குலாலபத்தினிமுதலியோரைப்போல அந்நியதாசித்தமாம்(வேறோர் வகையாற் பெறப்படுவதாம்).

(ங) சிரவணாதிப் பிரயத்தினத்திற்கு ஏதுவாகிய அடத்திற்குச் சிரவணாதிகளின் காரணமாந்தன்மை யுண்டு. ஆனால் மகாவாக்கியசிரவணமின்றி அடமாத்திரத்தால் ஞானத்தின் உற்பத்தியின்மையாலும், ஞானத்தின் உற்பத்திக்குப் பின் க்ஷணமாத்திரத்தினால் அஞ்ஞானம் நாசமாகவே பின் அடத்தினால் ஞானத்தின் ஸ்திதியில் சாஸ்திரத்தின் விதியின்மையாலும் ஞானத்தில் அடம் காரணமாத லில்லை.

(ச) குரு வேதாந்தவாக்கியங்களிற் சிரத்தைவடிவ விசுவாசமும் சிரவணத்தில் உபயோகமுள்ளதாம். ஆனால் ஞானத்தின் காரண மன்று. பரோக்ஷஞானத்தின் காரணம் விசுவாசமாயினும் அபரோக்ஷஞானத்தின் காரணமன்று; ஏனெனின், விசாரமின்றி விசுவாசமாத்திரத்தினால் அபரோக்ஷஞானம் உற்பத்தியாகுதல் காணப்படாமையின்.

இவ்விதத்தால் பிரஹ்மத்தின் ஞானம் பிரமேயப்பிரமாணங்களின் அதீனமாம்.

உபாசனையோ (க) விதி, (உ) கர்த்தாவாகிய புருஷனது இச்சை, (ங) அடம், (ச) விசுவாசம் என்பவற்றின் அதீனமாம் ; ஏனெனின்,

(க) சாஸ்திரவிதியை யநுசரித்து எந்த உபாசனை செய்யப்படுகிறதோ, அது சாஸ்திரத்திற் சொல்லியபடி பயனைத் தருகின்றது. விதியின்றித் தனது மனதினால் கற்பிக்கப்படும் உபாசனை பலத்திற் கேதுவாகாது. ஆதலால் உபாசனையிற்றான் விதியின் அபேக்ஷை யுண்டு.

(உ) புருஷனது இச்சை யிருக்குமாயின் இருக்கும். இச்சை யில்லையாயின் இராது. வேறுவிதமாகச் செய்ய இச்சை யிருக்குமாயின் அவ்விதமாகவும் உபாசனை யுண்டாகும். ஆதலால் உபாசனையில் புருஷனது இச்சையின் அபேக்ஷை யுண்டு.

உ. உபாசனையினும் ஞானம் வேறென்பது சித்திக்கும்பொருட்டு ஞானத்தின் ஏது, சொரூபம், பல மென்பவற்றைக் கூறுதல்.

[கOருரு] विचाराज्जायते बोधोऽनिच्छा यं न निवर्तयेत् ।
स्वोत्पत्तिमात्रात्संसारे दहत्यखिलसत्यताम् ॥ ७५ ॥

(அ-கை.)

ஞானத்திற்கும் உபாசனைக்கும் வேறு விலக்ஷணத்தன்மை சித்தித்தற் பொருட்டு ஞானத்தின் ஏதுமுதலியவற்றை இரண்டு சுலோகங்களால் காட்டுகின்றார்:—

विचारात् बोधः जायते । यं अनिच्छा न निवर्तयेत् । स्वोत्पत्तिमात्रात् संसारे अखिलसत्यतां दहति ॥

(சு-ம்.)

விசாரத்தினால் போத முண்டாகின்றது. உண்டாகிய போதத்தினை அநிச்சை நிவாரணஞ் செய்யமாட்டாது. அந்த ஞானம் தனது உற்பத்தி மாத்திரத்தினால் சம்சாரத்தில் எல்லாவற்றின் சத்தியத்தன்மையினையும் தகிக்கின்றது.

(வி-ம்.)

வஸ்துவின் சொரூபத்தை விசாரித்தலால் போத முண்டாகின்றது. அன்றியும், விசாரத்தினலாம் எந்தப் போதத்தை "ஞானம் எனக்கு உண்டாகவேண்டாம்." என்னும் ரூபமுடைய அநிச்சை நிவர்த்திக்கமாட்டாது. உண்டாகிய போதம் தனது பிறப்புமாத்திரத்தினால் சம்சாரத்தின் சகலப் பிரபஞ்சத்தினது சத்தியத்தன்மையினையும் நாசஞ் செய்கின்றது. (எ)

[கOருசு] तावता कृतकृत्यः सन्नित्यतृप्तिमुपागतः ।
जीवन्मुक्तिमनुप्राप्य प्रारब्धक्षयमीक्षते ॥ ७६ ॥

---

(ரு) வெளிமுகப்பட்ட மனதை அடத்தினாலேயே உபாசியத்தின் ஆகாரமாக்கல் உண்டாகின்றது. ஆதலால் அடமும் வேண்டியதாம்.

(சு) "இச்சாளிக்கிராமம் விஷ்ணு." "இந்நர்மதேசுவரர் சங்கரன்." என்றிவ்வாறு சாஸ்திரங்களில் எழுதப்பட்டிருக்கிறது. அங்கு விசாரித்துப் பார்க்குமிடத்து விஷ்ணுவின் நாற்புயமுதலிய குறிகள் சாளிக்கிராமத்தில் இல்லை. சிவனது திரிநேத்திராதி குறிகள் நர்மதேசுவரரிடத்தில்லை. ஆனால் அச்சாஸ்திர வாக்கியத்தில் விசுவாசம் செய்து விஷ்ணுவடிவமாகவாவது சிவரூபமாகவாவது அவற்றின் சிந்தனை செய்யப்படுகின்றது. ஆகையால் விசுவாசத்தின் அபேக்ஷயு மிருக்கின்றது. இவ்விதமாக உபாசனை கர்த்தா முதலியோரது அதீனமாம். இது ஞானத்திற்கும் உபாசனைக்கும் பேதமாம்.

(அ-கை.)

இதுவுமது:—

तावता कृतकृत्यः सन् नित्यतृप्तिं उपागतः जीवन्मुक्तिं अनुप्राप्य प्रारब्धक्षयं ईक्षते ॥

(சு-ம்.)

அவ்வளவில் (தத்துவஞானோற்பத்தி மாத்திரத்தினால்) புருடன் கிருத கிருத்தியனாய் நித்தியத்திருப்தியை அதாவது நிரதிசயசுகத்தைப் பெற்று ஜீவன்முக்தியையடைந்து பிராரப்தக்ஷயத்தை நோக்குகின்றான். (எசு)

௬. ஞானத்தினும் வேறு விலக்ஷணத்தன்மையின் பொருட்டு உபாசனையின் சொரூபம்.

[௧0௬௭] आप्तोपदेशं विश्वस्य श्रद्धालुरविचारयन् ।
चिंतयेत्प्रत्ययैरन्यैरनंतरितवृत्तिभिः ॥ ७७ ॥

(அ-கை.)

உபாசனையைவிட ஞானத்திற்குள்ள வேறு விலக்ஷணத்தன்மை சித்தித்தற்பொருட்டு அந்த உபாசனையைக் காட்டுகின்றார்:—

श्रद्धालुः आप्तोपदेशं विश्वस्य अविचारयन् अन्यैः प्रत्ययैः अनंतरितवृत्तिभिः चिन्तयेत् ॥

(சு-ம்.)

சிரத்தையுடையவன் ஆப்தோபதேசத்தை விசுவசித்து விசாரஞ் செய்யாதவனாய் வேறு பிரத்தியயமாகிய மறைக்கப்படாத விருத்திகளால் சிந்திக்கவேண்டும்.

(வி-ம்.)

ஆப்தராகிய குருவின் உபாசியத்தினது சொரூபத்தினைப் பிரதிபாதிக்கும் வாக்கியத்தின் சமூகவடிவ உபதேசத்தினை விசுவசித்து, விசாரியாது உபாசியத்தன்மையை வேறு விஜாதீய கடாதிகளை விஷயஞ்செய்யும் விருத்திகளால் மறைப்பின்றிய விருத்திகளால் சிந்திக்கவேண்டும். (எஎ)

௭. உதாரணத்தோடு உபாசனையின் அவதி.

[௧0௬௮] यावच्चिंत्यस्वरूपत्वाभिमानः स्वस्य जायते ।
तावद्विचिंत्य पश्चाच्च तथैवामृति धारयेत् ॥ ७८ ॥

(அ-கை.)

எவ்வளவு காலம்வரையிலும் சிந்திக்கவேண்டுமென்று ஆசங்கித்துக் கூறுகின்றார் :—

यावत् चिंत्यस्वरूपत्वाभिमानः स्वस्य जायते तावत् विचिंत्य पश्चात् च तथा एव आमृति धारयेत् ॥

(சு-ம்.)

எதுவரையில் உபாசியவஸ்துவினது சொரூபத்தன்மையின் அபிமானம் தனக்குண்டாகின்றதோ, அதுவரையில் சிந்தனைசெய்து, பின் அப்படியே மரணபரியந்தம் தாரணஞ்செய்யவேண்டும். (எஅ)

[௪0௬எ] ब्रह्मचारी भिक्षमाणो युतः संवर्गविद्यया ।
संवर्गरूपतां चित्ते धारयित्वा ह्यभिक्षत ॥ ७९ ॥

(அ-கை.)

உபாசிப்பவனது அவ்வுபாசியவடிவத்தன்மையின் அபிமானத்தை உதாரணத்தைக் காட்டுதலால் விளக்குகின்றார்:—

संवर्गविद्यया युतः ब्रह्मचारी भिक्षमाणः संवर्गरूपतां चित्ते धारयित्वा हि अभिक्षत ॥

(சு-ம்.)

ஓர் சம்வர்க்கவித்தையோடுகூடிய பிரஹ்மசாரி பிச்சைவாங்குகிறவரானார். அவர் சம்வர்க்கவடிவத்தன்மையைச் சித்தத்திற் கொண்டு பிச்சை வாங்கினார்.

(வி-ம்.)

* உசு. சம்வர்க்கத்தன்மைவடிவ குணத்தோடுகூடிய பிராணனை யுபாசிக்கும் ஓர் பிரஹ்மசாரி யிருந்தார். அவர் பிச்சைவாங்கும்பொருட்டு வந்து அபிப்பிரதாரி யென்னும் இராஜன்முன் "அபிப்பிரதாரி ராஜனே! ஓர் தேவன் இருக்கின்றான். அவன் வாயுமுதலிய நான்கு மகாத்மாக் (பெரி

* உசு. அக்கினி, சூரியன், சந்திரன், ஜலம் என்னும் இந்த மகாபலமுடைய நான்கையும் வாயு அதிதேவ (சமஷ்டி) வடிவத்தால் தன்னிடத்தில் சம்வர்ஜனம் (பிரளயகாலத்தில் விலயம்) செய்கின்றான். அதனால் வாயு சம்வர்க்கம் (சம்வர்க்கத்தன்மை வடிவகுணமுடையவன்) எனப்படுகின்றான். வாக்கு, சக்ஷு, சுரோத்திரம், மனமென்னும் இந்நான்கையும் எதனால் வாயு அத்தியாத்ம(வியஷ்டிப்பிராண)வடிவத்தால் விழுங்குகின்றதோ அதாவது சுழுத்திகாலத்தில் தன்னிடத்து ஒடுக்குகின்றதோ, அதனாலும் வாயு சம்வர்க்கமெனப்படுகின்றது.

யோர்)களையும் விழுங்குகிறான். புவனத்தின் இரக்ஷகனாகின்றான். காபேயரே! வெகுவிதமாக வசிக்கின்றான். அவனை மனிதர் அறியார்." என்னும் மந்திரத்தினால் சித்தத்தின்கண் தரித்துத் தனது பிராணவடிவத்தன்மையை வெளிப்படுத்தினான். இப்படிச் சாந்தோக்கியத்தில் நான்காவது அத்தியாயத்தின் மூன்றாவது கண்டத்திலுள்ள சம்வர்க்கவித்தையின் பிரகரணத்தில் கேட்கப்படுகின்றது * ௨௭. என்பது பொருள். (௭௯)

இ. சுலோகம் ௧௦௯-ல் கூறிய ஞானத்தின் தர்மத்தைவிட உபாசனை வேறாதல்.

[௧௦௯-அ] पुरुषस्येच्छया कर्तुमकर्तुं कर्तुमन्यथा ।
शक्योपास्तिरतो नित्यं कुर्यात्प्रययसंततिम् ॥ ८० ॥

(அ-கை.)

மரணபரியந்தம் தரித்தலில் நிமித்தத்தினைக் காட்டுகின்றவராய் "அந்தப் போதத்தினை அநிச்சை நிவாரணஞ்செய்யாது." என்னும் ௧௦௯-வது சுலோகத்திற் கூறிய போதத்தின் தர்மத்தைவிட உபாசனை விலக்ஷணமென்பதைக் கூறுகின்றார்:—

---

* ௨௭. சாந்தோக்கியத்தின் நான்காவது அத்தியாயத்தில் மூன்றாவது கண்டத்தில் இக்கதை யிருக்கின்றது:—ஒரு சுனகனென்னும் ராஜாவின் புத்திரன் சௌனகனென்னும் பெயருடைய காபேயன் அதாவது கபிகோத்திரத்தில் பிறந்த அரசன் இருந்தான். அன்றியும் கக்ஷசேனனென்னும் இராஜாவினது புத்திரன் காக்ஷசேனி அபிப்பிரதாரி யென்னும் பெயருடைய மற்றோர் அரசனிருந்தான். அவ்விருவரும் போஜனஞ்செய்தற்பொருட்டு உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுக்கு அன்னம் பரிமாறிக்கொண்டிருந்தார்கள். அப்போது பிரஹ்மவித்துத்தன்மையின் அபிமானமுள்ள ஓர் பிரஹ்மசாரி பிச்சை கேட்டான். அந்தப் பிரஹ்மசாரியின் பிரஹ்மவித்துத்தன்மை யபிமானமுடைமையை அறிந்து, அதனை யறிய விருப்புள்ளவர்களாய் அவ்விரண்டரசர்களும் இப்பிரஹ்மசாரி என்ன சொல்லுவான்? கேட்போமென்னும் அபிப்பிராயத்தினால் அவனுக்குப் பிச்சை கொடுக்கவில்லை. அப்போது அந்தப் பிரஹ்மசாரி "ஒரு (வாயுவும் பிராணனுமாகிய) தேவன் பிரஜையின் பதியாவன். அவன் மகா பலமுடைய அக்கினிமுதலிய மகாத்மாக்களையும் வாக்குமுதலிய நான்கனையும் விழுங்குகிறான் அதாவது தன்கண் ஒடுக்கிக்கொள்ளுகிறான். புவனங்களையும் அதாவது பிருதிவியாதி சகல லோகங்களையும் இரக்ஷிப்பவனா யிருக்கின்றான். காபேயரே! காபிகோத்திரத்திலுண்டானவரே! அபிப்பிரதாரியே! அத்தியாத்ம அதிதேவ அதிபூதத்தன்மைகளால் வாசஞ்செய்யும் அந்தப் பிரஜாபதியினை மர்த்தியர் அதாவது மரணதர்மமுடையவர்கள் அல்லது அவிவேகிகளாகிய மனிதர் காணார்கள். எதன்பொருட்டு நாடோறும் பக்ஷணஞ்செய்ய இவ்வன்னம் ஆக்கப்படுகின்றதோ, அந்தப் பிராணவடிவப் பிரஜாபதிக்கு இவ்வன்னத்தினை நீங்கள் கொடுக்கவில்லை." என்று சொல்லத்தொடங்கினான். இவைமுதலியன இப்பிரசங்கமாம். இவ்வாறு அந்தப்பிரஹ்மசாரி தனது உபாசியமான பிராணனது சொரூபத்தைத் தன்னோடு அபேதமாக அபிமானித்துப் பிச்சை கேட்டான். ஆதலால் உபாசியவஸ்துவினைத் தனது சொரூபமாக அபிமானித்தல் உபாசனைக்கு அவதியாம். இவ்வர்த்தம் பிரசங்கத்தால் அறிவிக்கப்பட்டது.

उपास्तिः पुरुषस्य इच्छया कर्तुं अकर्तुं अन्यथाकर्तुं शक्या । अतः प्रत्यय-संततिं नित्यं कुर्यात् ॥

(சு-ம்.)

உபாசனை புருஷனது இச்சையினால் செய்தற்கும் செய்யாமைக்கும் வேறுவகையாய்ச் செய்தற்கும் முடிந்ததாம். ஆதலால் விருத்திகளின் சந்ததியை அதாவது பிரவாகவடிவ உபாசனையைத் தினமும் செய்யவேண்டும்.

(வி-ம்.)

உபாசனை எதுவோ அது உபாசகனாகிய புருஷனது இச்சையினால் செய்யவும், செய்யாதிருத்தற்கும்; வேறுவகையாகச் செய்யவும் கூடியதாம். ஆதலால் புருஷனது இச்சையின் அதீனமாயிருத்தலால் உபாசனையை எப்போதும் செய்யவேண்டும் என்பது பொருள். (அ0)

க. எப்போதும் சிந்தித்தலின் பயன்.

[௪0ரு.க] वेदाध्यायी ह्यप्रमत्तोऽधीते स्वप्नेऽभिवासितः ।
जपिता तु जपत्येव तथा ध्यातापि वासयेत् ॥ ८१ ॥

(அ-கை.)

இவ்வாறு எப்போதும் சிந்திக்கவே என்ன உண்டாகுமென்னுமிடத்துக் கூறுகின்றார் :—

अप्रमत्तः वेदाध्यायी जपिता अभिवासितः तु स्वप्ने हि अधीते जपति एव, तथा ध्याता अपि वासयेत् ॥

(சு-ம்.)

எப்படிப் பிரமாதமின்றிய (சாவதானமுள்ள) வேதாத்தியாயி (வேதமோதுவோன்) வாசனையோடுகூடியவனாய்ச் சொப்பனத்தில் அத்தியயனத்தினைச் செய்கின்றானோ, ஜபஞ்செய்யும் ஒருவன் வாசனையோடுகூடியவனாய்ச் சொப்பனத்தில் ஜபஞ்செய்துகொண்டேயிருக்கிறானோ, அதுபோலத் தியானஞ்செய்யும் புருஷனும் வாசனையைச் செய்க.

(வி-ம்.)

பிரமாதமின்றிய வேதாத்தியாயி அல்லது ஜபஞ்செய்வோன் அத்தியயனத்தின் அல்லது ஜபத்தின் சம்ஸ்காரமாகிய வாசனையோடுகூடியவனாய்த் திடவாசனையினால் சொப்பனமுதலியவற்றில் அத்தியயனத்தையாவது ஜபத்தையாவது செய்கிறான். இவ்வாறே உபாசகனாகிய புருஷனும் வாசனையின் திடத்தன்மையினால் சொப்பனமுதலியவற்றிலும் தியானத்தைச் செய்வானென்பது பொருள். (அக)

எ. சுலோகம் கOசுக-ல் கூறிய உபாசனையின் பலத்தில் எது.

[கOசுO] विरोधिप्रत्ययं त्यक्त्वा नैरंतर्येण भावयन् ।
लभते वासनावेशात्स्वप्नादावपि भावनाम् ॥ ८२ ॥

(அ-கை.)

சொப்பனமுதலியவற்றிலும் தியானம் பின்னிருத்தற்குக் காரணத்தினைக் கூறுகின்றார் :—

विरोधिप्रत्ययं त्यक्त्वा नैरंतर्येण भावयन् वासनावेशात् स्वप्नादौ अपि भावनां लभते ॥

(சு-ம.)

உபாசியத்திலும் பின்னமான வஸ்துவின் வடிவமுடைய விருத்தியாகிய விரோதிப்பிரத்தியயத்தினை விட்டு இடைவிடாத்தன்மையால் பாவனை செய்து, அதனால் வாசனை பிரவேசித்தலால் அதாவது சம்ஸ்காரம் திடமாதலால் சொப்பனமுதலியவற்றிலும் பாவனையை யடைகிறான்.

(வி-ம்.)

வாசனையின் நுழைவால் அதாவது சம்ஸ்காரத்தின் திடத்தன்மையால் பாவனையாகிய தியானத்தை யடைகிறான் என்பது பொருள். (அஉ)

அ. கர்மவசத்தால் விஷயத்தின் அநுபவத்தோடு உபாசிப்பவனுக்கு நிரந்தர பாவனை சித்தித்தலைத் திருஷ்டாந்தத்தோடு கூறுதல்.

[கOசுக] भुंजानोऽपि निजारब्धमास्थातिशयतोऽनिशम् ।
ध्यातुं शक्तो न संदेहो विषयव्यसनी यथा ॥ ८३ ॥

(அ-கை.)

அப்படியானால் பிராரப்தகர்மத்தின் வசத்தால் விஷயங்களை யநுபவிக்கும் புருஷனுக்கு நிரந்தரமாகத் தியானித்தல் எப்படிச் சித்திக்குமென்றாசங்கித்து, ஆசையாகிய பிரீதியின் மிகுதிப்பாட்டால் விஷயத்தின் வியசனமுடைய ஸ்திரீயினைப்போலப் பாவனை சித்திக்குமென்று கூறுகின்றார்:-

निजारब्धं भुंजानः अपि आस्थातिशयतः अनिशं ध्यातुं शक्तः संदेहः न यथा विषयव्यसनी ॥

(சு-ம்.)

தனது பிராரப்தத்தை அநுபவிக்கின்றவனாயிருந்தும், புருஷன் ஆசைமிகுதியால் நிரந்தரம் தியானஞ்செய்யச் சமர்த்தனாகின்றான். இதிற் சந்தேகமில்லை; விஷயவியசனமுடைய ஸ்திரீயினைப்போல. (அங)

௯. சுலோகம் ௧௦௪௨-ல் கூறிய திருஷ்டாந்தத்தின் விவரணம்.

[௧௦௪௨] परव्यसनिनी नारी व्यग्राऽपि गृहकर्मणि ।
तदेवास्वादयत्यंतः परसंगरसायनम् ॥ ८४ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்தினை விரிக்கின்றார் :—

परव्यसनिनी नारी गृहकर्मणि व्यग्रा अपि अंतः तत् एव परसंगरसायनं आस्वादयति ॥

(சு-ம்.)

பரபுருஷர்களது வியசனமுடைய நாரியானவள் வீட்டுக்காரியங்களில் பிரவர்த்தித்தவளாயினும் உள்ளே அப்பரபுருஷனது சங்கமாகிய இரசாயனத்தையே நுகர்கின்றாள். (௮௪)

[௧௦௪௩] परसंगं स्वादयंत्या अपि नो गृहकर्म तत् ।
कुंठीभवेदपि त्वेतदापातेनैव वर्तते ॥ ८५ ॥

(அ-கை.)

அப்படியானால் பரபுருஷனது சங்கத்தின் நுகர்ச்சியில் வீட்டுக்காரியத்திற்குக் கேடுண்டாகுமேயென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

परसंगं स्वादयंत्या अपि तत् गृहकर्म नो कुण्ठीभवेत् अपि तु एतत् आपातेन एव वर्तते ॥

(சு-ம்.)

பரசங்கத்தினை நுகரும் அந்த ஸ்திரீக்கும் அந்த வீட்டுக்காரியம் கெடுகிறதில்லை. ஆனால் இவ்வீட்டுக்காரியம் உதாசீனமாகவே அதாவது விருப்புவெறுப்பின்றியே நிகழ்கின்றது. (௮௫)

௪. ஞானி உபாசகர்களின் விலக்ஷணத்தன்மையோடு ஞானத்தின் பிறசாதனங்களைவிட மேலான நிர்க்குணவுபாசனையின் பலம் ௧௦௪௪-௧௧௧௯.

௧. உபாசகனைவிட ஞானிக்கு வியவகாரத்தால் விலக்ஷணத்தன்மையுண்டெனல் ௧௦௪௪-௧௦௭௩.

௧. சுலோகம் ௧௦௪௩-ல் கூறிய திருஷ்டாந்தத்தினது அம்சத்தினை வர்ணித்தலும் ஞானியின் வியவகாரத்தில் அநுகூலதிருஷ்டாந்தமும்.

[௧௦௪௪] गृहकृत्यव्यसनिनी तथा सम्यक्करोति तत् ।
परव्यसनिनी तद्वन्न करोत्येव सर्वथा ॥ ८६ ॥

(அ-கை.)

"உதாசீனமாகவே நிகழ்கின்றது." என்னும் ௧௦௭௩-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினை வர்ணிக்கின்றார் :—

यथा गृहकृत्यव्यसनिनी तत् संयक् करोति । तद्वत् परव्यसनिनी सर्वथा न करोति एव ॥

(சு-ம்.)

எப்படி வீட்டுக்காரியத்தின் வியசனமுடைய ஸ்திரீ அந்த வீட்டுக்காரியத்தினைச் செவ்வையாய்ச் செய்கின்றாளோ, அதுபோலப் பிறனை நயந்த ஸ்திரீ முற்றும் செய்கிறதில்லை. ஆதலால் அவள் உதாசீனத்தன்மையினைச் செய்யவே செய்கின்றாள். (அசு)

உ. தார்ஷ்டாந்தத்தினைக் கூறுதல்.

[௧௦௭௫] एवं ध्यानैकनिष्ठोऽपि लेशाल्लौकिकमाचरेत् ।
तत्त्ववित्त्वविरोधित्वाल्लौकिकं सम्यगाचरेत् ॥ ८७ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்தினாற் சித்தித்தபொருளைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துகின்றார் :—

एवं ध्यानैकनिष्ठः अपि लेशात् लौकिकं आचरेत् ॥

(சு-ம்.)

இவ்வாறு தியானமொன்றிலேயே நிலைத்துள்ள புருஷனும் இலேசாக சௌசம், ஆகாரமுதலியவடிவ இலௌகிகத்தை ஆசரிக்கிறான்.

(அ-கை.)

அப்படியானால் தத்துவவித்தும் இலௌகிகவியவகாரத்தினை என்ன இலேசாக ஆசரிக்கின்றானா? அல்லது செவ்வையாக ஆசரிக்கின்றானா? என்றாசங்கித்துச் சப்தமுதலிய வியவகாரம் தத்துவஞானத்திற்கு விரோதமில்லாததா யிருத்தலால் செவ்வையாகவே ஆசரிக்கின்றான் என்று கூறுகின்றார் :—

तत्त्ववित् तु अविरोधित्वात् लौकिकं संयक् आचरेत् ॥

(சு-ம்.)

தத்துவஞானியோ அவிரோதியா யிருத்தலால் இலௌகிகத்தைச் செவ்வையாய் ஆசரிக்கின்றான். (அஎ)

கூ. சுலோகம் ௧௦௪௫-ல் கூறிய விரோதமின்மையைக் காட்டல்.

[௧௦௪௬] मायामयः प्रपंचोऽयमात्मा चैतन्यरूपधृक् ।
इति बोधे विरोधः को लौकिकव्यवहारिणः ॥ ८८ ॥

(அ-கை.)

இலௌகிகவியவகாரத்திற்கும் தத்துவஞானத்திற்கும் விரோதமின்மையையே காட்டுகின்றார் :—

"अयं प्रपंचः मायामयः आत्मा चैतन्यरूपधृक्" इति बोधे लौकिकव्यवहारिणः कः विरोधः ॥

(சு-ம்.)

"இத்தோற்றுகின்ற பிரபஞ்சம் மாயாமயமாய் அதாவது மித்தியா வடிவமாயிருக்கின்றது. ஆத்மா சைதன்னியவடிவத்தைத் தரித்திருக்கின்றது." என்னும் போதமுளதாகவே இலௌகிகவியவகாரஞ்செய்யும் ஞானிகட்கு விரோதம் யாது? யாதுமில்லை. (அஅ)

ச. சுலோகம் ௧௦௪௬-ல் கூறிய விரோதமின்மையை விரித்தல்.

[௧௦௪௭] अपेक्षते व्यवहृतिर्न प्रपंचस्य वस्तुताम् ।
नाप्यात्मजाड्यं किं त्वेषा साधनान्येव कांक्षति ॥ ८९ ॥

(அ-கை.)

சுலோகம் ௧௦௪௬-ல் கூறிய விரோதமின்மையினையே விஸ்தாரமாகக் கூறுகின்றார் :—

व्यवहृतिः प्रपंचस्य वस्तुतां न अपेक्षते आत्मजाड्यं अपि न किंतु एषा साधनानि एव कांक्षति ॥

(சு-ம்.)

வியவகாரமானது பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையை அபேக்ஷிக்கிறதில்லை. ஆத்மாவின் ஜடத்தன்மையையும் அபேக்ஷிக்கிறதில்லை. ஆனால் இவ்வியவகாரம் சாதனத்தினையே அதாவது சாமக்கிரியினையே அபேக்ஷிக்கின்றது. (அகூ)

இ. தத்துவவித்தினால் மனமுதலியன கெடாமையினால் வியவகாரம் சம்பவித்தல்.

[௧௦௪௮] मनोवाक्कायतद्बाह्यपदार्थाः साधनानि तान् ।
तत्त्वविन्नोपमृद्नाति व्यवहारोऽस्य नो कुतः ॥ ९० ॥

(அ-கை.)

அவ்வியவகாரத்தின் சாதனங்கள் எவையெனக் கூறுகின்றார் :—

मनोवाक्कायतद्बाह्यपदार्थाः साधनानि तान् तत्त्ववित् न उपमृद्नाति अस्य व्यवहारः कुतः नो ॥

(சு-ம்.)

மனோவாக்குக்காயங்களும் அவற்றினும் வெளிப்பதார்த்தங்களும் வியவகாரத்திற்குச் சாதனங்களாம். அவற்றினைத் தத்துவஞானி கெடுக்கிறதில்லை. ஆதலால் இவன்வியவகாரம் எதனு லுண்டாகாது ?

(வி-ம்.)

அவற்றினும் வெளிப்பதார்த்தங்க ளென்றால் கிரகக்ஷேத்திராதிகளாம். அவை வியவகாரத்தின் சாதனங்களாம். அவற்றினை அதாவது மனமுதலியவற்றினைத் தத்துவமுணர்ந்தவன் கெடுக்கிறதில்லை அதாவது சொரூபமாகக் கெடுக்கிறதில்லை. ஆதலால் இந்த ஞானிக்கு ஏன் வியவகார முண்டாகாது ? உண்டாகவே செய்யு மென்பது பொருள். (கூ0)

கூ. சித்தத்தினைத் தடுப்பவன் தத்துவஞானியாகாமை.

[கூ0சகூ] उपमृद्नाति चित्तं चेद्ध्यातासौ न तु तत्त्ववित् ।
बुद्धिमर्दयन्दृष्टो घटतत्त्वस्य वेदिता ॥ ९१ ॥

(அ-கை.)

அப்படியானால் விஷயங்களை நாசஞ்செய்யாவிடினும், தத்துவஞானியினால் சித்தம் தடுக்கப்படுதல் தகுதியாமேயென் றாசங்கித்து, அவ்வாறு சித்தத்தினை நிரோதஞ்செய்யின் அவன் தத்துவஞானியே யாகான் என்று கூறுகின்றார் :—

चित्तं उपमृद्नाति चेत् । असौ ध्याता तत्त्ववित् तु न ॥

(சு-ம்.)

எப்போது சித்தத்தினைத் தடுக்கின்றானோ அப்போது இப்புருஷன் தியானிப்பவ னாகின்றான் ; தத்துவஞானி யல்லன்.

(அ-கை.)

அப்படியானால் தத்துவஞானியினால் சித்தத்தின் நிரோதஞ்செய்யப் படுகிறதில்லை யென்பதனை எங்கே கண்டீர்களென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

घटतत्त्वस्य वेदिता बुद्धिं अर्दयन् न दृष्टः ॥

(சு-ம்.)

கடத்தின் தத்துவத்தினையுணர்ந்த புருஷன் புத்தியைப் பீடிப்பதாகக் காணவில்லை.

(வி-ம்.)

கடத்தின் சொரூபத்தினை யுணரும் எப்புருஷனும் புத்தியைத் தடுப்ப தாகக் கண்டோமில்லை யென்பது பொருள். (௯௧)

எ, மிகத்தெளிவான பிரஹ்மத்தின் ஞானத்தில் சித்தநிரோதத்தினது அபேக்ஷயின்மை.

[௯௦௫] सकृत्प्रत्ययमात्रेण घटश्चेद्भासते सदा ।
स्वप्रकाशोऽयमात्मा किं घटवच्च न भासते ॥ ९२ ॥

(அ-கை.)

அப்படியானல் கடம் ஸ்தூலத்தன்மையால் விளக்கமாயிருத்தலின், அதனைக் காணுதலில் சித்தத்தினைப் பீடித்தலாகிய நிரோதம் அபேக்ஷிக்கப் படுவ தன்று. பிரஹ்மமோ அவ்வாறு விளக்கமுடையதா யின்மையின், அதனை யறிதலில் அந்தச் சித்தத்தைப் பீடித்தலானது அபேக்ஷிக்கப்படு வதா மென்றாசங்கித்து, அந்தப் பிரஹ்மம் பிரகாசவடிவமா யிருத்தலால் கடத்தினும் மிக விளக்கமுடையதா யிருத்தலால் அதனை யறிதலில் சித்தத் தினை நிரோதித்தல் அபேக்ஷிக்கப்படுவதன் றென்று கூறுகின்றார் :—

सकृत् प्रत्ययमात्रेण घटः सदा भासते चेत् । स्वप्रकाशः अयं आत्मा किं घटवत् च न भासते ॥

(சு-ம்.)

ஒருமுறை அறிதல்மாத்திரத்தில் கடம் எப்போதும் விளங்குமாயின், அப்போது சொப்பிரகாசவடிவ இவ்வாத்மா கடத்தினைப்போல எப்போ தும் ஏன் விளங்காது ? விளங்கவே செய்யும். (௯௨)

அ. ஞானிக்கு மறுபடியும் மறுபடியும் பிரஹ்மத்தில் நிலைத்தலினது அபேக்ஷயின் சங்கையும், கடாதிகளில் அதன் அதிப்பிரசங்கமும்.

[௯௦௬] स्वप्रकाशतया किं ते तद्बुद्धिस्तत्त्ववेदनम् ।
बुद्धिश्च क्षणनाश्येति चोद्यं तुल्यं घटादिषु ॥ ९३ ॥

(அ-கை.)

அப்படியானல் பிரஹ்மத்திற்குச் சொப்பிரகாசத்தன்மை யிருக்கினும், அதனை விஷயஞ்செய்யும் "अहं ब्रह्मास्मि நான் பிரஹ்மம்" என்னும் வடிவின

தாகிய புத்திவிருத்தியே தத்துவஞானமாதலாலும் அந்தப் புத்திவிருத்தி க்ஷணிகமா யிருத்தலாலும் அதனைப் பிரஹ்மத்தில் அடிக்கடி நிலைக்கச் செய்வது வேண்டியதாமென் றாசங்கித்து, இந்தப் பிரசினம் கடமுதலிய வற்றிலும் சமானமாம் என்று கூறுகின்றார் :—

स्वप्रकाशतया ते किं । तद्बुद्धिः तत्त्ववेदनं च बुद्धिः क्षणनाश्या इति चोद्यं घटादिषु तुल्यं ॥

(சு-ம்.)

சித்தாந்தி! பிரஹ்மத்தின் சொப்பிரகாசத்தன்மையில் உனக்கு என்ன ஞான முண்டாகின்றது? ஆனால் அந்தப் பிரஹ்மத்தின் புத்தியே தத்துவஞானமாம். அந்தப் புத்தி கணத்தில் அழியத்தக்கதா மென்று கூறின், வாதியே! இவ்வினு கடமுதலியவற்றிலும் சமமாம். (கூ௩)

க. கடாதிகளில் சித்தத்தின் ஸ்திரத்தன்மையின் அபேக்ஷயின்மையினது சங்கையும் அது பிரஹ்மத்திலும் சமமா மென்னும் சமாதானமும்.

[கOகு௨] घटादौ निश्चिते बुद्धिर्नश्यत्येव यदा घटः ।
इष्टः नेतुं तदा शक्य इति चेत्सममात्मनि ॥ ९४ ॥

(அ-கை.)

கடாதிகளின்ஞானம் க்ஷணிகமாயினும் ஒருமுறை நிச்சயிக்கப்பட்ட கடம் எப்போதும் வியவகரிக்கக்கூடியதா யிருத்தலால், அந்தக் கடத்தில் சித்தத்தின் ஸ்திரத்தன்மையைச் சம்பாதித்தல் நிஷ்பிரயோஜனமாமென் றாசங்கித்து, இச்சமாதானம் ஆத்மாவிலும் சமானமா மென்று கூறுகின் றார் :—

घटादौ निश्चिते यदा बुद्धिः नश्यति एव । तदा इष्टः घटः नेतुं शक्यः इति चेत् । आत्मनि समम् ॥

(சு-ம்.)

கடாதிகளின் நிச்சயஞ்செய்யவே எப்போது புத்தியாகிய கடாகார விருத்தி நாசமாகின்றதோ, அப்போதும் விரும்பப்பட்ட கடம் வேறிடத் திற்குக் கொண்டுபோகக்கூடியதா மென்று கூறின், அது ஆத்மாவினிடத் தும் சமானமாம். (கூச)

[கOகு௩] निश्चित्य सकृदात्मानं यदाऽपेक्षा तदैव तम् ।
वक्तुं मन्तुं तथा ध्यातुं शक्नोत्येव हि तत्त्ववित् ॥ ९५ ॥

(அ-கை.)

"அது ஆத்மாவினிடத்தும் சமானமாம்" என்று ௩0௫உ-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினை வர்ணிக்கின்றார் :—

हि तत्त्ववित् सकृत् आत्मानं निश्चित्य यदा अपेक्षा । तदा एव तं वक्तुं मन्तुं तथा ध्यातुं शक्नोति एव ॥

(சு-ம்.)

எதனால் தத்துவஞானியாகிய புருஷன் ஒருமுறை ஆத்மாவை நிச்சயஞ்செய்து பின் எப்போது இச்சையுண்டாகிறதோ, அப்போதே அவ்வாத்மாவைச் சொல்லுதற்காவது மனனஞ்செய்யவாவது அவ்வாறே தியானஞ்செய்யவாவது சமர்த்தனாகின்றான். (கூ௫)

௧0. ஓர் தத்துவஞானிக்குத் தோற்றுகின்ற வியவகாரம் மறத்தற்காகத் தியானஞ்செய்யவேண்டியதா மெனல்.

[௩0௫௪] उपासक इव ध्यायँल्लौकिकं विस्मरेद् यदि ।
विस्मरत्येव सा ध्यानाद् विस्मृतिर्न तु वेदनात् ॥ ९६ ॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவஞானியும் உபாசகனைப்போல ஆத்மாவின் மறதியின்மைவடிவ அநுசந்தானவசத்தால் ஜகத்தின் அநுசந்தானமின்றியவனாகக் காணப்படுகின்றானென் றாசங்கித்து, அந்தஜகத்தின் அநுசந்தானமின்மை தியானத்தினாலாகியதாம்; ஞானத்தினாலாகியதன்றென்று கூறுகின்றார் :—

उपासकः इव ध्यायन् यदि लौकिकं विस्मरेत् विस्मरति एव । सा विस्मृतिः ध्यानात् वेदनात् तु न ॥

(சு-ம்.)

தத்துவமுணர்ந்தவன் உபாசகனைப்போலத் தியானஞ்செய்பவனாய் இலௌகிகத்தை எப்போது மறக்கின்றானோ, அப்போது அவன் மறதியைச் செய்க. அந்த மறதி தியானத்தினாலாம்; ஞானத்தினாலன்று. (கூசு)

௧௧. தத்துவமுணர்ந்தவன் முத்தியின்பொருட்டுத் தியானஞ்செய்ய வேண்டியதாகாமை.

[௩0௫௫] ध्यानं त्वैच्छिकमेतस्य वेदनान्मुक्तिसिद्धितः ।
ज्ञानादेव तु कैवल्यमिति शास्त्रेषु डिंडिमः ॥ ९७ ॥

(அ-கை.)

அப்படியானல் தத்துவஞானியாகிய புருஷனுக்கும் முத்தி சித்திக்கும் பொருட்டுப் பிரஹ்மத்தியானம் செய்யவேண்டியதாமேயென் ருசங்கித்து, " ज्ञानादेव तु कैवल्यं प्राप्यते येन मुच्यते ஞானத்திலேயே கைவல்யமாகிய அத்வைதப்பிரஹ்மத்தன்மை கிடைக்கின்றது. அதனல் முக்தராகின்றார்கள்." "तमेव विदित्वातिमृत्युमेति नान्यः पंथा विद्यतेऽयनाय அந்தப் பிரத்தியகபின்ன பரமாத்மாவினையே அறிந்து மிருத்தியுவாகிய சம்சாரத்தினைக் கடந்துபோகின்ருன். மோக்ஷத்தினை யடைதற்கு ஞானத்தினைவிட வேறுவழி யில்லை." "ज्ञात्वा देवं मुच्यते सर्वपापैः சொப்பிரகாசசைதன்ணியவடிவ தெய்வத்தை யறிந்து சகல பாபங்களினின்றும் விடுபடுகின்ருன்." என்னும் இவைமுதலிய சுருதிவடிவ சாஸ்திர மிருத்தலால் மோக்ஷத்தின்பொருட்டுத் தியானஞ் செய்யவேண்டியதில்லை யென்று கூறுகின்ருர் :—

ध्यानं तु एतस्य ऐच्छिकं वेदनात् मुक्तिसिद्धितः ज्ञानात् एव तु कैवल्यं इति शास्त्रेषु डिंडिमः ॥

(சு-ம்.)

தியானமோ இந்த ஞானியின் * உஅ. இச்சையினலாகியதாம். ஏனெனின் ஞானத்தினல் முத்தி சித்தித்தலின் ஞானத்தினலேயே கைவல்யத்தின் அடைவுண்டாகின்றதென்று சாஸ்திரங்களில் முரசமிருக்கின்றது. ()

கஉ. தத்துவஞானிக்குத் தியானம் அங்கீகரிக்கப்படாமையால் வெளிப்பிரவிருத்தியின் அங்கீகாரம்.

[௧௦௫௬] तत्त्वविद्यदि न ध्यायेत्प्रवर्तेत तदा बहिः ।
प्रवर्ततां सुखेनायं को बाधोऽस्य प्रवर्तने ॥ ९८ ॥

(அ-கை.)

அப்படியானல் தத்துவஞானிக்குத் தியானம் அங்கீகரிக்கப்படாததாகவே அந்தத் தத்துவஞானிக்கு எப்போதும் வெளியில் பிரவிருத்தியுண்டாகுமென் ருசங்கித்துப், பிரவிருத்தி ஞானத்தினைப் பாதிப்பதாகாமையின் அப்பாகியப்பிரவிருத்தி யங்கீகரிக்கப்படுகின்றதென்று கூறுகின்ருர் :—

---

* உஅ. இதன் தாற்பரியம் இதுவாம் :—சுருதி ஸ்மிருதிமுதலிய பிரமாணங்களால் நிரூபிக்கப்பட்ட மோக்ஷத்தின் சாதனமான தத்துவஞான மிருத்தலால் ஞானத்தின்பொருட்டாவது மோக்ஷத்தின்பொருட்டாவது வித்துவானுக்குத் தியானம் செய்யவேண்டியதில்லை. ஆனல் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையில் வெளிப்படும் ஜீவன் முக்தியின் வேருன ஆநந்தத்தின் இச்சை வித்துவானுக் குண்டாயின் தியானத்தைச் செய்யவேண்டும்; இச்சை யில்லையாயின் செய்யவேண்டிய தில்லை. எவ்விதத்தாலும் வித்துவானுக்குத் தியானத்தின் கர்த்தவ்விய மில்லை.

तत्त्ववित् यदि न ध्यायेत् तदा वहिः प्रवर्तेत । सुखेन अयं प्रवर्ततां । अस्य प्रवर्तने कः बाधः ॥

(சு-ம்.)

தத்துவஞானி தியானஞ்செய்யானாயின் அப்போது வெளியில் அநாத்மவஸ்துக்களின் வியவகாரத்தில் பிரவிருத்திப்ப னென்று கூறின், சுகமாக இந்தஞானி பிரவிருத்தியுடையவனாகுக. இந்த ஞானிக்குப் பிரவிருத்தியில் பாதம் யாது? (கூஅ)

கங- வெளிப்பிரவிருத்தியினை அங்கீகரித்தலில் அதிப்பிரசங்கத்தின் சங்கை சமாதானம்.

[க0கள] अतिप्रसंग इति चेत् प्रसंगं तावदीरय ।
प्रसंगो विधिशास्त्रं चेन्न तत्त्वविदं प्रति ॥ ९९ ॥

(அ-கை.)

அப்படியானால் வெளிப்பிரவிருத்தியினை அங்கீகரிக்கவே மரியாதையினைக் கடத்தலாகிய அதிப்பிரசங்க முண்டாமென் றாசங்கித்துப், பிரசங்கமென்பதனை வருத்தப்பட்டும் நிரூபிக்கக் கூடாமையால் அதிப்பிரசங்கமுண்டா மென்று கூறியது பொருந்தா தென்று பரிகரிக்கின்றார்:—

अतिप्रसंगः इति चेत् । तावत् प्रसंगं ईरय ॥

(சு-ம்.)

அதிப்பிரசங்கமுண்டா மென்று கூறின் முதலில் பிரசங்க மென்னும் சொல்லின் பொருளைக் கூறுவாயாக.

(அ-கை.)

பிரசங்கம் துக்கத்தினாலும் நிரூபிக்கத்தகாத தன்று; விதிசாஸ்திரம் பிரசங்கசப்தத்தால் சொல்லக்கருதிய தாகலின் என்றிவ்வாறு கூறின், அந்த விதிசாஸ்திரம் அஞ்ஞானி புருஷனாகிய விஷயமுடையதா யிருத்தலாலும், தத்துவஞானிவடிவ விஷயமுடையதா யில்லாமையாலும் அது பொருந்தா தென்று கூறுகின்றார்:—

विधिशास्त्रं प्रसंगः चेत् । तत् तत्त्वविदं प्रति न ॥

(சு-ம்.)

விதிசாஸ்திரம் பிரசங்கமாயின் அப்போது விதிசாஸ்திரம் தத்துவஞானியைக் குறித்தில்லை.

(வி-ம்.)

இங்கு விதிசாஸ்திரத்தைக் கூறியது எதுவோ அது நிஷேத சாஸ்திரத்திற்கும் உபலக்ஷணமாம். ஆதலால் விதி நிஷேதவடிவ அர்த்தத்தினையறிவிக்கும் சாஸ்திரவடிவப் பிரசங்கமாகிய மரியாதை எதுவோ அது தத்துவஞானியைக் குறித்தில்லை. ஆனால் அஞ்ஞானிகளைக் குறித்தே யிருக்கின்றது. (௯௯)

௧௪. விதிசாஸ்திரம் அஞ்ஞானியைக் குறித்ததாமாறு.

[௧௦௫அ] वर्णाश्रमवयोऽवस्थाभिमानो यस्य विद्यते ।
तस्यैव च निषेधाश्च विधयः सकला अपि ॥ १०० ॥

(அ-கை.)

விதிசாஸ்திரம் அஞ்ஞானியாகிய விஷயத்தினையுடையதென்பதனையே காட்டுகின்றார் :—

वर्णाश्रमवयावस्थाभिमानः यस्य विद्यते । तस्य एव च सकलाः अपि निषेधाः च विधयः ॥

(சு-ம்.)

பிராஹ்மணாதிவர்ணம், கிரகஸ்தமுதலிய ஆசிரமம், பாலியமுதலிய வயது, ஸ்திதியின் நிலைமைவடிவ அவஸ்தை யென்பவற்றின் அபிமானம் எந்தப் புருஷனுக் கிருக்கின்றதோ அவனுக்கே விதிநிஷேதமாகிய யாவுமாம். (௧௦௦)

௧௫. வர்ணாசிரமங்களின் அபிமானமின்றிய ஞானியின் நிச்சயம்.

[௧௦௫ஆ] वर्णाश्रमादयो देहे मायया परिकल्पिताः ।
नात्मनो बोधरूपस्येत्येवं तस्य विनिश्चयः ॥ १०१ ॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவஞானியும் தேகதாரியா யிருத்தலால் வர்ணாசிரமமுதலியவற்றின் அபிமானித்தன்மை யிருக்கின்றதென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

देहे मायया परिकल्पिताः वर्णाश्रमादयः बोधरूपस्य आत्मनः न इति एवं तस्य विनिश्चयः ॥

(சு-ம்.)

தேகத்தில் மாயையினால் கற்பிக்கப்பட்ட வர்ணாசிரமமுதலியன எவையோ அவை போதவடிவ ஆத்மாவாகிய எனது தர்மமர்கா வென்று அந்த

ஞானியின் நிச்சய மிருக்கின்றது. ஆதலால் அவனுக்கு வர்ணாசிரமமுதலிய வற்றின் அபிமானமுடைமை யில்லை. (௧0௧)

௧௯. சாஸ்திரத்தினால் வித்துவானுக்குக் கர்த்தவ்வியமில்லாமை.

[௧0௯0] समाधिमथ कर्माणि मा करोतु करोतु वा ।
हृदयेनास्तसर्वास्थो मुक्त एवोत्तमाशयः ॥ १०२ ॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவஞானியின் நிச்சயம் முதலில் இருக்குக. சாஸ்திரமோ அத்தத்துவஞானிக்குக் கர்த்தவ்வியத்தினைக் கூறுகின்றதே யென்றாசங்கித்து, அச்சாஸ்திரமும் அத்தத்துவஞானிக்குக் கர்த்தவ்விய மின்மையினையே அறிவிக்கின்றதென்று கூறுகின்றார்:—

हृदयेन अस्तसर्वास्थः उत्तमाशयः मुक्तः एव समाधिं अथ कर्माणि मा करोतु वा करोतु ॥

(சு-ம்.)

எவனுக்கு இருதயத்தில் சகல ஆசைகளும் ஒழிந்திருக்கின்றனவோ, அத்தன்மைய உத்தம ஆசயமுடைய புருஷன் முக்தனேயாவன். ஆதலால் சமாதியையும் கர்மங்களையும் செய்யாதொழிக அல்லது செய்க.

(வி-ம்.)

புத்தியினால் சகல ஆசைகளும் ஒழிந்த இருதயமுடையவனும் இதனாலேயே உத்தமமான அதாவது நிர்மலஞானவடிவ ஆசயமாகிய அபிப்பிராயத்தை யுடையவனுமாகிய புருஷன் முக்தனேயாவன். ஆதலால் அவன் சமாதியையாவது கர்மத்தையாவது செய்யாதிருக்க அல்லது செய்க. அவனுக்கு ஒரு * உ௧. கர்த்தவ்வியமு மில்லை யென்பது அந்வயம். (௧0உ)

[௧0௯௧] नैष्कर्म्येण न तस्यार्थस्तस्यार्थोऽस्ति न कर्मभिः ।
न समाधानजप्याभ्यां यस्य निर्वासनं मनः ॥ १०३ ॥

(அ-கை.)

வித்துவானுக்குக் கர்த்தவ்விய மில்லை என்பதில் வேறுவாக்கியத்தை உதகரிக்கின்றார் :—

---

* உ௧. "இதனை யான் செய்வேனாயின் எனக்குச் சுவர்க்க மோக்ஷாதிவடிவ பயனுண்டாகும். செய்யேனாயின் இஷ்டநாசமும் அநிஷ்டப்பிராப்தியுமாகிய கேடுண்டாம்." என்னும் புத்தியினால் எது செய்யப்படுகின்றதோ அது கர்த்தவ்விய மெனப்படும். இந்தயுக்தியின்றி எந்தக் கிரியை செய்யப்படுகின்றதோ அது கர்த்தவ்விய மன்று.

यस्य मनः निर्वासनं तस्य नैष्कर्म्येण न अर्थः । तस्य कर्मभिः अर्थः न अस्ति । समाधानजप्याभ्यां न ॥

(சு-ம்.)

எந்தப் புருஷனுடைய மனம் வாசனையின்றியதா யிருக்கின்றதோ அவனுக்கு நைஷ்கர்மியத்தால் பிரயோஜன மில்லை; அவனுக்குக் கர்மங்களா லும் பிரயோஜனமில்லை; சமாதானத்தினலும் ஜப்பியத்தினலும் பிர யோஜன மில்லை.

(வி-ம்.)

நைஷ்கர்மிய மென்பது கர்மமின்றியதன்மை. அதனல் அதாவது அக்கர்மநீக்கத்தால். சமாதான மென்பது சமாதி. ஜப்பிய மென்பது ஜபம். (க0௩)

கஎ. நல்லஞானிக்கு வாசனையில்லாமை.

[க0சு௨] आत्मासंगस्ततोऽन्यत्स्यादिंद्रजालं हि मायिकं ।
इत्यचंचलनिर्णीते कुतो मनसि वासना ॥ १०४ ॥

(அ-கை.)

அப்படியானல் ஞானிகளுக்கும் வாசனை நீங்கும்பொருட்டுத் தியா னஞ்செய்யத்தக்கதாமென் றுசங்கித்து, நல்ல ஞானியாகிய யதார்த்த தத்துவமுணர்ந்தவனுக்கு வாசனையே யில்லை யென்று கூறுகின்றார் :—

आत्मा असंगः ततः अन्तत् इन्द्रजालं मायिकं हि स्यात् इति अचंचल-निर्णीते मनसि कुतः वासना ॥

(சு-ம்.)

ஆத்மா அசங்கன் அதாவது சஜாதீய விஜாதீய சுவகத சம்பந்தமில் லாததா யிருக்கின்றது. அதனின் வேறுகிய இந்திரஜாலவடிவ ஜகத்து மாயிகமாம் அதாவது மித்தையாம் என்று திடநிச்சயஞ்செய்தகாலத்து எத னல் மனதில் * ௩௦. வாசனை யுண்டாகும்? எதனலு முண்டாகாது.(க0௪)

* ௩௦. திடபாவனையினல் முன்பின் விசாரத்தை விடுதல்பூர்வகமாகப் பதார்த்தி னைக் கொள்ளுதல் வாசனை யெனப்படும். அதுவே அபிநிவேச அதாவது ஆக்கிரக வடிவ வியசனமாம். அவ்வாசனை சுத்தம் அசுத்த மென்னும் பேதத்தால் இருவகைத் தாம்.

(க) சிறிது மோரை விடுவதனல் பால கனமான தயிர்வடிவமாவதுபோலவாவது, உருக்கிய நெய் மிகச் சீதளமான இடத்தில் அதிக நேரம்வரையில் வைக்கப்பட்டதாய்க்

ஞானியின் நிச்சய மிருக்கின்றது. ஆதலால் அவனுக்கு வர்ணாசிரமமுதலிய வற்றின் அபிமானமுடைமை யில்லை. (௧0௧)

௧௧. சாஸ்திரத்தினால் வித்துவானுக்குக் கர்த்தவ்வியமில்லாமை.

[௧0௩0] समाधिमथ कर्माणि मा करोतु करोतु वा ।
हृदयेनास्तसर्वास्थो मुक्त एवोत्तमाशयः ॥ १०२ ॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவஞானியின் நிச்சயம் முதலில் இருக்குக. சாஸ்திரமோ அத்தத்துவஞானிக்குக் கர்த்தவ்வியத்தினைக் கூறுகின்றதே யென் றாசங்கித்து, அச்சாஸ்திரமும் அத்தத்துவஞானிக்குக் கர்த்தவ்விய மின்மையினையே அறிவிக்கின்றதென்று கூறுகின்றார்:—

हृदयेन अस्तसर्वास्थः उत्तमाशयः मुक्तः एव समाधिं अथ कर्माणि मा करोतु वा करोतु ॥

(சு-ம்.)

எவனுக்கு இருதயத்தில் சகல ஆசைகளும் ஒழிந்திருக்கின்றனவோ, அத்தன்மைய உத்தம ஆசயமுடைய புருஷன் முக்தனேயாவன். ஆதலால் சமாதியையும் கர்மங்களையும் செய்யாதொழிக அல்லது செய்க.

(வி-ம்.)

புத்தியினால் சகல ஆசைகளும் ஒழிந்த இருதயமுடையவனும் இதனாலேயே உத்தமமான அதாவது நிர்மலஞானவடிவ ஆசயமாகிய அபிப்பிராயத்தை யுடையவனுமாகிய புருஷன் முக்தனேயாவன். ஆதலால் அவன் சமாதியையாவது கர்மத்தையாவது செய்யாதிருக்க அல்லது செய்க. அவனுக்கு ஒரு * உ௧. கர்த்தவ்வியமு மில்லை யென்பது அந்வயம். (௧0உ)

[௧0௩௧] नैष्कर्म्येण न तस्यार्थस्तस्यार्थोऽस्ति न कर्मभिः ।
न समाधानजप्याभ्यां यस्य निर्वासनं मनः ॥ १०३ ॥

(அ-கை.)

வித்துவானுக்குக் கர்த்தவ்விய மில்லை என்பதில் வேறுவாக்கியத்தை உதகரிக்கின்றார் :—

---

* உ௧. "இதனை யான் செய்வேனாயின் எனக்குச் சுவர்க்க மோக்ஷாதிவடிவ பயனுண்டாகும். செய்யேனாயின் இஷ்டநாசமும் அநிஷ்டப்பிராப்தியுமாகிய கேடுண்டாம்." என்னும் புத்தியினால் எது செய்யப்படுகின்றதோ அது கர்த்தவ்விய மெனப்படும். இந்தயுத்தியின்றி எந்தக் கிரியை செய்யப்படுகின்றதோ அது கர்த்தவ்விய மன்று.

यस्य मनः निर्वासनं तस्य नैष्कर्म्येण न अर्थः । तस्य कर्मभिः अर्थः न अस्ति । समाधानजप्याभ्यां न ॥

(சு-ம்.)

எந்தப் புருஷனுடைய மனம் வாசனையின்றியதா யிருக்கின்றதோ அவனுக்கு நைஷ்கர்மியத்தால் பிரயோஜன மில்லை; அவனுக்குக் கர்மங்களாலும் பிரயோஜனமில்லை; சமாதானத்தினாலும் ஜப்பியத்தினாலும் பிரயோஜன மில்லை.

(வி-ம்.)

நைஷ்கர்மிய மென்பது கர்மமின்றியதன்மை. அதனால் அதாவது அக்கர்மநீக்கத்தால். சமாதான மென்பது சமாதி. ஜப்பிய மென்பது ஜபம். (கOங)

கஎ. நல்லஞானிக்கு வாசனையில்லாமை.

[கOசுஉ] आत्मासंगस्ततोऽन्यत्स्यादिंद्रजालं हि मायिकं ।
इत्यचंचलनिर्णीते कुतो मनसि वासना ॥ १०४ ॥

(அ-கை.)

அப்படியானால் ஞானிகளுக்கும் வாசனை நீங்கும்பொருட்டுத் தியானஞ்செய்யத்தக்கதாமென் றாசங்கித்து, நல்ல ஞானியாகிய யதார்த்த தத்துவமுணர்ந்தவனுக்கு வாசனையே யில்லை யென்று கூறுகின்றார் :—

आत्मा असंगः ततः अन्तत् इन्द्रजालं मायिकं हि स्यात् इति अचंचल-निर्णीते मनसि कुतः वासना ॥

(சு-ம்.)

ஆத்மா அசங்கன் அதாவது சஜாதீய விஜாதீய சுவகத சம்பந்தமில்லாததா யிருக்கின்றது. அதனின் வேறாகிய இந்திரஜாலவடிவ ஜகத்து மாயிகமாம் அதாவது மித்தையாம் என்று திடநிச்சயஞ்செய்தகாலத்து எதனால் மனதில் * ரு0. வாசனை யுண்டாகும்? எதனாலு முண்டாகாது. (கOச)

* ரு0. திடபாவனையினால் முன்பின் விசாரத்தை விடுதல்பூர்வகமாகப் பதார்த்தினைக் கொள்ளுதல் வாசனை யெனப்படும். அதுவே அபிநிவேச அதாவது ஆக்கிரகவடிவ வியசனமாம். அவ்வாசனை சுத்தம் அசுத்த மென்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

(க) சிறிது மோரை விடுவதனால் பால் கனமான தயிர்வடிவமாவதுபோலவாவது, உருக்கிய நெய் மிகச் சீதளமான இடத்தில் அதிக நேரம்வரையில் வைக்கப்பட்டதாய்க்

கஅ. ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் முறையே அதிப்பிரசங்கமில்லாமையும் இருத்தலும்.

[௧0௬௫] एवं नास्ति प्रसंगोऽपि कुतोऽस्यातिप्रसंजनं ।
प्रसंगो यस्य तस्यैव शंक्येतातिप्रसंजनम् ॥ १०५ ॥

---

கனவடிவமாவதுபோலவாவது பஞ்சகோசத்திற்கும் சிதாத்மாவிற்குமுள்ள பேதத்தினை மறைக்கும் அஞ்ஞானம் எதுவோ, அதனால் எதன் வடிவம் செவ்வையாய்க் கனரூபமாயிருக்கின்றதோ, அத்தன்மைய கனவடிவ அகங்காரத்தினொடுகூடிய வாசனை எதுவோ அது ஜனன மரணங்களுக்கு ஏதுவடிவ மலினவாசனையாம். அதனை ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஆசுரிசம்பத்துவடிவமாக வர்ணித்திருக்கின்றனர். இஃது ஒன்று.

(உ) லோகவாசனை, (௩) சாஸ்திரவாசனை, (௪) தேகவாசனை என்னும் இவை மூன்றும், இவ்வாறு யாவும் சேர்ந்து நான்குவிதமலினவாசனையாம். அவற்றுள், இடம்பம், தர்ப்பமுதலிய அசுரசம்பத்துவடிவ மானதவாசனை எதுவோ அது நரகத்திற் கேதுவாதலால் அதற்கு மலினத்தன்மை பிரசித்தமாம்.

(உ) சகல ஜனங்களும் என்னை நிந்தியாது புகழுமாறு நடப்பேனாக என்னுமிவ்வித அபிநிவேசமாகிய ஆக்கிரகம் லோகவாசனையாம். அது சம்பாதிக்கக்கூடாததாயிருத்தலால் மலினமாம். ஏனெனின், சர்வகுணசம்பன்னராகிய இராமசந்திரருக்கும் பதிவிரதாசிரோமணியாகிய சீதாபிராட்டியாருக்கும் கேட்கக்கூடாததான லோகாபவாதம் பிரவிருத்தித்ததெனின், மற்ற ஜீவர்களுக்கு லோகாபவாதமாகிய நிந்தை யுண்டாகுமென்பதில் என்ன சொல்லவேண்டியிருக்கிறது.

தேசபேதத்தால் பெரும்பாலும் ஒருவரையொருவர் நிந்திப்பதைக் காண்கிறோம். எப்படி: தக்ஷிணதேசத்துப் பிராஹ்மணர்களால் வடதேசத்தில் வசிக்கும் வேதமுணர்ந்த மாம்சபக்ஷணஞ்செய்வோர் நிந்திக்கப்படுகிறார்கள். வடதேசத்துப் பிராஹ்மணர்களால் அம்மான்மகளைக் கலியாணம் செய்பவர்களும் யாத்திரையில் மண்பாத்திரத்தைக் கொள்ளுவோருமாகிய தக்ஷிணதேசவாசி பிராஹ்மணர் நிந்திக்கப்படுகின்றார்கள். இருக்குவேதத்தினால் ஆசுவலாயன காண்வசாகையுடைய பிராஹ்மணர்கள் சிரேஷ்டமாகக் கொள்ளப்படுகிறார்கள். வாஜஸனேய சாகையுடையவர்கள் அவர்களை விட வேறுவிதமாகச் சிரேஷ்டமாகக் கொள்ளப்படுகின்றனர். இவ்வாறு தத்தம் குலம், கோத்திரம், பந்துவர்க்கம், இஷ்டதேவதைமுதலியவற்றைப் புகழ்தலும், அந்நியர்கள் குலமுதலியவற்றை நிந்தித்தலும் வித்துவான்முதல் ஸ்திரீ கோபாலர்பரியந்தம் எல்லோரிடத்தும் பிரசித்தம். இவ்வாறு அபூர்ணமா யிருத்தலால் லோகவாசனை மலினமாம்.

(௩) [க] பாடவியசனம், [உ] வெகுசாஸ்திரவியசனம், [௩] அநுஷ்டான வியசனமென்னும் பேதத்தால் சாஸ்திரவாசனை மூன்றுவகையாம்.

[க] சர்வசாஸ்திரங்களையும் முகபாடம் செய்தற்பொருட்டு "நான் எப்போதும் வேதாதிகளைப் பாடஞ் செய்வேனாக." என்னும் ஆக்கிரகம் பாடவியசனவடிவ சாஸ்திரவாசனையாம். அந்தப் பாடமும் முடியாததா யிருத்தலால் மலினவாசனையாம்.

[உ] "சர்வசாஸ்திரங்களையும் யான் ஒருங்கே சம்பாதிப்பேனாக" என்னும் ஆக்கிரகம் வேதசாஸ்திரவியசனவடிவ சாஸ்திரவாசனையாம். ஆத்தியந்திக புருஷார்த்தமின்மையால் வெகுசாஸ்திரவாசனை மலினமாம்.

(அ-கை.)

இவ்வாறு பிரசங்கத்தின் இன்மை இருக்குக. இதனால் இவ்வெடுத்துக்கொண்ட அதிப்பிரசங்கத்தி னின்மையில் என்ன வந்ததெனக் கூறுகின்றார் :—

---

[௩] கர்மஜடத்தன்மையால் மிகுந்த சிரத்தையோடு சகாமகர்மங்களின் அநுஷ்டானத்திலுண்டாகும் ஆக்கிரகம் **அநுஷ்டானவியசனவடிவ சாஸ்திரவாசனையாம்.** அக்கர்மவாசனை மறுபிறப்பிற்குக் காரணமா யிருத்தலின் அது மலினமாம்.

இவ்வாறு மூன்றுவகையான சாஸ்திரவாசனை சொல்லப்பட்டது

(ச) [க] ஆத்மத்தன்மையின் பிராந்தி, [உ] குணாதானப்பிராந்தி, [௩] தோஷாபநயனப்பிராந்தி யென்னும் பேதத்தால் **தேகவாசனை மூன்றுவகையாம்.**

[க] "தேகமே யான்" என்னும் அபிநிவேசம் **ஆத்மத்தன்மையின் பிராந்தி வடிவ தேகவாசனையாம்.** இது சார்வாகர்முதலியோரிடத்துப் பிரசித்தம் பிரமாணமில்லாததா யிருத்தலாலும் சர்வதுக்கத்திற்கும் ஏதுவா யிருத்தலாலும் தேகத்தின் ஆத்மத்தன்மை மலினமாம்.

[உ] (க) இலௌகிகம், (ங) சாஸ்திரீய மென்னும் பேதத்தால் **குணாதானம்** (தேகத்தில் குணத்தினைச் சம்பாதித்தல்) **இருவகைத்தாம்.**

(க) தேகத்தில் நல்லவன் என்னும் சப்தமுதலியவற்றைச் சம்பாதித்தல் **இலௌகிககுணாதானமாம்.** மெல்லிய குரலோடு பாடுதலையும் அத்தியயனஞ்செய்தலையும் விரும்பும் ஜனங்கள் தைலபானம் மிளகுதின்னல் முதலியவற்றால் பிரயத்தினஞ் செய்கிறார்கள். தேகத்தின் மிருதுவாகிய ஸ்பரிசத்தின் பொருட்டுப் புஷ்டியைத்தரும் ஔஷதங்களையும் ஆகாரங்களையும் செய்கின்றார்கள். தேகம் அழகாயிருத்தற்குத் தேய்ப்புகளையும் வஸ்திராபரணங்களையும் சேவிக்கின்றார்கள். தேகம் வாசனையாயிருத்தற்குப் புஷ்பமாலை சந்தனப்பூச்சுமுதலியவற்றைக் கொள்ளுகிறார்கள்.

(ங) கங்காஸ்நானம், சாளிக்கிராமசேவை, தீர்த்தமுதலியவற்றைச் சம்பாதித்தலாகிய புண்ணியகர்மம் **சாஸ்திரீயகுணாதானமாம்.**

[௩] (க) இலௌகிகம், (ங) வைதிக மென்னும் பேதத்தால் **தோஷத்தின் நீக்கமாகிய அபநயனம் இருவகைத்தாம் :—**

(க) வைத்தியனுற் சொல்லப்பட்ட மருந்து, முகங்கழுவுதல்முதலியவற்றினுலாகிய தோஷநீக்கம் எதுவோ அது **இலௌகிக அபநயனமாம்.**

(ங) சௌச ஆசமனங்களால் செய்யப்பட்ட தோஷநீக்கம் எதுவோ அது **வைதிக அபநயனமாம்.**

குணாதானத்தினை வெகுவாக யாம் காண்பதில்லை. ஏனெனின், பிரசித்தமாகவே பாடுகின்றவர்களும் அத்தியயனஞ்செய்பவர்களும் பிரயத்தினம் செய்தும் குரலின் இனிமையை யடைகிறதில்லை. மிருதுவான ஸ்பரிசமும் புஷ்டியும் நியமமான தன்று. அழகும் மணமுடைமையும் வஸ்திரம் மாலைமுதலியவற்றி லிருக்கின்றன ; தேகத்தி லில்லை ஆதலால் இலௌகிககுணாதானம் பொருந்தாது.

சாஸ்திரீயகுணாதானமோ பிரபலசாஸ்திரத்தினல் நிஷேதிக்கப்படுகின்றது. அந்தப்பிரபலசாஸ்திரம் இதுவாம்:— "எவனுக்கு மூன்று (வாதபித்தகபவடிவ) தாதுக்களா லாக்கப்பட்ட தேகத்தில் ஆத்ம(யானெனும்)புத்தி யிருக்கின்றதோ, மனைவிமுதலியோரிடத்து எனதென்னும் புத்தி யிருக்கின்றதோ, பூமியின் விகாரமான கட்டை

एवं अस्य प्रसंगः अपि न अस्ति कुतः अतिप्रसंजनम् ॥

(சு-ம்.)

இவ்வாறு கO௫அ-வது முதல் கOசு உ-வது சுலோகம்வரையிற் சொல்லியபடி இந்த ஞானிக்குப் பிரசங்கமு மில்லை யெனின் அதிப்பிரசங்கம் எங்கிருந்துண்டாகும் ?

---

கல்முதலியவற்றின் வடிவத்தில் பூஜ்ய(பூசிக்கப்படுவது என்னும்) புத்தி யிருக்கின்றதோ, ஜலத்தில் எவனுக்குத் தீர்த்த (பரிசுத்தமான தென்னும்)புத்தி யிருக்கின்றதோ, அபிஞ்ஞர்களாகிய தத்துவஞானிகளிடத்து ஒருபோதும் தீர்த்த (பரிசுத்த)புத்தியில்லையோ, அப்புருஷனே எருது; கழுதை அதாவது சுமையெடுக்கும் கழுதையாவன்." இது பாகவதத்திலுள்ள ஸ்ரீ கிருஷ்ணபகவானது வாக்கியம். "தேகம் அத்தியந்தம் மலினம்; தேகியாகிய ஆத்மா அத்தியந்தம் நிர்மலமாம். இவ்விரண்டற்கும் பேதத்தை யறிந்து எதற்குச் சௌசம் செய்வது? (எதற்கும் கூடாது.)" என்பது வேறு பிரமாணம்.

முற்கூறிய சாஸ்திரத்தினுல் தேகத்தின் தோஷத்தினை நீக்குதல் நிஷேதிக்கப் படுகின்றது; குணுதானத்தின் நிஷேதம் செய்யப்படவில்லை யெனினும், விரோதியான பிரபலதோஷ மிருந்தால் குணத்தினைத் தரித்தல் முடியாததாம். ஆதலால் அர்த்தத்தினுல் குணுதானம் நிஷேதிக்கப்படுகின்றது. இவ்வாறு முடியாததா யிருத்தலால் குணத்தைக் கொள்ளவேண்டு மென்னும் பிராந்தியும் தோஷநீக்கப்பிராந்தியுமாகித் தேகவாசனை மலினமாம்.

ஆதலால் எவ்வுபாயத்தினுலும் இந்நான்குவிதமான மலினவாசனையும் நிவர்த்திக்கத் தக்கனவாம்.

தத்துவஞானிக்கு ஆத்மாவின் அசங்கத்தன்மையும் அதனின் வேருன அநாத்மவஸ்துவின் மித்தியாத்தன்மைநிச்சயத்தால் அநாத்மபதார்த்தங்களில் திடபாவனைவடிவ அபிநிவேசமில்லை. அதனுல் முன்பின் விசாரத்தினை விடுதலில்லை. ஆதலால் தத்துவ ஞானியின் மனத்தில் அநாத்மவஸ்துவிலுள்ள திடபாவனையினுல் முன்பின் விசாரமின்மையை முன்னிட்ட 'அநாத்மபதார்த்தத்தினைக் கொள்ளுதல்வடிவ மலினவாசனை சம்பவியாது. தேகநிர்வாகத்திற்கு ஏதுவாகிய மேற்சொல்லப்படும் சுத்தவாசனை ஞானத்தினுல் அஞ்ஞானம் நாசமாகவே அஞ்ஞானத்தினுல் கனவடிவத்தோடுகூடியதன்மை அல்லது கன அகங்காரத்தோடுகூடியதன்மை இல்லாமையால் மலினத்தன்மை யில்லை. மறுபடியும் ஜன்மாந்தரத்திற்கு ஏதுவாதலைவிட்டு வறுத்தவிதையினைப்போல நிலைத்துத் தேகநிர்வாகத்தின்பொருட்டுத் தரிக்கப்படுகின்றது. இப்படி ஞாதஞேய (அறியத்தக்கவற்றை அறிந்தவடிவமாகிய) வாசனை எதுவோ அது சுத்தவாசனை யெனப்படுகின்றது. ஞேயமாகிய பிரஹ்மம் எதனுல் ஞாதம் அதாவது அறியப்பட்டதாகின்றதோ அத்தன்மையவாசனை ஞாதஞேயவாசனை யெனப்படும்.

சங்கை :—முன்பின் விசாரத்தை விடுதலோடுகூடியதன்மையே வாசனைக்கு லக்ஷண மென்று தாம் கூறினீர்கள். ஞேயத்தின் ஞானமோ விசாரத்தினுற்றோன்றிய தாம். ஆதலால் சுத்தவாசனையில் வாசனையின் லக்ஷணம் பொருந்துகிறதில்லை.

(அ-கை.)

அப்போது அதிப்பிரசங்கம் யாருக்கிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

यस्य प्रसंगः तस्य एव अतिप्रसंजनं संक्येत ॥

(சு-ம்.)

எவனுக்குப் பிரசங்க மிருக்கின்றதோ அவனுக்கே அதிப்பிரசங்கம் சங்கிக்கப்படுகின்றது. (௧0௫)

௧௧. சுலோகம் ௧0௫-ல் கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தம்.

[௧0௬] विध्यभावान्न बालस्य दृश्यतेऽतिप्रसंजनम् ।
स्यात्कुतोऽतिप्रसंगोऽस्य विध्यभावे समे सति ॥ १०६ ॥

(அ-கை.)

இப்படி எங்கே கண்டதெனக் கூறுகின்றார் :—

विध्यभावात् बालस्य अतिप्रसंजनं न दृश्येत ॥

(சு-ம்.)

விதிவடிவப்பிரசங்க மின்மையால் பாலர்களுக்கு அதிப்பிரசங்கம் பார்க்கப்படுகிறதில்லை.

---

**சமாதானம்** :—வாசனையின் லக்ஷணத்தில் "திடபாவனையினால்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் எப்படி வெகுஜன்மத்தில் திடபாவனையினால் இந்த ஜன்மத்தில் பிறர் உபதேசமின்றியும் அகங்காரம் (யானெனல்) மமகாரம்(எனதெனல்) காமம் குரோதமுதலியமலினவாசனை உண்டாகின்றதோ, அதுபோல முதலில் உண்டாகிய போதம் விசாரத்தினாலாகியதாயினும், நெடுங்காலம் இடைவிடாத சம்ஸ்காரத்தால் தத்துவத்தின் பாவனையுண்டாகியபின் வாக்கியயுக்தியின் விசாரமில்லாமலும் எதிரிலுள்ள கடமுதலியவற்றைப்போல உடனே தத்துவம் விளங்குகின்றது. அத்தன்மையபோதத்தின் அநுவிருத்தி (அறிவின் பின்னிகழ்ச்சி)யோடு கூடிய இந்திரியங்களின் வியவகாரம் யாதோ அது சுத்தவாசனையாம். அது தேகத்தினது ஜீவனமாத்திரத்தின்பொருட்டு உபயோகப்படுகின்றது. இடபம், தர்ப்பமுதலிய ஆசுரசம்பத்திகளது உற்பத்தியின்பொருட்டன்று. ஜன்மாந்திரத்திற்கேதுவாகிய தர்மத்தினது உற்பத்தியின்பொருட்டன்று.

அந்தச் சுத்தவாசனை பிராரப்தபோகபரியந்தம் வித்துவானுடைய மனத்திலும் இருக்குமெனினும், எப்படி மோக்ஷத்தின் இச்சை பலத்தினால் அநிச்சையாகின்றதோ, சத்புருஷர்களது சங்கம் பலத்தினால் அசங்கமாகின்றதோ, அதுபோல இவ்வாசனையும் பலத்தினால் வாசனையில்லாததாம்.

இவ்வாறு நல்ல ஞானியின்மனம் வாசனையில்லாததாம். இவ்வாசனையின் விவேசனம் ஜீவன்முக்திவிவேகமென்னும் நூலில் ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளாலேயே செய்யப்படுகின்றது. அது சுருக்கமாக இங்கு எழுதப்பட்டது.

(அ-கை.)

தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார் :—

विध्यभावे समे सति अस्य कुतः अतिप्रसंगः स्यात् ॥

(சு-ம்.)

ஞானிக்கு விதியின்மை குழந்தைகளுக்குச் சமானமாயிருக்கின் இந்த ஞானிக்கு எங்கிருந்து அதிப்பிரசங்க முண்டாகும்? (௧௦௬)

[௧௦௬-௫] न किंचिद्वेत्ति बालश्चेत्सर्वं वेत्त्येव तत्त्ववित् ।
अल्पज्ञस्यैव विधयः सर्वे स्युर्नान्ययोर्द्वयोः ॥ १०७ ॥

(அ-கை.)

பாலர்களுக்கு விதியின்மையிற் காரணம் அஞ்ஞானமுடைமையாம்; அது ஞானிக்கில்லையேயென் றாசங்கித்து, அந்தஞானிக்கு அஞ்ஞானமுடைமை யில்லையாயினும் விதியின்மைக்குக் காரணமாகிய சர்வஞ்ஞத்தன்மை யிருக்கின்றதென்று கூறுகின்றார் :—

बालः किंचित् न वेत्ति चेत् तत्त्ववित् सर्वं वेत्ति एव ॥

(சு-ம்.)

பாலகன் ஒன்றையு மறிகிறதில்லையென்று கூறின், தத்துவஞானியெல்லாவற்றையும் அறியவே செய்கின்றான்.

(அ-கை.)

அப்போது விதியின் அதிகாரம் யாருக்கிருக்கிறதென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

अल्पज्ञस्य एव सर्वे विधयः स्युः । अन्ययोः द्वयोः न ॥

(சு-ம்.)

அற்பஞ்ஞ (சிற்றறிவுடைய) புருஷர்களுக்கே எல்லா விதிகளுமாம். மற்றைய அஞ்ஞானியும் (அறிவில்லாதவனும்) சர்வஞ்ஞனுமாகிய இருவருக்கும் * ௬௧. இல்லை. (௧௦௭)

* ௬௧. மிகவும் மூட(பாலக)னும், புத்தியின் மேன்மையை (பிரஹ்மத்தின் வேறாகாத ஆத்மாவினை) யடைந்தவனுமாகிய இருவரும் உலகத்தில் சுகத்தை யடைகின்றார்கள். இடையிலுள்ளவன் அதாவது அதிமூடனும் அறிஞனுமாகிய இருவரினும் வேறாகிய அற்பவறிவுடையவன் விதிநிஷேதாதிவடிவ கிலேசத்தை யடைகிறான்." இது பாகவதத்தின் வாக்கியம். இவைமுதலிய சாஸ்திரவாக்கியங்களால் அற்பஞ்ஞ புருஷர்களுக்கே சமுத்திரத்தின் நடுவிலிருக்கும் புருஷனைப்போன் றிருத்தலால் விதிநிஷேதமுண்டு. அதிமூடனுக்கும் வித்துவானுக்கும் கிரமமாக இக்கரையிலும் அக்கரையிலுமுள்ள இருபுருஷர்களைப்போன் றிருத்தலால் விதிநிஷேத மில்லை. ஆனால் உத்தமகுலத்திற் பிறந்த பாலகனும் ஞானியும் குணதோஷபுத்தியில்லாமலே சுபசம்ஸ்காரத்தால் சுபத்தை யாசரிப்பர்; அசுபத்தை ஆசரியார். இது ௨௫௬-வது பக்கம் ௮௦-வது டிப்பணியிற் எழுதப்பட்டிருக்கின்றது.

௨௦. சாபமுதலிய சாமர்த்தியத்தோடுகூடியவனுக்குத் தத்துவஞானித் தன்மையின் சங்கையும் சமாதானமும்.

[௧0௮] शापानुग्रहसामर्थ्यं यस्यासौ तत्त्वविद्यदि ।
तन्न शापादिसामर्थ्यं फलं स्यात्तपसो यतः ॥ १०८ ॥

(அ-கை.)

அப்படியானால் வியாசர்முதலியோர்களைப் போலச் சாபாநுக்கிரக சாமர்த்தியம் யாருக்கிருக்கிறதோ அவனே தத்துவஞானியாவன், பிறன் கான் என்று வாதி சங்கிக்கின்றான்:—

यस्य शापानुग्रहसामर्थ्यं असौ तत्त्ववित् यदि ॥

(சு-ம்.)

சாபாநுக்கிரகசாமர்த்தியம் எவனுக் கிருக்கிறதோ அவன் தத்துவ ஞானியாவன் என்று கூறும்பக்ஷத்தில்.

(அ-கை.)

சித்தாந்தி பரிகாரஞ்செய்கின்றார்:—

तत् न ॥

(சு-ம்.)

அப்போது அது பொருந்தாது.

(அ-கை.)

அதில் காரணத்தைக் கூறுகின்றார்.—

यतः शापादिसामर्थ्यं तपसः फलं स्यात् ॥

(சு-ம்.)

எதனால் சாபமுதலியவற்றின் சாமர்த்தியம் தவத்தின் பயனோ ஞானத்தின் பயனல்லவோ அதனால் பொருந்ாது. (௧0௮)

௨௧. வியாசாதியரின் சாபமுதலிய சாமர்த்தியத்திற்குத் தவம் காரணமாதலும் ஞானத்திற்குக் காரணம் வேறு தவமெனக் கூறுதலும்.

[௧0௯] व्यसादेरपि सापर्थ्यं दृश्यते तपसो बलात् ।
शापादिकारणादन्यत्तपो ज्ञानस्य कारणम् ॥ १०९ ॥

(அ-கை.)

அப்படியானால் வியாசர்முதலிய தத்துவஞானிகளுக்கும் சாபமுதலிய வற்றின் சாமர்த்தியம் காணப்படுகின்றதே யென்றுசங்கித்து, அது அவ்வி

யாசாதியருக்குத் தத்துவஞானத்தின் பயனன்று, ஆனால் தவத்தின் பயனென்று கூறுகின்றார்:—

व्यासादेः अपि तपसः बलात् सामर्थ्यं दृश्यते ॥

(சு-ம்.)

வியாசாதியருக்கும் தவத்தின் வலியினால் சாபமுதலியவற்றின் சாமர்த்தியம் காணப்படுகின்றது.

(அ-கை.)

அப்படியானால் அப்போது "तपसा ब्रह्म विजिज्ञासस्व ॥ தவத்தினால் பிரஹ்மத்தையறி." என்னும் சுருதியினால் தவமில்லாத புருஷனுக்குத் தத்துவ ஞானமும் நிகழா தென்றாசங்கித்து, சாபாதிகளுக்குக் காரணமான சகாம முதலிய தவத்திற்கு அந்நியமாக ஞானத்திற்குச் சாதனமான நிஷ்காம தவமிருத்தலின் தத்துவஞானமும் நிகழா தென்று கூறுவது பொருந்தா தென்று கூறுகின்றார்:—

शापादिकारणात् अन्यत् तपः ज्ञानस्य कारणम् ॥

(சு-ம்.)

சாபமுதலியவற்றிற்குக் காரணமாகிய தவத்திற்கு வேறாகிய தவம் ஞானத்திற்குக் காரணமாம். (௧0௯)

௨௨. இரண்டு தவங்களுமுடையவருக்குச் சாமர்த்தியமும் ஞானமு முண்டாதலும், ஒருதவமுடையோருக்கு ஒருபல முண்டாதலும்.

[௧0௯-அ] द्वयं यस्यास्ति तस्यैव सामर्थ्यज्ञानयोर्जनिः ।
एकैकं तु ततः कुर्वन्नेकैकं लभते फलम् ॥ ११० ॥

(அ-கை.)

அப்படியானால் அந்த வியாசாதியருக்குத் தத்துவஞானித்தன்மையும் சாபாதிகளுக்குக் காரணமாந்தன்மையுமாகிய இரண்டும் எப்படிக் காணப்படுகின்றன வென்றாசங்கித்து இருவகைத் தவமு மிருத்தலால் காணப்படுகின்றன வென்று கூறுகின்றார்:—

यस्य द्वयं अस्ति तस्य एव सामर्थ्यज्ञानयोः जानिः ततः एकैकं तु कुर्वन् एकैकं फलं लभते ॥

(சு-ம்.)

எந்தப் புருஷனுக்கு இருவகைத் தவமு மிருக்கின்றனவோ, அவனுக்கே சாபாதிகளின் சாமர்த்தியமும் ஞானமு மிரண்டு முண்டாகும். ஆதலால் ஒவ்வொருதவத்தைச் செய்பவர் ஒவ்வொருபயனை யடைவார். (௧௧0)

உ௬. சாமர்த்திய விதியின்றிய சந்நியாசியைக் கர்மிகள் நிந்தித்தலின் சங்கையும் சமத்தன்மையால் சமாதானமும்.

[௧0௬௯] सामर्थ्यहीनो निंद्यश्चेद्यतिर्विधिविवर्जितः ।
निंद्यते तत्तपोऽप्यन्यैरनिशं भोगलंपटैः ॥ १११ ॥

(அ-கை.)

அப்படியானால் சாபமுதலியவற்றின் சாமர்த்தியமின்றிய சன்னியாசிக்குச் சாமர்த்தியத்தைச் சம்பாதித்தலில் பிரேரகவசனவடிவ விதியில்லாதிருந்தும் விதிக்கப்பட்ட கர்மத்தினை அநுஷ்டிக்கும் மிக்ககர்மப்பற்றுள்ள புருஷர்களால் நிந்தைசெய்யுந்தன்மை யுண்டாகுமென் றுசங்கித்து, அக்கர்மிகளுக்கும் விஷயப்பற்றுள்ள பாமரபுருஷர்களால் நிந்திக்கப்படுந்தன்மை யுண்டா மென்று கூறுகின்றார்:—

सामर्थ्यहीनः यतिः विधिविवर्जितः निंद्यः चेत् । अन्यैः भोगलंपटैः तत्तपः अपि अनिशं निंद्यते ॥

(சு-ம்.)

சாபாநுக்கிரகசாமர்த்தியமின்றிய சந்நியாசி விதியில்லாதவனாயினும் கர்மிகளால் நிந்திக்கப்படுவ னென்று கூறின், அப்போது அந்நியபோகப்பற்றுள்ள புருஷர்களால் அக்கர்மிகளின் கர்மாநுஷ்டானவடிவ தவமும் நிரந்தரம் நிந்திக்கப்படுவதாகும். (௧௧௧)

உ௭. போகப்பற்றுடையவர்களுக்குச் சந்நியாசித்துவம் கெடுமென்னும் அபிப்பிராயமாகப் பழித்தல்.

[௧0௭0] भिक्षावस्त्रादिरक्षेयुर्यद्येते भोगतुष्टये ।
अहो यतित्वमेतेषां वैराग्यभरमंथरम् ॥ ११२ ॥

(அ-கை.)

இச்சன்னியாசியும் போகத்தினது திருப்தியின்பொருட்டு விஷயங்களைச் சம்பாதிப்பார்களே யென்றுசங்கித்து, அப்போது அவர்களது சந்நியாசித்தன்மையே நாசமாகு மென்னும் அபிப்பிராயமாகப் பழிக்கின்றார்:—

यदि एते भोगतुष्टये भिक्षावस्त्रादिरक्षेयुः वैराग्यभरमन्थरं एतेषां यतित्वं अहो ॥

(சு-ம்.)

எப்போது இச்சந்நியாசிகள் போகத்தினது திருப்தியின்பொருட்டுப் பிக்ஷை,வஸ்திரமுதலியவற்றின் இரக்ஷிப்பைச் செய்வாரோ, அப்போது வைராக்கியத்தின் பாரத்தினால் பாரமுள்ள இவர்களது சந்நியாசித்தன்மை ஆச்சரியவடிவினதாம். (கக௨)

உடு. விஷயிகளால் செய்யப்படும் நிந்தையினால் கர்மிகளுக்கு ஹானி யில்லாதது போலக் கர்மிகளால் செய்யப்படும் நிந்தையால் தத்துவஞானிக்கு ஹானியில்லாமை.

[கOஎக] वर्णाश्रमपरान्मूढा निंदंत्वित्युच्यते यदि ।
देहात्ममतयो बुद्धं निंदंत्वाश्रममानिनः ॥ ११३ ॥

(அ-கை.)

விஷயப்பற்றுள்ள பாமரர்களால் செய்யப்படும் நிந்தையினால் கிரியையில் பற்றுள்ள சிஷ்டர்களுக்கு ஹானியில்லை யென்று கூறின், தேகாபிமானிகளாகிய கிரியையிற்பற்றுள்ள புருஷர்களாற் செய்யப்படும் நிந்தையினால் தத்துவஞானிக்கும் ஹானி யில்லை யென்று கூறுகின்றார்:—

मूढाः वर्णाश्रमपरान् निन्दन्तु । इति उच्यते यदि । देहात्ममतयः आश्रममानिनः बुद्धं निन्दन्तु ॥

(சு-ம்)

மூடர்கள் வருணாசிரமப்பற்றுள்ள புருஷர்களை நிந்திக்க; அதனால் அவர்களுக்கு ஹானியில்லை யென்று சொல்லின், அப்போது தேகத்தில் ஆத்மபுத்தியுடைய ஆசிரமத்தின் அபிமானிகள் ஞானியைச் செவ்வையாய் நிந்திக்க; அதனால் அவர்களுக்கு ஹானி யில்லை. (ககங)

[கOஎ௨] तदित्थं तत्त्वविज्ञाने साधनानुपमर्दनात् ।
ज्ञानिनाचरितुं शक्यं सम्यग्राज्यादि लौकिकम् ॥ ११४ ॥

(அ-கை.)

சுலோகம் கOசகூ—கOஎக வரையிற் கூறிய பிரசங்கத்தினால் கிடைத்த அர்த்தத்தை முடித்து, எடுத்துக்கொண்ட தத்துவஞானிக்கும் வியவகாரத்திற்கு விரோத மின்மையினையே அநுசரிக்கின்றார்:—

तत् इत्थं तत्त्वविज्ञाने साधनानुपमर्दनात् लौकिकं राज्यादि ज्ञानिना संयक् आचरितुं शक्यम् ॥

(சு-ம்.)

அதனால் இவ்வாறு தத்துவஞான மிருக்குங்கால் மனமுதலிய வியவகாரத்தின் சாமக்கிரிவடிவசாதனத்தின் விநாச மில்லாமையால் ஞானியினால் இலௌகிகமாவது அல்லது இராஜ்ஜியமுதலியனவாவது செவ்வையாய் ஆசரிக்கக்கூடியனவாம்.

(வி-ம்.)

எந்தக்காரணத்தால் இந்த ௧௦௪௯—௧௦௭௧ சுலோகங்களிற் கூறிவிதமாகத் தத்துவவிஞ்ஞானத்தின் சாதனமாகிய மனமுதலியன நாசமாகாமையால் இலௌகிககர்மமாவது இராஜ்ஜியபரிபாலனமுதலிய கர்மமாவது ஞானவான்களால் செவ்வையாய் ஆசரிக்கத்தக்கனவா மென்பது பொருள்.

[௧௦௭௩] मिथ्यात्वबुद्ध्या तत्रेच्छा नास्ति चेत्तर्हि मास्तु तत् ।
ध्यायन्वाथ व्यवहरन्यथारब्धं वसत्वयम् ॥ ११५ ॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவஞானிக்குப் பிரபஞ்சத்தினது மித்தியாத்தன்மையின் ஞானத்தினால் அந்தப் பிரபஞ்சத்தில் இச்சையே யுண்டாகாதென்று கூறின், அப்போது தனது கர்மாநுசாரம் நடக்குக வென்று கூறுகின்றார்:—

मिथ्यात्वबुद्ध्या तत्र इच्छा न अस्ति चेत् । तर्हि तत् मा अस्तु । अयं ध्यायन् वा अथ व्यवहरन् यथारब्धं वसतु ॥

(சு-ம்.)

மித்தியாத்தன்மையின் புத்தியினால் அப்பிரபஞ்சத்தில் எப்போது இச்சை யில்லையோ, அப்போது அஃதிருக்கவேண்டாம். இந்த ஞானி தியானஞ்செய்கின்றவனாயாவது வியவகாரஞ்செய்கின்றவனாயாவது பிராரப்தகர்மத்தின்படி வாசஞ்செய்க. (௧௧௫)

௨. ஞானியினும் உபாசகன் வேறுதல்

௧௦௭௪—௧௦௭௮.

௧. ஏது திருஷ்டாந்தங்களோடு உபாசகனுக்கு எப்போதும் தியானம் செய்யவேண்டியதாதல்.

[௧௦௭௪] उपासकस्तु सततं ध्यायन्नेव वसेद्यतः ।
ध्यानेनैव कृतं तस्य ब्रह्मत्वं विष्णुतादिवत् ॥ ११६ ॥

(அ-கை.)

இப்போது உபாசகனுக்கு இந்த ஞானியினும் விலக்ஷணத்தன்மை யைக் காட்டுகின்றார்:—

उपासकः तु सततं ध्यायन् एव वसेत् ॥

(சு-ம்.)

உபாசகனோ நிரந்தரம் மரணபரியந்தம் தியானம் செய்துகொண்டிருக்கவேண்டும்.

(அ-கை.)

அதிற் காரணத்தைக் கூறுகின்றார்:—

यतः तस्य ब्रह्मत्वं ध्यानेन एव कृतं ॥

(சு-ம்.)

எதனால் அவ்வுபாசகனுக்குப் பிரஹ்மத்துவம் தியானத்தினாலேயே செய்யப்பட்டிருக்கின்றதோ அதனால்.

(வி-ம்.)

எக்காரணத்தால் அவ்வுபாசகனது பிரஹ்மத்துவம் தியானத்தினாலேயே செய்யப்பட்டிருக்கின்றதோ, பிரமாணத்தினாலுண்டாகிய பிராமாணத்தின் விஷயமாக்கப்படவில்லையோ, அதனால் தியானியாகிய உபாசகன் எப்போதும் தியானஞ்செய்யவேண்டு மென்பது பொருள்.

(அ-கை.)

அந்தத்தியானத்திற் செய்யப்பட்ட பிரஹ்மத்தன்மையில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

विष्णुतादिवत् ॥

(சு-ம்.)

விஷ்ணுத்தன்மைமுதலியவற்றைப்போல.

(வி-ம்.)

எப்படி ஓர்சகுணவுபாசகனால் தன்னிடத்துத் தியானத்தினால் சம்பாதிக்கப்பட்ட விஷ்ணுத்தன்மைமுதலியவற்றின் பாரமார்த்திகத்துவ மில்லையோ, அதுபோல இந்நிர்க்குணோபாசகனது பிரஹ்மத்தன்மையும் பாரமார்த்திக மன்று என்பது பொருள். (கககூ)

உ. தியானத்திற் சம்பாதிக்கப்பட்ட பிரஹ்மத்தன்மை வாஸ்தவமாகாமையும், ஞானத்தினல் பிரகாசிக்கப்பட்ட பிரஹ்மத்தன்மை வாஸ்தவமாதலும்.

[கO௭௫] ध्यानोपादानकं यत्तद्ध्यानाभावे विलीयते ।
वास्तवी ब्रह्मता नैव ज्ञानाभावे विलीयते ॥ ११७ ॥

(அ-கை.)

அப்படியானல் தியானத்தினல் சம்பாதிக்கப்பட்டதாகியும் அந்தப் பிரஹ்மத்தன்மைக்குப் பாரமார்த்திகத்துவம் எப்படி யுண்டாகாதென் றுசங்கித்துத், தியானத்திற் சம்பாதிக்கப்பட்ட வாக்குவடிவ தேனுத் தன்மைமுதலியவற்றினது தியானம் நீங்கவே நீங்குதலைக் காண்பதனல் தியானத்தினல் சம்பாதிக்கப்பட்டதற்குப் பாரமார்த்திகத்தன்மை யில்லை யென்று கூறுகின்முர் :—

ध्यानोपादानकं यत् तत् ध्यानाभावे विलीयते ॥

(சு-ம்.)

தியானத்தைக் காரணமாகவுடையது எதுவோ அது தியானமில்லாத போது ஒடுங்குகின்றது.

(அ-கை.)

ஞானத்திற் பிரகாசிக்கப்பட்ட பிரஹ்மத்தன்மை அந்தத்தியானத் திற் சம்பாதிக்கப்பட்ட பிரஹ்மத்தன்மையினும் வேருதலைக் கூறுகின் முர் :—

वास्तवी ब्रह्मता ज्ञानाभावे न एव विलीयते ॥

(சு-ம்.)

வாஸ்தவமாகிய பிரஹ்மத்தன்மை எதுவோ அது ஞானமில்லாத போது விலயமாகாது.

(வி-ம்.)

இங்கு வாஸ்தவ மென்னும் சொல் ஏதுகர்ப்பித (காரணத்தையுள் ளடக்கிய) விசேஷணமாம். எதனல் பிரஹ்மத்தன்மை வாஸ்தவமோ அத ஞல் ஞாபகமான அதாவது பிரகாசிக்கும் ஞானம் இல்லாததாகும்போதும் விலயமாகிறதில்லை யென்பது பொருள். (ககஎ)

௯. ஞானமில்லாமையால் அவிநாசி ஞேயப்பிரஹ்மம் ஞானத்தினால் உண்டாக்கப்படாமை.

[௧0௭௯] ततोऽभिज्ञापकं ज्ञानं न नित्यं जनयत्यदः ।
ज्ञापकाभावमात्रेण न हि सत्यं विलीयते ॥ ११८ ॥

(அ-கை.)

வாஸ்தவமாதலாலேயே பிரஹ்மத்தன்மை ஞானத்தி னுண்டாகியதன் றென்று கூறுகின்றார்:—

ततः अभिज्ञापकं ज्ञानं नित्यं अदः न जनयति ॥

(சு-ம்.)

ஆதலால் அபிஞாபகமாகிய ஞானம் நித்தியமாகிய இந்தப் பிரஹ்மத் தன்மையை யுண்டாக்குகிற தில்லை.

(வி-ம்.)

எதனால் இந்தப் பிரஹ்மத்தன்மை நித்தியமோ, அதனால் ஞானம் அந்தப்பிரஹ்மத்தன்மையினை யறிவிப்பதேயாம்; அதனை யுண்டுபண்ணுவதன்று என்பது பொருள்.

(அ-கை.)

அந்தப்பிரஹ்மதன்மை ஆக்கப்பட்டதன் றென்பதில் வெதிரேகமுகத்தால் காரணங் கூறுகின்றார் :—

हि ज्ञापकाभावमात्रेण सत्यं न विलीयते ॥

(சு-ம்.)

எதனால் ஞாபகத்தின் அபாவமாத்திரத்தால் சத்தியவஸ்து விலயமாகிறதில்லையோ அதனால்.

(வி-ம்.)

இங்கு இஃது அபிப்பிராயமாம் :--பிரஹ்மத்தன்மை ஞானத்தினலாக்கப்பட்டதாயின், அப்போது ஞானம் நாசமானபோது தான் விலயமாகும்; விலயமாகிறதில்லை. ஆதலால் ஞானத்தினலாகியதன் றென்பது பொருள். (௧௧௮)

௨. உபாசகனுக்குப் பிரஹ்மத்தன்மை யுண்டென்னும் சங்கையும் அதற்குப்பாமர பசுமுதலியவற்றிலும் சம்மாதல்.

[௧0௭௭] अस्त्येवोपासकस्यापि वास्तवी ब्रह्मतेति चेत् ।
पामराणां तिरश्चां च वास्तवी ब्रह्मता न किम् ॥ ११९

(அ-கை.)

அப்படியானால் ஞானியினைப்போல உபாசகனது பிரஹ்மத்தன்மையும் வாஸ்தவமேயா மென்று வாதி சங்கிக்கின்றான்:—

उपासकस्य अपि ब्रह्मता वास्तवी एव अस्ति इति चेत् ॥

(சு-ம்.)

உபாசகனது பிரஹ்மத்தன்மையும் வாஸ்தவமே யென்று கூறின்.

(அ-கை.)

இது உன்னால் மிகச்சொற்பமாகச் சொல்லப்படுகின்ற தென்னும் அபிப்பிராயமாகச் சித்தாந்தி கூறுகின்றார் :—

पामराणां च तिरश्चां ब्रह्मता वास्तवी किं न ॥

(சு-ம்.)

அப்போது பாமரபுருஷர்கள், திரியக்குவடிவ பசுபக்ஷிமுதலியன வென்பவற்றின் பிரஹ்மத்தன்மை வாஸ்தவமன்றோ? வாஸ்தவமே.(௧௧௯)

ரு. உபாசகன், பாமரன்முதலியோர்களது பிரஹ்மத்தன்மை புருஷார்த்தமாகா மையும், மற்றச் சாதனங்களை விட உபாசனை மேலாதலும்.

[௧௨௦அ] अज्ञानादपुमर्थत्वमुभयत्रापि तत्समम् ।
उपवासाद्यथा भिक्षा वरं ध्यानं तथान्यतः ॥ १२० ॥

(அ-கை.)

அப்படியானால் பாமரர்முதலியோர்களுக் கிருந்தும், அந்தப் பிரஹ்மத்தன்மை அறியப்படாததா யிருத்தலின் புருஷார்த்தமாகிய மோக்ஷத்தில் உபயோகமுள்ளதன்றென் றுசங்கித்து, உபாசகனது பிரஹ்மத்தன்மையும் அறியப்படாததா யிருத்தலின் புருஷார்த்தத்தில் உபயோகமில்லாததன் சமானமா மென்று கூறுகின்றார் :—

अज्ञानात् अपुमर्थत्वं तत् उभयत्र अपि समम् ॥

(சு-ம்.)

அஞ்ஞானத்தினால் எந்தப் புருஷார்த்தத்தன்மை யில்லையோ, அது பாமராதிகளும் உபாசகர்களுமாகிய அவ்விருவர்களது பிரஹ்மத்தன்மை யினும் சமமாம்.

(அ-கை.)

அப்படியானல் அப்போது உபாசனை எதன்பொருட்டுச் சொல்லப் படுகின்றதென் ருசங்கித்து, வேறு அநுஷ்டானத்தினும் சிரேஷ்டமாகும் அபிப்பிராயமாகக் கூறியிருக்கிற தென்று திருஷ்டாந்தபூர்வகமாகக் கூறு கின்ருர் :—

यथा उपवासात् भिक्षा तथा अन्यतः ध्यानं वरम् ॥

(சு-ம்.)

எப்படி உபவாசத்தினும் பிக்ஷை சிரேஷ்டமோ, அப்படி வேறு சாத னங்களினும் உபாசனை சிரேஷ்டமாம். (௧௨0)

௩. நிர்க்குணேபாசனையின் மேன்மையோடு அதன் பயனுகிய முக்தியைக் கூறுதல் ௧௨௧-௧௩௩.

௧. மற்ற அநுஷ்டானங்களினும் நிர்க்குணேபாசனை சிரேஷ்டமாதல்.

[௧௨௧] पामराणां व्यवहृतेर्वरं कर्माद्यनुष्ठितिः ।
ततोऽपि सगुणोपास्तिर्निर्गुणोपासना ततः ॥ १२१ ॥

(அ-கை.)

மற்ற அநுஷ்டானங்களினும் நிர்க்குணவுபாசனை மேலான தென்பத னைக் காட்டுகின்ருர் :—

पामराणां व्यवहृतेः कर्माद्यनुष्ठितिः वरं । ततः अपि सगुणोपास्तिः । ततः निर्गुणोपासना ॥

(சு-ம்)

பாமரர்களது பயிர்த்தொழில்முதலிய வியவகாரங்களினும் கர்மமுத லியவற்றின் அநுஷ்டானம் மேலானதாம். அக்கர்மமுதலியவற்றினும் சகு ணேபாசனை மேலானது. அச்சகுணேபாசனையினும் நிர்க்குணேபாசனை மேலானது. (௧௨௧)

௨. பின் பின் சாதனங்களின் மேன்மையும் நிர்க்குணவுபாசனை எல்லாவற் றினும் மேலாதலும்.

[௧௨௨] यावद्विज्ञानसामीप्यं तावच्छ्रैष्ठ्यं विवर्धते ।
ब्रह्मज्ञानायते साक्षान्निर्गुणोपासनं शनैः ॥ १२२ ॥

(அ-கை.)

பின் பின் சாதனங்கள் சிரேஷ்டமாதலிற் காரணத்தைக் கூறுகின்றார் :—

यावत् विज्ञानसामीप्यं तावत् श्रैष्ठ्यं विवर्धते ॥

(சு-ம்.)

எவ்வளவு விஞ்ஞானத்தினைச் சமீபிக்குந்தன்மையுண்டோ அவ்வளவு சிரேஷ்டத்தன்மை விருத்தி யாகின்றது.

(அ-கை.)

நிர்க்குணோபாசனை எல்லாவற்றினும் மேலாதலில் காரணத்தைக் கூறுகின்றார் :—

निर्गुणोपासनं शनैः साक्षात् ब्रह्मज्ञानायते ॥

(சு-ம்.)

நிர்க்குணோபாசனை சிலகாலத்தில் சாக்ஷாத் பிரஹ்மஞானத்தினைப்போலாகின்றது. ஆதலால் எல்லாவற்றினும் மேலானதாம். (கஉஉ)

ரு. சுலோகம் கoஅo-ல் கூறிய அர்த்தத்தைத் திருஷ்டாந்தத்தினால் திடப்படுத்துதல்.

[கoஅக] यथा संवादिविभ्रांतिः फलकाले प्रमायते ।
विद्यायते तथोपास्तिर्मुक्तिकालेऽतिपाकतः ॥ १२३ ॥

(அ-கை.)

சுலோகம் கoஅo-ல் கூறிய அர்த்தத்தினைத் திருஷ்டாந்தத்தினைக் காட்டுதலை முன்னிட்டுத் திடப்படுத்துகின்றார் :—

यथा संवादिविभ्रांतिः फलकाले प्रमायते । तथा उपास्तिः अतिपाकतः मुक्तिकाले विद्यायते ॥

(சு-ம்.)

எப்படிச் சம்வாதிப்பிராந்தி பயன்காலத்தில் பிரமாவினைப்போலவாகின்றதோ, அதுபோல உபாசனை மிக்க பரிபாகத்தால் முத்திகாலத்தில் வித்தையினைப்போ லாகின்றது. (கஉரு)

சா. சுலோகம் கoஅக-ல் கூறிய திருஷ்டாந்தத்தில் சங்கையும், நிர்க்குணவுபாசனை ஞானத்திற்கு ஏதுவாதலாற் சமாதானமும்.

[க0௮௨] संवादिभ्रमतः पुंसः प्रवृत्तस्यान्यमानतः ।
प्रमेति चेत्तथोपास्तिर्मांतरे कारणायताम् ॥ १२४ ॥

(அ-கை.)

அப்படியானால் சம்வாதிப்பிராந்தி தானே யதார்த்தஞானவடிவப் பிரமையாகாது, ஆனால் அச்சம்வாதிப்பிராந்தியினாற் பிரவர்த்தித்த புருஷனுக்கு இந்திரியவிஷய சம்பந்தத்தினால் பிரமையாகின்றதென்று வாதி சங்கிக்கின்றான் :—

संवादिभ्रमतः प्रवृत्तस्य पुंसः अन्यमानतः प्रमा । इति चेत् ॥

(சு-ம்.)

சம்வாதிப்பிரமத்தினால் பிரவர்த்தித்த புருஷனுக்கு அந்நியப்பிரமாணத்தினால் பிரமை யுண்டாகின்றதென்று கூறின்.

(அ-கை.)

உண்டாகுக. அப்போது நிர்க்குணோபாசனையும் நிதித்தியாசனவடிவினதாய் வாக்கியத்தாற்றோன்றிய அபரோக்ஷஞானத்திற் காரணமாமென்று கூறுகின்றார் :—

तथा उपास्तिः मांतरे कारणायताम् ॥

(சு-ம்.)

அப்படியே உபாசனையும் வேறு பிரமையில் காரண மாகுக. (௧௨௪)

ரு. மூர்த்தித்தியானமுதலியன ஞானத்திற்குச் சாதனமாதலை
யங்கீகரித்தலோடு நிர்க்குணோபாசனை
அவற்றினும் அதிகமாதல்.

[க0௮௩] मूर्तिध्यानस्य मंत्रादेरपि कारणता यदि ।
अस्तु नाम तथाप्यत्र प्रत्यासत्तिर्विशिष्यते ॥ १२५ ॥

(அ-கை.)

அப்படியானால் இவ்வாறிருக்குமாயின் மூர்த்தித்தியானமுதலியனவும் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையினைச் சம்பாதித்தல்வாயிலாக அபரோக்ஷ ஞானத்தின் சாதனமாமேயென்று கூறின், அப்போது அதுவும் அங்கீகரிக்கப்படுகின்றதென்று கூறுகின்றார் :—

मूर्तिध्यानस्य मंत्रादेः अपि यदि कारणता अस्तु नाम ॥

(த-ம்.)

மூர்த்தித்தியானமும் மந்திரமுதலியனவும் ஞானத்திற்குக் காரணமா மாயின் அப்போது ஆகுக.

(அ-கை.)

அப்போது நிர்க்குணோபாசனையில் அதிசயம் யாதெனக் கூறுகின்றார் :—

तथापि अत्र प्रत्यासत्तिः विशिष्यते ॥

(த-ம்.)

அப்படியானாலும் இந்நிர்க்குணோபாசனையில் பிரத்தியாசத்தி யதிக முண்டாகின்றது.

(வி-ம்.)

பிரத்தியாசத்தியாவது ஞானத்தைக் குறித்துச் சமீபித்தல். (கஉரு)

கூ. நிர்க்குணோபாசனை ஞானத்திற்குச் சமீபித்திருக்குங்கிரமம்.

[கO அச] निर्गुणोपासनं पक्वं समाधिः स्याच्छनैस्ततः ।
य: समाधिर्निरोधाख्यः सोनायासेन लभ्यते ॥ १२६ ॥

(அ-கை.)

ஞானத்தைக் குறித்துச் சமீபித்திருக்கும் கிரமத்தினையே கூறுகின்றார் :—

निर्गुणोपासनं पक्वं समाधिः स्यात् । ततः शनैः निरोधाख्यः यः समाधिः सः अनायासेन लभ्यते ॥

(த-ம்.)

நிர்க்குணோபாசனை எப்போது பக்குவமாமோ அப்போது சமாதி யுண்டாகின்றது. அதன் பின் மெதுவாக நிரோத மென்னும் சமாதி யெதுவோ அது ஆயாசமின்றிக் கிடைக்கின்றது.

(வி-ம்.)

நிர்க்குணோபாசனை எப்போது பக்குவமாகிறதோ அப்போது சவிகற்பசமாதி யுண்டாகின்றது. அச்சவிகற்பசமாதியினின்றும் "அதுவும் நிரோதமாகச் சகலவிருத்திகளும் நிரோதமாதலால் நிர்ப்பீஜசமாதி யுண்டாகின்றது." என்று பதஞ்சலிசூத்திரத்திற் சொல்லப்பட்டிருக்கும் லக்ஷண முடைய நிரோத மென்னும் நிருவிகற்பசமாதி கிரமமின்றிக் கிடைக்கின்றது.

[கO௨௭] निरोधलाभे पुंसोंतरसंगं वस्तु शिष्यते ।
पुनः पुनर्वासितेस्मिन्वाक्याज्जायेत तत्त्वधीः ॥ १२७ ॥

(அ-கை.)

இப்படி நிருவிகற்பசமாதியின் இலாப மிருக்குக. அதனால் என்ன பய னுண்டாகின்றதெனக் கூறுகின்றார் :—

निरोधलाभे पुंसः अंतः असंगं वस्तु शिष्यते ॥

(சு-ம்.)

நிரோதம் இலபிக்கவே புருஷனுள்ளில் அசங்கவஸ்து சேஷமா யிருக் கின்றது.

(அ-கை.)

அவ்வசங்கவஸ்து மிஞ்சுவதனாலும் என்ன வுண்டாகின்றதெனக் கூறுகின்றார் :—

अस्मिन् पुनः पुनः वासिते वाक्यात् तत्त्वधीः जायेत ॥

(சு-ம்.)

அடிக்கடி இதன் வாசனை யேற வாக்கியத்தினால் தத்துவபுத்தி யுண் டாகின்றது.

(வி-ம்.)

அடிக்கடி இவ்வசங்கவஸ்துவின் வாசனை யேற அதாவது அது அடிக் கடி பாவிக்கப்பட தத்துவமஸிமுதலிய வாக்கியத்தினால் தத்துவபுத்தி அதாவது "நான் பிரஹ்மம்" என்னும்வடிவ தத்துவஞான முண்டாகின் றது. (கஉ௭)

௭. தத்துவஞானத்தின் சொரூபம்.

[கO௨௮] निर्विकारासंगनित्यस्वप्रकाशैकपूर्णताः ।
बुद्धौ झटिति शास्त्रोक्ता आरोहंत्यविवादतः ॥ १२८ ॥

(அ-கை.)

தத்துவஞானத்தின் சொரூபத்தினையே விளக்குகின்றார் :—

शास्त्रोक्ताः निर्विकारासंगनित्यस्वप्रकाशैकपूर्णताः अविवादतः झटिति बुद्धौ आरोहन्ति ॥

(சு-ம்.)

சாஸ்திரத்திற் கூறிய நிர்விகாரத்தன்மை, அசங்கத்தன்மை, நித்தியத் தன்மை, சொப்பிரகாசத்தன்மை, ஏகத்துவம், பூரணத்துவமுதலிய ஆத்மாவின் விசேஷணங்கள் விவாதமின்றி உடனே புத்தியில் நிலைபெறுகின்றன. (க௨அ)

அ. நிருவிகற்பசமாதியினின்றும் அபரோக்ஷஞான முண்டாதலில் பிரமாணமும், பலிதமும்.

[க0அஎ] योगाभ्यासस्त्वेतदर्थोऽमृतबिंद्वादिषु श्रुतः ।
एवं च दृष्टद्वारापि हेतुत्वादन्यतो वरम् ॥ १२९ ॥

(அ-கை.)

அப்படியானால் நிருவிகற்பசமாதியின்வசத்தால் அபரோக்ஷஞான முதயமாகின்றதென்பதில் பிரமாணம் யாதென்றாசங்கித்து, அமிருதபிந்து முதலிய சுருதிகள் யாவும் பிரமாணமாமென்று கூறுகின்றார்:—

एतदर्थः तु अमृतबिंद्वादिषु योगाभ्यासः श्रुतः ॥

(சு-ம்.)

இவ்வபரோக்ஷஞானத்தின்பொருட்டு அமிருதபிந்துமுதலிய உபநிஷதங்களில் யோகாப்பியாசம் கேட்கப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார் :—

एवं च दृष्टद्वारा अपि हेतुत्वात् अन्यतः वरम् ॥

(சு-ம்.)

இப்படித் திருஷ்டத்துவாரத்தினாலும் ஏதுவாதலால் மற்றவற்றினும் மேலானதாம்.

(வி-ம்.)

இவ்வாறாகவே அதாவது நிர்க்குணோபாசகர்களுக்கும் அபரோக்ஷஞானத்தின் சமீபத்தன்மை சம்பவிக்கவே திருஷ்டத்துவாரத்தால் அதாவது நிருவிகற்பசமாதியின் லாபவடிவப் பிரத்தியக்ஷத்துவாரத்தாலும், உம் என்னும் சொல்லால் புண்ணியவுற்பத்திவடிவ அதிருஷ்டத்துவாரத்தினாலும் அபரோக்ஷஞானத்திற்குக் காரணமாதலால் மற்றச் சகுணவுபாசனை முதலிய ஞானத்தின் சாதனத்தினும் நிர்க்குணவுபாசனை மேலானதாமென்பது பொருள். (க௨௯)

௧. கிடைத்த நிர்க்குணவுபாசனையை விட்டு வேறு சாதனங்களில் பிர
விருத்தித்தவனுக்கு இலௌகிக (கரம்லேடி) நியாயத்தால்
வீண்சிரமம் வாய்த்தல்.

[௧௦அஅ] उपेक्ष्य तत्तीर्थयात्राजपादीनेव कुर्वताम् ।
पिंडं समुत्सृज्य करं लेढीति न्याय आपतेत् ॥ १३० ॥

(அ-கை.)

இப்படி நிர்க்குணோபாசனம் அபரோக்ஷஞானத்திற்குச் சாதனமாதல் சித்தித்திருக்க, அந்நிர்க்குணோபாசனத்தை விட்டு வேறு சாதனங்களில் பிரவிருத்தித்த புருஷர்களுக்கு வீண்சிரமமுண்டாகின்றதென்பதனை இலௌகிகநியாயத்தைக் காட்டுதலாற் கூறுகின்றார்:—

तत् उपेक्ष्य तीर्थयात्राजपादीन् एव कुर्वतां "पिण्डं समुत्सृज्य करं लेढि" इति न्यायः आपतेत् ॥

(சு-ம்.)

அந்நிர்க்குணோபாசனையை விட்டுத் தீர்த்தயாத்திரை ஜபமுதலியவற்றையே செய்கின்ற புருஷர்களுக்குக் "கையிலுள்ள பிண்டத்தை நழுவவிட்டுக் கையை நக்குகின்றான்" என்னும் * ௬௨ நியாயம் வாய்க்கும். ()

௧௦. விசாரத்தை விட்டு நிர்க்குணோபாசனையில் பிரவிருத்தித்தவனுக்கு
௧௦அஅ-சுலோகத்திற் கூறிய நியாயத்தின் சமானத்தன்மை
யும், நிர்க்குணோபாசனையின் உபயோகமும்.

[௧௦அக] उपासकानामप्येवं विचारत्यागतो यदि ।
बाढं तस्माद् विचारस्यासंभवे योग ईरितः ॥ १३१ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மதத்துவத்தின் விசாரத்தைவிட்டு நிர்க்குணோபாசனையைச் செய்யும் புருஷர்களுக்கும் இந்தநியாயம் சமானமாமென்றுசங்கித்து அங்கீகரிக்கின்றார்:—

उपासकनां अपि विचारत्यागतः यदि एवं बाढं ॥

* ௬௨. ஓர் கிரகஸ்தன் வீட்டில் பந்தியில் போஜனத்தின்பொருட்டு உட்கார்ந்துள்ள ஒரு பிராஹ்மணனுக்குச் சர்வசாதாரணமாக ஒரு இலட்டுகம் கிடைத்தது. பின் அநநம்வந்தது. எப்போது அந்தக் கிடைத்த லட்டுகத்தைப் பின்புறம் மறைத்து எனக்கு இலட்டுகம் கிடைக்கவில்லை யென்று சொன்னனோ, அப்போது அவனுக்கு வேறு இலட்டுகம் கிடைக்கவில்லை. பின்புற மிருந்ததையும் நாய் கொண்டுபோயிற்று. பின் கையை நக்கிக்கொண்டிருந்தான், இத்திருஷ்டாந்தத்தினைச் சாஸ்திரத்தில் கரம்லேடிநியாய மென்பர்.

(சு-ம்.)

உபாசகர்களுக்கும் விசாரத்தை விடுதலால் எப்போது இப்படிக் கையை நக்குதல் என்னும் நியாயத்தின் அடைவு உண்டாகின்றதோ அப்போது உண்மையாம்.

(அ-கை.)

அப்போது நிர்க்குணோபாசனை எதனால் சொல்லப்படுகின்றதெனக் கூறுகின்றார் :—

तस्मात् विचारस्य असंभवे योगः ईरितः ॥

(சு-ம்.)

அதனால் விசாரம் சம்பவியாததாகவே யோகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

எதனால் க0அஅ-வது சுலோகத்திற் கூறிய நியாயத்தின் அடைவு உண்டாகின்றதோ, அதனால் விசாரம் சம்பவியாததாகவே யோகமாகிய உபாசனம் சொல்லப்பட்டதென்பது பொருள். (கஙக)

கக. வியாகுலசித்தமுடையவனுக்கு எதுவோடு யோகம் முக்கியமாமெனல்.

[க0கூ0] बहुव्याकुलचित्तानां विचारात्तत्त्वधीर्न हि ।
योगो मुख्यस्ततस्तेषां धीदर्पस्तेन नश्यति ॥ १३२ ॥

(அ-கை.)

விசாரம் சம்பவியாமையில் காரணத்தைக் கூறுகின்றார் :—

(சு-ம்.)

बहुव्याकुलचित्तानां हि विचारात् तत्त्वधीः न ॥

வெகுவியாகுலமுள்ள(சஞ்சல)சித்தமுடையவர்களுக்கு எதனால் விசாரத்தால் தத்துவஞான முண்டாகிறதில்லையோ அதனால்.

(அ-கை.)

எதனால் விசாரம் சம்பவிக்கிறதில்லையோ அதனால் யோகம் செய்ய வேண்டியதா மென்று கூறுகின்றார் :—

ततः तेषां योगः मुख्यः ॥

(சு-ம்.)

அதனால் அவர்களுக்கு யோகம் முக்கியமாம்.

(அ-கை.)

யோகம் முக்கியமாதலில் காரணத்தைக் கூறுகின்றார்:—

तेन धीदर्पः नश्यति ॥

(சு-ம்.)

அந்த யோகத்தினால் புத்தியின் தர்ப்பம் நாசமாகின்றது.

(வி-ம்.)

அந்த யோகத்தினால் எதனால் புத்தியின் தர்ப்பமாகிய விக்ஷேபம் நாசமாகின்றதோ, அதனால் அது முக்கியமா மென்பது பொருள். (௧௩௨)

௧௨. வியாகுலமின்றிய சித்தமுடையவனுக்கு எதுவோடு
விசாரம் முக்கியமாமெனல்.

[௧0௩௩] अव्याकुलधियां मोहमात्रेणाच्छादितात्मनाम् ।
सांख्यनामा विचारः स्यान्मुख्यो झटिति सिद्धिदः ॥ १३३ ॥

(அ-கை.)

இப்படி வியாகுலசித்தமுடைய புருஷர்களுக்கு யோகம் முக்கியமாதலைக் கூறி அந்தச் சித்தவியாகுல மின்றிய புருஷர்களுக்கு விசாரமே முக்கியமா மென்று கூறுகின்றார் :—

अव्याकुलधियां मोहमात्रेण आच्छादितात्मनां सांख्यनामा विचारः मुख्यः स्यात् ॥

(சு-ம்.)

வியாகுலமின்றிய அதாவது சாந்தமுள்ள சித்தமுடையவர்களாய் மோகமாத்திரத்தினால் எவர்களது ஆத்மா மூடப்பட்டிருக்கிறதோ, அப்படிப்பட்ட புருஷர்களுக்குச் சாங்கிய மென்னும் விசாரம் முக்கியமாம்.

(வி-ம்.)

சாங்கியசப்தத்தின் வாச்சியமாகிய தத்துவவிசாரம் முக்கியமாம்.

(அ-கை.)

எதனால் விசாரம் முக்கியமெனக் கூறுகின்றார் :—

झटिति सिद्धिदः ॥

(சு-ம்.)

அந்த விசாரம் அவர்களுக்குத் தற்காலம் ஞானவடிவ சித்தியைத் தருவதாம்; ஆதலால் முக்கியமாம். (௧௩௩)

௧௩. யோகமும் சாங்கியமுமாகிய இரண்டும் ஞானவாயிலாக முக்திக்கு ஏதுவாதலில் பிரமாணமும், விரோதமுடைய அம்சம் விடத்தக்கதாதலும்.

[௧0௬௨] यत्सांख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।
एकं सांख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥ १३४ ॥

(அ-கை.)

உபாசனைவடிவயோகம் தத்துவவிசாரமாகிய சாங்கிய மென்னும் இரண்டும் தத்துவஞானவாயிலாக முக்திக்குச் சாதனமாதலில் கீதையின் ஐந்தாவது அத்தியாயத்திலுள்ள ஐந்தாவது சுலோகவடிவ வாக்கியத்தைப் பிரமாணமாக்குகின்றார்:—

यत् स्थानं सांख्यैः प्राप्यते तत् योगैः अपि गम्यते । यः सांख्यं च योगं च एकं पश्यति सः पश्यति ॥

(சு-ம்.)

எந்தப் பதம் சாங்கியர்(விவேகி)களால் அடையப்படுகின்றதோ, அந்தப் பதம் யோகிகளாலும் அடையப்படுகின்றது. இப்படி எந்தப் புருஷன் சாங்கியத்தையும் யோகத்தையும் ஒன்றெனக் காண்கின்றானோ அந்தப் புருஷன் பார்க்கின்றான்.

(வி-ம்)

எந்தப் புருஷன் சாங்கியத்தையும் யோகத்தையும் பலத்தினால் ஒன்றெனக் காண்கின்றானோ, அவன் சாஸ்திரார்த்தத்தைச் செவ்வையாய்க் காண்கின்றானென்பது பொருள். (௧௩௪)

[௧0௬௩] तत्कारणं सांख्ययोगाभिपन्न इति हि श्रुतिः ।
यस्तु श्रुतेर्विरुद्धः स आभासः सांख्ययोगयोः ॥ १३५ ॥

(அ-கை.)

சாங்கியம் யோக மிரண்டும் முக்திக்குச் சாதனமாதலில் கீதாவாக்கிய மாத்திரமே பிரமாண மன்று; ஆனால் அந்தக் கீதாவாக்கியத்தின் மூலவடிவ சுருதியும் பிரமாணமா மென்று கூறுகின்றார்:—

तत्कारणं सांख्ययोगाभिपन्नः इति हि श्रुतिः ॥

(சு-ம்.)

"அந்தப் பிரகிருத காமங்களுக்கு எந்தத் தேவன் காரணமோ, அவனைச் சாங்கியயோகங்களோடு கூடியவனுய் அறிந்து அவித்தைமுதலிய சர்வபாசங்களினின்றும் விடுபடுகின்றான்." என்பது சுருதி.

(அகை.)

அப்படியானல் சாங்கியம் யோக மிரண்டும் தத்துவஞானவாயிலாக முக்திக்குச் சாதனமாக அங்கீகரிக்கவே, அச்சாங்கியயோகமதங்களின் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட தத்துவங்களையும் அங்கீகரித்தல் தகுதியாமே யென்றாசங்கித்துச் சொல்லுகின்றார்:—

सांख्ययोगयोः यः तु श्रुतेः वृद्धः सः आभासः ॥

(சு-ம்.)

சாங்கியயோகங்களில் சுருதிக்கு *௯௯. விரோதமான எந்த அம்சமிருக்கின்றதோ அது ஆபாசமாம்.

(வி-ம்.)

ஆபாசமா மென்பதற்குப் பாதிக்கப்படுவதா மென்பது பொருள். ()

௧௪. உபாசகனுக்குத் தத்துவஞானத்திற்குமுன் மரணமுண்டாயிற் பயன்.

[௧0௯௪] उपासनं नातिपक्वमिह यस्य परत्र सः ।
मरणे ब्रह्मलोके वा तत्त्वं विज्ञाय मुच्यते ॥ १३६ ॥

(அ-கை.)

அப்படியானல் உபாசனைசெய்யும் புருஷனுக்குத் தத்துவஞானத்திற்குமுன் மரணமுண்டாயின் மோக்ஷம் சித்தியாதென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

यस्य उपासनं इह अतिपक्वं न सः मरणे वा ब्रह्मलोके परत्र तत्त्वं विज्ञाय मुच्यते ॥

---

* ௯௯. (க) "கேவலம் பிரகிருதியே ஜகத்திற்குக் காரணமாம்; ஈசுவரனன்று. அந்தப் பிரகிருதி நித்தியமாம். ஆத்மா நாநாவாம்." என்னும் இவ்வளவு அம்சம் சாங்கியசாஸ்திரத்தில் சுருதிக்கு விரோதமாம்.

(உ) "ஈசுவரன் தடஸ்தன் அதாவது ஜகத்திற்கு வேறாயிருப்பவன். பிரதானமாகிய பிரகிருதி நித்தியமாம். ஜீவன் வாஸ்தவ நாநாவாம்." என்னும் இவ்வளவு அம்சம் யோகசாஸ்திரத்தில் சுருதிக்கு விரோதமாம்.

(சு-ம்.)

எவனது உபாசனை இச்சரீரத்தில் மிகப் பக்குவமாக வில்லையோ அவன் மரணகாலத்திலாவது பிரஹ்மலோகத்திலாவது வேறு தேகத்தில் தத்துவத்தை யறிந்து முக்தனாகின்றான். (௧௩௬)

௧௫. உபாசகனுக்கு மரணசமயத்தில் தத்துவஞானத்தால் முக்தி கிடைத்தலில் கீதையும் சுருதியும் பிரமாணமாதல்.

[௧௦௬௫ य यं वाऽपि स्मरन्भावं त्यजत्यंते कलेवरम् ।
तं तमेवैति यच्चित्तस्तेन यातीति शास्त्रतः ॥ १३७ ॥

(அ-கை.)

மரணசமயத்தில் ஞானத்தினால் முக்தி கிடைத்தலில் கீதையின் எட்டாவது அத்தியாயத்திலுள்ள ஆறாவது சுலோகவடிவப் பிரமாணத்தைக் கூறுகின்றார் :—

"यं यं वा अपि भावं स्मरन् अंते कलेवरं त्यजति । तं तं एव एति"॥ "यच्चित्तः तेन याति" इति शास्त्रतः ॥

(சு-ம்.)

"எந்தெந்தத் தேவதைமுதலியதன்மைகளை ஸ்மரிக்கின்றவனாய்க் கடைசிக்காலத்தில் சரீரத்தை விடுகின்றானோ, அந்தந்தத்தன்மையினையே அடைகின்றான்." "எத்தப் புருஷன் எதில் மனதுடையவனா யிருக்கின்றானோ, அதனோடே சேருகின்றான்." என்னும் சாஸ்திரத்தினால்.

(வி-ம்)

" यच्चित्तः तेन एव प्राणमायाति प्राणस्तेजसा युक्तः यथा संकल्पितं लोकं नयति इந்த ஜீவன் மரணகாலத்தில் எந்த லோகத்தில் சித்த மென்னும் சங்கற்பத்தைத் தரிக்கின்றானோ, அவ்விந்திரியத்தோடுகூடிய சங்கற்ப வடிவசித்தத்தினால் கூடவே பிராணனை யடைகின்றது. அதாவது க்ஷீண (குறைந்த) இந்திரியவிருத்தியுடையதாய் முக்கியவடிவப் பிராணவிருத்தியினால் நிலைத்திருக்கின்றது. அந்தப் பிராணன் தேயுவாகிய உதானவிருத்தியோடுகூடியதாய் ஆத்மாவாகிய தனது சுவாமியான போக்தாவோடு அந்தப் போக்தாவினை எந்த உலகத்தின் சங்கற்பஞ் செய்திருக்கின்றானோ, அந்த லோகத்திற்குக் கொண்டுபோகின்றான்." என்னும் பிரசிேனாபநிஷத்தின் வாக்கியத்தினாலும் இஃது அறியப்படுகின்றதென்பது பொருள். ()

௧௧. சுலோகம் ௧௦௩௮-ல் கூறிய அர்த்தத்தின் நிரூபணம்.

[௧0௩௮] अंत्यप्रत्ययतो नूनं भावि जन्म तथा सति ।
निर्गुणप्रत्ययोऽपि स्यात्सगुणोपासने यथा ॥ १३८ ॥

(அ-கை.)

அப்படியானால் உதகரிக்கப்பட்ட சுருதி ஸ்மிருதியின் வாக்கியங்களால் கடைசிக்காலத்தி லுண்டாகத்தக்க விருத்தியினால் வரும்ஜன்மம் சொல்லப்படுகின்றது; ஞானத்தினால் முக்தி சொல்லப்படவில்லை யென்றாசங்கித்து, அமுக்கியமாக அவ்வாறு கூறுதலை அங்கீகாரஞ் செய்கின்றார்:—

अंत्यप्रत्ययतः नूनं भावि जन्म ॥

(சு-ம்.)

கடைசிக்காலத்துப்பாவனையால் நிச்சயமாகப் பாவனையை யநுசரித்து உண்டாகத்தக்க ஜன்மம் சொல்லப்படுகின்றது.

(அ-கை.)

அப்போது ஞானகாலத்தில் மரணத்தினால் மோக்ஷ முண்டாகின்றதென்னும் அர்த்தத்தில் இந்தச் சுருதி ஸ்மிருதிகளின் இரண்டு வாக்கியங்களும் பிரமாணமாதலால் எப்படிச் சொல்ல வாரம்பிக்கப்பட்டதென்றாசங்கித்துச் சொல்லுகின்றார்:—

तथा सति यथा सगुणोपासने निर्गुणप्रत्ययः अपि स्यात् ॥

(சு-ம்.)

அவ்வாறாகவே எப்படிச் சகுணவுபாசனையில் சகுணப்பிரத்திய முண்டாகின்றதோ, அப்படியே நிர்க்குணவுபாசனையில் நிர்க்குணப்பிரத்திய முண்டாம்.

(வி-ம்.)

அவ்வாறாகவே மரணசமயத்தின் பிரத்தியயத்தால் * ௩௪. பாவிஜன்

* ௩௪. இந்தப் பிரகரணத்திலுள்ள ௧௦௩௫-வது சுலோகத்திற் கூறிய சுருதி ஸ்மிருதிகளில் மரணகாலத்தில் செய்யப்பட்ட பிரத்தியயத்தினால் அதாவது பரலோகத்தின் சங்கற்பத்தினால் பரலோகத்தின் அடைவுவடிவ பாவி(வரும்)ஜன்மம் சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படியானாலும் கடைசிக்காலத்தில் எந்த வஸ்துவின் பிரத்திய முண்டாகின்றதோ அதன் பிராப்தி யுண்டாகின்றது. இது அந்தச் சுருதி ஸ்மிருதியின் தாற்பரியமாம். ஆதலால் சகுணப்பிரஹ்மாகாரவிருத்திவடிவ கடைசிக்காலப் பிரத்தியயத்தினால் எப்படிச் சகுணப்பிரஹ்மத்தின் பிராப்தி யுண்டாகின்றதோ, அதுபோல நிர்க்குணப்பிரஹ்மாகார கடைசிப் பிரத்தியயத்தினால் நிர்க்குணப்பிரஹ்மத்தின் பிராப்தியுண்டாகின்றது. இவ்வபிப்பிராயமாகக் கூறிய சுருதி ஸ்மிருதிகள் "நிர்க்குணோபாசகனுக்கு மரணகாலத்தில் ஞானத்தினால் மோக்ஷ முண்டாகின்றது" என்னும் அர்த்தத்தில் பிரமாணமாகுதலால் சொல்ல வாரம்பித்திருக்கின்றாரென்பது தாற்பரியம்.

மத்தின் நிச்சய முண்டாக, சகுணவுபாசகனுக்கு எப்படி மரணசமயத்தில் முன் பழக்கவசத்தால் சகுணப்பிரஹ்மாகாரப்பிரத்தியய மென்னும் ஞான முண்டாகின்றதோ, இவ்வாறே நிர்க்குணோபாசகனுக்கும் நிர்க்குணப்பிரஹ்ம மாகாரப்பிரத்தியய முண்டாகும். (௧௩௮)

௧௭. நிர்க்குணப்பிரத்தியயத்தின் அப்பியாசத்தால் அடையத்தக்க நிர்க்குணப் பிரஹ்மத்தின் மோக்ஷவடிவத்தன்மை.

[௧௦௯] नित्यनिर्गुणरूपं तन्नाममात्रेण गीयताम् ।
अर्थतो मोक्ष एवैष संवादिभ्रमवन्मतः ॥ १६९ ॥

(அ-கை.)

அப்படியானால் நிர்க்குணப்பிரத்தியயத்தின் அப்பியாசவசத்தால் நிர்க் குணப்பிரஹ்மத்தின் அடைவே யுண்டாகின்றது, முக்தியுண்டாகிறதில்லை யென் றாசங்கித்து, பிரஹ்மத்தினடைவிற்கும் முக்திக்கும் பெயர்மாத்தி ரத்தால் பேதமாம்; பொருளாற் பேத மில்லை யென்று கூறுகின்றார்:—

तत् नित्यनिर्गुणरूपं नाममात्रेण गीयतां । अर्थतः एषः मोक्षः एव ॥

(சு-ம்.)

அந்தப் பிரஹ்மம் நித்தியநிர்க்குணரூபமாகப் பெயர்மாத்திரத்தாற் சொல்லப்படுகின்றது. பொருளால் இது மோக்ஷமேயாம.

(வி-ம்.)

“तत् ब्रह्म नित्यं அந்தப் பிரஹ்மம் நித்தியமாம்; நிர்க்குணமாம்.” என்று பெயர்மாத்திரத்தினால் சொல்லப்படுகின்றது. ஆனால் பொருளால் இது மோக்ஷமேயாம். ஏனெனின், “स्वरूपावस्थितिर्मुक्तिः சொரூபமாக நிலைத் தல் முகதியாம்” என்று முக்திலக்ஷணம் சொல்லப்படுதலாலென்பது தாற்பரியம்.

(அ-கை.)

அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்.—

संवादिभ्रमवत् मतः ॥

(சு-ம்.)

சம்வாதிப்பிரமத்தினைப்போல அது மோக்ஷவடிவமாகக் கொள்ளப் பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

எப்படிச் சம்வாதிப்பிரமம் பெயர்மாத்திரத்தினால் பிரமமெனப்பட்டு உண்மையாகத் தத்துவஞானமே யாகுமோ, அதுபோல வென்பது பொருள். (௧௩௯)

௧௮. திருஷ்டாந்தத்தினால் நிர்க்குணவுபாசனையின் ஞானவாயிலாக முக்திக்குக் காரணமாதலில் விரோதமின்மை.

[௧0௯௮] तत्सामर्थ्याज्जायते धीर्मूलाविद्यानिवर्तिका ।
अविमुक्तोपासनेन तारकब्रह्मबुद्धिवत् ॥ १४० ॥

(அ-கை.)

அப்படியானால் மானஸக்கிரியைவடிவ நிர்க்குணோபாசனை முக்திக்குச் சாதனமா மென்று கூறுதல் விரோதமுடையதாமென் றாசங்கித்து, அந்நிர்க் குணவுபாசனத்தா லுண்டாகியஞானம் மோக்ஷத்திற்குச் சாதனமா மென்று கூறுதலால் விரோத மில்லை யென்று கூறுகின்றார் :—

तत्सामर्थ्यात् मूलविद्यानिवर्तिका धीः जायते ॥

(சு-ம்.)

அந்நிர்க்குணவுபாசனத்தின் சாமர்த்தியத்தால் மூலாவித்தையை நிவர்த்திப்பதான புத்தி யுண்டாகின்றது.

(அ-கை.)

அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார் :—

अविमुक्तोपासनेन तारकब्रह्मबुद्धिवत् ॥

(சு-ம்.)

அவிமுக்தமான சகுணப்பிரஹ்மத்தின் உபாசனத்தால் தாரகப் பிரஹ்மபுத்தியைப்போல.

(வி-ம்.)

எப்படி அவிமுக்தவடிவ சகுணப்பிரஹ்மத்தினது உபாசனத்தின் சாமர்த்தியத்தால் தாரகப்பிரஹ்மமாகிய சகுணப்பிரஹ்மத்தின் வித்தை யுண்டாகின்றதோ, அதுபோல நிர்க்குணவுபாசனத்தினால் நிர்க்குணப்பிர ஹ்மத்தின் ஞான முண்டாகின்ற தென்பது பொருள். (௧௪0)

கக. நிர்க்குணவுபாசனைப் பயனுகிய மோக்ஷத்தில் சுருதிப்பிரமாணம்.

[௧0௧௧] सोऽकामो निष्काम इति ह्यशरीरो निरिंद्रियः ।
अभयं हीति मुक्तत्वं तापनीये फलं श्रुतम् ॥ १४१ ॥

(அ-கை.)

அப்படியானுல் நிர்க்குணோபாசனத்திற்கு மோக்ஷம் பயனு மென்பதில் பிரமாணம் யாதென் ருசங்கித்துக் கூறுகின்ருர்:—

"सः अकामः निष्कामः" इति "हि अशरीरः निरिन्द्रियः" "अभयं हि" इति तापनीये मुक्तत्वं फलं श्रुतम् ॥

(சு-ம்)

"அவ்வகாமன் நிஷ்காமனுகின்ருன்." என்றும், "சரீரமில்லாதவனும் இந்திரியமில்லாதவனு மாகின்ருன்." என்றும், "அபய மென்னும் பிரஹ்மமே யாகின்ருன்." என்றும் தாபநீயவுபநிஷத்தில் நிர்க்குணவுபாசனத்திற்கு மோக்ஷவடிவ பயன் கேட்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

"सोऽकामो निष्काम आप्तकाम आत्मकामो न तस्य प्राणा उत्क्रामंत्यत्रैव समवलीयंते ब्रह्मैव सन्ब्रह्माप्येति अशरीरो निरिन्द्रियः अप्राणो ह्यमनाः सच्चिदानंदमात्रः स स्वराट् भवति । य एवं वेद चिन्मयो ह्ययमोंकारश्चिन्मयमिदं सर्वं तस्मात् परमेश्वर एवैकमेव तद्भवत्येतदमृतं अभयं एतद्ब्रह्माभयं वै ब्रह्म भवति य एवं वेदेति रहस्यम्" "அவ்வுபாசகன் அகாமன் அதாவது உள்ளே இராகமின்றியவன் நிஷ்காமன் அதாவது வெளிவிஷய இராகமின்றிய ஆப்த (அடையப்பட்ட)காமனும் ஆத்மகாமனு மாகின்ருன். அவன் பிராணன் அந்நிய லோகத்திலாவது தேகத்திலாவது செல்லுதலாகிய உற்கிரமணஞ் செய்கிறதில்லை. ஆனுல் இவ்வுலகசம்பந்தியான இத்தேகத்திலே செவ்வையாக ஒடுங்குகின்றது." "பிரஹ்மமாகியே பிரஹ்மத்தை யடைகின்ருன்" "அவன் அசரீரியும் அதிந்திரியனும் அப்பிராணனும் அமனனுமாகின்ருன். அவன் சச்சிதாநந்தமாத்திர சுவராட்டு அதாவது சொப்பிரகாச னுகின்ருன்." "எந்தப் புருஷன் சின்மயம் இவ்வோங்காரம் சின்மயம் இவ்வெல்லாம் என்றிவ்வா றறிகின்ருனே, அதனுல் அவன் ஒரே பரமேசுவரனே யாகின்ருன். இது அமிருதம்; அபயம்; இந்தப் பிரஹ்மம் அபயப்பிரஹ்மமேயாம் என்று எவன் இந்த இரகசியத்தை யறிகின்ருனே" என்றல் முதலிய வாக்கியங்களால் தாபநீயவுபநிஷத்தில் நிர்க்குணவுபாசனையின் பயனுக மோக்ஷம் கேட்கப்படுகின்றதென்பது பொருள். (கசக)

௨0. சுலோகம் ௧0௧௬-ல் கூறிய சுருதிக்கு ஞானத்தினால் மோக்ஷத்தைப் பிரதிபாதிக்கும் சுருதியோடு விரோதமின்மை.

[௧௧00] उपासनस्य सामर्थ्याद्विद्योत्पत्तिर्भवेत्ततः ।
नान्यः पंथा इति ह्येतच्छास्त्रं नैव विरुध्यते ॥ १४२ ॥

(அ-கை.)

அப்படியானால் உபாசனையினால் முக்தியுண்டாகுமாயின், அப்போது "नान्यः पंथा विद्यतेऽयनाय ॥ மோக்ஷமடைதற்பொருட்டு வேறு (ஞானத்திற்கு வேறாகிய) வழி யில்லை." என்னும் சுருதிக்கு விரோத முண்டாகுமே யென் றாசங்கித்து, உபாசனைக்கு வித்தையின் ஞானவடிவ துவாரத்தால் மோக்ஷத்தினைத் தருந்தன்மையைச் சொல்லுதலால் சுருதிக்கு விரோத மில்லை யென்று கூறுகின்றார் :—

उपासनस्य सामर्थ्यात् विद्योत्पत्तिः भवेत् । ततः अन्यः पंथा न । इति हि एतत् शास्त्रं न एव विरुध्यते ॥

(சு-ம்.)

உபாசனத்தின் சாமர்த்தியத்தால் வித்தையின் உற்பத்தி யுண்டாகின்றது. அதனால் "வேறு வழியில்லை." என்னும் சுருதிவாக்கியம் விரோத மடைகிறதில்லை. (௧௪௨)

௨௧. நிர்க்குணவுபாசகனுக்கு மரணகாலத்திலாவது பிரஹ்மலோகத்திலாவது ஞானத்தினால் முக்தியா மென்பதில் சுருதி.

[௧௧0௧] निष्कामोपासनान्मुक्तिस्तापनीये समीरिता ।
ब्रह्मलोकः सकामस्य शैब्यप्रश्ने समीरितः ॥ १४३ ॥

(அ-கை.)

"मरणे ब्रह्मलोके वा तत्त्वं विज्ञाय मुच्यते ॥ மரணகாலத்திலாவது பிரஹ்மலோகத்திலாவது தத்துவத்தை யறிந்து முக்தனாகின்றான்." என்னும் ௧0௬௪-வது சுலோகத்தில் கூறிய அர்த்தத்தில் சுருதியைப் பிரமாணமாக்குகின்றார் :—

तापनीये निष्कामोपासनात् मुक्तिः समीरिता । सकामस्य शैब्यप्रश्ने ब्रह्मलोकः समीरितः ॥

(சு-ம்.)

தாபநீயவுபநிஷத்தில் நிஷ்காமவுபாசனத்தால் முக்தி சொல்லப்பட்டிருக்கின்றது. சகாமவுபாசகனுக்குச் சைப்பியப்பிரசினவுபநிஷத்தில் பிரஹ்மலோகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

அவற்றில் "सो अ कामः ॥ அவன் அகாமன்" என்றல்முதலிய தாபநீயவுபநிஷதத்தின் வாக்கியம் முன் ௧௦௬௬-வது சுலோகத்திலேயே சொல்லப்பட்டிருக்கின்றது. (௧௪௩)

[௧௧௦௨] य उपास्ते त्रिमात्रेण ब्रह्मलोके स नीयते ।
स एतस्माज्जीवघनात्परं पुरुषमीक्षते ॥ १४४ ॥

(அ-கை.)

இப்போது சைப்பியப்பிரசினோபநிஷத்தின் வாக்கியத்தை அர்த்தத்தாற் படிக்கின்றார் :—

यः त्रिमात्रेण उपास्ते । सः ब्रह्मलोके नीयते ॥

(சு-ம்.)

எவன் மூன்று மாத்திரையினால் உபாசிக்கின்றானோ அவன் பிரஹ்மலோகத்தை யடைகின்றான்.

(வி-ம்.)

" यः पुनरेतत् त्रिमात्रेण ओमित्यनेन वाऽक्षरेण परं पुरुषमभिध्यायीत स तेजसि सूर्ये संपन्नः यथा पादोदरस्त्वचा विनिर्मुच्यते एवं ह वै स पाप्मना विनिर्मुक्तः स सामभिरुन्नीयते ब्रह्मलोकं स एतस्माज्जीवघनात्परं पुरिशय पुरुषमीक्षते எவன் மறுபடியும் மூன்று மாத்திரையுடைய ஓமென்னும் அக்ஷரத்தினாலேயே அந்தப் பரமபுருஷனாகிய பிரஹ்மத்தைத் தியானிக்கின்றானோ, அவன் தேயுவடிவ சூரியனை யடைந்து பாம்பானது சட்டையினின்றும் விடுபடுவதுபோல நிச்சயமாக அவ்வுபாசகன் பாபத்தினின்றும் விடுபடுகின்றான். அம்மந்திராபிமானி சாமவேதங்களால் பிரஹ்மலோகத்திற்குப் போகின்றான். அவன் இந்த ஜீவகனத்தினின்றும் பரமசரீரவடிவ புரியிலிருக்கும் புருஷனைக் காண்கின்றான்." என்றிவ்வாறு சைப்பியப்பிரசினத்தில் சகாமவுபாசகனுக்குப் பிரஹ்மலோகத்தினடைவு கேட்கப்பட்டிருக்கின்றதென்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் சைப்பியப்பிரசினத்தில் சகாமனுக்குப் பிரஹ்மலோகத்தின் கதியே தோற்றுகின்றதென் றாசங்கித்து, அங்குப் பிரஹ்மலோகத்தில் தத்துவத்தின் சாக்ஷாத்காரமும் கேட்கப்படுகின்றதென்று கூறுகின்றார் :—

सः एतस्मात् जीवघनात् परं पुरुषं ईक्षते ॥

(சு-ம்.)

அவன் இந்த ஜீவகனத்தினின்றும் மேலான புருஷனைக் காண்கின்றான்.

(வி-ம்.)

பிரஹ்மலோகத்துக்குச் சென்ற அவ்வுபாசகன் இந்த ஜீவர்களது சமஷ்டிவடிவ இரணியகர்ப்பனைவிட மேலானபுருஷனாகிய நிருபாதிக சைதன்னியவடிவ பரமாத்மாவைச் சாக்ஷாத்கரிக்கின்றான். (௧௪௪)

௨௨. சுருதியநுசாரசூத்திரத்தால் சகாமவுபாசகனுக்குப் பிரஹ்மலோகமாகிய பயன்.

[௧௧௦௫] अप्रतीकाधिकरणे तत्क्रतुर्न्याय ईरितः ।
ब्रह्मलोकफलं तस्मात्सकामस्येति वर्णितम् ॥ १४५ ॥

(அ-கை.)

அல்லது "अप्रतिकालंबनान्नयतीति बादरायणः उभयथाऽदोषात्तत्क्रतुश्च ॥ பிரதீகவுபாசகனுக்கு வேறாகிய உபாசகன் எவனோ அவனை அமானவ புருஷன் பிரஹ்மலோகத்திற்குக் கொண்டுபோகின்றான் என்று பாதராயணரென்னும் ஆசாரியர் கொள்ளுகின்றனர். இவ்வாறு இரண்டு வகையும் அங்கீகரிக்கின் விரோதமின்மையாலும், "'தத்கிரது அதாவது எவன் எதனைத் தியானிக்கின்றானோ அவன் அதனையே யடைகின்றா'னென்னும் சுருதிவடிவ மூலத்தினையுடைய நியாயத்தினாலும்" என்னும் பிரஹ்மசூத்திரத்தின் நான்காவது அத்தியாயத்துள்ள மூன்றாவது பாதத்தின் பதினைந்தாவது * ௬௫. அதிகரணசூத்திரத்தில் இச்சைபை யநுசரித்துப் பலப்

* ௬௫. "எல்லோருக்கும் (சர்வ உபாசகர்களுக்கும்) நியமமில்லை." என்று முற்கூறிய அதிகரணசூத்திரத்தில் தத்துவமுணர்ந்தவரினும் வேறிடத்துச் சகல உபாசகர்களின் மார்க்கத்தினது உபசங்காரம் சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது அதாவது இச்சூத்திரத்தில் பிரதீகவுபாசகர்களின் வேறாய உபாசகர்களுக்கே மார்க்கமிருக்கின்றது, சர்வவிகாரத்தின் உபாசகர்களுக்கில்லை யென்னும் இருவகைப் பாவத்தின் (உண்மையின்) வார்த்தையில் முற்கூறியதற்கு விரோதமுண்டாகும். அதனால் உபாசகன் மாத்திரத்திற்கு உத்தரமார்க்கத்தின் சித்தி யிருக்கின்றது என்பது பூர்வபக்ஷம்.

அதன் சமாதானம் பிரகிருதசூத்திரத்தி லிருக்கின்றது :—"பிரதீகத்தின் ஆலம்பனமுடையவர் (பிரதீக வுபாசகர்)களை விட்டு மற்ற எல்லா விகாரங்களையும் ஆலம்பன (தியான)ஞ்செய்யும் உபாசகர்களை அமானவபுருஷன் பிரஹ்மலோகத்திற்குக் கொண்டுபோகின்றான்." என்று பாதராயணாசாரியார் (சூத்திரகாரர்) அங்கீகரிக்கின்றார். இவ்வாறு அங்கீகாரஞ்செய்யின் பூர்வபக்ஷத்திற் கூறிய இரண்டுவகைப் பாவங்களின் அங்கீகாரத்தில் ஒரு தோஷமுமில்லை. முன் சூத்திரத்திலுள்ள 'சர்வ' சப்தம் எதுவோ

பிராப்தி யுண்டாகின்ற தென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனாலும் சகாமவுபாசகனுக்குப் பிரஹ்மலோகத்தின் கதி சொல்லப்பட்டிருக்கிற தென்று கூறுகின்றார்:—

अप्रतीकाधिकरणे तत्क्रतुन्यायः ईरितः तस्मात् सकामस्य ब्रह्मलोकफलं इति वर्णितम् ॥

(சு-ம்.)

அப்பிரதீக மென்னும் அதிகரணத்தில் தத்கிரது நியாயம் சொல்லப்பட்டிருக்கின்றது. அதனால் சகாமனுக்குப் பிரஹ்மலோக பயனுண்டாகின்ற தென்று வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. (௧௪௫)

௨௩. சகாமநிர்க்குணவுபாசகர்களுக்குப் பிரஹ்மலோகத்தில் தத்துவஞானத்தினால் முக்தி.

[௧௧0௪] निर्गुणोपास्तिसामर्थ्यात्तत्र तत्त्वमवेक्षते ।
पुनरावर्तते नायं कल्पांते च विमुच्यते ॥ ४६ ॥

(அ-கை.)

அப்போது சகாமனுக்குத் தத்துவஞானம் எதனாலுண்டாகின்றதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

निर्गुणोपास्तिसामर्थ्यात् तत्र तत्त्वं अवेक्ष्यते ॥

(சு-ம்.)

நிர்க்குணோபாசனையின் சாமர்த்தியத்தால் அங்குப் பிரஹ்மலோகத்தில் தத்துவத்தை யறிகின்றான்.

(அ-கை.)

" इमं मानवमावर्तं नावर्तते न स पुनरावर्तते न स पुनावर्तते " "ब्रह्मणा सह ते सर्वे" "நிர்க்குணோபாசகன் இந்த மானவாவர்த்தத்திற்கு

---

அது பிரதீகவுபாசகர்களுக்கு வேறான வுபாசகர்களைக் குறித்ததா யிருத்தலாலும், "எவன் எதனைத் தியானிக்கின்றானோ அவன் அதனை அடைகின்றான்." என்னும் தத்கிரது நியாயம் சுருதியில் சொல்லப்பட்டிருக்கின்றது. அத்தன்மைய இவ்விருவகைப் பாவத்தையும் பிரதிபாதிக்கும் எதுவைக் காணுதல் தகுதியாம். எவன் பிரஹ்மத்தின் கிரதுவோ (சங்கற்பமுடையவனோ) அவன் பிரஹ்மசம்பந்தமுள்ள ஐசுவரியத்தினை யடைகின்றான். பெயர்முதலியவடிவப் பிரதீகத்தியேயங்களில் பிரஹ்மத்தின் சங்கற்பமில்லை. ஆதலால் அவன் மின்னல் உலகுவாயில் செல்லுகின்றான். பிரஹ்ம (பிரஹ்மலோக)த்தை யடைகிறதில்லை யென்பது சூத்திரத்தின் கருத்துப்பொருள்.

வருகிறதில்லை. அவன் மறுமடியும் வருகிறதில்லை. அவன் மறுபடியும் வருகிறதில்லை.'' "அவர்களெல்லோரும் பிரஹ்மாவோடு பரமபதத்தை யடைகின்றார்கள்.'' என்னும் இவைமுதலிய சுருதிஸ்மிருதிக ளிருத்தலால் அச்சகாமநிர்க்குணவுபாசகர்களுக்கு மறுபடியும் சம்சாரத்தின் அடைவு இல்லை; ஆனால் முக்தியே யிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

अयं पुनः न आवर्तते । च कल्पांते विमुच्यते ॥

(சு-ம்.)

இச்சகாமநிர்க்குணவுபாசகன் மறுபடியும் சம்சாரத்தை யடைகிறதில்லை. ஆனால் கற்பத்தின் முடிவில் முக்தனாகின்றான். (௧௪௬)

௨௪. பிரணவ(ஓங்கார)வுபாசனம் இருவகையாதல்.

[௧௧௦௫] प्रणवोपास्तयः प्रायो निर्गुणा एव वेदगाः ।
क्वचित्सगुणताप्युक्ता प्रणवोपासनस्य हि ॥ १४७ ॥

(அ-கை.)

இப்போது ஓங்காரவுபாசனத்தின் பிரசங்கத்தால் புத்தியிலுள்ள அதன் இருவகைத்தன்மையினைக் காட்டுகின்றார்:—

प्रणवोपास्तयः प्रायः निर्गुणाः एव वेदगाः क्वचित् प्रणवोपासनस्य सगुणता अपि उक्ता हि ॥

(சு-ம்.)

பிரணவோபாசனை பெருவாக நிர்க்குணவடிவமாகவே வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. சில இடங்களில் பிரணவவுபாசனைக்குச் சகுணத்தன்மையும் சொல்லப்பட்டிருக்கின்றது. (௧௪௭)

௨௫. சுலோகம் ௧௧௦௫-ல் கூறிய இருவகைத்தன்மையில் பிரமாணம்.

[௧௧௦௬] परापरब्रह्मरूप ॐकार उपवर्णितः ।
पिप्पलादेन मुनिना सत्यकामाय पृच्छते ॥ १४८ ॥

(அ-கை.)

பிரணவோபாசனையின் இருவகைத்தன்மையில் பிரமாணத்தினைக் கூறுகின்றார்:—

पिप्पलादेन मुनिना पृच्छते सत्यकामाय परापरब्रह्मरूपः ओंकारः उपवर्णितः ॥

(சு-ம்.)

பிப்பலாதமுநியானவர் வினவுகின்ற சத்தியகாமனாகிய சிஷ்யனிடத்துப் பர அதாவது நிர்க்குண அபர அதாவது சகுணப் பிரஹ்மவடிவ ஓங்காரத்தை வர்ணித்திருக்கின்றார்.

(வி-ம்.)

"एतद्वै सत्यकाम परं चापरं च ब्रह्म यदोंकारस्तस्माद्विद्वानेतेनैवायतनेन एकतरमन्वेति சத்தியகாமனே! இது பரமும் அபரமுமான ஓங்காரமாம். அதனால் வித்துவான் இவ்வோங்காரத்தினையே ஆசிரயித்து நிர்க்குணப்பிரஹ்மம் சகுணப்பிரஹ்மமென்னும் இரண்டினின்றும் ஒன்றையடைகின்றான்." என்று பிரசிநோபநிஷதத்தின் ஐந்தாவது பிரசினத்தில் பிரணவவுபாசனத்தின் இருவடிவத்தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது என்பது பொருள். (௧௬௮)

[௧௧௦௭] एतदालंबनं ज्ञात्वा यो यदिच्छति तस्य तत् ।
इति प्रोक्तं यमेनापि पृच्छते नचिकेतसे ॥ १४९ ॥

(அ-கை.)

கடவல்லியில் யமதர்மராஜரும் "एतदालंबनं ज्ञात्वा இப்பராபரவடிவப் பிரஹ்மமாகிய ஆசிரயத்தை யறிந்து பிரஹ்மலோகமாகிய பர அல்லது அபரப் பிரஹ்மவடிவமாகிய அதன்கண் பிரஹ்மத்தினைப்போல உபாசிய முண்டாகின்றது." என்பனமுதலிய வாக்கியங்களால் ஓங்காரவுபாசனை இருவகையாமாறு கூறியிருக்கின்றார் என்று கூறுகின்றார்:—

"एतत् आलंबनं ज्ञात्वा यः यः यत् इच्छति तस्य तत्" इति यमेन अपि पृच्छते नचिकेतसे प्रोक्तं ॥

(சு-ம்.)

"இவ்வாலம்பனத்தை அறிந்து எவன் எதை இச்சிக்கின்றானோ அவனுக்கு அது கிடைக்கின்றது." என்று இயமதர்மராஜனும் தன்னைக் கேட்கின்ற நசிகேதாவாகிய சிஷ்யனுக்குச் சொன்னார். (௧௬௯)

உ௯. சுலோகம் ௧௦௯௯—௧௧௦௭-ல் கூறிய பொருளை முடித்தல்.

[௧௧௦௮] इह वा मरणे चास्य ब्रह्मलोकेऽथवा भवेत् ।
ब्रह्मसाक्षात्कृतिः सम्यगुपासीनस्य निर्गुणम् ॥ १५० ॥

(அ-கை.)

சுலோகம் ௧௦௯௯—௧௧௦௭-ல் கூறிய அர்த்தத்தை முடிக்கின்றார்:—

अस्य संयक् निर्गुणं उपासीनस्य इह वा मरणे च अथवा ब्रह्मलोके ब्रह्म साक्षात्कृतिः भवेत् ॥

(சு-ம்.)

செவ்வையாய் நிர்க்குணவுபாசனை செய்யும் இப்புருஷனுக்கு இந்தத் தேகத்திலாவது மரணசமயத்திலாவது அல்லது பிரஹ்மலோகத்திலாவது பிரஹ்மத்தின் சாக்ஷாத்கார முண்டாகின்றது. (கருO).

உஎ. விசாரத்தில் சாமர்த்தியமில்லாதவனுக்கு நிர்க்குணப்பிரஹ்மத்தின் தியானத்தில் அதிகாரமா மென்பதில் ஆத்மகீதை பிரமாணமாதல்.

[ககOக] अर्थोऽयमात्मगीतायामपि स्पष्टमुदीरितः ।
विचाराक्षम आत्मानमुपासीतेति संततम् ॥ १५१ ॥

(அ-கை.)

விசாரத்தினால் தத்துவஞானத்தினைச் சம்பாதித்தலில் சாமர்த்தியமில்லாத புருஷனுக்கு நிர்க்குணப் பிரஹ்மத்தியானத்தில் அதிகார மிருக்கின்றதென்னும் பொருள் ஆத்மகீதையில் செவ்வையாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார் :—

"विचाराक्षमः संततं आत्मानं उपासीत" इति अयं अर्थः आत्मगीतायां अपि स्पष्टं उदीरितः ॥

(சு-ம்.)

"விசாரத்தில் சாமர்த்தியமின்றிய புருஷன் நிரந்தரம் ஆத்மாவை உபாசனைசெய்க." என்னும் அர்த்தமும் ஆத்மகீதையிலும் வெளிப்படையாய்ச் சொல்லியிருக்கிறது. (கருக).

[கககO] साक्षात्कर्तुमशक्तोऽपि चिंतयेन्मामशंकितः ।
कालेनानुभवारूढो भवेदाफलितो ध्रुवम् ॥ १५२ ॥

(அ-கை.)

ஆத்மகீதையின் வாக்கியத்தினையே உதாரணமாக்குகின்றார் :—

साक्षात्कर्तुं अशक्तः अपि अशंकितः मां चिंतयेत् । कालेन अनुभवारूढः आफलितः ध्रुवम् भवेत् ॥

(சு-ம்.)

"சாக்ஷாத்கரிக்கச் சாமர்த்தியமுள்ள புருஷன் எவனோ அவனும் சங்கையில்லாதவனாய்ப் பிரத்தியகபின்னபரமாத்மாவாகிய என்னைச் சிந்

திக்க. காலத்தினால் அவன் அநுபவத்தில் ஆரூடனாய்ப் பூர்ணபலமாகிய மோக்ஷத்தை நிச்சயமாக அடைவன். (க௫௨)

[கககக] यथागाधनिधेर्लब्धौ नोपायः खननं विना ।
मल्लाभेपि तथा स्वात्मचिंतां मुक्त्वा न चापरः ॥ १५३ ॥

(அ-கை.)

தியானம் செவ்வையான ஞானத்திற்கு உபாயமாதலில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

यथा अगाधनिधेः लब्धौ खननं विना उपायः न ॥

(சு-ம்.)

பூமியில் புதைக்கப்பட்ட அளவிறந்த நிதியின் இலாபத்தில் வெட்டியெடுத்தலைத் தவிர வேறு உபாயம் எப்படி யில்லையோ.

(அ-கை.)

தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார் :—

"तथा मल्लाभे अपि स्वात्मचिंतां मुक्त्वा च अपरः न" ॥

(சு-ம்.)

அப்படியே என் இலாபத்திலும் சுவாத்மாவினைச் சிந்தித்தலை விட்டு வேறு உபாயம் இல்லை. (க௫௩)

[கககஉ] देहोपलमपाकृत्य बुद्धिकुद्दालकात्पुनः ।
खात्वा मनोभुवं भूयो गृह्णीयान्मां निधिं पुमान् ॥ १५४ ॥

(அ-கை.)

வெதிரேகத்தால் கூறிய பொருளை அந்வயமுகத்தால் (உடன்பாட்டு நோக்கால்) கூறுகின்றார் :—

"देहोपलं अपाकृत्य पुनः बुद्धिकुद्दालकात् मनोभुवं खात्वा भूयः पुमान् मां निधिं गृह्णीयात् ॥"

(சு-ம்.)

தேகவடிவகல்லைப் பெயர்த்து மறுபடியும் புத்திவடிவ குந்தாலியினால் மனவடிவ பூமியைப் பிளந்து, பின் புருஷன் பிரத்தியகபின்ன பிரஹ்மவடிவ நிதியாகிய என்னைக் கிரகிக்கவேண்டும் அதாவது அறியவேண்டும். (க௫௪)

உ௮. சுலோகம் ககடு௫-ல் கூறிய அர்த்தத்தில் அந்நியசாஸ்திரத்தின் வசனம் பிரமாணமாதல்.

[ககரு௫] अनुभूतेरभावेऽपि ब्रह्मास्मीत्येव चिंत्यताम् ।
अप्यसत्प्राप्यते ध्यानान्नित्याप्तं ब्रह्म किं पुनः ॥१५५॥

(அ-கை.)

ஞானத்தில் சாமர்த்தியமின்றிய புருஷனுக்குத் தியானத்தில் அதிகார மிருக்கின்ற தென்பதில் அந்நியவாக்கியத்தினைப் படிக்கின்றார் :—

अनुभूतेः अभावे अपि "ब्रह्म अस्मि" इति एव चिंत्यताम् ॥

(சு-ம்.)

அநுபூதியில்லா திருக்கினும் "நான் பிரஹ்மம்" என்றே சிந்திக்க வேண்டும்.

(அ-கை.)

தியானத்தினாலேயே பிரஹ்மத்தின் அடைவில் கைமுதிகநியாயத்தினைக் கூறுகின்றார் :—

असत् अपि ध्यानात् प्राप्यते । पुनः नित्याप्तं ब्रह्म किम् ॥

(சு-ம்.)

அசத்து அதாவது இல்லாதவஸ்துவும் தியானத்தினால் அடையப்படுகின்றதெனின், அப்போது நித்தியப்பிராப்தமாகிய பிரஹ்மமோ தியானத்தினால் அடையப்படுகின்ற தென்பதில் என்ன சொல்லவேண்டிய திருக்கின்றது.

(வி-ம்.)

கீடத்திற்கு வண்டின்றன்மை யுண்டாவது உபாசகனுக்கு முன் இல்லாதிருந்தும் தெய்வத்தன்மைமுதலியன தியானத்தி லுண்டாகின்றனவெனின், அப்போது சொரூபமா யிருத்தலால் நித்தியப்பிராப்தமான சர்வாத்மகப்பிரஹ்மம் தியானத்தினால் அடையப்படுகின்றதென்பதில் என்ன சொல்லவேண்டி யிருக்கிற தென்பது பொருள். (கரு௫)

உகூ. பிரத்தியக்ஷ பலத்தோடுகூடியதா யிருத்தலால் தியானம் செய்ய வேண்டியதா மெனல்.

[ககரு௬] अनात्मबुद्धिशैथिल्यं फलं ध्यानाद्दिने दिने ।
पश्यन्नपि न चेद्ध्यायेत्कोऽपरोऽस्मात्पशुर्वद ॥ १५६ ॥

(அ-கை.)

பிரஹ்மத்தியானத்தின் பயன் பிரத்தியக்ஷஸித்தமா யிருத்தலாலும் தியானம் செய்யவேண்டியதா மென்று கூறுகின்றார் :—

ध्यानात् दिने दिने अनात्मबुद्धिशैथिल्यं फलं पश्यन् अपि चेत् न ध्यायेत् अस्मात् अपरः कः पशुः वद ॥

(சு-ம்.)

தியானத்தினால் நாள்தோறும் அநாத்மவடிவ புத்தியின் தளர்ச்சிவடிவ பலம் உண்டாகின்றது. அதனைக் கண்டிருந்தும் தியானஞ்செய்யானாயின் அப்போது இவனினும் வேறான பசு அதாவது மூடன் யாவன்? சொல். இவனே மூடன். (௧௫௬)

௩௦. தியான தீபத்தில் சொல்லப்பட்ட அர்த்தத்தினைச் சுருக்கமாகச் சொல்லுதல்.

[௧௧௧௫] देहाभिमानं विध्वस्य ध्यानादात्मानमद्वयम् ।
पश्यन्मर्त्योऽमृतो भूत्वा ह्यत्र ब्रह्म समश्नुते ॥ १५७ ॥

(அ-கை.)

இப்போது உபபாதனஞ்செய்யப்பட்ட அர்த்தத்தினைச் சுருக்கமாகக் காட்டுகின்றார் :—

ध्यानात् देहाभिमानं विध्वस्य अद्वयं आत्मानं पश्यन् मर्त्यः अमृतः भूत्वा अत्र हि ब्रह्म समश्नुते ॥

(சு-ம்.)

தியானத்தினால் தேகாபிமானத்தினைக் கெடுத்து அத்துவயவடிவ தன்னைக் காண்கின்றவனாய் மரணதர்மமுடைய மனிதன் அமிருதனாய் இவ்விடத்திலேயே பிரஹ்மத்தை யடைகின்றான்.

(வி-ம்.)

மரணசுபாவமுடைய தேகத்தில் 'யான்' என்னும் அபிமானத்தை விட்டுத் தான் அமர (மரணதர்மமின்றியவ)னாய் இச்சரீரத்திலேயே தனது நிஜவடிவசச்சிதாநந்த சொரூபப்பிரஹ்மத்தை யடைகின்றான். (௧௫௭)

௩௧. தியானதீபத்தினது சிந்தன (அப்பியாச)த்தின் பயன்.

[௧௧௧௬] ध्यानदीपमिमं सम्यक् परामृशति यो नरः ।
मुक्तसंशय एवायं ध्यायति ब्रह्म संततम् ॥ १५८ ॥

(அ-கை.)

தியானதீபத்தின் அநுசந்தானஸ்மரணத்தின் பயனைக் கூறுகின்றார்:-

यः नरः इमं ध्यानदीपं सम्यक् परामृशति अयं मुक्तसंशयः एव संततं ब्रह्म ध्यायति ॥

(சு-ம்.)

எந்த மனிதன் இத்தியானதீபத்தினைச் செவ்வையாய் ஸ்மரிக்கின்றானோ, அவன் சந்தேகமற்றவனாகியே நிரந்தரம் பிரஹ்மத்தைத் தியானிக்கின்றான். (கடுஅ)

தியானதீபமென்னும்

ஒன்பதாம் பிரகரணம்

முடிந்தது.

---

ஓம்தத்ஸத்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ பஞ்சதசி.

---

## ௧0. $ நாடகதீபம்.

### பத்தாம் பிரகரணம்.

௧. அத்தியாரோப அபவாதபூர்வகமாகப் பந்தநிவிருத்தியின் உபாயமான விசாரத்தினை விஷயத்தோடு (ஜீவபரமாத்மாவோடு) கூறுதல் ௧௧௧எ-௧௧௬௧.

௧. அத்தியாரோபமும், சாதன(விசாரஜந்நிய ஞான)த்தோடு கூடிய அபவாதமும் ௧௧௧எ-௧௧௨௧.

௧. ஆத்மாவில் அத்தியாரோபம்.

[௧௧௧எ] परमात्माद्वयानंदपूर्णः पूर्वं स्वमायया ।
स्वयमेव जगद्भूत्वा प्राविशज्जीवरूपतः ॥ १ ॥

(அ-கை.)

ஆரம்பஞ்செய்யக்கருதிய நாடகதீபவடிவகிரந்தம் விக்கினமின்றி முடியும்பொருட்டு இஷ்டதேவதையினது சொரூபத்தின் ஸ்மரணவடிவ மங்கலத்தை ஆசரிக்கின்றவராய் ஆசாரியர், மந்தாதிகாரிகளுக்குக் கிரமமின்றி நிஷ்பிரபஞ்சப் பிரஹ்மாத்மாவின் நிச்சயம் சித்திக்கும்பொருட்டு "अध्यारोपापवादाभ्यां निष्प्रपंचं प्रपंच्यते । शिष्याणां बोधसिध्यर्थं तत्त्वज्ञैः कल्पितः क्रमः அத்தியாரோப அபவாதங்களால் பிரபஞ்சமின்றிய பரமாத்மா நிரூபிக்கப் படுகின்றார். சிஷ்யர்களுக்கு ஞானம் சித்திக்கும்பொருட்டுத் தத்துவமுணர்ந்தோர் கிரமத்தைக் கற்பிக்கின்றனர்.'' என்னும் நியாயத்தை அநுசரித்து ஆத்மாவில் அத்தியாரோபத்தை முதலிற் கூறுகின்றார்:—

पूर्वं अद्वयानन्दपूर्णः परमात्मा स्वमायया स्वयं एव जगत् भूत्वा जीवरूपतः प्राविशत् ॥

(சு-ம்.)

முன் அத்துவயாநந்தபூர்ணமான பரமாத்மா இருந்தது. அது தனது மாயையால் தானே ஜகத்துவடிவமாய் அதன்கண் ஜீவவடிவத்தால் பிரவேசித்தது.

---

$ சேதனத்தில் அத்தியஸ்தமான அகங்காராதிகளையும், அவற்றினை விளக்கும் சாக்ஷியினையும் நாடகமாக உருவகப்படுத்தி விளக்கும் பிரகரணம் நாடகதீப மெனப்படும்.

(வி-ம்.)

சிருஷ்டிக்குமுன் அத்துவயாநந்தபூர்ண அதாவது "सदेव सौम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम् சௌம்யனே! இந்த ஜகத்து முன் ஒரே அத்துவிதீய சத்தாகவே யிருந்தது." "विज्ञानमानन्दं ब्रह्म விஞ்ஞான ஆநந்தவடிவம் பிரஹ்மம்." "पूर्णमदः पूर्णम् இது பூர்ணம் இது பூர்ணம்" என்பனமுதலிய சுருதிகளால் பிரசித்தமான *க. சுவகதமுதலிய பேதமின்றிய பரமாநந்தவடிவ பரிபூரண பரமாத்மா இருந்தது. அது தன் மாயையினால் அதாவது "मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् மாயையினையோ பிரகிருதி அதாவது உபாதானமென்றறிக. மாயையையுடையதனையோ மஹேசுவரன் அதாவது மாயையின் அதிஷ்டானநிமித்த மென்றறிக." என்னும் சுருதியிற் கூறிய தன்னிடத்து நிலைத்துள்ள மாயாசக்தியினால் தானே ஜகத்துவடிவமாய் அதாவது "तदात्मानं स्वयमकुरुत सच्च त्यच्चाभवत् அந்தப் பிரஹ்மம் தானே தன்னைச் செய்தது ஸ்தூலசூக்ஷ்மவடிவமானது." என்னும் சுருதியினால் தானே ஜகத்துவடிவத்தன்மையை யடைந்து ஜீவரூபமாகப் பிரவேசித்தது அதாவது "तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् अनेन जीवेनात्मनानुप्रविश्य அந்த ஜகத்தைச் சிருஷ்டித்து. அதனையே பின்பற்றிப் பிரவேசித்தது. இந்த ஜீவசொரூபமாகப் பிரவேசித்து" என்னுமிவை முதலிய சுருதியினால் ஜீவரூபமாகப் பிரவேசத்தை யடைந்தது என்பது பொருள். (க)

[ககக௮] विष्ण्वाद्युत्तमदेहेषु प्रविष्टो देवताऽभवत् ।
मर्त्याद्यधमदेहेषु स्थितो भजति देवताम् ॥ २ ॥

(அ-கை.)

அப்படியானால் ஒரே பரமாத்மாவிற்குச் சகல சரீரங்களிலும் பிரவேசத்தை யடைந்தகாலத்து, பூஜ்யன் (பூசிக்கப்படுபவன்) பூஜகன் (பூசிப்பவன்) என்னும் தன்மையால் தோற்றும் உத்தமாதமங்கள் விரோதத்தை யடையுமே யென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

विष्ण्वाद्युत्तमदेहेषु प्रविष्टः देवता अभवत् । मर्त्याद्यधमदेहेषु स्थितः देवतां भजति ॥

(சு-ம்.)

விஷ்ணுவாதி உத்தம தேகங்களில் பிரவேசத்தை யடைந்தவராய்ப் பரமாத்மா தேவதை அதாவது பூஜ்யர் ஆகின்றார். மனுஷியர்முதலிய அதமதேகத்தில் நிலைத்துப் பரமாத்மா தேவதையைப் பஜிக்கின்றார்.

---

*க. பரமாத்மாவின் சுவகதமுதலிய மூன்று பேதங்களு மில்லாததன்மையைப் பஞ்சமகாபூத விவேகத்திலுள்ள உஉ-உ௬ சுலோகங்களிலும், அதன் எஅ-வது முதல் ௯கூ-வது வரையிலுள்ள டிப்பணிகளிலும் காண்க.

(வி-ம்.)

இவ்வுத்தமாதமத்தன்மைகள் இயல்பாய் ஆயினவன்று; ஆனால் சரீரவடிவ உபாதியாலாகியனவாம். ஆதலால் விரோதமில்லையென்பது தாற்பரியம். (உ)

உ. சாதன (விசாரத்தாற்றோன்றிய ஞான)த்தோடு அபவாதம்.

[௧௧௧௯] अनेकजन्मभजनात्स्वविचारं चिकीर्षति ।
विचारेण विनष्टायां मायायां शिष्यते स्वयम् ॥ ३ ॥

(அ-கை.)

இவ்வாறு ஆத்மாவினிடத்து அத்தியாரோபத்தைச் சுருக்கமாய்க் காட்டிச் சாதனத்தோடு அதன் அபவாதத்தைச் சுருக்கமாகக் கூறுகின்றார்:—

अनेकजन्मभजनात् स्वविचारं चिकीर्षति बिचारेण मायायां विनष्टायां स्वयं शिष्यते ॥

(சு-ம்.)

அநேக ஜன்மங்களில் பஜித்தலால் தனது விசாரத்தைச் செய்ய விரும்புகிறான். விசாரத்தினால் மாயை நஷ்டமாகவே தான் மிஞ்சுகிறான்.

(வி-ம்.)

அநேக ஜன்மங்களில் அநுஷ்டிக்கப்பட்ட கர்மங்களைப் பிரஹ்மத்தில் சமர்ப்பித்தலாகிய பஜனத்தால் தனது பிரஹ்மவடிவ ஞானத்தின் சாதனமாகிய சிரவணதிவடிவ விசாரத்தினைச் செய்ய விரும்புகிறான். அதனால் தனது விசாரத்தினால் அதாவது விசாரத்தாற்றோன்றிய ஞானத்தினால் தனது அத்துவயாநந்தத்தன்மைமுதலிய வடிவத்தை மறைக்கும் அஞ்ஞானம் அவித்தைமுதலிய சப்தங்களின் வாச்சியமான மாயை நீங்கவே அத்துவயானந்தபூர்ணவடிவ பரமாத்மாவாகிய தானே மிஞ்சுகின்றான். (௩)

௩. சுலோகம் ௧௧௧௯-ல் கூறிய அபவாதம் பந்தநிவிருத்தி (முக்தி) வடிவ ஞானபலமாதலின் சித்தி.

[௧௧௨௦] अद्वयानंदरूपस्य सद्वयत्वं च दुःखिता ।
बंधः प्रोक्तः स्वरूपेण स्थितिर्मुक्तिरितीर्यते ॥ ४ ॥

(அ-கை.)

அப்படியானால் "तद्ब्रह्माहमिति ज्ञात्वा सर्वबंधैः प्रमुच्यते அந்தப் பிரஹ்மம் நானென்றறிந்து சகலபந்தங்களினின்றும் விடுபடுகிறான்." என்றல் முதலிய சுருதிகளால் பந்தத்தின் நிவிருத்திவடிவ மோக்ஷம் ஞானத்தின் பலவடிவமாதல்

சொல்லப்படுதலால் பரமாத்மா மிஞ்சியிருத்தல் அந்த ஞானத்தின் பலவடிவமா மென்று கூறுதல் பொருந்தாதென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

अद्वयानन्दरूपस्य सद्वयत्वं च दुःखिता बंधः प्रोक्तः स्वरूपेण स्थितिः मुक्तिः इति ईर्यते ॥

(சு-ம்.)

அத்துவயானந்தவடிவ ஆத்மாவின் துவைதத்தோடுகூடிய தன்மையும் துக்கித்தன்மையும் பந்த மென்று சொல்லப்பட்டிருக்கின்றது. சொரூபமாக நிலைத்தல் முக்தி யென்று சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

அத்துவிதீயப்பிரஹ்மத்தில் வாஸ்தவபந்தமும் மோக்ஷமும் துக்கத்தினாலும் நிரூபிக்கக்கூடாதனவா யிருத்தலின் துக்கித்தன்மைமுதலியவற்றின் மயக்கமே பந்தமாம். சொரூபமாக நிலைத்தல்வடிவ அப்பந்தத்தின் * உ. நிவிருத்தியே மோக்ஷமாம். ஆதலால் சுருதிகளுக்கு விரோத மில்லை யென்பது அபிப்பிராயம். (௪)

* உ. இங்கு இஃது இரகசியம்:—

(க) மகாவாக்கியத்தின் சிரவணத்தினால் "யான் பிரஹ்மம்" என்று அந்தக்கரணத்தின் விருத்திவடிவ தத்துவஞான முண்டாகின்றது. அதனால் பிரபஞ்சத்தோடு அஞ்ஞானத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது. அதுவே மோக்ஷமாம். கற்பிதத்தின் நிவிருத்தி அதிஷ்டானவடிவமாம். ஆதலால் பிரஹ்மவடிவம் மோக்ஷமா மென்பது சித்திக்கின்றது. இது பாஷியகாரரது சித்தாந்தம்.

(உ) நியாயமகரந்தகாரராகிய அத்வைதவாதியானவர் கற்பிதத்தின் நிவிருத்தி அதிஷ்டானவடிவமா மென்று கொள்ளவில்லை. ஆனால் அதிஷ்டானத்திற்கு வேறாகச் சத்துவடிவம், அசத்துவடிவம், சதசத்துவடிவம், சதசத்விலக்ஷண அநிர்வசநீய மென்னும் நான்குவகையினும் வேறுவகையான கற்பிதத்தின் நிவிருத்தியைக் கொண்டிருக்கிறார்கள். அதனையே ஐந்தாவதுவகையாகக் கூறுகின்றனர். இது நலமுடையதன்று. ஏனெனின், சத்துவடிவமுதலிய வஸ்துக்கள் உலகம் சாஸ்திரமுதலியவற்றில் பிரசித்தம். இவற்றின் வேறான ஒரு வஸ்துவும் பிரசித்தமாக இல்லை. அப்பிரசித்தமான வஸ்துவில் புருஷனது அபிலாஷை யுண்டாகிறதில்லை; ஆனால் பிரசித்தமானதில் உண்டாகின்றது. ஆதலால் ஐந்தாவதுவகையான நிவிருத்தியினை யங்கீகரிக்கும் புருஷனுக்கு அபிலாஷைக்கு விஷயமாந்தன்மைவடிவ புருஷார்த்தத்தன்மையின் அபாவ முண்டாகும். அதனால் அதிஷ்டானவடிவமாகவே நிவிருத்தியை யங்கீகரிக்கவேண்டும்.

(க) அவ்வதிஷ்டானவடிவ நிவிருத்தி அறியப்படாத அதிஷ்டானவடிவமென அங்கீகரிக்கின், பிரயத்தினமில்லாமலே எல்லோருக்கும் மோக்ஷப்பிராப்தி யுண்டாகுதலால் சிரவணாதிகள் நிஷ்பலமாகும்.

(உ) அறியப்பட்ட அதிஷ்டானவடிவ நிவிருத்தியென அங்கீகரிக்கின், விதேக மோக்ஷதசையில் பிரஹ்மத்தின்கண் ஞாதத்தன்மை அதாவது ஞானத்திற்கு விஷயமாந்தன்மைவடிவ தர்ம மில்லையாகலின் மோக்ஷத்திற்குப் பரமபுருஷார்த்தத்தன்மை யில்லாததாகும்.

௪. பந்தநிவிருத்தியின்பொருட்டு விசாரம் செய்யவேண்டியதாதலும் விசாரத்தினது விஷயத்தின் சூசனமும்.

[௧௧௨-௧] अविचारकृतो बंधो विचारेण निवर्तते ।
तस्माज्जीवपरात्मानौ सर्वदैव विचारयेत् ॥ ५ ॥

(அ-கை.)

அப்படியாளுல் " कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ஜனகாதியர் கர்மத்தினுலேயே செவ்வையான சித்தியை அடைந்தனர்." என்னும் கீதாஸ்மிருதி

(௩) ஞாதத்தன்மை (அறியப்பட்டதன்மை)வடிவ தர்மமில்லாமையால் ஞாதத்தன்மைவிசிஷ்ட அல்லது ஞாதத்தன்மையுபகித அதிஷ்டானவடிவமாகவும் நிவிருத்தி சம்பவியாது. ஏனெனின், விசேஷணமுடையது விசிஷ்ட மெனப்படும். உபாதியுடையது உபகித மெனப்படும். விசேஷணமும் உபாதியும் எவ்வளவுகாலம்வரையிலும் தாமிருக்கின்றனவோ, அவ்வளவுகாலம்வரையில் தமது சம்பந்தமுள்ள வஸ்துவினைப் பிற வஸ்துக்களினின்றும் வேறுபடுத்திக்காட்டுகின்றன. விதேகமோக்ஷதசையில் ஞாதத்தன்மையின்மையால் இந்த ஞாதத்தன்மையினை விசேஷணவடிவமாகவாவது உபாதிவடிவமாகவாவது அஞ்ஞாத (அறியப்படாத) அவஸ்தையுடைய பிரஹ்மத்தினின்றும் வேறுபடுத்தியறிவித்தல் சம்பவியாது.

ஆதலால் ஞாதத்தன்மையுபலக்ஷித அதிஷ்டானவடிவம் காரியத்தோடு அஞ்ஞானத்தின் நிவிருத்தியாம். ஏனெனின், உபலக்ஷணம் யாதோ அது தனது இருப்புக்(நிகழ்) காலம் இன்மைக்(வருங்)கால மென்னும் இரண்டுகாலங்களிலும் தனது சம்பந்தியைப் பிறவற்றினின்றும் வேறுபடுத்திக்காட்டுகின்றது. ஆதலால் தேவதத்தனது வீட்டின் உபலக்ஷணமான காகம் இருக்கினும் இல்லாவிடினும் "இது தேவதத்தன்வீடு" என்று வியவகார முண்டாவதுபோல, ஜீவன்முக்திதசையில் ஞாதத்துவ மிருக்கினும், விதேகமுக்திதசையில் அஃதில்லாதிருக்கினும் காரியத்தோடுகூடிய அஞ்ஞானத்தின் நிவிருத்திவடிவ அதிஷ்டானம் யாதோ அது ஞாதத்தன்மையுபலக்ஷிதமா மென்று வியவகார முண்டாகின்றது.

கற்பிதத்தின் நிவிருத்தி அதிஷ்டானத்தினும் வேறு மென்னும் பக்ஷத்தில் ஆக்கிரக முண்டாயினும், அநிர்வசநீயத்தின் நிவிருத்தி அநிர்வசநீயவடிவமாம்; ஐந்தாவது வகைவடிவினதன்று. நிவிருத்தி யென்பது துவம்சத்திற்காம். அந்தத் துவம்ஸமாகிய நாசம் நியாயமதத்திலோ அநந்த அபாவவடிவமாம்; ஆனால் சித்தாந்தமதத்தில் க்ஷணிக பாவ (இருப்பு) விகாரவடிவமாம். ஏனெனின், யாஸ்கமுனியானவர் ஜன்மாதி ஆறுபாவங்களும் (அநிர்வசநீய) விகாரமா மென்று சொல்லியிருக்கின்றார். அவ்வாறில் துவம்ஸ மென்னும் சொல்லின் பரியாயமான நாசம் க்ஷணிகவடிவமாகக் கணிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அந்தத் துவம்ஸம் க்ஷணிகபாவவடிவமாம். அது ஞானத்திற்குப் பிந்திய காலத்தில் ஒரு க்ஷண மிருக்கின்றது. பின்பு அந்நிவிருத்தியின் அத்தியந்தாபாவம் (முற்றுமின்மை) உண்டாகின்றது. அவ்வத்தியந்தாபாவம் பிரஹ்மவடிவமாம். ஆதலால் துவைதத்தின் சங்கை யில்லை.

கற்பிதத்தின் நிவிருத்தி ஞானத்தாற்றோன்றியதா யிருத்தலால் ஸாதி (உற்பத்தியுடையது) ஆம்; பிரஹ்மவடிவமா யிருத்தலால் அநந்தம் (முடிவில்லாதது) ஆம். ஆதலால் சித்தாந்தத்தில் மோக்ஷம் ஸாதி அநந்த மெனப்படுகின்றது. இவ்வாறு சொரூபமாக நிலைத்தல்வடிவ பந்தநிவிருத்தியே மோக்ஷமாம்.

யினால் மோக்ஷத்தினைக் கர்மவடிவ சாதனமுடையதாக அறிதலின் இவ்விசாரத்தினாற்றோன்றிய ஞானத்தினால் என்ன பிரயோஜனமெனக் கூறுகின்றார்:—

अविचारकृतः बंधः विचारेण निवर्तते ॥

(சு-ம்.)

அவிசாரத்தினாலாகிய பந்தம் யாதோ அது விசாரத்தினால் நிவிருத்தியாகின்றது.

(வி-ம்.)

விசாரத்தின் பிராகபாவத்தால் (முன்னின்மையால்) உபலக்ஷிக்கப்பட்ட அஞ்ஞானத்தினாலாகிய பந்தம் யாதோ அதற்கு விசாரத்தினாற்றோன்றிய ஞானத்திற்கு வேறான சாதனத்தால் நிவிருத்தி சம்பவியாது. உதாரணமாக்கப்பட்ட கீதாஸ்மிருதியில் " சம்சித்தி=செவ்வையான சித்தி" என்னும் சொல்லால் சித்தசுத்தியே சொல்லப்படுகின்றது; மோக்ஷமன்றென்பது தாற்பரியம். (சம்சித்தி=நற்பேறு.)

(அ-கை.)

விசாரத்தினால் பந்தத்தின் நிவிருத்தி சொல்லப்பட்டது. அது எந்த வஸ்துவை விசாரிப்பதினால் நிவிருத்தியாகுமென்னுமிடத்துக் கூறுகின்றார்:—

तस्मात् जीवपरात्मानौ सर्वदा एव विचारयेत् ॥

(சு-ம்.)

அதனால் ஜீவனையும் பரமாத்மாவையும் எப்போதுமே விசாரிக்கவேண்டும்.

(வி-ம்)

தத்துவசாக்ஷாத்காரபரியந்தம் எப்போதும் ஜீவபரமாத்மாக்களின் விசாரத்தினைச் செய்யவேண்டுமென்பது பொருள். (௫)

௨. சுலோகம் ௧௧௨௧-ல் கூறிய விசாரத்தின் விஷயமான ஜீவபரமாத்மாக்களின் சொரூபம் ௧௧௨௨-௧௧௨௬.

௧. கிரியையோடுகூடிய காரணத்தோடு கர்த்தாவடிவ ஜீவனது சொரூபம்.

[௧௧௨௨] अहमित्यभिमंता यः कर्तासौ तस्य साधनम् ।
मनस्तस्य क्रिये अंतर्बहिर्वृत्ती क्रमोत्थिते ॥ ६ ॥

(அ-கை.)

அந்த ஜீவபரமாத்மவடிவ விசாரத்தின் விஷயங்களில் ஜீவனது சொரூபத்தை முதலில் நிரூபிக்கின்றார்:—

यः "अहं" इति अभिमन्ता असौ कर्ता ॥

(சு-ம்.)

எது யான் என்று மதிக்கின்றதோ அது கர்த்தாவாம்.

(வி-ம்.)

எந்தச் சிதாபாஸவிசிஷ்ட அகங்காரம் வியவகாரதசையில் தேகாதிக ளில் "யான்" என்று கொள்ளுகிறதோ, அது கர்த்தா அதாவது கர்த்தி ருத்தன்மைமுதலிய தர்மவிசிஷ்ட ஜீவன் என்பது பொருள்.

(அ-கை.)

அக்கர்த்தாவிற்குக் கரணம் யாதென்று கேட்குமிடத்துக் கூறு கின்றார்:—

तस्य साधनं मनः ॥

(சு-ம்.)

அக்கர்த்தாவின் சாதனம் அதாவது கரணம் மனமாம்.

(வி-ம்.)

காமாதிவிருத்திகளையுடைய அந்தக்கரணத்தின் பாகம் மனமாம்.

(அ-கை.)

கரணம் கிரியையினால் வியாபிக்கப்பட்டதா யிருத்தலின் அந்த மன வடிவகரணத்தின் கிரியையினைக் காட்டுகின்றார்:—

तस्य क्रमोत्थिते अन्तर्बहिर्वृत्ती क्रिये ॥

(சு-ம்.)

அந்த மனத்திற்குக் கிரமமாக வுண்டாகிய உள்விருத்தி வெளிவிருத்தி வடிவக் கிரியைக ளிருக்கின்றன. (சு)

உ. ஜீவனுக்குக் காரணமாகிய மனதினது கிரியையின் சொரூபமும் விஷயமும்.

[கக௨௩] अंतर्मुखाहमित्येषा वृत्तिः कर्तारमुल्लिखेत् ।
बहिर्मुखेदमित्येषा बाह्यं वस्त्विदमुल्लिखेत् ॥ ७ ॥

(அ-கை.)

இந்த உள்வெளிவிருத்திகளின் சொரூபத்தினையும் விஷயத்தையும் வேறுபிரித்துக் காட்டுகின்றார்:—

अन्तर्मुखा "अहं" इति वृत्तिः एषा कर्त्तारं उल्लिखेत् बहिर्मुखा "इदं" इति एषा बाह्यं इदं वस्तु उल्लिखेत् ॥

(சு-ம்.)

அந்தர்முகமாகிய "யான்" என்னும்வடிவ விருத்தியாதோ அது கர்த்தாவை விஷயமாக்குகின்றது. பகிர்முகமாகிய "இது" எனும்வடிவ விருத்தியாதோ அது வெளியிலுள்ள இஃதெனும் பொருளை விஷயமாக்குகின்றது.

(வி-ம்.)

"இதுவெனும் வடிவ" என்னும் மூலத்திலுள்ள பதத்தினால் வெளிவிருத்தியின் சொரூபத்தினைக் கூறி, மிஞ்சியிருக்கும் பிற்பாதியிலுள்ள மூலசுலோகபாகத்தால் வெளிவிருத்தியின் விஷயத்தைக் காட்டுகின்றார். இந்த வெளிவிருத்தி தேகத்திற்கு வெளியிலிருக்கின்ற இதுவெனுந்தன்மையினால் குறிக்கப்படும் வஸ்துவினை விஷயஞ்செய்கின்றதென்பது பொருள். (எ)

௲. தனது வியவகாரத்திற்கு ஏதுவான மனமிருந்தும் கிராணாதியிந்திரியங்கள் உபயோகமாதல்.

[௧௧௨௮] इदमो ये विशेषाः स्युर्गंधरूपरसादयः ।
असांकर्येण तान्विद्याद्घ्राणादींद्रियपंचकम् ॥ ८ ॥

(அ-கை.)

அப்படியானால் மனதினாலேயே சகலவியவகாரங்களும் சித்திக்கின், சக்ஷுமுதலிய இந்திரியங்கள் வியர்த்தமாமென்னும் பிரசங்க முண்டாகுமேயென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

इदमः विशेषाः ये गन्धरूपरसादयः स्युः । तान् घ्राणादीन्द्रियपंचकं असांकर्येण विद्यात् ॥

(சு-ம்.)

இதுவெனும் பதார்த்தத்தின் பேதங்களான கந்தம், உருவம், இரசமுதலியன எவையோ அவைகளைக் கிராணமுதலிய இந்திரியங்களின் பஞ்சகம் ஒன்றோடொன்று கலவாமல் பேதமாகக் கொள்ளுகின்றன.

(வி-ம்.)

மனதினால் "இது" என்று சாமானியவஸ்துமாத்திரம் கிரகிக்கப்படுகின்றது. ஆனால் அதன் விசேஷமான கந்தாதிகள் கிரகிக்கப்படுகிற

தில்லை. ஆகையால் அவ்வஸ்துவின் விசேஷங்களைக் கிரகித்தலில் கிராண முதலிய இந்திரியங்களின் பஞ்சகம் உபயோகத்தை யடைகின்ற தென்பது பொருள். (அ)

௯. பரமாத்மாவின் (சாக்ஷியின்) நிரூபணம்.

[௧௧௨௫] कर्तारं च क्रियां तद्वद् व्यावृत्तविषयानपि ।
स्फोरयेदेकयत्नेन योऽसौ साक्ष्यत्र चिद्वपुः ॥ ९ ॥

(அ-கை.)

இப்படிச் சாமக்கிரியோடு சொரூபத்தை நிரூபித்து இப்போது பரமாத்மாவை நிரூபிக்கின்றார்:—

कर्तारं च क्रियां तद्वत् व्यावृत्तविषयान् अपि एकयत्नेन यः चिद्वपुः स्फोरयेत् असौ अत्र साक्षी ॥

(சு-ம்.)

கர்த்தாவையும், கிரியையினையும், அப்படியே வேறுபட்டவிஷயங்களையும் ஒரேமுயற்சியால் யாது சித்ரூபமாய்ப் பிரகாசிக்கின்றதோ அஃது இங்குச் சாக்ஷி யெனப்படுகின்றது.

(வி-ம்.)

முன் சுலோகம் ௧௧௨௨-ல் கூறிய அகங்காரவடிவகர்த்தாவையும், "நான்" "இது" என்னும்வடிவுடைய மனதின் விருத்திவடிவக் கிரியையினையும், ஒன்றுக்கொன்று விலக்ஷணமும் கிராணமுதலிய இந்திரியங்களால் கிரகிக்கத்தக்கனவுமாகிய கந்தாதிவிஷயங்களையும் ஒரேமுயற்சியால் அதாவது ஒருகாலத்திலேயே சேதனவடிவமேயாய் எது பிரகாசிக்கின்றதோ, அச்சேதனம் இங்கு வேதாந்தசாஸ்திரத்தில் சாக்ஷி யென்று சொல்லப்படுகின்ற தென்பது பொருள். (௯)

௧௦. சாக்ஷியின் (பரமாத்மாவின்) ஒரேமுயற்சியினால் எல்லாவற்றையும் விளக்குந்தன்மையின் திருஷ்டாந்தத்தோடுகூடிய வடிவம்.

[௧௧௨௬] ईक्षे शृणोमि जिघ्रामि स्वादयामि स्पृशाम्यहं ।
इति भासयते सर्वं नृत्यशालास्थदीपवत् ॥ १० ॥

(அ-கை.)

சாக்ஷியின் ஏகமுயற்சியால் எல்லாவற்றையும் விளக்குதலை உருவகப்படுத்திக் காட்டுகின்றார்:—

"अहं ईक्षे । शृणोमि । जिघ्रामि । स्वादयामि । स्पृशामि ।" इति सर्वं भासयते ॥

(சு-ம்.)

"நான் காண்கின்றேன், நான் கேட்கின்றேன், நான் முகருகின்றேன், நான் உருசிக்கின்றேன், நான் பரிசிக்கின்றேன்" என்று எல்லாவற்றையும் பிரகாசிக்கின்றது.

(வி-ம்.)

"உருவத்தை நான் பார்க்கின்றேன்." என்று உருவத்தினைக் காண்பதாகிய அகங்காரம், தரிசனமாகிய விருத்திவடிவக் கிரியை, கடாதி வடிவத் திருசியம் என்னும் இத்திரிபுடியை ஒருமுயற்சியால் பிரகாசிக்(அறி)கின்றது. இப்படியே "நான் சத்தத்தைக் கேட்கின்றேன்." என்றல் முதலிய வியவகாரத்திலும் சுரோதா(கேட்பவன்),சிரவணம்(கேள்வி),சுரோதவ்வியம் (கேட்கப்படுவது) என்னும் இவைமுதலியதிரிபுடிகளையும் ஏக முயற்சியினால் பிரகாசிக்கின்றது என்று பொருத்தத்தக்கதாம்.

(அ-கை.)

ஒரு காலத்தில் அவிகாரியாதலால் அநேகங்களின் பிரகாசத்தன்மையில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

नृत्यशालास्थदीपवत् ॥

(சு-ம்.)

நிருத்தியசாலையிலுள்ள தீபம்போல. (௧௦)

ரு. சுலோகம் ௧௧௨௬-ல் கூறிய திருஷ்டாந்தத்தினை வர்ணித்தலால் பரமாத்மா நிர்விகாரியாயிருத்தலால் எல்லாவற்றையும் விளக்குபவராமெனல் ௧௧௨௭—௧௧௩௧.

௧. சுலோகம் ௧௧௨௬-ல் கூறிய திருஷ்டாந்தத்தினை விளக்குதல்.

[௧௧௨௭] नृत्यशालास्थितो दीपः प्रभुं सभ्यांश्च नर्तकीं ।
दीपयेदविशेषेण तदभावेऽपि दीप्यते ॥ ११ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்தினை விளக்குகின்றார்:—

नृत्यशालास्थितः दीपः प्रभुं च सभ्यान् नर्तकीं अविशेषेण दीपयेत् । तदभावे अपि दीप्यते ॥

(சு-ம்.)

நிருத்தியசாலையிலுள்ள தீபம் பிரபுவாகிய சபைத்தலைவனையும் சபையோர்களையும், கூத்தியையும் முற்றும் பிரகாசிக்கின்றது; அப்பிரபுமுதலியோர் இல்லாதிருக்கும்போதும் பிரகாசிக்கின்றது.

(வி-ம்.)

முற்றும் (குறைவின்றி) பிரபுமுதலிய விஷயங்களின் பேதத்தை விளக்கும்பொருட்டு விருத்தி(வளர்ச்சி)முதலிய விகாரங்களின்றி விளக்கானது விளக்குகின்றதென்பது பொருள். (கக)

உ. திருஷ்டாந்தத்திற் கூறிய அர்த்தத்தினைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துதல்.

[ககஉ-அ] अहंकारं धियं साक्षी विषयानपि भासयेत् ।
अहंकाराद्यभावेऽपि स्वयं भात्येव पूर्ववत् ॥ १२ ॥

(அ-கை.)

தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்றார்:—

साक्षी अहंकारं धियं विषयान् अपि भासयेत् । अहंकाराद्यभावे अपि स्वयं पूर्ववत् भाति एव ॥

(சு-ம்.)

இப்படிச் சாக்ஷி அகங்காரத்தினையும் புத்தியையும் சப்தாதிவிஷயங்களையும் பிரகாசிக்கின்றது. அகங்காராதிகளில்லாதிருக்கினும் தான் முன்போலவே பிரகாசிக்கின்றது.

(வி-ம்.)

சுழுத்திமுதலியவற்றில் அகங்காரமுதலியவை யில்லாதிருக்கினும், ஆத்மா அவ்வபாவத்தின் சாக்ஷியாகுதலால் பிரகாசிக்கவே செய்கிறதென்பது பொருள். (கஉ)

௩. புத்திக்கு வேறாக எல்லாவற்றையும் விளக்கும் சாக்ஷியினை யங்கீகரித்தல் தகுதியாமாறு.

[ககஉ-௩] निरंतरं भासमाने कूटस्थे ज्ञप्तिरूपतः ।
तद्भासा भासमानेयं बुद्धिर्नृत्यत्यनेकधा ॥ १३ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரகாசவடிவ புத்திக்கே அகங்காராதி சகல வஸ்துக்

களையும் விளக்குந்தன்மை சம்பவித்தலால் அப்புத்திக்கு வேறான சாக்ஷியி
னைக் கற்பித்தலா லென்ன பிரயோஜன மென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

कूटस्थे ज्ञप्तिरूपतः निरंतरं भासमाने इयं बुद्धिः तद्भासा भासमाना अनेकधा नृत्यति ॥

(சு-ம்.)

கூடஸ்தன் ஞப்தி(அறிவு)வடிவத்தால் நிரந்தரம் விளங்கிக்கொண்டிருக்க, அக்கூடஸ்தனது பிரகாசத்தினால் விளக்கப்படுகின்ற இப்புத்தி அநேகவிதமாக நிருத்தியம் செய்கின்றது.

(வி-ம்.)

நிர்விகாரசாக்ஷி சொப்பிரகாசசைதன்னியமா யிருத்தலால் எப்போதும் விளக்குவிக்கப்படுகின்ற இப்புத்தி அச்சாக்ஷியின் சொரூபசைதன்னியத்தினால் விளங்குகின்றதாய், அநேகவிதமாக அதாவது "இது கடம், இது படம்" என்றல் முதலிய ஞானத்தின் வடிவமாக நிருத்தியஞ்செய்கின்றது அதாவது விகாரத்தை யடைகின்றது. இங்கு இது தாற்பரியமாம்:—எதனால் புத்தி விகாரமுடைமையால் ஜடமாதலால் அதற்குத் தானே விளக்க மின்றியதன்மை யிருக்கின்றதோ, அதனால் அப்புத்தியின் வேறாக எல்லாவற்றையும் விளக்குவதான சாக்ஷி அங்கீகரிக்கத்தக்கதாம். (கா.)

ச. சுரோதாவின் புத்தியில் எளிதாக்கும்பொருட்டுச் சுலோகம் ககஉஅ-ககஉகல் கூறிய அர்த்தத்தினை நாடகத்தன்மையாக நிரூபித்தல்.

[ககஙo] अहंकारः प्रभुः सभ्या विषया नर्तकी मतिः ।
तालादिधारीण्यक्षाणि दीपः साक्ष्यवभासकः ॥ १४ ॥

(அ-கை.)

சுலோகம் ககஉஅ-ககஉகூல் கூறிய அர்த்தத்தினைக் கேட்பவனது புத்தியில் எளிதாக்குதற்பொருட்டு நாடகத்தன்மையாக நிரூபிக்கின்றார்:—

अहंकारः प्रभुः । विषयाः सभ्याः । मतिः नर्तकी । अक्षाणि तालादिधारीणि । अवभासकः साक्षी दीपः

(சு-ம்.)

அகங்காரம் சுவாமி. விஷயம் சபையில் வசிக்கும் புருஷர்கள். புத்தி கூத்தி(நடிப்பவள்), இந்திரியங்கள் தாளமுதலியனவாசிப்போர். விளக்கும் சாக்ஷி தீபம்.

(வி-ம்.)

விஷயபோகத்தின் சம்பூர்ணத்தன்மை அசம்பூர்ணத்தன்மைகளின் அபிமானம் செய்து சந்தோஷமும் துக்கமுமுடையதாதலால் *-ந. அகங்காரத்திற்கு நிருத்தியத்தின் அபிமானியான பிரபுவாகிய இராஜாவின் சமத்துவ மிருக்கின்றது. நாற்புறமும் இருப்பவர்களா யிருந்தும் அந்த முற்கூறிய சந்தோஷவருத்தமுடைமை யில்லாதிருத்தலால் * ச. விஷயங்களுக்குச் சபையோரோடு சமானமாந்தன்மை யிருக்கின்றது. நாநாவித விகாரமுடையதா யிருத்தலால் * ரு. புத்திக்கு நிருத்தியஞ்செய்யும் ஸ்திரீயின்

---

* ந. எப்படி நிருத்தியத்தின் (கூத்தின்) அபிமானியாகிய இராஜா நிருத்தியத்தின் சம்பூர்ணத்தன்மை அசம்பூர்ணத்தன்மை(நிறைவு குறைவு)களின் அபிமானத்தால் சந்தோஷமும் வருத்தமு முடையவனுகின்றானே, கூத்திமுதலியோருக்குச் செல்வமுடைமையால் ஆசிரயமாயிருக்கின்றானே, நிருத்தியசாலையை நிருவகிப்பவனுயிருக்கின்றானே, அநேகதாளைகளோடு கூடியவனுயிருக்கின்றானே, பெருங்காரியங்களைச் செய்பவனுயிருக்கின்றானே, பெரும்போகங்களைப் புசிப்பவனுயிருக்கின்றானே, அதுபோல அகங்காரமும் போகத்தின் சம்பூர்ணத்தன்மை அசம்பூர்ணத்தன்மை (குறைவு நிறைவு)களின் அபிமானத்தினுல் சந்தோஷமும் வருத்தமு முடையதாகின்றது; உபாதிவடிவத்தன்மையால் ஆத்மதனமுடையதா யிருத்தலால் புத்திமுதலியவற்றிற்கு ஆசிரயமாம்; சமஷ்டிவியஷ்டிதேகவடிவ சாலையினை யான் எனவெனுந்தன்மையினுல் நிர்வகிப்பதாயிருக்கின்றது; சுபாசுபவிருத்திவடிவ அநேகதாளைகளோடுகூடியதா யிருக்கின்றது; சகலகர்மங்களுக்கும் கர்த்தாவாம்; சகலபோகங்களின் போக்தாவாம். ஆதலால் ஆபாஸனேடுகூடிய அகங்காரம் நிருத்தியாபிமானியாகிய அரசனுக்குச் சமமா யிருக்கின்றது.

* ச. எப்படிச் சபையிலுள்ள புருஷர் (மேல் டிப்பணத்திற்கூறிய) இராஜாவின் தர்மங்களில்லாதவராய் நாற்புறமு மிருக்கின்றார்களோ, இராஜாவின் ஸ்வாதீனமாயிருக்கின்றார்களோ, அதுபோலச் சப்தமுதலிய விஷயங்களும் கர்த்திருத்துவ போக்திருத்துவமுதலிய அகங்காரதர்மங்க ளில்லாதனவாய் நாற்புறமும் காணப்படுகின்றன. அகங்காரத்தின் ஸ்வாதீனமாயு மிருக்கின்றன. ஆதலால் சபையோர்களுக்குச் சமமாம்.

* ரு. கூத்தி நிருத்தியத்(கூத்)திற்கு உபயோகமுள்ள அநேக சேஷ்டைகள்வடிவ விகார(வேறுவகையான அவயவ)முடையவ ளாகின்றாளோ, சகல ஜனங்களின்பேரிலும் கைமுதலியவற்றை விரிக்கின்றாளோ, (க) சிங்காரம், (உ) வீரம், (ந) கருணை, (ச) அற்புதம், (ரு) ஹாஸ்யம், (சு) பயங்கரம், (எ) பீபற்சம், (அ) ரௌத்திரம், (கூ) சாந்தம் என்னும் நவரஸவடிவ மனோபாவத்தினுல் இராஜாவை இரஞ்சிக்கச்செய்கிறாளோ,

அதுபோலப் புத்தியும் காமாதிபரிணமவடிவ அநேகவிகாரமுடைய தாகின்றது. சகலவிஷயாகாரமாகுதலால் தனது நுனிப்பாகமாகிய கையை எல்லாவற்றினும் விரிக்கின்றது.

(க) சாஸ்திர சம்ஸ்கார மில்லாதிருக்கின் அப்போது வஸ்திரபூஷணுதிகளினது அழகின் அபிமானத்தால் சிங்காரரஸத்தைக் காட்டுகின்றது.

சமானத்துவ மிருக்கின்றது. புத்திகளினது விகாரங்களின் அநுகூலவியா

---

(உ) சரீரத்தின் பிரபலத்தன்மையைக் கண்டு யுத்தாதிகளின் பிரசங்கத்தில் புருஷத்தன்மையின் அபிமானத்தால் **வீரரஸத்**தைக் காட்டுகின்றது.

(௩) புத்திரகளத்திராதி சம்பந்திகளின் துக்கத்தைக் கண்டு இளகிய அந்தக்கரணத்தில் **கருணாரஸத்**தைக் காட்டுகின்றது.

(௪) இந்திரஜாலமுதலிய அபூர்வபதார்த்தங்களைக் கண்டு ஆச்சரியத்தினை அடைவதாய் **அற்புதரஸத்**தைக் காட்டுகின்றது.

(௫) விரும்பிய விஷயம் கிடைத்தலால் ஆநந்தத்தை யடைவதாய் **ஹாசியரஸத்**தைக் காட்டுகின்றது.

(௬) சத்துருமுதலியோரா லுண்டாகிய துக்கத்தின் சிந்தையால் பயத்தை யடைவதாய்ப் **பயங்கரரஸத்**தைக் காட்டுகின்றது.

(௭) மலினபதார்த்தத்தின் சம்பந்தத்தால் வெருப்பினை யடைந்ததாய்ப் **பீபற்சரஸத்**தைக் காட்டுகின்றது. பீபற்சம், குற்சம், அருவருப்பு என்பன ஒருபொருட்கிளவி.

(௮) குரோதமுதலியவற்றின் பிரசங்கத்தால் பயத்தைக் காட்டுவதாய் **ரௌத்திரரஸத்**தைக் காட்டுகின்றது.

(௯) பிரியபதார்த்தத்தின் நாசத்தினால் உதாசீனமாய்ச் **சாந்திரஸத்**தைக் காட்டுகின்றது.

(க) புத்தி எப்போது சாஸ்திரசம்ஸ்காரத்தோடுகூடிய தாகின்றதோ, அப்போது கீதையின் கங-வது அத்தியாயத்துள்ள அமானித்துவாதிகளும், பஞ்சமகாபூதவிவேகத்தின் ௰உ-வது டிப்பணியிற் சொல்லப்பட்டவைகளுமாகிய தைவீகசம்பத்துவடிவ பூஷணங்களோடுகூடியதாய்ச் **சிங்காரரஸத்**தைக் காட்டுகின்றது.

(உ) காமாதிசத்துருக்களின் ஜயத்தில் புருஷார்த்தத்தினால் **வீரரஸத்**தைக் காட்டுகின்றது.

(௩) அத்தியாத்மாதிதுக்கத்தினால் விழுங்கப்பட்ட புருஷர்களைக் கண்டு இளகுதலை யடைந்து **கருணாரஸத்**தைக் காட்டுகின்றது.

(௪) ஒரே அத்விதீய அசங்கநிர்விகார நிஷ்பிரபஞ்சப் பிரஹ்மத்தில் சஜாதீயாதிபேதத்தோடுகூடியதும் சங்கமும் கருத்திருத்துவாதி விகாரமுமுடையதுமாகிய பிரபஞ்சத்தைக் கண்டு அல்லது குருவின் கிருபையால் அலௌகிகவஸ்துவைக் கண்டு ஆச்சரியமுடையதாய் **அற்புதரஸத்**தைக் காட்டுகின்றது.

(௫) இராஜ்ஜியபதத்தினின்றும் விழுந்து பிச்சைக்கார பதத்தை யடைந்த அரசனைப்போல பிரஹ்மத்தன்மையினின்றும் நழுவி ஜீவத்தன்மையை யடைந்த பரமாத்மாவைப் பார்த்து அல்லது அபரோக்ஷஞானத்தின் அடைவால் சந்தோஷத்தை யடைந்து அல்லது நிராவரண சொரூபாநந்தத்தை யநுபவித்து **ஹாஸ்ய(பெருநகை)ரஸத்**தைக் காட்டுகின்றது.

(௬) ஞானமின்றி நிவிருத்திக்கக்கூடாத ஜன்மமரணாதி சம்ஸாரதுக்கத்தின் சிந்தையால் பயத்தை யடைந்ததாய்ப் **பயங்கரரஸத்**தைக் காட்டுகின்றது.

(௭) சிஷ்டர்களால் நிந்திக்கப்பட்ட இஷ்டப்படி நடத்தல்வடிவ துராசாரத்தால் அருவருப்பை யடைந்ததாய்ப் **பீபற்சரஸத்**தைக் காட்டுகின்றது.

பாரமுடையதா யிருத்தலால் *௬. இந்திரியங்களுக்குத் தாளமுதலியவற்றைத் தரிக்கும் புருஷர்களின் சமானத்துவ மிருக்கின்றது. இவ்வெல்லாவற்றையும் விளக்குவதா யிருத்தலின் *எ. சாக்ஷிக்குத் தீபத்தின் சமானத்துவ மிருக்கின்றது. இவ்வாறு பார்க்கத்தக்கதாம். (௧௪)

இ. சாக்ஷியினது நிர்விகாரித்தன்மையினைச் சுலோகம் ௧௨௨௧-ல் கூறிய திருஷ்டாந்தத்தோடு கூறுதல்.

[௧௧௯௧] स्वस्थानसंस्थितो दीपः सर्वतो भासयेद्यथा ।
स्थिरस्थायी तथा साक्षी बहिरंतः प्रकाशयेत् ॥ १५ ॥

(அ-கை.)

அப்படியானுல் சாக்ஷிக்கும் அகங்காராதிகளை விளக்குந்தன்மை யுள

---

(அ) அஞ்ஞஜனங்களைச் சன்மார்க்கத்தில் பிரவிருத்தி செய்விக்கும்பொருட்டுச் சம்சாரதுக்கத்தின் பயத்தைக் காட்டுவதாய் அல்லது தத்துவஞானத்தின் பலத்தினுல் காலனையும் பயமுறுத்துவதாய் ரௌத்திரரஸத்தைக் காட்டுகின்றது.

(௯) தோஷதிருஷ்டியினுலாகிய அல்லது மித்தியாத்துவதிருஷ்டியினுலாகிய வைராக்கியத்தின் உதயத்தால் அல்லது ஜகத்தின் மறதிவடிவ உபராமத்தின் உதயத்தால் பிரபஞ்சத்தின் அருசியை யடைந்து சாந்திரஸத்தைக் காட்டுகின்றது.

(௧௦) நிராவரணபரிபூரணமும் விருத்தியோடுகூடியதும் ஜீவன்முக்தியின் விலக்ஷணமானதுமான ஆநந்தத்தை அநுபவிப்பதாய் நவரஸத்தின் வேறுன பத்தாவது ரஸத்தைக் காட்டுகின்றது.

இவ்வாறு புத்தி நவரஸத்தைக் காட்டி ஆபாஸத்தோடுகூடிய அகங்காரத்தை இரஞ்சிக்கச் செய்கின்றது. ஆதலால் கூத்திக்குச் சமானமாம்.

*௬. எப்படித் தாளம், மிருதங்கம், சாரங்கிமுதலிய வாத்தியங்களைத் தரிக்கும் புருஷர் கூத்தியின் செய்கைக் கநுகூலமான வியாபாரமுடையவர்களாவரோ, அதுபோல இந்திரியங்களும் எந்தெந்த விஷயங்களைக் கிரகிக்கப் புத்தி செல்லுகின்றதோ, அந்தந்த விஷயத்திற்கு நோகுதலால் புத்தியின் விகாரமாகிய பரிணும் எவையோ அவற்றின் அநுகூல வியாபாரமுடைய வாகின்றன. ஆதலால் இந்திரியம் தாளமுதலியவற்றைத் தரிப்பவர்களுக்குச் சமானமாம்.

*எ. நிருத்தியசாலையிலுள்ள தீபம் எப்போது சபை நிலைத்திருக்கின்றதோ அப்போது உள்ளும் வெளியும் எங்கும் இராஜாமுதலிய எல்லோரையும் விளக்குகின்றது. எப்போது சபை இல்லையோ அப்போதும் பிரகாசிக்கின்றது. தான் போகுதல் வருதல் வடிவ விகாரமில்லாததாய் எப்படியோ அப்படித் தனது ஸ்தானத்தில் நிலைத்திருக்கின்றது. அதுபோலச் சாக்ஷியும் சாக்கிர ஸ்வப்பனகாலங்களில் உள்ள அகங்காராதிகளெல்லாவற்றையும் விளக்குகின்றது. சுழுத்திமூர்ச்சைசமாதிகாலங்களில் இவையாவும் இல்லாதபோது அவற்றின் அபாவத்தையும் பிரகாசிக்கின்றது. தான் போகுதல் வருதல்முதலிய விகாரங்களில்லாததாய் எப்படியோ அப்படியே தனது மகிமையில் நிலைத்திருக்கின்றது. ஆதலால் சாக்ஷி தீபத்தைப் போலிருக்கின்றது.

தாக அவ்வகங்காராதிகளோடு சம்பந்தத்தின் நாசமும் உற்பத்தியுமாகிய விகாரமுடைமை யுண்டாகுமே யென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

दीपः यथा स्वस्थानसंस्थितः सर्वतः भासयेत् तथा स्थिरस्थायी साक्षी बहिः अंतः प्रकाशयेत् ॥

(சு-ம்.)

எப்படித் தீபம் தனது ஸ்தானத்தில் நிலைப்பதாய் எல்லாவிடத்தும் பிரகாசிக்கின்றதோ, அதுபோல ஸ்திரஸ்தாயியாய் அதாவது மூன்றுகாலத்திலும் அசையாததாய்ச் சாக்ஷி வெளியிலும் உள்ளிலும் பிரகாசிக்கின்றது.

(வி-ம்.)

எப்படிப் போக்குமுதலிய விகாரமின்றிய தீபம் தனது இடத்திலிருந்துகொண்டே தனது சமீபத்துள்ள சகலபதார்த்தங்களையும் பிரகாசிக்கின்றதோ, இப்படிப் போகுதல்முதலிய விகாரமின்றிச் சுவசொரூபத்தில் நிலைப்பதாய்ச் சாக்ஷியும் எல்லாவற்றையும் பிரகாசிக்கின்றதென்பது கருத்து. (கரு)

உ. பரமாத்மாவின் யதார்த்தசொரூபத்தினை விசேஷமாக நிச்சயித்தல்

ககௗஉ—ககசஉ.

க. சாக்ஷியாகிய பரமாத்மாவில் புத்தியினது சஞ்சலத்தன்மையின் ஆரோபம்

ககௗஉ—ககௗரு.

க. வாஸ்தவசாக்ஷியின் உள்வெளித்தன்மையபாவபூர்வகமாய் வெளியுள் வஸ்துவினைக் கூறுதல்.

[ககௗஉ] बहिरंतर्विभागोऽयं देहापेक्षो न साक्षिणि ।
विषया बाह्यदेशस्था देहस्यांतरहंकृतिः ॥ १६ ॥

(அ-கை.)

அப்படியானால் சாக்ஷி வெளியிலும் உள்ளிலும் விளங்குந்தன்மையைக் கூறுதல் யுக்தமன்று. ஏனெனின், "अपूर्वमनपरमनंतरमबाह्यं ॥ முன்னும் அதாவது காரணமுமன்று; பின்னும் அதாவது காரியமுமன்று. உள்ளுமன்று; வெளியுமன்று." என்னும் சுருதியினால் அந்தச் சாக்ஷியாகிய ஆத்மாவிற்கு வெளியிலும் உள்ளிலும் விபாகமின்மையைக் கூறுதலாலென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

अयं बहिरन्तर्विभागः देहापेक्षः न साक्षिणी ॥

(சு-ம்.)

இந்த வெளி உள் ளென்னும் பிரிவு யாதோ அது தேகத்தைமுன்னிட்டதாம்; சாக்ஷியினிடத்துப் பொருந்தாது.

(அ-கை.)

அப்போது எதற்கு வெளித்தன்மை யிருக்கின்றது? எதற்கு உட்டன்மை யிருக்கின்றது? என்னுமிடத்துக் கூறுகின்றார் :—

विषयाः बाह्यदेशस्थाः । देहस्य अंतः अहंकृतिः ॥

(சு-ம்.)

சப்தமுதலிய விஷயங்கள் வெளியிடத்தி லிருக்கின்றன. தேகத்திற்குள் அகங்கார மிருக்கின்றது. (கசு)

உ. வெளியிலும் உள்ளிலும் பிரகாசிக்கின்ற சாக்ஷியினிடத்தில் புத்தியின் சஞ்சலத்தன்மையினை ஆரோபித்தல்.

[ககூஙூ] अंतस्था धीः सहैवाक्षैर्बहिर्याति पुनः पुनः ।
भास्यबुद्धिस्थचांचल्यं साक्षिण्यारोप्यते वृथा ॥ १७ ॥

(அ-கை.)

அப்படியானால் "அதுபோல மூன்றுகாலத்திலும் அசையாததாய்ச் சாக்ஷி வெளியிலும் உள்ளிலும் பிரகாசிக்கின்றது." என்று ககூஙுக-வது சுலோகத்திற் கூறியபடி அவிகாரியான சாக்ஷியின் வெளியிலும் உள்ளிலும் விளக்குந்தன்மையைக் கூறுதல் பொருத்தமின்றியதாம்; ஏனெனின், "अहं घटं पश्यामि யான் கடத்தைக் காண்கின்றேன்." என்னுமிடத்து "நான்" என்று உள்ளில் அகங்காரத்தின் சாக்ஷியாதலால் முதலாக விளக்கும் சாக்ஷிக்குப் பின் "கடத்தைக் காண்கின்றேன்" என்று கடாகாரவிருத்தி விளக்கவடிவமாக வெளிப்படுதலின் அநுபவமிருத்தலால் என்றுசங்கித்துக் கூறுகின்றார் :—

अन्तस्था धीः अक्षैः सह एव पुनः पुनः बहिः याति भास्यबुद्धिस्थचाञ्चल्यं साक्षिणि वृथा आरोप्यते ॥

(சு-ம்.)

தேகத்தினுள்ளிருக்கும் புத்தி இந்திரியங்களோடு கூடவே அடிக்கடி வெளியே செல்லுகின்றது. இவ்வாறாகவே சாக்ஷியினால் விளங்கப்படும் புத்தியினுள்ள சஞ்சலத்தன்மை சாக்ஷியினிடத்தில் வீணாக ஆரோபிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

"நான்" என்னும் வடிவமாய்த் திருஷ்டாவான ஸாபாஸ(ஆபாஸத்தோடு கூடிய) அகங்காரம் எதுவோ அதனைக் கிரகிப்பதாய் அதாவது விஷயஞ் செய்வதா யிருத்தலின் தேகத்தினுள்ளிருக்கும் புத்தி யெதுவோ, அது "இது கடம்" என்றல்முதலிய வடிவங்களால் உருவமுதலியவற்றை யறிதற்பொருட்டு நேத்திராதி இந்திரியவாயிலாக மறுபடியும் மறுபடியும் வெளியிற் செல்லுகின்றது. அவ்வாறாகவே அந்தப் புத்தியிலுள்ள சஞ்சலத் தன்மை யெதுவோ அது அப்புத்தியை விளக்கும் சாக்ஷியினிடத்து மூடர்களால் ஆரோபிக்கப்படுகின்றது. ஆதலால் சாக்ஷிக்கு உண்மையான வெளியிலும் உள்ளிலும் செல்லுதலாகிய சஞ்சலத்தன்மை யில்லை யென்பது தாற்பரியம். (கஎ)

௩. பிரகாசகத்தில் பிரகாசிக்கப்படுவதனது சஞ்சலத்தன்மையின் ஆரோபத்தில் திருஷ்டாந்தம்.

[கக௩௪] गृहांतरगतः स्वल्पो गवाक्षादातपोऽचलः ।
तत्र हस्ते नर्त्यमाने नृत्यतीवातपो यथा ॥ १८ ॥

(அ-கை.)

விளக்குவதாகிய பிரகாசகத்தில் பிரகாசிய(விளக்கப்படும்) வஸ்துவினது சஞ்சலத்தன்மையின் ஆரோபத்தினை எங்கே கண்டாயென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

गवाक्षात् ग्रहांतरगतः स्वल्पः आतपः अचलः तत्र हस्ते नर्त्यमाने यथा आतपः नृत्यति इव ॥

(சு-ம்.)

சாளரத்தின்வழியாய் வீட்டினுட் பிரவேசித்த சொற்ப வெயில் எதுவோ அது சொரூபமாக அசைவில்லாததாகின்றது. அங்குக் கையை ஆட்டினால் வெயில் ஆடுவதுபோ லாகின்றது.

(வி-ம்.)

சாளரமாகிய பலகணியின்வழியாய் வீட்டினுட்பிரவேசித்த அற்ப வெயில் எதுவோ அது அசையாதிருக்கின்றது. அவ்வெயிலில் புருஷன் கையை இங்குமங்குமாக அசைப்பதனால் எப்படி வெயில் அசைவதுபோற் காணப்படுகின்றதோ, ஆனால் அசைகிறதில்லையோ வென்பது பொருள். ()

௪. திருஷ்டாந்தத்திற் கூறிய அர்த்தத்தினைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துதல்.

[கக௩௫] निजस्थानस्थितः साक्षी बहिरंतर्गमागमौ ।
अकुर्वन्बुद्धिचांचल्यात्करोतीव तथा तथा ॥ १९ ॥

(அ-கை.)

தார்ஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

निजस्थानस्थितः साक्षी बहिः अंतः गमागमौ अकुर्वन् बुद्धिचाञ्चल्यात् तथा तथा करोति इव ॥

(சு-ம்.)

அப்படியே தனது சொரூபத்தில் நிலைத்துள்ள சாக்ஷி வெளியிலும் உள்ளிலும் போகுதல்வருதல்களைச் செய்யாததாய்ப் புத்தியின் சஞ்சலத் தன்மையால் அப்படி அப்படியே செய்கின்றவர்களைப்போல வாகின்றது.()

உ. சாக்ஷியின் தேசகாலாதிகளின்றிய நிஜசொரூபத்தைக் கூறுதலோடு அதனது அநுபவத்தின் உபாயம் ககஙசு—ககசஉ.

க. புத்தியின் வெளி உள்ளிடங்களின்றிய சாக்ஷியின் நிஜஸ்தானம்.

[ககஙசு] न बाह्यो नांतरः साक्षी बुद्धेर्देशौ हि तावुभौ ।
बुद्ध्याद्यशेषसंशांतौ यत्र भात्यस्ति तत्र सः ॥ २० ॥

(அ-கை.)

"தனது சொரூபத்தில் நிலைத்துள்ள" என்னும் ககஙரு-வது சுலோகத்துள்ள வார்த்தையினால் சாக்ஷிக்குப் பாகியமுதலிய தேசத்திலிருக்குந் தன்மை சொல்லப்படுகின்றதா? வென்றுசங்கித்துச் சாக்ஷியினிடத்து வெளி உள் இடங்களின் கற்பனை இல்லையென்று கூறுகின்றார் :—

साक्षी बाह्यः न आंतरः न ॥

(சு-ம்.)

சாக்ஷி வெளியு மன்று : உள்ளு மன்று.

(அ-கை.)

அதிற் காரணத்தைக் கூறுகின்றார் :—

हि तौ उभौ बुद्धेः देशौ ॥

(சு-ம்.)

எதனால் அந்த வெளி உள் இரண்டும் புத்தியின் இடங்களா யிருக்கின்றனவோ அதனால் சாக்ஷியின் இடங்களாகா.

(அ-கை.)

அப்போது சாக்ஷியின் இடம் யாதென்று சொல்லக்கருதிய தென்னு மிடத்துக் கூறுகின்றார் :—

बुद्ध्याद्यशेषसंशांतौ सः यत्र भाति तत्र अस्ति ॥

(ச-ம்.)

புத்திமுதலியயாவும் செவ்வையாய்ச் சாந்தியடையவே அந்தச் சாக்ஷி எங்குத் தனது சொரூபத்தில் விளங்குகின்றதோ அங்குதான் இருக்கின்றது.

(வி-ம்.)

இங்கு முதலியவென்னும் சொல்லால் இந்திரியமுதலியன கிரகிக்கப் படுகின்றன. "செவ்வையாய்ச்சாந்தி" யென்னும் சொல்லால் அந்தப் புத்தி முதலியவற்றின் பிரதீதியினது நிவிருத்தி சொல்லக்கருதியதாம். (௨0)

௨. தேசாதிகளில்லாத ஆத்மாவினது எல்லாவற்றினுமிருக்குந்தன்மையும் எல்லாவற்றின் சாக்ஷித்தன்மையும் வாஸ்தவமாகாமை.

[௧௧௩௭] देशः कोऽपि न भासेत यदि तर्ह्यस्त्वदेशभाक् ।
सर्वदेशप्रक्लृप्त्यैव सर्वगत्वं न तु स्वतः ॥ २१ ॥

(அ-கை.)

அப்படியானால் எல்லா விவகாரமாகிய பிரதீதி எதுவோ அது நிவிருத்தியாகவே தேசமே தோற்றுகிறதில்லை யெனின், அப்போது சாக்ஷிக்கு அதன்கணிருத்தற்றன்மை எதனால் சொல்லப்படுகின்றதென் றாசங்கித்துத் தனது அபிப்பிராயத்தை வெளிப்படுத்துகின்றார் :—

यदि कः अपि देशः न भासेत तर्हि अदेशभाक् अस्तु ॥

(ச-ம்.)

எப்போது ஒரு இடமும் தோற்றவில்லையோ அப்போது தேசத்தினை யடையாத சாக்ஷி இருக்குக.

(வி-ம்.)

தேசாதிகளினது கற்பனையின் அதிஷ்டானத்திற்குத் தன்னினும் வேறான தேசத்தின் அபேக்ஷையில்லை யென்பது கருத்து.

(அ-கை.)

அப்படியானால் தேசாதிகளில்லாதனவாகச் சாஸ்திரத்தில் எல்லாவற்றினும் வியாபகமும் எல்லாவற்றின் சாக்ஷியுமாகிய தன்மை சொல்லப்பட்டிருக்கின்றது; அது விரோதத்தை யடையுமே யென்னுமிடத்துக் கூறுகின்றார் :—

सर्वदेशप्रक्लृप्त्या एव सर्वगत्वम् ॥

(சு-ம்.)

சர்வதேசத்தின் கற்பனையினாலேயே ஆத்மாவிற்கு எல்லாவற்றினுமி ருக்குந்தன்மை யிருக்கின்றது.

(அ-கை.)

சொரூபமாகவே எல்லாவற்றினுமிருக்குந்தன்மை ஏன் உண்டாகா தெனக் கூறுகின்றார் :—

स्वतः तु न ॥

(சு-ம்.)

சொரூபமாக எல்லாவற்றினுமிருக்குந்தன்மை யில்லை.

(வி-ம்.)

ஆத்மா அத்விதீயமா யிருத்தலாலும் அசங்கமா யிருத்தலாலும் சொரூபமாக எல்லாவற்றினுமிருக்குந்தன்மை யில்லை யென்பது தாற்பரி யம். (உக)

[கக௬அ] अंतर्बहिर्वा सर्वं वा यं देशं परिकल्पयेत् ।
बुद्धिस्तद्देशगः साक्षी तथा वस्तुषु योजयेत् ॥ २२ ॥

(அ-கை.)

எல்லாவற்றினுமிருக்குந்தன்மையினைப்போலச் சர்வசாக்ஷித்தன்மை யும் வாஸ்தவமன் றென்று கூறுகின்றார்:—

अंतः वा बहिः वा यं सर्वं देशं बुद्धिः परिकल्पयेत् ।
तद्देशगः साक्षी तथा वस्तुषु योजयेत् ॥

(சு-ம்-)

உள் அல்லது வெளியிடத்தினை அல்லது எந்தச் சகல தேசங்களையும் புத்தி கற்பிக்கின்றதோ அந்தத்தேச(இட)த்திலுள்ளது சாக்ஷி யெனப்படு கின்றது. அவ்வாறே எல்லாவஸ்துக்களிலும் பொருத்திக்கொள்ளுக. ()

௬. புத்திகற்பிதவஸ்துவின் சாக்ஷித்தன்மையினைச் சொல்லுதலோடு சாக்ஷியின் நிஜரூபம்.

[கக௬௯] यद्यद्रूपादि कल्प्येत बुद्ध्या तत्तत्प्रकाशयन् ।
तस्य तस्य भवेत्साक्षी स्वतो वाग्बुद्ध्यगोचरः ॥ २३ ॥

(அ-கை.)

" அவ்வாறே எல்லாவஸ்துக்களிலும் பொருத்திக்கொள்ளுக." என்று ௧௧௩-அ-வது சுலோகத்திற் கூறியதனை விரிக்கின்றார் :—

यत् यत् रूपादि बुद्ध्या कल्प्येत । तत् तत् प्रकाशयन् तस्य तस्य साक्षी भवेत् ॥

(சு-ம்.)

எங்கெந்த ரூபாதிவஸ்துக்கள் புத்தியினால் கற்பிக்கப்படுகின்றனவோ, அந்தந்தவஸ்துவைப் பிரகாசிப்பிப்பதாய் அந்தந்தவஸ்துவின் சாக்ஷியாகின்றது.

(அ-கை.)

அப்போது அதனது நிஜவடிவம் யாதெனக் கூறுகின்றார் :—

स्वतः वाग्बुद्ध्यगोचरः ॥

(சு-ம்.)

சொரூபமாக வாக்கிற்கும் புத்திக்கும் விஷயமாகாததாம். (உ௩)

ச. சுலோகம் ௧௧௩-ல் கூறிய நிஜவடிவத்தினது கிரகிக்கப்படாததன்மையின் இஷ்டாபத்தியோடு சுலோகம் ௧௧௩-ல் கூறிய பரமாத்மாவின் அவசேஷத்தினைக் கூறுதல்.

[௧௧௪0] कथं तादृङ्मया ग्राह्य इति चेन्नैव गृह्यताम् ।
सर्वग्रहोपसंशांतौ स्वयमेवावशिष्यते ॥ २४ ॥

(அ-கை.)

வாக்கிற்கும் மனதிற்கும் விஷயமாகாததாகவே முமுக்ஷுவினால் கிரகிக்கப்படமாட்டாதென்று வாதி சங்கிக்கின்றான் :—

तादृक् मया कथं ग्राह्यः इति चेत् ॥

(சு-ம்)

அவ்வாறு மனதிற்கும் வாக்கிற்கும் விஷயமாகாத சாக்ஷி என்னால் எப்படிக் கிரகிக்கத்தக்கதா மென்று கூறின்.

(அ-கை.)

கிரகிக்கப்படாததன்மை இஷ்டமேயா மென்று சித்தாந்தி கூறுகின்றார் :—

मा एव गृह्यताम् ॥

(சு-ம்.)

அப்போது * அ. கிரகிக்கப்படவேண்டாம்.

(அ-கை.)

அப்படியானால் "விசாரத்தினால் மாயை நஷ்டமாகவே பரமாத்மா வாகிய தானே மிஞ்சியிருக்கின்றது." என்று மூன்றாவது சுலோகத்திற் கூறிய பரமாத்மாவின் எஞ்சுதல் எதுவோ அது சித்தியா தென்னுமிடத்துக் கூறுகின்றார்:—

सर्वगृहोपसंशांतौ स्वयं एव अवशिष्यते ॥

(சு-ம்.)

எல்லாக்கிரகங்களும் அதாவது எல்லா உணர்ச்சிகளும் செவ்வையாய்ச் சாந்தியாகவே தானே மிஞ்சுகின்றது.

(வி-ம்.)

தனது ஆத்மாவினும் வேறான துவைதத்தின் மித்தியாத்தன்மையின் நிச்சயத்தினால் அந்தத் துவைதத்தின் பிரதீதி உபரதியாகவே ஸ்வாத்மா வே சத்தியத்தன்மையாக மிஞ்சியிருக்கின்றது என்பது பொருள். (உச)

ஞ. பிரமாணாபேக்ஷையின்றிய சொப்பிரகாச வஸ்துவினை உத்தமாதிகாரிக்கு உபதேசிக்கும் உபாயம்.

[ககசக] न तत्र मानापेक्षाऽस्ति स्वप्रकाशस्वरूपतः ।
तादृग्व्युत्पत्त्यपेक्षा चेच्छ्रुतिं पठ गुरोर्मुखात् ॥ २५ ॥

(அ-கை.)

சுலோகம் கககo-ல் கூறிய நியாயத்தால் சுவாத்மா பரிசேஷத்திற்கு விஷயமாகின்றது. என்றாலும் அதனை அபரோக்ஷமாக்குதற்பொருட்டு ஓர் பிரமாணம் வேண்டியதாமெனக் கூறுகின்றார்:—

तत्र मानापेक्षा न अस्ति ॥

(சு-ம்.)

அந்தச் சுவாத்மாவில் பிரமாணத்தின் அபேக்ஷையில்லை.

---

* அ. சுவயம்பிரகாசவடிவ ஆத்மாவை யங்கீகரிப்பவர்களாகிய எமக்கு அதனைக் கிரகியாமை (விஷயஞ் செய்யாமை) இஷ்டமாம். சப்தத்தின் இலக்ஷணாவிருத்தியினு லும் மனதின் விருத்திவியாப்தியினாலும் மனமுதலியவற்றின் சாக்ஷி சுவப்பிரகாச வடிவ அவ்வாத்மா வென்று அறிதல் தகுதியாம்.

(அ-கை.)

அதில் ஏதுவைக் கூறுகின்றார்:—

स्वप्रकाशस्वरूपतः ॥

(சு-ம்.)

சொப்பிரகாசசொரூபமாகுதலால்.

(அ-கை.)

அப்படியானால் "ஆத்மாவின் சொப்பிரகாசத்தன்மையினால் தன்னாலேயே விளங்குதலில் பிரமாணம் அபேக்ஷிக்கப்படுவதன் றென்னும் ஞானத்தினது சித்தியின்பொருட்டுப் பிரமாணம் அபேக்ஷிக்கப்படுவதா மென்று சங்கித்துச் சுருதியே இங்குப் பிரமாண மென்று கூறுகின்றார்:—

तादृग्व्युत्पत्त्यपेक्षा चेत् गुरोः मुखात् श्रुतिं पठ ॥

(சு-ம்.)

அவ்வாறு ஞானத்தின் அபேக்ஷை யிருக்குமாயின் பிரஹ்மநிஷ்டகுருமுகமாகச் சுருதியைப் படி. (உரு)

௬. மந்தாதிகாரிக்கு ஆத்மாநுபவத்தின் உபாயம்.

[௧௧௪௨] यदि सर्वगृहत्यागोऽशक्यस्तर्हि धियं व्रज ।
शरणं तदधीनोऽन्तर्बहिर्वैषोऽनुभूयताम् ॥ २६ ॥

(அ-கை.)

இப்படி உத்தமாதிகாரிக்கு ஆத்மாவினது அநுபவத்தின் உபாயத்தைக் கூறி, இப்போது மந்தாதிகாரிக்கு அவ்வாத்மாநுபவத்தின் உபாயத்தைக் காட்டுகின்றார்:—

सर्वग्रहत्यागः यदि अशक्यः तर्हि धियं शरणं व्रज ॥

(சு-ம்.)

சகலப் பிரதீதியினையும் விடுதல் கூடாதாயின் அப்போது புத்தியினைக் குறித்துச் சரணமடை அதாவது *௬. இலக்ஷியஞ்செய்.

---

* ௬. எப்படிச் "சாகையின்கண் சந்திரனிருக்கிறது" என்னும் வார்த்தையினைக் கேட்டு ஸ்தூலதிருஷ்டியுடைய புருஷன் சாகையை இலக்ஷியஞ் செய்து, பின் தர்மத்தோடு சாகையின் திருஷ்டியை விட்டுச் சாகையின் சமீபத்திலிருத்தலால் சாகையின் அதீனமான சந்திரனைக் காண்கிறானோ, அப்படியே மந்தபுத்தியுடைய அதிகாரி குருவின் உபதேசத்தால் புத்தியினை இலக்ஷியஞ் செய்து, வெளி உள் தர்மத்தோடு புத்தியின் திருஷ்டியை விட்டு, அதிஷ்டான சாக்ஷிவடிவமாகப் புத்திக்குச் சமீபமாக நிலைத்திருத்தலால் புத்தியினதீனமானதைப்போலுள்ள பரமாத்மாவைத் தனது சொரூபமாக அநுபவிக்கின்றான்.

(அ-கை.)

புத்தியைச் சரணமடைதலில் என்ன பயனுண்டாகின்ற தெனக் கூறுகின்றார்:—

तदधीनः अंतः वा बहिः एषः अनुभूयताम् ॥

(சு-ம்.)

அந்தப்புத்தியின் அதீனமாய் உள்ளிலாவது வெளியிலாவது இப்பரமாத்மா அநுபவிக்கப்படுக.

(வி-ம்.)

புத்தியினால் எங்கெந்த வெளி அல்லது உள்வஸ்து நாற்புறமும் கற்பிக்கப்படுகின்றதோ, அந்தந்த வஸ்துவின் சாக்ஷியாகுதலால் அந்தப் புத்தியின் அதீனம் பரமாத்மாவாம். அது அவ்வாறு சாக்ஷித்தன்மையினாலேயே அநுபவிக்கவேண்டியதா மென்பது பொருள். (உசு

நாடகதீபமென்னும்

பத்தாம் பிரகரணம்

முடிந்தது.

---

ஓம்தத்ஸத்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ பஞ்சதசி.

---

## பிரஹ்மாநந்தத்தில் $ யோகாநந்தம்.

### முதல் அத்தியாயம்.

### பதினோராம் பிரகரணம்.

க. சுருதியினால் பிரஹ்மஞானம் அனர்த்தநிவிருத்தி பரமாநந்தப்பிராப்திக்குக் காரணமாதலைச் சொல்லுதலோடு பிரஹ்மத்தின் ஆநந்தத்தன்மை அத்துவிதீயத்தன்மை சொப்பிரகாசத்தன்மை என்பவற்றின் சித்தி ககசுரு - ககஎசு.

க. அநேக சுருதிகளால் பிரஹ்மஞானம் அநர்த்தநிவிருத்தி பரமாநந்தப் பிராப்திக்குக் காரணமாதலைக் கூறுதல் ககசுரு - ககருஉ.

*க. பலத்தோடு பிரஹ்மாநந்தகிரந்தத்தினது ஆரம்பத்தின் பிரதிஞ்ஞை.*

[ககசுரு] ब्रह्मानंदं प्रवक्ष्यामि ज्ञाते तस्मिन्नशेषतः ।
ऐहिकामुष्मिकानर्थव्रातं हित्वा सुखायते ॥ १ ॥

(அ-கை.)

ஆரம்பிக்க விரும்பிய பிரஹ்மாநந்தகிரந்தம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டும், விக்கினவடிவ பாபங்கள் நீங்கும்பொருட்டும் இஷ்ட தேவதையினது சொரூபத்தின் அநுசந்தானவடிவ மங்கலத்தை ஆசரிக்கின்றவராய் நூலாசிரியராகிய ஸ்ரீபாரதிதீர்த்தஸ்வாமியானவர் கிரந்தத்தில் கேட்பவனது பிரவிருத்தி சித்திக்கும்பொருட்டுப் பிரயோஜனத்தோடு கிரந்தத்தின் விஷயத்தினை வெளிப்படுத்துகின்றவராய்க் கிரந்தாரம்பத்தின் பிரதிஞ்ஞையைச் செய்கின்றார்:—

ब्रह्मानन्दं प्रवक्ष्यामि । तस्मिन् ज्ञाते ऐहिकामुष्मिकानर्थव्रातं अशेषतः हित्वा सुखायते ॥

---

$ பிரஹ்மாநந்தத்தைப் பிரதிபாதிக்கும் பிரஹ்மாநந்த மென்பது மூன்று அல்லது ஐந்து அத்தியாயவடிவக்கிரந்தமாம். அதனுள்ளடங்கிய சித்தத்தின் ஏகாக்கிரத் தன்மைவடிவ யோகத்தினால் வெளிப்படத்தக்க ஆநந்தத்தைப் பிரதிபாதிக்கும் பிரகாணம் யோகாநந்த மெனப்படும்.

(சு-ம்.)

பிரஹ்மாநந்தத்தினைச் சொல்லுகின்றேன். அந்தப் பிரஹ்மாநந்தத்தினை அறியின் இப்புருஷன் இவ்வுலகசம்பந்தியும் பரலோகசம்பந்தியுமான துக்கசமூகங்களை விட்டுச் சுகியாகின்றான்.

(வி-ம்.)

" निर्विशेषं परं ब्रह्म साक्षात्कर्तुमनीश्वराः । ये मंदास्तेऽनुकंप्यंते सविशेषनिरूपणैः ॥ நிர்விசேஷ அதாவது உபாதியின்றிய பரப்பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரிக்க அதாவது அபரோக்ஷமாக்கச் சாமர்த்தியமின்றிய மந்தபுத்தியுடைய அதிகாரிகள் யாவர்களோ, அவர்கள் சவிசேஷமான சோபாதிகப் பிரஹ்மத்தின் நிரூபணங்களால் கிருபைக்கு விஷயமாக்கப்படுகின்றனர்." என்னும் சாஸ்திரவசனத்தினால் சவிசேஷப்பிரஹ்மவடிவ விஷ்ணுவாதி தேவதைகளின் தத்துவமாகிய உண்மைவடிவத்தின் நிர்விசேஷப் பிரஹ்மவடிவத்தன்மையைக் * க. கூறுதலாலும், " आनन्दो ब्रह्म ॥ ஆநந்தம் பிரஹ்மம்" என்பது முதலிய சுருதிகளால் பிரஹ்மத்திற்கு ஆநந்தவடிவத்தன்மை கூறப்படுதலாலும் "பிரஹ்மாநந்தம்" என்னும் ஆநந்தவடிவப்பிரஹ்மத்தின் வாசகமான சத்தத்தின் உச்சாரணத்தால் " यद्धि मनसा ध्यायति तद्वाचा वदति ॥ எதனை மனதினால் தியானிக்கின்றானோ அதனை வாக்கினாற் சொல்லுகின்றான்." என்னும் சுருதியிற் கூறிய நியாயத்தினால் பிரஹ்மத்தின் ஸ்மரணவடிவ மங்கலத்தின் ஆசரணம் சித்தித்தது. பிரஹ்மம் சகல வேதாந்தங்களிலும் பிரதிபாதிக்கத்தக்க விஷயவடிவமா யிருத்தலால் அவ்வேதாந்தசாஸ்திரத்தின் பிரகரணவடிவ இந்தப் பிரஹ்மாநந்த மென்னும் நூலிற்கும் அந்தப் பிரஹ்மமே விஷயமாம். இவ்வாறு பிரஹ்மசப்தத்தினை உச்சரித்தலால் கிரந்தத்தின் விஷயமும் சூசிக்கப்பட்டது. "இகலோக சம்பந்தி" என்றல் முதலிய இந்தச் சுலோகத்தின் பிற்பாதியால் அநிஷ்டமாகிய அநர்த்தத்தின் நிவிருத்தியும் இஷ்டமாகிய பரமாநந்தத்தின் பிராப்தியுமாகிய இருவகைப் பிரயோஜனத்தையும் நூலாசிரியர் தன் வாயினாலேயே சொல்லியதும் பிரஹ்மவடிவமுமாகிய இந்த யாதொரு ஆநந்தமுண்டோ அது பிரஹ்மாநந்தபதத்தின் வாச்சியார்த்தமாம். வாச்சியமாகிய சொல்லப்படும் பிரஹ்மம், வாசகமான சொல்லுவதான கிரந்த மென்னும் இரண்டன் அபேதத்தையும் உபசாரமாக அதாவது ஆரோபித்துச் சொல்லுதலால் அவ்வாச்சியார்த்தவடிவ பிரஹ்மாநந்தத்தைப் பிரதிபாதிக்கும்

---

* க மரத்தின் வேரைத் தீண்டுதலால் அதன்கணுள்ள கிளை இலைமுதலிய சகல அங்கங்களும் தொடப்படுவதுபோல விஷ்ணுவாதியரின் அதிஷ்டான நிர்விசேஷப் பிரஹ்மத்தைக் கூறுதலால் விஷ்ணுவாதி சகல தேவதைகளின் மங்கலாசரணமும் அர்த்தத்தினால் சித்தித்தது.

கிரந்தமும் பிரஹ்மாநந்தமாம். அந்த வாச்சியவாசகமான இருவடிவப்பிரஹ்மாநந்தத்தைச் சொல்லுகிறேன். அந்தப் பிரதிபாத்தியப் பிரதிபாதகவடிவப் பிரஹ்மாநந்தத்தை அறியவே இப்புருஷன் இவ்வுலகத்தில் ஆவனவாகிய தேகபுத்திராதிகளில் யான் எனது என்னும் அபிமானத்தைச் செய்வதனுலாம் அத்தியாத்மாதிதாபவடிவமும் பரலோகத்திலாவனவாகிய மற்சரமுதலிய வடிவமுமான அவ்வநர்த்தங்களின் சமூகம் முற்றும் விடுபடத்தக்கவாறு விட்டுச் சுகி அதாவது சுகவடிவப் பிரஹ்மமே யாகின்றான். (௧)

உ. அந்வயவாயிலாகப் பிரஹ்மஞானத்தினுல் இஷ்டப்பிராப்தியையும் அநிஷ்டநிவிருத்தியையும் பற்றிய[illegible]ருதிவாக்கியம்.

[௧௧௪௪] ब्रह्मावित्परमाप्नोति शोकं तरति चा[illegible]
रसो ब्रह्म रसं लब्ध्वानंदी भवति नान्यथा ॥ २ ॥

(அ-கை.)

பிரஹ்மஞானத்திற்கு அநிஷ்டநி[illegible]ருத்தி இஷ்டப்பிராப்திக்குக் காரணமாந்தன்மை யுண்டு. அதில் அநேக சுருதிஸ்மிருதிகளின் வாக்கியம் பிரமாணமா மென்று காட்டவிரும்பிய வராகிய ஆசாரியர் முதலில் "ब्रह्मविदाप्नोति परम् ॥ பிரஹ்மஞானி பரத்தை யடைகின்றான்." என்னும் தைத்திரியவாக்கியம், "श्रुतं ह्येवमेव भगवद्दृशेभ्यः तरति शोकमात्मवित् ॥ सोहं भगवः शोचामि । तं मा भगवान् शोकस्य पारं तारयतु ॥ ஆத்மஞானி சோகத்தை அதாவது கிருதார்த்தமின்மையுணர்ச்சியுடைமைவடிவ மனதின் தாபத்தைக் கடக்கின்றான் என்று எதனுல் தம்மைப் போன்ற புருஷர்களால் கேட்டிருக்கின்றேனே அதாவது சாஸ்திரத்தினுல் அறிந்திருக்கின்றேனே, அதனுல் பகவானே! அச்சாஸ்திர ஞானமுடைய யான் அநாத்மாவை யுணர்ந்தவனுயிருத்தலின் கிருதார்த்தமின்மைப் புத்தியினுல் எப்போதும் சந்தாபவடிவ சோகத்தையடைகின்றேன். அத்தன்மைய எனக்குப் பகவானுகிய தாம் சோகவடிவ சமுத்திரத்தின் கரையில் ஆத்மஞானவடிவ கப்பலினுல் சேர்ப்பிக்கவேண்டும் அதாவது கிருதார்த்தபுத்தியை சம்பாதிக்கச் செய்யவேண்டும்." என்னும் சாந்தோக்கியத்தின் ஏழாவது அத்தியாயத்திலுள்ள சநற்குமாரரை நோக்கி நாரதர் கேட்கும் வாக்கியம் என்னும் இரண்டு சுருதி வாக்கியங்களையும் அர்த்தத்தினுற் படிக்கின்றார்:—

ब्रह्मवित् परं आप्नोति च आत्मवित् शोकं तरति ॥

(சு-ம்.)

பிரஹ்மவித்து பரப்பிரஹ்மத்தை யடைகின்றான். ஆத்மவித்து சோகத்தைக் கடக்கின்றான்.

(வி-ம்.)

பிரஹ்மத்தை எவன் அறிகின்றானோ அவன் பிரஹ்மவித் தெனப்படுகின்றான். அவன் பர மென்னும் மேலான ஆநந்தவடிவப் பிரஹ்மத்தையடைகின்றான். பூமாசப்தத்திற்கு வாச்சியமாகிய தேசகாலவஸ்துக்களினாலாகிய பரிச்சேதமின்றிய ஆத்மாவினை எவனறிகின்றானோ அவன் ஆத்மவித் தெனப்படுகின்றான். அவன் தனது சம்பந்தத்தையடைந்த புருஷனைச் சோகமடைவிப்பதனால் சோக மெனப்படும் அஞ்ஞானவடிவ காரணத்தையுடைய சம்சாரம் எதுவோ அதனைக் கடக்கின்றான்.

(அ-கை.)

அப்படியானால் உதகரிக்கப்பட்ட தைத்திரீயசுருதியின் வாக்கியத்தில் பிரஹ்மஞானம் பரத்தினை அடைதற்கேதுவாதற்றன்மையே விளங்குகின்றது; ஆநந்தத்தினை யடைதற்கு ஏதுவாந்தன்மை யில்லையென் றாசங்கித்துப் பிரஹ்மஞானம் ஆநந்தப்பிராப்திக்கு ஏதுவாதலைப் பிரதிபாதிக்குந் தன்மையனவாகிய "रसो वै सः रसं ह्येवायं लब्ध्वानन्दी भवति ॥ இரச மெனப்படுவது சாரவடிவமே. அந்தரஸம் பிரஹ்மாத்மாவாம். இரசமாகிய ஆநந்தவடிவப் பிரஹ்மத்தினையே இப்புருஷன் அடைந்து ஆநந்தமுடையவனாகின்றான்." என்னும் அத்தைத்திரீயசுருதியின் வாக்கியத்தை அர்த்தத்தாற் படிக்கின்றார்:—

रसः रसं ब्रह्म लब्ध्वा आनन्दी भवति ॥

(சு-ம்.)

இரஸம் பிரஹ்மாத்மாவாம். இரஸவடிவ பிரஹ்மத்தை யடைந்து புருஷன் ஆநந்தமுடையவனாகின்றான்.

(வி-ம்.)

"सत्यं ज्ञानमनन्तं ब्रह्म तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः ॥ சத்திய ஞான அநந்தம் பிரஹ்மம். அந்த * உ. மந்திரபாகத்திற் கூறிய அல்லது இந்தப் *ரு. பிராஹ்மணபாகத்திற் கூறிய ஆத்மாவாகிய பரமாத்மாவினின்றும் ஆகாயமுண்டாயிற்று." என்னும் பிரசங்கத்தின் ஆதியில் பிரஹ்மம் ஆத்மா வென்

* உ. கர்மத்தில் உபயோகமுள்ள வஸ்துவாகிய திரவியத்தினையும், இந்திராதி தேவதைகளையும், பிரஹ்மத்தையும் அறிவிக்கும் வேதத்தின் பாகம் மந்திரபாக மெனப்படும். அதனையே சம்ஹிதை (சங்கிதை) யென்றும் கூறுவர்.

* ரு. விதேய அதாவது விதிக்கத்தக்க அர்த்தத்தினை யறிவிக்கும் வேதத்தின்பாகம் பிராஹ்மணபாக மெனப்படும். உபநிஷத்பாகமும் ஆரணியகபாகமும் அதனுள்ளடங்கியனவேயாம்.

னும் சப்தத்தினல் கூறிய ஆத்மா யாதோ அது இரஸமாம் அதாவது ஆநந்த வடிவ சாரமா மென்பது பொருள். இரஸமாகிய ஆநந்தவடிவப் பிரஹ்மத்தினை அடைந்து அதாவது ब्रह्माहमस्मि ॥ யான் பிரஹ்மம் என்னும் ஞானத்தினு லடையப்பட்டு இப்புருஷன் ஆநந்தி அதாவது அபரிச்சின்ன நிரதிசய சுகமுடையவ னுகின்ருன்.

(அ-கை.)

முற்கூறிய பொருளை வெதிரேகத்தினைக் காட்டுதலால் திடமாக்குகின்ருர்:—

अन्यथा न ॥

(சு-ம்.)

வேறுவிதமா யில்லை.

(வி-ம்.)

வேறுவிதமாய் அதாவது பிரஹ்மாத்ம ஐக்கியஞானத்தை விட்டு வேறு சாதனத்தின் அநுஷ்டானத்தினுல் ஆநந்தமுடையவனுகா னென்பது பொருள். (உ)

௩. அந்நுவயவியதிரேகத்தால் அநர்த்தநிவிருத்தியைப்பற்றிய சுருதிவாக்கியம்.

[கககூ] प्रतिष्ठां विंदते स्वस्मिन्यदा स्यादथ सोऽभयः ।
कुरुतेऽस्मिन्नंतरं चेदथ तस्य भयं भवेत् ॥ ३ ॥

(அ-கை.)

இப்படி அந்நுவயவடிவவாயிலால் பிரஹ்மஞானத்தினுல் இஷ்டத்தின் பிராப்தியையும் அநிஷ்டத்தின் நிவிருத்தியையும் பிரதிபாதிக்குந்தன்மையினதாகிய சுருதிவாக்கியத்தினைக் காட்டி, இப்போது கிரமமாக அந்நுவய வியதிரேகங்களால் அநர்த்தநிவிருத்தியினைக் காட்டுந்தன்மையினவாகிய "यदा ह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयनेऽभयं प्रतिष्ठां विन्दतेऽथ सोऽभयं गतो भवति ॥ எப்பொழுதே இம்முமுக்ஷு பிரசித்த இவ்வதிருசிய அநாத்மிய அநிருக்த அநிலயனப்பிரஹ்மத்தில் அபயம் அதாவது அபின்னமாகிய பிரதிஷ்டை(ஸ்திதி)யை அடைகின்ருனே, அப்பொழுது அந்த வித்துவான் அபயத்தை யடைந்தவனுகின்ருன்." "यदा ह्येवैष एतस्मिन्नुदरमन्तरं कुरुतेऽथ तस्य भयं भवति । எப்பொழுதே இப்புருஷன் பிரசித்தமான இந்தப்பிரஹ்மத்தில் சிறிதேனும் பேதத்தைச் செய்கின்ருனே, அப்போது அவனுக்குப் பய முண்டாகின்றது.'' என்னும் இரண்டு வாக்கியங்களையும் அர்த்தத்தினுல் கிரமமாகச் சொல்லுகின்ருர்:—

यदा स्वास्मिन् प्रतिष्ठां विन्दते । अथ सः अभयः स्यात् । अस्मिन् अंतरं कुरुते चेत् । अथ तस्य भयं भवेत् ॥

(சு-ம்.)

எப்போது இந்த முமுக்ஷு தனது சொரூபத்தில் நிலையை யடைகின்றானோ அப்போது அவன் அபயனாகின்றான். எப்போது புருஷன் இத்தனது சொரூபத்தில் பேதத்தைச் செய்கின்றானோ அப்போது அவனுக்குப் பய முண்டாகின்றது.

(வி-ம்.)

இந்த மூலசுலோகத்திற்கு இது பொருளாம்:— இங்குப் பிரசித்த அர்த்தமுடைய हि =ஏ என்னும் சொல் எதுவோ அது வித்துவான்களது பிரசித்தியினைக் காட்டுதற்றன்மைத்தாம். நிச்சயவடிவ அர்த்தத்தின் வாசகமாய் வேறொன்றனை நீக்குவதான हि என்னும் சொல்லிற்குப் பரியாயம் एव =ஏ என்னும் சொல்லாம். அது இந்த அத்விதீய ஆத்மாவின் ஞானமே அநர்த்தநிவிருத்தியின் உபாயமாம்; வேறன்று என்னும் நியமத்தைச் செய்தற்பொருட்டாம். ஆகலால் எப்போது அதாவது எந்தக்காலத்திலேயே இந்த முமுக்ஷு இந்தவித்துவான்களது அநுபவத்தாலறியப்படும் அதிருசிய அதாவது இந்திரியங்களுக்கெட்டாத, அநாத்மிய அதாவது சுவசொரூபமா யிருக்தலால் எனதெனுந்தன்மைக்கு விஷயமாகாத, அநிருக்த அதாவது நிர்வசனமாகிய சொல்லினால் சொல்லுதலின்றிய, அநிலயன அதாவது எதன்கண் லய முண்டாகுமோ அப்படிப்பட்ட நிலயமான ஆதார மில்லாது தனது மகிமையில் நிலைத்துள்ள பிரத்தியகபின்ன பிரஹ்மத்தில் அபய மென்னும் அத்விதீய அதாவது "द्वितीया द्वै भयं भवति ॥ இரண்டாவதினால் நிச்சயமாகப் பய முண்டாகின்றது." என்னும் சுருதியினால் பய மென்னும் சொல்லால் இங்குப் பயத்திற்கு ஏதுவான பேதம் அறியப்படுகின்றதாகலின் பயமாகிய பேத முண்டாகாதவண்ணம் பிரதிஷ்டையாகிய சம்சய விபரீதமின்றியதன்மையினால் "ब्रह्माहमास्मि ॥ யான் பிரஹ்மம்" என்னும் நிலையைக் குருவின் * ச. உபசத்தி (சரணடைதல்) முதலியவற்றால் சிரவணாதிகளைச் செய்து அடைகின்றானோ, அப்பொழுதே இப்படி அறிகின்றவனாகிய வித்துவான் பயமின்றிய மோக்ஷவடிவ அத்விதீயப்பிரஹ்மத்தை யடைகின்றான். "ब्रह्म वेद ब्रह्मैव भवति ॥ பிரஹ்மத்தை யறிபவன் பிரஹ்மமே யாகின்றான்." என்னுஞ் சுருதியினால் எப்போது அதாவது எக்காலத்திலேயே முற்கூறிய இம்முமுக்ஷு இந்த அதிருசியத்தன்மைமுதலிய குணங்களோடுகூடிய பிரத்தியகபின்ன பிரஹ்மத்தில் சிறிதேனும் உபாசிய உபாச

---

* ச. உபசத்திசப்தத்தின் அர்த்தத்தை ருஅக-வது பக்கம் கஎ-வது டிப்பணத்திற் காண்க.

கன் முதலியவடிவபேதத்தைச் செய்கின்றானோ அதாவது காண்கின்றானோ அப்பொழுதே அப்பேதத்தைக் காணும் புருஷனுக்குப் பயமாகிய சம்சாரத்தாலாம் துக்க முண்டாகின்றது. (௩)

௪. பேததரிசனத்தால் பய முண்டென்பதைத் திடப்படுத்தும்பொருட்டு வாயுமுதலியோருக்குப் பயங்காட்டுந்தன்மைத்தாகிய சுருதிமந்திரம்.

[௧௧௪௬] वायुः सूर्यो वह्निरिंद्रो मृत्युजन्मांतरेऽतरम् ।
कृत्वा धर्मं विजानंतोऽप्यस्माद्भीत्या चरंति हि ॥ ४ ॥

(அ-கை.)

"பேததரிசனத்துக்குப் பய முண்டாகின்றது" என்னும் அர்த்தத்தைத் திடமாக்குதற்குப் பிரஹ்மாத்மாவினது ஏகத்துவத்தின் ஞானமின்றிய வாயுமுதலியோருக்குப் பயத்தைக்காட்டுந்தன்மையினதாகிய "भीषाऽस्मात् वातः पवते ॥ இப்பரமாத்மாவினின்றும் பயந்து வாயு வீசுகின்றது." என்பது முதலிய வேதமந்திரத்தை அர்த்தத்தால் படிக்கின்றார்:—

वायुः सूर्यः वह्निः इन्द्रः मृत्युः जन्मांतरे धर्मं विजानंतः अपि अंतरं कृत्वा अस्मात् भीत्या चरंति हि ॥

(சு-ம்.)

வாயு சூரியன் அக்கினி இந்திரன் இயமன் என்பவர் ஜன்மாந்தரத்தில் தர்மத்தை யறிந்தவர்களாயினும், பேதத்தைச் செய்து இந்தப் பிரஹ்மத்தினின்றும் பயத்தினால் சரிக்கின்றார்கள் என்பது பிரசித்தம்.

(வி-ம்.)

ஜகத்தின் நியாமகரா யிருத்தலால் பிரசித்தமான வாயுமுதலிய ஐந்து தேவதைகளும் முன் ஜன்மத்தில் * ஞ. இஷ்டம் அபூர்த்தமுதலியவடிவ தர்மத்தினை ஞானபூர்வகமாக அநுஷ்டானஞ்செய்தவர்களாயினும், பிரத்தியகாத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் பேதத்தைச் செய்து இந்தப் பிரஹ்மத்தினின்றும் பயத்தை யடைந்து இந்த வாயுவாதி ஜன்மத்தில் தத்தம் வியாபாரங்களில் எப்போது மிருக்கின்றார்கள். மூலத்திலுள்ள हि =ஹி என்னும் சொல்லினால் भयादस्याग्निस्तपति भयात्तपति सूर्यः भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पंचमः ॥ இந்தப்பிரஹ்மத்தின் பயத்தினால் அக்கினி தபிக்கின்றான்.

* ஞ. யஞ்ஞ யாகாதி அசுவத்த வட உத்தியாபனமுதலிய பிராயச்சித்தம், வேதமந்திராதிகளைப் படித்தல், கிணறுகட்டல், மரமுதலியன வைத்தல்முதலிய தர்மசம்பந்தி கர்மம் என்னும் இவை இஷ்டாபூர்த்த மெனப்படுகின்றன.

இதன்பயத்தினால் சூரியன் காய்கின்றான். இதன்பயத்தினால் இந்திரனும் வாயுவும் ஐந்தாவதான மிருத்தியுவும் (இயமனும்) ஓடுகிறார்கள்." என்னும் கடசுருதியில் நசிகேதாவாகிய சிஷ்யனுக்கு இயமதர்மராஜாவானவர் சொல்லிய பிரசித்தியை நூலாசிரியர் காட்டுகின்றார். (௪)

ரு. பிரஹ்மஞானம் அநர்த்தநிவிருத்திக்கு ஏதுவாதலை விளக்குந்தன்மைத்தாகிய சுருதி.

[௧௧௭௭] आनंदं ब्रह्मणो विद्वान्न बिभेति कुतश्चन ।
एतमेव तपेनैषा चिंता कर्माग्निसंभृता ॥ ५ ॥

(அ-கை.)

அப்படியானால் "तरति शोकमात्मवित् ॥ ஆத்மாவை யுணர்ந்தவன் சோகத்தைக் கடக்கின்றான்." என்றல் முதலிய உதகரிக்கப்பட்ட வாக்கியங்களில் பிரஹ்மாநந்தத்தின் ஞானத்திற்கு அநர்த்தநிவிருத்திக்கு ஏதுவாகுந்தன்மை விளக்கமாய்க் காணப்படுகிறதில்லை யென்றாசங்கித்து, அவ்விதமாய்ச் சொல்லுந்தன்மையதாகிய சுருதிவாக்கியத்தினை உதகரிக்கின்றார்:—

ब्रह्मणः आनन्दं विद्वान् कुतश्चन न बिभेति ॥

(சு-ம்.)

பிரஹ்மத்தின் ஆநந்தத்தை யறியும் புருஷன் எதினின்றும் பயத்தை யடைகிறதில்லை.

(வி-ம்.)

"राहोः शिरः ॥ இராகுவின் சிரசு" என்பன முதலியவற்றைப்போலப் "பிரஹ்மத்தின் ஆநந்தத்தை" என்னும் பேதவார்த்தை உபசாரத்தினால் சொல்லப்பட்டது. ஆதலால் பிரஹ்மத்தின் சொரூபவடிவ ஆநந்தத்தினை அபரோக்ஷமாயறியும் புருஷனாகிய வித்துவான் எதற்கும் அதாவது இவ்வுலகசம்பந்தியான பயத்திற்குக் காரணமான புலிமுதலியவற்றிற்காவது அல்லது பரலோகசம்பந்தமுள்ள பயத்திற்குக் காரணமான பாபமுதலியவற்றிற்காவது பயப்படுகிற தில்லை.

(அ-கை.)

அப்படியானால் தத்துவஞானிக்குப் பாபாதிகளினின்றும் பயமில்லையென்பது எதனால் அறியப்படுகின்றதென் றாசங்கித்து, அந்த ஞானிக்குப் பாபமுதலியவற்றினின்றும் அஞ்சுத லில்லை யென்பதனைச் சொல்லும் "एतँ ह वाव न तपति किमहँ साधु नाकरवं किमहं पापमकरवम् நான் சாதுவாகிய புண்ணியகர்மத்தை எதனால் செய்யவில்லை? யான் பாபத்தை ஏன் செய்தேன்?

என்னும் சிந்தை இந்த ஞானியைத் தபிக்கிறதில்லை." என்னும் சுருதி வாக்கியத்தை அர்த்தத்திலேற் படிக்கின்றார்:—

कर्माग्निसंभृता एषा चिंता एतं एव न तपेत् ॥

(சு-ம்.)

கர்மவடிவ அக்கினியினுற் சம்பாதிக்கப்பட்ட இச்சிந்தை இந்த ஞானியினைமாத்திரம் தபிக்கச் செய்யாது.

(வி-ம்.)

புண்ணியபாபவடிவ கர்மமே அக்கினியாம். ஏனெனின், கிரமமாகச் செய்யாமை செய்தல்களால் அக்கினியினைப்போலச் சந்தாபத்திற்குக் காரணமாதலால் அந்தக்கர்மவடிவ அக்கினியினுல் சம்பாதிக்கப்பட்ட இந்த "நான் புண்ணியத்தை ஏன் செய்யவில்லை? பாபத்தை எதனுற் செய்தேன்?" என்னும் வடிவினதாகிய சிந்தை இத்தத்துவமுணர்ந்தவனையே தபிக்கச் செய்கிறதில்லை. மற்றைய அவித்துவானைத் தபிக்கச்செய்கிறதில்லையென்பதில்லை; ஆனால் அந்த அஞ்ஞானி அந்த வியாகூலத்தால் எப்போதும் தபிக்கிறான் என்பது பொருள். (ரு)

சு. பிரஹ்மஞானிக்குப் புண்ணிய பாபங்களின் தாபஞ் செய்யுந்தன்மையின்மையில் ஏதுவைக்காட்டுந்தன்மைத்தான சுருதி.

[ககசு அ] एवं विद्वान्कर्मणी द्वे हित्वात्मानं स्मरेत्सदा ।
कृते च कर्मणी स्वात्मरूपेणैवैष पश्यति ॥ ६ ॥

(அ-கை.)

ஞானிக்குப் புண்ணிய பாபங்களின் தாபஞ்செய்யுந்தன்மையின்மையில் ஏதுவினைக் காட்டுந்தன்மையவாகிய "स य एवं विद्वानेते आत्मानँ स्पृणुते ॥ அந்த யாதொரு புருஷன் இவன் இப்படி யறிகின்றவனுய் இப்புண்ணிய பாபங்களை விட்டு ஆத்மாவை விரும்புகிறான் அதாவது எப்போதும் விரும்புகிறான்." "उभेह्येवैष आत्मानँ स्पृणुते ॥ இந்த ஞானி இப்புண்ணிய பாப மிரண்டையும் ஆத்மவடிவமாகக் காண்கின்றான்." என்னும் இரண்டு வாக்கியங்களையும் அர்த்தத்திலேற் படிக்கின்றார்:—

एवं विद्वान् द्वे कर्मणी हित्वा आत्मानं सदा स्मरेत् । च एषः कृते कर्माणि स्वात्मरूपेण एव पश्यति ॥

(சு-ம்.)

இப்படி வித்துவான் இரண்டு கர்மங்களையும் விட்டு ஆத்மாவை எப்

போதும் ஸ்மரணஞ் செய்வன். அன்றியும் இந்த ஞானி செய்த பாப புண்ணியவடிவ கர்மத்தினைத் தனது வடிவமாகவே காண்கின்றான்.

(வி-ம்.)

அந்த யாதொரு புருஷன் இக்கூறிய விதமாக அதாவது "स यश्चायं पुरुषे यश्चासावादित्ये स एकः ॥ அந்த யாதொரு இப்பரமாத்மா புருஷனாகிய வியஷ்டிசங்காதத்தி லிருக்கின்றானோ, யாதொரு இந்த ஆதித்தியனாகிய சூரியமண்டலத்தி லிருக்கின்றானோ, அவன் ஒருவன்." என்னும் சுருதியிற் கூறியவிதமாக அறிகின்றவனா யிருக்கின்றானோ, அவன் இப்புண்ணிய பாப மிரண்டையும் விட்டுப் பிரஹ்மத்தினும் வேறாகாத பிரத்தியகாத்மாவினை எப்போதும் ஸ்மரிக்கவேண்டு மென்பது பொருள். எதனால் புண்ணியபாபங்களினது மித்தியாத்தன்மையின் அநுசந்தானத்தினால் பெயரை ஞானத்தினால் விட்டிருக்கின்றானோ, அதனால் அந்தப்புண்ணிய பாபத்தை விஷயஞ்செய்யும் சிந்தையே ஞானிக் கில்லை. அப்போது அச்சிந்தையினாலாகும் தாபம் எங்கிருந்துண்டாகும் என்பது அபிப்பிராயம். அல்லது இந்த வித்துவான் முற்கூறிய இரண்டு தேகேந்திரியாதிகளின் பிரவிருத்தியினாலாகிய புண்ணியபாபவடிவ கர்மத்தினைத் தனது ஆத்மவடிவமாகவே "इदं सर्वं यदयमात्मा ॥ யாதொரு இச்சகத்துண்டோ, அது முழுவதும் இவ்வாத்மாவாம்." என்பனமுதலிய வாக்கியங்களிற் கூறியவிதத்தாற் காண்கின்றான் அதாவது அறிகின்றானென்பது பொருள். ஆதலால் தனது ஆத்மாவினும் வேறாகாதிருத்தலினாலும் புண்ணியபாபங்களுக்குத் தாபத்தை யுண்டுபண்ணுந்தன்மை யில்லை யென்பது தாற்பரியம். (சு)

எ. தத்துவஞானத்தினால் இருதயக்கிரந்திமுதலியவற்றின் நிவிருத்தியைப் பற்றிய சுருதி.

[ககசக] भिद्यते हृदयग्रंथिश्छिद्यंते सर्वसंशयाः ।
क्षीयंते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे ॥ ७ ॥

(அ-கை.)

அப்படியானால் "नाभुक्तं क्षीयते कर्म कल्पकोटिशतैरपि ॥ அநுபவிக்கப்படாத கர்மம் நூறுகோடி கற்பங்களினாலும் கெடுகிறதில்லை." என்றல் முதலிய சாஸ்திரவாக்கியங்க ளிருத்தலால் அநாதிசம்ஸாரத்தில் வெகு ஜன்மங்களால் சம்பாதிக்கப்பட்டனவும், அப்பிரசித்தமா யிருத்தலால் ஆத்மவடிவமாக அநுசந்தானஞ் செய்யத்தகாதனவுமாகிய புண்ணிய பாபவடிவ அளவில்லாக்கர்மங்க ளிருக்கின்றன. அவைகளிருக்கின் ஞானிக்கு அப்புண்ணிய பாபவடிவ கர்மத்தை விஷயஞ்செய்யும் சிந்தை எவ்வாறு

இருக்கமாட்டாதென் றாசங்கித்து, அஞ்ஞானவடிவ உபாதானத்தோடு அக்கர்மங்கள் தத்துவஞானத்தால் நாசமுடையன வாகுதலால் சிந்தையை யுண்டுபண்ணுந்தன்மை யில்லையென்னும் அபிப்பிராயமாக இருதயக்கிரந்தி முதலியவற்றின் நிவிருத்தியைக் குறித்த மண்டூகமுதலிய சுருதிகளிலு ள்ள வாக்கியத்தைப் படிக்கின்றார்:—

परावरे तस्मिन् दृष्टे अस्य हृदयग्रंथिः भिद्यते । सर्वसंशयाः छिद्यंते । च कर्माणि क्षीयंते ॥

(சு-ம்.)

பராவரமாகிய அப்பரமாத்மாவை யறிந்தகாலத்து இப்புருஷனது இருதயக்கிரந்தி பேதத்தை யடைகின்றது. சர்வசம்சயங்களும் சேதிக்கப் படுகின்றன; கர்மங்கள் நசிக்கின்றன.

(வி-ம்.)

பர அதாவது இரண்யகர்ப்பாதி மேன்மையான பதங்களும் அவரம் அதாவது எதனினும் தாழ்ந்தனவா யிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட பர்ாவரமாகிய பரமாத்மாவினைச் சாக்ஷாத்கரித்தகாலத்து, அச்சாக்ஷாத்கார முடைய புருஷனது இருதயக்கிரந்தி அதாவது இருதயமாகிய புத்திசிதாத் மாக்களுக்குக் கிரந்தியினைப்போலத் திடசம்பந்தவடிவமாயிருத்தலால் கிரந் திவடிவ அந்நியோந்நியாத்தியாச மெதுவோ அது பேதத்தை யடைகின்றது அதாவது நாசமாகின்றது என்பது பொருள். சர்வசம்சயங்களும் அதாவது ஆத்மா தேகாதிகளினும் வேறு? அன்று? வேறாயினும் கர்த்திருத்துவாதி தர்மமுடையதா? அன்று? அகர்த்தாவாயினும், அவ்வாத்மாவிற்குப் பிரஹ் மத்தோடு பேத மிருக்கிறதா? இல்லையா? அபேதமாயினும், அந்தப் பிரஹ் மத்தோடு அபின்னமான ஆத்மாவின் ஞானம் கர்மாதிகளோடு முக்திக்குச் சாதனமா? அல்லது தனியாகவா? * சு. இவைமுதலிய சம்சயங்களும்

---

* சு. நாநாகோடி(பக்ஷங்)களை விஷயஞ்செய்யும் ஞானத்தினைச் சம்சய மென்பர். அச்சம்சயம் (க) பிரமாணகதசம்சயம், (உ) பிரமேயகதசம்சயம் என்னும் பேதத்தால் இருவகைத்தாம்.

(க) வேதாந்தமாகிய உபநிஷத்தின் வாக்கியவடிவப்பிரமாணம் ஜீவப்பிரஹ்மத் தின் பேதத்தைப் பிரதிபாதிப்பதா? அல்லது அபேதத்தைப் பிரதிபாதிப்பதா? என் னும் சம்சயம் பிரமாணகதசம்சயமாம். அது சிரவணத்தால் நீங்குகின்றது.

(உ) பிரமேயகதசம்சயம் [க] அநாத்மாவிலுள்ளது [உ] ஆத்மாவிலுள்ளது என் னும் பேதத்தால் இருவகைத்தாம்.

[க] அநாத்மாவிலுள்ள சம்சயமோ அநேகவிதமாயிருக்கிறது. அதனைச் சொல்லு தலால் உபயோக மில்லை.

சேதிக்கப்படுகின்றன. ஏனெனின், யதார்த்தசொரூபமாகச் சாக்ஷாத்கரிக்கப்பட்ட வஸ்து சம்சயவிபரீதங்களுக்கு விஷயமாதல் காணப்படாமையால் என்பது தாற்பரியம். கர்மங்களான சஞ்சித புண்ணியாபுண்ணியங்கள் க்ஷயத்தை யடைகின்றன அதாவது தமது உபாதானமாகிய அஞ்ஞானத்தின் நாசத்தால் * எ. நாசத்தை யடைகின்றன. (எ)

---

[உ] ஆத்மாவிலுள்ள சம்சயம் (க) "துவம்" பதார்த்தகோசரம், (ங) "தத்" பதார்த்தகோசரம், (ச) "தத்" பதார்த்தத்தோடு அபின்னம் "துவம்" பதார்த்தகோசரமென்னும் பேதத்தால் மூன்றுவகைத்தாம். அவற்றில்,

(க) "துவம்" பதார்த்தகோசரசம்சயமோ வியாக்கியானத்தில் காட்டப்பட்டிருக்கின்றது. முதலியவென்னும் பதத்தால் மிஞ்சியிருக்கும் இரண்டு சம்சயங்களும் கொள்ளப்படும்.

(ங) ஈசுவரன் வைகுண்டாதி லோகவாசியான பரிச்சின்ன கைகால்முதலிய அங்கத்தோடுகூடிய சரீரமுடையவரா? அல்லது சரீரமின்றிய விபுவா?

சரீரமின்றிய விபுவெனினும் பரமாணுவாதிகளின் அபேக்ஷையோடுகூடிய ஜகத்கர்த்தாவா? அல்லது அபேக்ஷையின்றிய ஜகத்கர்த்தாவா?

நிரபேக்ஷ அதாவது அபேக்ஷையின்றிய கர்த்தா வெனினும் கேவலகர்த்தாவா? அல்லது அபின்னநிமித்தோபாதானவடிவகர்த்தாவா?

அபிந்நநிமித்தோபாதான மெனினும், பிராணிகளது கர்மத்தின் அபேக்ஷையின்றிய கர்த்தாவாதலால் விஷமமாகச்செய்தல் முதலிய தோஷமுடையவரா? அல்லது பிராணிகளது கர்மத்தின் அபேக்ஷையோடுகூடிய கர்த்தாவாதலால் விஷமமாகச்செய்தல் முதலிய தோஷமின்றியவரா?

இவைமுதலிய "தத்" பதார்த்தகோசர சம்சயங்கள் அநேகவிதமா யிருக்கின்றன.

(ச) ஆத்மா பிரஹ்மத்தினும் அபின்னமா? பின்னமா?

அபின்னமாயினும் எப்போதும் அபின்னமா? அல்லது மோக்ஷகாலத்தில்மாத்திரம் அபின்னமா?

எப்பொழுதும் அபின்னமாயினும் ஆநந்தமுதலிய ஐசுவரியமுடையதா? அல்லது ஆநந்தாதிகளின்றியதா?

ஆநந்தாதிகளுடையதாயினும் ஆநந்தாதிகள் குணமா? அல்லது பிரஹ்மாத்மாவின் சொரூபமா?

இவைமுதலிய "தத்" பதார்த்தத்தின் வேறாகாத "துவம்" பதார்த்தகோசரசம்சயம் அநேகவிதமா யிருக்கின்றன.

அதுபோல மோக்ஷத்தின் சொரூபம் சாதனம் என்பவற்றின் சம்சயமும், ஞானத்தின் சொரூபம் சாதனம் என்பவற்றின் சம்சயமும் பிரமேயகதசம்சயமாம். இது மனனத்தால் நீங்குகின்றது.

சொரூபசாக்ஷாத்காரமானபோது சர்வசம்சயங்களும் அடியோடு கெடும்.

* எ. சஞ்சிதம், பிராரப்தம், கிரியமாணம் (ஆகாமி) பேதத்தால் கர்மம் மூவகைத்தாம். அவற்றுள்,

(க) சஞ்சிதகர்மங்கள் ஞானாக்கினியினால் தகிக்கப்படுகின்றன.

(உ) ஞானியின் பிராரப்தகர்மம் போகத்தால் கெடுகின்றது.

(ஈ) "யான் அசங்கன், அகர்த்தா, அபோக்தா" என்னும் நிச்சயத்தின் வலியால் ஆகாமியின் பரிசமு முண்டாகிறதில்லை. ஆனால் அவற்றின் பயன் பிரியன் துவேஷி என்னும் புருஷர்களுக்குப் போக மாகின்றது.

இது வியவஸ்தையாம்.

அ. ஞானமொழிந்த மோக்ஷத்தின் பிறசாதனங்களை நிஷேதிக்குந்தன்மைய சுவேதாசுவதரசுருதி.

[௧௧௫௦] तमेव विद्वानत्येति मृत्युं पंथा न चेतरः ।
ज्ञात्वा देवं पाशहानिः क्षीणैः क्लेशैर्न जन्मभाक् ॥ ८ ॥

(அ-கை.)

அப்படியானல் "कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेच्छतँ समाः । एवं त्वयि नान्यथेतोऽस्ति न कर्म लिप्यते नरे ॥ இங்கு நரதேகத்தில் அக்கினிஹோத்திராதி கர்மங்களைச் செய்கின்றவனய் நூறுவருஷபரியந்தம் ஜீவித்தற்கு விரும்புக. இவ்வாறு ஜீவித்திருக்க விரும்பும் நரனகிய உன்னிடத்து எவ்வகையால் அசுபத்தின் பற்றுதலுண்டாகாதோ அவ்வகையினைவிட வேறுவகை யில்லை." 'विद्यां चाविद्यां च यस्तद्वेदोभयँ सह अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययामृतमश्नुते ॥ தேவதைகளின் ஞான வடிவ உபாசனையாகிய வித்தை, கர்மமாகிய அவித்தை யென்னும் இரண்டையும் எந்தப்புருஷன் 'இவ்விரண்டும் கூடவே ஒரு புருஷனல் அநுஷ்டிக்கத்தக்கனவா' மென்றறிகின்றனே, அந்தச்சமுச்சயஞ்செய்வோனுக்கு ஒரு புருஷார்த்தத்தின் சம்பந்தம் கிரமமாக வுண்டாகின்றது என்று சொல்லப்படுகின்றது:—அக்கினி ஹோத்திராதிகர்மவடிவ அவித்தையினல் இயல்பாகிய கர்மமும் ஞானவடிவ உபாசனையுமாகிய மிருத்தியுவைக் கடந்து, தேவதைகளின் ஞானவடிவ வித்தையினல் தேவனது ஆத்மத்தன்மை வடிவ அமிருதத்தை யடைகின்றன்." என்றல்முதலிய சுருதியினலும், "कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ஜனகர்முதலியோர் கர்மத்தினலேயே செவ்வையான சித்தியாகிய மோக்ஷத்தை ஆஸ்திதரானர் அதாவது அடைந்தனர்" "यथान्नंमधुसंयुक्तं मधुचान्नेन संयुतं । एवं तपश्च विद्यां च संयुक्तं भेषजं महत् ॥ எப்படித் தேன்கலந்த அந்நம் அல்லது அந்நத்தோடுகூடிய தேன் ஔஷதமாகின்றதோ, அதுபோலத் தபமும் வித்தையும் சேர்ந்து பெரும் ஔஷதமாகின்றது." என்றல்முதலிய ஸ்மிருதிகளாலும் கேவலம் கர்மத்திற்காவது அல்லது ஞானத்தோடு கலந்த கர்மத்திற்காவது மோக்ஷத்திற்கேதுவாந்தன்மை யுண்டாகு மென்றுசங்கித்து, உதாகரணமாக்கப்பட்ட வாக்கியங்களின் ஸ்தலங்களிலும் "தபம்" என்னும் சப்தம் பாபநிவிருத்தியைக் குறித்ததாயிருத்தலினலும், आस्थिताः ஆஸ்திதர் என்னும் பதத்திலுள்ள आङ् ஆ என்னும் சொல் எதுவோ அது பாபநிவிருத்தியைக் குறித்ததா யிருத்தலாலும், சம்சித்தி யென்னும் சொல்லால் ஞானத்திற்குச் சாதனமாகிய சித்தசுத்தியைக் கூறுதலாலும், வித்தை யென்னும் சொல்லால் உபாசனையைச் சொல்ல விரும்பியபடியாலும் கர்மங்களுக்கு முக்திக்குச் சாதனமாந்தன்மையில்லை, என்னும் அபிப்பிராயத்தினல் அந்நியசாதனத்தை நிஷேதிக்குந்தன்மையதாகிய "तमेव विदित्वाऽतिमृत्युमेति नान्यः पंथा विद्यतेऽयनाय அதனையே யறிந்து

மிருத்தியுவைக் கடக்கின்றான். முக்தியின்பொருட்டு வேறு வழியில்லை." என்னும் சுவேதாசுவதரவுபநிஷத்தின் வாக்கியத்தினை அர்த்தத்தினால் படிக்கின்றார்:—

तं विद्वान् एव मृत्युं अत्येति । इतरः च पंथा न ॥

(சு-ம்.)

அதனை யறிகின்றவனே மிருத்தியுவைக் கடக்கின்றான்; வேறுவழி யில்லை.

(வி-ம்.)

அந்த முற்கூறிய பரமாத்மாவை யறிகின்றவனே மிருத்தியுவாகிய சம்ஸாரத்தைக் கடக்கின்றான். மற்றச் சமுச்சய(கலப்பு)வடிவ அல்லது கேவலகர்மவடிவ மார்க்கம் யோக்ஷத்தின் உபாய மன்று.

(அ-கை.)

அப்படியானால் உதாகரணமாகச் சொல்லப்பட்ட சுருதிகளில் அந்வயவெதிரேகங்களால் இவ்வுலகசம்பந்தியான அநர்த்தத்தின் நிவிருத்தியே முக்கியத்தன்மையாக விளங்குகின்றது. பரலோக சம்பந்தியான அநிஷ்டத்தின் நிவிருத்தி விளங்கவில்லையென்றாசங்கித்துப் பரலோகசம்பந்தி அநிஷ்டம் வரும் ஜன்மத்தை முன்னிட்டதாயிருத்தலின் காரணத்தோடு அந்த வரும் ஜன்மத்தின் அபாவத்தைக் கூறும் ज्ञात्वा देवं सर्वपाशापहानिः क्षीणैः क्लेशैर्जन्ममृत्युप्रहाणिः ॥ தெய்வத்தை அறிந்து சர்வபாசங்களும் கெடுகின்றன. குறைவுபட்ட கிலேசங்களால் ஜனன மரணங்கள் மிகக்கெடுகின்றன." என்னும் சுவேதாசுவதரவுபநிஷத்தின் வாக்கியத்தினை அர்த்தத்தினாற் படிக்கின்றார்:—

देवं ज्ञात्वा पाशहानिः क्षीणैः क्लेशैः जन्मभाक् न ।

(சு-ம்.)

தெய்வத்தை யறிந்து பாசமாகிய கிலேசங்கள் நாசமாகின்றன. குறைவுபட்ட இராகாதி கிலேசங்களால் புருஷன் ஜன்மத்தை யடைபவனுகிறதில்லை.

(வி-ம்.)

சொப்பிரகாச பிரத்தியகபின்ன பிரஹ்மவடிவ தெய்வத்தை யறிந்து அதாவது அபரோக்ஷமாயநுபவித்து நிலைத்துள்ள புருஷனுக்குக் காமக்குரோதாதிவடிவ சகல பாசங்களும் நாசமாகின்றன. குறைவுபட்ட பாசமெனப்படும் இராகாதிக் கிலேசங்களால் வரும் ஜன்மத்திற்குக் காரணமான

* அ. கர்மத்தின் ஆரம்பகம் பொருந்தாமையால் இந்த வரும் பிறப்பினைப் புருஷன் அடைகிறதில்லை யென்பது பொருள். (அ)

கூ. திட அபரோக்ஷஞானிகளுக்கு இஷ்டாநிஷ்டங்களினது பிராப்தி பரிகாரங்களின் இன்மையைக் குறித்த கடசுருதி.

[ககஙக] देवं मत्वा हर्षशोकौ जहात्यत्रैव धैर्यवान् ।
नैनं कृताकृते पुण्यपापे तापयतः क्वचित् ॥ ९ ॥

(அ-கை.)

அப்படியானால் சோகத்தைக் கடத்தல்முதலிய தத்துவஞானத்தின் பயன் கேட்கவேபடுகின்றது; அநுபவிக்கப்படுகிறதில்லை; ஞானிகளுக்கும் இஷ்டத்தின் பிராப்தி அநிஷ்டத்தின் நிவிருத்திகளின்பொருட்டுப் பிரவிருத்தி காணப்படுதலின் என்றுசங்கித்துத் திடாபரோக்ஷ ஞானிகளுக்கு அந்த முற்கூறிய பிரவிருத்தி யில்லாமையைப் பிரதிபாதிக்குந்தன்மையதான "अध्यात्मयोगाधिगमेन देवं मत्वा धीरो हर्षशोकौ जहाति ॥ தீரர்களாகிய தைரியவான்கள் அத்தியாத்மயோகமாகிய தத்துவஞானத்தின் அடைவால் சொப்பிரகாசப்பிரத்தியக பின்ன பிரஹ்மவடிவ தேவனை மதித்து அதாவது நிச்சயஞ்செய்து சந்தோஷத்தையும் சோகத்தையும் விடுகின்றான்." என்னும் கடவல்லிசுருதியின் வாக்கியத்தினை அர்த்தத்தினாற் படிக்கின்றார்:—

धैर्यवान् देवं मत्वा अत्र एव हर्षशोकौ जहाति ॥

---

* அ. இங்கு இம்ரிதரகசியம்:—

(க) சுகதுக்கத்திற்குக் காரணம் சரீரம்.

(உ) சரீரத்திற்குக் காரணம் தர்மாதர்மவடிவ அதிருஷ்டம்.

(ங) அதிருஷ்டத்தின் காரணம் சுபாசுபக்கிரியை (நல்வினை தீவினை)வடிவ கர்மம்.

(ச) கர்மத்தின் காரணம் இராகத்துவேஷம்.

(ரு) இராகத்துவேஷத்தின் காரணம் அநுகூலத்தன்மையுணர்ச்சியும் பிரதிகூலத்தன்மையுணர்ச்சியுமாம்.

(சு) அந்தஞானங்களின் காரணம் பேதஞானம்.

(எ) பேதஞானத்தின் காரணம் பிரத்தியகபின்னபிரஹ்மத்தின் அஞ்ஞானம்.

இதனை நைஷ்கர்மியசித்தி யென்னும் நூலில் வார்த்திககாரராகிய சுரேசுவராசாரியர் எழுதியிருக்கின்றனர். அத்தியாத்மராமாயணத்திலுள்ள இராமகீதையிலும் இந்தப் பவசக்கரம் எழுதப்பட்டுளது.

பிரத்தியகபின்ன பிரஹ்மத்தின் ஞானத்தினால் பேதஞானமும், அநுகூலத்தன்மை பிரதிகூலத்தன்மைகளின் ஞானம் நீங்குதல்வாயிலாக இராகத்துவேஷமும் நீங்கவே உதாசீனக்கிரியை யிருந்தும் வரும் ஜன்மத்திற்குக் காரணமான இராகத்துவேஷபூர்வகமான கர்மம் சம்பவியாமையால் வித்துவானுக்கு வரும் ஜன்மம் உண்டாகாது.

(சு-ம்.)

தைரியமுடைய புருஷன் தெய்வத்தை யறிந்து இவ்விடத்திற்றனே மகிழ்ச்சி வாட்டங்களை விடுகின்றான்.

(வி-ம்.)

பிரஹ்மசரியாதி சாதனசம்பன்ன அதிகாரிபுருஷனாகிய தீரன் எவனோ அவன் சிதாநந்தாதி லக்ஷணமுடைய பிரஹ்மவடிவ தெய்வத்தை யறிந்து, இங்கு அதாவது இதே ஜன்மத்திலேயே ஹர்ஷசோகங்(மகிழ்தல் வாடுதல்) களை விடுகின்றான்.

(அ-கை.)

"एतमेव तपेन्नैषा चिता कर्माग्निसंभृता ॥ கர்மவடிவ அக்கினியினால் சம்பாதிக்கப்பட்ட இச்சிந்தை இந்த ஞானியினை மாத்திரம் தபிக்கச்செய்யாது." என்னும் ககசஎ வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தில் விசேஷமாகிய விலக்ஷணத்தன்மையைக் காட்டுந் தன்மைத்தான "नैनं कृताकृते तपत ॥ இந்த ஞானியை கிருதாகிருதமாகிய புண்ணியபாபம் தபிக்கச்செய்யா." என்னும் யாஞ்ஞவல்கிய பிராஹ்மணவடிவ பிருகதாரணியகத்தினது பிரகரணத்தின் வாக்கியத்தை அர்த்தத்தினாற் படிக்கின்றார்:—

एनं कृताकृते पुण्यपापे क्वचित् तापयतः न ॥

(சு-ம்.)

இந்த ஞானியைச் செய்யப்பட்டனவும் செய்யப்படாதனவுமான புண்ணியபாபங்கள் ஒருபோதும் தபிக்கச்செய்கிறதில்லை.

(வி-ம்.)

முன் ககசஎ-வது சுலோகத்தில் "पूर्वमकृतं पुण्यं कृतं च पापं तत्त्वविदस्तापहेतुर्न भवति ॥ முன் செய்யப்படாத புண்ணியமும் செய்யப்பட்ட பாபமும் தத்துவஞானிக்குத் தாபத்திற்குக் காரணமாகா" என்று சொல்லப்பட்டது. இவ்விடத்திலோ "செய்யப்பட்ட அல்லது செய்யப்படாத புண்ணியபாபங்கள் அவ்விதமான அஞ்ஞானதசையினைப்போல தாபஞ் செய்வனவாகா." என்று சொல்லப்படுகின்றது. இது பேதமாம். அஃதாமாறு காட்டுதும்:—தாபமென்பது சித்தத்தின் விகாரவிசேஷமாம். அஞ்ஞானிக்குப் புண்ணியகர்மம் செய்யப்பட்டதாய்த் தர்மவடிவ விகாரத்தை யுண்டாக்குகின்றது. செய்யப்படாததாய்த் துக்கத்தை யுண்டுபண்ணுகின்றது. பாபம் அப்புண்ணியத்தினும் விபரீதமாயிருத்தலால் செய்யப்படாததாய் மகிழ்ச்சியை யுண்டாக்குகின்றது. செய்யப்பட்டதாய்த் துன்பத்தை யுண்டாக்கு

கின்றது. தத்துவஞானிக்குப் புண்ணியபாப மிரண்டும் இரண்டுவகையான விகாரத்திற்கும் ஒருபோதும் ஏதுவாகா; தனது அவிக்கிரிய அகாவது நிர்விகார பிரஹ்மவடிவத்தன்மையின் ஞானத்தினால் என்பது அபிப்பிராயம். (௯)

௧௦. சுருதிஸ்மிருதிபுராணவாக்கியங்களால் பிரஹ்மஞானத்தினால் அநர்த்த நிவிருத்தியையும் ஆநந்தப்பிராப்தியையும் கூறுதல்.

[௧௧௫௨] इत्यादिश्रुतयो बह्वचः पुराणैः स्मृतिभिः सह ।
ब्रह्मज्ञानेऽनर्थहानिमानंदं चाप्यघोषयन् ॥ १० ॥

(அ-கை.)

அப்படியானால் தத்துவஞானம் அநிஷ்டநிவிருத்தி இஷ்டப்பிராப்திக்கு ஏதுவாமென்பதில் இவ்வளவே வாக்கியம் பிரமாணமா? என்னுமிடத்து இல்லையென்று கூறுகின்றார்:—

इत्यादिश्रुतयः बह्वचः पुराणैः स्मृतिभिः सह ॥

(சு-ம்)

இவைமுதலிய அநேகசுருதிகள் புராணங்களோடும் ஸ்மிருதிகளோடும் பிரமாணங்களாயிருக்கின்றன.

(வி-ம்.)

முதலியவென்னும் சொல்லால் “इह चेदवेदीदथ सत्यमस्ति न चेदिहावेदीन्महती विनष्टिः । य एतद्विदुरमृतास्ते भवन्त्यथेतरे दुःखमेवापियंति । तद्यो यो देवानां प्रत्यबुध्यत स एव तदभवत् । निचाय्य तं मृत्युमुखात्प्रमुच्यते ॥ “இம்மனிததேகத்தில் எப்போது அறிகின்றானோ அப்போது சத்தியமாம். இச்சரீரத்தில் எப்போது அறியவில்லையோ அப்போது பெருங்கேடுண்டு.” “எந்தப் புருஷர்கள் இந்தப் பிரஹ்மத்தை யறிகின்றார்களோ அவர்கள் அமிருத (மரணமில்லாதவ) ராகின்றனர். மற்றைய அஞ்ஞானிகள் துக்கத்தையே யடைகின்றார்கள்.” “தேவதைகளின் மத்தியில் எவனெவன் அந்தப் பிரஹ்மத்தை யறிந்தானோ அவனே அச்சர்வாத்மாவாகின்றான்.” “அப்பிரத்தியகபின்னபரமாத்மாவை நிச்சயித்து மிருத்தியுவாகிய சம்ஸாரத்தின் முகத்தினின்றும் விடுபடுகிறான்.” என்னும் இவைமுதலிய சுருதிகள் கொள்ளப்படுகின்றன. “सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि । संपश्यन्नात्मयाजी वै स्वाराज्यमधिगच्छति ॥ क्षेत्रज्ञस्यात्मविज्ञानाद्विशुद्धिः परमा मता ॥” சர்வ பூதங்களிலுமுள்ளதாய் ஆத்மாவையும் ஆத்மாவில் சர்வபூதங்களையும் காண்கின்றவனாய் ஆத்மாவை யஜிக்கும் புருஷன் ஸ்வாராஜ்யமாகிய சொரூபமாக நிலைத்தல்வடிவ முக்தி

யையடைகிறான்." "க்ஷேத்திரஞ்ஞனாகிய சர்வசாக்ஷிவடிவ பிரஹ்மத்தினை ஆத்மவடிவமாக அறிதலால் பரமவிசுத்தியாகிய சர்வாநர்த்தநிவிருத்தி கொள்ளப்பட்டிருக்கின்றது." என்னும் புராண ஸ்மிருதி வசனங்களோடு கூடிய வெகு சுருதிகள் பிரஹ்மஞானம் அநிஷ்டநிவிருத்தி இஷ்டப்பிராப்திக்கு ஏதுவாதலில் பிரமாணமாமென்பது பொருள்.

(அ-கை.)

உதாகரிக்கப்பட்ட சுருதிஸ்மிருதி புராணங்களின் வாக்கியங்களெல்லாவற்றின் தாற்பரியத்தையும் கூறுகின்றார்:—

ब्रह्मज्ञाने अनर्थहानिं च आनन्दं अपि अघोषयन् ॥

(சு-ம்.)

அந்தச் சுருதிகள் பிரஹ்மஞான முண்டாயின் அநர்த்தநிவிருத்தியையும் ஆநந்தத்தின் பிராப்தியையும் கூறுகின்றன. (௧0)

உ. சுருதியினால் பிரஹ்மத்தின் ஆநந்தவடிவத்தன்மையினைச் சொல்லுதல்பூர்வகமாகப் பிரஹ்மத்தின் அத்துவிதீயத்துவ சொப்பிரகாசத்தன்மைகளின் சித்தி ௧௧—௫ - ௧௧௭௪.

௧. ஆநந்தத்தின் பேதத்தைச் சொல்லுதலோடு பிரஹ்மாநந்தத்தினை விவேகித்தலின் பிரதிஞ்ஞை.

[௧௧௫] आनंदस्त्रिविधो ब्रह्मानंदो विद्यासुखं तथा ।
विषयानंद इत्यादौ ब्रह्मानंदो विविच्यते ॥ ११ ॥

(அ-கை.)

அப்படியானால் பிரஹ்மாநந்தமென்னும் ஆநந்தபதத்திற்குப் பிரஹ்மமென்னும் பதத்தால் விசேஷணத்தோடுகூடிய தாக்குவதால் பிரஹ்மாநந்தத்தின் வேறாகிய பிற ஆநந்தங்களு முண்டென் றறியப்படுகின்றது. அவ்வாநந்தங்கள் எத்தனை வகைத்தாம்? எப்படியிருக்கின்றன? என்று கேட்கும் விருப்பமுண்டாகியவிடத்து அவ்வாநந்தத்தினது பேதத்தினைக் காட்டுதலோடு பிரஹ்மாநந்தத்தினது விவேசனத்தின் பிரதிஞ்ஞையைக் கூறுகின்றார்:—

ब्रह्मानन्दः विद्यासुखं तथा विषयानन्दः इति आनन्दः त्रिविधः आदौ ब्रह्मानन्दः विविच्यते ॥

(சு-ம்.)

பிரஹ்மாநந்தம், வித்தியாநந்தம், அப்படியே விஷயாநந்தம் என்று ஆநந்தம் மூன்று விதமாம். அவற்றினின்றும் முதலில் அதாவது மூன்று அத்தியாயங்களில் பிரஹ்மாநந்தம் விவேகிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

பிரஹ்மாநந்தம், வித்தியாநந்தம், விஷயாநந்தம் என்னும் பேதத்தால் ஆநந்தம் மூன்றுவிதமாக அறியத்தக்கதாம். அவற்றினின்றும் மற்றைய இரண்டு ஆநந்தங்களும் பிரஹ்மாநந்தவடிவ காரணமுடையனவா யிருத்தலால் முதலில் மூன்று பிரகரணங்களால் பிரஹ்மாநந்தம் விபாகஞ் செய்து காட்டப்படுகிற தென்பது பொருள். (௧௧)

௨. தைத்திரீயசுருதியினுல் பிருகுவருணசம்வாதத்தினுல் பிரஹ்மத்தின் ஆநந்தவடிவத்தன்மை.

[௧௧௫] भृगुः पुत्रः पितुः श्रुत्वा वरुणाद्ब्रह्मलक्षणम् ।
अन्नप्राणमनोबुद्धीस्त्यक्त्वानंदं विजज्ञिवान् ॥ १२ ॥

(அ-கை.)

அங்கு ஆதியில் முதல் தைத்திரீயசுருதியினை விசாரஞ்செய்து பார்க்குமிடத்து ஆநந்தவடிவப் பிரஹ்மம் அறியப்படுகின்றது என்னும் அபிப்பிராயத்தினுல் பிருகுவல்லியின் அர்த்தத்தைச் சுருக்கமாகக் காட்டுகின்றார்:—

भृगुः पुत्रः पितुः वरुणात् ब्रह्मलक्षणम् श्रुत्वा अन्नप्राणमनोबुद्धीः त्यक्त्वा आनंदं विजज्ञिवान् ॥

(சு-ம்.)

பிருகு வென்னும் புத்திரன் வருணராகிய பிதாவினின்றும் பிரஹ்மத்தின் லக்ஷணத்தைக் கேட்டு அந்நமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமய மென்னும் கோசங்களை விட்டு ஆநந்தத்தினை அறிந்தான்.

(வி-ம்.)

பிருகு வென்னும் புத்திரன் வருண னென்னும் பிதாவினின்றும் "यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति यत्प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्व तद्ब्रह्म ॥ எந்தப் பிரஹ்மத்தினின்றும் இந்தப்பூதங்களாகிய பிராணிகள் உண்டாகின்றனவோ, எதனுல் உண்டானவை ஜீவிக்கின்றனவோ, எதன்கண் மரணமடைந்து பிரவேசிக்கின்றனவோ, அதனை 'அது

பிரஹ்மம்' என்று அறிக." என்னும் வடிவினதாகிய பிரஹ்மலக்ஷணத்தைக் கேட்டு அந்நமயாதிகோசங்களில் அந்தப் பிரஹ்மத்தின் லக்ஷணம் சம்பவியாமையால் அக்கோசங்கள் பிரஹ்மமாகாமையை நிச்சயித்து ஆநந்தத்தினை அதாவது ஆநந்தமயகோசவடிவ ஐந்து அவயவமுடைய பக்ஷியில் ஐந்தாவது அவயவவடிவ மாகுதலால் "ब्रह्मपुच्छं प्रतिष्ठा ॥ பிரஹ்மமாகிய புச்சம் ஆதாரமாம்." என்று கேட்கும் பிம்பமாகிய ஆநந்தத்திற்குப் பிரஹ்மத்தின் இலக்ஷணத்தோடு பொருத்துதலால் பிரஹ்மத்தன்மையாக அறிந்தான் என்பது பொருள். (௧௨)

[௧௧௫] आनंदादेव भूतानि जायंते तेन जीवनम् ।
तेषां लयश्च तत्रातो ब्रह्मानंदो न संशयः ॥ १३ ॥

(அ-கை.)

பிருகுரிஷி எப்படி ஆநந்தத்தில் பிரஹ்மலக்ஷணத்தைச் சேர்த்தாரென்று ஆசங்கித்து, அதன் யோஜனையின்றன்மையைக் காட்டுந்தன்மையதாகிய आनन्दाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते ॥ आनन्देन जातानि जीवन्ति । आनन्दं प्रयन्त्यभिसंविशंति ॥ ஆநந்தத்தினின்றே நிச்சயமாக இப்பூதங்கள் உண்டாகின்றன. ஆநந்தத்தினால் உண்டானவை ஜீவிக்கின்றன. ஆநந்தத்தை நோக்கி மரணத்தை யடைந்தனவாகப் பிரவேசிக்கின்றன." என்னும் சுருதிவாக்கியத்தை அர்த்தத்தினால் படிக்கின்றார்:—

आनन्दात् एव भूतानि जायन्ते । तेन जीवनं । च तेषां लयः तत्र । अतः आनन्दः ब्रह्म न संशयः ॥

(சு-ம்.)

ஆநந்தத்தினின்றே பூதங்க ளுண்டாகின்றன. அவ்வாநந்தத்தினாலே ஜீவனத்தை யடைகின்றன. அவற்றின் இலயம் அதன்கண் உண்டாகின்றன. ஆதலால் ஆநந்தம் பிரஹ்மம் இதில் சம்சயமில்லை,

(வி-ம்.)

கிராம்மியதர்மமாகிய பசுதர்மவடிவ நிமித்தமுடைய ஆநந்தத்திலேயே பூதங்களாகிய பிராணிகள் உண்டாகின்றன. அந்த விஷயபோக முதலிய நிமித்த முடையவர்களாய் ஆநந்தத்தினால் ஜீவனத்தை யடைகின்றார்கள். அந்தப்பிராணிகளின் இலயம் அச்சுழுத்திகாலத்தின் சொரூபவடிவ ஆநந்தத்திலேயே உண்டாகின்றன. ஏனெனின், சுழுத்தியில் ஆநந்தத்தின் வேறான எந்தவஸ்துவின் அநுபவமு மில்லாமையால் ஆநந்தம் பிரஹ்மமேயாம். இது எல்லோருடைய அநுபவத்தினாலும் சித்தித்துள்

ளது. ஆகையால் இதன்கண் சம்சயம் செய்யத்தக்க தன்று என்பது தாற்பரியம். (௩௩)

௩. சாந்தோக்கியசுருதியினுல் சநற்குமார நாரத சம்வாதவாயிலாகப் பூமா வடிவப் பிரஹ்மத்தின் ஆநந்தவடிவத்தன்மை.

[௧௧௫௩] भूतोत्पत्तेः पुरा भूमा त्रिपुटीद्वैतवर्जनात् ।
ज्ञातृज्ञानज्ञेयरूपा त्रिपुटी प्रलये हि नो ॥ १४ ॥

(அ-கை)

இப்படித் தைத்திரீயசுருதியினை விசாரித்துப் பார்ப்பதனுல் பிரஹ்மத்தின் ஆநந்தவடிவத்தன்மையைக் காட்டி, இப்போது சாந்தோக்கிய சுருதியினை விசாரம் செய்து பார்த்தலாலும் அந்தப் பிரஹ்மத்தின் ஆநந்த வடிவத்தன்மையினைக் காட்ட விரும்பியவராகிய ஆசாரியர் சநற்குமார நாரதர்களின் சம்வாதவடிவ சாந்தோக்கியத்தின் ஏழாவது அத்தியாயத்தி லுள்ள பூமா வென்னும் அபரிச்சின்ன ஆநந்தரூபப் பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கும் यत्र नान्यत्पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति स भूमा ॥ எதன்கண் அந்நியத்தைக் காண்கிறதில்லையோ, அந்நியத்தைக் கேட்கிறதில்லையோ, அந்நியத்தை அறிகிறதில்லையோ அது பூமாவாம்.'' என்றல் முதலிய வாக்கியங்களின் அர்த்தத்தைச் சுருக்கமாகக் கூறுகின்றார்:—

भूतोत्पत्तेः पुरा त्रिपुटीद्वैतवर्जनात् भूमा ॥

(சு-ம்.)

பூதங்களின் உற்பத்திக்கு முன் திரிபுடிவடிவத் துவைதமின்மையால் பூமாவே யிருந்தது.

(வி-ம்.)

பூதங்களாகிய ஆகாசாதிகளும் அவற்றின் காரியமான ஜராயுஜ அண்டஜாதிகளுமாகிய இவற்றின் உற்பத்திக்குமுன் திரிபுடிவடிவத் துவைதத்தின் நீக்கத்தால் அதாவது அந்த ஞாதா ஞான ஞேயவடிவ புடமாகிய ஆகாரங்களின் சேர்க்கைவடிவ திரிபுடியே துவைதமாம். அதன் நீக்கமாகிய இன்மைக்காரணத்தால் தேசத்தினுலும் காலத்தினுலும் வஸ்துவினுலும் பரிச்சேதமின்றிய பரமாத்மா இருந்தது. ''भावानयने द्रव्यानयनम् பாவமாகிய சத்தையைக் கொண்டுவரவே வஸ்துவின் கொண்டுவருதல் உண்டாகின்றது.'' என்னும் நியாயத்தால் ''பூமாவே இருந்தது'' என்பது வருவிக்கப்பட்டது.

(அ-கை.)

அதே துவைதத்தின் அபாவத்தை உபபாதனஞ் செய்கின்றார்:—

ज्ञातृज्ञानज्ञेयरूपा त्रिपुटी प्रलये हि नो ॥

(சு-ம்.)

ஞாதாவாகிய அந்தக்கரணம், ஞானமாகிய விருத்தி, ஞேயமாகிய கடாதி விஷயம் என்னும்வடிவினதாகிய திரிபுடி பிரளயத்தி லில்லை.

(வி-ம்.)

முன் ௧௧௫-வது சுலோகத்திற் சொல்லப்படும் ஞாதாமுதலிய திரிபுடி பிரளயகாலத்தி லில்லை என்னும் பொருள் எல்லாவுபநிஷதங்களிலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றதென்பது மூலசுலோகத்தில் हि ஹி என்னும் சொல்லைச் சேர்க்கும் நூலாசிரியரின் அபிப்பிராயமாம். (௧௪)

[௧௧௫] विज्ञानमय उत्पन्नो ज्ञाता ज्ञानं मनोमयः ।
ज्ञेयाः शब्दादयो नैतत्त्रयमुत्पत्तितः पुरा ॥ १५ ॥

(அ-கை.)

இப்போது ஞாதாமுதலியவற்றின் சொரூபத்தைக் காட்டுகின்றார்:—

उत्पन्नः विज्ञानमयः ज्ञाता । मनोमयः ज्ञानं । शब्दादयः ज्ञेयाः । एतत् त्रयं उत्पत्तितः पुरा न ॥

(சு-ம்.)

உண்டானதாகிய விஞ்ஞானமயகோசம் ஞாதாவாம். மனோமயகோசம் ஞானமாம். சப்தாதி விஷயங்கள் ஞேயமாம். இம்மூன்று திரிபுடிகளும் உற்பத்திக்கு முன் இல்லை.

(வி-ம்.)

பரமாத்மாவினின்றும் உற்பத்தியாகிய புத்தியை யுபாதியாகவுடைய ஜீவவடிவ விஞ்ஞானமயகோசம் எதுவோ அது ஞாதாவாம். மனோமயகோசமாகிய மனதிற் பிரதிபிம்பத்தை யடைந்த மனோமயசப்தத்தின் வாச்சியசைதன்னியம் ஞானமாம். சப்தஸ்பரிசாதி ஞேயம் பிரசித்தமாம். இம்மூன்றும் காரியமாதலால் உற்பத்திக்கு முன் காரணமாகிய பரமாத்மாவை விட வேறன்றென்பது பொருள். (௧௫)

[ககரு அ] त्रयाभावे तु निर्द्वैतः पूर्ण एवानुभूयते ।
समाधिसुप्तिमूर्च्छासु पूर्णः सृष्टेः पुरा तथा ॥ १६ ॥

(அ-கை.)

பலித்த அதாவது சித்தித்த பொருளைக் கூறுகின்றார்:—

त्रयाभावे तु निर्द्वैतः पूर्णः एव अनुभूयते ॥

(சு-ம்.)

மூன்றுமில்லாதபோதோ துவைதமின்றிய பூர்ணமே அநுபவிக்கப் படுகின்றது.

(வி-ம்.)

ஞாதாமுதலிய மூன்றும் இல்லாதாகவே துவைதமின்றிய பூர்ணமே யான ஆத்மா அநுபவிக்கப்படுகின்றது.

(அ-கை.)

எங்கு அநுபவிக்கப்படுகின்றது என்னுமிடத்துக் கூறுகின்றார்:—

समाधिसुप्तिमूर्छासु ॥

(சு-ம்.)

சமாதி சுழுத்தி மூர்ச்சைகளில் அத்வைதவடிவ ஆத்மா அநுபவிக்கப் படுகின்றது.

(வி-ம்.)

வித்துவான்களது அநுபவத்தைக் காட்டுதற்பொருட்டுச் சமாதிகொள்ளப்பட்டது. எல்லோருடைய அநுபவத்தையும் அறிவித்தற்பொருட்டுச் சுழுத்திமூர்ச்சைகளின் உதாரணமாம். சுழுத்திமுதலியவற்றினின்றும் எழுந்த புருஷனுக்குத் துவைதத்தைக் காணுமையின் ஸ்மரணமுண்டாகின்றது. அந்தஸ்மரணம் வேறுவகையாக அதாவது அத்வைதவடிவ அநுபவத்தைச் செய்பவனின்றிச் சம்பவியாது. அக்காரணத்தால் துவைதமின்றி அந்தத் துவைததரிசனமின்மையை அநுபவஞ்செய்பவனது சித்தி யிருக்கின்றதென்பது கருத்து.

(அ-கை.)

சுழுத்திமுதலியவற்றில் அத்வைதத்தின் சித்தி இருக்குக. அதனால் எடுத்துக்கொண்ட பிரளயத்திலிருக்கின்ற பரமாத்மாவில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

तथा सृष्टेः पुरा पूर्णः ॥

(அ-ம்.)

அவ்வாறே சிருஷ்டிக்கு முன்னும் பூரணனு யிருக்கின்றான்.

(வி-ம்.)

எப்படிச் சுழுத்திமுதலியவற்றில் பரிச்சேதம் செய்பவர்களின்மை யால் பூரணமா யிருக்கின்றதோ, அதுபோலச் சிருஷ்டிக்கு முன்னும் அப் பரிச்சேதம் செய்பவர்களின்மையால் பூர்ண மென்பது பொருள். (௧௬)

[௧௧௫௬] यो भूमा स सुखं नाल्पे सुखं त्रेधा विभेदिनि ।
सनत्कुमारः प्राहैवं नारदायातिशोकिने ॥ १७ ॥

(அ-கை.)

பிரஹ்மத்திற்குப் பூர்ணத்தன்மை இருக்குக. அதனுல் ஆநந்தவடிவ மாதலில் என்ன வந்த தென்றுசங்கித்து, அந்வயவியதிரேகங்களால் பரி பூரணப் பிரஹ்மத்தின் சுகவடிவத்தன்மையைக் காட்டுந்தன்மையதாகிய "यो वै भूमा तत्सुखं नाल्पे सुखमस्ति ॥ யாது பூமா வென்னும் பரிபூரண வஸ் துவோ அது சுகவடிவமாம். அற்பமாகிய பரிசின்னவஸ்துவில் சுக மில்லை." என்னும் சுருதிவாக்கியத்தை அர்த்தத்தினுல் கிரமமாகக் கூறு கின்றார்:—

यः भूमा सः सुखं । त्रेधा विभेदिनि अल्पे सुखं न ॥

(சு-ம்.)

யாது பூமாவோ அது சுகரூபம். மூன்றுவித பேதமுடைய அற்பத் தில் சுக மில்லை.

(வி-ம்.)

முன் சுலோகம் ௧௧௫௬-ல் கூறிய பூமா எதுவோ அது சுகவடிவமே யாம். ஏனெனின், அத்துவிதீயத்தில் துக்கத்திற் கேதுவான பேதமுதலி யனவின்மையால் மூன்றுவிதமான ஞாதாமுதலிய பேதத்தோடுகூடிய பரிச்சின்னவஸ்துவடிவ அற்பத்தில் சுக மில்லை. "மூன்றுவித பேதத் தோடுகூடிய" என்னும் ஏதுவையுட்கொண்ட விசேஷண மெதுவோ அது பரிச்சின்னத்தின் விவரணமாம். ஆதலால் பரிச்சின்னவஸ்து ஞாதா முதலிய பேதமுடையதா யிருத்தலால் அதிற் சுக மில்லை யென்பது பொருள்.

(அ-கை.)

இப்படி எந்தச் சிஷ்யனுக்கு எந்தக் குருவானவர் சொன்னாரெனக் கூறுகின்றார்:—

एवं सनत्कुमारः नारदाय प्राह ॥

(சு-ம்.)

இப்படிச் சநற்குமாரர் நாரதரை நோக்கிச் சொன்னார்.

(அ-கை.)

நாரதர் சிஷ்யராதலிற் காரணத்தைக் கூறுகின்றார்:—

अतिशोकिने ॥

(சு-ம்.)

மிகச்சோகமுடைய நாரதரை நோக்கிச் சொன்னார்.

(வி-ம்.)

மிகுந்த சோகமுடையவரா யிருந்த நாரதமுனியைக் குறித்துச் சொன்னார். (கஎ)

௬. நாரதரது சோகமுடைமையிற் காரணமான அநாத்மவுணர்ச்சியுடைமை.

[௧௧௯0] सपुराणान्पंच वेदाञ्छास्त्राणि विविधानि च ।
ज्ञात्वाऽप्यनात्मवित्त्वेन नारदोऽतिशुशोच ह ॥ १८ ॥

(அ-கை.)

அந்த நாரதரது மிகுந்த சோகமுடைமையிற் காரணத்தைக் கூறுகின்றார்:—

नारदः सपुराणान् पंच वेदान् च विविधानि शास्त्राणि ज्ञात्वा अपि अनात्मवित्त्वेन अतिशुशोच ह ॥

(சு-ம்.)

நாரதர் புராணங்களோடு ஐந்து வேதங்களையும் பல்வகைச் சாஸ்திரங்களையு மறிந்தும் அநாத்மாவை யுணர்ந்தவரா யிருந்தமையால் மிகுந்த சோகமுடையவரானார்.

(வி-ம்.)

நாரதமுனி பதினெண்புராணங்களோடு நான்கு வேதங்களையும் பார

தத்தையும் பலவிதமான சாஸ்திரங்களையு மறிந்தும் ஆத்மஞான மில்லா திருந்தமையால் மிக்க சோகத்தை யடைந்தார். இது சாந்தோக்கியத்தின் ஏழாவது அத்தியாயத்திற் பிரசித்தம். (௧௮)

ரு. அஞ்ஞானியாகிய பண்டிதனுக்குள்ள ஏழு தாபம்.

[௧௧௯௧] वेदाभ्यासात्पुरा तापत्रयमात्रेण शोकिता ।
पश्चात्त्वभ्यासविस्मारभंगगर्वैश्च शोकिता ॥ १९ ॥

(அ-கை.)

அப்படியானால் சோகத்தினை நிவிருத்திப்பதா யிருத்தலின் பிரசித்த மான வேதசாஸ்திரத்தினை விஷயஞ்செய்வதாகிய ஞானத்திற்கு அதிசோகத்துக்கு ஏதுவாந்தன்மை எப்படியா மென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

वेदाभ्यासात् पुरा तापत्रयमात्रेण शोकिता च पश्चात् तु अभ्यासविस्मार-भंगगर्वैः शोकिता ॥

(சு-ம்.)

வேதாப்பியாசத்திற்கு முன் மூன்று தாபங்கள்மாத்திரத்தினால் சோக முடைமை இருந்தது. பின் அப்பியாசம் மறதி பங்கம் கர்வம் என்பவற்றால் சோகமுடைமை யுண்டாயிற்று.

(வி-ம்.)

வேதாப்பியாசத்திற்கு முன் அத்தியாத்மமுதலிய மூன்று தாபங்களினாலேயே சோகமுடைமை யுண்டாயிருந்தது. பின்னோ படித்தல்முதலியவற்றை அடிக்கடி திருப்புதலாகிய அப்பியாசம், படித்ததை மறத்தலாகிய விஸ்மாரம், தன்னின் மேலான வித்துவானால் விலக்கப்படலாகிய பங்கம், தன்னிற் றாழ்ந்த வித்துவானைப் பார்த்தலால் தன்னிடத்து மேம்பாட்டின் புத்தியாகிய கர்வமென்னும் காரணங்களால் சோகமுடைமை யுண்டாயிற்று.

சு. சர்வஞ்ஞராகிய நாரதரது சோகமுடைமையில் நாரதர் வாக்கியமும், சநற்குமாரரது உபதேசமும்.

[௧௧௯௨] सोहं विद्वन्प्रशोचामि शोकपारं नयात्र माम् ।
इत्युक्तः सुखमेवास्य पारमित्यभ्यधादृषिः ॥ २० ॥

(அ-கை.)

அப்படியானால் இப்படிச் சர்வஞ்ஞ நாரதருக்கும் மிகச்சோகமுடைமை யுண்டாயிற்று என்பது எதனாலறியப்படுகின்றதென்றுசங்கித்து, "सोहं

भगवः शोचामि பகவானே ! அத்தன்மைய யான் சோகமுடையவனாயிருக்கின்றேன் " என்னும் நாரதர் வாக்கியத்தினால் அறியப்படுகின்றதென்னும் அபிப்பிராயத்தினால் " तं मा भगवान् शोकस्य पारं तारयतु அச்சோகமுடைய என்னைப் பகவானாகிய தாம் சோகத்தின் கரையில் சேர்ப்பிப்பீர்களாக." என்று நாரதமுனியானவர் அந்தச்சோகத்தின் நிவிருத்தியுபாயத்தைக் கேட்கவே சநற்குமாரரிஷி பூமா வென்னும் சொல்லின் பொருளாகிய சுகரூபப்பிரஹ்மமே யறியப்படின் சோகநிவிருத்தி யுபாயமா மென்று " सुखं त्वेव विजिज्ञासितव्यं சுகமே யறியத்தக்கதாம்" என்றாரம்பித்து,பிந்திய கிரந்தசமூகங்களாற் சொன்னாரென்று கூறுகின்றார்:—

" विद्वन् सः अहं प्रशोचामि । मां अत्र शोकपारं नय " इति उक्तः ऋषिः " सुखं एव अस्य पारं " इति अभ्यधात् ॥

(சு-ம்.)

" வித்துவானாகிய சநற்குமாரரே! அத்தன்மைய யான் சோகத்தையடைந்திருக்கின்றேன். என்னை இங்குச் சோகத்தின் கரையிற் சேர்ப்பிப்பீராக." என்று நாரதரால் கேட்கப்பட்டவராய்ச் சநற்குமாரரிஷி " சுகமே இச்சோகத்தின் கரையாம்" என்று சொன்னார். (௨௦)

எ. அற்ப (பரிச்சின்ன) விஷயசுகத்தின் துக்கவடிவத்துவம்.

[௧௧௬௮] सुखं वैषयिकं शोकसहस्रेणावृतत्वतः ।
दुःखमेवेति मत्वाह नाल्पेऽस्ति सुखमित्यसौ ॥ २१ ॥

(அ-கை.)

அப்படியானால் மாலைமுதலிய விஷயங்களினாற்றோன்றும் வெகு சுகங்களிருக்க அற்பத்திற் சுக மில்லை யென்று கூறுதல் அயுக்தமா மென்று கூறின் பொருந்தாது. ஏனெனின், அம்மாலைமுதலிய விஷயங்களுக்குத் துக்கசம்பந்தத்தால் விஷத்தோடுகூடிய அந்நத்தினைப்போல வெகு துக்கவடிவத்தன்மை சநற்குமாரமுனிவரால் அபிப்பிராயப்படப்பட்டிருத்தலால் என்றும் கூறுகின்றார்:—

वैषयिकं सुखं शोकसहस्रेण आवृतत्वतः दुःखं एव इति मत्वा अल्पे सुखं न अस्ति इति असौ आह ॥

(சு-ம்-)

விஷயஜன்னிய சுகம் ஆயிரம் துக்கங்களால் சூழப்பட்டிருத்தலால் துக்கரூபமேயாம் என்று மதித்து இச்சநற்குமாரமுனிவர் அற்பத்தில் சுகமில்லையென்று கூறினார். (௨௧)

அ. துவைதத்தில் சுகத்தின் அபாவத்தை மதித்து அத்வைதத்தில் சுகமின்மையின் சங்கை.

[ககக௬௪] ननु द्वैते सुखं माभूदद्वैतेऽप्यस्ति नो सुखम् ।
अस्ति चेदुपलभ्येत तथा च त्रिपुटी भवेत् ॥ २२ ॥

(அ-கை.)

துவைதத்தில் சுகத்தின் அபாவத்தை அங்கீகரித்து அத்வைதத்திலும் அச்சுகத்தின் அபாவத்தை வாதி சங்கிக்கின்ருன்:—

ननु द्वैते सुखं माऽभूत् । अद्वैते अपि सुखं नो अस्ति ॥

(சு-ம்.)

அப்படியாஞல் துவைதத்தில் சுகம் இருக்கவேண்டாம்; அத்வைதத்திலும் சுக மில்லை.

(அ-கை.)

அதன்கண் அப்பிரதீதி (தோற்ருமை)யை வாதி பிரமாண மாக்குகின்ருன்:—

अस्ति चेत् उपलभ्येत ॥

(சு-ம்.)

அத்வைதத்தில் சுக மிருக்குமாயின் தோற்றும்.

(வி-ம்.)

அத்வைதத்தில் சுக மிருக்குமாயின், அப்போது விஷயசுகமுதலியவற்றைப்போலத் தோற்றுதல்வேண்டும். எதஞல் தோற்றுகிறதில்லையோ அதஞல் இல்லை யென்பது பொருள்.

(அ-கை.)

அப்படியாஞல் அத்வைதத்தில் சுகப்பிரதீதி யுண்டாகின்றதென்ருசங்கிக்கும் சித்தாந்தியை நோக்கி வாதி கூறுகின்ருன்:—

तथा च त्रिपुटी भवेत् ॥

(சு-ம்.)

அவ்வாறு சுகம் தோற்றுமாயின் திரிபுடி யுண்டாம்.

(வி-ம்.)

அநுபவமாகிய பிரதீதி(தோற்றம்) எதுவோ அது அநுபவிக்கின்றவன் அநுபவத்தின் விஷயம் என்னும் இரண்டன் அபேக்ஷையுடையதா யிருத்தலால் அத்வைதத்திற்கு ஹானி யுண்டாகு மென்பது கருத்து. (உஉ)

௯. எதுவோடு அத்வைதத்திற்குச் சுகத்தின் ஆசிரயமாகாமையும் பிரமாணமின்றிய தன்மைவடிவ சொப்பிரகாசத்தன்மையும்.

[௧௧௯௭] मास्त्वद्वैते सुखं किंतु सुखमद्वैतमेव हि ।
किं मानमिति चेन्नास्ति मानाकांक्षा स्वयंप्रभे ॥ २३ ॥

(அ-கை.)

அத்வைதம் சுகத்திற்கு ஆசிரயமாதலின் நிஷேதத்தைச் சித்தாந்தி அங்கீகரிக்கின்றார்:—

अद्वैते सुखं मा अस्तु ॥

(சு-ம்.)

அத்வைதத்தில் சுக மிருக்கவேண்டாம்.

(அ-கை.)

அதிற் காரணத்தைக் கூறுகின்றார்:—

किंतु हि अद्वैतं एव सुखम् ॥

(சு-ம்.)

ஆனால் எதனால் அத்வைதமே சுகமா யிருக்கின்றதோ.

(வி-ம்.)

எக்காரணத்தினால் அத்வைதமே சுகமா யிருக்கின்றதோ, அதனால் அத்வைதம் சுகத்தின் ஆசிரயமாகிற தில்லை யென்பது பொருள்.

(அ-கை.)

அத்வைதம் சுகரூபமென்பதில் பிரமாணம் யாதென்னும் ஆசங்கையின் அநுவாதபூர்வகமாக அவ்வத்வைதம் சொப்பிரகாசவடிவமா யிருத்தலால் அதில் பிரமாணத்தின் பிரசினையே அயுக்தமா மென்று கூறுகின்றார்:—

किं मानं इति चेत् । स्वयंप्रभे मानाकांक्षा न अस्ति ॥

(சு-ம்.)

அத்வைதம் சுகரூபமாம் என்பதில் பிரமாணம் யாதென்று கூறின், அப்போது சுயம்பிரகாச அத்வைதத்தில் பிரமாணத்தின் அபேக்ஷையில்லை. (உ-ரு)

௧௦. அத்வைதத்தின் சொப்பிரகாசத்தன்மையில் வாதியின் வசனமே பிரமாணமாதல்.

[௧௧௯௮] स्वप्रभत्वे भवद्वाक्यं मानं यस्माद्भवानिदम् ।
अद्वैतमभ्युपेत्यास्मिन्सुखं नास्तीति भाषते ॥ २४ ॥

(அ-கை.)

அப்படியானால் அத்வைதத்தின் சொப்பிரகாசத்தன்மையிலும் பிரமாணம் யாதென்றாசங்கித்து, உன்வார்த்தையே பிரமாணமென்று கூறுகின்றார்:—

स्वप्रभत्वे भवद्वाक्यं मानं ॥

(சு-ம்.)

அத்வைதத்தின் சுவயம்பிரகாசத்தன்மையில் உன்வாக்கியமே பிரமாணமாம்.

(அ-கை.)

அதனை உபபாதனஞ் செய்கின்றார்:—

यस्मात् भवान् इदं अद्वैतं अभ्युपेत्य अस्मिन् सुखं न अस्ति इति भाषते ॥

(சு-ம்.)

ஏதனால் நீ இந்த அத்வைதத்தை அங்கீகரித்து இதில் சுகமில்லையென்று சொல்லுகிறாயோ.

(வி-ம்.)

எக்காரணத்தால் உன்னால் பிரமாணாபேக்ஷையின்றி அத்வைதத்தை யங்கீகாரஞ்செய்து சுகத்தின் ஆக்ஷேபமாகிய நிஷேதம் செய்யப்படுகின்றதோ, அதனால் சொப்பிரகாசத்தன்மை அதாவது பிரமாணத்தின் அபேக்ஷையின்மை யுளது என்பது பொருள். (௨௪)

௧௧. வாதியினால் அத்வைதத்தின் அங்கீகாரமின்மையின் சங்கையும் சித்தாந்தி வாதியை நோக்கி வினவுதலும்.

[௧௧௯௭] नाभ्युपैम्यहमद्वैतं त्वद्वचोऽनूद्य दूषणम् ।
वच्मीति चेत्तदा ब्रूहि किमासीद्द्वैततः पुरः ॥ २५ ॥

(அ-கை.)

என்னால் அத்வைதம் அங்கீகரிக்கப்படுகிறதில்லை. ஆனால் சித்தாந்தியே! தம்மாற் சொல்லப்பட்ட அத்வைதத்தை அநுவதித்து நான் தூஷிக்கின்றேன். ஆகலால் என்னாற் சொல்லப்பட்ட அத்வைதத்தின் சித்தி இல்லையென்று வாதி சங்கிக்கின்றான்:—

“ अहं अद्वैतं न अभ्युपैमि । त्वद्वचः अनूद्य दूषणं वच्मि ” इति चेत् ॥

(சு-ம்.)

யான் அத்வைதத்தை அங்கிகாரம் செய்யேன். ஆனால் தமது வார்த்தையை அநுவதித்துத் தூஷிக்கின்றேன் என்று கூறின்.

(அ-கை.)

விகற்பத்தைச் சகியாமையால் அத்வைதத்தை யங்கிகரியாமை பொருந்தா தென்று மதிக்கின்ற சித்தாந்தி வாதியை நோக்கிக் கேட்கின்றார்:—

तदा द्वैततः पुरः किं आसीत् ब्रूहि ॥

(சு-ம்.)

அப்போது வாதி! துவைதஜகத்திற்கு முன் யாது இருந்தது? சொல். ()

கஉ. மூன்று விகற்பங்களால் இரண்டினை நிஷேதித்து முதலாவதைக் கொள்ளுதல்.

[௧௧௯அ] किमद्वैतमुत द्वैतमन्यो वा कोटिरंतिमः ।
अप्रसिद्धो न द्वितीयोऽनुत्पत्तेः शिष्यतेऽग्रिमः ॥ २६ ॥

(அ-கை.)

சுலோகம் ௧௧௯எ-ல் கூறிய யாது என்னும் சொல்லால் சூசிக்கப்பட்ட விகற்பத்தைக் காட்டுகின்றார்:—

किं अद्वैतं । उत द्वैतं । वा अन्यः कोटिः ॥

(சு-ம்.)

துவைதத்திற்கு முன் அத்வைத மிருந்ததா? அல்லது துவைத மிருந்ததா? அல்லது துவைதாத்வைதங்களுக்கு வேறான பக்ஷ மிருந்ததா?

(அ-கை.)

மூன்றாவது பக்ஷத்தை நிராகரிக்கின்றார்:—

अंतिमः अप्रसिद्धः ॥

(சு-ம்.)

கடைசிப்பக்ஷம் அப்பிரசித்தமாம்.

(வி-ம்.)

உலகத்தில் துவைதாத்வைதத்திற்கு வேறான வடிவம் காணப்படாமையால் மூன்றாவது பக்ஷம் அப்பிரசித்த மென்பது கருத்து.

(அ-கை.)

த்வைதத்திற்குமுன் அத்வைதமிருந்தது என்னும் இரண்டாவது பக்ஷத்தை நிராகரிக்கின்றார்:—

द्वितीयः न ॥

(ச-ம்.)

இரண்டாவது பொருந்தாது.

(அ-கை.)

அதிற் காரணத்தைக் கூறுகின்றார்:—

अनुत्पत्तेः ॥

(ச-ம்.)

உற்பத்தியாகாமையால்.

(வி-ம்.)

த்வைதம் அப்போது தனக்கு முன் உண்டாகாமையால் த்வைதத்திற்குமுன் த்வைதமிருந்தது என்னும் பக்ஷம் பொருந்தாதென்பது தாற்பரியம்.

(அ-கை.)

ஆதலால் த்வைதத்திற்கு முன் அத்வைதமிருந்தது என்னும் முதற்பக்ஷம் மிஞ்சியிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

आग्रिमः शिष्यते ॥

(ச-ம்.)

முதற்பக்ஷம் மிஞ்சியிருக்கின்றது. (உ௬)

௯௱. அநுபவமின்றி யுக்தியினால் அத்வைதசித்தியின் சங்கையும் யுக்தியில் இரண்டு விகற்பமும்.

[௧௧௬௯] अद्वैतासिद्धिर्युक्त्यैव नानुभूत्येति चेद्वद ।
निर्दृष्टांता सदृष्टांता वा कोऽन्यंतरमत्र नो ॥ २७ ॥

(அ-கை.)

அப்படியானால் சுலோகம் ௧௧௬௮-ல் கூறியவிதமாக அத்வைதம் யுக்தியாகிய அநுமானத்தினாலேயே சித்திக்கின்றது; அநுபவத்தினாலன்றென்று வாதி பூர்வபக்ஷமாக்குகின்றான்:—

अद्वैतासिद्धिः युक्त्या एव अनुभूत्या न इति चेत् ॥

(சு-ம்.)

அத்வைதத்தின் சித்தி யுக்தியினாலேயே யிருக்கின்றது ; அநுபவத்தினாலன்று என்று கூறின்.

(அ-கை.)

அத்வைதத்தின் சித்தி யுக்தியினாலேயே யிருக்கின்றது என்று வாதி கூறியது விகற்பஞ் சகியாமையால் பொருந்தாது என்று மதிக்கின்றவராய்ச் சித்தாந்தி யுக்தியைக்குறித்து விகற்பிக்கின்றார்:—

निर्दृष्टांता वा सदृष्टान्ता वद ॥

(சு-ம்.)

அப்போது வாதியே! இந்த யுக்தி திருஷ்டாந்தமின்றியதா? அல்லது திருஷ்டாந்தத்தோடு கூடியதா? சொல்.

(அ-கை.)

விகற்பத்தின் குறைவை நிராகரிக்கின்றார்:—

अत्र कोऽप्यंतरं नो ॥

(சு-ம்.)

இங்கு வேறு அதாவது திருஷ்டாந்தமின்றியதும் திருஷ்டாந்தத்தோடுகூடியதுமான இரண்டுவடிவ யுக்தி யிருக்கின்றது என்னும் மூன்றாவது விகற்பம் அப்பிரசித்தமாகுதலால் இல்லை. (௨௭)

௧௪. முதல்விகற்பத்தினைப் பரிகாசமாக நிராகரித்தலும் இரண்டாவதில் திருஷ்டாந்தத்தின் பிரசினமும்.

[௧௧௭௦] नानुभूतिर्न दृष्टांत इति युक्तिस्तु शोभते ।
सदृष्टांतत्वपक्षे तु दृष्टांतं वद मे मतम् ॥ २८ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தமின்றிய யுக்தியென்னும் முதற்பக்ஷத்தைப் பரிகாசத்தோடு நிராகரிக்கின்றார் :—

अनुभूतिः न दृष्टान्तः न इति युक्तिः तु शोभते ॥

(சு-ம்.)

அநுபவமுமில்லை, திருஷ்டாந்தமுமில்லை என்னும் யுக்தியோ சோபிக்கின்றது !

(வி-ம்.)

அத்வைதத்தின் சித்தி யுக்தியினாலேயா மென்று சொல்லுகின்ற வாதியினால் அநுபவம் முதலில் அங்கீகரிக்கப்படுகிற தில்லை. யுக்தியோ திருஷ்டாந்தங்காட்டுதலின்றி ஒன்றனையும் சித்திக்கச்செய்யாது. ஆதலால் திருஷ்டாந்த மில்லை யென்று கூறுதல் அயுக்தமா மென்பது கருத்து.

(அ-கை.)

திருஷ்டாந்தத்தோடுகூடியயுக்தி என்னும் இரண்டாவது விகற்பத்தில் வாதிகளாகிய உனக்கும் எனக்கும் சம்மதமான திருஷ்டாந்தம் சொல்லவேண்டு மென்று கூறுகின்றார்:—

सदृष्टांतत्वपक्षे तु मे मतं दृष्टांतं वद ॥

(சு-ம்.)

திருஷ்டாந்தத்தோடுகூடியயுக்தி யென்னும் பக்ஷத்திலோ எனக்குச் சம்மதமான திருஷ்டாந்தத்தினைச் சொல்லு. (உஅ)

கடு. வாதியினால் திருஷ்டாந்தத்தினால் அத்வைதத்தைச் சாதித்தலின் சங்கையும், கூறிய சுழுத்தியின் திருஷ்டாந்தத்தில் சித்தாந்தியின் இரண்டு விகற்பமும், முதலாவதின் நிஷேதமும்.

[கக௭௧] अद्वैतः प्रलयो द्वैतानुपलंभेन सुप्तिवत् ।
इति चेत्सुप्तिरद्वैते तत्र दृष्टांतमीरय ॥ २९ ॥

(அ-கை.)

அப்போது திருஷ்டாந்தத்தினாலேயே அத்வைதத்தினைச் சாதிக்கின்றேனென்று பூர்வபக்ஷி சங்கிக்கின்றான்:—

प्रलयः अद्वैतः द्वैतानुपलंभेन सुप्तिवत इति चेत ॥

(சு-ம்.)

பிரளயம் துவைதமின்றியதாம்; துவைதத்தின் தோற்றாமைவடிவ ஏதுவால்; சுழுத்தியினைப்போல என்று கூறின்.

(வி-ம்.)

* க. பிரளயம் துவைதமின்றி யிருக்கத்தக்கதாம்; துவைதத்தின்

---

* க. இங்குப் பிரளயசப்தத்தினால் பிரளயசப்தத்தின் வாச்சியமாகிய சகலதுவைதத்தின் அபாவம் எதுவோ அதனால் உபலக்ஷிக்கப்பட்ட பிரஹ்மமே கொள்ளப்படுகின்றது. இவ்வாறே இப்பிரசங்கத்தில் கிடைத்த சுழுத்திசப்தத்தின் அர்த்தத்திலும் அறிந்துகொள்க.

தோற்றுமையை யுடையதா யிருத்தலின்; யாது யாது துவைதத்தின் அப்பிரதீதியுடையதா யிருக்கின்றதோ அது அது துவைதமின்றியதாம், சுழுத்தியினைப்போல வென்னும் அநுமானம் திருஷ்டாந்தத்தோடுகூடிய யுக்தியாம்.

(அ-கை.)

அப்படியானால் இப்படிச் சாதிக்கின்ற வாதியாகிய உனக்குத் தனது சுழுத்தி திருஷ்டாந்தமா? அல்லது அந்நிய புருஷனது சுழுத்தி திருஷ்டாந்தமா? இவை இரண்டு விகற்பம். அவற்றில் தனது சுழுத்தி திருஷ்டாந்தமெனின், இந்த முதற்பக்ஷத்தில் அந்தத் தனது சுழுத்தி அந்நியபுருஷர்களைக் குறித்துச் சித்தியாமையால் அந்தத் தனது சுழுத்தியினது சித்தியின் பொருட்டு வேறு திருஷ்டாந்தம் சொல்லுதல் வேண்டும் என்று இவ்வாறு சித்தாந்தி கூறுகின்றார்:—

अद्वैते सुप्तिः तत्र दृष्टांतं ईरय ॥

(சு-ம்.)

அத்வைதத்தில் தனது அதாவது உன்னுடைய சுழுத்தி திருஷ்டாந்தமெனின், அதில் திருஷ்டாந்தம் சொல்லுவாயாக. (௨௯)

௩௯. இரண்டாவது விகற்பத்தின் சங்கையும் அதன் நிராகரிப்பும்.

[௧௧௭௨] दृष्टांतः परसुप्तिश्चेदहो ते कौशलं महत् ।
यः स्वसुप्तिं न वेत्त्यस्य परसुप्तौ तु का कथा ॥ ३० ॥

(அ-கை.)

அப்படியானால் அந்தத் தனது சுழுத்திக்கு அன்னியர்சுழுத்தியே திருஷ்டாந்தமாம், இந்த இரண்டாவது விகற்பத்தினை வாதி ஆசங்கிக்கின்றான்:—

परसुप्तिः दृष्टांतः चेत् ॥

(சு-ம்.)

தனது சுழுத்தியில் பிறர்சுழுத்தி திருஷ்டாந்தமெனின்.

(அ-கை.)

பிறர்சுழுத்தி உனக்கு அப்பிரசித்தமா யிருத்தலால் உன்னால் திருஷ்டாந்தமாக்கல் பொருந்தாது என்று பரிகாசத்தோடு சித்தாந்தி கூறுகின்றார்:—

ते कौशलं महत् अहो । यः स्वसुप्तिं न वेत्ति अस्य परसुप्तौ तु का कथा ॥

(சு-ம்.)

அப்போது உன்சாமர்த்தியம் மிகப்பெரிதே! உனது சுழுத்தியை யறி யாயாயின், அத்தன்மைய உனக்குப் பிறன்சுழுத்தியிலோ தெரியாமைக்கு என்ன சொல்லவேண்டி யிருக்கிறது?

(வி-ம்.)

நீ சுழுத்தியை அநுபவத்தாலறியப்படுவதாகவே யங்கீகரியாமையால் தனது சுழுத்தியினையும் அறியாய். இத்தன்மைய உனக்குப் பிறன்சுழுத்தி தெரியா தென்பதில் சொல்லவேண்டிய தென்ன? அதாவது பிறன்சுழுத்தி யின் ஞான முண்டாகாது என்பதில் சொல்லவேண்டிய தென்ன வென்பது கருத்து. (௩0)

௩௭. அநுமானத்தினால் பிறன்சுழுத்தியினது சித்தியின் சங்கையும் தனது சுழுத்தியின் வலியால் சொப்பிரகாசத்தன்மையும்.

[௧௧௭௩] निश्चेष्टत्वात्परः सुप्तो यथाऽहमिति चेत्तदा ।
उदाहर्तुः सुषुप्तेस्ते स्वप्रभत्वं बलाद्भवेत् ॥ ३१ ॥

(அ-கை.)

அப்படியானால் அநுமானத்தினால் பிறனது சுழுத்தியினது சித்தி அதாவது நிச்சய முண்டாகின்ற தென்று வாதி சங்கிக்கின்றான்:—

परः सुप्तः । निश्चेष्टत्वात् यथा अहं इति चेत् ॥

(சு-ம்.)

பிறன் சுழுத்தியுடையவன்; சேஷ்டையில்லாதவனா யிருத்தலால்; என்னைப்போல என்று சொல்லுவாயாயின்.

(வி-ம்.)

விவாதத்திற்கு விஷயமான பரபுருஷன் சுழுத்தியுடையவனாகத்தக் கவன்; பிராணன்முதலியவற்றோடுகூடியவனாயினும் சேஷ்டையில்லாத வனாயிருத்தலால்; என்னைப்போல என்னும் அநுமானத்தால் பரசுழுத்தி யின் சித்தி யுண்டாகின்றது என்பது பொருள். இவ்வாறு எப்பொழு திருக்கின்றதோ.

(அ-கை.)

அப்பொழுது உன் சுழுத்திக்குச் சொப்பிரகாசத்தன்மை மிஞ்சி யிருக்கு மென்று சித்தாந்தி கூறுகின்றார்:—

तदा उदाहर्तुः ते सुषुप्तेः स्वप्रभत्त्वं बलात् भवेत् ॥

(சு-ம்.)

அப்போது உதாகரிக்கின்றவனுகிய உனது சுழுத்திக்குப் பலத்தால் சுவயம்பிரகாசத்துவம் உண்டாகின்றது.

(வி-ம்.)

அப்போது என்னைநோக்கிச் சுழுத்தியினைத் திருஷ்டாந்தம் கொடுப்பவனுகிய உனது சுழுத்திக்குச் சொப்பிரகாசத்தன்மை பலத்தால் அதாவது சுழுத்தியினது உதாகரணத்தின் சாமர்த்தியத்தினுலேயே உண்டாகின்றது. (௩௧)

௧அ. பலத்தினுல் சாதிக்கப்பட்ட சொப்பிரகாசத்தன்மையின் விவரணம்.

[௧௧௭௪] नेंद्रियाणि न दृष्टांतस्तथाऽप्यंगीकरोषि ताम् ।
इदमेव स्वप्रभत्वं यद्भानं साधनैर्विना ॥ ३२ ॥

(அ-கை.)

எனது சுழுத்தியின் சொப்பிரகாசத்தன்மை எப்படிப் பலத்தினுல் உண்டாகின்றதென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

इंद्रियाणि न । दृष्टांतः न । तथा अपि तां अंगीकरोषि । साधनैः विना भानं यत् इदं एव स्वप्रभत्वं ॥

(சு-ம்.)

இந்திரியங்களில்லை. திருஷ்டாந்தமில்லை. என்றுலும் அச்சுழுத்தியினை அங்கீகரிக்கின்றுய். இவ்வாறு சாதனமின்றித் தோற்றுதல் யாதோ அதுவே சுழுத்தியின் சொப்பிரகாசத்தன்மையாம்.

(வி-ம்.)

சுழுத்தியைக் கிரகிப்பன இந்திரியங்களாகா; ஏனெனின், அவ்விந்திரியங்களுக்குத் தமது காரணமாகிய அஞ்ஞானத்தில் ஒடுக்கமிருத்தலால். பரசுழுத்திவடிவ திருஷ்டாந்தம் இருவராலும் சம்மதிக்கப்பட்டதன்று; அந்நியபுருஷனது சுழுத்தியின் அப்பிரசித்தத்தன்மை ௧௧௭௨-வது சுலோகத்திற் சொல்லப்பட்டிருத்தலால். இவ்வாறிருக்கினும் அச்சுழுத்தியினை நீ அங்கீகரிக்கின்றுய். இவ்வாறுயின் ஞானத்தின் சாதனமில்லாமலும் விளக்கம் அதாவது பிரகாசம் உண்டாவது யாதோ அதுவே சுழுத்தியின் சொப்பிரகாசத்தன்மையா மென்பது பொருள்.

இங்கு இந்த அநுமானம்:—விவாதத்திற்கு விஷயமாகிய சுழுத்தி சொப்பிரகாசமாம்; ஞானசாதன மில்லாதிருந்தும் விளங்குகின்றதா யிருத்தலால்; சாங்கியர்களுக்குச் சம்மதமான ஆத்மாவினைப் போலவும், பிரபாகரர்களின் அநுசாரிகளுக்குச் சம்மதமான சம்வேதனமாகிய விருத்திஞானமெதுவோ அதனைப்போலவும், சாக்கியர்களாகிய பௌத்தர்களுக்குச் சம்மதமான சுவாத்மாவினைப் போலவும் * ௧0. என்பது பொருள். (௩௨)

உ. ஆநந்தத்தின் சொரூபத்தோடு அதன் விவேசனம் ௧௧எ௫ - ௧௨௩0.

௧. சுழுத்தியில் பிரஹ்மாநந்தத்தின் சித்தி ௧௧எ௫ - ௧௨௧அ.

௧. சுழுத்தியில் சுகமிருப்பதில் சங்கையும் சமாதானமும்.

[௧௧எ௫] स्तामद्वैतस्वप्रभत्वे वद सुप्तौ सुखं कथम् ।
श्रृणु दुःखं तदा नास्ति ततस्ते शिष्यते सुखम् ॥ ३३ ॥

(அ-கை.)

இவ்வாறு பிரளயத்தின் திருஷ்டாந்த மிருத்தலால் உதகரிக்கப்பட்ட சுழுத்தியின் அத்வைதத்தன்மையினையும் சொப்பிரகாசத்தன்மையினையும் சாதித்து, அச்சுழுத்தியில் சுகத்தினைச் சாதித்தற்பொருட்டுப் பூர்வபக்ஷியின் ஆசங்கையை எழுப்புகின்றார்:—

सुप्तौ अद्वैतस्वप्रभत्वे स्तां सुखं कथं वद ॥

(சு-ம்.)

சுழுத்தியில் அத்வைதத்தன்மையும் சொப்பிரகாசத்தன்மையு மிருக்குக. ஆனால் சித்தாந்தி! சுழுத்தியில் சுகம் எவ்வாறிருக்கின்றது? அதனைச் சொல்.

(அ-கை.)

சுகத்தின் விரோதியான துக்கம் அப்போது சுழுத்தியில் இல்லாதிருத்தலால் சுகமே மிஞ்சுகின்றது என்றிவ்வாறு சித்தாந்தி கூறுகின்றார்:—

श्रृणु । दुःखं तदा न अस्ति । ततः ते सुखं शिष्यते ॥

* ௧0. எப்படிச் சாங்கியப் பிராபாகர பௌத்தமதங்களில் ஆத்மா, விருத்திஞானம், ஆத்மா வென்பன கிரமமாக வேறு சாதனங்களில்லாமலும் பிரகாசித்துக்கொண்டிருத்தலால் சுவயம்பிரகாசவடிவமாகக் கொள்ளப்பட்டிருக்கின்றனவோ, அதுபோல எமது மதத்திலும் சுழுத்தியினால் உபலக்ஷித ஆத்மா அந்நியசாதனங்களின்றிப் பிரகாசித்துக்கொண்டிருத்தலால் சுவயம்பிரகாசமாம். ஆனால் சாங்கியாதியர்மதத்தில் ஆத்மாமுதலியவற்றிற்குத் தமது பிரகாசத்தில் தமது அபேக்ஷை யுளது. எமது மதத்தில் அஃதில்லை; ஆனால் ஆத்மா எப்போதும் பிரகாசிக்கிறதா யிருக்கிறது.

(சு-ம்.)

வாதி! கேள். எதனால் அப்போது சுழுத்தியில் துக்க மில்லையோ அதனால் உனக்குச் சுகமே மிஞ்சி யிருக்கின்றது.

(வி-ம்.)

சுகமும் துக்கமும் ஒளியும் இருளும்போல ஒன்றற்கொன்று விரோதியா யிருத்தலின், துக்கமில்லாதாகவே சுகமே அங்கீகரிக்கத்தக்கதாகின்றதென்பது கருத்து. (௩௩)

உ. சுழுத்தியில் துக்கமில்லை யென்பதில் பிரமாணம்.

[௧௧௭௬] अंधः सन्नप्यनंधः स्याद्विद्धोऽविद्धोऽथ रोग्यपि ।
अरोगीति श्रुतिः प्राह तच्च सर्वे जना विदुः ॥ ३४ ॥

(அ-கை.)

சுழுத்தியில் துக்க மில்லை யென்பதில் பிரமாணம் யாதென்று கேட்கும் விருப்பத்தில் சுருதியும் அநுமானமும் பிரமாண மென்று கூறுகின்றார்:—

अंधः सन् अपि अनंधः स्यात् । विद्धः अविद्धः अथ रोगी अपि अरोगी इति श्रुतिः प्राह च तत् सर्वे जनाः विदुः ॥

(சு-ம்.)

"சுழுத்தியில் குருடனாயிருந்தும் குருடு இல்லாதவனாகின்றான். வேதிக்கப்பட்டவனாயினும், வேதிக்கப்படாதவனாகின்றான். ரோகியாகியும் ரோகமில்லாதவனாகின்றான்." என்று சுருதி கூறுகின்றது. இதனை எல்லோரும் அறிகின்றனர்.

(வி-ம்.)

"तस्माद्वा एतं सेतुं तीर्त्वांधः सन्ननंधो भवति । विद्धः सन्नविद्धो भवति । उपतापी सन्ननुपतापी भवति ।" "तद्यपीदं भगवः शरीरमंधं भवत्यनंधः स भवति ॥" அதனால் நிச்சயமாக இந்தச் சாக்கிரசொப்பனங்களில் இருக்கின்ற தேகாபிமானவடிவ சேதுவைக் கடந்து, புருஷன் குருடனாகியும் குருடனல்லாதவனாகின்றான். சஸ்திரங்களால் வேதிக்கப்பட்டவனாகியும் வேதிக்கப்படாதவனாகின்றான். ரோகமுடையவனாகியும் ரோகமில்லாதவனாகின்றான்." "பகவானே! இச் சரீரம் குருடாயினும் அப்புருஷன் குருட்டுத்தன்மை யில்லாதவனாகின்

ருன்.'' இவைமுதலிய சுருதிகள் தேகாபிமானத்தாலாகிய அந்த (குருட்டு)த் தன்மைமுதலிய தோஷங்களை நிவர்த்திக்கின்றன. வியாதியினால் பீடிக் கப்பட்ட புருஷனுக்கும் சுழுத்தியில் அந்தப் பீடையினாலுண்டாகிய துக் கத்தின் அநுபவமில்லை யென்பது சகல ஜனங்களுக்கும் பிரசித்தமென் பது பொருள். (௩௪)

௩. துக்காபாவத்திலே சுகம் வியபிசரித்தலின் சங்கையும் சமாதானமும்.

[௧௧௭௭] न दुःखाभावमात्रेण सुखं लोष्टशिलादिषु ।
द्वयाभावस्य दृष्टत्वादिति चेद्विषमं वचः ॥ ३५ ॥

(அ-கை.)

அப்படியானால் " எங்குத் துக்க மில்லையோ அங்குச் சுக மிருக்கின் றது." என்னும் வியாப்திக்கு மண்ணாங்கட்டிமுதலியவற்றில் வியபிசார மிருக்கின்றதென்பதாக வாதி சங்கிக்கின்றான்:—

दुःखाभावमात्रेण सुखं न लोष्टशिलादिषु द्वयाभावस्य दृष्टत्वात् इति चेत् ॥

(சு-ம்.)

துக்கத்தின் அபாவமாத்திரத்தால் சுகத்தின் கற்பனை யுண்டாகாது; ஏனெனின், மண்ணாங்கட்டி கல்முதலியவற்றில் இரண்டு மின்மையைக் காணுதலால் என்று கூறின்.

(வி-ம்.)

துக்கத்தின் அபாவமாத்திரத்தால் சுகத்தின் கற்பனை செய்யக்கூடிய தன்று. ஏனெனின், மண்ணாங்கட்டி கல்முதலியவற்றில் சுகதுக்கமிரண் டின் இன்மையும் காணப்படுதலால் என்பது பொருள்.

(அ-கை.)

திருஷ்டாந்தமான மண்ணாங்கட்டி கல்முதலியவற்றிற்கும் தார்ஷ்டா ந்திகமான புருஷனது சுழுத்திக்கும் வேற்றுமை யிருத்தலால் இவ்வாறு கூறுதல் பொருந்தா தென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

वचः विषमम् ॥

(சு-ம்.)

அப்போது உன் வார்த்தை விஷமமாம்.

(வி-ம்.)

அப்போது உனது திருஷ்டாந்தத்தின் வார்த்தை தார்ஷ்டாந்தத் தினை அநுசரித்ததாக இல்லை யென்பது பொருள். (௩௫)

௪. சுலோகம் ௧௧௭-ல் கூறிய திருஷ்டாந்தத்திற்குச் சித்தாந்தி விஷமத் தன்மையினைச் சம்பாதித்தல்.

[௧௧௭அ] मुखदैन्यविकासाभ्यां परदुःखसुखोहनम् ।
दैन्याद्यभावतो लोष्टे दुखाद्यूहो न संभवेत् ॥ ३६ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்திற்குத் தார்ஷ்டாந்தத்தோடுள்ள விஷமத்தன்மையினை யே உபபாதனஞ் செய்கின்றார்:—

मुखदैन्यविकासाभ्यां परदुःखसुखोहनम् ॥

(சு-ம்.)

முகத்தின் வாட்டமும் மலர்ச்சியுமாகிய இரண்டு குறிகளாலும் முறையே பிறருடைய துக்கம் சுகம் என்பவற்றின் கற்பனை யுண்டாகின்றது.

(வி-ம்.)

அந்நியபுருஷனிடத்துள்ள சுகதுக்கங்களின் கற்பனையாகிய அநுமானம் எதுவோ அது முகத்தின் மலர்ச்சிவாட்டங்களாகிய குறிகளால் செய்யத்தக்கதாம்:—இப்புருஷன் துக்கி; துக்கத்தோடுகூடிய அதாவது வியாகூலத்தோடுகூடிய முகமுடையவனா யிருத்தலால்; பிரசித்ததுக்க முடையவனைப் போல. இப்புருஷன் சுகி; மலர்ந்த முகமுடையவனா யிருத்தலால்; பிரசித்த சுகிபுருஷனைப்போல.

(அ-கை.)

அப்படியானால் இவ்வாறு உலகத்தில் இருக்குக. இதனால் பிரகிருத (எடுத்துக்கொண்ட) மண்ணாங்கட்டிமுதலிய திருஷ்டாந்தத்தின் விஷமத் தன்மையில் என்ன வந்தது? எனக் கூறுகின்றார்:—

लोष्टे दैन्याद्यभावतः दुःखाद्यूहः न संभवेत् ॥

(சு-ம்.)

மண்ணாங்கட்டியில் தீனத்தன்மைமுதலியன இன்மையால் துக்கமுதலியவற்றின் கற்பனை சம்பவியாது.

(வி-ம்.)

மண்ணாங்கட்டிமுதலியவற்றில் முகத்தின் வாட்டம் மலர்ச்சிமுதலியவடிவ குறிகளாகிய ஏதுக்களின்மையால் சுகதுக்கங்களின் கற்பனை சம்பவியாது. ஆதலால் அந்த மண்ணாங்கட்டிமுதலியவற்றில் துக்கத்தின் இன்மையும் நிச்சயிக்கக்கூடிய தன்று என்பது பொருள். (௩௬)

௫. பிறர் சுகதுக்கங்களோடு தனது சுகதுக்கங்களின் விஷமத்தன்மை.

(௧௧௭௯) स्वकीये सुखदुःखे तु नोहनीये ततस्तयोः ।
भावो वेद्योऽनुभूत्यैव तदभावोऽपि नान्यतः ॥ ३७ ॥

(அ-கை.)

இப்போது அந்நியபுருஷர்களது சுகதுக்கத்தோடு தனது சுகதுக்கத திற்குள்ள விஷமத்தன்மையினைக் காட்டுகின்றார்:—

स्वकीये सुखदुःखे तु ऊहनीये न । ततः तयोः भावः अनुभूत्या एव वेद्यः । तदभावः अपि अन्यतः न ॥

(சு-ம்.)

தனது சுகதுக்கங்களோ எதனால் ஊகிக்க (அநுமானத்தாலறிய)த்தக் கனவன்றோ, அதனால் அவற்றின் இருப்பு அநுபவத்தினாலேயே அறியத் தக்கதாம். அதுபோல அவற்றின் இன்மையும் அநுபவத்தினாலேயே அறி யத்தக்கதாம்; பிறவற்றா லன்று.

(வி-ம்.)

தன்னிடத்திலுள்ள சுகதுக்கங்கள் அநுபவத்தாற் சித்தித்தலின் எத னால் அநுமானத்தால் அறியத்தக்கனவன்றோ, அதனால் அந்தத் தனது சுக துக்கங்களின் இருப்பு எப்படி அநுபவமாகிய பிரத்தியக்ஷப்பிரமையி னாலேயே அறியப்படுகின்றதோ, அதுபோல அந்தத் தனது சுகதுக்கங்க ளின் அபாவமும் பிரத்தியக்ஷ அநுபவத்தினாலேயே அறியத்தக்கதாம்; வேறு அநுமானமுதலியவற்றா லறியத்தக்க தன்று என்பது பொருள். ()

௬. பலிதம் (சுழுத்தியினால் துக்கமின்மையும் சுகத்தின் சித்தியும்).

[௧௧௮0] तथा सति सुषुप्तौ च दुःखाभावोऽनुभूतितः ।
विरोधिदुःखराहित्यात्सुखं निर्विघ्नमिष्यताम् ॥ ३८ ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

तथा सति सुषुप्तौ च दुःखाभावः अनुभूतितः ॥

(சு-ம்-)

அவ்வாறாயின் தனது சுழுத்தியிலும் துக்கத்தினின்மை அநுபூதியி னால் சித்தித்திருக்கின்றது.

(வி-ம்.)

அவ்வாருயின் அதாவது தனது சுகதுக்கங்கள் அநுபவத்தினுல் அறியத்தக்கனவாகவே தனது சுழுத்தியிலு மிருக்கின்ற துக்காபாவம் அநுபவத்தினுலேயே சித்திக்கின்றது.

(அ-கை.)

அதனுல் துக்கத்தின் அபாவத்தினுலும் என்ன சித்திக்கின்றது எனக் கூறுகின்ருர்:—

विरोधिदुःखराहित्यात् निर्विघ्नं सुखं इष्यताम् ॥

(சு-ம்.)

விரோதிதுக்கமின்றியதா யிருத்தலால் நிர்விக்கினசுகம் அங்கீகரிக்கத்தக்கதாம்.

(வி-ம்.)

சுழுத்தியில் சுகத்தின் விரோதியான துக்கமின்மையால் பாதமின்றிய சுகம் அங்கிகரிக்கத்தக்கதாம். (௩அ)

எ. படுக்கைமுதலிய சுகத்தின் சாதனங்களைச் சம்பாதித்தலால் சுழுத்தியில் சுகம் சித்தித்தல்.

[௧௧அ௧] महत्तरप्रयासेन मृदुशय्यादिसाधनम् ।
कुतः संपाद्यते सुप्तौ सुखं चेत्तत्र नो भवेत् ॥ ३९ ॥

(அ-கை.)

படுக்கைமுதலிய சுகசாதனங்களெவையோ அவற்றினைச் சம்பாதித்தல் சுகமின்றிச் சம்பவியாது. இதனுலும் சுழுத்தியில் சுக மிருக்கிறதென்று அறியப்படுகின்றதென்று கூறுகின்ருர்:—

तत्र सुप्तौ सुखं नो भवेत् चेत् महत्तरप्रयासेन मृदुशय्यादिसाधनं कुतः संपाद्यते ॥

(சு-ம்.)

அச்சுழுத்தியில் சுக முண்டாகாவிடின், அப்போது மிகப்பெரிய உழைப்பினுல் மிருதுவான படுக்கைமுதலிய சாதனங்கள் எதனுல் சம்பாதிக்கப்படுகின்றன?

(வி-ம்.)

அந்தச் சுழுத்தியில் சுகமுண்டாகாவிடின் அப்போது பெருவிதமான திரவியத்தைச் செலவிடுதல் சரீரத்தை வருத்துதல்முதலிய உழைப்

பினுல் மிருதுவான இலவம்பஞ்சு மெத்தைமுதலிய சுகத்தின் சாதனங்கள் எக்காரணத்தால் சம்பாதிக்கப்படுகின்றன ? சுகத்தையன்றி வேறு எக்காரணத்தாலும் அன்று என்பது பொருள். (௩௯)

அ. சுலோகம் ௧௧அ௧-ல் கூறிய அர்த்தத்தில் சங்கை சமாதானம்.

[௧௧அ௨] दुःखनाशार्थमेवैतदिति चेद्रोगिणस्तथा ।
भवत्वरोगिणस्त्वेतत्सुखायैवेति निश्चिनु ॥ ४० ॥

(அ-கை.)

சுலோகம் ௧௧அ௧-ல் கூறிய படுக்கைமுதலிய சாதனங்களைச் சம்பாதித்தலின் ஞானவடிவ அர்த்தாபத்திப்பிரமாணவடிவ வேறுவகைச் சம்பவத்தினை அதாவது சுகமின்றிச் சம்பவித்தலை வாதி சங்கிக்கின்ருன்:—

एतत् दुःखनाशार्थं एव इति चेत् ॥

(சு-ம்.)

படுக்கைமுதலியவற்றைச் சம்பாதித்தலாகிய இது துக்கநாசத்தின் பொருட்டேயாமெனின்,

(அ-கை.)

இப்படுக்கைமுதலியவற்றைச் சம்பாதித்தல் துக்கநிவிருத்தியாகிய பயனுடையதா மென்னும் நியமமில்லையென்று சித்தாந்தி பரிகரிக்கின்ருர்:-

तथा रोगिणः भवतु । अरोगिणः तु एतत् सुखाय एव । इति निश्चिनु ॥

(சு-ம்.)

அப்போது அப்படித் துக்கத்தினது நாசத்தின்பொருட்டு ரோகிக்கு இருக்குக. அரோகிக்கோ இப்படுக்கைமுதலியவற்றைச் சம்பாதித்தல் சுகத்தின் பொருட்டேயா மென்று நிச்சயஞ்செய்.

(வி-ம்.)

ரோகமுதலிய துக்க மிருக்குங்கால் அத்துக்கத்தினது நிவிருத்தியின் பொருட்டு அப்படுக்கைமுதலியவற்றைச் சம்பாதித்தல் உண்டாகுக. அந்த ரோகமுதலிய துக்கமில்லாதிருக்குங்கால் நிவிருத்திக்கத்தக்க துக்க மில்லாதிருத்தலின் அப்படுக்கைமுதலியவற்றினைச் சம்பாதித்தல் சுகத்தின் பொருட்டேயா மென்று அறியப்படுகின்றதென்பது பொருள். (௪0)

கூ. சுழுத்தியின் சுகம் படுக்கைமுதலியவற்றாற் றோன்றிய தென்பதில் சங்கையும், அதில் இரண்டு விகற்பமும் செய்து முதலாவதை யங்கீகரித்தல்.

[கக௮௲] तर्हि साधनजन्यत्वात्सुखं वैषयिकं भवेत् ।
भवत्येवात्र निद्रायाः पूर्वं शय्यासनादिजम् ॥ ४१ ॥

(அ-கை.)

அப்படியானால் சுழுத்திசுகத்திற்குப் படுக்கைமுதலியவற்றாற்றோன் றியதன்மையுளதாயின், அதன் ஆத்மசொரூபத்தன்மை பங்கமாகுமே யென்று வாதி சங்கிக்கின்றான்:—

तर्हि साधनजन्यत्वात् वैषयिकं सुखं भवेत् ॥

(சு-ம்.)

அப்போது சாதனத்தாற்றோன்றியதா யிருத்தலின் அச்சுழுத்தியிற் றோன்றிய சுகம் விஷயஜன்னிய சுகமாகும்; நித்தியமான ஆத்மசொரூப சுகமாகாது என்று கூறுவாயாயின்.

(அ-கை.)

நித்திரை வருதற்கு முந்தியகாலத்தின் சுகத்திற்கு விஷயத்தாற் றோன்றியதன்மை உன்னாற் சொல்லப்படுகின்றதா? அல்லது நித்திரைச் சுகத்திற்கு விஷயத்தாற்றோன்றியதன்மை சொல்லப்படுகின்றதா? என் று இரண்டு விகற்பஞ்செய்து முதற்பக்ஷத்தைச் சித்தாந்தி அங்கீகரிக் கின்றார்:—

अत्र निद्रायाः पूर्वं शय्यासनादिजं भवतु एव ॥

(சு-ம்.)

இங்குச் சுழுத்திக் கெதிர்முகமாகும் அவஸ்தையில் நித்திரைக்கு முன் எந்தச் சுக மிருக்கின்றதோ, அது படுக்கை ஆசனமுதலிய விஷயத் தினாற் றோன்றிய தாகுக. (சுக)

கo. இரண்டாவது பக்ஷத்தினை நிராகரித்தலும் நித்திரைச்சுகம் பிறந்ததா மென்பதில் சங்கைசமாதானமும்.

[கக௮௬] निद्रायां तु सुखं यत्तज्जन्यते केन हेतुना ।
सुखाभिमुखधीरादौ पश्चान्मज्जेत्परे सुखे ॥ ४२ ॥

(அ-கை.)

இரண்டாவது பக்ஷத்தினை நிராகரிக்கின்றார்:—

निद्रायां तु यत् सुखं तत् केन हेतुना जन्यते ॥

(சு-ம்.)

நித்திரையிலுள்ள சுகம் எதுவோ அது எந்த ஏதுவால் ஜந்நியமாம் அதாவது பெறப்பட்டதாம்? ஏதனுலும் அன்று.

(வி-ம்.)

சுழுத்தியில் படுக்கைமுதலிய சாதனங்களின் அநுசந்தானம் இல்லாமையால் அப்படுக்கைமுதலிய சாதனங்களால் ஜந்நியத்துவம் அச்சுழுத்திகாலத்துச் சுகத்துக்குச் சம்பவியாது என்பது கருத்து.

(அ-கை.)

அப்படியானுல் நித்திரையில் பெறப்படாத அதாவது நித்தியமான சுக மிருக்குமாயின், அப்போது அந்த நித்திரைக்காலத்துச் சுகம் விஷய சுகத்தினைப் போல ஏதனுல் அநுபவிக்கப்படுகிறதில்லை யென்றுசங்கித்து, அநுபவிக்கின்ற ஜீவர்களுக்கு அப்போது நித்திரைக்காலத்தில் அச்சுகத்தில் ஒடுங்கி யிருத்தலால் விஷயசுகத்தைப்போல அந்நித்திரைக்காலத்தினது சுகத்தின் அநுபவம் உண்டாகிறதில்லை யென்னும் அபிப்பிராயத்தினுல் சொல்லுகின்றார்:—

आदौ सुखाभिमुखधीः पश्चात् परे सुखे मज्जेत् ॥

(சு-ம்.)

ஆதியில் ஜீவன் சுகத்திற் கெதிர்ப்பட்ட புத்தியுடையவனுகின்றான். பிறகு பரசுகத்தில் மூழ்குகின்றான்.

(வி-ம்.)

நித்திரைக்கு முற்காலத்தில் ஜீவன் படுக்கைமுதலியவற்றினுலாகிய சுகத்திற்கெதிர்முகமாகிய புத்தியினையுடையவனுகின்றான். பின் நித்திரைக் காலத்தில் பரசுகத்தில் அதாவது மேலான சொரூபமாகிய ஆநந்தத்தில் அமிழ்கின்றான். (சஉ)

கக. சுலோகம் ககஅச-ல் கூறிய அர்த்தத்தினைச் சுருக்கமாக விவரித்தல்.

[ககஅரு] जाग्रद्व्यापृत्तिभिः श्रांतो विश्रम्याथ विरोधिनि ।
अपनीते स्वस्थचित्तोऽनुभवेद्विषये सुखम् ॥ ४३ ॥

(அ-கை)

சுருக்கமாக ௧௧அ௬-ல் கூறிய அர்த்தத்தினை மூன்று சுலோகங்களால் வர்ணிக்கின்றார்:—

जाग्रद्यावृत्तिभिः श्रांतः विश्रम्य अथ विरोधिनि अपनीते स्वस्थचित्तः विषये सुखं अनुभवेत् ॥

(சு-ம்.)

ஜீவன் ஜாக்கிரத்தின் வியாபாரங்களால் அலைகின்றவனாய் விசிராந்தி யடைந்து, பின் விரோதியான துக்கம் நிவிருத்தியாகவே ஸ்வஸ்தசித்த முடையவனாய் விஷயத்தில் சுகத்தை யநுபவிக்கின்றான்.

(வி-ம்.)

ஜீவனானவன் ஜாக்கிராவஸ்தையில் செய்யப்படுகின்ற வியாபாரங்களின் பேதத்தால் களைப்படைந்து, இளைப்பாறுதலாகிய மிருதுவான படுக்கைமுதலியவற்றிற்படுத்தலைச் செய்து பின் வியாபாரத்தாற்றோன்றிய துக்கவடிவ விரோதியை நிவிர்த்திக்கவே ஸ்வஸ்தசித்த முடையவனாய் அதாவது வியாகூலமின்றிய மனதுடையவனாய்ப் படுக்கைமுதலிய விஷயங்களில் உண்டாகிய சுகத்தை யநுபவிக்கின்றான் அதாவது சாக்ஷாத்கரிக்கின்றான். (௬௩)

[௧௧அ௯] आत्माभिमुखधीवृत्तौ स्वानंदः प्रतिबिंबति ।
अनुभूयैनमत्रापि त्रिपुट्या श्रांतिमाप्नुयात् ॥ ४४ ॥

(அ-கை.)

விஷயசுகம் எவ்வகைத்தாம்? என்னும் விருப்பத்தில் அவ்விஷய சுகத்தின் சொரூபத்தைக் காட்டுகின்றவராய்ப் பரசுகத்தில் மூழ்குதலின் நிமித்தமாகுதலால் அவ்விஷயசுகத்தின் அநுபவத்திலும் சிரமத்தைக் காட்டுகின்றார்:—

आत्माभिमुखधीवृत्तौ स्वानन्दः प्रतिबिंबति । अत्र अपि एनं अनभूय त्रिपुट्या श्रांतिं आप्नुयात् ॥

(சு-ம்.)

ஆத்மாவிற் கெதிர்முகமாகிய புத்திவிருத்தியில் சொரூபாநந்தம் பிரதிபிம்பத்தை யடைகின்றது. இங்கும் இப்பிரதிபிம்பத்தினை யநுபவித்துத் திரிபுடியினால் சிரமத்தை யடைகின்றான்.

(வி-ம்.)

அடையப்படாத விஷயத்தினைச் சம்பாதித்தல்முதலியவற்றால் துக்கத்தினை அநுபவித்து, அத்துக்கத்தினது நிவிருத்தியின் பொருட்டு மிருதுவான படுக்கைமுதலியவற்றில் படுக்கும் புருஷனது புத்தி அந்தர்முகமா (உள்நோக்கியதா)கின்றது. அவ்வந்தர்முகபுத்திவிருத்தியில் தன்னெதிரிலுள்ள கண்ணாடியில் முகத்தினைப் போலச் சொரூபவடிவ ஆநந்தம் பிரதிபிம்பத்தை யடைகின்றது. இவ்வாநந்தத்தின் பிரதிபிம்பமே விஷயாநந்தமாம். இங்கு இவ்வேளையிலும் அவ்விஷயாநந்தத்தினை யநுபவித்து அநுபவஞ்செய்பவன், அநுபவம், அநுபவத்தின் விஷயம் என்னும் வடிவினதாகிய திரிபுடியினால் ஜீவன் சிரமமாகிய துன்பத்தினை யடைகிறான். (௪௪)

[௧௧௮௭] तच्छ्रमस्यापनुत्यर्थं जीवो धावेत्परात्मनि ।
तेनैक्यं प्राप्य तत्रत्यो ब्रह्मानंदः स्वयं भवेत् ॥ ४५ ॥

(அ-கை.)

இத்திரிபுடியினாற் றோன்றிய சிரமத்தின் அடைவால் என்ன உண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

तच्छ्रमस्य अपनुत्यर्थं जीवः परमात्मनि धावेत् । तेन ऐक्यं प्राप्य स्वयं तत्रत्यः ब्रह्मानन्दः भवेत् ॥

(சு-ம்.)

அந்தச் சிரமநிவிருத்தியின்பொருட்டு ஜீவன் பரமாத்மாவினிடத்து ஓடுகின்றான். அதனோடு ஒருமையையடைந்து தான் அவ்விடத்தைய பிரஹ்மாநந்தமாகின்றான்.

(வி-ம்.)

அந்தத்திரிபுடியின் தரிசனத்தாற் றோன்றிய சிரமம் நீங்குதற்பொருட்டு அதே ஜீவன் பரமாத்மாவாகிய ஆநந்தவடிவப் பிரஹ்மத்தில் ஓடுகின்றான் அதாவது உடனே செல்லுகின்றான். சென்று அந்தப் பிரஹ்மத்தோடு ஒருமையை யடைந்து “ सता सोम्य तदा संपन्नो भवति ॥ சௌமியனே! அப்போது சுழுத்தியில் சத்தாகிய பிரஹ்மத்தோடு கூடியவனாகின்றான் அதாவது ஐக்கியத்தை யடைகின்றான்.” என்னும் சுருதியினால் தானும் அந்தச் சுழுத்தியிலுள்ள பிரஹ்மாநந்த மாகின்றான். (௪௫)

௧௨. சுழுத்தியின் ஆநந்தத்தில் சுருதியிற்கூறிய ஐந்து திருஷ்டாந்தங்கள்.

[௧௧௮௮] दृष्टांताः शकुनिः श्येनः कुमारश्च महानृपः ।
महाब्राह्मण इत्येते सुप्त्यानंदे श्रुतीरिताः ॥ ४६ ॥

(அ-கை.)

இந்த உபபாதனஞ் செய்யப்பட்ட சுழுத்தியிலுள்ள ஆநந்தத்தில் சகுனிப்பக்ஷிமுதலிய வெகு திருஷ்டாந்தங்கள் சுருதியிற் சொல்லப்பட்டிருக்கின்றன வென்று கூறுகின்றார்:—

शकुनिः श्येनः कुमारः महानृपः च महाब्राह्मणः इति एते दृष्टांताः सुप्त्यानन्दे श्रुतीरिताः ॥

(சு-ம்.)

சகுனி யென்னும் இராஜாளி, கழுகு, குமாரன், சக்கிரவர்த்திராஜா, மகாப்பிராஹ்மணன் என்னும் ஐந்துதிருஷ்டாந்தங்களும் சுழுத்தியின் ஆநந்தத்தில் சுருதியில் சொல்லப்பட்டிருக்கின்றன.

(வி-ம்.)

சகுனிமுதலிய ஐந்து திருஷ்டாந்தங்களால் சுழுத்தியில் ஆநந்தத்தினை உபபாதனஞ்செய்தலால் அங்குச் சுகமில்லை யென்னும் மதம் நிராகரிக்கப்பட்டது. (சகூ)

கரு. சுலோகம் ககஅஅ-ல் கூறிய திருஷ்டாந்தங்களின் விவரணம்.

[ககஅகூ] शकुनिः सूत्रबद्धः सन् दिक्षु व्यापृत्य विश्रमम् ।
अलब्ध्वा बंधनस्थानं हस्तस्तंभाद्युपाश्रयेत् ॥ ४७ ॥

(அ-கை.)

அங்கு முதலில் " स यथा शकुनिः सूत्रेण प्रबद्धः दिशं दिशं पतित्वान्यत्रायतनमलब्ध्वा बंधनमेवोपाश्रयते ॥ एवमेव खलु सोम्य तन्मनो दिशं दिशं पतित्वा अन्यत्रायतनमलब्ध्वा प्राणमेवोपाश्रयते । प्राणबंधं हि सोम्य मनः ॥ அது எப்படிச் சகுனி யென்னும் பக்ஷி சூத்திரத்தினால் கட்டப்பட்டதாய்த் திக்குகள்தோறும் பறந்து வேறிடத்தினை ஆசிரயமாக அடையாது பந்தனத்தின் ஸ்தானத்தையே ஆசிரயஞ்செய்கின்றதோ, அதுபோலவே சௌமியனே! அம்மனம் அதாவது மனதினை யுபாதியாகவுடைய ஜீவன் சுகதுக்கவடிவ திக்குகள்தோறும் பறந்து வேறிடத்தினை ஆசிரயமாக அடையாது, பிராணனுகிய பிராணோபலக்ஷிதப் பரப்பிரஹ்மத்தினையே ஆசிரயஞ்செய்கின்றது. எதனால் சௌமியனே! மனம் பிராணவடிவ பந்தனமுடையதோ, அதனால் பிராணனையே ஆசிரயஞ்செய்கின்றது." என்னும் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களைப் பிரதிபாதிக்குந்தன்மைய சாந்தோக்கியசுருதியின் ஆறுவது அத்தியாயத்துள்ள வாக்கியத்தின் அர்த்தத்தினைச் சுருக்கமாக இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்:—

शकुनिः सूत्रबद्धः सन् दिक्षु व्यापृत्य विश्रमं अलब्ध्वा बंधनस्थानं हस्त-स्तंभादि उपाश्रयेत् ॥

(சு-ம்.)

கயிற்றினால் கட்டப்பட்ட சகுனி எல்லாத்திக்குகளிலும் வியாபாரஞ் செய்து அங்கு இளைப்பாறுமிடமாகிய ஆதாரத்தையடையாது, பந்தனத்திற் கிடமான கை அல்லது ஸ்தம்பத்தை ஆசிரயிக்கின்றது.

(வி-ம்.)

கைமுதலியவற்றில் சிலரிடத்து ஆதாரசூத்திரத்தினால் கட்டப் பட்ட சகுனிப்பக்ஷி ஆகாரமுதலியவற்றைக் கிரகிக்கும்பொருட்டுக் கிழக்கு முதலியதிக்குகளில் வியாபாரஞ்செய்து அங்கு இளைப்பாறுமிடத்தை யடையாது கைமுதலிய இடங்களையே எப்படி ஆசிரயிக்கின்றதோ அது போல. (௪எ)

[௧௧௬௦] जीवोपाधिमनस्तद्वद्धर्माधर्मफलाप्तये ।
स्वप्ने जाग्रति च भ्रांत्वा क्षीणे कर्मणि लीयते ॥ ४८ ॥

(அ-கை.)

இதுவுமது:—

तद्वत् जीवोपाधि मनः धर्माधर्मफलाप्तये स्वप्ने च जाग्रति भ्रांत्वा कर्मणि क्षीणे लीयते ॥

(சு-ம்.)

அப்படி ஜீவனது உபாதியாகிய மனமும் தர்மாதர்மங்களின் பயனை யடைதற்பொருட்டுச் சொப்பன ஜாக்கிரங்களில் சுழன்று கர்மக்ஷயமாகவே ஒடுங்குகின்றது.

(வி-ம்.)

அப்படியே ஜீவனது உபாதியாகிய மனமும் புண்ணிய பாபங்களின் பயனாகிய சுகதுக்கங்களை அநுபவித்தற்பொருட்டு, சொப்பன ஜாக்கிராவஸ் தைகளில் அங்கங்குச் சுழலுதலாகிய வியாபாரத்தைச் செய்து, போகத்தைத் தரும் கர்மம் நசிக்கவே தனது உபாதானமாகிய அஞ்ஞானத்தில் இலயமா கின்றது. அம்மனம் ஒடுங்கவே அம்மனமாகிய உபாதியினையுடைய ஜீவன் பரமாத்மாவே யாகின்றானென்பது பொருள். (௪அ)

[௧௧௯௯] श्येनो वेगेन नीडैकलंपटः शयितुं व्रजेत् ।
जीवः सुप्त्यै तथा धावेद्ब्रह्मानंदैकलंपटः ॥ ४९ ॥

(அ-கை.)

இப்போது கழுகு திருஷ்டாந்தத்தை வர்ணிக்குந்தன்மைத்தாகிய " तद्यथास्मिन्नाकाशे श्येनो वा सुपर्णो वा विपरिपत्य श्रांतः संहृत्य पक्षौ स्वालयायैव ध्रियत एवमेवायं पुरुष एतस्मा आनंदाय धावति । यत्र सुप्तो न कंचन कामं कामयते न कंचन स्वप्नं पश्यति அது எப்படி இவ்வாகாயத்தில் கழுகு அல்லது கருடன் வியாபாரஞ் செய்து களைப்படைந்ததாய்ச் சிறகுகளை ஒடுக்கித் தனது ஸ்தானத்திற் செல்லுகின்றதோ, அப்படியே இப்புருஷனென்னும் ஜீவன் இச்சுழுத்தியி லுள்ள ஆநந்தத்தின்பொருட்டுத் தாவுகின்றான். எங்குத் தூங்கியபுருஷன் எக்காமத்தையும் அதாவது போகத்தையும் விரும்புகிறதில்லையோ, எச்சொப்பனத்தையும் காண்கிறதில்லையோ," என்னும் பிருகதாரணியக உபநிஷதத்தினது வாக்கியத்தின் அர்த்தத்தினைச் சுருக்கமாகக் கூறுகின்றார்:—

श्येनः शयितुं नीडैकलंपटः वेगेन व्रजेत् । तथा जीवः ब्रह्मानंदैकलंपटः सुप्त्यै धावेत् ॥

(சு-ம்.)

எப்படிச் சேனம் சயனித்தற்குத் தனது கூடு ஒன்றன்கண்ணேயே பற்றுடையதாய் வேகமாய்ச் செல்லுகின்றதோ, அப்படியே ஜீவன் பிரஹ்மாநந்தம் ஒன்றன்கண்ணேயே பற்றுடையதாய்ச் சுழுத்தியின்பொருட்டு ஓடுகின்றது.

(வி-ம்.)

எப்படி ஆகாயத்தில் எல்லாவிடத்தும் திரிகின்றதாய்ச் சேனமென்னும் பக்ஷி ஆகாயத்தில் சஞ்சரித்தலாகிய நிமித்தத்தாலாம் சிரமம் நீங்கும் பொருட்டுச் சயநித்தற்குத் தனதுஸ்தானமொன்றன்கண்ணேயே பற்றுடையதாய் உடனே செல்லுகின்றதோ; அப்படியே ஜீவனாகிய மனவுபாதியுடைய சிதாபாஸனும் பிரஹ்மாநந்தம் ஒன்றன்கண்ணேயே பிரீதியுடையதாய்ச் சுழுத்தியின்பொருட்டு உடனே இருதயாகாசவடிவ ஸ்தானத்தில் செல்லுகின்றது. (௪௯)

[௧௧௯௨] अतिबालः स्तनं पीत्वा मृदुशय्यागतो हसन् ।
रागद्वेषाद्यनुत्पत्तेरानंदैकस्वभावभाक् ॥ ५० ॥

(அ-கை.)

" स यथा कुमारो वा महाराजो वा महाब्राह्मणो वा अतिघ्नीमानंदस्य गत्वा शयीतैवमेवैष एतच्छेत அது எப்படிக் குமாரன் அல்லது மகாராஜன் அல்லது மகாப்

பிராஹ்மணன் ஆநந்தத்தின் அவதியை யடைந்து சயனிக்கின்றானோ, அவ்வாறே இந்த ஜீவனும் தூங்குகிறான் ” என்னும் குமாரன் முதலிய மூன்று திஷ்டாந்தத்தினைக் காட்டுந்தன்மைத்தாகிய பிருகதாரணியகத்தின் பாலாகிப்பிராஹ்மண மென்னும் பிரகரணத்திலுள்ள வாக்கியத்தினை மூன்று சுலோகங்களால் வியாக்கியானஞ் செய்கின்றார்:—

अतिबालः स्तनं पीत्वा मृदुशैय्यागतः हसन् रागद्वेषाद्यनुत्पत्तेः आनंदैकस्वभावभाक् ॥

(சு-ம்.)

அதிபாலகன் ஸ்தனத்தின் பாலைஞ்செய்து மிருதுவான சயனத்திலிருந்து சிரிக்கின்றவனாய் இராகத்துவேஷமுதலியவற்றின் உற்பத்தியின்மையால் ஆநந்தரூப முக்கியஸ்வபாவமுடையவனாகின்றான்.

(வி-ம்.)

ஸ்தனத்தைப் பருகுகின்ற பாலகன் கழுத்துவரையில் ஸ்தனபானஞ்செய்து மிருதுத்தன்மைமுதலிய குணங்களோடு கூடிய படுக்கையில் சயனத்தை யடைந்து, “நான் எனது” என்றல் முதலிய விசேஷ ஞானமில்லாதிருத்தலால் இராகாதிகளில்லாமையால் சுகமூர்த்தியாக நிலைத்திருக்கின்றான். (௫0)

[கககூ௩] महाराजः सार्वभौमः संतृप्तः सर्वभोगतः ।
मानुषानंदसीमानं प्राप्यानंदैकमूर्तिभाक् ॥ ५१ ॥

(அ-கை.)

இதுவுமது:—

सार्वभौमः महाराजः सर्वभोगतः संतृप्तः मानुषान्दसीमानं प्राप्य आनन्दैकमूर्तिभाक् ॥

(சு-ம்.)

சகல பூமிக்கும் அதிபதியாகிய மகாராஜன் சர்வபோகங்களினாலும் செவ்வையாய்த் திருப்தியடைந்தவனாய் மானுடாநந்தத்தின் அவதியையடைந்து ஆநந்தமூர்த்தி ஒன்றினையே பஜிக்கின்றான்.

(வி-ம்.)

அல்லது சக்கிரவர்த்தியாகிய ராஜா சுத்தஞானத்தோடுகூடிய புத்தியில்லாதவனாயினும், சர்வமனிதர்களது ஆநந்தங்களோடும் கூடியவனாயிருத்தலால் பிரார்த்திக்கத்தக்க விஷயத்தின் இன்மையால் இராகாதிகளில்லாதவனாய் ஆநந்தமூர்த்தியாக நிலைத்திருக்கின்றான். (௫க)

[௧௧௩௪] महाविप्रो ब्रह्मवेदी कृतकृत्यत्वलक्षणाम् ।
विद्यानंदस्य परमां काष्ठां प्राप्यावतिष्ठते ॥ ५२ ॥

(அ-கை.)

இதுவுமது:—

महाविप्रः ब्रह्मवेदी कृतकृत्यत्वलक्षणां विद्यानन्दस्य परमां काष्ठां प्राप्य अवतिष्ठते ॥

(சு-ம்.)

மகாவிப்பிரனாகிய பிரஹ்மவேதி கிருதகிருத்தியத்தன்மைவடிவ வித்தியாநந்தத்தின் பரமாவதியை யடைந்து நிலைக்கின்றான்.

(வி-ம்.)

அல்லது மகாப்பிராஹ்மணனாகிய பிரத்தியகபின்ன பிரஹ்மசாக்ஷாத்காரமுடையவன் "நான் கிருதகிருத்தியன்" என்னும் வடிவினதாகிய வித்தியாநந்தத்தின் பரமாவதியை அதாவது மேலான ஜீவன்முக்தத் தன்மையை யடைந்தவனாய்ப் பரமாநந்தசொரூபமாக நிலைத்திருக்கின்றான். அதுபோலச் சுழுத்தியுடைய புருஷனும் ஆநந்தவடிவமாக நிலைத்திருக்கின்றான். (௫௨)

[௧௧௩௫] मुग्धबुद्धातिबुद्धानां लोके सिद्धा सुखात्मता ।
उदाहृतानामन्ये तु दुःखिनो न सुखात्मकाः ॥ ५३ ॥

(அ-கை.)

அப்படியானால் இப்பாலகன்முதலிய மூன்று புருஷர்களே திருஷ்டாந்தவடிவமாக்கப்பட்டனர். மற்றவர் ஏன் ஆக்கப்படவில்லை? யென்று சங்கித்து, மூன்று திருஷ்டாந்தங்களினது உதாரணத்தின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்:—

उदाहृतानां मुग्धबुद्धातिबुद्धानां सुखात्मता लोके सिद्धा । अन्ये तु दुःखिनः सुखात्मकाः न ॥

(சு-ம்.)

உதாரணமாக்கப்பட்ட அறிவின்றிய அதிபாலன், அறிஞனாகிய மகாராஜன், அதிக அறிஞனாகிய பிரஹ்மநிஷ்டன் என்னும் மூவரின் சுகவடிவத்தன்மை உலகத்தில் சித்தமா யிருக்கின்றது. அந்நியபுருஷர்களோ துக்கிகளா யிருக்கின்றார்கள்; சுகரூபமாக வில்லை.

(வி-ம்-)

விவேகமின்றிய புருஷர்களுள் அதிபாலன் சுகி. விவேகிகளாகிய விவகாராதிசாமர்த்தியமுடைய புருஷர்களுள் சார்வபௌமனுகிய சகலபூமிக்கும் அரசன் எவனே அவனே சுகி. அதிவிவேகி புருஷர்களினிடையில் ஆநந்தவடிவ ஆத்மாவின் சாக்ஷாத்காரமுடைய புருஷனே சுகி. மற்றைப் புருஷர்களோ எப்போதும் இராகாதிகளுடையவர்களா யிருத்தலின் சுகமின்றியவர்களாவர். ஆதலால் அவர்கள் சுழுத்தியுடையவனிடத்துத் திருஷ்டாந்தவடிவமாக்கப்படவில்லை யென்பது பொருள். (ருங)

கடு. சுழுத்தியில் ஜீவனுக்குப் பிரஹ்மாநந்தத்தின் தற்பரத்தன்மையில் திருஷ்டாந்தத்தோடு ஜோதிப்பிராஹ்மணவாக்கியத்தின் அர்த்தம்.

[கககூகூ] कुमारादिवदेवायं ब्रह्मानंदैकतत्परः ।
स्त्रीपरिष्वक्तवद्वेद न बाह्यं नापि चांतरम् ॥ ५४ ॥

(அ-கை.)

இக்குமாரன்முதலிய மூவரும் சுகமுடையவராகுக. இதனுல் ஏடுத்துக்கொண்ட சுழுத்தியுடைய புருஷனிடத்து என்ன வந்ததென் றுசங்கித்துத் தார்ஷ்டாந்திகவடிவ சுருதிவாக்கியத்தின் தாற்பரியத்தினைக் கூறுகின்றார்:—

कुमारादिवत् एव अयं ब्रह्मानंदैकतत्परः ॥

(சு-ம்.)

குமாரன்முதலியோரைப்போலவே இச்சுழுத்தியுடையவன் பிரஹ்மாநந்தமொன்றில் தற்பரனுகின்றன்.

(வி-ம்.)

ஏப்படிக் குமாரன்முதலியோர் ஆநந்தத்தை யடைகின்றார்களோ, அப்படி இச்சுழுத்தியுடைய புருஷனும் பிரஹ்மாநந்தம் ஒன்றன்கண்ணே தற்பரனுகின்றான் அதாவது ஒரே பிரஹ்மாநந்தத்தை யடைகின்றானென்பது பொருள்.

(அ-கை.)

சுழுத்தியுடையவன் ஒரே பிரஹ்மாநந்தத்தில் தற்பரனுதலில் யுக்தியைக்காட்டுந்தன்மையதாகிய " तद्यथा प्रियया स्त्रिया संपरिष्वक्तो न बाह्यं किंचन वेद नांतरमेवमेवायं पुरुषः प्राज्ञेनात्मना संपरिष्वक्तो न बाह्यं किंचन वेद नांतरम् ॥ அது எப்படிப் பிரியமான ஸ்திரீயோடு ஆலிங்கனஞ்செய்துகொண்ட புருஷன் சிறிதும் வெளியையும் அறிகிறதில்லையோ, உள்ளினையும் அறிகிறதில்லையோ, அப்படி

யே இப்புருஷன் பிராஞ்ஞவடிவபரமாத்மாவோடு ஆலிங்கனஞ் செய்து கொண்டவனாய்ச் சிறிதும் வெளியையும் அறிகிறதில்லை; உள்ளினையும் அறிகிறதில்லை." என்னும் பிரகதாரணியகத்தின் ஜோதிப்பிராஹ்மண மென்னும் பிரகரணத்திலுள்ள வாக்கியத்தினை அர்த்தத்தினால் கிரமமாகக் கூறுகின்றார்:—

स्त्रीपरिष्वक्तवत् बाह्यं न च आंतरं अपि न वेद ॥

(சு-ம்.)

ஸ்திரீயினால் ஆலிங்கனஞ் செய்யப்பட்ட புருஷனைப்போல வெளியினை யறிகிறதில்லை; உள்ளினையும் அறிகிறதில்லை.

(வி-ம்.)

எப்படி உலகத்தில் பிரியமான ஸ்திரீயோடு ஆலிங்கனத்தை (தழுவுதலை) யடைந்த காமிபுருஷன் வெளியினையும் உள்ளினையும் விஷயஞ்செய்யும் ஞானமின்றியவனா யிருத்தலின் சுகமூர்த்தியினைப்போலாகின்றானோ, அதுபோலச் சுழுத்தியில் பிராஞ்ஞவடிவ பரமாத்மாவோடு ஐக்கியத்தை யடைந்து வெளியினையும் உள்ளினையும் விஷயஞ்செய்யும் ஞானமின்மையால் ஆநந்தரூபமே யாகின்றான். (௱௪)

௧௬. திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களிலுள்ள வெளி உள் என்னும் சொற்களின் பொருள்.

[௧௧௬எ] बाह्यं रथ्यादिकं वृत्तं गृहकृत्यं यथांतरम् ।
तथा जागरणं बाह्यं नाडीस्थः स्वप्न आंतरः ॥ ९५ ॥

(அ-கை.)

இந்தத் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தவடிவ வாக்கியத்துள்ள வெளி உள் என்னும் சொற்களுக்குச் சொல்லக்கருதிய பொருளைக் கிரமமாகக் காட்டுகின்றார்:—

यथा रथ्यादिकं बाह्यं वृत्तं । गृहकृत्यं आंतरं । तथा जागरणं बाह्यं । नाडीस्थः स्वप्नः आंतरः ॥

(சு-ம்.)

எப்படித் திருஷ்டாந்தத்தில் பலவழிகள் ஒன்றுசேரும்படியான இடம் அல்லது இலகுவான மார்க்கமுதலியன வெளி விருத்தாந்தமோ, வீட்டின் காரியம் ஆந்தர விருத்தாந்தமோ, அதுபோலத் தார்ஷ்டாந்தத்தில் விழிப்பு

அதாவது ஜாக்கிரம் வெளிவிருத்தாந்தமாம்; நாடிகளிலுள்ள சொப்பனம் உள் விருத்தாந்தமாம்.

(வி-ம்.)

ஜாக்கிரத்தின் வாசனையினால் நாடிகளின் நடுவிற்றோற்றும் பிரபஞ்சம் சொப்பன மென்று சொல்லப்படும். (ருரு)

கஎ. சுழுத்தியில் ஜீவன் பிரஹ்மாநந்தவடிவமாக நிலைத்தலில் யுக்தியினைக் காட்டும் சுருதியின் தாற்பரியம்.

[கககூஅ] पितापि सुप्तावपितेत्यादौ जीवत्ववारणात् ।
सुप्तौ ब्रह्मैव नो जीवः संसारित्वासमीक्षणात् ॥ ५६ ॥

(அ-கை.)

ஜீவன் சுழுத்தியில் பிரஹ்மாநந்தவடிவமாகவே நிலைக்கின்றா னென்னும் அர்த்தத்தில் யுக்தியினைக்காட்டுந்தன்மையதாகிய "अत्र पिताऽपिता भवति இச்சுழுத்தியில் பிதா பிதாவல்லாதவனாகின்றான்." என்றல் முதலிய சுருதியின் தாற்பரியத்தினைக் காட்டுகின்றார்:—

सुप्तौ पिता अपि अपिता इत्यादौ जीवत्ववारणात् संसारित्वासमीक्षणात् सुप्तौ ब्रह्म एव । जीवः नो ॥

(சு-ம்.)

"சுழுத்தியில் பிதாவும் பிதாவல்லாதவ னாகின்றான்." என்றல் முதலிய சுருதியின் ஸ்தானத்தில் ஜீவத்தன்மையின் நீக்கத்தாலும், சம்சாரித்தன்மையின் தோற்றாமையினாலும் சுழுத்தியில் பிரஹ்மமே யிருக்கின்றது; ஜீவன் இல்லை.

(வி-ம்.)

இச்சுழுத்தியில் அத்தியாத்மிக மென்னும் அத்தியாசத்தாலாகிய பிதாத்தன்மைமுதலிய ஜீவனது தர்மங்கள் சுருதியினாலேயே நீக்கப்பட்டிருத்தலாலும், ஜீவத்தன்மை தோற்றாதாகவே பிரஹ்மத்தன்மையே மிஞ்சியிருக்கின்றது. (ருசு)

கஅ, சுழுத்தியில் பிதாமுதலியோரின் அபிமான மின்மையால் சோகமுதலிய சம்சார மில்லாமை.

[கககூகூ] पितृत्वाद्यभिमानो यः सुखदुःखाकरः स हि ।
तस्मिन्नपगते तीर्णः सर्वाञ्छोकान्भवत्ययम् ॥ ५७ ॥

(அ-கை.)

அப்படியானால் சுழுத்தியில் பிதாத்தன்மைமுதலிய அபிமான மில்லாதிருந்தும் சுகித்தன்மைமுதலிய சம்சாரம் ஏன் உண்டாகாதென் றாசங்கித்துச், சம்சாரம் தேகாபிமானவடிவ காரணமுடையதா யிருத்தலால் அந்தத் தேகாபிமான மில்லாதாகவே சம்சாரம் இல்லாததாகு மென்று கொள்ளுகின்ற ஆசாரியர் அச்சம்சாரத்தின் அபாவத்தினைப் பிரதிபாதிக்கும் " तीर्णो हि तदा सर्वान् शोकान् हृदयस्य भवति அப்போது சுழுத்தியில் இருதயமாகிய அந்தக்கரணத்தின் எல்லாச் சோகங்களையும் கடந்தவனாகின்றான்." என்னும் ௧௧௯அ-ல் கூறிய சுருதியின் சமீபத்திலுள்ள வாக்கியத்தினைத் தாற்பரியத்தால் வியாக்கியானஞ்செய்கின்றார்:—

यः पितृत्वाभिमानः सः हि सुखदुःखाकरः । तस्मिन् अपगते अयं सर्वान् शोकान् तीर्णः भवति ॥

(சு-ம்.)

பிதாத்தன்மைமுதலிய அபிமானம் எதுவோ அதுவே சுகதுக்கங்களுக்கு இடமாம். அது நீங்கவே இப்புருஷன் சர்வசோகங்களையும் கடந்தவனாகின்றான். ‖ (௫௭)

௧௧. சுழுத்தியில் தனது முகத்தால் சுகத்தைக் கூறுகின்ற சுருதியின் அர்த்தம்.

[௬௨00] सुषुप्तिकाले सकले विलीने तमसावृतः ।
सुखरूपमुपैतीति ब्रूते ह्याथर्वणी श्रुतिः ॥ ५८ ॥

(அ-கை.)

அப்படியானால் உதகரிக்கப்பட்ட சுருதிகள் சுழுத்தியில் சுகத்தின் பிராப்தியினைத் தமது முகத்தாற் கூறுதலைக் கண்டதில்லையே யென்றாசங்கித்து, அவ்வாறு கூறுந்தன்மையதாகிய கைவல்யசுருதியின் வாக்கியத்தை அர்த்தத்தினாற் கூறுகின்றனர்:—

" सषुप्तिकाले सकले विलीने तमसा आवृतः सुखरूपं उपैति " इति आथर्वणी श्रुतिः ब्रूते हि ॥

(சு-ம்.)

" சுழுத்திகாலத்தில் சகலப்பிரபஞ்சமும் ஒடுங்கவே தமசினால் மறைக்கப்பட்ட ஜீவன் சுகரூபத்தை யடைகின்றான்." என்று அதர்வணவேதத்தின் கைவல்யசுருதி சொல்லுகின்றது.

(வி-ம்.)

சுழுத்திகாலத்தில் சகல ஜாக்கிரமுதலிய பிரபஞ்சத்தின் விலய முண்டாகவே, தன்து உபாதானவடிவ தமப்பிரதானப்பிரகிருதியில் விலயத்தை யடைந்த அந்தப்பிரகிருதிவடிவ தமசினல் மறைபட்ட ஜீவன் சுகவடிவப் பிரஹ்மத்தை யடைகின்றான் என்பது அச்சுருதியின் தாற்பரியம். (ருஅ)

உ௦. சுலோகம் ௧௨௦௦-ல் கூறிய அர்த்தம் எல்லோரது அநுபவத்தாலும் சித்தித்தல்.

[௧௨௦௧] सुखमस्वाप्समत्राहं न वै किंचिदवेदिषम् ।
इति सुप्ते सुखाज्ञाने परामृशति चोत्थितः ॥ ५९ ॥

(அ-கை.)

இந்த ௧௨௦௦-வது சுலோகத்திற் கூறிய அர்த்தம் சுருதிப்பிரசித்தமாத்திர மன்று; ஆனால் எல்லா ஜனங்களுடைய அநுபவத்தினாலும் சித்தமா மென்று கூறுகின்றார்:—

उत्थितः "अत्र सुखं अहं अस्वाप्सं । किंचित् न अवेदिषं" इति सुप्ते सुखाज्ञाने च परामृशति ॥

(சு-ம்.)

சுழுத்தியினின்று எழுந்த புருஷன் "இவ்வளவுகாலம் வாயில் நான் சுகமாகத் தூங்கினேன்; ஒன்றும் அறியவில்லை." என்று சுழுத்திகால சுகத்தினையும் அஞ்ஞானத்தினையும் ஸ்மரிக்கின்றான்.

(வி-ம்.)

சுழுத்தியினின்று எழுந்த புருஷன் "இவ்வளவுகாலபரியந்தம் சுகமுண்டாகும்வண்ணம் தூங்கினேன்; ஒன்றும் அறியவில்லை." என்று இவ்வாறு நித்திரைக்காலத்துச் சுகத்தினையும் அஞ்ஞானத்தினையும் ஸ்மரிக்கின்றான். இதனாலும் சுழுத்தியில் சுக மிருக்கின்றது என்று அறியப்படுகின்றது. (ருகூ)

[௧௨௦௨] परामर्शोऽनुभूतेऽस्तीत्यासीदनुभवस्तदा ।
चिदात्मत्वात्स्वतो भाति सुखमज्ञानधीस्ततः ॥ ६० ॥

(அ-கை.):

அப்படியானால் ஸ்மரணஞானம் அப்பிரமாணமாகுதலால் அதன் வலியால் சுழுத்தியில் சுகத்தின் சித்தி எப்படி யுண்டாகும்? என்றுசங்

கித்து, அந்தஸ்மிருதிஞானம் அப்பிரமாணமாயினும், அதன் காரணவடிவமான அநுபவத்தின் வலியினால் சுகத்தின் சித்தி யுண்டாகின்றது என்னும் அபிப்பிராயத்தினாற் கூறுகின்றார்:—

परामर्शः अनुभूते अस्ति इति तदा अनुभवः आसीत् ॥

(சு-ம்.)

ஸ்மிருதிஞானம் அநுபவிக்கப்பட்டதில் உண்டாகின்றது. ஆதலால் அப்போது அநுபவம் இருந்தது.

(வி-ம்.)

ஸ்மரணவடிவஞானம் அநுபவிக்கப்பட்ட விஷயத்திலேயே யுண்டாகின்றது; அநுபவிக்கப்படாத விஷயத்தில் இல்லை. இக்காரணத்தால் அப்போது சுழுத்தியில் சுகம் அஞ்ஞானம் என்பவற்றின் அநுபவ மிருந்தது என்று சொல்லப்படுகின்றது.

(அ-கை.)

அப்படியானால் சுழுத்தியில் மனதோடு ஞானத்தின் சாதனங்கள் ஒடுங்கியிருத்தலால் எப்படி அநுபவத்தின் சித்தியுண்டாம்? என்றுசங்கித்துச்,சுகத்தினது அநுபவத்தின் சாதன மில்லை? என்றான்றாற் சொல்லப்படுகின்றதா? அல்லது அஞ்ஞானத்தினது அநுபவத்தின் சாதன மில்லையென்று சொல்லப்படுகின்றதா? என்னும் இரண்டு விகற்பஞ்செய்து, அவற்றில் முதற்பக்ஷம் பொருந்தாது; சுகம் சொப்பிரகாச சேதனவடிவமாயிருத்தலால் சாதனத்தின் அபேக்ஷையின்றியதா யிருத்தலின். இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; சொப்பிரகாசவடிவ சுகத்தின் வலியினாலேயே அதனை ஆவரணஞ்செய்யும் அஞ்ஞானத்தின் பிரதீதி சித்தித்தலாலென்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்றார்:—

चिदात्मत्वात् सुखं स्वतः भाति । ततः अज्ञानधीः ॥

(சு-ம்.)

சிதாத்மவடிவமாய் அதாவது சொப்பிரகாசரூபமாய் இருத்தலால் சுகம் சொரூபமாகத் தோற்றுகின்றது. அதனால் அஞ்ஞானத்தின் உணர்ச்சி யுண்டாகின்றது. (௯௦)

௨௧. சுழுத்தியின் சொப்பிரகாசசுகம் பிரஹ்மவடிவமா மென்பதில் பிருகதாரணியகசுருதியின் வாக்கியம்.

[௧௨௦௩] ब्रह्म विज्ञानमानंदमिति वाजसनेयिनः ।
पठंत्यतः स्वप्रकाशं सुखं ब्रह्मैव नेतरत् ॥ ६१ ॥

(அ-கை.)

அப்படியானால் சுழுத்திகாலத்துச் சுகம் சொப்பிரகாச சுகவடிவமா யினும், "பிரஹ்மாநந்தம் தானாகின்றான்." என்று ௧௧௮௭-வது சுலோகத்தில் சொல்லப்பட்ட பிரஹ்மவடிவத்தன்மை சம்பவியாது; பிரமாணமின்மையால் என்றாசங்கித்து, "विज्ञानमानंदं ब्रह्म விஞ்ஞான மாநந்தம் பிரஹ்மம்" என்றல் முதலிய பிரகதாரணியகத்தினது வாக்கியத்தினிருப்பால் சுகத்திற்குப் பிரஹ்மவடிவத்தன்மை யில்லை யென்று கூறுதல் பொருந்தா தென்று கூறுகின்றார்:—

"विज्ञानमानन्दं ब्रह्म" इति वाजसनेयिनः पठन्ति । अतः स्वप्रकाशं सुखं ब्रह्म एव इतरत् न ॥

(சு-ம்.)

"விஞ்ஞானமாகிய ஜீவசேதனம் ஆநந்தவடிவப் பிரஹ்மமாம்." என்று வாஜஸநேயிசாகையினை யுடையோர் படிக்கின்றனர். ஆதலால் சொப்பிரகாசவடிவ சுகம் பிரஹ்மமே; வேறன்று. (௬௧)

௨௨. ஸ்மரணத்திற்கும் அநுபவத்திற்கும் ஒரு ஆசிரயத்தின் நியமம் விரோதமா மென்னும் சங்கையும் சமாதானமும்.

[௧௨௦௪] यदज्ञानं तत्र लीनौ तौ विज्ञानमनोमयौ ।
तयोर्हि विलयावस्था निद्राऽज्ञानं च सैव हि ॥ ६२ ॥

(அ-கை.)

அப்படியானால் அநுபவமும் ஸ்மரணமுமாகிய இரண்டு ஞானங்கட்கும் ஒரு ஆசிரயமுடைமை நியமத்தினால் "நான் சுகமாய்த் தூங்கினேன்; ஒன்றும் தெரியவில்லை." என்று சுழுத்திகாலத்துச் சுகமும் அஞ்ஞானமும் விஞ்ஞானசப்தவாச்சியமான ஜீவனால் ஸ்மரிக்கப்பட்டனவாயிருத்தலின், அதே விஞ்ஞானமய சப்தவாச்சியமான ஜீவனுக்கே சுகத்தினையும் அஞ்ஞானத்தினையும் அநுபவஞ்செய்யுந்தன்மை சொல்லத்தக்கதா மென்றாசங்கித்து, அந்த ஜீவனது உபாதிவடிவ அஞ்ஞானகாரியமாகிய அந்தக்கரணம் அஞ்ஞானத்தில் ஒடுங்குதலால் அந்தக்கரணவுபாதியுடைய ஜீவனுக்குச் சுகத்தையும் அஞ்ஞானத்தையும் அநுபவஞ்செய்யுந்தன்மை பொருந்ாது என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்:—

यत् अज्ञानं तत्र तौ विज्ञानमनोमयौ लीनौ ॥

(சு-ம்.)

எது அஞ்ஞானமோ அதில் அந்த விஞ்ஞானமயம் மனோமய மிரண்டும் ஒடுங்கியிருக்கின்றன.

(வி-ம்.)

"நான் ஒன்றும் தெரியாமலிருந்தேன்" என்னும் ஸ்மரணம் வேறுவகையாக அதாவது சுழுத்தியில் அநுபவிக்கப்பட்ட அஞ்ஞானவடிவ விஷயமின்றிச் சம்பவியாமையாகிய அர்த்தாபத்திப்பிரமாணத்தினால் எந்த அஞ்ஞானம் அறியப்படுகின்றதோ, அந்த அஞ்ஞானத்தில் அந்தப் பிரமாதாப் பிரமாணவடிவ மாதலால் பிரசித்தமான விஞ்ஞானமயமனோமயகோசங்கள் ஒடுங்குகின்றன. அதாவது விஞ்ஞானமய மனோமயமாகிய ஆகாரத்தை விட்டுக் காரணமான அஞ்ஞானவடிவமாக நிலைத்திருக்கின்றன. ஆதலால் அவ்வந்தக்கரணவடிவ உபாதியினையுடைய சேதனத்திற்கு அநுபவஞ்செய்யுந்தன்மை இல்லை யென்பது கருத்து.

(அ-கை.)

அதில் காரணத்தைக் கூறுகின்றார்:—

हि तयोः विलयावस्था निद्रा ॥

(சூ-ம்.)

எதனால் அவ்விரண்டன் விலயாவஸ்தை நித்திரையோ அதனால்.

(வி-ம்-)

எக்காரணத்தால் அவ்விஞ்ஞானமய மனோமயங்களின் விலயாவஸ்தை நித்திரை யென்று சொல்லப்படுகின்றதோ அதனால். "விஞ்ஞானமாகிய அந்தக்கரணத்தின் விரதி அதாவது ஒடுக்கம் எதுவோ அது சுழுத்தி" என்று சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருத்தலால்.

(அ-கை.)

அப்போது நித்திரையிலேயே ஒடுங்குகின்றது என்று சொல்லவேண்டுமென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

च सा एव अज्ञानं हि ॥

(சூ-ம்.)

அந்த நித்திரையே அஞ்ஞானமாம்.

(வி-ம்.)

அந்த நித்திரையே வித்துவான்களால் "அஞ்ஞானம்" என்று வியவகரிக்கப்படுகின்றதென்பது பொருள். (சூ உ)

உ௩. ஸ்மரணஞ்செய்பவனாகிய விஞ்ஞானமயனும் அநுபவஞ்செய்பவனாகிய ஆநந்தமயனும் ஒன்றாதல்.

[௧௨0௫] विलीनघृतवत्पश्चात्स्याद्विज्ञानमयो घनः ।
विलीनावस्थ आनंदमयशब्देन कथ्यते ॥ ६३ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது சுழுத்தியிலுள்ள சுகம் அஞ்ஞானம் என்பவற்றின் அநுபவகாலத்தில் இல்லாதிருக்கின்ற விஞ்ஞானமயனுக்குச் சாக்கிரகாலத்தில் எப்படி அச்சுக அஞ்ஞானங்களின் ஸ்மரணஞ்செய்யுந் தன்மை இருக்கின்றது? என்றாசங்கித்து, விலயாவஸ்தையிலும் அந்த ஆத்மாவினது சொரூபநாச மின்மையால் விலயாவஸ்தைவடிவ உபாதியினை யுடைய ஆநந்தமயவடிவத்தால் அநுபவஞ்செய்யுந்தன்மையும், விஞ்ஞான சப்தத்தின் வாச்சியமான கனமுடைமைவடிவ உபாதியுடையதாயிருத்தலால் ஸ்மரணஞ்செய்யுந்தன்மையும் ஒரே ஆத்மாவிற்குப் பொருந்துகின்றன என்னும் அபிப்பிராயத்தினால் கூறுகின்றார்:—

विलीनघृतवत् पश्चात् विज्ञानमयः घनः स्यात् विलीनावस्थः आनंदमयशब्देन कथ्यते ॥

(சு-ம்.)

உறைந்த நெய்யினைப்போல யாது பின் ஜாக்கிரமுதலியவற்றில் விஞ்ஞானமயகன மாகின்றதோ, அதுவே முன் விலீன (ஒடுங்கிய) அவஸ்தை யுடையதாய் ஆநந்தமய சப்தத்தினால் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

எப்படி அக்கினியின் சையோகமுதலியவற்றால் உருகிய நெய் பின் வாயுமுதலியவற்றின் சம்பந்தத்தால் இறுகியதாகின்றதோ, அதுபோல ஜாக்கிரமுதலியவற்றில் போகத்தைத் தரும் கர்மத்தின் நாசவசத்தால் நித்திரைவடிவமாக ஒடுங்கிய அந்தக்கரணம் பின் போகத்தைத் தரும் கர்மவசத்தால் ஜாக்கிரத்தில் விஞ்ஞானமாகிய அந்தக்கரணம் எதுவோ அவ்வாகாரமாகத் தடிப்பாய் வெளிப்படையாகின்றது. ஆதலால் அவ்வந்தக்கரணவடிவ உபாதியுடைய ஆத்மாவும் விஞ்ஞானமயகன மாகின்றது. அதே ஆத்மா முன் சுழுத்தியில் விலயாவஸ்தைவடிவ உபாதியுடையதாய் ஆநந்தமய மென்று சொல்லப்படுகின்றது. (௬௩)

உ௪. ஆநந்தமயனது சொரூபம்.

[௧௨0௬] सुप्तिपूर्वक्षणे बुद्धिवृत्तिर्या सुखबिंबिता ।
सैव तद्बिंबसहिता लीनानंदमयस्ततः ॥ ६४ ॥

(அ-கை.)

"விலீநாவஸ்தை யுடையதாய் ஆநந்தமய மெனப்படுகின்றது" என்னும் ௬௨௦௫-வது சுலோகத்திற் கூறிய பொருளினையே விளக்குகின்றார்:—

सुप्तिपूर्वक्षणे या बुद्धिवृत्तिः सुखबिंबिता । ततः तद्बिंबसहिता सा एव लीना आनन्दमयः ॥

(சு-ம்.)

சுழுத்திக்கு முந்திய கணத்தில் எந்தப் புத்திவிருத்தி சுகத்தின் பிரதிபிம்பத்தோடுகூடிய தாகின்றதோ, அதன்பின் அச்சுகத்தின் பிரதிபிம்பத்தோடுகூடிய அதே விருத்தி ஒடுங்கி ஆநந்தமய மெனப்படுகின்றது.

(வி-ம்.)

சுழுத்திக்கு முந்திய இடையின்றிய கணத்திலுள்ள அந்தர்முகமான புத்திவிருத்தி சொரூபவடிவ சுகத்தின் பிரதிபிம்பத்தோடுகூடிய தாகின்றது. பின் சுகத்தின் பிரதிபிம்பத்தோடு அதே விருத்தி நித்திரைவடிவமாய் ஒடுங்கி ஆநந்தமய மென்று சொல்லப்படுகின்றது. (௬௪)

௨௫. ஆநந்தமயனுக்குப் பிரஹ்மசுகத்தின் அநுபவம்.

[௬௨௦௭] अंतर्मुखो य आनंदमयो ब्रह्मसुखं तदा ।
भुंक्ते चिद्बिंबयुक्ताभिरज्ञानोत्पन्नवृत्तिभिः ॥ ६५ ॥

(அ-கை.)

இப்படி ஆநந்தமயனது சொரூபத்தினைக் காட்டி, அதே ஆநந்தமயனுக்கு ஜாக்கிரகாலத்தில் விஞ்ஞானமயவடிவமாக ஸ்மரணஞ்செய்யுந் தன்மை சித்தித்தற்பொருட்டு அப்போது சுழுத்தியில் சுகத்தினது அநுபவத்தினைக் காட்டுகின்றார்:—

अंतर्मुखः यः आनन्दमयः तदा ब्रह्मसुखं चिद्बिंबयुक्ताभिः अज्ञानोत्पन्नवृत्तिभिः भुंक्ते ॥

(சு-ம்.)

அந்தர்முகமாகிய ஆநந்தமயன் எவனோ அவன் அப்போது சேதனப் பிரதிபிம்பத்தோடுகூடிய அஞ்ஞானத்தினின்றுண்டாகிய விருத்திகளால் பிரஹ்மசுகத்தை யநுபவிக்கின்றான்.

(வி-ம்.)

சுகத்தின் பிரதிபிம்பத்தோடுகூடிய அந்தர்முகபுத்திவிருத்தியினாற் றோன்றிய சம்ஸ்காரத்தோடுகூடிய அஞ்ஞானமாகிய உபாதியினையுடைய

ஆநந்தமயன் அப்போது சுழுத்தியில் பிரஹ்மசுகத்தை அதாவது சொரூப வடிவ சுகத்தைச் சிதாபாசனோடுகூடிய அஞ்ஞானத்தினின்று முண்டாகிய சுகமுதலியவற்றை விஷயம் செய்யும் சத்துவகுணத்தின் பரிணாமவிசேஷ வடிவ விருத்திகளால் புசிக்கின்றான் அதாவது அநுபவிக்கின்றான். (௬௫)

௨௬. அஞ்ஞானவிருத்திகளின் விளக்கமின்மையும் புத்திவிருத்திகளின் விளக்கமும்.

[௧௨0அ] अज्ञानवृत्तयः सूक्ष्मा विस्पष्टा बुद्धिवृत्तयः ।
इति वेदांतसिद्धांतपारगाः प्रवदंति हि ॥ ६६ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது ஜாக்கிரத்தினைப்போலச் சுழுத்தியில் "நான் சுகத்தை யநுபவிக்கின்றேன்." என்னும் அபிமானம் எதனால் உண்டாகிறதில்லை? என்றாசங்கித்து, அவித்தையினது விருத்திகள் புத்திவிருத்திகளைப்போல வெளிப்படை யின்மையால் இவ்வாறு அபிமான முண்டாகிறதில்லை யென்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்றார்:—

अज्ञानवृत्तयः सूक्ष्माः । बुद्धिवृत्तयः विस्पष्टाः ॥

(சு-ம்.)

அஞ்ஞானத்தின் விருத்திகள் சூக்ஷ்ம மென்னும் வெளிப்படையின்றியனவாம். புத்தியின் விருத்திகள் வெளிப்படையுள்ளனவாம்.

(அ-கை.)

இஃது எதனால் அறியப்படுகின்றது? எனக் கூறுகின்றார்:—

इति वेदांतसिद्धांतपारगाः प्रवदन्ति हि ॥

(சு-ம்.)

இப்படி வேதாந்தசித்தாந்தத்தின் கரையினை யடைந்த புருஷர்கள் சொல்லுகின்றார்கள். (௬௬)

௨௭. ஆநந்தமயனுக்குச் சூக்ஷ்மமான அவித்தியாவிருத்திகளால் பிரஹ்மாநந்தத்தின் போக முண்டென்பதில் மாண்டூக்கியாதிசுருதி பிரமாணமாதல்.

[௧௨0ஆ] मांडूक्यतापनीयादिश्रुतिष्वेतदतिस्फुटम् ।
आनंदमयभोक्तृत्वं ब्रह्मानंदे च भोग्यता ॥ ६७ ॥

(அ-கை.)

அப்படியானால் "ஆநந்தமயன் பிரஹ்மாநந்தத்தைச் சூக்ஷ்மமான

அவித்தியாவிருத்திகளால் அநுபவிக்கின்றான்." என்னும் ௧௨0௭-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தில் பிரமாணம் யாது எனக் கூறுகின்றார்:—

माण्डूक्यतापनीयादिश्रुतिषु एतत् अतिस्फुटम् ॥

(சு-ம்.)

மாண்டூக்கிய தாபநீயாதி உபநிஷதங்களில் இது மிகத் தெளிவாம்.

(அ-கை.)

இஃது என்னும் சொற்பொருளினையே கூறுகின்றார்:—

आनंदमयभोक्तृत्वं च ब्रह्मानंदेभोग्यता ॥

(சு-ம்.)

ஆநந்தமயனுக்குப் போக்திருத்தன்மை யுண்டு. பிரஹ்மாநந்தத்தில் போகிக்கத்தக்கதன்மை யுண்டு. (௬௭)

௨அ. மாண்டூக்கியாதிசுருதியிலுள்ள வாக்கியத்தின் அர்த்தம்.

[௧௨௧0] एकीभूतः सुषुप्तस्थः प्रज्ञानघनतां गतः ।
आनंदमय आनंदभुक्चेतोमयवृत्तिभिः ॥ ६८ ॥

(அ-கை.)

இப்போது "सुषुप्तस्थान एकीभूतः प्रज्ञानघन एवानंदमयो आनंदभुक्चेतोमुखः சுழுத்திவடிவஸ்தானத்தில் ஐக்கியவடிவமாகிய பிரஞ்ஞானகனனே ஆநந்தமயனும் ஆநந்தம்புசிப்பவனும் சேதோமுகனுமாவன்." என்னும் மாண்டூக்கியாதிசுருதியிலுள்ள வாக்கியத்தினை அர்த்தத்தினால் படிக்கின்றார்:—

एकीभूतः सुषुप्तस्थः प्रज्ञानघनतां गतः आनंदमयः चेतोमयवृत्तिभिः आनंदभुक् ॥

(சு-ம்.)

ஒருவடிவத்தன்மையினை யடைந்து சுழுத்தியிலுள்ள பிரஞ்ஞானகனத்தன்மையினை யடைந்த ஆத்மா ஆநந்தமயன்; சேதோமயவிருத்திகளால் ஆநந்தம்புசிப்பவனாகின்றான்.

(வி-ம்.)

சுழுத்தியிலிருப்பவன் சுப்தன் அதாவது சுழுத்தியபிமானி யெனப்படுவன் என்பது பொருள். ஆநந்தமயனென்றால் ஆநந்தவடிவன். சொரூபவடிவ ஆநந்தத்தினை எவன் அநுபவிக்கின்றானோ அவன் ஆநந்தம்புசிப்பவனெனப்படுகின்றான். சேதனமாகிய சைதன்னியத்தோடுகூடிய அந்

வது சேதனத்தின் பிரதிபிம்பத்தோடுகூடிய விருத்திகள் சேதோமயவி ருத்திகளெனப்படும். அந்த விருத்திகளால் ஆநந்தத்தைப் புசிப்பவனுவன் என்று கூட்டுக. (௬௮)

௨௧. சுலோகம் ௧௨௬0-ல் கூறிய சுருதியிலுள்ள ஒருமை வடிவமென்னும் பதத்தின் பொருள்.

[௧௨௧௧] विज्ञानमयमुख्यैर्यो रूपैर्युक्तः पुराधुना ।
स लयेनैकतां प्राप्तो बहुतंडुलपिष्टवत् ॥ ६९ ॥

(அ-கை.)

அந்த ௧௨௬0-வது சுலோகத்திற் கூறிய சுருதிவாக்கியத்திலுள்ள "ஒருவடிவத்தன்மையினையடைந்து" என்னும் பதத்தின் அர்த்தத்தினைக் கூறுகின்றார்:—

यः पुरा विज्ञानमयमुख्यैः रूपैः युक्तः । सः अधुना लयेन एकतां प्राप्तः ॥

(சு-ம்.)

எது முன் விஞ்ஞானமயமுதலியவடிவ ஆகாரங்களோடு கூடியதா யிருந்ததோ, அதுவே யிப்போது இலயத்தினுல் ஒருமையை அடைந்திருக் கின்றது.

(வி-ம்.)

எந்த ஆத்மா முன் ஜாக்கிராவஸ்தையில் "स वा अयमात्मा ब्रह्म विज्ञानमयो मनोमयः प्राणमयश्चक्षुर्मयः श्रोत्रमयः पृथ्वीमयः आपोमयो वायुमय आकाशमयस्तेजोमयोऽतेजोमयः काममयोऽकाममयः क्रोधमयोऽक्रोधमयः அந்த இவ்வாத்மா பிரஹ்மம்; விஞ்ஞானமயமாம்; மனோமயமாம்; பிராணமயமாம்; நேத்திரமயமாம்; சுரோத்திரமயமாம்; பிருதிவிமயமாம்; ஜலமயமாம்; வாயுமயமாம்; ஆகாசமயமாம்; தேஜோமயமாம்; அதேஜோமயமாம்; காமமயமாம்; அகாமமயமாம்; குரோதமயமாம்; அக்குரோதமயமாம்." என்றல் முதலிய சுருதிகளிற் கூறிய * ௧௧. விஞ்ஞான மயாதிவடிவ ஆகாரத்தோடு கூடியதாயிருந்ததோ, அதே ஆத்மா இப்போது சுழுத்தியில் ஒடுங்கிய புத்தி மனமுதலிய உபாதிகளின் விலயத்தால் ஒருமையை அடைகின்றது.

(அ-கை.)

அதில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

---

* ௧௧. எப்படி ஒரே புருஷன் சமையல் படிப்பித்தல்முதலிய தொழிலின் பேதத்தால் சமையற்காரன் பாடகன்முதலிய பெயர்களால் சொல்லப்படுகின்றனே, அதுபோல ஒரே பிரஹ்மாத்மா விஞ்ஞானமயமுதலிய வேறு வேறு உபாதிகளோடு தாதாத்மிய அத்தியாசத்தால் அந்தந்தவடிவமுடையதாகச் சொல்லப்படுகின்றது என்பது பொருள்.

बहुतंडुलपिष्टवत् ॥

(சு-ம்.)

வெகு அரிசிகளாலுண்டாகிய மாவு எதுவோ அதனைப்போல என்பது பொருள். (௬௯)

௭0. சுலோகம் ௪௨௪0-ல் கூறிய சுருதியிலுள்ள பிரஞ்ஞானகனசப்தத்தின் அர்த்தமும், சுழுத்தியினின்றும் விழித்தற்குக் காரணமும்.

[௪௨௪௨] प्रज्ञानानि पुरा बुद्धिवृत्तयोऽथ घनोऽभवत् ।
घनत्वं हिमबिंदूनामुदग्देशे यथा तथा ॥ ७० ॥

(அ-கை.)

இப்போது பிரஞ்ஞானகன மென்னும் சொல்லின் பொருளைக் கூறுகின்றார்:—

पुरा प्रज्ञानानि बुद्धिवृत्तयः अथ घनः अभवत् ॥

(சு-ம்.)

முன் பிரஞ்ஞானவடிவமாயிருந்த புத்திவிருத்திகளெவையோ அவை பின் கனவடிவமாகின்றன.

(வி-ம்.)

முன் ஜாக்கிரமுதலியவற்றில் பிரஞ்ஞானசப்தத்தின் வாச்சியமாய்க் கடாதிகளைக் கோசரிக்கும் எந்தப் புத்திவிருத்திகளிருந்தனவோ, அவை பின் சுழுத்திகாலத்தில் கடாதி விஷயங்கள் இல்லாதனவாகவே கனமாகின்றன அதாவது சேதனவடிவத்தால் ஒருவடிவமாகின்றன.

(அகை.)

அதில் திருஷ்டாந்தத்தைக் கூறுகின்றார்:—

यथा उदग्देशे हिमबिंदूनां घनत्व । तथा ॥

(சு-ம்.)

எப்படி ஜலத்தோடுகூடிய தேசத்தில் பனித்துளிகளின் கனவடிவத்தன்மை அதாவது ஒருவடிவத்தன்மை யுண்டாகின்றதோ அதுபோல. ()

[௪௨௪௩] तद्घनत्वं साक्षिभावं दुःखाभावं प्रचक्षते ।
लौकिकास्तार्किका यावद्दुःखवृत्तिविलोपनात् ॥ ७१ ॥

(அ-கை.)

இப்போது பிரஞ்ஞானகன சப்தத்தினது அர்த்தின் நிரூபணப்பிரசங்கத்தால் கிடைத்த ஓர் பொருளைக் கூறுகின்றார்:—

तत् साक्षिभावं घनत्वं लौकिकाः तार्किकाः दुःखाभावं प्रचक्षते ॥

(சு-ம்.)

அந்தச் சாக்ஷித்தன்மைவடிவ கனவடிவத்தன்மையினை இலெளகிக ஜனங்களும் தார்க்கிகர்களும் துக்கத்தின் அபாவமென்று கூறுகின்றனர்.

(வி-ம்.)

எந்த வேதாந்தங்களில் சாக்ஷித்தன்மையால் சொல்லப்பட்ட பிரஞ்ஞானகனத்தன்மை யிருக்கின்றதோ, அதனையே சாஸ்திரசம்ஸ்காரமின்றிய இலெளகிகஜனங்களும் சாஸ்திரிகளாகிய தார்க்கிகராதி வைசேஷிகர்முதலியோரும் துக்காபாவ மென்கிறார்கள்.

(அ-கை.)

இவ்வாறு ஏன் கூறுகின்றார்களெனக் கூறுகின்றனர்:—

यावद्दुःखवृत्तिविलोपनात् ॥

(சு-ம்.)

எவ்வளவு துக்கவிருத்திகளுண்டோ அவைகள் ஒடுங்குதலால்.

(வி-ம்.)

எவ்வளவு துக்கவிருத்திகளுண்டோ அவையாவும் சுழுத்தியில் ஒடுங்குதலால் என்பது பொருள். (எக)

௱௧. சுலோகம் ௧௨௧௩-ல் கூறிய சுருதியிலுள்ள சேதோமுகசப்தத்தின் அர்த்தமும், சுழுத்தியினின்று விழித்தற்குக் காரணமும்.

[௧௨௧௪] अज्ञानविंबिता चित्स्यान्मुखमानंदभोजने ।
भुक्तं ब्रह्मसुखं त्यक्त्वा बहिर्यात्यथ कर्मणा ॥ ७२ ॥

(அ-கை.)

முன் சுலோகம் ௧௨௧௩-ல் உதகரிக்கப்பட்ட சுருதிவாக்கியத்திலுள்ள சேதோமுகசப்தத்தின் அர்த்தத்தினைக் கூறுகின்றார்:—

आनंदभोजने मुखं अज्ञानविंबिता चित् स्यात् ॥

(சு-ம்.)

ஆநந்தத்தின் போஜனத்தில் அஞ்ஞானத்தில் பிரதிபிம்பித்த சேதனம் முகமாகின்றது.

(வி-ம்.)

ஆநந்தத்தின் போஜனத்தில் அதாவது சுழுத்தியிலுள்ள பிரஹ்மாநந்தத்தினைப் புசித்தலில் அஞ்ஞானத்தின் விருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியமே முகம் அதாவது சாதனமாகின்றது.

(அ-கை.)

அப்படியானால் சுழுத்தியில் ஆநந்தமயவடிவ ஜீவனால் எப்போது பிரஹ்மசுகம் அநுபவிக்கப்படுகின்றதோ, அப்போது அந்தப் பிரஹ்மசுகத்தினை விட்டுப் பின் வெளித்துக்கத்தினைக் கிரகித்தலாகிய ஜாக்கிரத்தை நோக்கி ஏன் செல்லுகின்றானெனக் கூறுகின்றார்:—

अथ भुक्तं ब्रह्मसुखं त्यक्त्वा कर्मणा बहिः याति ॥

(சு-ம்.)

பின் புசிக்கப்பட்ட பிரஹ்மசுகத்தினைவிட்டுக் கர்மத்தினால் வெளியில் செல்லுகின்றது.

(வி-ம்.)

புண்ணியபாபவடிவ பாசத்தினால் கட்டுப்பட்டிருத்தலால் அக்கர்ம பாசத்தினால் பிரேரிக்கப்பட்ட ஜீவன் சாக்ஷாத்கரிக்கப்பட்ட பிரஹ்மாநந்தத்தினையும் விட்டுப் பின் வெளியில் செல்லுகின்றான் அதாவது ஜாக்கிர முதலியவற்றை யடைகின்றான் * கஉ. என்பது பொருள். (எஉ)

௲உ. சுழுத்தியினின்றும் விழித்தலில் அபிப்பிராயத்தோடுகூடிய கைவல்ய சுருதிவாக்கியத்தின் அர்த்தத்தினைப் படித்தல்.

[கஉக௫] कर्म जन्मांतरेऽभूद्यत्तद्योगाद्बुध्यते पुनः ।
इति कैवल्यशाखायां कर्मजो बोध ईरितः ॥ ७३ ॥

---

*கஉ. கிரகத்திலுள்ள தாயின் மடியினின்றும் எழுந்த பாலகன் வெளியிற் சென்று, பிறபாலகர்களோடு விளையாடுகின்றான். எப்போது பிறபாலகர்கள் விளையாட்டினின்றும் நீங்குகின்றார்களோ, அப்போது தான் சிரமத்தை யுணர்ந்தவனாய்த் திரும்பி, தாயின்மடியில் உட்கார்ந்து வீட்டின் சுகத்தை அநுபவித்துச் சிரமத்தைப் போக்குகிறான். மறுபடியும் அந்நிய குழந்தைகள் அழைக்கின் அப்போது வெளியிற் செல்லுகிறான். அதுபோலச் சுழுத்திவடிவ கிரகத்திலுள்ள அஞ்ஞான மென்னும் காரணசரீரமாகிய தாயின் விக்ஷேபசக்தியம்சமாகிய மடியினின்றும் எழுந்த சிதாபாஸனோடுகூடிய அந்தக்கரணமாகிய பாலகன் ஜாக்கிர அல்லது சொப்பனவடிவ வெளியிடத்திற் சென்று கிரியையின்பொருட்டுப் பிராரப்தகர்மவடிவ பிறபாலகர்களோடு வியவகாரவடிவ இரமித்தலைச் செய்கின்றான். எப்போது ஜாக்கிர சொப்பனங்களின் போகத்தைத்தரும் கர்மத்தின் உபரதி யுண்டாகுமோ, அப்போது ஜாக்கிரசொப்பனங்களின் வியாபாரத்தாற்றோன்றிய விக்ஷேபவடிவ சிரமத்தினை அறிகின்றவனாய், அஞ்ஞானவடிவ தாயின் மடியில் நிலைத்து (ஒடுங்கி)ச் சுழுத்திவடிவ வீட்டின் சம்பந்தியாகிய சொரூபவடிவ பிரஹ்மாநந்தத்தினை அநுபவித்து ஜாக்கிர சொப்பனங்களின் வியாபாரத்தாற்றோன்றிய சிரமத்தினைப் போக்குகின்றான். பின் எப்போது போகத்தைத்தரும் கர்மவடிவ அந்நிய சிறுவர்கள் அழை(பிரேரி)க்கின்றார்களோ, அப்போது ஜாக்கிர சொப்பனவடிவ வெளிப்பிரதேசத்திற்குச் செல்லுகின்றான்.

(அ-கை.)

கர்மத்தினால் விழிப்புமுதலியன வுண்டாகின்றன வென்பது எதனால் அறியப்படுகின்றதென்றாசங்கித்து, "पुनश्च जन्मांतरकर्मयोगात्स एव जीवः स्वपिति प्रबुद्धः மறுபடியும் ஜன்மாந்தரத்தினது கர்மத்தின் யோகத்தால் அதே சுழுத்தியடைந்த ஜீவன் சொப்பனத்தை அல்லது ஜாக்கிரத்தை அடைகின்றான்." என்னும் கைவல்யசுருதியின் வாக்கியத்தினால் அறியப்படுகின்றதென்று கொள்ளுகின்றவராய் ஆசாரியர் அக்கைவல்யசுருதியின் வாக்கியத்தை அர்த்தத்தினால் படிக்கின்றவராய் அதன் அபிப்பிராயத்தைக் கூறுகின்றார்:—

"यत् जन्मांतरे कर्म अभूत् तद्योगात् पुनः बुध्यते" इति कैवल्यशाखायां कर्मजः बोधः ईरितः ॥

(சு-ம்.)

"எந்தக் கர்மம் ஜன்மாந்தரத்தில் இருந்ததோ அதன் யோகமாகிய சேர்க்கையால் மறுபடியும் விழிக்கின்றான்." என்னும் கைவல்யசாகையில் கர்மத்தாற்றோன்றியதாக ஜாக்கிரம் சொல்லப்பட்டிருக்கின்றது. (எங)

௬௫. சுழுத்தியில் அநுபவிக்கப்பட்ட பிரஹ்மாநந்தத்தில் இலிங்கம் (குறி).

[௪உ௧௫] किंचित्कालं प्रबुद्धस्य ब्रह्मानंदस्य वासना ।
अनुगच्छेद्यतस्तूष्णीमास्ते निर्विषयः सुखी ॥ ७४ ॥

(அ-கை.)

சுழுத்தியில் பிரஹ்மாநந்தத்தின் அநுபவ முண்டாகின்றதென்பதன்கண் இலிங்கமாகிய காரணமெதுவோ அதனைக் கூறுகின்றார்:—

प्रबुद्धस्य किंचित् कालं ब्रह्मानंदस्य वासना अनुगच्छेत् ॥

(சு-ம்.)

ஜாக்கிரமடைந்த புருஷனுக்குச் சிறிதுகாலபரியந்தம் பிரஹ்மாநந்தத்தின் வாசனை தொடர்கின்றது.

(வி-ம்.)

ஜாக்கிரத்தினை யடைந்த புருஷனுக்கும் சொற்பகாலபரியந்தம் சுழுத்தியில் அநுபவிக்கப்பட்ட பிரஹ்மாநந்தத்தின் வாசனை பின்னிருப்பதாகின்றது.

(அ-கை.)

வாசனை பின்னிருப்பதாகின்றதென்பது எதனால் அறியப்படுகின்றதெனக் கூறுகின்றார்:—

यतः निर्विषयः सुखी तूष्णीं आस्ते ॥

(சு-ம்.)

எதனால் விஷயமில்லாத புருஷனும் சுகியாய்ச் சும்மா விருக்கின்றானோ.

(வி-ம்.)

எக்காரணத்தால் ஜாக்கிரத்தின் ஆதியில் விஷயமின்றிய புருஷனும் சுகியாய் உதாசீனனாய் (சும்மா) இருக்கின்றானோ, அதனால் அறியப்படுகின்றது என்பது பொருள். (எச)

௯௭. அநுபவிக்கப்பட்ட பிரஹ்மாநந்தத்தினை மறத்தலிற் காரணம்.

[௧௨௧௭] कर्मभिः प्रेरितः पश्चान्नानादुःखानि भावयन् ।
शनैर्विस्मरति ब्रह्मानंदमेषोऽखिलो जनः ॥ ७५ ॥

(அ-கை.)

அப்படியானால் பின் எப்போதும் சும்மாவிருத்தல் ஏன் உண்டாக வில்லையெனக் கூறுகின்றார்:—

कर्मभिः प्रेरितः एषः अखिलः जनः पश्चात् नानादुःखानि भावयन् शनैः ब्रह्मानंदं विस्मरति ॥

(சு-ம்.)

கர்மங்களால் பிரேரிக்கப்பட்ட இவ்வெல்லா ஜனங்களும் பின் நாநா விதமான துக்கங்களைப் பாவிக்கின்றவர்களாய்ச் சிறிதுகாலம் பிரஹ்மாநந்தத்தினை மறக்கின்றார்கள்.

(வி-ம்.)

முன் ௧௨௧௫-வது சுலோகத்திற் கூறிய கர்மங்களால் பிரேரணையை யடைந்த சகலப்பிராணிகளும் பின் வெகுவிதமான துக்கங்களை ஸ்மரிக்கின்றவர்களாய்ச் சிறிதுகாலம் அநுபவித்த பிரஹ்மாநந்தத்தினை மறக்கின்றார்கள். (எரு)

௯௮. பிரஹ்மாநந்தத்தில் விவாதம் தகுதியன் றென்பதில் காரணம்.

[௧௨௧௮] प्रागूर्ध्वमपि निद्रायाः पक्षपातो दिने दिने ।
ब्रह्मानंदे नृणां तेन प्राज्ञोऽस्मिन्विवदेत कः ॥ ७६ ॥

(அ-கை.)

இவ்வாறு சொல்லும் காரணத்தினாலும் சுழுத்தியில் பிரஹ்மாநந்தம் இருக்கிறதென்பதில் விவாதஞ்செய்தல் தகுதியன் றென்று கூறுகின்றார்:—

दिने दिने नृणां निद्रायाः प्राक् ऊर्ध्वे अपि ब्रह्मानंदे पक्षपातः । तेन अस्मिन् कः प्राज्ञः विवदेत ॥

(சு-ம்.)

தினந்தோறும் நரர்களுக்கு நித்திரைக்கு முன்னும் பின்னும் பிரஹ்மாநந்தத்தில் பக்ஷபாத மென்னும் சிநேக முண்டு. அதனல் இதில் எந்தப் பண்டிதன் விவாதஞ்செய்வன் ?

(வி-ம்.)

நாள்தோறும் மனிதர்களுக்குத் தூக்கத்திற்கு முன்னும் அதாவது நித்திரையின் ஆரம்பத்திலும், பின்னும் அதாவது நித்திரையின் முடிவிலும் பிரஹ்மாநந்தத்தில் சிநேக முண்டு. எதனல் நித்திரையின் ஆதியில் மிருதுவான படுக்கைமுதலியவற்றைச் சம்பாதிக்கின்றார்களோ, நித்திரையின் முடிவில் அந்தநித்திரையின் சுகத்தை விடுதற்குச் சக்தியில்லாதவர்களாய்ச் சும்மாவிருக்கின்றார்களோ, அக்காரணத்தால் இவ்வாநந்தத்தில் எந்தப் புத்திமான் விவாதஞ் செய்வான்? ஒருவனும் செய்யான் என்பது பொருள். (எகூ)

உ. சும்மாவிருக்கும் ஸ்திதியில் பிரஹ்மாநந்தம் விளங்குதலால் குருசேவைமுதலிய சாதனங்கள் வியர்த்தமாகாமையும், வாசனாநந்த விஷயாநந்தங்களைச் சொல்லுதலால் ஆநந்தம் மூவகையா மாறும் கஉகசு-கஉநு0.

க. சும்மாவிருக்கும் ஸ்திதியில் பிரஹ்மாநந்தம் தோற்றுதலால் குருசேவை முதலியன வியர்த்தமா மென்னும் சங்கை.

[கஉகசு] ननु तूष्णींस्थितौ ब्रह्मानंदश्चेद्भाति लौकिकाः ।
अलसाश्चरितार्थाः स्युः शास्त्रेण गुरुणात्र किम् ॥ ७७ ॥

(அ-கை.)

வாதி மூலத்தில் பூர்வபக்ஷம் செய்கின்றான்:—

ननु तूष्णींस्थितौ ब्रह्मानंदः भाति चेत् । लौकिकाः अलसाः चरितार्थाः स्युः । अत्र शास्त्रेण गुरुणा किम् ॥

(சு-ம்.)

அப்படியானல் எப்போது சும்மாவிருக்கும் நிலையில் பிரஹ்மாநந்தம் தோற்றுகின்றதோ, அப்போது இலௌகிகர்களும் சோம்பலுடையோரும் கிருதார்த்தராகுவர். ஆதலால் இங்குச் சாஸ்திரத்தினும் குருவினும் என்ன பிரயோஜனம் ?

(வி-ம்.)

குருவின் சேவைமுதலியவற்றால் அடையத்தக்க பிரஹ்மாநந்தாநுபவம் சும்மாவிருக்கும் ஸ்திதிமாத்திரத்தால் அடையத்தக்கதாகவே குருசேவைமுதலியவற்றை முன்னிட்ட சிரவணாதிசாதனங்கள் வீணாகும் என்பது பொருள். (எஎ)

உ. சுலோகம் ௧௨௧௧-ல் கூறிய சங்கையின் சமாதானம்.

[௧௨௨௦] वाढं ब्रह्मेति विद्युश्चेत्कृतार्थास्तावतैव ते ।
गुरुशास्त्रे विनात्यंतगंभीरं ब्रह्म वेत्ति कः ॥ ७८ ॥

(அ-கை.)

"இது பிரஹ்மாநந்தம்" என்று அறிதலால் கிருதகிருத்தியத்தன்மை யுண்டாகவே செய்கின்றது. ஆனால் "அதுவே இப்பிரஹ்மாநந்தம்" என்று அறிதல் குருசேவைமுதலியனவின்றிச் சம்பவியாது என்று சித்தாந்தி கூறுகின்றார்:—

"ब्रह्म" इति विद्युः चेत् । तावता एव ते कृतार्थाः । वाढं । अत्यंतगंभीरं ब्रह्म गुरुशास्त्रे विना कः वेत्ति ॥

(சு-ம்.)

"பிரஹ்ம மிருக்கின்றது அதாவது அது பிரஹ்மாநந்தம்" என்று அறியின், அப்போது அவ்வளவினாலேயே அந்த இலௌகிகஜனங்கள் * ௧௩. கிருதார்த்தராகுவர் என்று நீ கூறுதல் சத்தியம். ஆனால் அத்தியந்த கம்பீர(மிக ஆழ)மான குருசாஸ்திரமின்றி யார் அறிவர்?

* ௧௩. எப்படிச் சாமானியமாக அந்நியமான கல்லினைப்போல அநுபவிக்கப்பட்ட சிந்தாமணியினாலும், புதைக்கப்பட்ட பொன்னிதியினாலும் விரும்பியபொருள் கிடைக்க மாட்டாதோ, ஆனால் எப்போது "இது சிந்தாமணி" "இது பொன்னிதி" என்று விசேஷமாக அறிகின்றானோ, அப்போது விரும்பிய பொருளின் அடைவுண்டாகின்றதோ, அதுபோலச் சுழுத்தியில் சாமானியமாக விஷயசுகத்தைப்போல அநுபவிக்கப்பட்ட பிரஹ்மாநந்தத்தினால் சகல கர்த்தவ்வியவடிவ அநர்த்தத்தின் நிவிருத்திவடிவ புருஷார்த்தத்தின் அடைவு உண்டாகிறதில்லை; அநர்த்தத்திற்குக் காரணமான அஞ்ஞானமிருத்தலால் ஆனால் எப்பொழுது "இச்சுழுத்தியிலுள்ள ஆநந்தம் நித்தியமும் நிரதிசயமுமாகிய எனது நிஜவடிவப் பிரஹ்மமாம்" என்று விசேஷமாக அறிகின்றானோ, அப்பொழுது அஞ்ஞானத்தின் நிவிருத்திவாயிலாகக் கர்த்தவ்வியவடிவ அநர்த்தநிவிருத்தியாகிய புருஷார்த்தத்தின் அடைவுண்டாகின்றது என்பது தாற்பரியம்.

(வி-ம்.)

அத்தியந்தகம்பீர மென்பது மனவாக்குகளுக் கெட்டாமையாம். சர்வஞ்ஞரும் சர்வாந்தரமும் சர்வாத்மாவுமாகிய பிரஹ்மத்தினைக் 'குருசாஸ்திரங்களை விட்டு வேறு எவ்வுபாயத்தினாலாவது எப்புருஷன் அறிவான்? ஒருவனும் அறியான் என்பது பொருள். (எஅ)

௬. சித்தாந்தியின் வார்த்தையினால் பிரஹ்மாநந்தத்தினை யறிகின்ற வாதியின் கிருதார்த்தத்தன்மையின்மையின் சங்கையும், அத்தன்மையோனது விருத்தாந்தத்தினால் சமாதானமும்.

[௧௨௨௧] जानाम्यहं त्वदुक्त्याद्य कुतो मे न कृतार्थता ।
शृण्वत्र त्वादृशो वृत्तं प्राज्ञंमन्यस्य कस्यचित् ॥ ७९ ॥

(அ-கை.)

அப்படியானால் சித்தாந்தியாரே! தமது வாக்கியத்தினாலேயே பிரஹ்மாநந்தத்தினை அறிகின்றவனாகிய எனக்குக் கிருதார்த்தத்தன்மை காணப்படவில்லையே யென்றுசங்கிக்கச், சித்தாந்தி இவ்வாசங்கையின் அநுவாதபூர்வகமான பரிகாசத்தோடு உத்தரம் கூறுகின்றார்:—

"अहं त्वदुक्त्या अद्य जानामि । मे कृतार्थता कुतः न"। अत्र त्वादृशः प्राज्ञंमन्यस्य कस्यचित् वृत्तं शृणु ॥

(சு-ம்.)

சித்தாந்தியாரே! "நான் தங்கள் வார்த்தையால் இது பிரஹ்மாநந்தமென்று அறிகின்றவனாயினும், எனக்குக் கிருதார்த்தத்தன்மை ஏன் உண்டாகவில்லை." யென்று கூறின், அப்போது வாதியே! இங்கு உன்னைப்போன்ற பண்டிதாபிமானியான அதாவது பண்டிதனல்லாதவனாய்த் தன்னைப் பண்டிதனென்று கொள்ளும் ஓர் புருஷனது விருத்தாந்தத்தைக் கேள். (எசு)

[௧௨௨௨] चतुर्वेदविदे देयमिति शृण्वन्नवोचत ।
वेदाश्चत्वार इत्येवं वेद्मि मे दीयतां धनम् ॥ ८० ॥

(அ-கை.)

அதே விருத்தாந்தத்தினைக் காட்டுகின்றார்:—

"चतुर्वेदविदे देयं" इति शृण्वन् अवोचत "वेदाः चत्वारः इति एवं वेद्मि मे धनं दीयताम्" ॥

(சு-ம்.)

"நான்கு வேதங்களை யுணர்ந்தவனுக்கு இத்தனம் கொடுக்கத்தக்க தாம்." என்னும் வார்த்தையினைக் கேட்டு ஒருவன் "வேதம் நான்கு என்று யான் அறிவேன் எனக்குத் தனம் கொடுக்க." என்று சொன்னான்.

(வி-ம்.)

ஓர் தனவான் "நான்கு வேதங்களையும் உணர்ந்த ஒரு புருஷனுக்கு இவ்வெகுதனம் கொடுக்கத்தக்கதாம்." என்னும் வார்த்தையினைச் சொன்னான். அதனை ஓர் புருஷன் கேட்டு "வேதம் நான்கு என்று யான் தமது வார்த்தையினாலேயே அறிகின்றேன். ஆதலால் எனக்குத் தனம் கொடுக்க." என்று சொல்லுகிறான். அவனைப்போல வாதியாகிய நீயு மிருக்கின்றாய் என்பது பொருள். (அ௦)

ச. சுலோகம் கஉஉஉ-ல் கூறிய விருத்தாந்தத்தினது சம்பூர்ணமின்மையின் சங்கையும், சமத்தன்மையினால் சமாதானமும்.

[கஉஉ௩] संख्यामेवैष जानाति न तु वेदानशेषतः ।
यदि तर्हि त्वमप्येवं नाशेषं ब्रह्म वेत्सि हि ॥ ८१ ॥

(அ-கை.)

அப்படியானால் "வேதம் நான்கு" என்று எந்தப் புருஷன் அறிகின்றானோ, அவன் வேதத்திலுள்ள எண்ணினை அறிகின்றான்; வேதங்களின் சொரூபத்தை யறிகிறதில்லை யென்று வாதி பூர்வபக்ஷமாக்குகின்றான்:—

एषः संख्यां एव जानाति । अशेषतः वेदान् तु न । यदि ॥

(சு-ம்.)

கஉஉஉ-ல் கூறிய இப்புருஷன் வேதத்தின் சங்கையினையே அறிகின்றான். முழுவதுமாக வேதங்களை யறிகிறதில்லை யென்று கூறின்.

(அ-கை.)

சித்தாந்தி சமத்தன்மையினால் சமாதானம் செய்கின்றார்:—

तर्हि एवं त्वं अपि अशेषं ब्रह्म न वेत्सि हि ॥

(சு-ம்.)

அப்போது இவ்வாறு நீயும் சம்பூரணமாகப் பிரஹ்மத்தை யறிய வில்லை.

(வி-ம்.)

இப்படித் தன்னை நான்கு வேதங்களையு முணர்ந்தவனாக மதிக்கும் புருஷனைப்போல வாதியே! நீயும் சம்பூரணமாகப் பிரஹ்மத்தை யறியவில்லை.()

ரு. தனது சம்பூரணமின்றிய ஞானித்தன்மையில் வாதியின் சங்கை.

[கஉஉசு] अखंडैकरसानंदे मायातत्कार्यवर्जिते ।
अशेषत्वसशेषत्ववार्ताऽवसर एव कः ॥ ८२ ॥

(அ-கை.)

அப்படியானால் எப்படிச் சங்கைக்கு வேறான வேதத்தினது சொரூபத்தின் பேதமிருக்கின்றதோ, அதுபோலச் சுவகதாதி பேதமின்றிய ஆநந்த வடிவப்பிரஹ்மத்தில் அஞ்ஞாத (அறியப்படாத) அம்ச மில்லாமையால் சம்பூரணமில்லா ஞானித்தன்மையின் தூஷணம்யாது என்னிடத்துச் சொல்லப்பட்டதோ அது பொருந்தாது என்று வாதி பூர்வபக்ஷம் செய்கின்றான்:—

मायातत्कार्यवर्जिते अखण्डैकरसानन्दे अशेषत्वसशेषत्ववार्तावसरः एव कः ॥

(சு-ம்.)

மாயையும் அதன் காரியமு மில்லாத அகண்டைகரஸ ஆநந்தத்தில் அசம்பூரணத்துவ சம்பூரணத்துவங்களின் வார்த்தையின் அவசரமே எது? எதுவு மில்லை. (அஉ)

சு. விகற்பத்தினால் சமாதானம்.

[கஉஉ௬] शब्दानेव पठस्याहो तेषामर्थं च पश्यसि ।
शब्दपाठेऽर्थबोधस्ते संपाद्यत्वेन शिष्यते ॥ ८३ ॥

(அ-கை.)

பிரஹ்மத்தின் ஞானத்திலும் அசம்பூர்ணத்தன்மைமுதலியவற்றினைக் காட்டுதற்கு "நான் பிரஹ்மத்தினை அறிகின்றேன்" என்று சொல்லுகின்ற வாதியினை நோக்கிச் சித்தாந்தி விகற்பித்துக் கேட்கின்றான்:—

शब्दान् एव पठसि । आहो तेषां च अर्थं पश्यसि ॥

(சு-ம்)

வாதியே! நீ சப்தங்களையே படிக்கின்றாயா? அல்லது அவற்றின் அர்த்தத்தினையும் காண்கின்றாயா?

(வி-ம்.)

வாதியே! நீ அகண்டைகரஸ அத்விதீய சச்சிதானந்தவடிவம் என்றல் முதலிய சத்தங்களையே படிக்கின்றாயா? அல்லது அச்சப்தங்களின் சுவகதாதி பேதமின்றியதன்மைமுதலியவடிவ அர்த்தத்தினையும் காண்கின்றாயா? என்பது விகற்பத்தின் பொருள்.

(அ-கை.)

முதற்பக்ஷத்தில் பிரஹ்மஞானத்தினது சம்பூரணமின்மையினைக் காட்டுகின்றார்:—

शब्दपाठे ते अर्थबोधः संपाद्यत्वेन शिष्यते ॥

(சு-ம்.)

சப்தபாட முளதாகவே உனக்கு அர்த்தஞானம் சம்பாதிக்கத்தக்க தன்மையாக மிஞ்சுகின்றது. (அங)

[கஉஉரு] अर्थे व्याकरणाद्बुद्धे साक्षात्कारोऽवशिष्यते ।
स्यात्कृतार्थत्वधीर्यावत्तावद्गुरुमुपास्व भोः ॥ ८४ ॥

(அ-கை.)

இரண்டாவது பக்ஷத்திலும் அந்த அசம்பூர்ணத்தன்மையினைக் காட்டுகின்றார்:—

व्याकरणात् अर्थे बुद्धे साक्षात्कारः अवशिष्यते ॥

(சு-ம்.)

வியாகரணத்தினால் அர்த்தத்தினை அறிந்தகாலத்தும் சாக்ஷாத்காரம் மிஞ்சியிருக்கின்றது.

(வி-ம்.)

மூலத்திலுள்ள "வியாகரணத்தினால்" என்னும் பதம் வேதமுதலியவற்றிற்கும் உபலக்ஷணமாம். ஆதலால் வியாகரணமுதலிய சாஸ்திரங்களால் பரோக்ஷஞானம் சம்பாதிக்கப்படினும் சம்சயமுதலியவற்றின் நீக்கத்தால் அபரோக்ஷமாக்கல் மிஞ்சியிருக்கின்றது.

(அ-கை.)

அப்போது ஞானத்தின் சம்பூர்ணத்தன்மை எப்போதுண்டாகின்றதென்றாசங்கித்து, அந்த ஞானத்தினது அவதியினைக் காட்டுகின்றார்:—

यावत् कृतार्थत्वधीः स्यात् । तावत् भोः गुरुं उपास्व ॥

(சு-ம்.)

கிருதார்த்தத்தன்மையின் புத்தியுண்டாகும்வரையில் வாதியே! குருவினை உபாசனை செய்.

(வி-ம்.)

எப்போது "நான் கிருதார்த்தன் கர்த்தவ்வியப் பிராப்தவ்வியங்களின் அபாவமுடையவனு யிருக்கின்றேன்." என்று கிருதார்த்தத்தன்மையின் புத்தி யுண்டாகின்றதோ, அப்போது ஞானத்தின் சம்பூர்ணத்தன்மை அறியத்தக்கதாம் என்பது பொருள். (அச)

எ. வாசனுநந்தத்தின் சொரூபம்.

[௧௨௨எ] आस्तामेतद्यत्र यत्र सुखं स्याद्विषयैर्विना ।
तत्र सर्वत्र विद्धयेतां ब्रह्मानंदस्य वासनाम् ॥ ८५ ॥

(அ-கை.)

இப்படி ௧௨௧௬-௧௨௨௬ சுலோகம் வரையிலும் பிரசங்கத்தினுல் கிடைத்த அர்த்தத்தினை முடித்து, எடுத்துக்கொண்ட ௧௨௧அ-வது சுலோகத்திற் கூறிய வாசனுநந்தத்தினையே அநுசரிக்கின்றார்:—

एतत् आस्तां । यत्र यत्र विषयैः विना सुखं स्यात् तत्र सर्वत्र ब्रह्मानंदस्य वासनां विद्धयेताम् ॥

(சு-ம்.)

இப்பிரசங்கத்தால் கிடைத்த பொருள் இருக்குக. எங்கெங்கு விஷயங்களின்றிச் சுக முண்டாகின்றதோ, அங்கு எவ்விடத்தும் இப்பிரஹ்மாநந்தத்தினது வாசனையை அறிக.

(வி-ம்.)

எங்குகெங்கு அதாவது எந்தச் சும்மாவிருத்தல்முதலிய காலங்களில் விஷயாநுபவமின்றிச் சுக முண்டாகின்றதோ, அங்கங்குச் சுகம் விஷயஜந்நியமாதலின்மையாலும், சூக்ஷ்ம அகங்காரத்தினுல் மறைக்கப்பட்டதாயிருத்தலாலும் வாசனுநந்தத்தன்மை அறியத்தக்கதா மென்பது பொருள். (அரு)

அ. விஷயாநந்தத்தின் சொரூபம்.

[௧௨௨அ] विषयेष्वपि लब्धेषु तदिच्छोपरमे सति ।
अंतर्मुखमनोवृत्तावानंदः प्रतिबिंबति ॥ ८६ ॥

(அ-கை.)

இப்படிப் பிரஹ்மாநந்தத்தினையும் வாசனுநந்தத்தினையும் காட்டி, இப்போது ஆநந்தத்தினது மூவகைத்தன்மையினை நியமஞ்செய்தற்பொருட்டு

"ஆத்மாவிற் கெதிர்முகமாகிய புத்திவிருத்தியில் சொரூபவடிவ ஆநந்தம் பிரதிபிம்பத்தினை அடைகின்றது." என்னும் ௧௨௮௬-ல் கூறிய விஷயாநந்தத்தினையே மறுபடியும் அநுவதிக்கின்றார்:—

विषयेषु लब्धेषु अपि तदिच्छोपरमे सति अंतर्मुखमनोवृत्तौ आनंदः प्रतिबिंबति ॥

(சு-ம்.)

விஷயங்கள் கிடைக்க, அவற்றின் இச்சை நீங்கியதனால் அந்தர்முகமாகிய மனதின் விருத்தியில் ஆநந்தம் பிரதிபிம்பத்தை யடைகின்றது.

(வி-ம்.)

எப்போது மாலைமுதலிய விஷயங்களின் இலாபத்தால் அந்தந்த விஷயத்தின் இச்சை நீங்குகின்றதோ, அப்போது மனது அந்தர்முகமாகவே அம்மனதில் எந்த ஆத்மசொரூபத்தின் ஆநந்தம் பிரதிபிம்பத்தினை யடைகின்றதோ அது *௧௯. விஷயாநந்தமாமென்பதுபொருள். ()

௧. ஆநந்தத்தினது மூவகைத்தன்மையின் பிரதிஞ்ஞை.

[௧௨௨௧] ब्रह्मानंदो वासना च प्रतिबिंब इति त्रयम् ।
अंतरेण जगत्यस्मिन्नानंदो नास्ति कश्चन ॥ ८७ ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

ब्रह्मानंदः वासना च प्रतिबिंबः इति त्रयं अंतरेण अस्मिन् जगति कश्चन आनंदः न अस्ति ॥

(சு-ம்.)

பிரஹ்மாநந்தம், வாசனாநந்தம், பிரதிபிம்பாநந்தமென்னும் விஷயாநந்தம் இம்மூன்று ஆநந்தங்களல்லாது இந்த ஜகத்தில் ஒரு ஆநந்தமுமில்லை.

(வி-ம்.)

௧௧௭௫-௧௨௨௮ சுலோகங்களில் கூறியவிதமாகச் சொப்பிரகாசத்தன்மையால் சுழுத்தியில் விளங்குகின்ற பிரஹ்மாநந்தமும், ௧௨௨௭ வது

* ௧௯. எப்போது விரும்பிய விஷயத்தின் அடைவுண்டாகின்றதோ, அப்போது இச்சைவடிவசஞ்சலமான இராஜஸவிருத்தியின் நிவிருத்தி யுண்டாகின்றது. கிடைத்த விஷயத்தின் ஞானவடிவ சாத்துவீகவிருத்தியினால் விஷயவுபகிதசேதனத்தின் சொரூபவடிவ ஆநந்தத்தின் விளக்க முண்டாகின்றது. இந்த விருத்தி விஷயவடிவ நிமித்தத்தா லுண்டாகின்றது. ஆதலால் அந்தவிருத்தி விஷயாநந்த மெனப்படும்.

அல்லது விரும்பிய விஷயத்தின் ஞானத்தால் இச்சையாகிய விருத்தி நீங்குகின்றது. அந்த இச்சையின் நிவிருத்திவடிவ நிமித்தத்தினாலேயே வேறு அந்தர்முக விருத்தி உண்டாகின்றது. அதனால் அந்தக்கரணவுபகித ஆநந்தத்தின் பான முண்டாகின்றது. இவ்வந்தர்முகவிருத்தி அல்லது அந்தவிருத்தியில் உண்டாகும் சொரூபாநந்தத்தின் பிரதிபிம்பம் விஷயாநந்த மெனப்படும். அதனையே பிரதிபிம்பாநந்த மென்றும், லேசாநந்த மென்றும் சொல்லுவர். இதனால் பிரஹ்மாமுதல் எறும்புபரியந்த சர்வஜீவர்களும் நிர்வாகஞ்செய்கின்றனர்.

சுலோகத்தில் கூறிய சும்மாவிருக்கும் நிலையில் விஷயாநுபவமின்றித் தோற்றுகின்ற வாசனானந்தமும், ௧௨௨அ-வது சுலோகத்திற் கூறிய விரும்பிய விஷயத்தின் இலாபத்தால் அந்தர்முகமாகிய மனதில் பிரதிபிம்பத்தினையடைந்த விஷயாநந்தமுமாகிய இம்மூன்று ஆநந்தங்களுக்கும் வேறாக ஒரு ஆநந்தமும் இவ்வுலகி லில்லை.

அப்படியானால்,

(௧) "பிரஹ்மாநந்தம், வித்தியாநந்தம், விஷயாநந்தம் என்னும் பேதத்தால் ஆநந்தம் மூவகைத்தாம்." என்று ௧௧௫-வது சுலோகத்திற் சொல்லிய கிரமத்தால் ஆநந்தத்தின் மூவகைத்தன்மை முன் சொல்லப்பட்டது. இப்பொழுதோ "பிரஹ்மாநந்தம், வாசனானந்தம், விஷயாநந்தம் என்னும் மூன்றற்கும் வேறாக ஒரு ஆநந்தமும் இவ்வுலகி லில்லை" என்று இந்த ௧௨௨௯-வது சுலோகத்தில் அவற்றிற்கு வேறாக ஆநந்தத்தின் மூவகைத்தன்மை சொல்லப்படுகின்றது. இதனால் முன்னுக்குப்பின் விரோதமிருக்கின்றது.

(௨-௩) அல்லது "அப்பியாசத்தின் யோகத்தால் எவ்வளவு எவ்வளவு அகங்காரம் மறக்கின்றதோ அவ்வளவு அவ்வளவு ஸூக்ஷ்மதிருஷ்டியுடைய புருஷர்களுக்கு நிஜாநந்தம் அநுமிக்கப்படுகிறது." என்னும் ௧௨௪௦-வது சுலோகத்திலும், "அத்தன்மைய புருஷன் உதாசீனகாலத்திலும் ஆநந்தத்தின் வாசனையை உபேக்ஷித்துத் தற்பரனாய் முக்கியாநந்தத்தினையே பாவனை செய்கின்றான்" என்னும் ௧௨௬௫-வது சுலோகத்திலும் முன் ௧௧௨௭-௧௨௨௧ சுலோகங்களில் சொல்லப்பட்ட மூவகைத்தன்மைவடிவ இரண்டு விதத்திற்கும் வேறாக நிஜாநந்தமும் முக்கியாநந்தமும் சொல்லப்படுகின்றன.

(௪) அதுபோலப் பிரஹ்மாநந்தக்கிரந்தத்தின் ஆத்மாநந்த மென்னும் இரண்டாவது அத்தியாயத்தில் "மந்தபுத்தியுடைய ஜிஞ்ஞாசுவுக்கோ ஆத்மாநந்தத்தினால் போதிக்கவேண்டும்" என்னும் பன்னிரண்டாவது பிரகரணத்திலுள்ள நான்காவது சுலோகத்தில் ஆநந்தமானது அவற்றினும் வேறாகச் சொல்லப்பட்டிருக்கின்றது,

(௫) "முற்கூறிய யோகாநந்தம் யாதோ" என்னும் பதின்மூன்றுவது பிரகரணத்திலுள்ள முதற்சுலோகத்தில் யோகாநந்தமும் ஒன்று காணப்படுகின்றது.

(௬) "பிரஹ்மாநந்த மென்னும் கிரந்தத்தில் மூன்றாவது அத்தியாயம் கூறுவது யாதோ அது அத்வைதாநந்தமேயாம்." என்னும் பதின்மூன்றுவது பிரகரணத்திலுள்ள ௧௪௭௧-வது சுலோகத்தில் அத்வைதாநந்தம் வேறாகக் காணப்படுகின்றது.

ஆதலால் "இம்மூன்றற்கும் வேறாக ஒரு ஆநந்தமும் இவ்வுலகி லில்லை" என்று ௧௨௨௯-வது சுலோகத்திற் கூறியது விரோதத்தை யடைகின்றது என்று இவ்வாறு சங்கை செய்யின், அது பொருந்தாது.

ஏனெனின்,

(௧) வித்தியாநந்தம் விஷயாநந்தத்தினைப்போல அந்தக்கரணவிருத்தியின் பேதமா யிருத்தலாலும், "விஷயாநந்தத்தினைப்போல வித்தியாநந்தம் புத்தியின் விருத்திவடிவமாம்." என்று மேல் பதினொன்காவது பிரகரணத்தி லுள்ள ௨-வது சுலோகத்தில் வித்தியாநந்தத்தைப் புத்திவிருத்திவடிவமாகக் கூறி, அதனை விஷயாநந்தத்தில் அடங்கியதாகக் கூறுவதற்கு விரும்பியவராயிருத்தலாலும் விஷயாநந்தத்தினைவிட வேறாக வித்தியாநந்த மில்லை.

நிஜாநந்தம், முக்கியாநந்தம், ஆத்மாநந்தம், யோகாநந்தம், அத்வைதாநந்தம் என்பவையோ பிரஹ்மாநந்தத்தைவிட வேறாகாமையின் ௧௨௨௯ வது சுலோகத்திற் கூறிய எமது வார்த்தை விரோதத்தை யடையலாகாது. அஃதாமாறு காட்டுதும்:—

(௨) "எவ்வளவு எவ்வளவு அகங்காரத்தின் மறதி யுண்டாகின்றதோ," என்று உதகரிக்கப்பட்ட ௧௨௪0-வது சுலோகத்தில் யோகவடிவ உபாயத்தினால் அறியத்தக்கதாயிருத்தலின் யோகாநந்தத்தன்மையால் சொல்லக் கருதிய நிஜாநந்தம் யாதோ அதனையே, "எங்குத் துவைதம் தோற்றவில்லையோ நித்திரையு மில்லையோ அங்குள்ள சுகம் யாதோ அது பிரஹ்மாநந்தமாம் என்று ஸ்ரீ-கிருஷ்ணபகவான் அர்ச்சுனனை நோக்கிச் சொன்னார்." என்னும் ௧௨௪௨-வது சுலோகத்திலேயே பிரஹ்மாநந்தத்தன்மையினைச் சொல்லுதலால் நிஜாநந்தம் பிரஹ்மாநந்தத்தினைவிட வேறன்று.

(௩) அதுபோல முக்கியாநந்தமும் பிரஹ்மாநந்தமேயாம். ஏனெனின், "அவ்வாறாகவே விஷயாநந்தம் வாசனாநந்தம் என்னும் இரண்டாநந்தங்களையும் உண்டாக்குவதாய்ப் பிரஹ்மாநந்தம் சுவயம்பிரகாசவடிவமாய் நிலைத்திருக்கின்றது" என்னும் ௧௨௩0-வது சுலோகத்தில் ஜநகமா யிருத்தலால் அமுக்கியவடிவமான விஷயாநந்த வாசனாநந்தங்கள் எவையோ அவற்றின் ஜநகமாயிருத்தலால் சொல்லப்பட்டபிரஹ்மாநந்தத்தினையே "அவ்வாறுபுருஷன் உதாசீனகாலத்திலும்" என்று உதகரிக்கப்பட்ட ௧௨௬௩-வது சுலோகத்தில் ஆநந்தத்தின் வாசனையை உபேக்ஷித்துத் தற்பரனாய் முக்கியாநந்தத்தினையே பாவனை செய்கின்றான் என்று முக்கியாநந்தத்தன்மையினைக் கூறுதலால்.

(௪-௫-௬) ஆத்மாநந்த அத்வைதாநந்தங்கட்குள்ள பிரஹ்மாநந்தத்தன்மை எதுவோ அது "முன் கூறிய யோகாநந்தம் யாதோ அதே

ஆத்மாநந்தமென்றுகொள்ளவேண்டியது” என்னும்பிரஹ்மாநந்தத்தினது மூன்றுவது அத்தியாயத்தின் ஆதியாகிய முதல்சுலோகத்தில் முதல் யோகாநந்த மென்னும் அத்தியாயத்தில் யோகாநந்தத்தன்மையால் சொல்லக் கருதிய பிரஹ்மாநந்தத்தினையே யோகாநந்த சப்தத்தினுல் அநுவாத பூர்வக ஆத்மாநந்தத்தன்மையினைக் கூறி, “ துவைதத்தோடு கூடிய இவ்வாத்மாநந்தத்திற்குப் பிரஹ்மத்தன்மை எப்படி யுண்டாகும்?என்று கூறின்.” என்பதாகப் பதின்மூன்றுவது பிரகரணத்திலுள்ள இரண்டாவது சுலோகத்திலேயே பிரசினபூர்வகமாக “ஆகாசமுதல் சரீரபரியந்தம்” என்னும் பதின் மூன்றுவது பிரகரணத்துள்ள இரண்டாவது முதலிய சுலோகங்களால் அத்விதீய ஆத்மானந்தத்திற்குப் பிரஹ்மத்துவம் கூறப்படுதலால் ஆத்மாநந்த அத்வைதாநந்தங்கட்குப் பிரஹ்மாநந்தத்துவத்தினை அறிய வேண்டும். ஆதலால் “ பிரஹ்மானந்தம், வாசனுநந்தம், விஷயாநந்தம் என்னும் மூன்றற்கும் வேருக இவ்வுலகத்து ஒரு ஆநந்தமு மில்லை” என்று இந்த கஉஉகூ-வது சுலோகத்தில் சொல்லப்பட்ட ஆநந்தத்தின் மூவகைத் தன்மை நிலைத்தது.

அப்படியானுல் அப்போது “ அப்படியானுல் இவ்வாறு வாசனுநந்தத்தினும் பிரஹ்மாநந்தத்தினும் வேருன நிஜாநந்தத்தினை யோகி அறிக. இங்கு மூடனது கதி யாது?” என்னும் கஉ-வது பிரகரணத்துள்ள முதல் சுலோகத்தில் நிஜாநந்தத்தினைப் பிரஹ்மாநந்த வாசனுநந்தங்களினும் வேறுபடுத்துச் சொல்லியது யாதோ அது பொருந்தாது என்று சங்கை செய்யத்தக்கதன்று; ஏனெனின், ஒரே பிரஹ்மாநந்தத்திற்கு ஜகத்தின் காரணத்தன்மைவடிவ உபாதியோடுகூடியதன்மை உபாதியின்றியதன்மைகளால் பேதம் கூறுதல் சம்பவித்தலால். அஃதாமாறு காட்டுகின்றுர்:—

(க) பிரஹ்மாநந்தத்தினை நிரூபிக்கும் அவசரத்தில் “ आनंदाद्धयेवेमानि भूतानि जायन्ते ஆநந்தத்தினின்றே இப்பூதங்கள் உண்டாகின்றன.” என்றல் முதலிய வாக்கியங்களால் ஜகத்தின் காரணத்தன்மையினைக் காட்டுதலால் பிரஹ்மாநந்தத்திற்கு மாயையோடுகூடியதன்மை அறியப்படுகின்றது; மாயாரகிதத்திற்கு ஜகத்தின் காரணத்தன்மை சம்பவியாமையால்.

(உ) நிஜாநந்தத்தினை நிரூபிக்கும் காலத்திலும் “எவ்வளவு எவ்வளவு அகங்காரத்தின் விஸ்மரண முண்டாகின்றதோ” என்னும் கஉ-சுo-வது சுலோகமுதலியவற்றின் வாக்கியத்தால் காரணத்தோடுகூடிய அகங்காரத்தின் ஒடுக்கம் சொல்லப்படுதலால் நிஜாநந்தத்திற்கு மாயையின்றியதன்மையிருக்கின்றது.

இவ்வாறு கூறியவை யாவும் தோஷமின்றியனவாம். (அஎ)

கo. வாசனாநந்த விஷயாநந்தங்களை உண்டுபண்ணும் சொப்பிரகாச பிரஹ்மாநந்தத்தினைக் கூறுதல்.

[கஉ௲o] तथा च विषयानंदो वासनानंद इत्यमू ।
आनंदौ जनयन्नास्ते ब्रह्मानंदः स्वयंप्रभः ॥ ८८ ॥

(அ-கை.)

அப்படியானால் இவ்வத்தியாயத்தில் பிரஹ்மாநந்தத்தின் விவேசனத்தையே சொல்லக் கருதியவராகலின் மற்ற வாசனாநந்த விஷயாநந்தங்களிரண்டனையும் சொல்லுதல் பிரகிருதத்தோடு பொருந்ாததா மென்றாசங்கித்து, அவ்விரண்டு ஆநந்தங்களும் பிரஹ்மாநந்தத்தினற் றோன்றியனவாயிருத்தலின் அந்தப் பிரஹ்மாநந்தத்தினை அறிவித்தலில் *கரு. உபயோகமுள்ளனவா யிருத்தலின் அவற்றினைப் பிரதிபாதித்தல் பிரகிருதத்தோடு பொருந்தாததன்று என்னும் அபிப்பிராயத்தினால் கூறுகின்றார்:—

तथा च स्वयंप्रभः विषयानंदः वासनानंदः इति अमू आनन्दौ जनयन् आस्ते ब्रह्मानंदः ॥

(சு-ம்.)

அவ்வாறாகவே சுவயம்பிரகாச ஆநந்தமானது விஷயாநந்தம் வாசனாநந்தம் என்னும் இவ்விரண்டு ஆநந்தங்களையும் உண்டாக்குவதா யிருக்கின்றது. அது பிரஹ்மாநந்தமாம்.

(வி-ம்.)

அவ்வாறு இத்தன்மைய ஆநந்தத்தின் மூவகைத்தன்மை யுள்ளதாகவே யாந்தச் சுவயம்பிரகாசவடிவ ஆநந்தம் விஷயாநந்த வாசனாநந்தங்களையுண்டாக்குகின்றதோ அந்தப்பிரஹ்மாநந்தம் அறியத்தக்கதாம் என்பது பொருள். (அஅ)

௯. வாசனாநந்த நிஜாநந்தங்களைச் சொல்லுதல் பூர்வகமான க்ஷணிகசமாதியின் சம்பவத்தால் பிரஹ்மாநந்தத்தின்து நிச்சயத்தின் சம்பவம் கஉ௲க-கஉ௭௬.

க. ஜாக்கிரத்தில் வாசனாநந்தத்தின் சித்தி பூர்வகமான அப்பியாசத்தினால் தோன்றும் நிஜாநந்தத்தினைக் கூறுதல் கஉ௲க-கஉ௬o.

* கரு. எப்படி நெருப்பிற்றோன்றிய தூமத்தின் ஞானம் நெருப்பின் ஞானத்தில் உபயோகமுள்ளதோ, ஜலத்திற்றோன்றிய குளிர்ச்சியின் ஞானம் ஜலத்தின் ஞானத்தில் உபயோகியோ, அதுபோலப் பிரஹ்மாநந்தத்தினின்றும் விருத்திவடிவ உபாதிவாயிலாகத்தோன்றிய விஷயாநந்த வாசனாநந்தங்களின் ஞானம் பிரஹ்மாநந்தத்தினது ஞானத்தில் உபயோகியாம். ஆதலால் இதன் நிரூபணம் பிரசங்கத்தோடு சேராததன்று.

க. விருத்தத்தின் அநுவாதபூர்வகமான மேல்கிரந்தத்தின் குறிப்பு.

[கஉஙக] श्रुतियुक्त्यनुभूतिभ्यः स्वप्रकाशचिदात्मके ।
ब्रह्मानंदे सुप्तिकाले सिद्धे सत्यन्यदा शृणु ॥ ८९ ॥

(அ-கை.)

சொல்லிய அர்த்தத்தினை மறுபடியும் சொல்லுதல்பூர்வகமான மேல் கிரந்தத்தினை வெளிப்படுத்துகின்றார்:—

श्रुतियुक्त्यनुभूतिभ्यः सुप्तिकाले स्वप्रकाशचिदात्मके ब्रह्मानंदे सिद्धे सति अन्यदा शृणु ॥

(சு-ம்.)

சுருதியுக்தி யநுபவங்களால் சுழுத்திகாலத்துச் சொப்பிரகாச சிதாத்மாவடிவ பிரஹ்மாநந்தம் சித்திக்கவே அந்நியகாலத்தில் கேள்.

(வி-ம்.)

"சுழுத்திகாலத்தில் சகலப்பிரபஞ்சமும் விலயமாகவே தமசினால் மறைபட்ட சுகரூபத்தை யடைகின்றான்" (இது கஉ00-வது சுலோகத்திற் கூறிய சுருதியாம்.) இவைமுதலிய உதாகரிக்கப்பட்ட சுருதிகளாலும், "நான் சுகமாய்த் தூங்கினேன்" என்றல் முதலிய ஸ்மரணம் வேறுவிதமாய்ச் சம்பவியாமைமுதலிய யுக்திகளால் அர்த்தாபத்திப்பிரமாணத்தால் கற்பிக்கப்பட்ட சுழுத்தியின் அநுபவத்தால் சுழுத்திகாலத்தில் சொப்பிரகாச பிரஹ்மாநந்தம் சாதிக்கப்பட்டது. இப்போது இந்த கஉஙக-வது சுலோகத்திற்குப் பின் அந்நியகாலமாகிய ஜாக்கிராவஸ்தையிலும் பிரஹ்மாநந்தத்தை அறிதலின் எவ்வுபாயம் சொல்லப்படுமோ அதனைக் கேள் என்பது பொருள். (அகூ)

உ. நிமித்தத்தோடுகூடிய ஜீவனுக்கு இரண்டவஸ்தையின் அடைவு.

[கஉஙஉ] य आनंदमयः सुप्तौ स विज्ञानमयात्मताम् ।
गत्वा स्वप्नं प्रबोधं वा प्राप्नोति स्थानभेदतः ॥ ९० ॥

(அ-கை)

பிரதிஞ்ஞைசெய்யப்பட்ட பிரஹ்மாநந்தத்தினை யறியும் உபாயத்தினையே காட்டுதற்கு அதன் உபோற்காதத்தன்மையால் நிமித்தத்தோடு ஜீவனுக்கு ஜாக்கிரசொப்பனமாகிய இரண்டவஸ்தைகளையும் காட்டுகின்றார்:—

सुप्तौ यः आनंदमयः सः विज्ञानमयात्मतां गत्वा स्थानभेदतः स्वप्नं वा प्रबोधं प्राप्नोति ॥

(சு-ம்.)

சுழுத்தியில் எந்த ஆநந்தமய னிருக்கின்றானே அவன் விஞ்ஞானமய வடிவத்தன்மையை யடைந்து ஸ்தானபேதத்தால் சொப்பனத்தையாவது ஜாக்கிரத்தையாவது அடைகின்றான்.

(வி-ம்.)

சுழுத்திகாலத்தில் "ஒடுங்கிய அவஸ்தையினையுடையவன் ஆநந்தமய சப்தத்தினால் சொல்லப்படுகின்றான்." என்னும் கஉ0கூ-வது சுலோகத்திற் கூறிய ஆநந்தமயன் விஞ்ஞானமய சப்தத்தின் வாச்சியமான புத்தியுபாதியுடையவனா யிருத்தலால் விஞ்ஞானமயத்தன்மையினை யடைந்து ஸ்தானபேதத்தால் சொல்லப்படும் ஸ்தானவிசேஷத்தின் சேர்க்கையால் சொப்பனத்தையாவது ஜாக்கிரத்தையாவது கர்மாநுசாரமாக அடைகின்றான். ()

கூ. ஜாக்கிரதைமுதலிய அவஸ்தைகளில் உபயோகமுள்ள ஸ்தானமும் நேத்திரத்தில் ஜாக்கிரணசப்தத்தின் அர்த்தமும்.

[கஉகூகூ] नेत्रे जागरणं कंठे स्वप्नः सुप्तिर्हृदंबुजे ।
आपादमस्तकं देहं व्याप्य जागर्ति चेतनः ॥ ९१ ॥

(அ-கை.)

இப்போது ஜாக்கிரமுதலிய அவஸ்தைகளின் உபயோகமான ஸ்தானங்களைக் காட்டுகின்றார்:—

नेत्रे जागरणं । कण्ठे स्वप्नः । हृदंबुजे सुप्तिः ॥

(சு-ம்.)

நேத்திரஸ்தானத்தில் ஜாக்கிரமும் கண்டஸ்தானத்தில் சொப்பனமும் இருதயகமலஸ்தானத்தில் சுழுத்தியு முண்டாகின்றன.

(அ-கை.)

நேத்திரசப்தத்திற்கு முழு தேகத்தினது உபலக்ஷணத்தன்மையின் அபிப்பிராயமாக நேத்திரத்தில் ஜாக்கிர முண்டாகின்றது என்னும் அம்சத்தின் அதாவது பதசமுகத்தின் அர்த்தத்தினைக் கூறுகின்றார்:—

आपादमस्तकं देहं व्याप्य चेतनः जागर्ति ॥

(சு-ம்.)

பாதமுதல் மஸ்தகபரியந்தம் தேகத்தினை வியாபித்துச் சேதனமாகிய ஜீவன் விழிக்கின்றான். (கூக)

௪. திருஷ்டாந்தத்தினலும் பிரமாணத்தினலும் ஜீவனல் தேகத்தில் வியா பித்தலின் அர்த்தம்.

[க௨௲௪] देहतादात्म्यमापन्नस्तप्तायःपिंडवत्ततः ।
अहं मनुष्य इत्येवं निश्चित्यैवावतिष्ठते ॥ ९२ ॥

(அ-கை.)

"தேகத்தை வியாபித்துச் சேதனன் விழிக்கின்றான்" என்னும் பதத்தால் சொல்லக் கருதிய பொருளைத் திருஷ்டாந்தத்தினைக் காட்டுதலால் விளக்குகின்றார்:—

तप्तायःपिण्डवत् देहतादात्म्यं आपन्नः ॥

(சு-ம்.)

காய்ச்சிய இருப்புத்துண்டினைப்போல தேகத்தோடு தாதாத்மியத்தினை அடைந்திருக்கின்றது.

(அ-கை.)

தேகத்தோடு தாதாத்மியத்தினை அடைந்திருக்கின்றதென்பதில் பிரமாணத்தினைக் கூறுகின்றார்:—

ततः "अहं मनुष्यः" इति एव निश्चित्य एव अवातिष्ठते ॥

(சு-ம்.)

அதனல் "நான் மனிதன்" என்றிவ்வாறு நிச்சயித்தே நிலைக்கின்றான்.

(வி-ம்.)

எதனல் மனிதத்தன்மைமுதலிய ஜாதியுடைய தேகத்தோடு தாதாத்மியமாகிய அபேத அத்தியாசம் எதுவோ அதனை அடைந்திருக்கின்றானோ, அதனல் "நான் மனிதன்" என்றிவ்வாறு நிச்சயித்தே அதாவது சம்சயாதிகளின்றிய ஞானத்தினல் கிரகணஞ்செய்தே ஜீவன் நிலைத்திருக்கின்றான்.()

ரு. தேகத்தில் தாதாத்மிய அபிமானத்தின் காரணமும் அவஸ்தையும்.

[க௨௲ரு] उदासीनः सुखी दुःखीत्यवस्थात्रयमेत्यसौ ।
सुखदुःखे कर्मकार्ये त्वौदासीन्यं स्वभावतः ॥ ९३ ॥

(அ-கை.)

தேகத்தோடு தாதாத்மிய அபிமானவடிவ ஏதுவினையுடைய வேறு அவஸ்தையினைக் காட்டுகின்றார்:—

"उदासीनः सुखी दुःखी" इति अवस्थात्रयं असौ एति ॥

(சு-ம்.)

"நான் உதாசினன், சுகி, துக்கி." என்னும் மூன்று அவஸ்தையினை இச்சீவன் அடைகின்றான்.

(அ-கை.)

அம்மூன்று அவஸ்தைகளில் சுகித்தன்மை துக்கித்தன்மை வடிவ இரண்டு அவஸ்தைகளும் கர்மஜந்நியமா மென்பதனை அறிதற்பொருட்டு விசேஷவடிவ சுகதுக்கத்திற்கு அக்கர்மவடிவ ஏதுவுடைமையைக் காட்டு கின்றார்:—

सुखदुःखे कर्मकार्ये औदासीन्यं तु स्वभावतः ॥

(சு-ம்.)

சுகமும் துக்கமுமாகிய இரண்டும் புண்ணியபாபவடிவ கர்மத்தின் காரியங்களாம். உதாசினத்தன்மையோ சுபாவமாக உண்டாகின்றது(கூ௩)

கூ. சுகதுக்கங்களின் இருவகைத்தன்மையும் உதாசினத்தன்மையின் சமயமும்.

[கஉ௩கூ] बाह्यभोगान्मनोराज्यात्सुखदुःखे द्विधा मते ।
सुखदुःखांतरालेषु भवेत्तूष्णीमवस्थितिः ॥ ९४ ॥

(அ-கை.)

அச்சுகதுக்கங்களினது நிமித்தத்தின் பேதத்தால் இருவகைத்தன்மையினைக் கூறுகின்றார்:—

बाह्यभोगात् मनोराज्यात् सुखदुःखे द्विधा मते ॥

(சு-ம்.)

வெளிப்போகத்தினாலும் மனோராஜ்யத்தினாலும் சுகதுக்கங்கள் இரண்டிரண்டு வகையாகக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

(அ-கை.)

அப்போது உதாசினத்தன்மை எப்போது உண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

सुखदुःखांतरालेषु तूष्णीं अवस्थितिः भवेत् ॥

(சு-ம்.)

சுகதுக்கங்களின் இடை(சந்தி)களில் சும்மாவிருக்கும்நிலையாகிய *௧௬. உதாசீனத்தன்மை யுண்டாகின்றது.

(வி-ம்.)

சுகதுக்கங்களின் இடைகளில் என்னும் சப்தத்தின் பன்மை எதுவோ அது வியக்தியாகிய ஆகாரங்களின் பேதத்தினைச் சொல்லும் கருத்தினுலாம். (௯௪)

எ. ஜாக்கிரத்தில் நிஜாநந்தம் விளங்குதல்.

[௧௨௩௭] न कापि चिंता मेऽस्त्यद्य सुखमास इति ब्रुवन् ।
औदासीन्ये निजानंदभावं वक्त्यखिलो जनः ॥ ९५ ॥

(அ-கை.)

எந்தப் பிரயோஜனத்தின்பொருட்டு ஜாக்கிரதமுதலியவற்றினைச் சொல்ல ஆரம்பித்தனரோ, அந்தப் பிரயோஜனத்தை இப்போது காட்டுகின்றார்:—

अखिलः जनः "अद्य मे का अपि चिंता न अस्ति । सुखं आस" इति ब्रुवन् औदासीन्ये निजानंदभावं वक्ति ॥

(சு-ம்.)

சகல ஜனங்களும் "இப்போது எனக்கு ஒரு சிந்தனையு மில்லை. ஆதலால் நான் சுகமா யிருக்கின்றேன்" என்று சொல்லுகின்றவர்களாய் உதாசீனத்தன்மையில் நிஜாநந்தத்தின் தன்மையினைக் கூறுகின்றார்கள்.

(வி-ம்.)

சகல ஜனங்களும் "இப்போது எனக்குக் கிரகமுதலியவற்றை விஷயம் செய்யும் ஒரு சிந்தனையு மில்லை. ஆதலால் நான் சுகமுண்டாகும்வண்ணம் நிலைத்திருக்கின்றேன்." என்று சொல்லுகின்றவர்களாய் உதாசீனத்தன்மையின் காலத்தில் சொரூபாநந்தத்தின் விளக்கத்தினைக் கூறுகின்

* ௧௬. சுழுத்தியினின்றும் எழுந்தகாலத்துச் சுகதுக்கங்களின் அபாவ மிருக்கின்றது. ஆதலால் அது உதாசீனதைையாம். இவ்வாறே ஜாக்கிரத்தில் எங்கெங்குச் சுகதுக்கங்களிரண்டின் இன்மை யிருக்கின்றதோ, அந்தந்தக் காலம் உதாசீனதை யெனப்படும். எங்குச் சுக மிருக்கிறதோ அங்கு ராக மிருக்கின்றது. எங்குத் துக்க மிருக்கின்றதோ, அங்குத் துவேஷ முண்டாகின்றது. ஆதலால் சுக துக்கவடிவ நிமித்தத்தினுற் ேறான்றிய இராகத்துவேஷங்களின் இன்மைக்காலத்தினை உதாசீனத்தன்மை யென்றும், தூஷ்ணீம்ஸ்திதி யென்றும், சும்மாவிருக்கும்நிலை யென்றும் கூறுவர்.

ருர்கள். ஆதலால் ஜாக்கிராவஸ்தையிலும் நிஜாநந்தத்தின் விளக்க மிருக்கின்றது. இவ்வாறு அறியத்தக்கதா மென்பது அபிப்பிராயமாம். (கூ௫)

அ. ஜாக்கிரத்திலுள்ள உதாசீனகாலத்தில் அநுபவிக்கப்பட்ட ஆநந்தம் வாசனாநந்தமாதல்.

[௧௨௩அ] अहमसीत्यहंकारसामान्याच्छादितत्त्वतः ।
निजानंदो न मुख्योऽयं किंत्वसौ तस्य वासना ॥ ९६ ॥

(அ-கை.)

அப்படியானால் உதாசீனதசையில் விளங்குகின்ற சுகம் நிஜாநந்தவடிவமாகவே, அந்த நிஜாநந்தம் பிரஹ்மாநந்தவடிவமாதலால் முன் ௧௨௨௭-வது சுலோகத்திற் கூறிய வாசனாநந்தவடிவத்தன்மை யுண்டாகாது என்று ஆசங்கித்து, உதாசீனதசையில் தோற்றுகின்ற சுகம் அகங்காரத்தின் சூக்ஷ்மத் தன்மையால் மறைக்கப்பட்டதா யிருத்தலின் பிரஹ்மானந்தவடிவமாகாது என்று பரிகரிக்கின்றார்:—

" अहं अस्मि " इति अहंकारसामान्याच्छादितत्वतः अयं निजानंदः मुख्यः न ॥

(சு-ம்.)

" நானிருக்கிறேன் " என்று அகங்காரத்தின் சமான(சூக்ஷ்ம)த்தன்மையினால் மறைக்கப்பட்டிருத்தலால் இது முக்கிய நிஜாநந்த மன்று.

(வி-ம்.)

" நான் தேவதத்தன் " என்றல் முதலிய விசேஷ மின்றி " நானிருக்கிறேன் " என்னும் வடிவுடைய அகங்காரத்தின் சாமானியத்தால் மறைக்கப்பட்டிருத்தலால் இது உதாசீனகாலத்தில் தோற்றுகின்ற முக்கிய நிஜாநந்தம் அன்று என்பது பொருள்.

(அ-கை.)

அப்போது அந்த உதாசீனதசையில் தோற்றுகின்ற சுகம் எந்த வடிவத்தோடு கூடியதா மென்னுமிடத்துக் கூறுகின்றார்:—

किंतु असौ तस्य वासना ॥

(சு-ம்.)

ஆனால் இது அந்நிஜாநந்தத்தின் வாசனையாம். (கூகூ)

க. முக்கியாநந்தத்தினும் வேறான வாசனாநந்தத்தின் இருப்பில் திருஷ்டாந்தம்.

[௧௨௩௧] नीरपूरितभांडस्य बाह्ये शैत्यं न तज्जलम् ।
किंतु नीरगुणस्तेन नीरसत्तानुमीयते ॥ ९७ ॥

(அ-கை.)

முக்கியாநந்தத்தினும் வேறான வாசனாநந்தத்தினது இருப்பில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

नीरपूरितभाण्डस्य बाह्ये शैत्यं तत् जलं न ॥

(சு-ம்)

ஜலநிரம்பிய கடத்தினது வெளியிலுள்ள குளிர்ச்சி எதுவோ அது ஜல மன்று.

(வி-ம்.)

ஜலத்தினால் நிரம்பிய குடத்தினது வெளிப்பாகத்தின் ஸ்பரிசத்தினால் தோற்றுகின்ற குளிர்ச்சியானது முதலில் ஜலமாகாது; பொடியினைத்திரட்டுதற்குக் காரணத்தன்மைவடிவ திரவத்தன்மை தோற்றாமையால்.

(அ-கை.)

அப்போது அந்தச் சீதளத்தன்மை யாது எனக் கூறுகின்றார் :—

किंतु नीरगुणः ॥

(சு-ம்.)

ஆனால் அது நீரின் குணமாம்.

(அ-கை.)

சீதளத்தன்மை ஜலத்தின் குணமா மென்பது எதனால் அறியப்படுகின்றதெனக் கூறுகின்றார் :—

तेन नीरसत्ता अनुमीयते ॥

(சு-ம்.)

அச்சீதளத்தன்மைவடிவகாரணத்தால் ஜலத்தின் சத்தை அதாவது ஜலம் குடத்திலிருத்தல் அநுமானத்தினால் அறியப்படுகின்றது.

(வி-ம்.)

விவாதத்திற்கு விஷயமான குடத்தில் தோற்றும் குளிர்ச்சி ஜலத்தினாலாகத்தக்கதாம்; குளிர்ச்சி இருத்தலால்; ஜலத்தின்கண் தோற்றும் குளிர்ச்சியினைப்போல என்பது அனுமானம். (கூஎ)

௧௦. வாசனாநந்தம் முக்கியாநந்தத்தின் அநுமானஞ் செய்விப்பதாதல்.

[௧௨௪௦] यावद्यावदहंकारो विस्मृतोऽभ्यासयोगतः ।
तावत्तावत्सूक्ष्मदृष्टेर्निजानंदोऽनुमीयते ॥ ९८ ॥

(அ-கை.)

இப்படிச் சீதளத்தன்மை ஜலத்தின் அநுமானத்திற்குக் காரணமாகுக. அதனால் பிரகிருதவாசனாநந்தத்தில் என்ன வந்தது என்றாசங்கித்து, அச்சீதளத்தன்மையினைப்போல வாசனாநந்தத்திற்கும் முக்கியாநந்தத்தின் அநுமானத்திற்குக் காரணமாந்தன்மை கிடைத்ததென்று கூறுகின்றார் :—

अभ्यासयोगतः यावत् यावत् अहंकारः विस्मृतः । तावत् तावत् सूक्ष्मदृष्टेः निजानंदः अनुमीयते ॥

(சு-ம்.)

அப்பியாசயோகத்தால் எவ்வளவு எவ்வளவு அகங்காரம் மறக்கப்படுகின்றதோ அவ்வளவு அவ்வளவு சூக்ஷ்மதிருஷ்டியுடைய புருஷனுக்கு நிஜாநந்தத்தின் அநுமான முண்டாகின்றது.

(வி-ம்.)

அப்பியாசயோகத்தால் அதாவது "ज्ञानमात्मनि महति नियच्छेत्तद्यच्छेच्छांत आत्मनि ஞானத்தினை மகதாத்மாவில் ஒடுக்குக. அம்மகதாத்மாவைச் சாந்தாத்மாவில் ஒடுக்குக." என்னும் * கஎ. சுருதியினால் சொல்லப்பட்ட நிரோதசமாதியின் அப்பியாசயோகத்தால் எவ்வளவுக்கெவ்வளவு அகம் (யான்) எனல் முதலிய விருத்திகளின் வசத்தால் சித்தத்தின் சூக்ஷ்மத்தன்மை யுண்டாகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு நிஜாநந்தத்தின் அபிவியக்தி (வெளிப்படுதல்) உண்டாகின்றது. இவ்வாறு அநுமானஞ் செய்யப்படுகின்றது. இங்கு இஃது அநுமானமாம் :—அகங்காரத்தினது சுருக்கத்தின் விலக்ஷணத்தன்மையோடு கூடிய க்ஷணங்களில் இரண்டாவதுமுதலிய க்ஷணவடிவ பக்ஷம் எதுவோ, அது முன் க்ஷணத்தினும் அதிக நிஜாநந்தத்தினது ஆவிர்பாவம் (வெளிப்படுதலை) உடையதா யிருக்கின்றது ; அகங்காரத்தினது சுருக்கத்தின் விலக்ஷணத்தன்மையோடுகூடிய காலவடிவமா

---

* கஎ. இச்சுருதிக்கு இது பொருள் :—

(க) பிராஞ்ஞனாகிய பண்டிதபுருஷன் வாக்கிந்திரியத்தினால் உபலக்ஷிக்கப்பட்ட சகல இந்திரியங்களையும் அவ்வவ்விஷயங்களோடு மனதில் ஒடுக்குக.

(உ) பிரபஞ்சத்திற்கு காரணமாகிய அம்மனத்தினையும் "யான்" என்னும் வடிவினதாகிய புத்திவடிவ ஞானாத்மாவில் ஒடுக்குக.

(ங) அந்த "யான்" என்னும் வடிவ புத்தியாகிய ஞானத்தினை மகதாத்மாவாகிய மகத்தத்துவத்தில் ஒடுக்குக.

(ச) அம்மகத்தத்துவத்தினை அவ்வியாகிருதத்தில் ஒடுக்குக,

(ரு) அவ்வியாகிருதத்தினைச் சாந்தாத்மாவில் அதாவது சர்வபிரபஞ்சங்களின் உபசாந்தியினையுடைய நிர்விசேஷ பரப்பிரஹ்மத்தில் ஒடுக்குக.

யிருத்தலால்; அகங்காரத்தின் சுருக்கத்தோடுகூடிய முதல்க்ஷணத்தினைப் போல. (௯அ)

௧௧. புத்தியினது சூக்ஷ்மத்தன்மையின் அவதி (சாக்ஷாத்காரம்).

[௧௨௪௧] सर्वात्मना विस्मृतः सन्सूक्ष्मतां परमां व्रजेत् ।
अलीनत्वान्न निद्रैषा ततो देहोऽपि नो पतेत् ॥ ९९ ॥

(அ-கை.)

புத்தியினது சூக்ஷ்மத்தன்மையின் அவதி யாது? என்று கேட்கவிரும் பியவிடத்துச் சகல அநாத்மாகாரவிருத்திகளின் நிரோத முண்டாகவே பிரஹ்மாகாரமாகிய அந்தக்கரணத்தில் அகம்பிரத்திய (யானெனும் உணர்ச்சி) வடிவ சாக்ஷாத்காரம் அவதியா மென்று கூறுகின்றார்:—

सर्वात्मना विस्मृतः सन् परमां सूक्ष्मतां व्रजेत् ॥

(சு-ம்.)

முற்றும் மறக்கப்பட்டதாய் அகங்காரம் மிக்க சூக்ஷ்மத்தன்மையினை யடைகின்றது.

(அ-கை.)

அப்போது அவ்வகங்காரத்தின் சூக்ஷ்மத்தன்மை நித்திரையேயாகும் எனக் கூறுகின்றார்:—

अलीनत्वात् एषा निद्रा न ॥

(சு-ம்.)

ஒடுக்கமின்றியதா யிருத்தலின் இது நித்திரை யன்று.

(வி-ம்.)

சகலவிருத்திகளும் ஒடுங்கினும் அந்தக்கரணத்தின் சொரூபம் ஒடுங் காமையால் இவ்வகங்காரத்தின் சூக்ஷ்மத்தன்மை நித்திரை அன்று. ஏனெனின், "புத்தி அஞ்ஞானமய காரணவடிவமாக நிலைத்தல் சுழுத்தி யெனப் படும்." என்று ஆசாரியர்கள் கூறியிருத்தலால் என்பது பொருள்.

(அ-கை.)

கூறிய அவஸ்தையில் அந்தக்கரணத்தினது சொரூபத்தின் விலய மின்மை யிருக்கின்றது. அதில் இலிங்கமாகிய ஏதுவினைக் கூறுகின்றார்:-

ततः देहः अपि नो पतेत् ॥

(சு-ம்.)

அதனால் தேகமும் விழுகிறதில்லை.

(வி-ம்.)

எங்குச் சுழுத்திமுதலியவற்றில் அகங்காரத்தின் விலய முண்டாகின்றதோ, அங்குத் தேகத்தின் வீழ்தல் அதாவது பூமியில் விழுதல் காணப்படுகின்றது. இங்கோ அவ்வீழ்தல் இல்லாமையின் அகங்காரம் ஒடுங்கவில்லை; ஆனால் மூல அந்தக்கரணவடிவமாக நிலைத்திருக்கின்றது என்று அறியப்படுகின்றது. (௯௯)

௧௨.· பலிதார்த்த(பிரஹ்மாநந்த)த்தினைக் கூறுதல்.

[௧௨௪௨] न द्वैतं भासते नापि निद्रा तत्रास्ति यत्सुखम् ।
स ब्रह्मानंद इत्याह भगवानर्जुनं प्रति ॥ १०० ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

द्वैतं न भासते । निद्रा अपि न । तत्र यत् सुखं अस्ति । सः ब्रह्मानंदः ॥

(சு-ம்.)

எங்குத் துவைதம் தோற்ற மில்லையோ, நித்திரையு மில்லையோ, அங்கு எச்சுக முளதோ அது பிரஹ்மாநந்தமாம்.

(வி-ம்.)

எக்காலத்தில் துவைதமாகிய திரிபுடியின் தோற்ற மில்லையோ, நித்திரையும் வரவில்லையோ, அக்காலத்தில் எச்சுக மிருக்கின்றதோ அது பிரஹ்மாநந்தம் என்பதுபொருள்.

(அ-கை.)

அப்படியானால் "இது பிரஹ்மாநந்தம்" என்று எதனால் அறியப்பட்டதென் றாசங்கித்து, ஸ்ரீகிஷ்ணபரமாத்மாவின் வாக்கியத்தால் அறியப்பட்டது என்று கூறுகின்றார்:—

इति भगवान् अर्जुनं प्रति आह ॥

(சு-ம்.)

இவ்வாறு பகவான் கீதையின் ஆறாவது அத்தியாயத்தில் அர்ச்சுனனை நோக்கிச் சொல்லியிருக்கின்றார். (௧00)

கூ. சுலோகம் கஉசஉல் கூறிய ஆநந்தம் பிரஹ்மாநந்த வடிவமா மென்பதில் கீதாவாக்கியம்.

[கஉசகூ] शनैः शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किंचिदपि चिंतयेत् ॥ १०१ ॥

(அ-கை.)

அங்கு எந்தச் சுலோகங்களால் சொல்லி யிருக்கின்றார் என்று ஆசங்கித்து, அச்சுலோகங்களை அர்த்தக்கிரமத்தினை அநுசரித்துப் படிக்கின்றார்:—

धृतिगृहीतया बुद्ध्या शनैः शनैः उपरमेत् ॥

(சு-ம்.)

தைரியத்தினால் கிரகிக்கப்பட்ட புத்தியினால் மெல்ல மெல்ல உபரதியடைக.

(வி-ம்.)

இங்கு இது பொருளாம்:—தைரியத்தோடு கூடிய சாதனமாகிய புத்தியினால் மெல்ல மெல்ல உபரதியை யடைக அதாவது மனதின் உபரதியைச் செய்க.

(அ-கை.)

எவ்வளவுகாலபரியந்தம் மனதின் உபரதியைச் செய்வது எனக் கூறுகின்றார்:—

मनः आत्मसंस्थं कृत्वा किंचित् अपि न चिंतयेत् ॥

(சு-ம்.)

மனதினை ஆத்மாவில் நிலையுள்ளதாகச் செய்து ஒன்றனையும் சிந்திக்கலாகாது.

(வி-ம்.)

ஆத்மாவின்கண் "ஆத்மாவே இவ்வெல்லாம் அதனின் வேறுயது சிறிதுமில்லை" என்னும் வடிவுடையதாகிய செவ்வையான நிலைப்பை எது அடைந்திருக்கின்றதோ அத்தன்மைய மனம் ஆத்மாவின்கண் நிலைத்ததெனப்படுகின்றது. அவ்வாறு மனதைச் செய்து சிறிதும் அநாத்மவஸ்துவினைச் சிந்திக்கலாகாது. இது யோகத்தின் பரமாவதியாம்.(க0க)

[கஉசச] यतो यतो निश्चरति मनश्चंचलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥ १०२ ॥

(அ-கை.)

இந்த யோகத்தினது பரமாவதியைச் சம்பாதித்தலில் பிரவர்த்தித்த யோகி முதலில் என்ன சாதனஞ்செய்வன் எனக் கூறுகின்றார்:—

चञ्चलं अस्थिरं मनः यतः यतः निश्चरति ततः ततः नियम्य एतत् आत्मनि एव वशं नयेत् ॥

(சு-ம்.)

சஞ்சலமும் ஸ்திரமில்லாததுமாகிய மனம் எந்தெந்த நிமித்தத்தால் செல்லுகின்றதோ, அந்தந்த நிமித்தத்தால் நிரோதித்து இம்மனதினை ஆத்மாவின் கண்ணேயே வசஞ்செய்க.

(வி-ம்.)

சுபாவத்தின் தோஷத்தால் சஞ்சலமும் இதனாலேயே ஸ்திர மில்லாததும் அதாவது ஒருவிஷயத்தில் நியமமில்லாததுமாகிய மனம் எதுவோ அது எப்போது எப்போது எந்தெந்தச் சப்தமுதலிய நிமித்தத்தால் வெளியிற் செல்லுகின்றதோ, அப்போது அப்போது அந்தந்தச் சப்தமுதலியவற்றால் நியமனஞ்செய்து அதாவது அந்தச்சப்தமுதலியவற்றின் மித்தியாத்தன்மைமுதலிய தோஷத்தினைக் காணுதலால் ஆபாஸவடிவமாக வைராக்கியத்தின் பாவனையோடு நிரோதஞ்செய்து இம்மனதை ஆத்மாவின் கண்ணேயே வசஞ்செய்க அதாவது ஆத்மாவின்கண் வசமாகும் யோக்கியதையினைச் சம்பாதிக்க. இப்படி யோகத்தினை அப்பியசிக்கும் புருஷனது மனம் அப்பியாசத்தின் வலியால் ஆத்மாவினிடத்திலேயே மிக்க சாந்தியினை யடைகின்றது. (கOஉ)

[கஉசரு] प्रशांतमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।
उपैति शांतरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ १०३ ॥

(அ-கை.)

மனதின் சாந்தியுண்டாவதனால் என்ன பயனுண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

शांतरजसं प्रशांतमनसं ब्रह्मभूतं अकल्मषं एनं योगिनं उत्तमं सुखं उपैति हि ॥

(சு-ம்.)

எவனுடைய இரஜசு சாந்தமா யிருக்கின்றதோ, மனம் சாந்தமாயிருக்கின்றதோ அத்தன்மைய பிரஹ்மசொரூபமும் கல்மஷமில்லாதவனுமான யோகியினை உத்தமமான சுகம் அடைகின்றது.

(வி-ம்.)

மோகாதிக்கிலேசவடிவ மலம் சாந்த(க்ஷீண)மானவனும், இதனாலேயே மிக்க சாந்தத்தை யடைந்தவனும் அதாவது விக்ஷேபமில்லாத மனதுடையவனும், பிரஹ்மசொரூபமும் அதாவது "பிரஹ்மமே இவ்வெல்லாமும்" என்னும் நிச்சயமுடையவனா யிருத்தலால் ஜீவன்முக்தனும், கல்மஷமில்லாதவனும் அதாவது அதர்மமுதலியவைக ளின்றியவனுமாகிய இந்த யோகிக்கு உத்தமமான அதாவது குறைவுமேன்மைகளோடுகூடியதன்மைமுதலிய தோஷங்களில்லாத சுகம் கிடைக்கின்றது. (௲௦௩)

[௧௨-௪௬] यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।
यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥ १०४ ॥

(அ-கை.)

சுருக்கமாகக் கூறிய அர்த்தத்தினை விரிக்குந்தன்மையதாகிய அதே ஆறுவது அத்தியாயத்தின் சுலோகங்களையே படிக்கின்றார்:—

चित्तं यत्र योगसेवया निरुद्धं उपरमते च यत्र आत्मना आत्मानं पश्यन् आत्मनि एव तुष्यति ॥

(சு-ம்.)

சித்தம் எங்கு யோகத்தின் சேவையினால் நிரோதத்தினை யடைந்ததாய் உபரதியினை யடைகின்றதோ, அங்கு ஆத்மாவினால் ஆத்மாவினைக் காண்கிறதாய் ஆத்மாவிலேயே சந்தோஷிக்கின்றதோ.

(வி-ம்.)

சித்தம் எந்தக் காலத்தில் யோகத்தின் சேவையாகிய அநுஷ்டானத்தினால் சகல விஷயங்களினின்றும் நீக்கப்பட்டதாய் உபராமத்தினை யடைகின்றதோ, அல்லது எந்தக்காலத்தில் சமாதியினால் சுத்தமாகிய அந்தக்கரணமாகிய ஆத்மாவினால் பரமசைதன்னிய ஜோதிசொரூபமாகிய ஆத்மாவினைக் கண்டு அதாவது அநுபவித்து ஆத்மாவிடத்திலேயே சந்தோஷத்தினைப் பஜிக்கின்றதோ அதாவது அடைகின்றதோ; விஷயங்களி லில்லையோ என்பது பொருள். (௲௦௪)

[கஉசஎ] सुखमात्यंतिकं यत्तद्बुद्धिग्राह्यमतींद्रियम् ।
वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥ १०५ ॥

(அ-கை)

இதுவுமது :—

यत्र स्थितः अयं आत्यन्तिकं बुद्धिग्राह्यं अतीन्द्रियं यत् सुखं तत् वेत्ति च तत्त्वतः न एव चलति ॥

(சு-ம்.)

எங்கு ஆத்மாவின்கண் நிலைத்த இந்த யோகி ஆத்யந்திகம் புத்தியினுல் கிரகிக்கப்படுவதும் அதீந்திரியமுமான சுகம் எதுவோ அதனை அறிகின்ருன். ஆத்மாவின்கண் நிலைத்த யோகி தத்துவத்தினின்றும் சலிக்கிறதே யில்லை.

(வி-ம்.)

அல்லது எந்தக்காலத்தில் ஆத்மாவில் நிலைத்த இந்த யோகி ஆத்தியந்திகமும் அதாவது முற்றுமாவதான அநந்தமும், புத்திக்கிராஹ்யமும் அதாவது இந்திரியத்தின் அபேக்ஷையில்லாத புத்தியினுல் கிரகிக்கப்படுவதும், அதீந்திரியமும் அதாவது இந்திரிய விஷயங்களுக்கு வேருன (விஷயத்தினுண்டாகாத) துமான சுகத்தை அறிகின்ருன் அதாவது அநுபவிக்கின்ருன். அல்லது ஆத்மாவில் நிலைத்துள்ள இந்த யோகி தத்துவமாகிய அவ்வாத்மசொரூபத்தினின்றும் சலிக்கிறதில்லை அதாவது நழுவுகிறதில்லை. (கOரு)

[கஉசஅ] यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।
यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥ १०६ ॥

(அ-கை.)

இதுவுமது :—

च यं लब्ध्वा अपरं लाभं ततः अधिकं न मन्यते । यस्मिन् स्थितः गुरुणा अपि दुःखेन न विचाल्यते ॥

(சு-ம்.)

அன்றியும் எந்த ஆத்மாவினை யடைந்து அதனினும் வேருன அதிகலாபத்தைக் கருதுகிறதில்லையோ, எதில் நிலைத்த புருஷன் பெருந்துன்பத்தினுலும் சலிக்கப்படுகிறதில்லையோ.

(வி-ம்.)

அல்லது எந்த ஆத்மாவினை யடைந்து வேறு லாபத்தை அவ் வாத்ம லாபத்தினும் மேலானதாகக் கொள்ளுகிறதில்லையோ, ஏனெனின், "आत्मलाभान्न परं विद्यते ஆத்மலாபத்தைவிட மேலான வேறு லாபம் இல்லை" என்னும் ஸ்மிருதியினுல் அல்லது அவ்வாத்ம தத்வத்தில் நிலைத்துள்ள புருஷன் ஆயுதத்தின் வெட்டுமுதலியவடிவ பெருந்துன்பத்தினுலும் * கஅ. பிரகலாதனைப்போல சலிக்கிறதில்லை.

[கஉசக] तं विद्याद्दुःखसंयोगवियोगं योगसंज्ञितम् ।
स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥ १०७ ॥

(அ-கை.)

இப்போது கஉசங-வது சுலோகத்தினுல் சம்பாதிக்கப்பட்ட யோகத தினைச் சூசிப்பிக்கின்றூர்.

तं दुःखसंयोगवियोगं योगसंज्ञितं विद्यात् ॥

(சு-ம்.)

அக்கூறிய யோகத்தினை துக்கத்தினது சையோகத்தின் வியோகவடிவ யோக மென்னும் பெயரினதாக அறிக.

(வி-ம்.)

"மெல்ல மெல்ல" என்னும் கஉசங-வது சுலோகம் முதல் எத்தனை விசேஷணங்களோடு கூடிய ஆத்மாவின் அவஸ்தாவிசேஷவடிவ யோகம் சொல்லப்பட்டதோ, அதனைத் துக்கசையோகவியோகம் அதாவது துக்கங்களோடு சையோகமுடையதினின்றும் வியோகவடிவமாகிய விபரீதலக்ஷணையினுல் யோக மென்னும் பெயருடையதாகக் காண்க.

(அ-கை.)

இவ்விதயோகத்தின் அநுஷ்டானத்தில் சிறிது கர்த்தவ்யத்தன்மையின் பேதத்தினைக் கூறுகின்றூர் :—

सः योगः निश्चयेन अनिर्विण्णचेतसा योक्तव्यः ॥

---

* கஅ. எப்படி இரணியகசிபு வென்னும் தைத்தியவரசனது புத்திரனுகிய பிரகலாதன் பிதாவினுல் அநேக துக்கங்களை அடைந்தும் தனது நிஷ்டையினின்றும் சலிக்கப்படவில்லையோ, அதுபோல ஆத்மதத்துவத்தில் நிலைத்தலாகிய நிஷ்டையினை அடைந்த புருஷன் அநேக மரணாந்த துக்கங்களினுலும் தனது நிஷ்டையாகிய ஸ்திதியினின்றும் சலிக்கப்படுகிறதில்லை யென்பது பொருள்.

(சு-ம்.)

அந்த யோகம் நிச்சயமாக நிர்வேதமின்றிய சித்தத்தினுல் செய்யத்தக்கதாம்.

(வி-ம்.)

அந்த முற்கூறிய யோகம் நிச்சயமாக யோகாப்பியாசத்தில் வருத்தப்படாத சித்தத்தினுல் அநுஷ்டிக்கத்தக்கதாம். (கOஎ)

[கஉ௫O] युंजन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः ।
सुखेन् ब्रह्मसंस्पर्शमत्यंतं सुखमश्नुते ॥ १०८ ॥

(அ-கை.)

இப்போது கஉசாகூ-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினை முடிக்கின்ருர் :—

विगतकल्मषः योगी सदा आत्मानं एवं युञ्जन् सुखेन ब्रह्मसंस्पर्शं अत्यंतं सुखं अश्नुते ॥

(சு-ம்.)

பாபமொழிந்த யோகியானவன் எப்போதும் ஆத்மாவை இவ்வாறு அநுசந்தானஞ்செய்துகொண்டு சுகமாகப் பிரஹ்மத்தோடு சேர்வையான பரிசமுடையவனுய் அத்தியந்தம் சுகத்தை அடைகின்ருன்.

(வி-ம்.)

யோகவிக்கினங்களான தடைகளாகிய பாபங்களின்றிய யோகியானவன் எப்போதும் ஆத்மாவை இவ்வாறு அதாவது கூறிய விதமாக ஸ்மரணஞ் செய்பவனுய்ப் பிரயாசையின்றிப் பிரஹ்மத்தோடு சேர்வையான பரிசமுடையவனுய் அதாவது பிரஹ்மசொரூபமாய் அத்தியந்தம் அதாவது அழிவில்லாததும் நிரதிசயமுமான சுகத்தை யடைகின்ருன் என்பது பொருள். (கOஅ)

கச. வருத்தமின்றிச் செய்த யோகாப்பியாசம் பலபரியந்த மாதலில் நிருஷ்டாந்தம்.

उत्सेक उदधेर्यद्वत्कुशाग्रेणैकबिंदुना ।
मनसो निग्रहस्तद्वद्भवेदपरिखेदतः ॥ १०९ ॥

(அ-கை.)

வருத்தமின்றிய அதாவது பயனோடுகூடிய பிரயத்தினத்தில் துன்பமின்றிச் செய்தயோகாப்பியாசம் ஸபலமாகின்றது என்னும் அர்த்தத்தினைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

कुशाग्रेण एकबिंदुना उदधेः उत्सेकः यद्वत् । तद्वत् मनसः निग्रहः अपरिखेदतः भवेत् ॥

(சு-ம்.)

எப்படித் தர்ப்பைநுனியால் ஒரு துளியால் சமுத்திரத்தின் இறைப்பு உண்டாகின்றதோ அப்படி மனதின் நிக்கிரகம் துன்பமின்றி யுண்டாகின்றது.

(வி-ம்.)

தர்ப்பையின் நுனியினால் வெளிப்படுத்தப்பட்ட ஒரு துளியினாலாக்கப்பட்ட சமுத்திரத்தின் இறைப்பு அதாவது எடுத்து வெளியில் எறிதல் எதுவோ, அது துன்பமில்லாததாய் எப்படிக் காலாந்தரத்தில் உண்டாகவே செய்கின்றதோ, அதுபோல மனதின் நிக்கிரகமும் துன்பமின்றிச் செய்யப்பட்டதாய்க் காலாந்தரத்தில் சித்திக்கின்றது. இவ்வர்த்தம் * கக. சிட்டுக்குருவியின் கதையினை மனதிற்கொண்டு சொல்லப்பட்டது. (கoகூ)

கரு. சுலோகம் கஉசஉ-ல் கூறிய சுகத்தில் மைத்திராணீயசாகை பிரமாணமாதல்.

बृहद्रथस्य राजर्षेः शाकायन्यो मुनिः सुखम् ।
प्राह मैत्र्याख्यशाखायां समाध्युक्तिपुरःसरम् ॥ ११० ॥

(அ-கை)

இவ்வர்த்தம் கீதையில்மாத்திரம் சொல்லப்பட்டிருக்கின்றது என்பதில்லை, ஆனால் மைத்தராயணீயசாகையிலும் சொல்லப்பட்டிருக்கின்றது என்று கூறுகின்றார்:—

---

* கக. ஓர் சிட்டுக்குருவியின் கரையிலிருந்த முட்டைகளைச் சமுத்திரம் அலையினால் கவர்ந்தது. அப்போது அந்தப் பக்ஷி "நான் சமுத்திரத்தை வற்றச் செய்வேன்" என்று நிச்சயஞ்செய்து பிரவர்த்தித்துத் தனது அலகினால் ஒவ்வொரு துளிகொண்டு வெளியில் எறிந்தது. அப்போது அநேகபந்துவர்க்கவழு வ பக்ஷிகள்மறுத்தும் விடவில்லை. மாறாக அவ்வெல்லாப்பக்ஷிகளையும் தனக்குத் துணையாக்கிப் பறத்தலாலும் உட்காருதலாலும் வெகு கிலேசத்தை யடைந்த அவ்வெல்லாப் பக்ஷிகளையும் பார்த்துக் கிருபையுடையவராகிய நாரதமுனிவர் அவற்றின் சமீபத்தில் கருடனை யனுப்பினார். பின் கருடனது சிறகுகளின் வாயுவினால் வற்றுதலை யடைந்த சமுத்திரம் பயத்தினை அடைந்தாய் அம்முட்டைகளைப் பக்ஷிகளினிடத்துக் கொடுத்துவிட்டது. இவ்வாறு வருத்தமின்றி மனதின் நிரோதவடிவ பரமதர்மத்தில் பிரவர்த்திக்கின்ற புருஷனுக்கு ஈசுவரன் அநுக்கிரகஞ் செய்கின்றார் என்னும் வார்த்தை ஜீவன்முக்திவிவேகத்தில் ஸ்ரீவித்தியாரண்யஸ்வாமிகளால் எழுதப்பட்டிருக்கிறது.

मैत्र्याख्यशाखायां शाखायन्यः मुनिः बृहद्रथस्य राजर्षेः समाध्युक्तिपुरःसर सुखं प्राह ॥

(சு-ம்.)

மைத்தராயணீய மென்னும் சாகையில் சாகாயன்னியமுனிவர் பிருகத்ரத னென்னும் இராஜரிஷிக்குச் சமாதியைச் சொல்லுதலை முன்னிட்டுப் பிரஹ்மசுகத்தினைச் சொன்னார்.

(வி-ம்.)

மைத்தாரணீய மென்னும் ஓர் எஜுர்வேதத்தின் சாகையில் சாகாயன்னியரென்ற ஓர் இருஷி தனது சிஷ்யனுக அடைந்த பிருகத்ரத னென்னும் இராஜரிஷிக்கு அதாவது இராஜாக்களிற் சிறந்தவனுக்குச் சமாதியினைச் சொல்லுதல் பூர்வகமாக எவ்வா றுண்டாகுமோ அவ்வாறு பிரஹ்மசுகத்தைச் சொன்னார். (கக0)

கக. மைத்திராணீயசாகையிற் கூறிய விதம்.

[கஉருரு] यथा निरिंधनो वह्निः स्वयोनावुपशाम्यति ।
तथा वृत्तिक्षयाच्चित्तं स्वयोनावुपशाम्यति ॥ १११ ॥

(அ-கை.)

சாகாயன்னியரிஷி எவ்வாறு சொன்னார் என்று ஆசங்கித்து அந்தப் பிரஹ்மசுகத்தினைப் பிரதிபாதிக்கும் அம்மைத்திராயணீய சாகையின் மந்திரங்களைப் படிக்கின்றார்:—

निरिन्धनः वह्निः स्वयोनौ उपशाम्यति यथा । तथा चित्तं वृत्तिक्षयात् स्वयोनौ उपशाम्यति ॥

(சு-ம்.)

எப்படி விறகின்றிய நெருப்பு தனது காரணத்தில் உபசாந்தியை யடைகின்றதோ, அதுபோலச் சித்தம் விருத்திகளின் குறைவால் தனது காரணத்தில் உபசமத்தை யடைகின்றது.

(வி-ம்.)

விறகின்றிய அக்கினி தனது தேஜசுமாத்திரமான காரணத்தில் எப்படி உபசாந்தியை யடைகின்றதோ, அதாவது சுவாலைமுதலியவடிவ விசேஷ ஆகாரத்தை விட்டுத் தேஜோமாத்திரத்தில் எப்படி நிலைக்கின்றதோ, அப்ப

டியே அந்தக்கரணமும் விருத்திகளின் க்ஷயத்தால் அதாவது நிரோத வடிவ சமாதியின் அப்பியாசத்திஞல் இராஜஸமுதலிய சகலவிருத்திகளின் நாசத்தால் தனது காரணமான சத்துவகுணமாத்திரத்தில் உபசமத்தை யடைகின்றது அதாவது சத்துவகுணமாத்திரமாக மிஞ்சுகின்றது என் பது பொருள். (ககக)

கள. சத்துவகுணமாத்திரத்தில் மனம் உபசமமடைதலின் பயன்.

[கஉருச] स्वयोनावुपशांतस्य मनसः सत्यकामिनः ।
इंद्रियार्थविमूढस्यानृताः कर्मवशानुगाः ॥ ११२ ॥

(அ-கை.)

அந்த மனம் காரணத்தில் ஒடுங்குவதிஞல் என்ன பயன் உண்டாகின்ற தெனக் கூறுகின்றார்:—

सत्यकामिनः स्वयोनौ उपशांतस्य इंद्रियार्थविमूढस्य मनसः कर्मवशानुगाः अनृताः ॥

(சு-ம்.)

சத்தியத்தில் விருப்புடையதும் தனது காரணத்தில் உபசாந்தியடைந் ததும் இந்திரியங்களின் அர்த்தத்தில் விமூடமுமாகிய மனதிற்குக் கர்ம வசத்தால் கிடைத்த பயன் பொய்யாம்.

(வி-ம்.)

சத்தியமான ஆத்மாவில் இச்சையுடையதும் இதனுலேயே தனது காரணத்தில் ஒடுங்கியதும் அதனுலேயே இந்திரியங்களின் சப்தாதி விஷய வடிவ அர்த்தத்தில் விமூடமும் அதாவது விமுகமாதலால் ஞானமின்றி யதுமான மனதிற்குக் கர்மவசத்தால் கிடைத்த சப்தாதிநிமித்தவடிவ சாதனங்களோடுகூடிய சுகாதிகள் பொய்யாம் அதாவது இவை மாயாகாரிய மென்னும் உணர்ச்சியால் மித்தியாவடிவமா மென்பது பொருள். (ககஉ)

கஅ. சம்சாரம் சித்தவடிவமாதல்.

[கஉருரு] चित्तमेव हि संसारस्तत्प्रयत्नेन शोधयेत् ।
यच्चित्तस्तन्मयो मर्त्यो गुह्यमेतत्सनातनम् ॥ ११३ ॥

(அ-கை.)

அப்படியாஞல் "சித்தம் உபசமமாகவே ஜகத்து மித்தையாகும்" என்று கூறுதல் பொருந்தாது. ஏனெனின், அந்த ஜகத்து சித்தவடிவ உபாதானமுடையதாத லின்மையால் என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

चित्तं एव हि संसारः । तत् प्रयत्नेन शाधयेत् ॥

(சு-ம்.)

எதனால் சித்தமே சம்ஸாரமோ, அதனால் அதனைப் பிரயத்தினத்தினால் சோதிக்க (சுத்தமாக்க) வேண்டும்.

(வி-ம்.)

ஜகத்து சொரூபமாகச் சித்தவடிவ உபாதானமுடையதாகாவிடினும், அந்த ஜகத்தின் போக்கியத்தன்மை சித்தவடிவ காரணமுடையதாகவே யிருக்கின்றது. இங்கு "எதனால்" என்னும் பரியாயமுடைய ஹி என்னும் சொல்லால் சர்வஜனங்களினது அநுபவத்தையும் பிரமாண மாக்குகின்றார்; ஏனெனின், சுழுத்திமுதலியவற்றில் சித்தம் ஒடுங்கியபோது போகம் காணப்படாமையால் என்பது கருத்து. எதனால் சித்தவடிவம் சம்சாரமோ அதனால் அந்தச் சித்தத்தினையே அப்பியாசவைராக்கியாதிவடிவப் பிரயத்தினத்தால் சோதிக்கவேண்டும் அதாவது இரஜதமோகுணங்களின் றியதன்மையால் ஏகாக்கிரமாக்கவேண்டும்.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவினது முக்தியின்பொருட்டு ஆத்மாவே சோதிக்கத்தக்கதாம், சித்த மன்றென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

मर्त्यः यच्चित्तः तन्मयः । एतत् सनातनं गुह्यं ॥

(சு-ம்.)

எந்த மனிதன் எதன்கண் சித்தமுடையவனாகின்றானோ அவன் அதன் மய மாகின்றான். இது * உ0. பழமையான இரகசியம்.

---

* உ0. இங்கு இஃது இரகசியமாம்:—சுத்தஜலம் எங்தெந்த நீலம் மஞ்சள்முதலிய நிறங்களோடு சேருகின்றதோ, அதுபோலப் பஞ்சபூதங்களினது சத்துவாம்சத்தின் காரியமாதலால் சுத்தமாகிய மனது எவ்வித எவ்வித பாவனையை யடைகின்றதோ, அப்பியாசபலத்தால் அவ்வித அவ்வித ஆகாரமுடைய தாகின்றது. ஆதலால்,

(க) "யான் ஜீவன்" என்னும் பாவனையின் பலத்தால் மனம் ஜீவத்தன்மையினை யடைகின்றது.

(உ) "யான் ஈசுவரன்" என்னும் பாவனையின் பலத்தால் மனம் ஈசுவரத்தன்மையினை யடைகின்றது.

(ங) "யான் பிரஹ்மாமுதலியோ ராவேன்" என்னும் பாவனையால் மனம் பிரஹ்மாமுதலிய தன்மையினை யடைகின்றது.

(வி-ம்.)

மூலத்திலுள்ள மனிதவாசகமான மர்த்தியன் என்னும் பதம் தேகதாரி மாத்திரத்தின் உபலக்ஷணமாம். ஆதலால் தேகி எந்தப் புத்திரன்முதலிய

---

(ச) "யான் தேகாதிகளாயிருக்கின்றேன்" என்னும் பாவனையின் பலத்தால் மனம் தேகாதித்தன்மையினை யடைகின்றது.

(ரு) "யான் தாஸன்" என்னும் பாவனையின் பலத்தால் மனம் தாஸத்தன்மையினை யடைகின்றது.

(சு) "யான் சுவர்காதிலோகங்களை யடைகின்றேன்" என்னும் பாவனையின் பலத்தால் சுவர்க்காதிகளினை யடைதற்குக் காரணமான சாதனங்களில் தற்பரமாகிய மனம் சுவர்க்காதிலோகங்களை யடைகின்றது.

(எ) "எல்லாம் சூனியம்" என்னும் பாவனையின் பலத்தால் மனம் விருக்ஷம் கல் முதலிய சூநியத்தன்மையினை அடைகின்றது.

(அ) "யான் பிரத்தியகபின்ன பிரஹ்மம்" என்னும் பாவனையின் பலத்தால் மனம் பிரஹ்மத்தன்மையினை யடைகின்றது.

இவ்விதமாக எந்தெந்த மதத்தின் அநுசாரமாகத் திடபாவனையினால் எந்தெந்தப் பதார்த்தத்தில் மனம் தற்பரமாகின்றதோ அந்தந்தத் தன்மையினை யடைகின்றது. ஆனால் அவற்றில் இவ்வளவு பேதமுண்டு:—

(க) பிரஹ்மத்திற்கு வேறான அநாத்ம வஸ்துக்களின் பாவனையினால் எந்தெந்தத்தன்மைகளின் அடைவுண்டாகின்றதோ அந்தந்தத் தன்மைகள் தீபத்தின் பிரபையில் மணிபுத்தியும் சுத்தியில் இரஜதபுத்தியும் இரஜ்ஜுவில் சர்ப்பபுத்தியும் சாக்ஷியில் சொப்பனபுத்தியும் அவற்றின் விஷயங்களும்போல விசம்வாதிப்பிரமவடிவமாம்.

(உ) பிரஹ்மசாக்ஷாத்காரம் இல்லாதிருக்கக் குருசாஸ்திரவாயிலாகப் பரோக்ஷத்தன்மையினால் அறியப்பட்ட பிரஹ்மத்தில் "யான் பிரஹ்மம்" என்னும் வடிவுடைய நிர்க்குணவுபாசனைவடிவ திடபாவனையின் பலத்தால் தியானிபுருஷனுக்கு எந்தப் பிரஹ்மபாவனையின் அடைவுண்டாகின்றதோ, அது மணியின் பிரபையில் மணிபுத்தியும் அதன் விஷயமும் போலச் சம்வாதிப்பிரமவடிவமாம்.

(ரு) குருமுகமாகக் கேட்ட மகாவாக்கியத்தினால் தோன்றிய "யான் பிரஹ்மம்" என்னும் மனதின்நிச்சயவடிவ சத்துவசாக்ஷாத்காரத்தால் எந்தப் பிரஹ்மத்தன்மையின் அடைவுண்டாகின்றதோ, அது சுத்திமுதலியவற்றின் ஞானத்தால் கிடைத்த சுத்திமுதலியவற்றினைப் போலப் பாரமார்த்திகவடிவமாம்.

இவ்வபிப்பிராயத்தினாலேயே சுருதியானது "எப்படி நிச்சயமுடைய புருஷன் இவ்வுலகத் திருக்கின்றானோ, அவ்வாறு இங்கிருந்து மரணமடைந்து ஆகின்றான்." என்று கூறுகின்றது.

இவைமுதலிய அனேகசுருதிமுதலியவற்றின் வாக்கியம் இவ்வர்த்தத்தில் பிரமாணமாம். ஆதலால் இது சநாதன (பழமையான) இரகசியமாம்.

விஷயங்களில் சித்தமுடையவனா யிருக்கின்றானோ அவன் அவ்வடிவமாகவே யிருக்கின்றான்; ஏனெனின் அப்புத்திராதிகளின் பூர்ணத்தன்மை பூர்ணமின்மைகளினைத் தன்னிடத்திலேயே செவ்வையாக ஆரோபணம் செய்ததால். இது சநாதன அதாவது அநாதியாகச் சித்தித்த இரகசியமாம். இங்கு இது சொல்லப்பட்டதாகும்:—சுபாவமாகச் சுத்தவடிவமான ஆத்மாவிற்கு "ध्यायतीव लेलायतीव தியானஞ்செய்வோரைப் போலும் லீலை செய்வோரைப் போலும் சித்தத்தின் சேர்க்கையால் ஆத்மாவாகின்றது" என்னும் சுருதியினால் எதனால் சித்தசம்பந்தத்தினாலேயே சம்சாரித்தன்மை யிருக்கின்றதோ, அதனால் சித்தத்தின் சோதனத்தால் ஆத்மாவிற்குச் சம்சாரத்தின் நிவிருத்தி உண்டாகின்றது. (ககந)

கக. சித்தத்தின் பிரஹ்மாநுசந்தானவடிவப் பிரசாதத்தால் சம்சாரநிவிருத்தியின் சம்பவம்.

[க2.டுசு] चित्तस्य हि प्रसादेन हंति कर्म शुभाशुभम् ।
प्रसन्नात्मात्मनि स्थित्वा सुखमक्षय्यमश्नुते ॥ ११४ ॥

(அ-கை.)

அப்படியானால் அநாதிகாலத்து ஜன்மபரம்பரையாகச் சம்பாதிக்கப்பட்ட சுகதுக்கங்களைத் தருவனவாகிய புண்ணியபாப கருமங்க ளிருக்குங்கால், சித்தத்தினைச் சோதித்தலினாலேயே எப்படி ஆத்மாவிற்குச் சம்சாரத்தின் நிவிருத்தி யுண்டாகுமென் றாசங்கித்து, சித்தத்தின் பிரசாதவடிவ சோதனையினால் உபலக்ஷிக்கப்பட்ட பிரஹ்மத்தின் அநுசந்தானத்தால் சகல கர்மங்களின் க்ஷயமும் சம்பவித்தலால் சித்தத்தின் சோதனையினாலும் எப்படி ஆத்மாவிற்குச் சம்சாரத்தின் நிவிருத்தியுண்டாகு மென்னும் சங்கை பொருந்தாது என்று பரிகரிக்கின்றார்:—

चित्तस्य हि प्रसादेन शुभाशुभं कर्म हन्ति ॥

(சு-ம்.)

சித்தத்தின் பிரசாதமாகிய ஏகாக்கிரத்தன்மையினால் சுபாசுபவடிவ கர்மத்தை நாசஞ்செய்கின்றான்.

(வி-ம்.)

மூலத்திலுள்ள हि ஹி என்னும் சப்தம் எதுவோ அதனால் "यद्यथेषिकातूलमग्नौ प्रोतं प्रदूयेतैवं ह्यस्य सर्वे पाप्मानः प्रदूयन्ते ॥ எப்படி அக்கினியினிடத்துப் போடப்பட்ட இஷீகை யென்னும் ஓர் புல்லினது பஞ்சு நாசமாகின்றதோ,

அவ்வாறு நிச்சயமாக இந்த ஞானியின் சகல பாவங்களும் நாசமாகின்றன." "उपपातकेषु सर्वेषु पातकेषु महत्सु च । प्रविश्य रजनीपादं ब्रह्मध्यानं समाचरेत् ॥ சகல சிறிதும் பெரிதுமான உபபாதகங்களாகிய சாமானிய பாதகங்களும், மகா பாதகங்களான பெரும் தீய வொழுக்கங்களுமாகிய அவற்றில் பிரவேசித்து அதாவது அவைகளிருக்கவும் இரவின் கடையாமத்தில் உட்கார்ந்து, பிரஹ்மத்தின் தியானத்தினைச் செவ்வையாய் ஆசரிக்க." என்னும் இவை முதலிய சுருதிஸ்மிருதிகளினது பிரசித்தி அறிவிக்கப்படுகின்றது.

(அ-கை.)

அந்தச் சித்தத்தின் பிரசாதத்தால் என்ன பயனுண்டாகின்றது எனக் கூறுகின்றார்:—

प्रसन्नात्मा आत्मनि स्थित्वा अक्षय्यं सुखं अश्नुते ॥

(சு-ம்.)

பிரசன்னமான ஆத்மாவினையுடைய புருஷன் ஆத்மாவில் நிலைத்து அக்ஷயசுகத்தை யடைகின்றான்.

(வி-ம்.)

பிரசன்ன ஆத்மாவாகிய சித்தத்தினையுடைய புருஷன் ஆத்மாவில் அதாவது தனது சொரூபவடிவ அத்விதீய ஆநந்தவடிவப் பிரஹ்மத்தில் நிலைத்து, "அதுவே நான்" என்னும் நிச்சயத்தினால் திருசியமாத்திரத்தினை விட்டுச் சேதனமாத்திரவடிவமாக நிலைத்தலால் அக்ஷய அதாவது அழிவில்லாத சொரூபவடிவ சுகத்தினை யடைகின்றான். (கூகச)

உ௦. சுலோகம் கஉ௫சுல் கூறிய அர்த்தத்தினைத் திருஷ்டாந்தத்தினால் திடப்படுத்தல்.

[கஉ௫எ] समासक्तं यथा चित्तं जंतोर्विषयगोचरे ।
यद्येवं ब्रह्मणि स्यात्तत्को न मुच्येत बंधनात् ॥ ११५ ॥

(அ-கை.)

"பிரசன்ன ஆத்மாவினையுடைய புருஷன் ஆத்மாவில் நிலைத்து" என்னும் கஉ௫கூ-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினையே திருஷ்டாந்தத்தினைச் சொல்லுதல்பூர்வகமாகத் திடமாக்குகின்றார்:—

जन्तोः चित्तं विषयगोचरे यथा समासक्तं । तत् ब्रह्मणि यदि एवं स्यात् । कः बंधनात् न मुच्येत ॥

(சு-ம்.)

ஜீவனது சித்தம் எப்படி விஷயவடிவ கோசரத்தில் செவ்வையாகப் பற்றி யிருக்கின்றதோ, அச்சித்தம் பிரஹ்மத்தில் எப்போது இவ்வாறு ஆகின்றதோ அப்போது எந்தப் புருஷன் பந்தத்தினின்றும் விடுபடான்?

(வி-ம்.)

பிராணியின் சித்தம் எப்படி விஷயவடிவ இந்திரியத்தினது பிரவிருத்தியின் பூமியில் சுபாவமாய்ச் செவ்வையாகப் பற்றுளதாகின்றதோ, அதே சித்தம் பிரஹ்மமாகிய பிரத்தியகபின்ன பரமாத்மாவில் எப்போது இவ்வாறு பற்றுளதாகின்றதோ, அப்போது எந்தப்புருஷன் சம்சாரத்தினின்றும் விடுபடான்? எல்லோருமே விடுபடுவார்கள் என்பது பொருள் (ககரு)

உக. அசுத்த சுத்த பேதத்தால் மனம் இருவகையினதாதல்.

[கஉ-ருஅ] मनो हि द्विविधं प्रोक्तं शुद्धं चाशुद्धमेव च ।
अशुद्धं कामसंपर्काच्छुद्धं कामविवर्जितम् ॥ ११६ ॥

சுலோகம் கஉருஎ-ல் கூறிய அர்த்தத்தினைத் திடமாக்குதற்பொருட்டு மனதின் இடைப்பட்ட பேதத்தினைக் கூறுகின்றார்:—

शुद्धं च अशुद्धं एव च मनः हि द्विविधं प्रोक्तं ॥

(சு-ம்.)

சுத்தம் அசுத்தம் என்னும் பேதத்தினாலேயே மனம் இருவகையாகச் சொல்லப்படுகின்றது.

(அ-கை.)

அவ்விருவகையாதலில் காரணத்தினைக் கூறுகின்றார்:—

कामसंपर्कात् अशुद्धं । कामविवर्जितं शुद्धं ॥

(சு-ம்.)

காமத்தின் சம்பந்தத்தால் மனம் அசுத்தமா யிருக்கின்றது. காமமின்றிய மனம் சுத்தமா யிருக்கின்றது.

(வி-ம்.)

இங்குச் சொல்லப்பட்ட காமம் குரோதமுதலியவற்றிற்கும் உபலக்ஷணமாம். (ககசு)

அவ்வாறு நிச்சயமாக இந்த ஞானியின் சகல பாவங்களும் நாசமாகின்றன." "उपपातकेषु सर्वेषु पातकेषु महत्सु च । प्रविश्य रजनीपादं ब्रह्मध्यानं समाचरेत् ॥ சகல சிறிதும் பெரிதுமான உபபாதகங்களாகிய சாமானிய பாதகங்களும், மகா பாதகங்களான பெரும் தீய வொழுக்கங்களுமாகிய அவற்றில் பிரவேசித்து அதாவது அவைகளிருக்கவும் இரவின் கடையாமத்தில் உட்கார்ந்து, பிரஹ்மத்தின் தியானத்தினைச் செவ்வையாய் ஆசரிக்க." என்றும் இவை முதலிய சுருதிஸ்மிருதிகளினது பிரசித்தி அறிவிக்கப்படுகின்றது.

(அ-கை.)

அந்தச் சித்தத்தின் பிரசாதத்தால் என்ன பயனுண்டாகின்றது எனக் கூறுகின்றார்:—

प्रसन्नात्मा आत्मनि स्थित्वा अक्षय्यं सुखं अश्नुते ॥

(சு-ம்.)

பிரசன்னமான ஆத்மாவினையுடைய புருஷன் ஆத்மாவில் நிலைத்து அக்ஷயசுகத்தை யடைகின்றான்.

(வி-ம்.)

பிரசன்ன ஆத்மாவாகிய சித்தத்தினையுடைய புருஷன் ஆத்மாவில் அதாவது தனது சொரூபவடிவ அத்விதீய ஆநந்தவடிவப் பிரஹ்மத்தில் நிலைத்து, "அதுவே நான்" என்னும் நிச்சயத்தினால் திருசியமாத்திரத்தினை விட்டுச் சேதனமாத்திரவடிவமாக நிலைத்தலால் அக்ஷய அதாவது அழிவில்லாத சொரூபவடிவ சுகத்தினை யடைகின்றான். (௧௧௪)

௨0. சுலோகம் ௧௨௱௪ல் கூறிய அர்த்தத்தினைத் திருஷ்டாந்தத்தினால் திடப்படுத்தல்.

[௧௨௱௫] समासक्तं यथा चित्तं जंतोर्विषयगोचरे ।
यद्येवं ब्रह्मणि स्यात्तत्को न मुच्येत बंधनात् ॥ ११५ ॥

(அ-கை.)

"பிரசன்ன ஆத்மாவினையுடைய புருஷன் ஆத்மாவில் நிலைத்து" என்னும் ௧௨௱௪-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினையே திருஷ்டாந்தத்தினைச் சொல்லுதல்பூர்வகமாகத் திடமாக்குகின்றார்:—

जन्तोः चित्तं विषयगोचरे यथा समासक्तं । तत् ब्रह्मणि यदि एवं स्यात् । कः बंधनात् न मुच्येत ॥

(சு-ம்.)

ஜீவனது சித்தம் எப்படி விஷயவடிவ கோசரத்தில் செவ்வையாகப் பற்றி யிருக்கின்றதோ, அச்சித்தம் பிரஹ்மத்தில் எப்போது இவ்வாறு ஆகின்றதோ அப்போது எந்தப் புருஷன் பந்தத்தினின்றும் விடுபடான்?

(வி-ம்.)

பிராணியின் சித்தம் எப்படி விஷயவடிவ இந்திரியத்தினது பிரவிருத்தியின் பூமியில் சுபாவமாய்ச் செவ்வையாகப் பற்றுளதாகின்றதோ, அதே சித்தம் பிரஹ்மமாகிய பிரத்தியகபின்ன பரமாத்மாவில் எப்போது இவ்வாறு பற்றுளதாகின்றதோ, அப்போது எந்தப்புருஷன் சம்சாரத்தினின்றும் விடுபடான்? எல்லோருமே விடுபடுவார்கள் என்பது பொருள் (ககரு)

உக. அசுத்த சுத்த பேதத்தால் மனம் இருவகையினதாதல்.

[கஉ-ு-அ] मनो हि द्विविधं प्रोक्तं शुद्धं चाशुद्धमेव च ।
अशुद्धं कामसंपर्काच्छुद्धं कामविवार्जितम् ॥ ११६ ॥

சுலோகம் கஉருஎ-ல் கூறிய அர்த்தத்தினைத் திடமாக்குதற்பொருட்டு மனதின் இடைப்பட்ட பேதத்தினைக் கூறுகின்றார்:—

शुद्धं च अशुद्धं एव च मनः हि द्विविधं प्रोक्तं ॥

(சு-ம்.)

சுத்தம் அசுத்தம் என்னும் பேதத்தினாலேயே மனம் இருவகையாகச் சொல்லப்படுகின்றது.

(அ-கை.)

அவ்விருவகையாதலில் காரணத்தினைக் கூறுகின்றார்:—

कामसंपर्कात् अशुद्धं । कामविवर्जितं शुद्धं ॥

(சு-ம்.)

காமத்தின் சம்பந்தத்தால் மனம் அசுத்தமா யிருக்கின்றது. காமமின்றிய மனம் சுத்தமா யிருக்கின்றது.

(வி-ம்.)

இங்குச் சொல்லப்பட்ட காமம் குரோதமுதலியவற்றிற்கும் உபலக்ஷணமாம்.

(ககசு)

உஉ. அதே இருவகையான மனம் கிரமமாகச் சம்சாரத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணமாதல்.

[கஉ௫க] मन एव मनुष्याणां कारणं बंधमोक्षयोः ।
बंधाय विषयासक्तं मुक्त्यै निर्विषयं स्मृतम् ॥ ११७॥

(அ-கை.)

இருவகையான அம்மனமே சம்சாரம் மோக்ஷ மென்னும் இரண்டற்கும் ஏதுவாதலைச் சுருதியினற் காட்டுகின்றார்.—

मनुष्याणां बन्धमोक्षयोः कारणं मनः एव । विषयासक्तं बन्धाय निर्विषयं मुक्त्यै स्मृतम् ॥

(சு-ம்.)

மனிதர்களுக்கு பந்தமோக்ஷங்களுக்குக் காரணம் மனமேயாம். விஷயங்களில் பற்றுடைய மனம் பந்தத்தின்பொருட்டாம். நிர்விஷயமான மனம் முக்தியின்பொருட்டுச் சொல்லப்பட்டது. (கக௭)

உ௩. பிரசன்னசித்தமுடையவனுக்கு ஆத்மாவில் நிலைத்தலால் அக்ஷயசுகத்தின் அடைவினைச் சுருதியினல் சொல்லுதல்.

[கஉ௬0] समाधिनिर्धूतमलस्य चेतसो निवेशितस्यात्मनि यत्सुखं भवेत् ।
न शक्यते वर्णयितुं गिरा तदा स्वयं तदंतःकरणेन गृह्यते ॥११८॥

(அ-கை.)

"பிரசன்ன சித்தமுடைய புருஷன் ஆத்மாவில் நிலைத்து அக்ஷயசுகத்தினை அடைகின்றான்." என்னும் கஉ௫௬-வது சுலோகத்தில் கூறிய பொருளினையே சுருதி தானே வர்ணிக்கின்றது:—

आत्मनि निवेशितस्य समाधिनिर्धूतमलस्य चेतसः यत्सुखं भवेत् । तदा गिरा वर्णयितुं न शक्यते । स्वयं तत् अंतःकरणेन गृह्यते ॥

(சு-ம்.)

ஆத்மாவில் பிரவேசத்தினை யடைந்ததும், சமாதியினல் நீங்கிய மலமுடையதுமாகிய சித்தத்திற்கு எச்சுகம் உண்டாகின்றதோ, அப்போது அது வாக்கினல் வர்ணிக்கக்கூடியதன்று. ஆனல் தானே அந்தச் சுகம் அந்தக்கரணத்தினல் கிரகிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

பிரத்தியக்குச்சொரூபமாகிய ஆத்மாவில் நிலைத்ததும், பிரத்தியகாத்மா பிரஹ்மங்களின் ஒருமையை விஷயஞ்செய்யும் விருத்திகளின் ஆவிருத்தி வடிவசமாதியினால் முழுவதும் நீக்கப்பட்ட ரஜதமோகுணவடிவ மலங்களை யுடையதுமாகிய சித்தத்திற்கு அச்சமாதியில் எச்சுக முண்டாகின்றதோ அச்சுகம் வாக்கினால் வர்ணிக்கக்கூடாததாம்; அலௌகிகசுகமா யிருத்தலின் என்பது பொருள். ஆனால் தானேயான அச்சொரூபவடிவ சுகம் அந்தக்கரணத்தினாலேயே கிரகிக்கப்படுகின்றது. (கக அ)

உ. மனிதர்களுக்கு க்ஷணிகசமாதி சம்பவித்தலால் பிரஹ்மாநந்தநிச்சயத்தின் சம்பவம் கஉசுக-கஉஎசு.

க. க்ஷணிகசமாதியினால் பிரஹ்மாநந்தத்தினது நிச்சயத்தின் பிரதிஞ்ஞை.

[கஉசுக] यद्यप्यसौ चिरं कालं समाधिर्दुर्लभो नृणाम् ।
तथापि क्षणिको ब्रह्मानंदं निश्चाययत्यसौ ॥ ११९ ॥

(அ-கை.)

அப்படியானால் இச்சமாதியே துர்லபமா யிருத்தலால் இதனால் பிரஹ்மாநந்தத்தினது நிச்சயத்தின் சம்பவம் எவ்வாறு உண்டாகு மென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

यद्यपि असौ समाधिः चिरं कालं नृणां दुर्लभः । तथापि क्षणिकः असौ ब्रह्मानन्दं निश्चाययति. ॥

(சு-ம்.)

இச்சமாதி வெகுகாலபரியந்தம் மனிதர்களுக்குத் துர்லபமாயினும், இந்த க்ஷணிகசமாதி பிரஹ்மாநந்தத்தினை நிச்சயம் செய்விக்கின்றது.

(வி-ம்.)

நிரந்தரம் நிலைத்துள்ள இச்சமாதி சம்பவியாதாயினும், க்ஷணிக அதாவது கணபரியந்தமிருக்கும் அச்சமாதி சம்பவித்தலால் அந்த க்ஷணிகசமாதியினாலேயே இவ்வாநந்தம் நிச்சயம் செய்யக்கூடியதா யிருத்தலால் என்பது பொருள். (ககக)

உ. பகிர்முகமுள்ள சிரத்தையுடைய வியசனிக்குப் பிரஹ்மாநந்தத்தினது நிச்சயத்தின் சம்பவம்.

[கஉசுஉ] श्रद्धालुर्व्यसनी योऽत्र निश्चिनोत्येव सर्वथा ।
निश्चिते तु सकृत्तास्मिन्विश्वसित्यन्यदाप्ययम् ॥ १२० ॥

(அ-கை.)

அப்படியானல் ஆத்மாவின் தரிசனமாகிய சாக்ஷாத்காரத்தின்பொருட்டுச் சிரவணுதிகளிற் பிரவர்த்தித்தும் சில புருடர் ஆநந்தத்தினது நிச்சயமின்றியவர்களாய்ப் பகிர்முகமாகவே இருக்கின்றார்களே யென்றுசங்கித்து, சிரத்தையின்றிய புருஷர்களுக்கு அவ்வாறு நிச்சயமில்லாதிருக்கினும், சிரத்தைமுதலியவற்றோடுகூடிய புருஷர்களுக்கு அவ்வாநந்தத்தினது நிச்சயமுண்டாகவே செய்கின்றதென்று கூறுகின்றார்:—

श्रद्धालुः व्यसनी यः अत्र सर्वथा निश्चिनोति एव ॥

(சு-ம்.)

சிரத்தையுள்ள சீவனும் வியசனியுமாகிய புருஷன் எவனோ அவன் இந்தக்ஷணிகசமாதியில் எல்லாவிதத்தாலும் அதாவது அவசியம் நிச்சயிக்கின்றான்.

(வி-ம்.)

"எவ்வகையானும் சம்பாதிப்பேன்" என்னும் ஆக்கிரகமானது இங்கு வியசனமெனப்படுகின்றது. அதனையுடைய புருஷன் வியசனி யெனப்படுவன்.

(அ-கை.)

அந்த நிச்சயம் செய்வதனால் என்ன வுண்டாகின்றது?:—

तस्मिन् सकृत् निश्चिते तु अयं अन्यदा अपि विश्वसिति ॥

(சு-ம்.)

அதில் ஒருமுறை நிச்சயஞ்செய்யின் இப்புருஷன் அந்நியகாலத்திலும் விசுவாசத்தை யடைகின்றான்.

(வி-ம்.)

இப்பிரஹ்மாநந்தத்தினை ஒருமுறை க்ஷணிகசமாதியில் நிச்சயஞ்செய்யின், இவ்வொருமுறை நிச்சயத்தினை யடைந்த புருஷன் " அந்நியகாலத்திலும் ஆநந்த மிருக்கிறது." என்று விசுவாசத்தைச் செய்கின்றான். (கஉO)

ரு. சுலோகம் கஉகூஉ-ல் கூறிய அர்த்தத்தின் பிரயோஜனம்.

[கஉகூரு] ताहक् पुमानुदासीनकालेऽप्यानंदवासनाम् ।
उपेक्ष्य मुख्यमानंदं भावयत्येव तत्परः ॥ १२१ ॥

(அ-கை.)

அந்த அந்நியகாலத்தில் விசுவாசமுடையவனுதலாலும் என்ன உண்டாகின்றதெனக் கூறுகின்றார்:—

तादृक् पुमान् उदासीनकाले अपि आनंदवासनां उपेक्ष्य तत्परः मुख्यं आनंदं एव भावयति ॥

(சு-ம்.)

அத்தன்மையபுருஷன் உதாசினகாலத்திலும் ஆநந்தத்தின் வாசனையை உபேக்ஷித்துத் தற்பரனுய் முக்கியாநந்தத்தினையே பாவிக்கின்றான்.

(வி-ம்.)

அப்படிச் சிரத்தைமுதலியவற்றை முன்னிட்டு ஒருமுறை ஆநந்தத்தின் நிச்சயமுடைய புருஷன் உதாசினத்தன்மையின் அவஸ்தையிலும் தோற்றுவதாகிய முன் கஉஉஎ-வது சுலோகத்திற் கூறிய வாசனை எதுவோ, அதனை விலக்கித் தற்பரனுய் முக்கியாநந்தத்தில் தாற்பரிய முடையவனுய் அந்த முக்கியாநந்தத்தினையே சிந்திக்கின்றான். (கஉக)

ச. வியவகாரகாலத்தில் நிஜாநந்தத்தின் பாவனையில் திருஷ்டாந்தம்.

[கஉசுச] परव्यसनिनी नारी व्यग्रापि गृहकर्मणि ।
तदेवास्वादयत्यंतः परसंगरसायनम् ॥ १२२ ॥

(அ-கை)

இப்படி வியவகாரகாலத்திலும் நிஜாநந்தத்தினைப் பாவிக்கின்றான் என்னும் அர்த்தத்தில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

परव्यसनिनी नारी गृहकर्मणी व्यग्रा अपि अन्तः तत् एव परसंगः रसायनं आस्वादयति ॥

(சு-ம்.)

பரபுருஷனிடத்து வியசனமுடைய ஸ்திரீ கிருககர்மத்தில் பிரவிருத்தித்தவளாயினும், உள்ளே அதே பரபுருஷனது சங்கவடிவ இரஸாயனத்தினை அதாவது இரஸத்தின் ஸ்தானத்தினை உருசிக்கின்றாள். (கஉஉ)

ரு. திருஷ்டாந்தத்தினுல் சித்தித்த அர்த்தத்தினைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துதல்.

[கஉசுரு] एवं तत्त्वे परे शुद्धे धीरो विश्रांतिमागतः ।
तदेवास्वादयत्यंतर्बहिर्व्यवहरन्नपि ॥ १२३ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்தினுல் கூறிய அர்த்தத்தினைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துகின்ருர்:—

एवं शुद्धे परे तत्त्वे विश्रांतिं आगतः धीरः बहिः व्यवहरन् अपि अंतः तत् एव आस्वादयति ॥

(ச-ம்.)

இப்படிச் சுத்தமான பரமதத்துவத்திலும் விசிராந்தியினை யடைந்த தீரன் வெளியில் வியவகாரத்தைச் செய்யினும் உள்ளே அப்பரமதத்துவத்தினையே அநுபவிக்கின்ருன். (கஉ௩)

சு. தீரசப்தத்தின் அர்த்தம்.

[கஉசு] धीरत्वमक्षप्रावल्येऽप्यानंदास्वादवांछया ।
तिरस्कृत्याखिलाक्षाणि तच्चिंतायां प्रवर्तनम् ॥ १२४ ॥

(அ-கை.)

சுலோகம் கஉ௩ு-ல் உள்ள தீரசப்தத்தின் அர்த்தத்தினைக் கூறுகின்ருர்:—

अक्षप्राबल्ये अपि आनंदास्वादवांछया अखिलाक्षाणि तिरस्कृत्य तच्चिंतायां प्रवर्तनं धीरत्वं ॥

(ச-ம்.)

இந்திரியங்களின் பிரபலத்தன்மை யுளதாயினும், ஆநந்தத்தினைச் சுவைக்கும் விருப்பால் சகல இந்திரியங்களேயும் திரஸ்காரம் செய்து அந்த ஆநந்தத்தின் சிந்தனையில் பிரவர்த்தித்தல் தீரத்தன்மையாம்.

(வி-ம்.)

இந்திரியங்கள் விஷயங்களுக் கெதிர்முகமா யிருத்தலால் புருஷனை இழுக்கும் சாமர்த்திய மிருந்தும், சொரூபசுகத்தினது அநுசந்தானத்தின் இச்சையினுல் சர்வஇந்திரியங்களேயும் திரஸ்காரம் செய்து ஆநந்தத்தினது அநுசந்தானத்திலேயே எந்தப் பிரவர்த்திக்குந்தன்மை யுளதோ அது தீரத்தன்மையாம். (கஉச)

எ. திருஷ்டாந்தத்தோடு விசிராந்தி யென்னும் சொல்லிற்குக் கருதிய அர்த்தம்.

[கஉ௫] भारवाही शिरोभारं मुक्त्वास्ते विश्रमं गतः ।
संसारव्यापृतित्यागे तादृग्बुद्धिस्तु विश्रमः ॥ १२५ ॥

(அ-கை.)

சுலோகம் கஉசுரு-ல் உள்ள விசிராந்தி சப்தத்திற்குச் சொல்லக்கரு திய பொருளைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

भारवाही शिरोभारं मुक्त्वा विश्रमं गतः आस्ते । संसारव्यापृतित्यागे तादृक् बुद्धिः तु विश्रमः ॥

(சு-ம்)

பாரத்தை யெடுக்கும் புருஷன் தலைச்சுமையை விட்டு விசிராந்தியடைந் தவனா யிருக்கின்றான். அதுபோலச் சம்சாரவியாபாரத்தினை விடுதலில் அத் தன்மைய புத்தி எதுவோ அது விசிராந்தி யெனப்படும்.

(வி-ம்.)

எப்படி உலகத்தில் சுமை யெடுக்கும் புருஷன் சிரமத்திற்குக் காரண மான தலையிலுள்ள சுமையினை இறக்கிவிட்டுச் சிரமமின்றியவனா யிருக்கின் றானோ, அதுபோலச் சம்சாரத்தின் வியாபாரத்தினை விடவே, "யான் சிரம மின்றியவனானேன்" என்று உண்டாகிய புத்தி விசிராந்தி யென்னும் சொல்லால் சொல்லப்படுகின்றது என்பது பொருள். (கஉரு)

அ. பலிதார்த்தம் (விசிராந்தன் சுகாதிகாலங்களிலும் ஸ்வாநந்ததற்பரனாதல்).

[கஉசுஅ] विश्रांतिं परमां प्राप्तस्त्वौदासीन्ये यथा तथा ।
सुखदुःखदशायां च तदानंदैकतत्परः ॥ १२६ ॥

(அ-கை.)

இப்போது பலிதார்த்தத்தினைக் கூறுகின்றார்:—

परमां विश्रांतिं प्राप्तः औदासीन्ये यथा । तथा सुखदुःखदशायां तु च तदानंदैकतत्परः ॥

(சு-ம்.)

எப்படி மேலான விசிராந்தியடைந்த புருஷன் உதாசினதசையில் அந்த ஒரே ஆநந்தத்தில் தற்பரனாகின்றானோ, அதுபோலச் சுகதுக்க தசையிலேயே அந்த ஒரே ஆநந்தத்தில் தற்பரனாகின்றான்.

(வி-ம்.)

எப்படிப் பரமவிசிராந்தியை அதாவது கஉசுஎ-வது சுலோகத்தில் கூறப்பட்ட லக்ஷணமுடைய விசிராந்தியை அடைந்த புருஷன் தனது

உதாசீனதசையில் பரமாநந்தத்தினது உருசியைக் கொள்ளுதலில் தாற்பரிய முடையவனுகின்ருனே, அதுபோலச் சுகதுக்கங்களுக்குக் காரணமான பிராரப்தத்தின் காலத்திலும் அந்தச் சுகதுக்கத்தின் அநுசந்தானத்தினை விட்டு நிஜாநந்தத்தின் உருசியைக் கொள்ளுதலிலேயே தாற்பரிய முடையவனுகின்ருன் என்பது பொருள். (௧௨௬)

௯. திருஷ்டாந்தபூர்வகமாக விவேகிக்கு விஷயாநுசந்தானத்தினது இச்சை யினின்மை.

[௧௨௬௭] अग्निप्रवेशहेतौ धीः श्रृंगारे यादृशी तथा ।
धीरस्योदेति विषयेऽनुसंधानविरोधिनी ॥ १२७ ॥

(அ-கை.)

அப்படியானல் துக்கம் பிரதிகூலமாயிருப்பதால் அதன் அநுசந்தானத்தின் இச்சை இல்லையாயினும், விஷயஜந்நியசுகம் அநுகூலமாயிருத்தலின் புருஷர்களால் பிரார்த்திக்கப்படுவதாயிருத்தலால் அந்தச் சுகத்தினது அநுசந்தானத்தின் இச்சை எப்படி யுண்டாகாதென்ருசங்கித்து, அந்த விஷயஜந்நியசுகம் விஷயத்தினைச் சம்பாதித்தல்முதலியவற்றின் வாயிலாக மிகவும் வெளிப்படுந்தன்மையைச் சம்பாதித்தலால் நிஜாநந்தத்தினது ஸ்மரணத்திற்கு விரோதியாயிருத்தலின் அவ்விஷயசுகத்தினது இச்சையும் விவேகிபுருஷனுக்கு உண்டாகாது என்று திருஷ்டாந்தத்தினைக் காட்டுதல்பூர்வகமாகக் காட்டுகின்ருர்:—

अग्निप्रवेशहेतौ श्रृंगारे यादृशी धीः । तथा अस्य धीः अनुसंधानविरोधिनि विषये उदेति ॥

(சு-ம்.)

அக்கினியிற் பிரவேசித்தற்குக் காரணமாகிய அலங்கரிப்பில் எத்தன்மைப்புத்தி யுண்டாகின்றதோ, அத்தன்மைப்புத்தி தீரனுகிய இவ்விவேகிபுருஷனுக்கு அநுசந்தானத்திற்கு விரோதியான விஷயத்தில் உதயமாகின்றது.

(வி-ம்.)

எப்படித் தற்காலம் தேகத்தை விடுதலின் இச்சை மிகத் திடமாகவே, அதன் விலம்பத்திற்கு (காலதாமதத்திற்குக்) காரணமான அலங்காரமுதலியவற்றில் அக்கினியில் பிரவேசிக்கும் புருஷனுக்கு விரஸத்தன்மையின் புத்தி யுண்டாகின்றதோ, அதுபோல வைராக்கியமுதலிய சாதனங்களோடுகூடிய விவேகிபுருஷனுக்குப் பிரஹ்மத்தின் அநுசந்தானத்தின்

விரோதியான விஷயசுகத்திலும் அத்தன்மைய தோஷதிருஷ்டிவடிவ புத்தி உண்டாகின்றது என்பது பொருள். (கஉஎ)

கo. சொரூபாநந்தத்திலும் அவிரோதியான விஷயத்திலும் புத்தி செல்லுதலையும் வருதலையும் திருஷ்டாந்தத்தால் கூறுதல்.

[கஉஎo] अविरोधिसुखे बुद्धिः स्वानंदे च गमागमौ ।
कुर्वेत्यास्ते क्रमादेषा काकाक्षिवदितस्ततः ॥ १२८ ॥

(அ-கை.)

விவேகிக்கு விரோதியான விஷயசுகத்தின் இச்சையுண்டாக வேண்டாம். ஆனால் பிரயத்தினமின்றிச் சுலபமா யிருத்தலால் வெளிமுக மாகாமைக்குக் காரணமான விஷயங்களில் ஏன் இச்சையுண்டாகாதெனக் கூறுகின்றார்:—

अविरोधी सुखे च स्वानंदे काकाक्षिवत् क्रमात् इतः ततः गमागमौ कुर्वन्ति । एषा बुद्धिः आस्ते ॥

(சு-ம்.)

இவ்விவேகியின் புத்தி அவிரோதியான விஷயசுகத்திலும் சொரூபாநந்தத்திலும் காக்கைக்கண்போல் கிரமமாக இங்குமங்கும் போக்குவரத்தைச் செய்வதா யிருக்கின்றது. (கஉ௮)

கக. முற்கூறிய திருஷ்டாந்தத்தினை விவரித்தல்,

[கஉஎக] एकैव दृष्टिः काकस्य वामदक्षिणनेत्रयोः ।
यात्यायात्येवमानंदद्वये तत्त्वविदो मतिः ॥ १२९ ॥

(அ-கை.)

சுலோகம் கஉஎo-ல் கூறிய திருஷ்டாந்தத்தினை வர்ணிக்கின்றார்:—

काकस्य दृष्टिः एका एव वामदक्षिणनेत्रयोः याति आयाति । एवं तत्त्वविदः मतिः आनन्दद्वये ॥

(சு-ம்.)

எப்படி ஒரேகாகத்தின் திருஷ்டி இடது அல்லது வலது கண்களிரண்டிலும் போய் வருகின்றதோ, அதுபோலத் தத்துவஞானியின் புத்தியும் இரண்டு ஆநந்தங்களில் போய் வருகின்றது.

(வி-ம்.)

எப்படிக் காகத்தின் ஒரே பார்வையானது இடது வலது என்னும் இரண்டு நேத்திரங்களிலும் கிரமமாகப் போக்குவரத்தைச் செய்கின்றதோ, அதுபோல விவேகிபுருஷனது புத்தியும் இரண்டு ஆநந்தங்களிலும் போகுதல் வருதலைச் செய்கின்றது என்பது பொருள். (கஉகூ)

கஉ. தார்ஷ்டாந்தத்தினை விவரித்தல்.

[கஉஎஉ] भुंजानो विषयानंदं ब्रह्मानंदं च तत्त्ववित् ।
द्विभाषाभिज्ञवद्विद्यादुभौ लौकिकवैदिकौ ॥ १३० ॥

(அ-கை.)

தார்ஷ்டாந்தத்தினை வர்ணிக்கின்றார்:—

तत्त्ववित् भुंजानः विषयानन्दं च ब्रह्मानंदं लौकिकवैदिकौ उभौ द्विभाषाभिज्ञवत् विद्यात् ॥

(அ-ம்.)

தத்துவவித்தானவன் அவிரோதியான விஷயங்களை அநுபவிப்பவனாய் இலௌகிகவைதிகவடிவ இவ்விரண்டு விஷயாநந்த பிரஹ்மாநந்தங்களையும் இரண்டு பாஷைகளை யறியும் புருஷனைப்போ லறிகின்றான்.

(வி-ம்.)

தத்துவஞானியானவன் தான் அவிரோதி விஷயங்களை அநுபவிப்பவனாய் அவ்விஷயங்களினின்று முண்டாகிய விஷயாநந்தமும் உபநிஷதங்களின் வாக்கியத்தினாலறிந்த பிரஹ்மாநந்தமுமாகிய இலௌகிக வைதிக வடிவ விஷயாநந்த பிரஹ்மாநந்தங்க ளிரண்டையும் இரண்டு பாஷைகளை யறியும் புருஷனைப்போல் அநுபவிக்கின்றான் என்பது பொருள். (கநo)

கஙு. துக்காநுபவதசையில் மனக்கொதிப்பின்றி நிஜாநந்தத்தின் அநுபவம் சம்பவிக்குமாறு.

[கஉஎங] दुःखप्राप्तौ न चोद्वेगो यथापूर्वं यतो द्विदृक् ।
गंगामग्नार्धकायस्य पुंसः सीतोष्णधीर्यथा ॥ १३१ ॥

(அ-கை.)

அப்படியானால் துக்கத்தினை யநுபவிக்கும் நிலையில் விக்ஷேப மிருக்கின், எப்படி நிஜாநந்தத்தின் அநுபவ முண்டாகு மென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

यतः द्विदृक् । दुःखप्राप्तौ यथापूर्वं च उद्वेगः न ॥

(சு-ம்.)

ஏதனால் விவேகி இரண்டு திருஷ்டி யுடையவனு யிருக்கின்றானோ, அத னால் துக்கத்தின் அடைவுண்டாகியும் முன்போல அவனுக்கு விக்ஷேப மில்லை.

(வி-ம்.)

எக்காரணத்தால் விவேகிபுருஷன் இரண்டு திருஷ்டி யுடையவனாய் அதாவது இலௌகிக வைதிகவடிவ இரண்டு வியவகாரங்களையும் அறிபவ னாயிருக்கின்றானோ, அதனால் துக்கத்தினடைவு உண்டாயினும், முன் அஞ் ஞானதசையினைப்போல அவனுக்கு * உக. விக்ஷேப முண்டாகிறதில்லை; விவேகத்தினால் அந்தந்தக்காலத்தில் விக்ஷேபம் பாதிக்கப்படுவதாயிருத்த லின். ஆதலால் துக்கத்தினை அநுபவிக்குங்காலத்தில் நிஜாநந்தத்தின் அநுசந்தானம் விரோதத்தினை அடைகிறதில்லை யென்பது பொருள்.

(அ-கை.)

ஒருகாலத்தில் துக்கம் நிஜாநந்த மிரண்டனையும் அநுசந்தானஞ் செய் தலில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

यथा गंगामग्नार्धकायस्य पुंसः शीतोष्णधीः ॥

(சு-ம்.)

எப்படிக் கங்கையில் மூழ்கிய பாதி சரீரமுடைய புருஷனுக்கு ஒரே காலத்தில் சீதோஷ்ணஞான முண்டாகின்றதோ, அதுபோல விவேகிக்குத் துக்க நிஜாநந்தங்களின் புத்தி யுண்டாகின்றது. (கங்க)

சச. பலிதார்த்தம் (ஞானிக்கு ஜாக்கிரசொப்பனங்களில் பிரஹ்மசுகம் தோற்றுதல்).

[கஉஎச] इत्थं जागरणे तत्त्वविदो ब्रह्मसुखं सदा ।
भाति तद्वासनाजन्ये स्वप्ने तद्भासते तथा ॥ १३२ ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

---

* உக. துக்கத்தின் அடைவுண்டாக அதன் நிவிருத்தியில் சாமர்த்தியமின்றிய புருஷன் அந்தத் துக்கத்தின் அநுபவத்தால் அடக்க(விசாரிக்க)ப்பட்ட துக்கம் விக்ஷேப மெனப்படும். இதனையே உத்வேக மென்றும் மனக்கோதிப் பென்றும் கூறு வர்.

इत्थं तत्त्वविदः जागरणे सदा ब्रह्मसुखं भाति ॥

(அ-ம்.)

இவ்வாறு தத்துவஞானிக்குச் சாக்கிரத்தில் எப்போதும் பிரஹ்ம சுகம் விளங்குகின்றது.

(வி-ம்.)

எப்போதும் என்பதற்குச் சுகதுக்கங்களின் அநுபவத்தையிலும், சும்மாவிருக்கும் நிலையிலும் என்பது பொருள்.

(அ-கை.)

கேவலம் ஜாக்கிரத்திலேயே அந்தப் பிரஹ்மாநந்தத்தின் விளக்க முண்டாகின்றது என்பது இல்லை. ஆனால் சொப்பனாவஸ்தையிலும் பிரஹ்மாநந்தத்தின் விளக்க முண்டாகின்றதென்று கூறுகின்றார்.—

तद्वासनाजन्ये स्वप्ने तत् तथा भासते ॥

(அ-ம்.)

அதனது அதாவது ஜாக்கிரத்தினது வாசனையாற் றோன்றிய சொப்பனத்திலும் அந்தப் பிரஹ்மசுகம் அவ்வாறே தோற்றுகின்றது.

(வி-ம்.)

அதனது வாசனையாற்றோன்றிய என்னும் சொப்பனத்தின் விசேஷணமானது ஏதுவாகிய கர்ப்பத்தை யுடையதாம். ஆதலால் சொப்பனம் ஜாக்கிரவாசனையாற் றோன்றியதா யிருத்தலின் அதன்கண்ணும் அந்தப்பிரஹ்ம சுகம் அவ்வாறு ஜாக்கிராவஸ்தையினைப்போல விளங்குகின்றது என்பது பொருள். (௧௩௨)

௧௫. சொப்பனத்தில் அஞ்ஞனைப்போல அறிஞனுக்குச் சுகத்தின் அநுபவமிருத்தல்.

[௧௨௭௫] अविद्यावासनाप्यस्तीत्यतस्तद्वासनोत्थिते ।
स्वप्ने मूर्खवदेवैष सुखं दुःखं च वीक्षते ॥ १३३ ॥

(அ-கை.)

அப்படியானால் சொப்பனம் ஆநந்தத்தினது வாசனையினுற் றோன்றியதாகவே, அதில் ஆநந்தமே தோற்றுகின்றதா? துக்க மில்லையா? என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

अविद्यावासना अपि अस्ति अतः तद्वासनोत्थिते स्वप्ने मूर्खवत् एव एषः सुखं च दुःखं वीक्षते ॥

(த-ம்.)

அவித்தையின் வாசனையும் சொப்பனத்திற்குக் காரணமாம். ஆதலால் அவ்வவித்தையின் வாசனையால் உண்டாகிய சொப்பனத்தில் மூர்க்கனைப்போலவே இந்த ஞானி சுகதுக்கங்களைக் காண்கின்றான்.

(வி-ம்.)

கேவலம் ஆநந்தத்தினது வாசனையின் பலத்தினாலேயே சொப்பனமுண்டாகிறதில்லை. ஆனால் அவித்தையினது வாசனையின் பலத்தினாலும் சொப்பன முண்டாகின்றது. ஆதலால் அவித்தையின் வாசனையாற் றோன்றியதா யிருத்தலின் அந்தச் சொப்பனத்தில் அஞ்ஞானியினைப்போல ஞானிக்கும் நியமமின்றிய சுகத்தின் அநுபவ முண்டாகின்றது. (௧௩௩)

௧௯. முழு கிரந்தத்திலும் கூறிய அர்த்தத்தினைச் சூசிப்பித்தல்.

[௧உஎ௯] ब्रह्मानंदाभिधे ग्रंथे ब्रह्मानंदप्रकाशकम् ।
योगिप्रत्यक्षमध्याये प्रथमेऽस्मिनुदीरितम् ॥ १३४ ॥

(அ-கை.)

இத்துணை எல்லாக் கிரந்தங்களாலும் கூறிய அர்த்தத்தினைச் சூசிப்பிக்கின்றார்:—

ब्रह्मानंदाभिधे ग्रंथे अस्मिन् प्रथमे अध्याये ब्रह्मानंदप्रकाशकं योगिप्रत्यक्षं उदीरितम् ॥

(த-ம்.)

பிரஹ்மாநந்த மென்னும் கிரந்தத்திலுள்ள இம்முதல்அத்தியாயத்தில் பிரஹ்மாநந்தத்தினை விளக்கும் யோகியின் அபரோக்ஷாநுபவம் சொல்லப்பட்டது.

(வி-ம்.)

பிரஹ்மாநந்த மென்னும் ஐந்து அத்தியாயவடிவ கிரந்தத்திலுள்ள இம்முதல் அத்தியாயத்தில் சுழுத்தியவஸ்தையிலும் உதாசீனத்தன்மையின் காலத்திலும், சமாதியவஸ்தையிலும், சுகதுக்கதசையிலும் சொப்பிரகாச சேதனவடிவ பிரஹ்மாநந்தத்தினை விளக்கும் யோகியின் அநுபவவடிவ அபரோக்ஷஞானம் சொல்லப்பட்டது என்பது பொருள். இந்த யோகியின் பிரத்தியக்ஷம் ஆகமமாகிய சுருதிமுதலியவற்றிற்கும் உபலக்ஷணமாம்; ஏனெனின், அவ்வாகமாதிப் பிரமாணங்களும் இவ்வத்தியாயத்தில் காட்டப்பட்டிருத்தலால். (௧௩௪)

பிரஹ்மாநந்தத்திலுள்ள
யோகாநந்தமென்னும்
பதினோராம் பிரகரணம்
முடிந்தது.

ஓம் தத்ஸத்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ பஞ்சதசி.

## கஉ. பிரஹ்மாநந்தத்தில் § ஆத்மாநந்தம்.

### இரண்டாம் அத்தியாயம்

### பன்னிரண்டாம் பிரகரணம்.

க. ஆத்மாநந்தத்தின் அதிகாரியும் ஆத்மாவின்பொருட்டே சகல வஸ்துக்களின் பிரியத்தன்மைபூர்வக ஆத்மாவின் மூவகைமை கஉ௭௭-கூ௱உகூ.

க. மந்தபுத்தியுடைய அதிகாரிக்கு ஆத்மாநந்தத்தினால் போதிக்கும் யோக்கியதை கஉ௭௭-கஉ௮க.

க. மூடனது கதியின்பொருட்டுச் சிஷ்யன் வினவுதல்.

[கஉ௭௭] नन्वेवं वासनानंदाद्ब्रह्मानंदादपीतरम् ।
वेत्तु योगी निजानंदं मूढस्यात्रास्ति का गतिः ॥ १ ॥

(அ-கை.)

இவ்வாறு முதல் யோகாநந்த மென்னும் அத்தியாயத்தில் விவேகிபுருஷனுக்கு யோகாப்பியாசத்தினால் நிஜாநந்தாநுபவத்தின் தன்மையினைக் காட்டி, இப்போது இவ்வத்தியாயத்தில் மந்தபுத்தியுடைய ஜிஞ்ஞாசுவாகிய சொரூபாநந்தத்தினை அறியும் விருப்புடையவனுக்கு ஆத்மாநந்தசப்தத்தின் வாச்சியமாகிய "துவம்" பதார்த்தத்தின் விவேசனவடிவ வாயிலால் பிரஹ்மாநந்தாநுபவத்தின் றன்மையினைக் காட்டுதற்கு நூலாசிரியர் சிஷ்யனது வினவினை வெளிப்படுத்துகின்றார்:—

ननु एवं योगी वासनानंदात् ब्रह्मानंदात् अपि इतरं निजानंदं वेत्तु । अत्र मूढस्य का गतिः अस्ति ॥

(சு-ம்.)

அப்படியானால் இவ்வாறு யோகாநந்தப்பிரகரணத்தில் சொல்லியபடி யோகிபுருஷன் வாசனாநந்தத்தினின்றும் பிரஹ்மாநந்தத்தினின்றும் வேறான நிஜாநந்த மெதுவோ அதனை அநுபவிக்குக. இங்கே மூடனுக்குக் கதி யாது? அதனைச் சொல்லவேண்டும். (க)

---

§. பிரத்தியகாத்மாவின் சொரூபவடிவ ஆநந்தம் யாதோ அது ஆத்மாநந்தமாம். அதனைப் பிரதிபாதிக்கும் பிரகரணமும் ஆத்மாநந்த மெனப்படும்.

உ. அதிமூடனுக்கு வித்தையின் (ஞானத்தின்) அதிகாரமின்மை.

[கஉஎஅ] धर्माधर्मवशादेष जायतां म्रियतामपि ।
पुनः पुनर्देहलक्षैः किन्नो दाक्षिण्यतो वद ॥ २ ॥

(அ-கை.)

இப்படிச் சிஷ்யன் கேட்க, அப்போது குருவானவர் அதிமூடனுக்கு ஞானத்தின் அதிகாரமில்லையென்று கூறுகின்றார்:—

एषः धर्माधर्मवशात् देहलक्षैः पुनः पुनः जायतां अपि म्रियतां नः दाक्षिण्यतः किं वद ॥

(சு-ம்.)

இவன் தர்மாதர்மவசத்தால் மறுபடியும் மறுபடியும் இலக்ஷக்கணக்கான தேகங்களால் ஜன்மிக்க அல்லது மரிக்குக. இதில் நம்முடைய தாக்ஷிண்ணியத்தால் என்ன பிரயோஜனம்? சொல்.

(வி-ம்.)

இவ்வதிமூடன் அநாதி சம்சாரத்தில் முற்சன்மங்களில் அநுஷ்டித்த புண்ணியபாபத்தின் வசத்தால் நாநாவிதமான தேகங்களை அங்கீகரித்து மறுபடியும் மறுபடியும் பிறக்குக அல்லது இறக்குக என்பது பொருள்.()

ஈ. சிஷ்யனால் மூடன்பொருட்டுத் தயையுடைய குருவின் பிரயோஜனத்தினைக் கூறுதலும் குருவினால் மூடனிடத்து இரண்டு விகற்பமும்.

[கஉஎகூ] अस्ति वोऽनुजिघृक्षुत्वाद्दाक्षिण्येन प्रयोजनम् ।
तर्हि ब्रूहि स मूढः किं जिज्ञासुर्वा पराङ्मुखः ॥ ३ ॥

(அ-கை.)

எல்லோருக்கும் அநுக்கிரகஞ்செய்பவரா யிருத்தலின் ஆசாரியராகிய குருவானவர் அம்மூடனுக்கும் ஒரு கதியினைச் சொல்லவேண்டுமென்று சிஷ்யன் சொல்லுகின்றான்:—

वः अनुजिघृक्षुत्वात् दाक्षिण्येन प्रयोजनं अस्ति ॥

(சு-ம்.)

தாங்கள் எல்லோருக்கும் அநுக்கிரகிக்க இச்சையுடையவர்களாயிருத்தலால் அநுகிரகித்தலால் பிரயோஜனமுண்டு.

(வி-ம்.)

ஆசாரியராகிய தாம் சிஷ்யனை ஈடேற்றுவதாகிய அநுக்கிரகஞ் செய்யும் இச்சையோடு கூடியிருத்தலின் அறிவித்தலால் அந்தச் சிஷ்யனை உத்தாரணஞ்செய்யும்வடிவ பிரயோஜன முண்டு என்பது பொருள்.

(அ-கை.)

இத்தன்மைய சிஷ்யனது வார்த்தையினைக் கேட்டுக் குருவானவர் அச்சிஷ்யனை விகற்பித்துக் கேட்கின்றார்:—

तर्हि सः मूढः किं जिज्ञासुः वा पराङ्मुखः ब्रूहि ॥

(சு-ம்.)

அப்போது அம்மூடன் என்னை? ஜிஞ்ஞாசுவா? அதாவது சொரூபத்தினை யறியும் விருப்புடைய விரக்தனோ? அல்லது வெளிமுகனாகிய இராகியா? சொல். (ங)

ச. ஒவ்வொரு விகற்பத்திலும் இரண்டிரண்டு விகற்பங்களின் அபிப்பிராயத்தால் சமாதானம்.

[கஉ அo] उपास्तिं कर्म वा ब्रूयाद्विमुखाय यथोचितम् ।
मंदप्रज्ञं तु जिज्ञासुमात्मानंदेन बोधयेत् ॥ ४ ॥

(அ-கை.)

எப்போது மூடனுக்கு யாதேனு மோர்கதி சொல்லவேண்டுமோ அப்போது அம்மூடன் இராகியா அதாவது விஷயப்பற்றுள்ளவனோ? அல்லது விரக்தனோ? சொல் என்பவை இரண்டு விகற்பங்களாம், அவற்றுள், இராகி எவனோ அவனுடைய இராகமாகிய பிரியத்தை அநுசரித்துக் கர்மத்தினை யாவது உபாசனையினையாவது சொல்லவேண்டும் என்று முதற்பக்ஷத்தில் குருவானவர் சமாதானம் கூறுகின்றார்:—

विमुखाय यथोचितं उपास्तिं वा कर्म ब्रूयात् ॥

(சு-ம்.)

தத்துவஞானத்தினின்றும் திரும்பியவனிடத்து உசிதமானபடி உபாசனையையாவது கர்மத்தினையாவது சொல்லவேண்டும்.

(வி-ம்.)

தத்துவஞானத்தினின்றும் விலகிய பார்வையுடையவனிடத்துத் தக்கபடி சொல்லவேண்டியது. பிரஹ்மலோகமுதலியவற்றின் விருப்பமுடையவனாயின் அவனுக்கு உபாசனை சொல்லவேண்டியது. சுவர்க்கமுதலியவற்றின் விருப்பமுடையவனாயின் அவனுக்குக் கர்மம் சொல்லவேண்டியது என்பது பொருள்.

(அ-கை.)

ஜிஞ்ஞாசு வென்னும் இரண்டாவதுபக்ஷத்திலும் அந்த ஜிஞ்ஞாசுஅதி விவேகியா? அல்லது மந்தபுத்தியுடையவனு? என்று விகற்பித்து, அதி விவேகிக்கோ முன் அத்தியாயவடிவ யோகாநந்தத்தில் சொல்லியபடி பிரஹ்மசாக்ஷாத்கார முண்டாகுமென்றறிந்து, மந்தப்பிரஞ்ஞனுக்கு அந்தப் பிரஹ்மத்தினது தரிசனத்தின் உபாயத்தினைக் கூறுகின்றார்:—

मंदप्रज्ञं जिज्ञासुं तु आत्मानंदेन बोधयेत् ॥

(சு-ம்.)

மந்தப்பிரஞ்ஞனுகிய ஜிஞ்ஞாசுவுக்கோ ஆத்மாநந்தத்தால் போதிக்க வேண்டும்.

(வி-ம்.)

எவனுடைய புத்தியாகிய பிரஞ்ஞை மந்தமா யிருக்கின்றதோ அப்படிப்பட்ட புருஷன் மந்தப்பிரஞ்ஞ னெனப்படுவன். அறிய விரும்புகிறவன் எவனே அவன் ஜிஞ்ஞாசு வெனப்படுவன். அந்த மந்தபுத்தியுடைய ஜிஞ்ஞாசுவுக்கு ஆத்மாநந்தத்தின் விவேசனவடிவ வாயிலால் போதிக்கவேண்டும். (௪)

௫. நான்காவது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தில் யாஞ்ஞவல்கிய மைத்திரேயியின் உதாரணம்.

[கஉஅக] बोधयामास मैत्रेयीं याज्ञवल्क्यो निजप्रियाम् ।
न वा अरे पत्युरर्थे पतिः प्रिय इतीरयन् ॥ ५ ॥

(அ-கை.)

இவ்வாறு ஆத்மாநந்தத்தினுல் எந்தக் குருவானவர் எந்தச் சிஷ்யனுக்குப் போதித்திருக்கின்றன ரெனக் கூறுகின்றார்:—

याज्ञवल्क्यः मैत्रेयीं निजप्रियां "अरे पत्युः अर्थे पतिः प्रियः न वा" इति ईरयन् बोधयामास ॥

(சு-ம்.)

யாஞ்ஞவல்கியமுனி மைத்திரேயி யென்னும் தன்னுடைய பிரியைக்கு "ஸ்திரீயே! பதியின்பொருட்டுப் பதிப்பிரியனுகான்" என்று சொல்லிப் போதித்தனர்.

(வி-ம்.)

யாஞ்ஞவல்கியரென்னும் யஜுர்வேதத்தினது சாகையின் விசேஷமாகிய * க. வாஜஸநேயிசாகையின் பிரவர்த்தகரான ஓர் இருஷி மைத்திரேயி யென்னும் பெயருள்ள தனது பிரியையாகிய பாரியைக்கு "ஓ! மைத்திரேயி! பதியினது காமமாகிய போகத்தின்பொருட்டுப் பதிப்பிரியனாகான்." என்னும் இவைமுதலிய விதமாக * உ. உபதேசித்தார் என்பது பொருள். (கூ)

உ. ஆத்மாவின்பொருட்டுச் சகல வஸ்துக்களும் பிரியமுடையனவா மென்பதனைப் போதிக்கும் சுருதியினது தாற்பரியத்தின் விபாகம்

கஉஅஉ-கஉகூ.

க. சுலோகம் கஉஅக-ல் கூறிய பிரமாணத்தில் உள்ள சகல பரியாயவாக்கியத்தின் தாற்பரியம்.

[கஉஅஉ] पतिर्जाया पुत्रवित्ते पशुब्राह्मणबाहुजाः ।
लोका देवा वेदभूते सर्वं चात्मार्थतः प्रियम् ॥ ६ ॥

(அ-கை.)

மேல் கஙசஅ-வது சுலோகத்தில் சொல்லப்படும் "பரமப்பிரேமைக்கு அதாவது எல்லாவற்றினும் அதிகப் பிரியத்திற்கு விஷயமா யிருத்தலால் ஆத்மா பரமாநந்தவடிவமென்று அங்கீகாரஞ்செய்யத்தக்கதாம்." என்னும் வாக்கியத்தால் "பரமப்பிரேமைக்கு விஷயமாதலால்" என்னும் ஏதுவால் ஆத்மாவின் பரமாநந்தத்தன்மையினைச் சாதிக்க விரும்பிய ஆசாரியர் ஆதியில் கஉஅஉ-கஙசஅ வது சுலோகங்களில் பரமப்பிரேமைக்கு விஷயமாதல்வடிவ ஏதுவைக் கூறுதற்பொருட்டு முதலில் கஉஅக-வது சுலோகத்தில் உதாகரிக்கப்பட்ட சுருதிவாக்கியத்தினது உபலக்ஷணத்தைப்பற்றியதா யிருத்தலின் அபிப்பிராயத்தால் அந்தச் சுருதிவடிவப் பிரமாணத்தினுள்ள சகலபரியாயவடிவ வாக்கியத்தின் தாற்பரியத்தினையும் கூறுகின்றார்:-

* க. வாஜ மென்பது குதிரையின் பிடரியிலுள்ள மயிர்; அவற்றால் எவர் எஜுர் வேதத்தின் சமூகத்தினை ஸநீ அதாவது தானம் செய்திருக்கின்றனரோ, அத்தன்மைய அசுவவடிவம் தாங்கிய சூரியன் வாஜஸநீ எனப்படுவர். அச்சூரியன் எவருக்குச் சேவிக்கத்தக்கவரா யிருக்கின்றனரோ, அத்தன்மைய யாஞ்ஞவல்கியமுநி வாஜஸநேயரெனப்படுவர். தைத்திரீய மென்னும் கிருஷ்ணயஜுர் வேதத்தினும் விலக்ஷணமான சுக்கிலவர்ணயஜுர்வேதவடிவ காண்வமுதலிய பதினைந்து சாகைகளிருக்கின்றன. அவை எதனால் யாஞ்ஞவல்கியரால் பிரவிர்த்திக்கப்பட்டனவோ அதனால் வாஜஸநேயி யென்னும் பெயராற் சொல்லப்படுகின்றன.

* உ. இவ்வார்த்தை பிருகதாரணியக உபநிஷத்தின் மூன்றாவது அத்தியாயத்திலும் ஆறாவது அத்தியாயத்திலும் படிக்கப்பட்ட மைத்ரேயிப்பிராஹ்மண மென்னும் பெயரையுடைய பிரகரணத்தில் பிரசித்தமாம்.

पतिः जाया पुत्रवित्ते पशुब्राह्मणबाहुजाः लोकाः देवाः वेदभूते च सर्वं आत्मार्थतः प्रियम् ॥

(சு-ம்.)

பதி, ஸ்திரீ, புத்திரன், தனம், ஆ குதிரை முதலிய பசு, பிராஹ்மணத் தன்மை ஜாதி, க்ஷத்திரியத்தன்மை ஜாதி, சுவர்க்காதி லோகங்கள், ஈசுவராதி தெய்வம், இருக்குமுதலிய வேதம், பிருதிவிமுதலிய பூதம் என்னும் இவ்வெல்லாப்போக்கிய சமூகங்களும் ஆத்மாவாகிய போக்தாவின் பொருட்டுப் பிரியமுள்ளனவாம்.

(வி-ம்.)

பர்த்தா, பாரியைமுதலிய போகசாமக்கிரியின் சமூகங்கள் எவையோ அவை போக்தாவின் சேஷங்(உபகாரி)களாயிருத்தலின் போக்தாவின் சம்பந்தத்தினலேயே பிரியமாயிருக்கின்றன; சொரூபமாகப் பிரியமாகா என்பது அபிப்பிராயம். (௬)

௨. ஸ்திரீக்குப் பதியினிடத்தும் பதிக்கு ஸ்திரீயினிடத்தும் அந்நியோந்நிய இச்சையினல் பிரவிருத்தியிலுமாம் பிரீதி ஆத்மார்த்தமாதல்.

[௧௨அ௩] पत्याविच्छा यदा पत्न्यास्तदा प्रीतिं करोति सा ।
क्षुदनुष्ठानरोगाद्यैस्तदा नेच्छति तत्पतिः ॥ ७ ॥

(அ-கை.)

இப்போது முன் ௧௨அக-வது சுலோகத்தில் உதாரணமாக்கப்பட்டதாகிய "न वा अरे! पत्युः कामाय पतिः प्रियो भवति । आत्मनस्तु कामाय पतिः प्रियो भवति॥ மைத்திரேயி! பதியினது காமத்தின்பொருட்டுப் பதிப்பிரியனாகிறதில்லை. ஆனால் ஆத்மாவினது காமத்தின்பொருட்டுப் பதிப்பிரியனாகின்றான்." என்னும் சுருதிவாக்கியத்தினது தாற்பரியவடிவ அர்த்தத்தினைப் பிரித்துக் காட்டுகின்றார்:—

यदा पत्न्याः पत्यौ इच्छा । तदा सा प्रीतिं करोति । तत्पतिः क्षुदनुष्ठानरोगाद्यैः तदा न इच्छति ॥

(சு-ம்.)

எப்போது பத்தினிக்குப் பதியினிடத்து இச்சை யுண்டாகின்றதோ, அப்போது அவள் பிரீதியைச் செய்கின்றாள். அவளுடைய பதியானவன் பசி, அநுஷ்டானம், ரோகமுதலியவற்றோடு கூடியிருக்கின் அப்போது அவளை இச்சிக்கிறதில்லை.

(வி-ம்.)

எந்தக்காலத்தில் பத்தினியாகிய மனைவிக்குப் பதியாகிய கணவனிடத்தில் இச்சையுண்டாகின்றதோ, அப்போது அப்பத்தினி பதியினிடத்துப் பிரீதியாகிய சிநேகத்தைச் செய்கின்றாள். பதி பசிமுதலிய இச்சையின்மைக்குக் காரணமானவற்றோடு கூடியிருக்கின், அப்போது அப்பத்தினியை விரும்புகிறதில்லை. (எ)

[கஉ-அச] न पत्युरर्थे सा प्रीतिः स्वार्थ एव करोति ताम् ।
पतिश्चात्मन एवार्थे न जायार्थे कदा च न ॥ ८ ॥

(அ-கை.)

இவ்வாறாகவே என்ன சித்தித்தது எனக் கூறுகின்றார்:—

सा प्रीतिः पत्युः अर्थे न तां स्वार्थे एव करोति ॥

(சு-ம்.)

அந்தப் பத்தினியின் பிரீதி பதியின்பொருட்டன்று. ஆனால் பத்தினி அந்தப் பிரீதியினைத் தன்பொருட்டே செய்கின்றாள்.

(வி-ம்.)

பாரியையினால் செய்யப்படும் பிரீதி பதியினது பிரயோஜனத்தின் பொருட்டன்று. ஆனால் பாரியை பதியினிடத்து அந்தப் பிரீதியினைத் தனது பிரயோஜனத்தின்பொருட்டே செய்கின்றாள்.

(அ-கை.)

“न वा अरे ! जायायै कामाय जाया प्रिया भवत्यात्मनस्तु कामाय जाया प्रिया भवति मைத்திரேயி! பத்தினியினது காமத்தின்பொருட்டுப் பத்தினி பிரியையாகாள்” என்பதனை ஆதியாக வுடையதும், “न वा अरे सर्वस्य कामाय सर्वं प्रियं भवति । आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति ॥ மைத்திரேயி! எல்லாவற்றினது காமத்தின் பொருட்டு எல்லாமும் பிரியமாகிறதில்லை. ஆனால் ஆத்மாவினது காமத்தின்பொருட்டு யாவும் பிரியமாகின்றன.” என்னும் முடிவினையுடைய சுருதிவாக்கியங்களின் தாற்பரியத்தைக் கிரமமாகப் பிரித்துக்காட்டுகின்றார்:—

पतिः च आत्मनः अर्थे एव जायार्थे कदा च न ॥

(சு-ம்.)

பதியும் தன்பொருட்டே பிரியத்தைச் செய்கின்றான்; பத்தினியின் பொருட்டு ஒருபோதும் செய்கிறதில்லை.

(வி-ம்.)

பதியும் தனது பிரயோஜனத்தின்பொருட்டே பத்தினியினிடத்துப் பிரியத்தைச் செய்கின்றான்; பத்தினியினது பிரியத்தின்பொருட்டன்று என்பது பொருள். (அ)

[கஉ-அ௯] अन्योऽन्यप्रेरणेऽप्येवं स्वेच्छयैव प्रवर्तनम् ॥ ९॥

(அ-கை.)

அப்படியானால் பதிபத்தினி இவர்களில் ஒவ்வொருவருடைய காமத்தின்பொருட்டுப் பிரவிருத்தியில் எந்தப் பிரீதி யிருக்கின்றதோ அது தன் பொருட்டா யிருக்குக. ஆனால் ஒரு காலத்தில் இருவருடைய இச்சையினாலும் பிரவிருத்தியில் எந்தப் பிரீதி யிருக்கின்றதோ அது பதிபத்தினி இருவர்பொருட்டுமாமே யென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

एवं अन्योन्यप्रेरणे अपि स्वेच्छया एव प्रवर्तनं ॥

(சு-ம்.)

இப்படி இருவர்களுக்கும் ஒருவருக்கொருவர் பிரேரணை யுண்டாயினும், தனது இச்சையினாலேயே பிரவிருத்தி யுண்டாகின்றது.

(வி-ம்.)

இவ்வாறுசொல்லியபடி தனது காமத்தினை நிரப்பும் இச்சையினாலேயே பதியும் பத்தினியுமாகிய இருவருடைய பிரவிருத்தியு முண்டாகின்றது. ()

௩. குழந்தையினிடத்துண்டாம் பிரீதி ஆத்மாவின்பொருட்டாதல்.

[கஉ-அசு] स्मश्रुकंटकवेधेन बालो रुदति तत्पिता ।
चुंबत्येव न सा प्रीतिर्बालार्थे स्वार्थ एव सा ॥ १० ॥

(அ-கை.)

தனது இச்சையினால் பிரவிருத்தித்தலையே காட்டுகின்றார்:—

सश्रुकण्टकवेधेन बालः रुदति । तत्पिता चुंबति एव । सा प्रीतिः बालार्थे न । सा स्वार्थे एव ॥

(சு-ம்.)

மீசைதாடியின் முட்போன்ற மயிர்கள் குத்துதலால் குழந்தை அழுகின்றது. அக்குழந்தையின் பிதா முத்தமிடுகின்றான். அந்தப் பிரீதி

குழந்தையின்பொருட்டன்று; ஆனால் அந்தப்பிரீதி பிதாவாகிய தன்பொருட்டாம்.

(வி-ம்.)

பிதாவானவன் குழந்தையின் முகமுதலியவற்றில் முத்தியிடுதல் புத்திரனது பிரீதியின்பொருட்டன்று; ஏனெனின் அப்புத்திரன் மீசைமயிர்கள் குத்துதலால் அழுகிறபடியால். ஆதலால் அப்புத்திரனது முகமுதலியவற்றில் முத்தியிடுதலானது பிதாவுக்குத் தனது திருப்தியின்பொருட்டேயாம் என்று அறிக வென்பது பொருள். (க0)

ச. தனத்திலுண்டாம் பிரீதி தன்பொருட்டாதல்.

[கஉ-அஎ] निरिच्छमपि रत्नादि वित्तं यत्नेन पालयन् ।
प्रीतिं करोति सा स्वार्थे वित्तार्थत्वं न शंकितम् ॥ ११ ॥

(அ-கை.)

சேதனமாகிய சங்கமவடிவ பதி, பத்தினி, புத்திரன் என்னும் இவர்களிடத்துச் செய்யப்படும் பிரீதிக்குத் தன்பொருட்டு பிறர்பொருட்டு என்பதில் சந்தேகம் சம்பவிக்கும். சடமாதலால் இச்சைமாத்திரமின்றிய தனமாகிய விஷயம் எதுவோ அதற்கு அத்தன்பொருட்டு என்னும் சங்கையேயில்லை யென்னும் அபிப்பிராயத்தால் " न वा अरे वित्तस्य कामाय वित्तं प्रियं भवत्यात्मनस्तु कामाय वित्तं प्रियं भवति ॥ ஓ! மைத்திரேயி! தனத்தினது காமத்தின்பொருட்டுத் தனம் பிரியமாகாது. ஆனால் ஆத்மாவின் காமத்தின்பொருட்டுத் தனம் பிரியமாகின்றது" என்னும் வாக்கியத்தினது தாற்பரியத்தினைக் கூறுகின்றார்:—

निरिच्छं अपि रत्नादि वित्तं यत्नेन पालयन् प्रीतिं करोति । सा स्वार्थे वित्तार्थत्वं शंकितं न ॥

இச்சையின்றிய மணிமுதலியவடிவ தனத்தினை முயற்சினால் இரக்ஷிக்கின்ற புருஷன் பிரீதியினைச் செய்கின்றான். அந்தப் பிரீதி தன்பொருட்டேயாம். அந்தப் பிரீதி தனத்தின்பொருட்டாதல் சங்கிக்கத்தக்கதன்று. (கக)

ரு. வணிகனுக்கு எருதிலுள்ள பிரீதி தன்பொருட்டாதல்.

[கஉ-அஅ] अनिच्छति बलीवर्दे विवाहयिषते बलात् ।
प्रीतिः सा वणिगर्थैव बलीवर्दार्थता कुतः ॥ १२ ॥

(அ-கை.)

சேதனத்தன்மையிருந்தும் பாரம் எடுத்தல்முதலிய இச்சையின்றிய பசுக்களை விஷயஞ்செய்கின்ற "न वा अरे पशूनां ஓ! மைத்திரேயி! பசுக்களினது காமத்தின்பொருட்டுப் பசு பிரியமாகாது. ஆனால் ஆத்மாவினது காமத்தின்பொருட்டுப் பசு பிரியமாகின்றது." என்னும் வாக்கியத்தினது தாற்பரியத்தினைக் கூறுகின்றார் :—

बलीवर्दे अनिच्छति बलात् विवाहयिषते । सा प्रीतिः वणिगर्था एव बलिवर्दार्थता कुतः ॥

(சு-ம்.)

எருதினைப்போல இச்சியாதிருந்தும் வலிந்து அதனைச் சுமையெடுப்பிக்கப் புருஷன் விரும்புகின்றான். அந்தப் பிரீதி வணிகன்பொருட்டேயாம். அந்தப்பிரீதி எப்படி எருதின்பொருட்டதாகும்?

(வி-ம்.)

எருது சுமையெடுக்க விரும்புகிற தில்லையாயினும், வணிகனாகிய வியாபாரி அந்த எருதினால் சுமையெடுப்பிக்க விரும்புகிறான். அங்குச் சுமையெடுத்தல் *ஈ. முதலியவற்றை விஷயஞ்செய்யும் பிரீதியானது வணிகன் பொருட்டாம்; எருதின்பொருட்டன்று என்பது பொருள். (கஉ)

க. பிராஹ்மணத்துவாதி ஜாதியிலுண்டாம் பிரீதி ஆத்மார்த்தமாதல்.

[கஉ-அக] ब्राह्मण्यं मेऽस्ति पूज्योहमिति तुष्यति पूजया ।
अचेतनाया जातेर्नो संतुष्टिः पुंस एव सा ॥ १३ ॥

(அ-கை.)

"न वा अरे ब्रह्मणः कामाय ஓ! மைத்திரேயி! பிராஹ்மணஜாதியினது காமத்தின்பொருட்டுப் பிராஹ்மணஜாதி பிரிய மன்று. ஆனால் ஆத்மாவினது காமத்தின்பொருட்டுப் பிராஹ்மணஜாதி பிரியமாம்" என்னும் வாக்கியத்தினது தாற்பரியத்தினைக் கூறுகின்றார் :—

---

* ஈ. முதலிய வென்னும் சொல் வாகனமேறிச் செல்லல் அல்லது அலங்கரித்தல் இரதமுதலியவற்றோடு பொருத்துதல் என்பவற்றின் இச்சை கொள்ளப்படும். முற்கூறிய காரியவடிவ நிமித்தத்தாற் றோன்றிய எருதின்கணுண்டாம் பிரீதியானது வணிகன்பொருட்டாம்; எருதின்பொருட்டன்று. ஏனெனின், எருதினுக்கோ அக்காரியங்களில் இச்சையு மில்லை. வணிகனுக்கு அக்காரியங்களில் இச்சை யிருக்கின்றது. ஆதலால் இவ்வார்த்தை பொருந்துகின்றது.

"ब्राह्मण्यं मे अस्ति अहं पूज्यः" इति पूजया तुष्यति । सा संतुष्टिः अचेतनायाः जातेः नो पुंसः एव ॥

(சு-ம்.)

"பிராஹ்மணத்துவஜாதி என்னுடையது நான் பூஜித்தற்குரியவன்" என்று பூஜையினால் சந்தோஷத்தை யடைகின்றான். அச்சந்தோஷம் ஜடமாகிய ஜாதிக்கில்லை; ஆனால் புருஷனுக்கே இருக்கின்றது.

(வி-ம்.)

பிராஹ்மணத்துவஜாதிவடிவ நிமித்தமுடைய பூஜையினால் "நான் பிராஹ்மணன்" என்னும் அபிமானமுடைய புருஷனே சந்தோஷத்தை யடைகின்றான். ஜடஜாதியாகிய பிராஹ்மணத்தன்மை யாதோ அது சந்தோஷத்தினை அடைகிறதில்லை யென்பது பொருள். (கங)

[கஉகுo] क्षत्रियोऽहं तेन राज्यं करोमीत्यत्र राजता ।
न जातेर्वैश्यजात्यादौ योजनायेदमीरितम् ॥ १४ ॥

(அ-கை.)

"न वा अरे क्षत्रस्य" ஓ! மைத்திரேயி! க்ஷத்திரியஜாதியினது காமத்தின்பொருட்டு க்ஷத்திரியத்துவம் பிரியமன்று" என்னும் வாக்கியத்தினது தாற்பரியத்தினைக் கூறுகின்றார்:—

"अहं क्षत्रियः तेन राज्यं करोमि" इति अत्र राजता । जातेः न ॥

(சு-ம்.)

"நான் க்ஷத்திரியத்தன்மை ஜாதியுடையவன். அக்காரணத்தால் இராஜ்ஜியத்தினைச் செய்கின்றேன்" என்னுமிடத்துள்ள இராஜத்தன்மை எதுவோ அது ஜாதிக்கில்லை.

(வி-ம்.)

இராஜ்ஜியத்தின் அநுபவவடிவ நிமித்தத்தாற்றோன்றிய சுகம் யாதோ அது க்ஷத்திரியத்தன்மை ஜாதியுடைய புருஷனுக்கே யுண்டு; க்ஷத்திரியத் தன்மையாகிய ஜாதிக்கில்லை என்பது பொருள்.

(அ-கை.)

இந்த க்ஷத்திரியனது உதாரணமானது வைசியன்முதலியோரைக் கொள்ளுதற்பொருட்டாமென்று கூறுகின்றார்:—

इदं वैश्यजात्यादौ योजनाय ईरितम् ॥

(த-ம்.)

இந்த ஸூத்திரியனது உதாரணம் வைசியஜாதிமுதலியவற்றில் பொருத்துதற் பொருட்டுச் சொல்லப்பட்டது. (கச)

எ. சுவர்க்கமுதலிய லோகங்களி லுண்டாம் பிரீதி ஆத்மார்த்தமாதல்.

[கஉ-கூக] स्वर्गलोकब्रह्मलोकौ स्तां ममेत्यभिवांछनम् ।
लोकयोर्नोपकाराय स्वभोगायैव केवलम् ॥ १५ ॥

(அ-கை.)

"न वा अरे लोकानां कामाय ஓ! மைத்திரேயி! சுவர்க்கமுதலிய லோகங்களினது காமத்தின்பொருட்டு லோகங்கள் பிரியமாகா." என்றல் முதலிய இவ்வாக்கியத்தின் தாற்பரியத்தினைக் கூறுகின்றார்:—

"स्वर्गलोकब्रह्मलोकौ मम स्तां" इति अभिवांछनं लोकयोः उपकाराय न केवलं स्वभोगाय एव ॥

(சு-ம்.)

"சுவர்க்கலோகமும் பிரஹ்மலோகமும் எனக்குக் கிடைக்குக." என்னும் விருப்பம் யாதோ அது லோகங்களினது உபகாரத்தின்பொருட்டன்று; ஆனல் கேவலம் தனது சுகாநுபவவடிவ போகத்தின்பொருட்டேயாம்.

(வி-ம்.)

சுவர்க்கலோகமும் பிரஹ்மலோகமுமாகிய இவ்விரண்டு லோகங்களையும் கொள்ளுதல் யாதோ அது கர்ம உபாசனைவடிவ இரண்டு சாதனங்களாலும் சம்பாதிக்கத்தக்க சகல லோகங்களையும் கொள்ளுதற்பொருட்டாம். (கரு)

அ. விஷ்ணுமுதலிய தேவர்களிடத்துண்டாம் பிரியம் தன்பொருட்டாதல்.

[கஉ-கூஉ] ईशविष्ण्वादयो देवाः पूज्यंते पापनष्टये ।
न तन्निष्पापदेवार्थं तत्तु स्वार्थं प्रयुज्यते ॥ १६ ॥

(அ-கை.)

மற்றும் கூறுகின்றார்:—

ईशविष्ण्वादयः देवाः पापनष्टये पूज्यन्ते । तत् निष्पापदेवार्थं न । तत् तु स्वार्थं प्रयुज्यते ॥

(சு-ம்.)

ஈசன் அதாவது அந்தரியாமி, அல்லது சிவன், விஷ்ணுமுதலிய தேவதைகள் பாபம் நஷ்டமாதற்பொருட்டுப் பூஜிக்கப்படுகின்றன. அந்தப் பூஜனம் பாபமின்றிய தேவதைகளினது பிரயோஜனத்தின்பொருட்டு உபயோகியாகிற தில்லை. ஆனால் தனது பிரயோஜனத்தின்பொருட்டு உபயோகியாகின்றது.

(வி-ம்.)

இங்குப் பாபம் நஷ்டமாதற்பொருட்டு என்பதற்கு இவனுடைய பாபம் நீங்கும்பொருட்டு என்பது பொருள். அந்தப் பூஜனம் பாபமின்றிய தேவதைகளின் பொருட்டன்று அதாவது இயல்பாகவே பாபமின்றிய தேவதைகளினது பிரயோஜனத்தின் பொருட்டன்று; ஆனால் தன்பொருட்டாம் அதாவது பூஜைசெய்வோனது பிரயோஜனத்தின்பொருட்டாம். ()

க. இருக்குமுதலிய வேதங்களி லுண்டாம் பிரீதி தன்பொருட்டாதல்.

[க௨கூ௩] ऋगादयो ह्यधीयंते दुर्ब्राह्मण्यानवाप्तये ।
न तत्प्रसक्तं वेदेषु मनुष्येषु प्रसज्यते ॥ १७ ॥

(அ-கை.)

மற்றும் கூறுகின்றார்:—

दुर्ब्राह्मण्यानवाप्तये ऋगादयः हि अधीयंते । तत् वेदेषु न प्रसक्तं । मनुष्येषु प्रसज्यते ॥

(சு-ம்.)

துர்ப்பிராஹ்மணத்துவ அப்பிராப்தியின்பொருட்டு இருக்குமுதலிய நான்கு வேதங்களும் அத்தியயனஞ் செய்யப்படுகின்றன. அந்த அப்பிராஹ்மணத்தன்மை வேதங்களில் கிடைப்பதில்லை; ஆனால் மனிதர்களிடத்துக் கிடைக்கின்றது.

(வி-ம்.)

துர்ப்பிராஹ்மணத்தன்மை யென்பது விராத்தியத்தன்மைக்காம். அந்தத் துர்ப்பிராஹ்மணத்தன்மை மனிதர்களிலுள்ள மனிதத்தன்மை வடிவ வியாபகஜாதி எதுவோ அதனுள்ளடங்கிய வியாப்பியஜாதிவடிவமாம். அந்த மனிதத்தன்மைவடிவ ஜாதியின்றிய வேதங்களில் அந்த விராத்தியத்தன்மை * ௪. வாய்க்காது என்பது பொருள். (கஎ)

* ௪. கிடைத்த வஸ்துவின் (தோஷமுதலியவற்றின்) நிஷேதம் பொருந்தும். கிடைக்காததின் நிவிருத்தி கூடாது. எங்ஙனம்:—மனிதத்தன்மையாகிய ஜாதி யிருந்தால் அதன்கண் அடங்கிய பிராஹ்மணனுக்குத்தக்க மனிதனிடத்தில் வேதாத்தியயனமுதலியன வின்மையால் விராத்திய (துர்ப்பிராஹ்மணத்) தன்மைவடிவ ஜாதியின் அடைவு சம்பவிக்கின்றது. அதற்கு வேதாத்தியயனமுதலிய நிஷேதம் (நீக்கம்) உண்டாகின்றது. வேதங்களில் ஜாதி (மனிதத்தன்மைவடிவ வியாபகஜாதி) யின் அபாவம் இருக்கின்றது. ஆதலால் விராத்தியத்தன்மைவடிவ வியாப்பியஜாதியின் அபாவ மிருக்கின்றது.

௧௦. பிருதிவிமுதலிய பஞ்சபூதங்களிலுண்டாம் பிரீதி தன்பொருட்டாதல்.

[கஉ-கஅ] भूम्यादिपंचभूतानि स्थानतृट्पाकशोषणैः ।
हेतुभिश्चावकाशेन वांछंत्येषां न हेतवे ॥ १८ ॥

(அ-கை.)

மற்றும் கூறுகின்றார் :—

स्थानतृट्पाकशोषणैः च अवकाशेन हेतुभिः भूम्यादिपंचभूतानि वांछंति । एषां हेतवे न ॥

(சு-ம்.)

சகலப்பிராணிகளும் இடம், தாகநிவிருத்தி, பாகம், உலர்ச்சி, அவகாசம் என்னும் காரணங்களால் பூமிமுதலிய பஞ்சபூதங்களையும் விரும்புகின்றன; இப்பூதங்களினது காரணத்தின் பொருட்டன்று.

(வி-ம்.)

சகலப்பிராணிகளும் இடங்கொடுத்தல், தாகத்தினை நீக்கல், அந்நத்தினது வேகாத்தன்மையினை நீக்கல், ஈரமான வஸ்திரமுதலிய வஸ்துக்களை உலர்த்துதல், இருத்தற்கும் திரும்புதற்கும் இடங்கொடுத்தல் என்னும் பெயருடைய நிமித்தங்களால் பிருதிவிமுதலிய பஞ்சபூதங்களின் அபேக்ஷையினைச் செய்கின்றார்கள்; இப் பிருதிவிமுதலிய பூதங்களினது பிரயோஜனத்தின்பொருட்டன்று இடந்தருதலின் இச்சைமுதலிய நிமித்தங்கள். ஆதலால் பிருதிவிமுதலியன தாம் விருப்பத்தினைச் செய்கிறதில்லை என்பது பொருள். (கஅ)

௧௧. வேலைக்காரன்முதலியோருக்கு எஜமானன்முதலியோரிடத்தும் எஜமானன்முதலியோருக்குச் சேவகன்முதலியோரிடத்து முண்டாம் பிரீதி ஆத்மார்த்தமாதல்.

[கஉ-கக] स्वामिभृत्यादिकं सर्वं स्वोपकाराय वांछंति ।
तत्तत्कृतोपकारस्तु तस्य तस्य न विद्यते ॥ १९ ॥

(அ-கை.)

இப்போது “न वा अरे सर्वस्य कामाय ஓ! மைத்திரேயி! எல்லாவற்றினது போகத்தின்பொருட்டு எல்லாமும் பிரியமாகா” என்னும் வாக்கியத்தினது தாற்பரியத்தினைக் கூறுகின்றார்:—

स्वामिभृत्यादिकं सर्वं स्वोपकाराय वांछंति । तत्तत्कृतोपकारः तु तस्य तस्य न विद्यते ॥

---

(க) எந்த ஜாதியின்கண் உள்ளடங்கிய வேறு அனேக ஜாதிக ளிருக்கின்றனவோ அவை **வியாபகஜாதி** யெனப்படும். மனிதத்தன்மை ஜாதிபோல.

(உ) எந்த ஜாதியின் உள்ளடங்கிய வேறு ஜாதி இருக்கிறதில்லையோ, ஆனால் தான் வேறுஜாதியின் உள்ளடங்கிய தாகின்றதோ அது வியாப்பியஜாதி யெனப்படும். பிராஹ்மணத்தன்மை, க்ஷத்திரியத்தன்மைமுதலிய ஜாதிகள்போல.

(சு-ம்.)

எஜமானன் சேவகன்முதலிய எல்லோரையும் தமது உபகாரத்தின் பொருட்டு விரும்புகின்றனர். அந்தந்த எஜமானன்முதலியோரின் செய்யப்பட்ட உபகாரமோ, அந்தந்த எஜமானன்முதலியோர் பொருட்டன்று; ஆனல் தம்பொருட்டாம்.

(வி-ம்.)

வேலைக்காரன்முதலிய யாவரும் எஜமானன்முதலிய எல்லோரையும் தமது பிரயோஜனத்தின்பொருட்டு இச்சிக்கின்றனர். இவ்வாறே எஜமானன்முதலியோரும் தமது உபகாரத்தின்பொருட்டு வேலைக்காரன் முதலியோரை இச்சிக்கின்றனர். (கக)

கஉ. வெகு உதாகரணத்தினைக் காட்டுதலின் பிரயோஜனம்.

[கஉகூ] सर्वव्यवहृतिष्वेवमनुसंधातुमीदृशम् ।
उदाहरणबाहुल्यं तेन स्वां वासयेन्मतिम् ॥ २० ॥

(அ-கை.)

அப்படியானல் சுருதியில் இவ்வாறு வெகு உதாகரணங்களைக் காட்டுதல் எப்பிரயோஜனத்தின்பொருட்டுச் செய்யப்பட்டுளதென்று சங்கித்துக் கூறுகின்றார்:—

सर्वव्यवहृतिषु एवं अनुसंधातुं ईदृशं उदाहरणबाहुल्यं । तेन स्वां मतिं वासयेत् ॥

(சு-ம்.)

சகல விவகாரங்களிலும் இவ்வாறு அநுசந்தானம் செய்தற்கு இவ்வாறு உதாரணம் வெகுவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அக்காரணத்தால் தனது மதியை வாசனையோடுகூடிய தாக்கவேண்டும்.

(வி-ம்.)

இச்சையைமுன்னிட்ட போஜனதிசகல வியவகாரங்களிலும் இவ்வாறு ஆத்மாவினது காமத்தின்பொருட்டுச் சகலமும் பிரியமாமென்று கஉகூச-வது சுலோகத்தில் சொல்லியபடி சிந்தித்தற்பொருட்டுஇப்படி கஉஅஉ-வது சுலோகமுதல் சொல்லப்பட்ட பதிபத்தினிமுதலியோரிடத்துப் பிரீதியினைக் காட்டுதலாகிய உதாகரணம் வெகுவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அக்காரணத்தால் தனது புத்தியை வாசனையோடு கூடியதாக்கவேண்டும். அதாவது சகலவஸ்துக்களையும் தனது ஆத்மாவிற்கு உபகாரமாயிருக்குந் தன்மை யுணர்ச்சியால் தனது சொரூபத்தின் அத்தியந்தபிரியத்தன்மை

வடிவ பரமாநந்தத்தன்மையின் அநுசந்தானமுடையதாகச் செய்யவேண்டு மென்பது பொருள். (உ0)

ந. ஆத்மாவிலிருக்கிற பிரீதிபூர்வக ஆத்மாவின் பிரியதமத்துவம் கஉகூ-கங0

க. ஆத்மாவினை விஷயஞ்செய்யும் பிரீதியின் சொரூபத்தில் நான்கு விகற்பமும். அவற்றின் நிராகரணபூர்வகமான சமாதானமும்.

[கஉகூ] अथ केयं भवेत्प्रीतिः श्रूयते या निजात्मनि ।
रागो वध्वादिविषये श्रद्धा यागादिकर्मणि ॥ २१ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவிற்கு உபகாரியாயிருத்தலால் சகல வஸ்துக்க ளின் பிரியவடிவத்தன்மையைக் கூறுதலால் ஆத்மாவின் பிரியவடிவத்து வம் சொல்லப்பட்டது. அது பொருந்தாது. ஏனெனின், விகற்பஞ்செய் யின் பிரீதி நிரூபிக்கக்கூடாததாயிருத்தலின் என்னும் அபிப்பிராயத்தினால் பிரீதியின் சொரூபத்தினை வாதி கேட்கின்றான்:—

अथ या निजात्मनि प्रीतिः श्रूयते । इयं का भवेत् ॥

(சு-ம்.)

இப்போது தனது ஆத்மாவில் எந்தப் பிரீதி கேட்கப்படுகின்றதோ அது யாதாம் அதாவது என்ன வடிவமாம்?

(வி-ம்.)

மூலத்திலுள்ள இப்போது என்பதன் பரியாயமான अथ என்னும் சொல் யாதோ அது பிரசினத்தின்பொருட்டாம். அந்தப் பிரசினம் இது வாம்:—தனது சொரூபத்தில் எந்தப் பிரீதி சுருதியில் கேட்கப்பட்டிருக் கின்றதோ அந்தப் பிரீதி இராகவடிவமா? அல்லது சிரத்தைவடிவமா? அல்லது பக்திவடிவமா? அல்லது இச்சைவடிவமா? என்னும் நான்கு விகற்பங்களும் மூலத்திலுள்ள யாது என்னும் சொல்லிற்குப் பரியாயமாம்.

(அ-கை.)

இந்நான்கு பக்ஷங்களிலும் பிரீதிக்குச் சர்வ விஷயங்களையுமுடைமை சம்பவியாது என்று கூறுகின்றார்:—

रागः वध्वादिविषये । श्रद्धा यागादिकर्मणि ॥

(சு-ம்.)

இராகம் ஸ்திரீமுதலிய விஷயங்களிலுண்டாம். சிரத்தை யாகமுத லிய கர்மங்களிலுண்டாம்,

(வி-ம்.)

இராகவடிவப்பிரீதி யுண்டாயின் ஸ்திரீமுதலியவற்றிற்றான் உண்டாகும்; யாகாதிகளில் உண்டாகாது. சிரத்தைவடிவ பிரீதியுண்டாயின் யாகாதிகளிற்றான் உண்டாகும்; ஸ்திரீமுதலியவற்றி லுண்டாகாது. (உக)

[கஉ-கூஅ] भक्तिः स्याद्गुरुदेवादाविच्छा त्वप्राप्तवस्तुनि ।
तर्ह्यस्तु सात्विकी वृत्तिः सुखमात्रानुवर्तिनी ॥ २२ ॥

(அ.கை.)

இதுவுமது:—

भक्तिः गुरुदेवादौ स्यात् । इच्छा तु अप्राप्तवस्तुनि ॥

(சு-ம்.)

பக்தி குரு தெய்வமுதலியவற்றில் உண்டாம். இச்சையோ அடையப்படாத வஸ்துவில் உண்டாம்.

(வி-ம்.)

பக்திவடிவ பிரீதி யுண்டாயின் குரு தெய்வமுதலியவற்றில் உண்டாகும்; பிறவற்றி லுண்டாகாது. இச்சைவடிவ பிரீதி உண்டாயின் அப்பிராப்த வஸ்துவிலாம் அதாவது அது அடையப்படாத வஸ்துவை விஷயஞ் செய்வதாம்; பிறவற்றை விஷயஞ்செய்வ தாகாது. ஆதலால் பிரீதிக்கு எல்லா அநுகூல வஸ்துக்களையும் விஷயஞ்செய்யுந்தன்மை சம்பவியாது என்பது பொருள்.

(அ-கை.)

இப்போது சித்தாந்தியானவர் கூறப்பட்ட நான்கு விதங்கட்கும் வேறாகிய பக்ஷத்தினைக் கொண்டு மேல் பிரீதியின் சொரூபத்தினைக் கூறுகின்றார்:—

तर्हि सुखमात्रानुवर्तिनी सात्विकी वृत्तिः अस्तु ॥

(சு-ம்.)

அப்போது சுகமாத்திரத்தினை அநுசரித்து நடக்கும் சாத்துவிகவிருத்தியானது பிரீதியாகுக.

(வி-ம்.)

அப்போது பிரீதிக்கு இராகமுதலியவடிவமாதல் சம்பவியாதாகவே சுகமாத்திரத்தினை யநுசரித்து அதாவது சுகமே சுகமாத்திரமாம்; அதனை

யநுசரித்து இருப்பதாகிய சாத்துவிகி அதாவது சத்துவகுணத்தின் பரிணாமவடிவ அந்தக்கரணத்தின் விருத்தியானது பிரீதி யாகுக. (உஉ)

உ. சுலோகம் கஉ-கூ-அ-ல் கூறிய பிரீதி இச்சையினைவிட வேறுதலும் ஆத்மாவில் சுகசாதனவடிவத்தன்மையின் சங்கையும்.

[கஉ-சு-கூ] प्राप्ते नष्टेऽपि सद्भावादिच्छातो व्यतिरिच्यते ।
सुखसाधनतोपाधेरन्नपानादयः प्रियाः ॥ २३ ॥

அப்படியானால் அப்போது அவ்வொரே சுகத்தைக் கோசரிக்கும் பிரீதி இச்சையேயாகும் என்றுசங்கித்துப் பரிகரிக்கின்றார்:—

प्राप्ते नष्टे अपि सद्भावात् इच्छातः व्यतिरिच्यते ॥

(சு-ம்.)

கிடைத்த சுகமுதலியவற்றிலும், நஷ்டவிஷயத்திலும் இருத்தலால் பிரீதியானது இச்சையைவிட வேறும்.

(வி-ம்.)

இச்சை முதலில் கிடைக்காத சுகாதிகள்மாத்திரத்தினை விஷயஞ்செய்வவதா யிருக்கின்றது. அன்றியும் இப்பிரீதியோ கிடைத்தனவும் கிடையாதனவுமாகிய எல்லாச்சுகங்களையும் விஷயஞ்செய்வதாயிருக்கின்றது. ஏனெனின், கிடைத்த சுகமுதலியவற்றின்கண்ணும், நஷ்டமா அச்சுகமுதலியவற்றின்கண்ணும் பிரீதியானது இருத்தலால் அந்தப் பிரீதி இச்சைவடிவ விருத்தியினும் வேறுகின்றது.

(அ-கை.)

இப்போது சுகத்தின் சாதனமாகிய அந்நமுதலியவற்றில் எப்படிப் பிரீதி காணப்படுகின்றதோ, அப்படி ஆத்மாவினும் பிரீதி காணப்படுதலால் ஆத்மாவும் அந்நமுதலியவற்றினைப்போலச் சுகத்தின் சாதனமாகு மென்பதாக வாதி சங்கிக்கின்றான்.—

अन्नपानादयः सुखसाधनतः उपाधेः प्रियाः ॥

(சு-ம்.)

அந்நபானமுதலிய சுகத்தின் சாதனத்தன்மைவடிவ உபாதியினால் பிரியமாம்.

(வி-ம்.)

எப்படி அந்நபானமுதலிய சுகத்தின் சாதனத்தன்மைவடிவ உபாதியினால் பிரியம் காணப்படுகின்றதோ, அதுபோல ஆத்மாவும் அநுகூல பிரியமாயிருத்தலால் அந்நமுதலியவற்றைப்போலச் சுகத்தின் சாதனமாகும்

என்னும் அர்த்தம் மேற் சுலோகத்தோடு சேர்ந்ததாம். (உகூ)

கூ. சுலோகம் கஉகக-ல் கூறிய சங்கையின் பூர்ணத்தன்மையும் சமாதானமும்.

[ககூ00] आत्मानुकूल्यादन्नादिसमश्चेदमुनात्र कः ।
अनुकूलयितव्यः स्यान्नैकस्मिन्कर्मकर्तृता ॥ २४ ॥

(அ-கை.)

இதுவுமது:—

आत्मा अनुकूल्यात् अन्नादिसमः चेत् ॥

(சு-ம்.)

ஆத்மா அநுகூலமாயிருத்தலால் அந்நமுதலியவற்றிற்குச் சமமா மெனின்.

(வி-ம்.)

இங்கு இவ்வநுமானம் சூசிக்கப்பட்டிருக்கின்றது:—விவாதத்திற்கு விஷயமாகிய ஆத்மா சுகசாதன மாகத்தக்கதாம்; பிரியமாயிருத்தலால்; அந்நமுதலியவற்றைப்போல என்று கூறின்.

(அ-கை.)

அந்நபானமுதலியவற்றில் போகத்திற்குச் சாதனமாந்தன்மை உபாதியாம். ஆதலால் சுகத்திற்குச் சாதனமாந்தன்மை யுண்டு; ஆத்மாவில் போகத்தன்மைவடிவ உபாதி யுண்டு. ஆதலால் சுகத்திற்குச் சாதனமாந் தன்மை இல்லை யென்னும் அபிப்பிராயமாகக் கூறுகின்றார்:—

अत्र अमुना अनुकूलयितव्यः कः स्यात् ॥

(சு-ம்.)

இங்கு இதனால் அநுகூலத்தன்மையின் விஷயமாகத்தக்கது யாதாகும்?

(வி-ம்.)

இங்கு உலகத்தில் இச்சுகத்திற்குச் சாதனமாயிருத்தலால் அநுகூலமான ஆத்மாவினால் அநுகூலத்தன்மைக்கு விஷயமாகத்தக்க போக்தா யாதாகும் ? எதுவு மாகாது? ஏனெனின், ஆத்மாவிற்கு வேறாகப் போக்தா இல்லாமையால் என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவாகிய தானே அநுகூலத்தினால் தான் அநுகூலத்தன்மைக்கு விஷயமாகத்தக்கதாகும் என்னுமிடத்துக் கூறுகின்றார்:-

एकस्मिन् कर्मकर्तृता न ॥

(சு-ம்.)

ஒன்றன்கண் கர்மமும் அதாவது விஷயத்தன்மையும், கர்த்தாவும் அதாவது விஷயித்தன்மையும் சம்பவியா.

(வி-ம்.)

ஒரே ஆத்மாவிற்கு ஒரு காலத்தில் உபகாரத்திற்கு விஷயமாந்தன் மையும் உபகாரத்தினைச் செய்யுந்தன்மையுமாகிய இவ்விரண்டு தர்மங்களும் விரோதத்தோடு கூடியனவாம் என்பது பொருள். (௨௪)

ச. ஆத்மா விஷயஜந்யசுகத்திற்குச் சமமாகாமை.

[கஙoக] सुखे वैषयिके प्रीतिमात्रमात्मा त्वतिप्रियः ।
सुखे व्यभिचरत्येषा नात्मनि व्यभिचारिणी ॥ २५ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவிற்கு அந்நமுதலியவற்றினைப்போலச் சுகத்திற்குச் சாதனமாத லில்லையாயினும், சுகத்தினைப்போல போக்தாவின் உபகாரகத்தன்மை யுண்டாமென் றாசங்கித்து, ஆத்மா எல்லாவற்றினும் அதிக பிரீதிக்கு விஷயமாதலால் ஆத்மா போக்தாவின் சேஷமாம் என்று சொல்லுதல் பொருந்தா தென்று பரிகரிக்கின்றார்:—

वैषयिके सुखे प्रीतिमात्रं आत्मा तु अतिप्रियः ॥

(சு-ம்.)

விஷயஜந்யசுகத்தில் பிரீதிமாத்திர முண்டு. ஆத்மாவோ அதிப்பிரியமாம்,

(வி-ம்.)

விஷயஜந்யசுகத்தில் பிரீதியே யுண்டாகின்றது; நிரதிசயப்பிரீதி யுண்டாகிறதில்லை. ஆத்மாவோ நிரதிசயப்பிரேமைக்கு விஷயமாம். ஆதலால் விஷயஜந்யசுகத்திற்குச் சமமாகா தென்பது பொருள்.

(அ-கை.)

விஷயத்திலுள்ள பிரீதிமாத்திரமும் ஆத்மாவினிடத்துள்ள அதிசயப்பிரீதியுமாகிய அவ்விரண்டற்குமே காரணம் கூறுகின்றார்:—

सुखे एषा व्यभिचरति आत्मनि न व्यभिचारिणी ॥

(சு-ம்.)

விஷயாநந்தவடிவ சுகத்தில் இந்தப் பிரீதி வியபிசாரத்தை யடைகின்றது; ஆத்மாவில் வியபிசாரத்தை யடைகிறதில்லை.

(வி-ம்.)

விஷயஜந்நியசுகத்தி லுண்டாகிய இந்தப் பிரீதி வியபிசாரத்தினை யடைகின்றது அதாவது ஒருகால் அந்நியசுகத்தைக் குறித்துச் செல்லுகின்றது. அதேவிஷயத்தில் நியமமா யிருப்பதில்லை. ஆத்மாவினிடத்துள்ள பிரீதியோ வியபிசாரத்தினை யடைகிறதில்லைஅதாவது அந்நியவிஷயங்களிற் செல்லுவதாவதில்லை. ஆதலால் அவ்வாத்மாவினிடத்துள்ள பிரீதி எல்லாவற்றினும் மேலானதாம். (உ௫)

[கரு௦உ] एकं त्यक्त्वान्यदादत्ते सुखं वैषयिकं सदा ।
नात्मा त्याज्यो न चादेयस्तास्मिन्व्यभिचरेत्कथं ॥ २६ ॥

(அ-கை.)

சுககோசரமான பிரீதியின் வியபிசாரத்தினைக் காட்டுகின்றார்:—

एकं वैषयिकं सुखं त्यक्त्वा अन्यत् सदा आदत्ते ॥

(சு-ம்.)

புருஷன் ஒரு விஷயஜந்நியசுகத்தினை விட்டு வேறு விஷயஜந்நியசுகத்தினை எப்போதும் கிரகிக்கின்றான்.

(அ-கை.)

ஆத்மாவினிடத்திலோ அந்தப் பிரீதி வியபிசரியாமையைக் காட்டுகின்றார்:—

आत्मा त्याज्यः न । च आदेयः न ॥

(சு-ம்.)

ஆத்மா விடத்தக்கது மன்று; கொள்ளத்தக்கது மன்று.

(வி-ம்.)

கொள்ளவும் தள்ளவும் தகுதி யில்லாததா யிருத்தலால் என்பது பொருள்.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

तस्मिन् कथं व्यभिचरेत् ॥

(சு-ம்.)

ஆதலால் அவ்வாத்மாவினிடத்துண்டாம் ப்ரீதி எவ்வாறு வியபிசரிக்கும்? ஒருவாற்றானும் இல்லை.

ரு. ஆத்மா உபேக்ஷைக்கு விஷயமாதலின் சங்கை சமாதானம்.

[கரு0ரு] हानादानविहीनेऽस्मिन्नुपेक्षा चेत्तृणादिवत् ।
उपेक्षितुः स्वरूपत्वान्नोपेक्ष्यत्वं निजात्मनः ॥ २७ ॥

(அ-கை.)

கொள்ளுதல் தள்ளுதல்களுக்கு விஷயமாகாவிடினும் ஆத்மா துரும்புமுதலியவற்றினைப்போல உபேக்ஷைக்கு விஷயமாகாது என்று வாதி சங்கிக்கின்றான்:—

हानादानविहीने अस्मिन् तृणादिवत् उपेक्षा चेत् ॥

(சு-ம்.)

விலக்குதல் கொள்ளுதல்களின்றிய இவ்வாத்மாவில் துரும்புமுதலியவற்றைப்போல் உபேக்ஷை யுண்டாமெனின்.

(வி-ம்.)

நீக்குதல் ஹாந மென்றும், கொள்ளுதலை ஆதான மென்றும், விருப்பு வெருப்பில்லாமையாகிய உதாசீனத்தன்மையினை உபேக்ஷை யென்றும் கூறுவர்.

(அ-கை.)

ஆத்மாவிற்குக் கொள்ளுதல் தள்ளுதல்களுக்கு விஷயமாகாமையினைப் போல் உபேக்ஷைக்கு விஷயமாதலும் சம்பவியாது; தகுதியில்லாததாயிருத்தலால் என்னும் அபிப்பிராயத்தினால் பரிகரிக்கின்றார்:—

उपेक्षितुः निजात्मनः स्वरूपत्वात् उपेक्ष्यत्वं न ॥

(சு-ம்.)

அப்படியானால் உபேக்ஷை செய்பவனது நிஜவடிவம் சுவசொரூபமாயிருத்தலால் உபேக்ஷியத்தன்மை பொருந்தாது.

(வி-ம்.)

அப்படியாயின் உபேக்ஷை செய்கின்ற சிதாபாஸனது நிஜவடிவமான அவிநாசிசொரூபம் அவனது சுவசொரூபமாயிருத்தலினாலேயே ஆத்மா

விற்குத் தன்னினும் வேறான துரும்புமுதலியவற்றினைப்போல உபேக்ஷைக்கு விஷயமாதல் இல்லை. (உ௭)

௬. ஆத்மா த்வேஷத்தினால் விடத்தக்கதாதலின் சங்கையும் சமாதானமும்.

[க௯0௮] रोगक्रोधाभिभूतानां मुमूर्षा वीक्ष्यते क्वचित् ।
ततो द्वेषाद्भवेत्त्याज्य आत्मेति यदि तन्न हि ॥ २८ ॥

(அ-கை.)

அப்படியானால் தியாகத்திற்கு விஷயமாதல் ஆத்மாவிற்கில்லையென்று க௯0௭-வது சுலோகத்தில் சொல்லப்பட்டது பொருந்தாது; ஏனெனின், த்வேஷத்தினால் ஆத்மாவினை விடுதலைக் காணுதலால் என்று வாதி சங்கிக்கின்றான்:—

रोगक्रोधाभिभूतानां क्वचित् मुमूर्षा वीक्ष्यते । ततः द्वेषात् आत्मा त्याज्यः भवेत् । इति यदि ॥

(சு-ம்.)

வியாதியினாலாவது அல்லது குரோதத்தினாலாவது மேலிடப்பட்ட புருஷர்களுக்கு ஒருகாலத்தில் இறக்கும் இச்சை காணப்படுகின்றது. ஆதலால் த்வேஷத்தினால் ஆத்மா விடத்தக்கதாகின்றது என்று கூறின்.

(வி-ம்.)

எதனால் மரணத்தின் இச்சை காணப்படுகின்றதோ, அதனால் த்வேஷம் சம்பவித்தலின் தேள்முதலியவற்றினைப்போல ஆத்மாவும் விடத்தக்கதேயாமென்று கூறின்.

(அ-கை.)

அந்தத் தியாகம் (விடுபாடு) ஆத்மாவிற்கு வேறான தேகத்தினை விஷயஞ்செய்வதாயிருத்தலின் ஆத்மா தியாகத்திற்கு விஷயமாமென்று கூறுதல் பொருந்தாது என்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

तत् न हि ॥

(சு-ம்.)

அது பொருந்தாது. (உ௮)

[க௯0௯] त्यक्तुं योग्यस्य देहस्य नात्मता त्यक्तुरेव सा ।
न त्यक्तर्यस्ति स द्वेषस्त्याज्ये द्वेषे तु का क्षतिः ॥ २९ ॥

(அ-கை.)

இதுவுமது:—

त्यक्तुं योग्यस्य देहस्य आत्मता न ॥

(சு-ம்.)

விடுதற்குத்தகுதியான தேகத்திற்கு ஆத்மத்தன்மை யில்லை.

(வி-ம்.)

விடுதற்குரியதான சரீரத்திற்கு ஆத்மத்தன்மை யில்லை.

(அ-கை.)

அப்போது அவ்வாத்மத்தன்மை யாருக்கெனக் கூறுகின்றார்:—

त्यक्तुः एव सा ॥

(சு-ம்.)

விடுகிறவனுக்கே அவ்வாத்மத்தன்மை யுண்டு.

(வி-ம்.)

தேகத்தை விடும்போது தேகத்திற்கு வேறான ஜீவனுக்கு அவ்வாத்மத்தன்மை யுண்டென்பது பொருள்.

(அ-கை.)

விடுகிறவனுக்கு ஆத்மத்தன்மை இருக்குக. அதனால் பிரகிருத துவேஷத்தினால் ஆத்மாவின் விடுதற்குரியதன்மையின்மையில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

सः द्वेषः त्यक्तरि न आस्ते ॥

(சு-ம்.)

ககூ0ச-வது சுலோகத்திற் கூறிய துவேஷம் தியாகஞ் செய்பவனிடத்தில் இல்லை.

(வி-ம்.)

ஆதலால் ஆத்மாவிற்கு விடுதற்குரியதன்மை இல்லை என்பது அபிப்பிராயம்.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவினிடத்துத் துவேஷம் இருக்கவேண்டும். ஆனால் தேகத்திலே துவேஷம் காணப்படுகின்றதே என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

त्याज्ये द्वेषे तु का क्षतिः ॥

(சு-ம்.)

விடத்தக்க தேகத்தில் த்வேஷ மிருப்பதில் கேடு யாது?

(வி-ம்.)

தேகத்தினை விஷயஞ்செய்யும் த்வேஷ மிருக்கவும் ஆத்மாவினது நீக்கத்தின் இன்மையைக் கூறும் சித்தாந்தியாகிய எமக்குக் கேடு யாது? ஒன்றுமில்லை. (உகூ)

எ. யுக்தியினால் ஆத்மா எல்லாவற்றினும் பிரியமாமாறு.

[கஙoகூ] आत्मार्थत्वेन सर्वस्य प्रीतेश्चात्मा ह्यतिप्रियः ।
सिद्धो यथा पुत्रमित्रात्पुत्रः प्रियतरस्तथा ॥ ३० ॥

(அ-கை.)

"ஓ! மைத்திரேயி! பதியினது காமத்தின் பொருட்டுப் பதி பிரியனல்லன்" என்று ஆரம்பித்து, "ஆத்மாவினது பிரியத்தின் பொருட்டு யாவும் பிரியமாம்" என்பது பரியந்தமான சுருதி யாதோ, அதனது தாற்பரியத்தின் விசாரத்தால் ஆத்மாவின் பிரியதமத்துவத்தை அதாவது எல்லாவற்றினும் அதிகப்பிரியமாந்தன்மையைக் காட்டி இப்போது யுக்தியினாலும் அவ்வாத்மாவின் பிரியதமத்துவத்தைக் காட்டுகின்றார்:—

सर्वस्य आत्मार्थत्वेन प्रीतेः च आत्मा हि अतिप्रियः सिद्धः ॥

(சு-ம்.)

எல்லாவற்றினது பிரீதியும் ஆத்மாவின்பொருட்டா யிருத்தலின் ஆத்மா அதிப்பிரிய மென்பது சித்தித்தது.

(வி-ம்.)

சுகமும் அதன் சாதனசமூகமான பதி பத்தினிமுதலியனவுமாகிய எல்லாமும் ஆத்மாவின்பொருட்டு அதாவது தனக்கு உபகாரகமா யிருத்தலால் பிரியமாயுள்ளன. உபகாரத்தின் விஷயமான ஆத்மாவாகிய தான் அவற்றினும் மிகப்பிரிய மென்பது சித்தித்தது.

(அ-கை.)

இவ்வர்த்தத்தினையே திருஷ்டாந்தத்தினைக் காட்டுதலால் விளக்குகின்றார்:—

यथा पुत्रमित्रात् पुत्रः प्रियतरः तथा ॥

(சு-ம்.)

எப்படிப் புத்திரனது மித்திரனினும் புத்திரன் பிரியதரனோ அது போல.

(வி-ம்.)

உலகத்தில் எப்படிப் புத்திரன்வாயிலாகப் பிரீதிக்கு விஷயமான புத்திரனது மித்திரன்வடிவ யஞ்ஞதத்தன்முதலியோரினும் தேவதத்தன் முதலிய புத்திரர் இடையீடின்றிய பிரீதிக்கு விஷயமாதலால் அந்த மித்திரனினும் விஷ்ணுதத்தன்முதலிய பிதாவிற்கு மிகப் பிரியமாகிறார்களோ, அது போலத் தனது அதாவது ஆத்மாவின் சம்பந்தியா யிருத்தலால் பிரீதிக்கு விஷயமான ஆத்மாவாகிய தான் எல்லாவற்றினும் அதிகப் பிரியமாகின்றது * ரு. என்பது பொருள். (கு0)

---

* ரு. இங்கு இந்த இரகசியமாம்:—ஆத்மா நித்திய சுகவடிவமா யிருத்தலால் மிக அநுகூலமாம்; ஆதலால் மிகப்பிரியமாம். இது வித்வான்களுக்கு அநுபவசித்தம். ஆனால் பிராந்தர்கள் அந்தச் சொரூபவடிவ நித்தியசுகத்தை யறியாது விஷயலாப முதலிய நிமித்தத்தினால் அந்தர்முகமாகிய அந்தக்கரணத்தில் அவ்வாத்மாநந்தத்தின் பிரதிபிம்பவடிவ எந்த விஷயாநந்தம் உண்டாகின்றதோ, அதனையே பரமசுகவடிவமாக அறிந்து பிரியதமமெனக் கொள்ளுகின்றனர். ஆதலால் ஆநந்தமய ஆத்மாவினது பிரதிபிம்பத்தினைக் கொள்ளுதற்குத் தகுதியுடையதா யிருத்தலின், அந்தக்கரணம், அதன் சமீபத்திலுள்ள இந்திரியம், பிராணன் என்னும் இலிங்கதேகத்திற்கு ஆத்மாவோடு நேர்சம்பந்த மிருக்கின்றது; ஆதலால் அது பிரியமாம். ஸ்தூலதேகமுதலியன ஆத்மாவினது பிரதிபிம்பத்தினைக் கிரகிக்கத்தக்கன வன்று. ஆதலால் அவற்றிற்கு ஆத்மாவோடு சாக்ஷாத்சம்பந்த மில்லை. ஆனால் இலிங்கதேகவாயிலாக ஸ்தூலதேகத்திற்கும் ஸ்தூலதேகவாயிலாகப் புத்திரன் பாரியை முதலியோருக்கும் புத்திரன் பாரியை முதலியோர்வாயிலாகப் புத்திரனது மித்திரனுக்கும் வேறு சம்பந்திகளுக்கும் ஆத்மாவோடு சம்பந்த மிருக்கின்றது. ஆதலால் அது முன் முன்னுள்ளதின் நோக்கத்தால் குறைந்ததும், பின்பின்னுள்ளதனை நோக்க அதிகப்பிரியமுமாம். இந்தப் பிரீதியின் ஏற்றத்தாழ்வினது அநுபவம் மேல் கஙஙசு-வது சுலோகத்தில் தெளிவாய்க் காட்டப்பட்டிருக்கின்றது.

ஆநந்தவடிவ ஆத்மா எங்கும் வியாபகமாம். ஆதலால் சகல பதார்த்தங்களுக்கும் ஆத்மாவினோடு தாதாத்மியசம்பந்த மிருத்தலால் சகல பதார்த்தங்களும் சமானமானப் பிரியமாதல் வேண்டும். மேல் கஙஉஎ-வது சுலோகத்தாற் சொல்லப்படும் விதத்தால் பிரியமும் துவேஷியமும் உபேக்ஷியமுமாகுதலால் விஷம மாகலாகாது. அவ்வாறாயினும், சகல கடாதி சொச்சமின்றிய பதார்த்தங்களும் ஆத்மாவினது ஆபாஸத்தைக் கொள்ளுவன வன்று. ஆதலால் ஆத்மாவின் சாக்ஷாத் சம்பந்தமுடையன வென்று சொல்லப்படவில்லை. ஆனால் சொச்சமாகிய அந்தக்கரணம் ஆத்மாவின் ஆபாஸத்தைக் கொள்ளுவதா யிருக்கின்றது. ஆதலால் ஆத்மாவின் சாக்ஷாத்சம்பந்தி யெனப்படுகின்றது.

அ. சுருதி யுக்திகளால் கேட்கப்பட்ட பிரீதி சுவாநுபவத்தினைக் காட்டு தலால் திடமாதல்.

[ககூ0எ] मा न भूवमहं किंतु भूयासं सर्वदेत्यसौ ।
आशीः सर्वस्य दृष्टेति प्रत्यक्षा प्रीतिरात्मनि ॥ ३१ ॥

இவ்வாறு ஆத்மாவினிடத்துச் சுருதி யுக்திகளால் உபபாதனஞ் செய்யப்பட்ட பிரதிசயப்பிரீதியினைத் தனது அநுபவத்தினைக் காட்டுதலால் திடப்படுத்துகின்றார்:—

"अहं मा भूवं न किंतु सर्वदा भूयासं" । इति असौ आशीः सर्वस्य दृष्टा इति ॥

(சு-ம்.)

"நான் இருக்கலாகாது என்று இல்லை. ஆனால் நான் எப்போதும் இருக்கவேண்டும்." என்னும் இத்தன்மைய பிரார்த்தனை எல்லோருக்கும் காணப்படுகின்றது.

(வி-ம்.)

"நான் இருக்கலாகாது என்று இல்லை அதாவது ஓரிடத்தும் எனது இன்மை இருக்கலாகாது. ஆனால் "நான் எப்போதும் இருக்கவேண்டும் அதாவது எப்போதும் எனது இருப்பு இருக்கவேண்டும் என்னும் வடிவினதாகிய பிரார்த்தனை எல்லாப்பிராணிகளிடத்தும் காணப்படுகின்றது. எல்லோரும் இவ்வாறு பிரார்த்தனை செய்கின்றனர் என்பது பொருள்.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

---

அந்த ஆபாஸனோடு கூடிய அந்தக்கரணவிசிஷ்ட சேதனவடிவ போக்தாவின் உபகாரக(அநுகூல)மா யிருத்தலால் சம்பந்திகளாயுள்ள பதார்த்தங்கள் எவையோ அப்பதார்த்தங்கள் பிரியமாம். அந்த உபகாரகத்தன்மையாகிய அநுகூலத்தன்மையின் மிகுதி குறைவுவடிவ உபாதிபேதத்தால் பிரியத்தன்மையின் பேதமாகிய சமானமின்மை யுண்டாகின்றது. உபகாரகத்தன்மையின் இன்மைவடிவ பிரதிகூலத்தன்மையினாலாவது அல்லது அநுகூலத்தன்மை பிரதிகூலத்தன்மை இரண்டு மில்லாமையினாலாவது ஆத்மாவின் உபயோகி அதாவது சம்பந்தி யாகிறதில்லை. அந்தப்பதார்த்தம் கிரமமாகத் துவேஷ்யம் அல்லது உபேக்ஷியம் எனத் தோற்றுகின்றது.

இவ்விதத்தால் அஞ்ஞானியின் திருஷ்டியினால் விஷமத்தன்மை பொருந்துகின்றது. ஞானியின் திருஷ்டியினாலோ அந்தப் போக்தாமுதலிய திரிபுடிவடிவ துவைதத்தின் அபாவத்தை முன்னிட்ட பரிபூர்ண ஆநந்தவடிவ ஆத்மா தோற்றுதலால் விஷமத்தன்மை யில்லை. ஆனால் ஒரே ஆநந்தவடிவ ஆத்மா எங்கும் சமானமாகக் காணப்படுகின்றது.

(சு-ட.)

आत्मनि प्रीतिः प्रत्यक्षा ॥

ஆதலால் ஆத்மாவினிடத்துப் பிரீதி பிரத்தியக்ஷமா யிருக்கின்றது.

(வி-ம்)

எதனால் இப்படிச் சகல ஜனங்களாலும் பிரார்த்திக்கப்படுகின்றதோ, அதனால் ஆத்மாவினிடத்து நிரதிசயப்பிரீதி பிரத்தியக்ஷ அநுபவத்தினால் சித்திக்கின்றது என்பது பொருள். (௩௧)

௬. ஆத்மா புத்திராதிகளுக்கு உபகாரியாதல்பூர்வகமான ஆத்மாவின் மூவகைமை

கங0எ-கங௨அ.

க. ஆறுவது சுலோகத்தினால் கூறிய அர்த்தத்தினை மறுபடியும் சொல்லுதலோடு புத்திரன் ஆத்மா வென்னும் மதத்தினைத் தாஷித்தற்பொருட்டு அநுவாதஞ்செய்தல்.

[கங0அ] इत्यादिभिस्त्रिभिः प्रीतौ सिद्धायामेवमात्मनि ।
पुत्रभार्यादिशेषत्वमात्मनः कैश्चिदीरितम् ॥ ३२ ॥

(அ-கை.)

சுலோகம் க௨அ௨-கங0எ பரியந்தம் சொல்லப்பட்ட அர்த்தத்தினை மறுபடியும் சொல்லுதலோடு ஆத்மா புத்திரன் பாரிமைமுதலியவற்றிற்குச் சேஷமாம் அதாவது உபகாரியா மென்னும் மதத்தினைத் தாஷித்தற்கு அநுவாதஞ் செய்கின்றார்:—

इत्यादिभिः त्रिभिः एवं आत्मनि प्रीतौ सिद्धायां कैश्चित् आत्मनः पुत्र-भार्यादिशेषत्वं ईरितम् ॥

(சு-ம்.)

இவைமுதலிய மூன்று பிரமாணங்களாலும் ஆத்மாவினிடத்துப் பிரீதி சித்திக்கினும், சில புருஷர்களோ ஆத்மாவிற்குப் புத்திரன் பாரியைமுதலியோருக்குச் சேஷமாதலை அதாவது கௌணத்தன்மையைக் கூறியிருக்கின்றனர்.

(வி-ம்)

இங்கு இவைமுதலிய வென்னும் சொற்களால் கங0எ-வது சுலோகத்திற் கூறிய அநுபவமும், கங0சு-வது சுலோகத்திற் கூறிய யுக்தியும், க௨அ௨-க௨கூ சுலோகங்களிற் சொல்லப்பட்ட சுருதியும் கொள்ளப்படுகின்றன. ஆதலால் இவ்வநுபவம் யுக்தி சுருதி யென்னும் மூன்று பிரமா

ணங்களால் முற்கூறிய விதமாம் ஆத்மாவினிடத்துப் பிரீதி சித்திக்கினும், சுருதிமுதலியவற் ன் தாற்பரியத்தினை அறியாத சில புருஷர்கள் ஆத்மா பாரியைமுதலியே நக்குச் சேஷமாதலை அதாவது புத்திராதிகளைக் குறித் துத் தம் உட ர்ஜனத்தன்மையை(அப்பிரதானத்தன்மையை)க் கூறு கின்றனர். (௩௨)

௨. சுலோகம் ௩௦அ-ல் கூறிய அநுவாதத்தில் பிரமாணத்தினைச் சூசிப்பித்தல்.

[௧௩௦௧] एतद्विवक्षया पुत्रे मुख्यात्मत्वं श्रुतीरितम् ।
आत्मा वै पुत्रनामेति तच्चोपनिषदि स्फुटम् ॥ ३३ ॥

(அ-கை)

ஆத்மாவிற்குப் புத்திராதிகளைக் குறித்து அமுக்கியத்துவம் அதாவது சேஷத்துவ முண்டு என்று சிலர் கூறியிருக்கின்றனர் என்பதனைத் தாம் எத ஞை லறிந்தீர் எனக் கூறுகின்றார்:—

एतद्विवक्षया आत्मा वै पुत्रनामा इति पुत्रे मुख्यात्मत्वं श्रुतीरितं । च तत् उपनिषदि स्फुटम् ॥

(சு-ம்.)

இதனைக் கூறும் இச்சையினாலேயே "ஆத்மா புத்திர னென்னும் பெய ருடையவனானன்." என்னும் சுருதி புத்திரனிடத்து முக்கியத்தன்மையி னைக் கூறியிருக்கின்றது. அதுவும் உபநிஷத்தில் தெளிவா யிருக்கின்றது.

(வி-ம்.)

இதனைக் கூறும் இச்சையினாலேயே அதாவது இவ்வாறு சில புருஷர் களால் சொல்லப்படுகின்றது என்னும் வார்த்தையினை வெளிப்படுத்தும் அபிப்பிராயத்தினாலேயே " आत्मा वै पुत्रनामासि ஆத்மா புத்திர னென்னும் பெயருடையவனானன்." என்னும் சுருதி புத்திரனுக்கு முக்கியத்தன்மை கூறியிருக்கின்றது என்பது பொருள். அல்லது அப்புரத்தினது முக்கியத் தன்மை ஐதரேயவுபநிடதமுதலியவற்றில் வெளிப்படையாய்ச் சொல்லப் பட்டிருக்கின்றது. (௩௩)

௩. சுலோகம் ௧௩௦௧-ல் சூசிக்கப்பட்ட பிரமாணத்தினைக் கூறுதல்.

[௧௩௧௦] सोस्यायमात्मा पुण्येभ्यः कर्मभ्यः प्रतिधीयते ।
अथास्येतर आत्मायं कृतकृत्यः प्रमीयते ॥ ३४ ॥

(அ-கை.)

ஐதரேயவுபநிஷத்தில் புத்திரனுக்கு முக்கியாத்மத்தன்மை எவ்வாக்

கியத்தால் சொல்லப்பட்டிருக்கின்றது? என்று கேட்கும் விருப்ப முண்டாக அவ்வாக்கியத்தினை அர்த்தத்தினால் படிக்கின்றார்:—

अस्य सः अयं आत्मा पुण्येभ्यः कर्मभ्यः प्रतिधीयते । अथ अस्य अयं इतरः आत்मा कृतकृत्यः प्रमीयते ॥

(அ-ம்.)

இப்பிதாவுக்கு அவன் இப்புத்திரவடிவ ஆத்மா புண்ணியகர்மங்களின் பொருட்டுப் பிரதிநிதியாக்கப்படுகின்றான். பின் இப்பிதாவுக்கு இவன் பிதா வடிவ வேறு ஆத்மா கிருதகிருத்தியனாய் மரிக்கின்றான்.

(வ்-ம்.)

இப்பிதாவுக்கு அவன் இந்த "पुरुषे ह्वायमादितो गर्भो भवति புருஷ பிதாவினிடத்து இந்த ஜீவன் முதலில் வீரியவடிவ கர்ப்பமாகின்றான்." என்னும் சுருதியினால் பிரகரணத்தின் ஆதியில் புருஷனாகிய பிதாவின் தேக த்தில் கர்ப்பத்தன்மையினால் சொல்லப்பட்டதும், "अयं सोऽग्र एव कुमारं जन्मनोऽ ग्रेऽधिभावयति அந்த இப்பிதா புத்திரனுடைய ஜன்மத்திற்கு முன்னும் ஜன் மத்திற்குப் பின்னும் குமாரனாகிய புத்திரனை அதிகமாக இரக்ஷிக்கிறான்." என்னும் சுருதிவாக்கியத்தில் பிதாவும் பாலனாகப் பெறப்பட்டதாயிருக்கி றதாய் சொல்லப்பட்டதுமான புத்திரனாகிய ஆத்மா பிதாவினால் புண்ணி யகர்மத்தினது அநுஷ்டானத்தின்பொருட்டுப் பிரதிநிதியாதலால் ஸ்தாப னஞ் செய்யப்படுகின்றான். ஒரு பதார்த்தம் இல்லாதாகவே அதன் ஸ்தா னத்தில் ஸ்தாபிக்கப்படும் வேறுபதார்த்தம் பிரதிநிதி யெனப்படும். புத் திரனது பிரதிநிதித்தன்மையால் ஸ்தாபிக்கப்பட்ட பின், இந்தப் பிதாவிற்கு இந்தப்பிரத்யக்ஷமாகக் காணப்படுகின்ற புத்திரனினும் வேறாகிய மூப்பி னால் விழுங்கப்பட்ட பிதாவடிவ ஆத்மா தான் கிருதகிருத்தியனாய் அதா வது காரியசமூகங்களை யநுஷ்டித்தவனாய் மரிக்கின்றான் என்பது பொ ருள். (௩௪)

௪. புத்திரனில்லாதவனுக்குப் பரலோகமின்மையைக் காட்டும் வாக்கியத்தின் அர்த்தம்.

[கக௩க] सत्यप्यात्मनि लोकोऽस्ति नापुत्रस्यात एव हि ।
अनुशिष्टं पुत्रमेव लोक्यमाहुर्मनीषिणः ॥ ३९ ॥

(அ-கை.)

சுலோகம் க௩0அ—க௩க0 ல் கூறிய அர்த்தத்தினைத் திடமாக்குதற் பொருட்டுப் புத்திரனில்லாதவனுக்குப் பரலோகமின்மையைக் காட்டுந்தன்

மையதாகிய " नापुत्रस्य लोकोस्ति புத்திரனில்லாதவனுக்கு உலக மில்லை" என்னும் வாக்கியத்தின் அர்த்தத்தைக் கூறுகின்றார் :—

अतः एव आत्मनि सति अपि अपुत्रस्य लोकः न अस्ति हि ॥

(சு-ம்.)

இதனாலேயே தானிருந்தும் புத்திரனில்லாதவனுக்கு லோகம் இல்லை.

(வி-ம்.)

எதனால் புத்திரனுக்கு முக்கிய ஆத்மத்தன்மை யிருக்கின்றதோ, அதனாலேயே ஆத்மாவாகிய தானிருக்கினும், புத்திரனில்லாத பிதாவிற்குப் பரலோகமில்லை யென்பது புராணமுதலியவற்றில் பிரசித்த மென்பது பொருள்.

(அ-கை.)

வெதிரேகவாயிலாகச் சொல்லப்பட்ட அர்த்தத்தினை அந்வயவாயிலாகப் பிரதிபாதிக்கும் " अनुशिष्टं पुत्रं लोक्यमाहुः சிக்ஷிக்கப்பட்ட புத்திரனை லோக்ய (லோகத்தையடைவிப்பவ) னென்பர் " என்னும் சுருதிவாக்கியத்தின் அர்த்தத்தினைக் கூறுகின்றார் :—

मनीषिणः अनुशिष्टं एव पुत्रं लोक्यं आहुः ॥

(சு-ம்.)

பண்டிதர்கள் சிக்ஷிக்கப்பட்ட புத்திரனையே லோக்கிய மென்பர்.

(பொ-ம்.)

சாஸ்திரார்த்தத்தினை யுணர்ந்தவர்கள் சிக்ஷிக்கப்பட்ட அதாவது கருகஉவது சுலோகத்தில் மேற்சொல்லப்படும் " त्वं ब्रह्म நீ பிரஹ்மா " என்னும் இவை முதலிய வேதத்தின் மந்திரங்களால் உபதேசிக்கப்பட்ட புத்திரனை லோக்கியம் அதாவது பரலோகசாதனம் என்பர் என்பது பொருள். (ருகு)

ரு. புத்திரன் இவ்வுலகத்தினது சுகத்திற்குச் சாதன மென்னுந் தன்மையதாகிய வாக்கியத்தின் அர்த்தம்.

[ககருகஉ] मनुष्यलोको जय्यः स्यात्पुत्रेणैवेतरेण नो ।
मुमूर्षुर्मंत्रयेत्पुत्रं त्वं ब्रह्मेत्यादिमंत्रकैः ॥ २६ ॥

(அ-கை.)

இப்போது இவ்வுலகத்தின் சுகத்திற்கும் புத்திரன்வடிவ காரணமுடைமையைப் பிரதிபாதிக்குந்தன்மையதாகிய " सोऽयं मनुष्यलोकः पुत्रेणैव जय्यो

नान्येन कर्मणा அந்த இம்மனிதவுலகம் புத்திரனாலேயே சம்பாதிக்கப்படுவதாம்; வேறு கர்மத்தினால் இல்லை." என்னும் சுருதிவாக்கியத்தின் அர்த்தத்தினைப் படிக்கின்றார்:—

मनुष्यलोकः पुत्रेण एव जय्यः स्यात् इतरेण नो ॥

(ச-ம்.)

மனிதவுலகம் புத்திரனாலேயே சம்பாதிக்கத்தக்கதாம்; பிறிதால் அதாவது கர்மத்தால் இல்லை.

(வி-ம்.)

மனிதவுலகத்தின் சுகம் புத்திரனாலேயே சம்பாதிக்கததக்கதாம்; கர்மமுதலிய பிறசாதனங்களால் சம்பாதிக்கத்தக்கதன்று. புத்திரனில்லாதவனுக்குத் தனமுதலிய சுகசாதனமும் வைராக்கியத்தை யுண்டுபண்ணுவதாமென்பது கருத்து.

(அ-கை.)

"சிக்ஷிக்கப்பட்ட புத்திரனைப் பரலோகத்தின் சாதனமென்பர்." என்னும் வாக்கியத்திலுள்ள புத்திரனைச் சிக்ஷித்தலையும் அவ்வுபதேசத்தின் மந்திரங்களையும் காட்டுகின்றார்:—

त्वं ब्रह्मेत्यादिमंत्रकैः मुमूर्षुः पुत्रं मंत्रयेत् ॥

(ச-ம்.)

"நீ பிரஹ்மா" என்பன முதலிய மந்திரங்களால் மரிக்கும் பிதா புத்திரனைச் சிக்ஷிக்கின்றார்.

(வி-ம்.)

"त्वं ब्रह्म நீ பிரஹ்மா" என்பது ஒரு மந்திரம். முதலியவென்னும் சொல்லால் "त्वं यज्ञः நீ யஞ்ஞம்." "त्वं लोकः நீ லோகம்" என்னும் இரண்டு மந்திரங்களும் கொள்ளப்படும். ஆதாலால் "நீ பிரஹ்மா" என்பன முதலிய மூன்று மந்திரங்கள் எவையோ அவற்றால் மரிக்கின்ற பிதா மரண அவசரத்தில் புத்திரனுக்கு உபதேசிக்கின்றான் என்பது பொருள். (௩௬)

௭. சுருதியிற் கூறிய அர்த்தத்தினைச் சூசிப்பித்தலும், அது உலகத்தில் பிரசித்தமாதலும்.

[௧௩-௧௩] इत्यादिश्रुतयः प्राहुः पुत्रभार्यादिशेषताम् ।
लौकिका अपि पुत्रस्य प्राधान्यमनुमन्वते ॥ ३७ ॥

(அ-கை.)

சுலோகம் கரு0அ-ல் கூறிய அர்த்தத்தினைக் குறிப்பிக்கின்றார் :—

इत्यादिश्रुतयः पुत्रभार्यादिशेषतां प्राहुः ॥

(வி-ம்.)

இவைமுதலிய சுருதிகள் புத்திரன் பாரியைமுதலியவர்களைக் குறித்து ஆத்மாவினது சேஷத்தன்மையை அதாவது உபகாரகமா யிருத்தலால் அப்பிரதானமாந்தன்மையைக் கூறுகின்றன.

(அ-கை.)

இவ்வர்த்தம் சுருதிமாத்திரத்தினால் சித்தித்தது என்பது இல்லை; உலகப்பிரசித்தமாகவு மிருக்கின்றது என்று கூறுகின்றார் :—

लौकिकाः अपि पुत्रस्य प्राधान्यं अनुमन्वते ॥

(சு-ம்.)

இலௌகிகஜனங்களும் புத்திரனது பிரதானத்தன்மையைக் கொள்ளுகின்றனர். (௺எ)

எ. சுலோகம் கசுகசு-ல் கூறிய பிரசித்தியைச் சம்பாதித்தலும் பலிதமும்.

[கசுகச] स्वास्मिन्मृतेऽपि पुत्रादिर्जीवेद्वित्तादिना यथा ।
तथैव यत्नं कुरुते मुख्याः पुत्रादयस्ततः ॥ ३८ ॥

(அ-கை.)

அப்புத்திரன்முதலியோரது பிரதானத்தன்மையினையே உபபாதனஞ் செய்கின்றார்:—

स्वस्मिन् मृते अपि पुत्रादिः यथा वित्तादिना जीवेत् । तथा एव यत्नं कुरुते ॥

(சு-ம்.)

பிதாமுதலியதாம் மரிக்கினும் புத்திரன்முதலியோர் எப்படித் தனமுதலியவற்றால் ஜீவிப்பார்களோ அவ்வாறே எத்தனத்தைச் செய்கின்றனர்.

(வி-ம்.)

மூலத்தில் புத்திரன்முதலியோர், தனமுதலிய என இரண்டு முதலியவென்னும் சொற்க ளிருக்கின்றன. அவற்றுள் முதல் முதலியவென்னும் சொல்லால் மனைவிமுதலியோர் கொள்ளப்படுவர். இரண்டாவது முதலியவென்னும் சொல்லால் பூமிமுதலியன கொள்ளப்படுகின்றன.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார் :—

ततः पुत्रादयः मुख्याः ॥

(சு-ம்.)

அதனால் புத்திரன்முதலியோர் முக்கியமாவர்.

(வி-ம்.)

எதனால் புருஷன் தனது வருத்தத்தைச் சகித்துக்கொண்டும் புத்திரன் முதலியோரது ஜீவனத்தின் உபாயமாகிய தனமுதலியவற்றைச் சம்பாதிக்கின்றானே, அதனால் புத்திராதிகள் முக்கியம் அதாவது பிரதானவடிவமாவர் என்பது பொருள். (௩௮)

அ. புத்திரன்முதலியோரது பிரதானத்தன்மையின் அங்கீகாரமும், அதனால் ஆத்மாவினது சேஷமுடைமையின் ஹானிபூர்வகமான ஆத்மாவின் மூவகைமையும்.

[கஙௌ] बाढमेतावता नात्मा शेषो भवति कस्यचित् ।
गौणमिथ्यामुख्यभेदैरात्मायं भवति त्रिधा ॥ ३९ ॥

(அ-கை.)

சுலோகம் க௩௦அ-ல் கூறிய விதத்தால் இவ்வாறு வேதம்லோக மென்னும் இரண்டனது பிரசித்தியினால் காட்டப்பட்ட புத்திரன்முதலியோரது பிரதானத்தன்மை யாதோ அதனைச் சித்தாந்தி அங்கீகரிக்கின்றார் :—

बाढं ॥

(சு-ம்.)

வாதியே ! நீ புத்திராதிகளுக்குப் பிரதானத்தன்மை கூறியது உண்மை.

(அ-கை.)

அப்படியானால் தாம் எப்பொழுது புத்திராதிகளுக்குப் பிரதானத்தன்மை யங்கீகரித்தீரோ, அப்போது ஆத்மாவாகிய சாக்ஷிக்குச் சேஷமுடைமையினை அதாவது முக்கியத்தன்மையினைக் கூறுதல் யாதோ அது விரோதத்தினை அடையுமென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

एतावता आत्मा कस्यचित् शेषः न भवति ॥

(சு-ம்.)

இவ்வளவினால் ஆத்மா எதற்கும் சேஷம் அதாவது உபகாரகம் ஆகிறதில்லை.

(வி-ம்.)

புத்திராதியருக்குச் சிலவிடத்துப் பிரதானத்தன்மை யுண்டென்று சொல்லும் இவ்வளவுமாத்திரத்தால் ஆத்மாவிற்குச் சேஷத்தன்மை அதாவது கௌணாத்தன்மை யுண்டாகிறதில்லை.

(அ-கை.)

அப்படியானால் பிரதிஞ்ஞைமாத்திரத்தால் அர்த்தத்தின் சித்தி யுண்டாகிறதில்லையென்றுசங்கித்து, எங்கெங்கே வியவகாரத்தில் எதன் எதன் ஆத்மத்தன்மை சொல்ல விரும்பப்பட்டதாகின்றதோ, அந்தந்த ஆத்மாவிற்கு அங்கங்குப் பிரதானத்தன்மை யிருக்கின்றது என்று காட்டுதற்கு உபோற்காதத்தன்மையினால் ஆத்மாவின் மூவகைமையைக் காட்டுகின்றார்:—

गौणमिथ्यामुख्यभेदैः अयं आत्मा त्रिधा भवति ॥

(சு-ம்.)

கௌணம், மித்தை, முக்கிய மென்னும் பேதத்தால் இவ்வாத்மா மூன்று வகையாகின்றது.

(வி-ம்.)

கௌணாத்மா, மித்தியாத்மா, முக்கியாத்மா என்னும் பேதத்தால் இவ்வாத்மா மூன்றுவகையின தாகின்றது. (நகக)

க. திருஷ்டாந்தபூர்வகபுத்திராதிகளின் கௌணாத்மத்தன்மை.

[கநகக] देवदत्तस्तु सिंहोऽयमित्यैक्यं गौणमेतयोः ।
भेदस्य भासमानत्वात्पुत्रादेरात्मता तथा ॥ ४० ॥

(அ-கை.)

அம்மூன்றுவகை ஆத்மாவில் புத்திராதியரின் கௌணாத்மத்தன்மையினைக் காட்டுதற்பொருட்டு லோகத்தில் குணவிருத்தியினாலாகிய கௌணப்பிரயோக (உச்சாரண)த்தை உதகரிக்கின்றார்:—

"अयं देवदत्तः तु सिंहः" इति ऐक्यं गौणम् ॥

(சு-ம்.)

"இத்தேவதத்தன் சிங்கம்" என்னும் ஐக்கியம் கௌணமாம்.

(வி-ம்.)

"இத்தேவதத்தன் என்னும் புருஷன் சிங்கம்" என்னும் வாக்கியத்

தில் தேவதத்தவடிவ புருஷனுக்கும் சிங்கவடிவ பசுவிற்கும் முக்கியம் கௌணமாம் ஔபசாரிகமாம் அதாவது குணவிருத்தியினாலாகியதா யிருத்தலின் ஆரோபிதமாம்; வாஸ்தவமானதன்று.

(அ-கை.)

அதில் ஏதுவைக் கூறுகின்றார் :—

एतयोः भेदस्य भासमानत्वात् ॥

(சு-ம்.)

இந்தத் தேவதத்தனும் சிங்கமுமாகிய இரண்டன் பேதமும் சமமா யிருத்தலால்.

(அ-கை.)

திருஷ்டாந்தத்தினால் கூறிய அர்த்தத்தினைத் தார்ஷ்டாந்தத்தில் கூறுகின்றார் :—

तथा पुत्रादेः आत्मताम् ॥

(சு-ம்.)

அதுபோலப் புத்திராதியரின் ஆத்மத்தன்மை * சு. கௌணமாம். ()

---

* சு. எப்படிச் சப்தத்தின் முக்கியவிருத்திவடிவ சக்திவிருத்தி இலக்ஷணாவிருத்திக ளிருக்கின்றனவோ, அதுபோல மூன்றாவது குணவிருத்தி யென்னும் கௌணீவிருத்தியு மிருக்கின்றது

(க) எப்படிச் சக்திவிருத்தியினால் போதிக்கப்பட்ட அர்த்தத்தினைச் சக்கியார்த்தம், முக்கியார்த்தம், வாச்சியார்த்த மென்கின்றனரோ,

(உ) இலக்ஷணாவிருத்தியினால் போதிக்கப்பட்ட அர்த்தத்தினை இலக்ஷியார்த்த மென்கின்றனரோ,

(ங) அதுபோல குணவிருத்தியினால் அறிவிக்கப்பட்ட அர்த்தத்தினைக் கௌண அர்த்த மென்பர்.

பதத்தின் வாச்சியார்த்தத்தில் எந்தக் குண மிருக்கின்றதோ அந்தக்குணமுடைய அவாச்சியார்த்தத்தில் எந்தப் பதத்தின் விருத்தியாகிய சம்பந்த மிருக்கின்றதோ அது கௌணீவிருத்தி யெனப்படும்.

எப்படி "சிங்கம் தேவதத்தன் அதாவது இந்தப் புருஷன் சிங்கம்" என்னும் வாக்கியத்தில் சிங்க மென்னும் சொல்லிற்கு வாச்சியமான சிங்க மென்னும் பசு எதுவோ அதில் சூரத்தன்மை குரூரத்தன்மை முதலிய எக்குணங்க ளிருக்கின்றனவோ, அவற்றையுடைய சிங்கபதத்தின் அவாச்சியப்பொருளில் சிங்க மென்னும் பதத்திற்குக் கௌணீவிருத்தி யிருக்கின்றது.

இவ்வாறு ஆத்மபதத்தின் வாஸ்தவமான வாச்சியார்த்தமோ சாக்ஷியமாம். ஆதலால் சாக்ஷி முக்கியாத்மா வெனப்படும். ஆனால் சாக்ஷியினிடத்து ஆரோபிதமாயிருத்தலால் ஆத்மபதத்தின் மித்தையான வாச்சியார்த்தம் சங்காதங்களுமாம். அச்சங்காதத்தில் எந்த இகலோகசம்பந்தியும் பரலோகசம்பந்தியுமான கர்மத்தில் பிரவர்த்தித்தல்வடிவ குணமுண்டோ, அக்குணமுடைய ஆத்மபதத்திற்கு அவாச்சியமான புத்திராதியரிடத்து ஆத்மபதத்தின் கௌணீவிருத்தி யுள்ளது. அக்கௌணீவிருத்தியினால் அறிவிக்கப்பட்ட புத்திராதிவடிவ அர்த்தம் எதுவோ அது கௌணாத்மா வெனப்படும்.

கo. திருஷ்டாந்தத்தோடு பஞ்சகோசங்களும் மித்தியாத்மாவாதல்.

[கடகள] भेदोऽस्ति पंचकोशेषु साक्षिणो न तु भात्यसौ ।
मिथ्यात्मतातः कोशानां स्थाणोश्चोरात्मता यथा ॥ ४१ ॥

(அ-கை.)

இப்போது மித்தையாகிய ஆத்மாவினைக் காட்டுகின்றார்:—

पंचकोशेषु साक्षिणः भेदः अस्ति असौ न तु भाति अतः कोशानां मिथ्यात्मता ॥

(சு-ம்.)

பஞ்சகோசங்களில் சாக்ஷியைவிட வேற்றுமையிருக்கினும் இப்பேதம் தோற்றுகிறதில்லை. ஆதலால் பஞ்சகோசங்களுக்கு மித்தியாத்மத்தன்மை யுண்டு.

(வி-ம்.)

ஆநந்தமயன்முதலாக அந்நமயபரியந்தமான பஞ்சகோசங்களில் சாக்ஷியினும் பேத மிருக்கினும் விளங்குகிறதில்லை. ஆதலால் அப்பஞ்சகோசங்களுக்கு மித்தியாத்மத்தன்மை யிருக்கின்றது என்பது பொருள்.

(அ-கை.)

கோசங்களின் மித்தியாத்மத்தன்மையில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

स्थाणोः चोरात्मता यथा ॥

(சு-ம்.)

எப்படி ஸ்தாணுவிற்குச் சோரத்தன்மை யிருக்கின்றதோ அதுபோல.

(வி-ம்.)

வாஸ்தவத்தன்மையாகச் சோரனுக்கு வேறான ஸ்தாணுவிற்குச் சோர வடிவத்தன்மை மித்தை யாவதுபோல, பஞ்சகோசங்களுக்கு ஆத்மவடிவத்தன்மை மித்தையா மென்பது பொருள். (சக)

கக. சாக்ஷியினது முக்கிய ஆத்மத்தன்மையினைச் சம்பாதித்தல்.

[கடகஅ] न भाति भेदो नाप्यस्ति साक्षिणोऽप्रतियोगिनः ।
सर्वांतरत्वात्तस्यैव मुख्यमात्मत्वमिष्यते ॥ ४२ ॥

(அ-கை.)

இப்படிக் கௌணாத்மா மித்தியாத்மாக்களைக் கூறி இப்போது சாக்ஷி

யாகிய பிரத்தியகாத்மாவின் முக்கிய ஆத்மத்தன்மையினைச் சம்பாதிக்கின்றார்:—

साक्षिणः भेदः न भाति न अस्ति अपि ॥

(சு-ம்.)

சாக்ஷிக்கு எதனோடும் பேதம் தோற்றுகிற தில்லை; பேதமு மில்லை.

(வி-ம்.)

சாக்ஷிவடிவ ஆத்மாவிற்குப் புத்திராதி கௌணாத்மாவினைப்போல எதனோடும் பேதம் தோற்றுகிற தில்லை. தேகாதி மித்தியாத்மாவினைப்போல பேதம் இருப்பது மில்லை.

(அ-கை.)

அவ்விரண்டிடங்களிலும் ஏதுவைக் கூறுகின்றார்:—

अप्रतियोगिनः ॥

(சு-ம்.)

அந்தச் சாக்ஷி எப்படி யிருக்கிறதெனின், அப்பிரதியோகியா யிருக்கின்றது அதாவது தனக்கு வேறான வாஸ்தவவஸ்து இல்லாததா யிருக்கின்றது.

(வி-ம்.)

இங்கு "அப்பிரதியோகி" என்பது ஏதுவினை உள்ளடக்கிய ஏதுகர்ப்பிதவிசேஷணமாம். ஆதலால் பிரதியோகியில்லாததா யிருத்தலால் சாக்ஷிக்குப் பேதம் தோற்றுகிறதில்லை; இருப்பது மில்லை. எப்படிப் புத்திராதியருக்கும் தேகாதிகளுக்கும் சாக்ஷியாகிய தான் பிரதியோகியா யிருக்கின்றதோ, அதுபோலத் தனக்கு வாஸ்தவவடிவப்பிரதியோகி எதுவு மில்லை; ஏனெனின், தேகாதிகள் யாவும் ஆரோபிதமா யிருத்தலால் என்பது கருத்து.

(அ-கை.)

அப்படியானால் பேதத்தின் அபாவவடிவ ஏதுவினால் சாக்ஷிக்குக் கௌணத்தன்மை மித்தியாத்தன்மைக ளில்லாதிருக்குக. ஆனால் முக்கியாத்மத்தன்மை எதனா லிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

सर्वांतरत्वात् तस्य एव आत्मत्वं मुख्यं इष्यते ॥

(சு-ம்.)

எல்லாவற்றின் உள்ளா யிருத்தலின் சாக்ஷிக்கே முக்கியாத்மத்தன்மை அங்கீகரிக்கப்படுகின்றது.

(வி-ம்.)

புத்திராதி எல்லாத் தேகங்களையும்விட ஆந்தரமா யிருத்தலின் அதாவது அதிஷ்டானமா யிருத்தலால் உள்ளாயிருத்தலின் எல்லாவற்றிற்கும் சாக்ஷியாகிய பிரத்தியக்கு சர்வாந்தரமாகத் தோற்றுகின்றமையால் அச்சாக்ஷிக்கே ஆத்மத்தன்மை முக்கியமாக (ஆரோபிக்கப்படாததாக) அங்கீகரிக்கப்படுகின்றது என்பது பொருள்.

இங்கு இவ்வநுமானம் சூசிக்கப்பட்டிருக்கின்றது:— விவாதத்திற்கு விஷயமான சாக்ஷி முக்கியாத்மா ஆகுதற்குரியதாம்; சர்வாந்தரத்தன்மையால்; எது முக்கியாத்மாவாகாதோ, அது சர்வாந்தரமு மாகாது, அகங்காரமுதலியவற்றினைப்போல என்பது கேவலவெதிரேகியநுமானமாம். ()

கஉ. சுலோகம் கஙகஞ-ல் கூறிய மூன்று ஆத்மாவில் போக்கியத்தின் பிரதானத்தன்மையும் பிறவற்றின் அப்பிரதானத்தன்மையும்.

[கஙகக] सत्येवं व्यवहारेषु येषु यस्यात्मतोचिता ।
तेषु तस्यैव शेषित्वं सर्वस्यान्यस्य शेषता ॥ ४३ ॥

(அ-கை.)

ஆத்மாவின் மூன்றுவிதத்தன்மை இருக்குக. புத்திராதிகளுக்குச் சேஷமுடைமை சொல்லுதலால் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

एवं सति एषु व्यवहारेषु यस्यात्मता उचिता तेषु तस्य एव शेषित्वं अन्यस्य सर्वस्य शेषता ॥

(சு-ம்.)

இவ்வாறாகவே எவ்வியவகாரங்களில் எதற்கு ஆத்மத்தன்மை உசிதமோ, அவ்வியவகாரங்களில் அதற்கே சேஷித்தன்மை அதாவது முக்கியத்தன்மை யுண்டு. மற்றெல்லாவற்றிற்கும் சேஷத்தன்மை அதாவது அமுக்கியத்தன்மை யுண்டு.

(வி-ம்.)

இப்படி ஆத்மா மூவகையா யிருக்கினும் இந்த இலௌகிக வைதிகலக்ஷணமுள்ள பாலனம், போஷணம், பிரஹ்மாத்மத்தன்மையநுசந்தான முதலியனவாகிய வியவகாரவிசேஷங்களில் எந்தப் புத்திராதிகளுக்கோ தேகாதிகளுக்கோ அல்லது சாக்ஷிக்கோ ஆத்மத்தன்மை உசிதமாகின்றதோ, அவ்வியவகாரங்களில் அதற்கு அதாவது புத்திராதிகளுக்காவது தேகாதிகளுக்காவது சாக்ஷிக்காவது சேஷித்துவ முண்டு. அவற்றின் வேறாகிய எல்லாவற்றிற்கும் சேஷத்துவம் அதாவது அமுக்கியத்தன்மை யுண்டாகின்றது என்பது சொல்லெச்சம். (சுஙு)

௧௩. முற்கூறிய பொருளினை விரித்துக் கூறுதல்.

[௧௩௨௦] मुमूर्षोर्गृहरक्षादौ गौणात्मैवोपयुज्यते ।
न मुख्यात्मा न मिथ्यात्मा पुत्रः शेषी भवत्यतः ॥ ४४ ॥

(அ-கை.)

இந்த ௧௩௧௯-வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினையே ஐந்து சுலோகங்களால் வர்ணிக்கின்றார்:—

मुमूर्षोः गृहरक्षादौ गौणात्मा एव उपयुज्यते । मुख्यात्मा न । मिथ्यात्मा न ॥

(சு-ம்.)

மரணத்தை விரும்பிய புருஷனுக்கு வீட்டினை ரக்ஷித்தல்முதலியவற்றில் புத்திரனாகிய கௌணாத்மாவே உபயோகத்தை யடைகின்றான்; முக்கியாத்மாவாகிய சாக்ஷி அடைகிறதில்லை; தேகாதி மித்தியாத்மாவும் அடைகிறதில்லை.

(வி-ம்.)

கிரகத்தின் இரக்ஷிப்புமுதலிய கர்மவிசேஷங்களில் புத்திரன் பாரியை முதலியவடிவ கௌணாத்மாவே உபயோகி யாகின்றது. ஏனெனின், புத்திராதியர் பிற்காலத்தில் ஜீவித்தற்கு இச்சையுடையவர்களா யிருத்தலால் என்பது பொருள். முக்கியாத்மாவாகிய சாக்ஷி உபயோகமுடையதன்று; அஃது அவிகாரியாயிருத்தலால். மித்தியாத்மாவாகிய தேகாதிகளும் உபயோகிகளன்று; அவை மரணத்திற்கு எதிர்முகமா யிருத்தலின் என்பது கருத்து.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

अतः पुत्रः शेषी भवति ॥

(சு-ம்.)

ஆதலால் அங்குப் புத்திரன் சேஷியாகின்றான். (௪௪)

[௧௩௨௧] अध्येता वह्निरित्यत्र सन्नप्यग्निर्न गृह्यते ।
अयोग्यत्वेन योग्यत्वाद्बटुरेवात्र गृह्यते ॥ ४५ ॥

(அ-கை.)

கூறிய வீட்டைக்காத்தல்முதலிய விவகாரங்களிலும் பிதாமுதலிய தாமிருந்தும் புத்திரனைச் சுவீகரித்தலில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

अध्येता वह्निः इति अत्र सन् अपि अग्निः अयोग्यत्वेन न गृह्यते । अत्र योग्यत्वात् वटुः एव गृह्यते ॥

(சு-ம்.)

இந்த அத்தியயனஞ்செய்வோன் அக்கினி என்னும் இவ்வாக்கியத்தில் இருந்தும் அக்கினி அயோக்கியமா யிருத்தலால் கொள்ளப்படுகிறதில்லை. ஆனால் இங்கு யோக்கியமா யிருத்தலால் அத்தியயனஞ்செய்பவனே கொள்ளப்படுகின்றான்.

(வி-ம்.)

"இவ்வத்தியயனஞ்செய்வோன் அக்கினி" என்னும் வாக்கியத்தின் உச்சாரணத்தில் சொரூபமாக விருக்கினும், அக்கினி யென்பது அக்கினி யென்னும் சப்தத்தின் அர்த்தமாகக் கொள்ளப்படுகிறதில்லை. ஏனெனின் அவ்வக்கினிக்கு அத்தியயனஞ் செய்யுந்தன்மை தகுதியாகாமையின்; ஆனால் அத்தியயனஞ்செய்யுந்தன்மையில் தகுதியுடைய படனுகிய மாணவகன் அதாவது வித்தைபயிலும் பாலகனே இப்பிரயோகத்தில் அக்கினி சப்தத்திற்குப் பொருளாகக் கொள்ளப்படுகின்றான்; ஏனெனின் அவனுக்கு அத்தியயனகர்த்தாவாதலில் தகுதி யிருத்தலின் என்பது பொருள்.

[கூஉஉ] कृशोहं पुष्टिमाप्स्यामीत्यादौ देहात्मतोचिता ।
न पुत्रे विनियुंक्तेऽत्र पुष्टिहेत्वन्नभक्षणे ॥ ४६ ॥

(அ-கை.)

இப்படிப் புத்திராதிய கௌணுத்மாவினது பிரதானத்தன்மையின் ஸ்தலத்தை உதகரித்து, இப்போது மித்தியாத்மாவினது பிரதானத்தன்மையின் ஸ்தலத்தை உதாகரணமாக்குகின்றார்:—

अहं कृशः पुष्टिं आप्स्यामि इत्यादौ देहात्मता उचिता ॥

(சு-ம்.)

"யான் மெலிந்தவனு யிருக்கின்றேன்; புஷ்டியை யடைவேன்." என்னும் இவைமுதலிய விடங்களில் தேகத்தின் ஆத்மத்தன்மை உசிதமாம்.

(வி-ம்.)

"யான் மெலிந்தவனு யிருக்கிறேன். ஆதலால் புஷ்டியைச் சம்பாதிப்பேன்." என்னும் இவைமுதலிய லோகவியவகாரங்களில் அந்நத்தைப் புசித்தற்குரிய தேகத்திற்கே ஆத்மவடிவத்துவம் கொள்ளத்தக்கதாம்.

(அ-கை.)

முற்கூறிய அர்த்தத்தினை உலகவியவகாரத்தினைக் காட்டுதலால் திடப்படுத்துகின்றார்:—

अत्र पुष्टिहेत्वन्नभक्षणे पुत्रं न विनियुंक्ते ॥

(சு-ம்.)

இங்குப் புஷ்டிக்கு எதுவான அந்நத்தினைப் புசித்தலில் புத்திரனைச் சேர்க்கிறதில்லை. ஆதலால் தேகம் முக்கியமாம். (௯௬)

[௧௩௨௩] तपसा स्वर्गमेष्यामीत्यादौ कर्त्रात्मतोचिता ।
अनपेक्ष्य वपुर्भोगं चरेत्कृच्छ्रादिकं ततः ॥ ४७ ॥

(அ-கை.)

மற்றும் கூறுகின்றார்:—

तपसा स्वर्गं एष्यामि इत्यादौ कर्त्रात्मता उचिता ॥

(சு-ம்.)

யான் தபசினால் சுவர்க்கத்தை அடைவேன் என்னும் இவை முதலிய விடங்களில் கர்த்தாவின் ஆத்மத்தன்மை உசிதமாம்.

(வி-ம்.)

எப்போது புருஷன் "யான் தவத்தைச் செய்து சுவர்க்கத்தினைச் சம்பாதிப்பேன்" என்னும் இவைமுதலிய விவகாரங்களைச் செய்கின்றானோ, அப்போது கர்த்தா வென்னும் சொல்லிற்குப் பொருளாகிய விஞ்ஞானமய கோசத்திற்கே ஆத்மவடிவத்தன்மை உசிதமாம்; தேகாதிகளுக் கன்று என்பது பொருள்.

(அ-கை.)

அதனையே எதுபூர்வகமாகக் கூறுகின்றார்:—

ततः वपुर्भोगं अनपेक्ष्य कृच्छ्रादिकं चरेत् ॥

(சு-ம்.)

ஆதலால் தேகத்தினது போகத்தின் இச்சையினைச் செய்யாது கிருச்சிரமுதலிய தவத்தினைச் செய்கின்றான்.

(வி-ம்.)

எதனால் தேகத்திற்கு ஆத்மத்தன்மை உசிதமன்றோ, அதனால் புருஷன் தேகத்தினது போகத்தினை விடுதலை முன்னிட்டுக் கர்த்தாவாகிய விஞ்ஞான

மயனைச் சுவர்க்கத்திற் சேர்ப்பித்தலால் உபகாரகமான * எ. கிருச்சிரசாந்திராயணாதிவடிவ தவத்தினை ஆசரிக்கின்றான் என்பது பொருள். (சஎ)

[கஙஉச] मोक्ष्येऽहमित्यत्र युक्तं चिदात्मत्वं तदा पुमान् ।
तद्वेत्ति गुरुशास्त्राभ्यां न तु किंचिच्चिकीर्षति ॥ ४८ ॥

---

* எ. பன்னிரண்டு நாட்களால் சாதிக்கப்படும் விரதம் கிருச்சிர மெனப்படும். அது (க) பாதக்கிருச்சிரம், (உ) பிராஜாபத்தியகிருச்சிரம், (ங) அர்த்தக்கிருச்சிரம், (ச) பாதோனகிருச்சிரம், (ரு) அதிக்கிருச்சிரம், (சு) கிருச்சிராதிக்கிருச்சிரம், (எ) சாந்தபனகிருச்சிரம், (அ) மகாசாந்தபனகிருச்சிரம், (கூ) யதிசாந்தபனகிருச்சிரம், (க0) தப்தகிருச்சிரம், (கக) சீதக்கிருச்சிரம், (கஉ) பராகக்கிருச்சிரம் என்று பன்னிரண்டு வகையாம். அவற்றின் சொரூபம் இதுவாம்:—

(க) முதல் தினத்தில் மத்தியானகாலத்தில் ஒரு முறை அவிசன்னத்தினை இருபத்தாறு கவளம் கொள்ளவேண்டும். இரண்டாவது தினத்தில் இரவில் இருபத்தாறு கவளம் கொள்ளவேண்டும். மூன்றாவது தினத்தில் யாசிக்கப்படாத அந்நத்தின் இருபத்துநாலு கவளம் கொள்ளவேண்டும். நாலாம் நாள் போஜனம் செய்யலாகாது இது பாதக்கிருச்சிரம்.

(உ) [illegible] இதுவே பிராஜாபத்திய கிருச்சிரமாம். [illegible] இராத்திரி போஜனம்,

(ங) இரண்டு நாள் ஒரு முறை போஜனம், இரண்டு நாள் [illegible] இரண்டு நாள் யாசிக்கப்படாத போஜனம், இரண்டு நாள் உபவாசம் செய்தல் அர்த்தக்கிருச்சிரமாம். அல்லது மூன்று தினம் அயாசித அதாவது யாசிக்கப்படாத போஜனமும் மூன்று நாள் உபவாசமும் செய்தல் அர்த்தக்கிருச்சிரமாம்.

(ச) ஒருமுறை போஜனமும், இராத்திரிபோஜனமும், அயாசிதபோஜனமும் உபவாசமுமாக இவ்வாறு யாதேனும் ஓர்வகையாக மும்மடங்காக்கப்பட்ட இவற்றால் பாதோனக்கிருச்சிர மாகின்றது.

(ரு) இவ்வொன்பது நாட்களில் போஜனத்தின் பிராப்தி யுண்டாகிறது. அக்கவளங்களின் நியமத்தினை விட்டுக் கையில் நிறைந்த அந்நத்தினைப் போஜனம் செய்யின் அதிக்கிருச்சிர மாகின்றது.

(சு) ஒரு கவள அளவுள்ள அல்லது பிராணன் தரிக்கும் அளவுள்ள பாலினை இருபத்தொருநாள் புசிக்க கிருச்சிராதிக்கிருச்சிர மாகின்றது.

(எ) ஒரு தினத்தில் குசமாகிய தர்ப்பையோடும் ஜலத்தோடும் சேர்ந்த ஆவின் பால், தயிர், நெய், மூத்திரம், சாணம் என்பனவற்றைப் புசித்தலும், ஒரு தினம் உபவாசம் செய்தலுமாகிய இது இரண்டு இரவின் சாந்தபனகிருச்சிரமாம்.

(அ) பஞ்சகவ்வியமும் குசஜலமுமாகிய இவற்றை வேறுவேறாக ஒருதினம் போஜனமும், ஒருதினம் உபவாசம் செய்தலுமாகிய இது ஏழுதினங்களால் சாதிக்கப்படுவதான மகாசாந்தபனகிருச்சிரமாம்.

(கூ) மூன்று நாள் கலந்த பஞ்சகவ்வியத்தைப் புசிக்கின் யதிசாந்தபனகிருச்சிரமாகின்றது.

(க0) காய்ந்த நெய் பால் ஜல மென்னும் ஒவ்வொன்றினையும் மூன்றுநாள் பருகுதலும் மூன்றுநாள் உபவாசமுமாகிய இது தப்தகிருச்சிரமாம். அல்லது காய்ந்த நெய் முதலியவற்றை ஒவ்வொரு நாள் புசித்தலும், ஒரு நாள் உபவாசமுமாகிய இது நான்கு தினங்களால் சாதிக்கப்படும் தப்தகிருச்சிரமாம்.

(கக) குளிர்ந்த நெய்முதலியவற்றைப் புசிக்கின் சீதக்கிருச்சிர மாகின்றது.

(அ-கை.)

முற்கூறிய அர்த்தத்தினை லௌகிகவியவகாரத்தினைக் காட்டுதலால் திடப்படுத்துகின்றார்:—

अत्र पुष्टिहेत्वन्नभक्षणे पुत्रं न विनियुंक्ते ॥

(சு-ம்.)

இங்குப் புஷ்டிக்கு எதுவான அந்நத்தினைப் புசித்தலில் புத்திரனைச் சேர்க்கிறதில்லை. ஆதலால் தேகம் முக்கியமாம். (சுக)

[க௬உ௬] तपसा स्वर्गमेप्यामीत्यादौ कर्त्रात्मतोचिता ।
अनपेक्ष्य वपुर्भोगं चरेत्कृच्छ्रादिकं ततः ॥ ४७ ॥

(அ-கை.)

மற்றும் கூறுகின்றார்:—

तपसा स्वर्ग एप्यामि इत्यादौ कर्त्रात्मता उचिता ॥

(சு-ம்.)

யான் தபசினால் சுவர்க்கத்தை அடைவேன் என்னும் இவை முதலிய இடங்களில் கர்த்தாவின் ஆத்மத்தன்மை உசிதமாம்.

(வி-ம்.)

எப்போது புருஷன் "யான் தவத்தைச் செய்து சுவர்க்கத்தினைச் சம்பாதிப்பேன்" என்னும் இவைமுதலிய விவகாரங்களைச் செய்கின்றானோ, அப்போது கர்த்தா வென்னும் சொல்லிற்குப் பொருளாகிய விஞ்ஞானமய கோசத்திற்கே ஆத்மவடிவத்தன்மை உசிதமாம்; தேகாதிகளுக் கன்று என்பது பொருள்.

(அ-கை.)

அதனையே எதுபூர்வகமாகக் கூறுகின்றார்:—

ततः वपुर्भोगं अनपेक्ष्य कृच्छ्रादिकं चरेत् ॥

(சு-ம்.)

ஆதலால் தேகத்தினது போகத்தின் இச்சையினைச் செய்யாது கிருச்சிரமுதலிய தவத்தினைச் செய்கின்றான்.

(வி-ம்.)

எதனால் தேகத்திற்கு ஆத்மத்தன்மை உசிதமன்றோ, அதனால் புருஷன் தேகத்தினது போகத்தினை விடுதலை முன்னிட்டுக் கர்த்தாவாகிய விஞ்ஞான

மயனைச் சுவர்க்கத்திற் சேர்ப்பித்தலால் உபகாரகமான * எ. கிருச்சிரசாந்திராயணாதிவடிவ தவத்தினை ஆசரிக்கின்றான் என்பது பொருள். (சஎ)

[கஙஉச] मोक्ष्येऽहमित्यत्र युक्तं चिदात्मत्वं तदा पुमान् ।
तद्वेत्ति गुरुशास्त्राभ्यां न तु किंचिच्चिकीर्षति ॥ ४८ ॥

---

* எ. பன்னிரண்டு நாட்களால் சாதிக்கப்படும் விரதம் கிருச்சிர மெனப்படும். அது (க) பாதக்கிருச்சிரம், (உ) பிராஜாபத்தியகிருச்சிரம், (ங) அர்த்தக்கிருச்சிரம், (ச) பாதோனகிருச்சிரம், (ரு) அதிக்கிருச்சிரம், (சு) கிருச்சிராதிக்கிருச்சிரம், (எ) சாந்தபனகிருச்சிரம், (அ) மகாசாந்தபனகிருச்சிரம், (கூ) யதிசாந்தபனகிருச்சிரம், (க0) தப்தகிருச்சிரம், (கக) சீதக்கிருச்சிரம், (கஉ) பராகக்கிருச்சிரம் என்று பன்னிரண்டு வகையாம். அவற்றின் சொரூபம் இதுவாம்:—

(க) முதல் தினத்தில் மத்தியானகாலத்தில் ஒரு முறை அவிசன்னத்தினை இருபத்தாறு கவளம் கொள்ளவேண்டும். இரண்டாவது தினத்தில் இரவில் இருபத்தாறு கவளம் கொள்ளவேண்டும். மூன்றாவது தினத்தில் யாசிக்கப்படாத அந்நத்தின் இருபத்துநாலு கவளம் கொள்ளவேண்டும். நாலாம் நாள் போஜனம் செய்யலாகாது இது **பாதக்கிருச்சிரம்.**

(உ) எவ்விதத்தாலாயினும் மும்மடங்கு செய்யப்படின், இதுவே **பிராஜாபத்திய கிருச்சிரமாம்.**

(ங) இரண்டு நாள் ஒரு முறை போஜனம், இரண்டு நாள் இராத்திரி போஜனம், இரண்டு நாள் யாசிக்கப்படாத போஜனம், இரண்டு நாள் உபவாசம் செய்தல் **அர்த்தக்கிருச்சிரமாம்.** அல்லது மூன்று தினம் அயாசித அதாவது யாசிக்கப்படாத போஜனமும் மூன்று நாள் உபவாசமும் செய்தல் **அர்த்தக்கிருச்சிரமாம்.**

(ச) ஒருமுறை போஜனமும், இராத்திரிபோஜனமும், அயாசிதபோஜனமும் உபவாசமுமாக இவ்வாறு யாதேனும் ஓர்வகையாக மும்மடங்காக்கப்பட்ட இவற்றால் **பாதோனக்கிருச்சிர** மாகின்றது.

(ரு) இவ்வொன்பது நாட்களில் போஜனத்தின் பிராப்தி யுண்டாகிறது. அக்கவளங்களின் நியமத்தினை விட்டுக் கையில் நிறைந்த அந்நத்தினைப் போஜனம் செய்யின் **அதிக்கிருச்சிர** மாகின்றது.

(சு) ஒரு கவள அளவுள்ள அல்லது பிராணன் தரிக்கும் அளவுள்ள பாலினை இருபத்தொருநாள் புசிக்க **கிருச்சிராதிக்கிருச்சிர** மாகின்றது.

(எ) ஒரு தினத்தில் குசமாகிய தர்ப்பையோடும் ஜலத்தோடும் சேர்ந்த ஆவின் பால், தயிர், நெய், மூத்திரம், சாணம் என்பனவற்றைப் புசித்தலும், ஒரு தினம் உபவாசம் செய்தலுமாகிய இது இரண்டு இரவின் **சாந்தபனகிருச்சிரமாம்.**

(அ) பஞ்சகவ்வியமும் குசஜலமுமாகிய இவற்றை வேறுவேறாக ஒருதினம் போஜனமும், ஒருதினம் உபவாசம் செய்தலுமாகிய இது ஏழுதினங்களால் சாதிக்கப்படுவதான **மகாசாந்தபனகிருச்சிரமாம்.**

(கூ) மூன்று நாள் கலந்த பஞ்சகவ்வியத்தைப் புசிக்கின் **யதிசாந்தபனகிருச்சிர** மாகின்றது.

(க0) காய்ந்த நெய் பால் ஜல மென்னும் ஒவ்வொன்றினையும் மூன்றுநாள் பருகுதலும் மூன்றுநாள் உபவாசமுமாகிய இது **தப்தகிருச்சிரமாம்.** அல்லது காய்ந்த நெய் முதலியவற்றை ஒவ்வொரு நாள் புசித்தலும், ஒரு நாள் உபவாசமுமாகிய இது நான்கு தினங்களால் சாதிக்கப்படும் **தப்தகிருச்சிரமாம்.**

(கக) குளிர்ந்த நெய்முதலியவற்றைப் புசிக்கின் **சீதக்கிருச்சிர** மாகின்றது.

(அ-கை.)

அல்லது முக்கிய ஆத்மாவின் ஸ்தலத்தை உதாகரணமாக்குகின்றார்:—

पुमान् अहं मोक्ष्ये इति तदा गुरुशास्त्राभ्यां सत् वेत्ति । किंचित् न तु चिकीर्षति अत्र चिदात्मत्वं युक्तं ॥

(சா-ம்.)

எப்போது புருஷன் "யான் மோக்ஷத்தை யடைவேனாக" என்னும் புத்தியைச் செய்கின்றானோ, அப்போது குருசாஸ்திரங்களால் அந்தப் பிரஹ்ம சேதனத்தை அறிகின்றான். வேறு கர்மமுதலியவற்றைச் செய்ய விரும்புகிறதில்லை. இங்கு அதாவது இவ்வியவகாரத்தில் சுத்தசேதனத்திற்கு ஆத்மத்தன்மை பொருத்தமுள்ளதாம்.

(வி-ம்.)

எப்போது புருஷன் "சமமுதலிய சாதனங்களைச் சம்பாதித்து யான் முக்தியை யடைவேனாக." என்னும் புத்தியைச் செய்கின்றானோ, அப்போது குருசாஸ்திரங்களால் அதாவது ஆசாரியனால் உபதேசிக்கப்பட்ட மகாவாக்கியத்தின் அர்த்தமாகிய பிரஹ்மாத்ம ஐக்கியத்தின் விசாரத்தினாற் றோன்றிய அபரோக்ஷஞானத்தினால்"நான் கர்த்தாமுதலியவடிவ மல்லன். ஆனால் சச்சிதாநந்தவடிவப்பிரஹ்மம் யான்." என்று சிதாத்மாவை அறிகின்றான் என்னும் வியவகாரத்தில் அந்தச் சாக்ஷிக்குச் சுத்தசேதனவடிவத்தன்

---

(கஉ) பன்னிரண்டு தின உபவாசத்தினால் பராகக்கிருச்சிர மாகின்றது.

இவ்வாறு கிருச்சிரம் சொல்லப்பட்டது. ஆதி சப்தத்தால் சாந்திராயண முதலியன கொள்ளப்படும்:—(க) யவமத்தியம், பிபீலிகாமத்திய மென்னும் பேதத்தால் சாந்திராயணம் இருவகைப்படும்.

(க) சுக்கிலபக்ஷத்தில் பிரதமைமுதலிய திதிகளில் மயூரபக்ஷியின் முட்டையினைப் போன்ற ஒவ்வொருகவளம் விருத்திசெய்யவேண்டும். இப்படிப் பூர்ணமாசியன்று பதினைந்து கவளமும், திதிக்ஷயமாயின் பதினான்கும், திதி விருத்தியாயின் பதினாறு கவளமு மாகின்றன. கிருஷ்ணபக்ஷத்தில் ஒவ்வொரு கவளத்தினைக் குறைத்தலால் அமாவாசையன்று உபவாச முண்டாகின்றது. இது மாசத்தினால் சாதிக்கப்படும் **யவமத்திய** மென்னும் **சாந்திராயண**மாம்.

(உ) கிருஷ்ணபக்ஷத்தில் பிரதமையன்று பதினான்கு கவளம் உட்கொண்டு ஒவ்வொரு கவளம் குறைத்தலால் அமாவாசையன்று உபவாசமும், சுக்கிலபக்ஷத்தில் ஒவ்வொரு கவளம் விருத்திசெய்தலுமாக இவ்வாறு கிருஷ்ணபக்ஷமுதல் சுக்கிலபக்ஷபரியந்தம் **பிபீலிகாமத்திய** மென்னும் **சாந்திராயண**மாம்.

இவை முதலியனவாகப் பாபநிவிருத்தியின்பொருட்டு வேதத்தினால் விதிக்கப்பட்ட பிராயச்சித்தகர்மம் **தப** மெனப்படும். தர்மசாஸ்திரத்தின் அநேக கிரந்தங்களில் பிராயச்சித்தப் பிரகரணத்தில் இவை விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.

அது சகாமனுக்குச் சுவர்க்காதிகளுக்குக் காரணமாயினும், நிஷ்காமபுருஷனுக்குச் சித்தசுத்திக்குக் காரணமாம். ஆதலால் வேதாந்தநூல்களிலும் அநேக இடங்களில் இவை தப மென்னும் பெயரால் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதலால் உபயோகமுடையதாகக் கண்டு இங்குப் பிரசங்கத்தால் அறிவிக்கப்பட்டது.

மையே உசிதமாம். ஆனால் அங்குக் கர்த்தாவாகிய விஞ்ஞானமயமுதலிய வடிவத்தன்மை உசிதமன்று என்பது பொருள். " सत्यं ज्ञानमनंत ब्रह्म विज्ञानमानंदं ब्रह्म अनंतरोऽवाह्यः कृत्स्नः प्रज्ञानघन एव ॥ சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மமாம். விஞ்ஞானம் ஆநந்தம் பிரஹ்மம். உள்ளுமில்லாதது வெளியுமில்லாதது முழுப்பிரஞ்ஞானகனம் அதாவது மிக்க ஞானவடிவம் ஆத்மாவாம்." என்னும் இவைமுதலிய சுருதிகளால் ஆத்மாவிற்குப் பிரஹ்மவடிவத்தன்மை யிருக்கின்றது. (சஅ)

கசு. சுலோகம் கருகரு—கருகக பரியந்தம் சொல்லப்பட்ட மூன்று ஆத்மாவின் வியவகாரவிசேஷத்தில் வியவஸ்தையால் பிரதானத்தன்மையில் திருஷ்டாந்தம்.

[கருஉரு] विप्रक्षत्रादयो यद्वद्बृहस्पतिसवादिषु ।
व्यवस्थितास्तथा गौणमिथ्यामुख्या यथोचितम् ॥ ४९ ॥

(அ-கை.)

உதாகரணஞ்செய்யப்பட்ட மூன்றுவகையான ஆத்மாவினது வியவகாரத்தின் பேதங்களில் எந்த வியவஸ்தையினால் பிரதானத்தன்மை யிருக்கின்றதோ அதில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

यद्वत् विप्रक्षत्रादयः बृहस्पतिसवादिषु व्यवस्थितः तथा गौणमिथ्यामुख्या यथोचितं ॥

(சு-ம்.)

எப்படி விப்பிரன் க்ஷத்திரியன்முதலியோர் பிரகஸ்பதியாகமுதலியவற்றில் வியவஸ்தையினை அடைந்திருக்கின்றனரோ, அதுபோலக் கௌணமித்தியா முக்கியவடிவ ஆத்மாவிற்கும் தக்கவாறு பிரதானத்தன்மை யிருக்கின்றது.

(வி-ம்.)

"பிராஹ்மணன் பிரகஸ்பதி யென்னும் யாகத்தால் யஜிக்க." என்னும் வாக்கியத்தால் இங்குப் பிரகஸ்பதிஸவத்தில் பிராஹ்மணனுக்கே அதிகாரமாம்; க்ஷத்திரிய வைசியர்களுக்கு இல்லை. "இராஜன் இராஜஸூயம் என்னும் யாகத்தால் யாகஞ் செய்க." என்பதில் இராஜனுக்கே அதிகார முண்டு; பிராஹ்மண வைசியர்களுக் கில்லை. "வைசியன் வைசியஸ்தோம மென்னும் யாகத்தால் யஜிக்க." என்பதில் வைசியனுக்கே அதிகார முண்டு; மற்றைய பிராஹ்மண க்ஷத்திரியர்களுக் கில்லை. இவ்வாறே கௌணம், மித்தை, முக்கியம் என்னும் பேதமுடைய ஆத்மாவிற்குத் தக்கவாறு அதாவது தனக்குசிதமான வியவகாரத்தில் பிரதானத்தன்மை யுண்டு என்பது கருத்து. (சகூ)

கூ. பலிதம் (ஆத்மாவில் அதிசயப்பிரீதியும் ஆத்மாவினது சேஷத்தில் பிரீதியும் பிறவற்றில் இரண்டுமில்லாமையும்).

[க௩உ௬] तत्र तत्रोचिते प्रीतिरात्मन्येवातिशायिनी ।
अनात्मनि तु तच्छेषे प्रीतिरन्यत्र नोभयम् ॥ ५० ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

तत्र तत्र उचिते आत्मनि एव प्रीतिः अतिशायिनी । तच्छेषे अनात्मनि तु प्रीतिः । अन्यत्र उभयं न ॥

(ா-ம.)

அந்தந்த வியவகாரத்தில் உசிதமான ஆத்மாவிலேயே அதிசய (மிக்க) பிரீதி யிருக்கின்றது. அவ்வாத்மாவின் சேஷமென்னும் உபகார அநாத்மாவிலோ பிரீதி யிருக்கின்றது; பிறவஸ்துக்களில் இரண்டு மில்லை.

(வி-ம்.)

எந்த வியவகாரத்தில் எந்தெந்த ஆத்மா யோக்கிய மாகுமோ அந்தந்த வியவகாரத்தில் உசிதமான அதாவது உபயோகியா யிருத்தலால் பிரதான வடிவமான ஆத்மாவிலேயே மிகுந்த பிரீதி யிருக்கின்றது. அந்த ஆத்மாவின் சேஷவடிவ அதாவது போக்கியவடிவ அநாத்மாவில் பிரீதிமாத்திர முண்டு; நிரதிசயப்பிரேமை யில்லை என்பது பொருள். ஆத்மாவும் அதன் சேஷமுமான இவ்விரண்டிற்கும் வேறான அந்நிய வஸ்துவில் இரண்டுவகையான பிரேமையு மில்லை என்பது *அ. பொருள். (௫0)

* அ. இங்கு இஃது அபிப்பிராயமாம்:—எந்த வஸ்து இச்சைக்கு விஷயமாகின்றதோ அந்த வஸ்து அநுகூல மெனப்படுகின்றது. சுகம், துக்காபாவம், அவ்விரண்டன் சாதனம் என்பவற்றின் இச்சை யுண்டாகின்றது; பிறவற்றின் இச்சை யுண்டாகிறதில்லை. ஆதலால் சுகம், துக்காபாவம், இவ்விரண்டன் சாதனம் என்னும் நான்கும் அநுகூலமாம். ஆனால் அவற்றில் இவ்வளவு பேத முண்டு:—

(க) ஆத்மா எதனால் நித்தியநிரதிசயசுகம் துக்காபாவம் என்னும் வடிவுமா யிருக்கின்றதோ, அதனால் அதிசயத்தினும் அதிசயமான அநுகூலமாம். இதினலே யே பரமப்பிரேமைக்கு விஷயமாதலால் பிரியதமமாம்.

(உ) இவ்வுலக பரலோகவிஷயங்களினின் றுண்டாகிய சுகம் எதனால் அநித்தியம் சாதிசயமுதலிய அநந்தத்துக்கங்களால் விழுங்கப்பட்டிருக்கின்றதோ, அதனால் அதிசய அநுகூலமாம். இதனாலேயே சாதனத்தின் அபேக்ஷையால் அதிகப் பிரியத்திற்கு விஷயமா யிருத்தலால் பிரியதரமாம்.

(௩) சுகம், துக்காபாவம் என்பவற்றின் சாதனம் எதனால் சொரூபமாகச் சுகம் அல்லது துக்கத்தின் அபாவம் என்னும் வடிவமா யில்லையோ, ஆனால் அவற்றின் உற்பத்தியில் அல்லது ஆவிர்ப்பாவத்தில் உபயோகியா யிருக்கின்றதோ அதனால் அநுகூலமாம். இதனாலேயே பிரீதிமாத்திரத்திற்கு விஷயமா யிருத்தலால் பிரியமாம்.

(௪) இந்நான்கினும் வேறான வஸ்து இச்சைக்கு விஷய மன்று. ஆதலால் அநுகூலமன்று. ஆனால் அநுகூல பிரதிகூலங்களுக்கு வேறானதாம். இதனாலேயே பிரீதிக்கு விஷயமாகையால் பிரியமன்று. ஆனால் உபேக்ஷைக்கும் துவேஷத்திற்கும் விஷயமாதலால் உபேக்ஷியமும் துவேஷியமுமாம்.

உ. ஆத்மாவினது பிரியத்தன்மையின் சித்தியும், பரமாநந்தத்தன்மை எல்லா விருத்திகளிலும் தோற்றுமைபூர்வக யோக விவேகங்களின் சமத்துவமும் கரு௨எ—கரு௬௬.

க. பிரியதமம் பிரியம் உபேக்ஷ்யம் துவேஷ்ய மென்னும் வஸ்துக்களின் விவேகமும், ஞானியின் ஒரேவசனம் சிஷ்யனையும் பிரதிவாதியினையும் குறித்து வரசாபவடிவமாதலால் ஆத்மாவின் பிரியதமத்துவம் கரு௨எ—கரு௬அ.

க. சுலோகம் கரு௨௫-ல் கூறிய "அந்நியத்தில் (அநாத்மாவில்) இரண்டுமில்லை" என்பதன் அந்நியசப்தத்தின் அர்த்தமும், பலிதமும் (பிரியதமாதி நான்குவிதமும்).

[கரு௨எ] उपेक्ष्यं द्वेष्यमित्यन्यद्द्वेधा मार्गतृणादिकम् ।
उपेक्ष्यं व्याघ्रसर्पादि द्वेष्यमेवं चतुर्विधम् ॥ ९१ ॥

(அ-கை.)

"அந்நியவஸ்துவில் இரண்டுமில்லை." என்று கரு௨௬-வது சுலோகத்தில் கூறப்பட்ட அந்நியசப்தத்தின் அர்த்தத்தின் இடைப்பட்ட பேதத்தினைக் கூறுகின்றார் :—

अन्यत् उपेक्ष्यं द्वेष्यं इति द्वेधा ॥

(சு-ம்.)

உபேக்ஷியம் துவேஷிய மென்னும் பேதத்தால் அந்நியவஸ்து இருவகைப்படும்.

(வி-ம்.)

அந்நியம் என்று சொல்லப்படும் வஸ்துவானது உபேக்ஷைக்கு விஷயம் துவேஷத்திற்கு விஷயம் என்னும் பேதத்தால் இருவகைப்படுகின்றது.

(அ-கை.)

அவ்விரண்டனையும் உதாகரணத்தினால் கூறுகின்றார் :—

मार्गतृणादिकं उपेक्ष्यं । व्याघ्रसर्पादि द्वेष्यं ॥

(சு-ம்.)

வழியிற்கிடக்கும் துரும்புமுதலியன உபேக்ஷியமாம். புலி பாம்பு முதலியன துவேஷியமாம்.

(வி-ம்.)

"வழியிற்கிடக்கும் துரும்பு மண்ணாங்கட்டிமுதலியன உபேக்ஷியமாம் அதாவது உபேக்ஷைக்கு விஷயமாம். தனது உபத்திரவத்திற்குக் காரண

மான புலி பாம்புமுதலியன துவேஷியமாம் அதாவது துவேஷத்திற்கு விஷயமாம் என்பது பொருள்.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார் :—

एवं चतुर्विधं ॥

(ஈ-ம்.)

இவ்வாறு நால்வகையான வஸ்து விருக்கின்றது. (ருக)

உ. சுலோகம் கரூஉஎ-ல் கூறிய நால்வகையினைக் காட்டுதலும் அவற்றின் நியமிக்கப்படாத்தன்மையும்.

[கரூஉஅ] आत्मा शेष उपेक्ष्यं च द्वेष्यं चेति चतुर्ष्वपि ।
न व्यक्तिनियमः किंतु तत्तत्कार्यात्तथा तथा ॥ ५२ ॥

(அ-கை.)

நான்குவகையினையே காட்டுகின்றார் :—

आत्मा शेषः । च उपेक्ष्यं । च द्वेष्यं इति ॥

(ஈ-ம்.)

ஆத்மாவாகிய பிரியதமம், சேஷமென்னும் பிரியம், உபேக்ஷியம், துவேஷியம் என்பன நால்வகை வஸ்துக்களாம்.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாமுதலிய நான்கு வஸ்துக்களுக்கும் பிரியதமத்தன்மைமுதலியன நியமிக்கப்பட்டனவா? என்னுமிடத்து நியமிக்கப்பட்டன வன்று என்று கூறுகின்றார் :—

चतुर्षु अपि व्यक्तिनियमः न ।

(ஈ-ம்.)

இந்நான்கு வஸ்துக்களிலும் வியக்தியாகிய பிரியதமமுதலியசொரூபத்திற்கு நியம மில்லை.

(வி-ம்.)

ஆத்மாமுதலிய நான்கு வஸ்துக்களிலும் இதுவே பிரியதமம், இதுவே பிரியம், இதுவே உபேக்ஷியம், இதுவே துவேஷியம், பிறவன்று என்னும் நியம மில்லை என்பது பொருள்.

(அ-கை.)

அப்போது என்ன விருக்கின்றதெனக் கூறுகின்றார் :—

किंतु तत्तत्कार्यात् तथा तथा ॥

(சு-ம்.)

ஆனால் அந்தந்தக் காரியத்தினால் அப்படி அப்படி யுண்டாகின்றது.

(வி-ம்.)

அந்தந்த உபகாராதிவடிவ காரியங்களின் பேதத்தால் அப்படிப் பிரியாதிவடிவத்துவ முண்டாகிற தென்பது பொருள். (ருஉ)

ரு. பிரசித்தத்துவேஷ்யம் புலியினிடத்து நியமமாயில்லாமை.

[கருஉக] स्याद्व्याघ्रः संमुखो द्वेष्योह्युपेक्ष्यस्तु पराङ्मुखः ।
लालनादनुकूलश्चेद्विनोदायेति शेषताम् ॥५२॥

(அ-கை)

எல்லாவிடத்தும் நியமமின்மையைப் பொருத்துதற்பொருட்டுப் பிரசித்தத்துவேஷியவடிவ புலியினிடத்து அந்தத் துவேஷியபுத்தியின் நியமமின்மையைக் காட்டுகின்றார்:—

व्याघ्रः संमुखः द्वेष्यः स्यात् । पराङ्मुखः चेत् तु उपेक्ष्यः । हि लालनात् अनुकूलः विनोदाय । इति शेषताम् ॥

(சு-ம்.)

புலி எப்போது எதிர்முகமாகின்றதோ அப்போது துவேஷியமாகின்றது; எப்போது பராமுகமாகின்றதோ அப்போது உபேக்ஷியமாகின்றது; வளர்த்தலால் அநுகூலமாயின் விநோதத்தின்பொருட்டாவதாய்ச் சேஷத்தன்மையை யடைகின்றது.

(வி-ம்.)

புலியானது எப்போது தன்னைப் புசிக்கும்பொருட்டு எதிர்ப்படுகின்றதோ, அப்போது துவேஷத்திற்கு விஷயமாகின்றது. அப்புலியே எப்போது திரும்பிச் செல்லுகின்றதோ அப்போது உபேக்ஷைக்கு விஷயமாகின்றது. அப்புலியே வளர்த்தலினால் தனக்கு அநுகூலம் அதாவது சுகத்தின் சாதனமாகின்றதோ, அப்போது விநோதத்தின்பொருட்டாகிறது அதாவது விநோதத்தின் சாதனமாகின்றது. இவ்வாறு சேஷத்தன்மையின அதாவது தனது உபகாரகமாயிருத்தலால் பிரியத்தன்மையை அடைகின்றது என்பது அபிப்பிராயம். (ருரு)

௪. பிரியமுதலியவற்றின் வியவகாரத்தின் வியவஸ்தையும் இலக்ஷணமும்.

[௬௩௩௦] व्यक्तीनां नियमो माभूल्लक्षणात्तु व्यवस्थितिः ।
आनुकूल्यं प्रातिकूल्यं द्वयाभावश्च लक्षणम् ॥ ६४ ॥

(அ-கை.)

அப்படியானால் ஒருவஸ்துவிற்கே பிரியத்தன்மைமுதலிய மூன்று தர்மங்களை அங்கீகரிக்கவே வியவகாரத்தின் வியவஸ்தை யுண்டாகாதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

व्यक्तीनां नियमः माभूत् तु लक्षणात् व्यवस्थितिः ॥

(சு-ம்.)

வியக்திகளின் நியமம் இருக்கவேண்டாம்; ஆனால் இலக்ஷணத்தினால் வியவஸ்தையுண்டாம்.

(வி-ம்.)

வியக்தியாகிய பிரியத்தன்மைமுதலிய சொரூபத்திற்கு நியமமில்லையாயினும், இலக்ஷணத்தின் வசத்தால் வியவஸ்தையுண்டாகும் என்பது பொருள்.

(அ-கை.)

பிரியமுதலியவற்றிற்கு இலக்ஷணம் யாது என்று கேட்குமிடத்து அந்தப் பிரியம் துவேஷியம் உபேக்ஷியம் என்பவற்றின் இலக்ஷணத்தினைக் கூறுகின்றார்:—

आनुकूल्यं प्रातिकूल्यं च द्वयाभावः लक्षणम् ॥

(சு-ம்.)

அநுகூலத்தன்மையும் பிரதிகூலத்தன்மையும் இரண்டன் இன்மையும் பிரியமுதலியவற்றின் இலக்ஷணமாம்.

(வி-ம்.)

அநுகூலத்தன்மையாகிய சுகத்தின் சாதனத்தன்மை பிரியத்தின் இலக்ஷணமாம் அதாவது வியாவர்த்தக (பிறவற்றினின்றும் வேறுபிரித்தறிவிக்கும்)தர்மமாம். பிரதிகூலத்தன்மை யென்னும் துக்கத்தின் சாதனத்தன்மை துவேஷியத்தின் இலக்ஷணமாம். அநுகூலத்தன்மை பிரதிகூலத்தன்மை யென்னும் இருவடிவுமின்றியதன்மை உபேக்ஷியவஸ்துவின் இலக்ஷணமாம் என்பது பொருள். (நிசு)

ரு. சொல்லப்பட்ட பொருளினை (நான்கு விதத்தினை)ச் சுருக்கமாகக் கூறுதலும் அதில் மைத்திரேயிப்பிராஹ்மணத்தின் சம்மதியும்.

[ககூகூக] आत्मा प्रेयान् प्रियः शेषो द्वेष्योपेक्ष्ये तदन्ययोः ।
इति व्यवस्थितो लोको याज्ञवल्क्यमतं च तत् ॥ ९५ ॥

(அ-கை.)

இவ்வளவு அதாவது ககூ௨எ-வது சுலோகத்தினின்றும் ஆரம்பிக்கப் பட்ட கிரந்தங்களால் சம்பாதிக்கப்பட்ட அர்த்தத்தினை முமுக்ஷுவின் புத்தியில் எளிதாக்கும்பொருட்டுச் சுருக்கமாகக் கூறுகின்றார்:—

आत्मा प्रेयान् । शेषः प्रियः । तदन्ययोः द्वेष्योपेक्ष्ये । इति लोकः व्यवस्थितः

(சு-ம்.)

ஆத்மா பிரியதமன்; சேஷம் (சாதனம்) பிரியமாம். அவற்றிற்கு வேறான இரண்டுவஸ்துக்களிலும் துவேஷியமும் உபேக்ஷியமுமாம். இவ்வாறு உலகம் வியவஸ்தையினை அடைகின்றது.

(வி-ம்.)

ஆத்மாவாகிய ஆநந்தானந்தம் பிரியதமமாம் அதாவது அதிசயப் (மிக வும்) பிரியமாம். சேஷமாகிய தனது ஆத்மசம்பந்தியான பதார்த்தம் பிரிய மாம். அவ்வாத்மாவுக்கும் ஆத்மாவின் சேஷத்திற்கும் வேறான புலி, வழியில் கிடக்கும் துரும்புமுதலியவடிவ (அநுகூலமும் அநுகூலத்தன்மை பிரதி கூலத்தன்மைகளின்றியதுமான இரண்டுவித) வஸ்துக்களிலும் கிரமாநுசார மாகத் துவேஷியமும் உபேக்ஷியமு முண்டு. இவ்வாறு நால்வகையாக உல கம் வியவகாரத்தின் பேதவடிவ வியவஸ்தையினை அடைகின்றது. முற் கூறிய நால்வகைக்கு வேறானது ஒன்றும் இல்லை என்பது அபிப்பிராயம்.

(அ-கை.)

இவ்வர்த்தம் சுருதியினாலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது என்று கூறுகின்றார்:—

च तत् याज्ञवल्क्यमतम् ॥

(சு-ம்.)

அது யாஞ்ஞவல்கியருக்கும் அபிப்பிராயமாம்.

(வி-ம்.)

ஆத்மா முதலியவற்றிற்கு எந்தப் பிரியத்துவமுதலியன விருக்கின்றனவோ அவை யாஞ்ஞவல்கியரிஷிக்கும் சம்மதம் என்பது பொருள். ()

௬. ஆத்மாவின் பிரியதமத்துவத்தில் புருஷவிதப்பிராஹ்மணத்தின் வாக்கியத்தின் அர்த்தம்.

[௧௬௬௨] अन्यत्रापि श्रुतिः प्राह पुत्राद्वित्तात्तथान्यतः ।
सर्वस्मादांतरं तत्त्वं तदेतत्प्रेय ईक्षताम् ॥ ५६ ॥

(அ-கை.)

கேவலமைத்திரேயிப்பிராஹ்மணமென்னும் பிருகதாரணியகத்தின் ஓர் பிரகரணத்திலேயே ஆத்மாவின் பிரியதமத்துவம் சொல்லப்பட்டிருக்கின்றது என்பது இல்லை. ஆனால் புருஷவிதப்பிராஹ்மணத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது என்னும் அபிப்பிராயத்தினால் அந்தப் புருஷவிதப் பிராஹ்மணத்தினது வாக்கியத்தின் அர்த்தத்தினைச் சுருக்கமாகக் கூறுகின்றார்:—

पुत्रात् वित्तात् तथा अन्यतः सर्वस्मात् आंतरं तत्त्वं । तत् एतत् प्रेयः ईक्षतां । अन्यत्र अपि श्रुतिः प्राह ॥

(சு-ம்.)

புத்திரனினும், வித்தத்தினும், அவ்வாறே மற்றெல்லாவற்றினும் ஆந்தரமான தத்துவம் எதுவோ, அதனை அதிப்பிரியமாகக் காணவேண்டும் என்று வேறிடத்திலும் சுருதி கூறுகின்றது.

(வி-ம்.)

“ तदेतत्प्रेयः पुत्रात्प्रेयो वित्तात्प्रेयः अन्यस्मात्सर्वस्मादांतरतरं यदयमात्मा எது புத்திரனைவிடப் பிரியமோ, வித்தத்தினைவிடப் பிரியமோ, அதிக ஆந்தரமாயிருக்கின்றதோ, அந்நியமான இந்திரியாதிகளைவிடப் பிரியமோ, புத்திராதிகளெல்லாவற்றினும் மிக ஆந்தரமோ, யாதொரு இந்த ஆத்மா சர்வாந்தரமோ, அந்த இது அதிசயப்பிரியமாம்.” என்னும் பிருகதாரணியகத்தின் வாக்கியத்தால் புத்திரன், வீடு, நிலம், பசுமுதலியவடிவ தனாதிகள் எல்லாவற்றினும் ஆந்தரமான ஆத்மதத்துவத்தின் பிரியதமத்துவம் சொல்லப்பட்டிருக்கின்றது என்பது பொருள். (௫௬)

௭. சுருதிவிசாரத்தால் பிரகிருதத்தின் (சாக்ஷியின் முக்கிய ஆத்மத்தன்மையின்) சித்தியும், கூறிய விசாரத்தின் சொரூபமும்.

[௧௬௬௩] श्रौत्या विचारदृष्ट्यायं साक्ष्येवात्मा न चेतरः ।
कोशान्पंच विविच्यांतर्वस्तुदृष्टिर्विचारणा ॥ ५७ ॥

(அ-கை.)

இப்படிச் சுருதியில் சொல்லியிருக்குக. அதனால் பிரகிருதமான சாக்ஷியின் முக்கியாத்மத்தன்மையில் என்ன வந்ததெனக் கூறுகின்றார்:—

श्रौत्या विचारदृष्ट्या अयं साक्षी एव आत्मा च इतरः न ॥

(சு-ம்.)

சுருதிசம்பந்தியான விசாரதிருஷ்டியினால் இந்தச் சாக்ஷியே ஆத்மாவாம்; அந்நிய மன்று.

(வி-ம்.)

சுருதியர்த்தத்தினை நாற்புறமும் பார்த்தலாகிய விசாரதிருஷ்டியினால் சாக்ஷிக்கு முக்கிய ஆத்மத்தன்மை யிருக்கின்றது. அந்நியமான புத்திரர் முதலியோருக்கு இல்லை யென்பது பொருள்.

(அ-கை.)

இங்கு "விசாரதிருஷ்டியினால்" என்று சொல்லப்பட்ட விசாரத்தின் சொரூபத்தினைக் கூறுகின்றார்:—

पंचकोशान् विविच्य अंतर्वस्तुदृष्टिः विचारणा ॥

(சு-ம்.)

பஞ்சகோசங்களை விவேகித்து அவற்றினுள்ளிருக்கும் வஸ்துவினைக் காண்டல் விசாரணை.

(வி-ம்.)

அந்நமயாதி பஞ்சகோசங்களைத் தைத்திரீயசுருதியிலும், அதனை யநுசரித்த பஞ்சகோசவிவேகத்திலும் சொல்லியபடி ஆத்மாவினும் வேறுபடுத்தி அக்கோசங்களினுள் ளிருக்கும் ஆத்மாவின் அநுபவம் விசாரமெனப்படுகின்றது என்பது பொருள். (௫எ)

அ. உள்ளிருக்கும் வஸ்துவினைத் தரிசிக்கும் விதம்.

[கஅஉ] जाग्रत्स्वप्नसुषुप्तीनामागमापायभासनम् ।
यतो भवत्यसावात्मा स्वप्रकाशचिदात्मकः ॥ ५८ ॥

(அ-கை.)

உள்ளிருக்கும் வஸ்துவினைத் தரிசிக்குந்தன்மையினையே கூறுகின்றார்:-

जागरत्स्वप्नसुषुप्तीनां आगमापायभासनं यतः भवति । असौ स्वप्रकाशचिदात्मकः आत्मा ॥

(சு-ம்.)

ஜாக்கிர சொப்பன சுழுத்திகளினது வருதல் அழிதல்களின் விளக்கம் எதனால் உண்டாகின்றதோ, இது சொப்பிரகாச சித்துவடிவ ஆத்மாவாம்.

(வி-ம்.)

ஜாக்கிரமுதலிய அவஸ்தைகளினிடையில் பின் பின் அவஸ்தைகளினது உற்பத்தி, முன் முன் அவஸ்தைகளினது நிவிருத்தி என்பவைகளின் பிரகாசம் அதாவது விளக்கம் எந்த நித்திய சைதன்னியவடிவ சாக்ஷியினால் உண்டாகின்றதோ, அது சொப்பிரகாச சேதனவடிவ ஆத்மாவாம் என்பது பொருள். (௫௮)

௧. ஆத்மாவின் சேஷமான பிராணாதி தனபரியந்தமானவற்றின் ஆந்தரத்தன்மை பிரீதி என்பவைகளின் தாரதம்மியம்.

[௧௩௩௫] शेषाः प्राणादिवित्तांता आसन्नास्तारतम्यतः ।
प्रीतिस्तथा तारतम्यात्तेषु सर्वेषु वीक्ष्यते ॥ ५९ ॥

(அ-கை.)

சுருக்கமாக ௧௩௩௨-வது சுலோகத்தில் கூறிய சுருதியின் அர்த்தத்தினை வர்ணிக்கின்றார்:—

शेषाः प्राणादिवित्तांताः तारतम्यतः आसन्नाः ॥

(சு-ம்.)

போகத்தின் சாமக்கிரிவடிவ சேஷங்களாகிய பிராணன்முதல் தனபரியந்தமான பதார்த்தங்கள் தாரதம்மியமாக ஆத்மாவிற்குச் சமீபத்திலிருப்பனவாகின்றன.

(வி-ம்.)

சாக்ஷியின் வேறான பிராணன்முதல் தனபரியந்தமாக மேல் ௧௩௩௪-வது சுலோகத்திற் சொல்லப்படும் பதார்த்தங்கள் எவையோ அவை தாரதம்மியமாய் அதாவது ஏற்றத்தாழ்வாய் ஆத்மாவின் சமீபத்திலிருப்பனவாகின்றன.

(அ-கை.)

அந்த ஏற்றத்தாழ்வாயிருத்தலில் அநுபவவடிவ காரணத்தைக் கூறுகின்றார்:—

तथा तेषु सर्वेषु तारतम्यात् प्रीतिः वीक्ष्यते ॥

(சு-ம்.)

அதுபோல அவ்வெல்லாவற்றிலும் தாரதம்மியமாகச் சர்வ புருஷர்களாலும் பிரீதி காணப்படுகின்றது.

(வி-ம்.)

எப்படித் தாரதம்மியமாக அவற்றின் ஆந்தரத்தன்மை அதாவது ஆத்மாவிற்குச் சமீபித்திருக்குந்தன்மை யிருக்கின்றதோ, அதுபோல அந்தப் பிராணன்முதலியவற்றில் தாரதம்மியத்தால் சர்வ ஜனங்களாலும் பிரீதி காணப்படுகின்றது என்பது பொருள். (நிகூ)

கo. பிரீதியின் தாரதம்மியத்தன்மையினை விளக்குதல்.

[கஙஙசு] वित्तात्पुत्रः प्रियः पुत्रात्पिंडः पिंडात्तथेंद्रियम् ।
इंद्रियाच्च प्रियः प्राणः प्राणादात्मा प्रियः परः ॥ ६० ॥

(அ-கை.)

பிரீதியின் தாரதம்மியத்தினுல் அநுபவத்தினையே விளக்குகின்றார்:—

वित्तात् पुत्रः । पुत्रात् पिण्डः । तथा पिण्डात् इंद्रियं । च इंद्रियात् प्राणः प्रियः । प्राणात् आत्मा परः प्रियः ॥

(சு-ம்.)

தனத்தினும் புத்திரன் பிரியன், புத்திரனினும் அந்நமயதேகம் பிரியம். அப்படியே பிண்டமாகிய அந்நமய தேகத்தினும் இந்திரியம் பிரியம். இந்திரியத்தினும் * க. பிராணன் அதாவது அதனுல் உபலக்ஷிக்கப்பட்ட மனம் பிரியம். பிராணோபலக்ஷித மனத்தினும் ஆத்மா பரமப்பிரியன்.

(வி-ம்.)

இந்தச் சுலோகத்திற்கு இது தாற்பரியமாம்:—சகலப் பிராணிகளாலும் புத்திரன் பாரியை முதலியோர்களின் ஆபத்தை நிவிருத்திக்கும்

---

* க. இங்குப் பிராணசப்தத்தால் பிராணவுபலக்ஷித மனம் கொள்ளப்படும். எனெனின்,

(க) மன மென்பது சொரூபாநந்தத்தின் பிரதிபிம்பத்தினைக் கொள்ளுவதாயிருக்கின்றது. இந்திரியங்களின் பிரேரகமா யிருத்தலால் எஜமானனும்.

(உ) நேத்திரமுதலிய இந்திரியங்களில் வருத்த முண்டாகுதலால் மனதிற்கு விக்ஷேப முண்டாயின், அப்போது "இவ்விந்திரியம் தொலைந்தால் யான் சுகியாவேன்." என்று புருஷன் (மனவிசிஷ்டன்) கூறுகின்றான்.

ஆதலால் பிராணன் என்னும் சொல்லால் மனது கொள்ளப்படுகின்றது.

மனதின் சஞ்சாரம் அல்லது தேகத்தினின்றும் வெளிப்படுதல் பிராணனை விட்டு உண்டாகிறதில்லை. ஆதலால் பிராணன் சொல்லப்பட்டிருக்கின்றது என்பது பொருள்.

(சு-ம்.)

ஜாக்கிர சொப்பன சுழுத்திகளினது வருதல் அழிதல்களின் விளக்கம் எதனுல் உண்டாகின்றதோ, இது சொப்பிரகாச சித்துவடிவ ஆத்மாவாம்.

(வி-ம்.)

ஜாக்கிரமுதலிய அவஸ்தைகளினிடையில் பின் பின் அவஸ்தைகளினது உற்பத்தி, முன் முன் அவஸ்தைகளினது நிவிருத்தி என்பவற்றின் பிரகாசம் அதாவது விளக்கம் எந்த நித்திய சைதன்னியவடிவ சாக்ஷியினுல் உண்டாகின்றதோ, அது சொப்பிரகாச சேதனவடிவ ஆத்மாவாம் என்பது பொருள். (௫அ)

க. ஆத்மாவின் சேஷமான பிராணுதி தனபரியந்தமானவற்றின் ஆந்தரத்தன்மை பிரீதி என்பவைகளின் தாரதம்மியம்.

[கஙஙு] शेषाः प्राणादिवित्तांता आसन्नास्तारतम्यतः ।
प्रीतिस्तथा तारतम्यात्तेषु सर्वेषु वीक्ष्यते ॥ ५९ ॥

(அ-கை.)

சுருக்கமாக கஙஙஉ-வது சுலோகத்தில் கூறிய சுருதியின் அர்த்தத்தினை வர்ணிக்கின்றார்:—

शेषाः प्राणादिवित्तांताः तारतम्यतः आसन्नाः ॥

(சு-ம்.)

போகத்தின் சாமக்கிரிவடிவ சேஷங்களாகிய பிராணன்முதல் தனபரியந்தமான பதார்த்தங்கள் தாரதம்மியமாக ஆத்மாவிற்குச் சமீபத்திலிருப்பனவாகின்றன.

(வி-ம்.)

சாக்ஷியின் வேருன பிராணன்முதல் தனபரியந்தமாக மேல் கஙஙசு-வது சுலோகத்திற் சொல்லப்படும் பதார்த்தங்கள் எவையோ அவை தாரதம்மியமாய் அதாவது ஏற்றத்தாழ்வாய் ஆத்மாவின் சமீபத்திலிருப்பனவாகின்றன.

(அ-கை.)

அந்த ஏற்றத்தாழ்வா யிருத்தலில் அநுபவவடிவ காரணத்தைக் கூறுகின்றார்:—

तथा तेषु सर्वेषु तारतम्यात् प्रीतिः वीक्ष्यते ॥

(சு-ர.)

அதுபோல அவ்வெல்லாவற்றிலும் தாரதம்மியமாகச் சர்வ புருஷர்களாலும் பிரீதி காணப்படுகின்றது.

(வி-ம்.)

எப்படித் தாரதம்மியமாக அவற்றின் ஆந்தரத்தன்மை அதாவது ஆத்மாவிற்குச் சமீபித்திருக்குந்தன்மை யிருக்கின்றதோ, அதுபோல அந்தப் பிராணன்முதலியவற்றில் தாரதம்மியத்தால் சர்வ ஜனங்களாலும் பிரீதி காணப்படுகின்றது என்பது பொருள். (ருசு)

கo. பிரீதியின் தாரதம்மியத்தன்மையினை விளக்குதல்.

[கருருசு] वित्तात्पुत्रः प्रियः पुत्रात्पिंडः पिंडात्तथेंद्रियम् ।
इंद्रियाच्च प्रियः प्राणः प्राणादात्मा प्रियः परः ॥ ६० ॥

(அ-கை.)

பிரீதியின் தாரதம்மியத்தினால் அநுபவத்தினையே விளக்குகின்றார்:—

वित्तात् पुत्रः । पुत्रात् पिण्डः । तथा पिण्डात् इंद्रियं । च इंद्रियात् प्राणः प्रियः । प्राणात् आत्मा परः प्रियः ॥

(சு-ம்.)

தனத்தினும் புத்திரன் பிரியன். புத்திரனினும் அந்நமயதேகம் பிரியம். அப்படியே பிண்டமாகிய அந்நமய தேகத்தினும் இந்திரியம் பிரியம். இந்திரியத்தினும் * க. பிராணன் அதாவது அதனால் உபலக்ஷிக்கப்பட்ட மனம் பிரியம். பிராணோபலக்ஷித மனத்தினும் ஆத்மா பரமப்பிரியன்.

(வி-ம்.)

இந்தச் சுலோகத்திற்கு இது தாற்பரியமாம்:—சகலப் பிராணிகளாலும் புத்திரன் பாரிஷை முதலியோர்களின் ஆபத்தை நிவிருத்திக்கும்

* க. இங்குப் பிராணசப்தத்தால் பிராணவுபலக்ஷித மனம் கொள்ளப்படும். ஏனெனின்,

(க) மன மென்பது சொரூபாநந்தத்தின் பிரதிபிம்பத்தினைக் கொள்ளுவதாயிருக்கின்றது. இந்திரியங்களின் பிரேரகமா யிருத்தலால் எஜமானனும்.

(உ) நேத்திரமுதலிய இந்திரியங்களில் வருத்த முண்டாகுதலால் மனதிற்கு விக்ஷேப முண்டாயின், அப்போது "இவ்விந்திரியம் தொலைந்தால் யான் சுகியாவேன்." என்று புருஷன் (மனவிசிஷ்டன்) கூறுகின்றான்.

ஆதலால் பிராணன் என்னும் சொல்லால் மனது கொள்ளப்படுகின்றது.

மனதின் சஞ்சாரம் அல்லது தேகத்தினின்றும் வெளிப்படுதல் பிராணனை விட்டு உண்டாகிறதில்லை. ஆதலால் பிராணன் சொல்லப்பட்டிருக்கின்றது என்பது பொருள்.

பொருட்டுத் தனம் செலவிடப்படுகின்றது. தனது தேகத்தின் ரக்ஷணையின் பொருட்டு ஒருகால் புத்திராதிகளையும் தானம் செய்கின்றான். இந்திரிய நாசத்தினை நீக்கிக்கொள்ளுதற்பொருட்டு அடித்தல்முதலியவற்றால் தேகத்தின் வருத்தமும் அங்கீகரிக்கப்படுகின்றது. பிராணன் போகுதல் நேரின், அதனை நீக்குதற்பொருட்டு இந்திரியங்களைச் சேதித்தல் முதலிய குறைவும் அங்கீகரிக்கப்படுகின்றது. ஆதலால் தனமுதல் பிராணபரியந்தமான பதார்த்தங்களில் பின் பின் உள்ளவற்றில் அதிக பிரியத்தன்மை எல்லோருடைய அநுபவத்திலும் சித்தமாம். ஆத்மாவிற்கோ நிரதிசயப்பிரேமைக்கு விஷயமாந்தன்மைவடிவ பிரியதமத்துவமிருக்கின்றது. அது வித்துவான்களது அநுபவத்தினால் சித்தித்துளது. (சு0)

கக. ஆத்மாவின் பிரியதமத்துவத்தில் சுருதியினால் ஞானி அஞ்ஞானிகளின் விவாதமும் அதன் நிர்ணயமும்.

[கஙௗஎ] एवं स्थिते विवादोऽत्र प्रतिबुद्धविमूढयोः ।
श्रुत्योदाहारि तत्रात्मा प्रेयानित्येव निर्णयः ॥ ६१ ॥

(அ-கை.)

இப்படி ஆத்மாவின் பிரியதமத்தன்மை சுருதிமுதலிய பிரமாணங்களால் சித்திக்கினும், அதில் ஞானி அஞ்ஞானிகளினது விவாதத்தினை நிஷேதிக்கும்பொருட்டுச் சுருதியானது அந்த ஞானி அஞ்ஞானி இருவர்களின் விவாதத்தையும் காட்டியிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

एवं स्थिते अत्र प्रतिबुद्धविमूढयोः विवादः श्रुत्या उदाहारि ॥

(சு-ம்.)

இவ்வாறு ஆத்மாவின் பிரியதமத்துவம் நிலைக்கினும், இந்தப் பிரியதமத்துவத்தில் உள்ள ஞானி அஞ்ஞானிகளின் விவாதம் எதுவோ அதனைச் சுருதியானது உதாகரணஞ் செய்திருக்கின்றது.

(அ-கை.)

அந்த விவாதத்தில் என்ன நிச்சய முண்டாயிற்று என்பதனைக் கூறுகின்றார்:—

तत्र आत्मा प्रेयान् इति एव निर्णयः ॥

(சு-ம்.)

அந்த விவாதத்தில் "ஆத்மா பிரியதமமாம்" என்றே நிர்ணயமாம்.

(வி-ம்.)

இந்த விவாதத்தில் ஆத்மாவின் பிரியதமத்துவம் உபபாதனம் செய்

யப்பட்டிருத்தலால் ஆத்மாவின் பிரியதமத்துவத்தினது நிர்ணயமுண்டென்பது பொருள். (௬௧)

௧௨. அந்த ஞானி அஞ்ஞானிகளின் விவாதத்தினைக் கூறுதல்.

[௧௩௩௮] साक्ष्येव दृश्यादन्यस्मात्प्रेयानित्याह तत्त्ववित् ।
प्रेयान् पुत्रादिरेवेमं भोक्तुं साक्षीति मूढधीः ॥ ६२ ॥

(அ-கை.)

அதே ஞானி அஞ்ஞானிகளின் விவாதத்தினைக் காட்டுகின்றார்:—

"साक्षी एव अन्यस्मात् दृश्यात् प्रेयान्" इति तत्त्ववित् आह । प्रेयान् पुत्रादिः एव साक्षी इमं भोक्तुं इति मूढधीः ॥

(சு-ம்.)

சாக்ஷியே அந்நியமான திருசியத்தினின்றும் பிரியதமன் அதாவது அதிகப்பிரியன் என்று தத்துவவித்தாகிய ஞானி சொல்லுகின்றான். அதிகப் பிரியம் புத்திராதிகளேயாம். சாக்ஷி இந்தப்புத்திரன்முதலியோரைப் போகித்தற்குப் பிரியமாம் என்று மூடபுத்தியுடைய அஞ்ஞானி சொல்லுகின்றான். (௬௨)

௧௩. சிஷ்யப்பிரதிவாதிகள் ஆத்மாவிற் கந்நியத்தினது பிரியத்தன்மையில் கேட்கும் பிரசினமும், இருவருக்கும் வரசாபவடிவ ஞானியின் உத்தரமாகிய வசனமும்.

[௧௩௩௯] आत्मनोऽन्यं प्रियं ब्रूते शिष्यश्च प्रतिवाद्यपि ।
तस्योत्तरं वचो बोधशापौ कुर्यात्तयोः क्रमात् ॥ ६३ ॥

(அ-கை.)

ஆத்மாவினும் வேறான வஸ்துவினது பிரியதமத்தன்மையின் வாதிகளை விபாகஞ்செய்து உத்தரஞ் சொல்லும்பொருட்டு அவ்வாதிகளையே பிரித்துக் கூறுகின்றார்:—

शिष्यः च प्रतिवादी अपि आत्मनः अन्यं प्रियं ब्रूते ॥

(சு-ம்.)

சிஷ்யன் பிரதிவாதி இருவரும் ஆத்மாவிற் கந்நியமான வஸ்துவினைப் பிரியம் என்கிறார்கள்.

(அ-கை.)

உத்தரஞ் சொல்லுந்தன்மையினைக் கூறுகின்றார்:—

तयोः तस्य उत्तरं वचः क्रमात् बोधशापौ कुर्यात् ॥

(சு-ம்.)

அவ்விருவர்களது அவ்வசனத்திற்குத்தரமாகிய வசனத்தைக் கிரமமாகப் போதமும் சாபமுமாகச் செய்யவேண்டும்.

(வி-ம்)

அந்தச் சிஷ்யப்பிரதிவாதிகளின் சம்மதியான அந்தவசனத்தின் பிரதியுத்தரவடிவ வாக்கியத்தினை ஞானிபுருஷன் கிரமமாக ஞானவடிவமும் சாபவடிவமும் ஆக்குகின்றார் என்பது பொருள். (௬௩)

௧௪. ஞானியினது உத்தரத்தின் வடிவமும் சிஷ்யனது தான் கூறிய புத்திராதியரின் பிரியத்தில் தோஷதிருஷ்டியும்.

[௧௩௪௦] प्रियं त्वां रोत्स्यतीत्येवमुत्तरं वक्ति तत्ववित् ।
स्वोक्तप्रियस्य दुष्टत्वं शिष्यो वेत्ति विवेकतः ॥ ६४ ॥

(அ-கை.)

உத்தரத்தைத் தருதல்வடிவ "அந்த யாதொரு ஞானி ஆத்மாவினின்றும் அந்நியவஸ்துவினைப் பிரியஞ்செய்கின்ற சிஷ்யனையும் பிரதிவாதியினையும் நோக்கிச் சொல்லுவதாவது "பிரியம் உன்னை அழச்செய்யும்" என்பது ௧௩௪௨-வது சுலோகத்திற் கூறிய சுருதிவாக்கியத்திற்குச் சமீபத்திலுள்ள பிற்சுருதிவாக்கியமாம். அதனை அர்த்தத்தினாற் படிக்கின்றார்:—

तत्त्ववित् प्रियं त्वां रोत्स्यति इति एवं उत्तरं वक्ति ॥

(சு-ம்.)

பிரியம் உன்னை அழச்செய்யும் என்று இவ்வாறு தத்துவஞானி உத்தரத்தைக் கூறுகின்றான்.

(வி-ம்.)

தத்துவஞானியானவன் சிஷ்யனையும் பிரதிவாதியினையும் நோக்கி "சிஷ்யனே! பிரதிவாதியே! நீ அபிப்பிராயப்பட்ட புத்திராதிவடிவப் பிரியம் தனது விநாசத்தினால் சிஷ்யன் அல்லது பிரதிவாதியாகிய உன்னை அழச்செய்யும்" என்று கூறியவிதமாக உத்தரத்தைச் சொல்லுகின்றான்.

(அ-கை.)

ஒரேவசனம் சிஷ்யன் பிரதிவாதி இருவருக்கும் எப்படி உத்தரமாயிற்று என்றாசங்கித்துச் சிஷ்யனைக்குறித்து அந்தவாக்கியம் எப்படி உத்தர

வடிவமாயிற்ருே, அப்படி "தன்னுல் சொல்லப்பட்ட பிரியத்தின் ..ன் னும் சுலோகம் முதல் "அந்த நிஜாத்மாவினைப் பகலும் இரவும் ஆதாவது இடைவிடாது காண்கிருன்." என்னுமிடத்தைய கஙசுச-வது சுலோகபரி யந்தம் நாலரைச் சுலோகங்களால் முதலில் அறிவிக்கின்ருர்:—

शिष्यः स्वोक्तप्रियस्य विवेकतः दुष्टत्वं वेत्ति ।

(சு-ம்.)

சிஷ்யன் தன்ருற்சொல்லப்பட்ட பிரியத்தின் விவேகத்தினுல் துஷ்டத்தன்மையை அறிகின்ருன்.

(வி-ம்.)

சிஷ்யன் தன்ருற் சொல்லப்பட்ட புத்திராதிவடிவப் பிரீதியினது விஷயத்தினை விவேகமாகிய கஙசக-வது சுலோகத்தால் மேற் சொல்லப்படும் தோஷத்தின் விசாரத்தினுல் தோஷத்தோடுகூடியதாக அறிகின்ருன். (கூச)

கரு. சுலோகம் கஙசO-ல் கூறிய தோஷதிருஷ்டியின் விவரணம்.

[கஙசக] अलभ्यमानस्तनयः पितरौ क्लेशयेच्चिरम् ।
लब्धोऽपि गर्भपातेन प्रसवेन च बाधते ॥ ६५ ॥

(அ-கை.)

தோஷவிசாரத்தின்றன்மையினை மூன்று சுலோகங்களாற் காட்டுகின்ருர்:—

तनयः अलभ्यमानः पितरौ चिरं क्लेशयेत् । लब्धः अपि गर्भपातेन च प्रसवेन बाधते ॥

(சு-ம்.)

புத்திரன் கிட்டாதவனுய் மாதா பிதாக்களை வெகுகாலம் கிலேசப் படுத்துகின்ருன். கிட்டிய புத்திரனும் கர்ப்பத்தினின்றும் விழுதலானும் பிறப்பினுலும் துன்பப்படுத்துகின்ருன். (கூரு)

[கஙசஉ] जातस्य ग्रहरोगादिः कुमारस्य च मूर्खता ।
उपनीतेऽप्यविद्यत्वमनुद्वाहश्च पंडिते ॥ ६६ ॥

(அ-கை.)

இதுவுமது:—

जातस्य ग्रहरोगादिः । च कुमारस्य मूर्खता । उपनीते अपि अविद्यत्वं । च पंडिते अनुद्वाहः ॥

விக்கினமின்றிப் பிறந்த புத்திரனது அநிஷ்டமான சூரியாதி ஓர் கிரகம், அம்மைமுதலியரோகம் வியாகூலத்திற்குக் காரணமாம். குமாரப்பருவமுடையவனது (ஐந்துவயது அவதியுடைய பாலியம் பிந்திய பௌகண்டம் என்னும் அவஸ்தையினையுடைய புத்திரனது) மூர்க்கத்துவம் (மூடத்துவம்) வியாகூலமாகிய துக்கத்திற்கு ஏதுவாம். புத்திரன் உபநயனம் செய்யப்படினும் வித்தையில்லாமை துக்கத்திற்குக் காரணமாம். புத்திரன் கற்றவனாயின் விவாகமுண்டாகவில்லையென்பது துக்கந்தருவதாம்.

[கஙசங] पुनश्च परदारादि दारिद्र्यं च कुटुंबिनः ।
पित्रोर्दुःखस्य नास्त्यंतो धनी चेन्म्रियते तदा ॥ ६७ ॥

(அ-கை.)

இதுவுமது:—

पुनः च परदारादि । च कुटुंबिनः दारिद्र्यं । धनी चेत् तदा म्रियते । पित्रोः दुःखस्य अंतः न अस्ति ॥

(சு-ம்.)

பின் விவாகமுண்டாகியும் பரஸ்திரீமுதலிய தீச்செய்கை துக்கத்தைத் தருவதாம். குடும்பமுடைய புத்திரனது தரித்திரத்தன்மை துக்கத்தைத் தருவதாம். புத்திரன் தனமுடையவனாய் அப்போது இறப்பானாயின், அப்புத்திரனது மரணம் பெருந்துன்பத்தைத் தருவதாம். இவ்வாறு மாதாபிதாக்களுக்குப் புத்திரனாலாம் துக்கத்திற்கு எல்லையில்லை. (சுஎ)

[கஙசச] एवं विविच्य पुत्रादौ प्रीतिं त्यक्त्वा निजात्मनि ।
निश्चित्य परमां प्रीतिं वीक्षते तमहर्निशम् ॥ ६८ ॥

(அ-கை.)

இவ்வாறு கஙசം-வது சுலோகமுதற் சொல்லப்பட்ட புத்திரனிடத்துள்ள தோஷங்கள் ஸ்திரீமுதலிய சகலவிஷயங்களிலுமுள்ள தோஷங்களைக் *கO. கொள்ளுதற்பொருட்டாமென்னும் அபிப்பிராயத்தினால் முடிக்கின்றார்:—

एवं पुत्रादौ विविच्य प्रीतिं त्यक्त्वा निजात्मनि परमां प्रीतिं निश्चित्य तं अहर्निशं वीक्षते ॥

* கO. தனமும் ஸ்திரீயுமாகிய விஷயத்திலுள்ள தோஷத்தினைச் சொல்லுதலைத் திருப்திதீபத்தின் கஙக - கசO வது சுலோகங்களிலும் திருப்திதீபத்தின் சக-வது சஉ-வது டிப்பணங்களிலும் காண்க.

(சு-ம்.)

இவ்வாறு விவேகித்துப் புத்திராதிகளிடத்துப் பிரீதியினை விட்டு நிஜாத்மாவில் பரமப்பிரீதியை நிச்சயித்து, அந்த நிஜாத்மாவினைப் பகலும் இரவும் அதாவது இடைவிடாது காண்கின்றான்.

(வி-ம்.)

இந்த கஙசO-வது சுலோகத்தில் கூறிய புத்திராதி விஷயங்களின் சமுதாயத்திலிருக்கின்ற தோஷங்களை விபாகஞ்செய்து அறிந்து, அந்தவிஷய சமூகங்களில் பிரீதியினை விட்டு நிஜாத்மாவாகிய பிரத்தியக்குவடிவ சாக்ஷியில் நிரதிசயப்பிரீதியினை நிச்சயஞ்செய்து, பிரத்தியகாத்மாவை எப்போதும் காண்கின்றான் அதாவது அநுசந்தானம் செய்கின்றான் என்பது பொருள். ()

ககூ. சுலோகம் கஙகக-ல் கூறிய ஞானியின் வாக்கியம் பிரதிவாதியைக் குறித்துச் சாபவடிவமாதல்.

[கஙசரு] आग्रहाद्ब्रह्मविद्वेषादपि पक्षममुंचतः ।
वादिनो नरकः प्रोक्तो दोषश्च बहुयोनिषु ॥ ६९ ॥

(அ-கை.)

"புத்திராதிவடிவப் பிரியம் உன்னை அழச்செய்யும்" என்னும் வாக்கியமே பிரதிவாதியைக் குறித்துச் சாபவடிவமாமென்பதனை வெளிப்படுத்துகின்றார்:—

आग्रहात् ब्रह्मविद्वेषात् अपि पक्षे अमुंचतः वादिनः नरकः च बहुयोनिषु दोषः प्रोक्तः ॥

(சு-ம்.)

ஆக்கிரகத்தினாலும் பிரஹ்மவித்தின் துவேஷத்தினாலும் பக்ஷத்தை விடாதவனாகிய வாதியானவனுக்கு நரகமும் வெகுயோனிகளில் தோஷமும் கூறினர்.

(வி-ம்.)

"என்னால் சொல்லப்பட்ட புத்திராதிகளின் பிரியத்தன்மையினை எல்லாவிதத்தாலும் விடமாட்டேன்." என்னும் வடிவினதாகிய ஆக்கிரகத்தினாலும், "இந்த ஞானியினால் சொல்லப்பட்ட அர்த்தத்தினை விபரீதமாகக் கொள்வேன்." என்னும் வடிவினதாகிய பிரஹ்மவித்தின் துவேஷத்தினாலும் புத்திராதிகளின் பிரியத்தன்மையினையே சொல்லுதலாகிய பக்ஷத்தினை விடாதவனாகிய பிரதிவாதிக்கு நரகத்தின் பிராப்தியும், அப்படியே திரி

யக்குமுதலியவடிவ அநேகஜன்மங்களில் புத்திரபாரியையாதிவடிவப் பிரியத்தின் வியோகமும் அதாவது பிரிவும், அப்பிரியத்தின் பிராப்தியுமாகிய தோஷமும் "பிரியமானது உன்னை அழச்செய்யும்" என்று சொல்லும் ஞானியினல் சொல்லப்பட்டது.

கஎ. ஞானியின் ஈசுவரத்தன்மையும் அதன் பலத்தினைப்பற்றிய அதன்
பின் அடுத்துள்ள சுருதியின் தாற்பரியமும்.

[கரு-சசு] ब्रह्मविद्ब्रह्मरूपत्वादीश्वरस्तेन वर्णितम् ।
यद्यत्तत्तथैव स्यात्तच्छिष्यप्रतिवादिनोः ॥ ७० ॥

(அ-கை.)

அப்படியாஞல் ஞானியினுற் சொல்லப்பட்ட ஒரு வாக்கியத்திற்கே சிஷ்யனைக்குறித்து உபதேசவடிவத்துவமும், வாதியைக்குறித்துச் சாபவடிவத்துவமு முண்டென்னும் விரோதமுள்ள இரண்டுவடிவம் எப்படிப் பொருந்துமென்றுசங்கித்து, உத்தரந்தருபவனுகிய ஞானி ஈசுவரவடிவமா யிருத்தலால் அந்த ஈசுவரவடிவ ஞானியின் அபிப்பிராயத்தினல் உபதேசவடிவத்தன்மையும் சாபவடிவத்தன்மையுமாகிய இரண்டும் உண்டாகுமென்று கொண்டு கூறிய அப்பொருளைக் கூறும் "நான் ஈசுவரன் எப்படிச் சொல்லுவேனே அப்படியே ஆகும்." என்று "இந்தப் பிரியம் உன்னை அழச்செய்யும்" என்னும் வாக்கியத்தின் பின்னரே யுள்ள சுருதிவாக்கியத்தின் தாற்பரியத்தினைக் கூறுகின்றார்:—

ब्रह्मवित् ब्रह्मरूपत्वात् ईश्वरः । तेन यत् यत् वर्णितं तत् तत् तच्छिष्य-प्रतिवादिनोः तथा एव स्यात् ॥

(சு-ப்.)

பிரஹ்மவித்து பிரஹ்மவடிவமா யிருத்தலால் * கக. ஈசுவரனுவன்.

---

* கக. (க) பிரஹ்மவித்து பிரஹ்மமே யாகின்றான் என்னும் சுருதியினுலும், தனது அநுபவத்தினுலும் வித்துவான் பிரஹ்மமாவன். பிரஹ்மத்திற்கு வேருக ஈசுவரன் இல்லையாகலின் வித்துவான் ஈசுவரனுவன்.

(உ) அல்லது மாயாவிசிஷ்ட சேதனத்திற்கு எப்படி எல்லாவற்றின் ஆத்மாவோடும் தனது அபேதத்தின் ஞானத்தினல் சமஷ்டித்தன்மையும் நித்தியமுக்தத்தன்மையு மிருக்கின்றனவோ, அதுபோல ஞானிக்கும் எல்லாவற்றினது சுவாத்மாவோடு தனது தாதாத்மியத்தினது ஞானத்தினல் சமஷ்டித்தன்மை நித்தியமுக்தத்தன்மை முதலியன விருக்கின்றன.

(ரு) மாயாவிசிஷ்டசேதனத்திற்கு எப்படி நிஜசொரூபமாகிய பிரஹ்மம் ஆவரணமின்றி விளங்குகின்றதோ, அதுபோல வித்துவானுக்கு முண்டாகின்றது. ஆதலால் குணத்தின் சாதிருசியத்தினுலும் பிரஹ்மவித்து ஈசுவரனுவன்.

அவனால் எது எது வர்ணிக்கப்படுகின்றதோ அது அது அவனது சிஷ்யன் அல்லது பிரதிவாதிக்கு அவ்வாறே உண்டாகின்றது.

(வி. ம.)

எதனால் பிரஹ்மஞானிக்குத் தனது பிரஹ்மத்தன்மையின் அநுபவத்தால் ஈசுவரத்துவமுண்டோ, அதனால் அந்தப் பிரஹ்மஞானியினால் அந்தச் சிஷ்யன் முதலியோரைக் குறித்து எந்தெந்த இஷ்டாநிஷ்டங்கள் சொல்லப் படுகின்றனவோ, அவையவை அந்த ஞானியின் சிஷ்யன் பிரதிவாதியாகிய அவர்களுக்கு அவ்வாறே இஷ்டம் அல்லது அநிஷ்டம் அவசியமுண்டா கின்றது. (எ0)

இங்குப் புத்தியினது விநோதத்தின் பொருட்டு வேறு சாஸ்திரத்தின் அநுசாரியான பிரசங்கமுளது:—ஓர் அரசனுக்கும் அரசிக்கும் இரண்டு புத்திரர்களிருந்தார்கள். அவர்களுள் பெரிய புத்திரன் பிதாமாதாக்களின் சகல தனத்திற்கும் அதிபதியாகி இராஜ்யத்தை யடைந்தான். சிறிய புத்திரன் மூர்க்கத்தன்மையினால் சேவகதசையினை யடைந்தான். அப்போது அவ்விரண்டு சகோதரர்களுக்கும் பெரும் வேற்றுமை புண்டாயிற்று. பின்புத்தியினால் இச்சிறிய புத்திரன் நியாயத்தினால் பிதாவின் தனத்தை விபாகஞ்செய்து அதிபதியாகி இராஜ்யபதத்தை யடைந்தான். அதுபோலப் பிரஹ்மவடிவ பிதாவிற்கும் மாயாவடிவ மாதாவிற்கும் ஜீவன் ஈசுவரன் இருவரும் புத்திரர். அவர்களுள் ஈசுவரனாகிய பெரிய புத்திரன் சச்சிதாநந்தாதிவடிவ பிதாவின் தனத்திற்கும், சர்வஞ்ஞத்தன்மை சர்வசக்தியுடைமை ஜகத்கர்த்திருத்துவமுதலியவடிவ மாதாவின் தனத்திற்கும் அதிபதியானபடியால் ஈசுவரத்தன்மையினை யடைந்தான். ஜீவவடிவ இளைய புத்திரன் அவிவேகவடிவ மூர்க்கத்தன்மையால் பிதா மாதாக்கள் இருவரது தனமு மில்லாதவனாய்ச் சுபாசுபகர்மவடிவ சேவையும், அபராதாநுசாரமாக சகலபோகவடிவ களிப்பும், துக்கபோக வடிவ தண்டமும் அடைதலால் ஜீவத்தன்மை யடைந்தான். அப்போது அவ்விருவருக்கும் பெருத்த அநாதிகாலத்துப் பேத முண்டாயிற்று. பின் விவேகாதி சாதனத் தோடுகூடிய புத்தியினை யடைந்து இந்த ஜீவன் ஈசுவரனை நோக்கிச் சொல்லுகின்றான்:—

(க) "ஈசுவரா! நீ குப்தமான பிதாவின் சாதாரண சுகத்தின் நிதியினை அநுபவிக்கின்றாய்."

(உ) "மாயைவடிவ மாதாவின் தனத்தினின்றும் எனக்கு விபாகம் செய்தும், "இவ்வெல்லாவற்றையும் அர்ப்பணஞ்செய் அதாவது ஒப்புக்கொடு" என்று பிக்ஷாவிருத்திவடிவ உபதேசத்தினை வெளியில் பிரகடஞ்செய்பவனா யிருக்கின்றாய்."

(௩) "இந்த விகித (விதிக்கப்பட்ட) கர்மத்தினைச் செய், இந்த நிஷித்த (விலக்கப்பட்ட) கர்மத்தினைச் செய்யாதே என்னும் வேதவசனத்தால் என்னைச் சேவகனைப் போலச் சிக்ஷை செய்கின்றவனாய்க் கூறுகின்றாய்."

"ஆதலால் நான் இப்போது குருவடிவ நியாயாதிபதிவாயிலாகக் கூடஸ்தனிடத்து உம்மை நிவேதனஞ்செய்து அதாவது உமது பரோக்ஷத்தன்மையினையும் எனது பரிச்சின்னத்தன்மையினையும் விட்டு ஒருமைப்படுத்தி உமது ஸ்திர ஐசுவரியத்தையும் பரித்துக்கொள்வேன்."

இவ்வாறு ஞானிக்கு ஈசுவரத்தன்மை இருக்கின்றது.

கஅ. வெதிரேகமுகத்தாற் கூறிய அர்த்தத்தினை அந்வயமுகமாகப் பிரதிபாதிக்கும் சுருதியின் அர்த்தம்.

[௬௭] यस्तु साक्षिणमात्मानं सेवते प्रियमुत्तमम् ।
तस्य प्रेयानसावात्मा न नश्यति कदाचन ॥ ७१ ॥

(அ-கை.)

வெதிரேகவாயிலாய் ௬௪-வது சுலோகத்தில் சொல்லப்பட்ட அர்த்தத்தினை அந்வயவாயிலாகக் கூறும் "ஆத்மாவினையே பிரியமென்றறிந்து உபாசனை செய்யவேண்டும். எவன் ஆத்மாவினைப் பிரியமெனக் கண்டு உபாசிக்கின்றானோ, இப்புருஷனது பிரியவடிவ ஆத்மா ஒருபோதும் வியோகத்தினை யடையாது." என்னும் ௬௪-வது சுலோகத்திற் கூறிய வாக்கியத்திற்குப் பிந்திய வாக்கியத்தினை அர்த்தத்தினாற் படிக்கின்றார்:—

तु यः साक्षिणं आत्मानं उत्तमं प्रियं सेवते तस्य प्रेयान् असौ आत्मा न कदाचन नश्यति ॥

(சு-ம்.)

எந்தப் புருஷனானவன் சாக்ஷியாகிய ஆத்மாவை உத்தமப்பிரியமென்று கண்டு சேவிக்கின்றானோ, அவனது பரமப்பிரியவடிவ இவ்வாத்மா ஒருபோதும் நாசத்தை அதாவது அப்பிரியத்தன்மையை யடைகிறதில்லை.

(வி-ம்.)

மூலத்தில் எந்த ஓகாரப்பொருளுடையது தூ என்னும் பத மிருக்கின்றதோ, அது ௬௪வது சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினும் கூறப்படும் இவ்வர்த்தம் விலக்ஷணமாதலை யறிவித்தற்பொருட்டாம். ஆதலால் புத்திராதியநாத்மாவினது பிரியத்தன்மையைக் கூறுபவனினும் வேறான சிஷ்யன் ஆத்மாவினையே உத்தமப்பிரியமாக அதாவது நிரதிசயப்பிரேமையின் விஷயமாகச் சேவிக்கின்றான் அதாவது எப்போதும் ஸ்மரிக்கின்றான். அச்சிஷ்யன்முதலியோர்களின் பரமப்பிரியத்தன்மையால் அதாவது பிரியதமமாயிருத்தலால் மதிக்கப்பட்ட இவ்வாத்மா பிரதிவாதியினால் மதிக்கப்பட்டுள்ள புத்திராதிவடிவ பிரியத்தினைப்போல ஒருபோதும் விநாசத்தை யடைகிறதில்லை. ஆனால் எப்போதும் ஆநந்தவடிவமாய் விளங்குகின்றது * கஉ. என்பது பொருள். (எக)

* கஉ வாதி பிரியதமத்தன்மை யிருத்தலால் மதித்துள்ள புத்திராதிவடிவ ஆத்மா எதுவோ அது வியபிசாரிப்பிரீதிக்கு விஷயமாதலால் அதன் பிரியதமத்துவம் பிராந்தியினாற் பெறப்பட்டதாம். அதனால் அது ஒருகால் பிரதிகூலத்தன்மைமுதலிய எதுவால் நஷ்டமாகின்றது. சிஷ்யன் பிரியதமமா யிருத்தலால் அறிந்த சாக்ஷியாகிய ஆத்மா அவ்வியபிசாரிப் பிரீதிக்கு விஷயமா யிருத்தலின் அதன் பிரியதமத்துவம் உண்மையானதாம் ஆதலால் அது ஒருகால் யாதேனும் ஓர் நிமித்தத்தால் நஷ்டமாகாது ஆனால் எப்போதும் விளங்குகின்றது; குருவுபதேசத்தால் பிறந்த தத்துவ ஞானத்தினால் பிராந்திஞானம் பாதமாகுதலால் என்பது கருத்து.

[௧௲௭௨-அ] परप्रेमास्पदत्वेन परमानंद इष्यताम् ।
सुखवृद्धिः प्रीतिवृद्धौ सार्वभौमादिषु श्रुता ॥ ७२ ॥

(அ-கை.)

இவ்வாறு ௧௲௭௱-வது ச்லோகமுதல் ஆத்மாவினது பரமப்பிரேமைக்கு விஷயமாந்தன்மையாகிய ஏது ஏதுவோ, அதனைச் சுருதியுக்தியனுபவங்களாற் சித்தமாக்கி, இப்போது ஆத்மாவின் பரமாநந்தத்தன்மைவடிவ [illegible] தத்தைக் கூறுகின்றார் :—

परप्रेमास्पदत्वेन परमानंदः इष्यताम् ॥

(சு-ம்.)

பரமப்பிரேமைக்கு விஷயமாகுதலால் ஆத்மா பரமாநந்தவடிவமென்று கொள்ளுதல் தகுதியாம்.

(வி-ம்.)

இங்கு இஃது அநுமானமாம் :—

ஆத்மா பரமாநந்தவடிவமாம்; நிரதிசயப்பிரேமைக்கு விஷயமாதலால்; எது பரமாநந்தரூபமன்றோ அது நிரதிசயப்பிரேமைக்கு விஷயமுமன்று; எங்ஙனம் :—கடாதிகள் பரமாநந்தரூபமன்றாகலின் நிரதிசயப்பிரேமைக்கு விஷயமுமன்று. இது கேவலவெதிரேகிதிருஷ்டாந்தம்.

(அ-கை.)

பரமப்பிரேமைக்கு விஷயமாந்தன்மைவடிவ ஏதுவிற்கு ஆத்மாவின் பரமாநந்தவடிவத்தன்மையைச் சாதித்தலில் சாமர்த்தியத்தை விளக்குதற் பொருட்டுப் பிரீதிவிருத்தியில் சுகம் விருத்தியாதலை உதகரிக்கின்றார்:—

सार्वभौमादिषु प्रीतिवृद्धौ सुखवृद्धिः श्रुता ॥

(சு-ம்.)

சார்வபௌமன் முதலியோரிடத்துப் பிரீதி விருத்தியாகவே சுகத்தின் விருத்தி கேட்கப்படுகின்றது.

(வி-ம்.)

“सर्वभौमादिहिरण्यगर्भान्तेषु पदविशेषेषु। यत्र यत्र प्रीतिर्वर्धते तत्र तत्र सुखाभिवृद्धिरस्ति ॥
எதனால் சார்வபௌமனாகிய இராஜாமுதல் இரணியகர்ப்பன் வரையி

ளுள்ள ஐசுவரியங்களோடு கூடிய ஸ்தானங்களின்பேதம் எவையோ அவற்றில் எங்கு எங்குப் பிரீதி ஏறுகின்றதோ, அங்கங்குச் சுகத்தின் விருத்தியுண்டாகின்றது.'' என்று தைத்திரீயத்திலும் பிருகதாரணியகசுருதியிலும் * ௧௩. சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் பிரீதியினது நிரதிசயத்தன்மை அதாவது எல்லாவற்றிற்கும் அதிகமாந்தன்மை யுளதாயின் ஆநந்தத்திற்கும் நிரதிசயத்தன்மை அறியக்கூடியதாம் என்பது கருத்து.()

௨. ஆத்மாவினது பரமாநந்தத்தன்மை சேதனத்தன்மையினைப்போல எல்லா விருத்திகளிலும் தோற்றமை ௧௩-௭௩-௧௩௫.

க, சுகம் சேதனத்தினைப்போல் ஆத்மாவின் சுபாவமாதலில் சங்கை.

[௧௩-௭௩] चैतन्यवत्सुखं चास्य स्वभावश्चेच्चिदात्मनः ।
धीवृत्तिष्वनुवर्तेत सर्वास्वपि चितिर्यथा ॥ ७३ ॥

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவின் பரமாநந்தவடிவத்துவம் பொருந்தாது. ஏனெனின், அவ்வாறு ஆத்மாவிற்குப் பரமாநந்தவடிவத்தன்மை யுளதாகவே சைதன்னியத்தினைப்போல அந்த ஆத்மாவின் சொரூபவடிவ ஆநந்தத்திற்கும் சகல புத்திவிருத்திகளிலும் அநுவிருத்தி(விளக்கம்) வாய்க்கும் என்று வாதி சங்கிக்கின்றான் :—

चैतन्यवत् सुखं च अस्य चिदात्मनः स्वभावः चेत् । सर्वासु अपि धीवृत्तिषु यथा चितिः अनुवर्तेत ॥

(சு-ம்.)

எப்போது சைதன்னியமாகிய ஞானத்தினைப்போல ஆநந்தமும் இந்தச் சிதாத்மாவின் சுபாவம் அதாவது சொரூபமாமோ, அப்போது எல்லாப்புத்திவிருத்திகளிலும் எப்படிச் சைதன்னியம் விளங்குகின்றதோ, அதுபோல இவ்வாநந்தமும் விளங்கும் என்று கூறின். (௭௩)

உ. திருஷ்டாந்தத்தினால் சேதனத்தினைப்போல எல்லா விருத்திகளிலும் ஆநந்தத்தினது அநுவிருத்தியி னின்மையால் சமாதானம்.

[௧௩-௭௪] नैवमुष्णप्रकाशात्मा दीपस्तस्य प्रभा गृहे ।
व्याप्नोति नोष्णता तद्वच्चितेरेवानुवर्तनम् ॥ ७४ ॥

---

* ௧௩. சக்கிரவர்த்திமுதல் பிரஹ்மதேவபதம் வரையில் எந்தப் பிரீதியின் தாரதம்மியத்தால் சுகத்தின் தாரதம்மியத்துவம் தைத்திரீயபிரகதாரணியகங்களில் சொல்லப்பட்டிருக்கின்றதோ, அதன் வர்ணனம் மேல் ௩௭௨-௩௯௦ சுலோகங்களில் காண்க.

(அ-கை.)

சித்து ஆநந்த மென்னும் இரண்டும் ஆத்மாவின் சொரூபமாயிருக்கினும், எல்லா விருத்திகளிலும் சேதனத்தின் அநுவிருத்தியே யுண்டாகின்றது; ஆநந்தத்தினது அநுவிருத்தி உண்டாகிறதில்லை யென்று திருஷ்டாந்தத்தின் ஆசிரயத்தினால் சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

मा एवं । उष्णप्रकाशात्मा दीपः तस्य प्रभा गृहे व्याप्नोति उष्णता न । तद्वत् चितेः एव अनुवर्तनं ॥

(சு-ம்.)

இவ்வாறு வேண்டியதில்லை. ஏனெனின் எப்படி உஷ்ணப்பிரகாச வடிவ தீபம் எதுவோ அதன் பிரகாசம் வீட்டில் வியாபிக்கப்பட்டதாகின்றதோ, உஷ்ணம் வியாபிக்கிறதில்லையோ, அதுபோலச் சேதனத்தின் அநுவர்த்தன முண்டாகின்றது.

(வி-ம்.)

எப்படி உஷ்ணமும் பிரகாசமுமாகிய இரண்டு சுபாவமுடைய தீபத்தின் பிரகாசமே வீடுமுதலியவற்றில் வியாபித்ததாகின்றதோ, உஷ்ணத்தன்மை வியாபிக்கிறதில்லையோ, அதுபோலச் சைதன்னியத்திற்கே எல்லா விருத்திகளிலும் அநுவிருத்தி (பிரவேசித்தல்) உண்டாகின்றது; ஆநந்தத்திற்கு இல்லை என்பது பொருள். (எ௪)

௫. சேதனமும் ஆநந்தமும் அபேதமாயிருக்கினும், சேதனத்தினை வெளிப்படுத்தும் விருத்திகளில் ஆநந்தத்தினது அபிவிருத்தியின் (வெளிப்படுதலின்) நியம மில்லாமையில் திருஷ்டாந்தம்.

[௧௩௫௧] गंधरूपरसस्पर्शेष्वपि सत्सु यथा पृथक् ।
एकाक्षेणैक एवार्थो गृह्यते नेतरस्तथा ॥ ७५ ॥

(அ-கை.)

அப்படியானால் சித்தும் ஆநந்தமுமாகிய இரண்டற்கும் அபேதமுளதாயின், சேதனத்தின் அபிவியஞ்சக அதாவது ஆவரணநிவிருத்தியினால் ஆவிர்ப்பாவத்தைச் செய்வதான விருத்தியிலேயே ஆநந்தத்தின் அபிவியக்தியாகிய ஆவிர்ப்பாவத்தன்மையு முண்டாகுமென் றுசங்கித்து, அவ்வாறு எங்குச் சேதனத்தின் ஆவிர்ப்பாவ முண்டாகின்றதோ, அங்கு ஆநந்தத்தின் ஆவிர்ப்பாவ முண்டாகு மென்னும் நியமமின்மையில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

यथा गन्धरूपरसस्पर्शेषु सत्सु अपि एकाक्षेण पृथक् एकः एव अर्थः गृह्यते । इतरः न । तथा ॥

(சு-ம்.)

எப்படி ஒரு வஸ்துவி லிருக்கின்ற கந்தம், ரூபம், ரஸம், ஸ்பரிசம் என்பன விருக்கினும், ஒரு இந்திரியத்தினால் வேறு வேறான ஒரே பொருளாகிய குணம் கிரகிக்கப்படுகின்றதோ, வேறு கிரகிக்கப்படுகிறதில்லையோ, அதுபோல.

(வி-ம்.)

எப்படிப் புஷ்பமுதலிய ஒரு திரவியத்திலிருக்கின்ற கந்தமுதலிய நான்கு குணங்களுள் கிராணமுதலிய ஒவ்வொரு இந்திரியத்தால் கந்தமுதலியவடிவ ஒவ்வொருகுணம் கொள்ளப்படுகின்றதோ, மற்றவை கிரகிக்கப் படுவதில்லையோ, அதுபோலச் சித்து ஆநந்தங்களுள் சித்தின் விளக்கமே யுண்டாகின்ற தென்பது பொருள். (எரு)

௪. திருஷ்டாந்த தார்ஷ்டாந்தங்களின் விஷமத்தன்மையில் சங்கையும், அதில் விகற்பமும்.

[கூ௬உ] चिदानंदौ नैव भिन्नौ गंधाद्यास्तु विलक्षणाः ।
इति चेत्तदभेदोऽपि साक्षिण्यन्यत्र वा वद ॥ ७६ ॥

(அ-கை.)

கந்தமுதலிய திருஷ்டாந்தத்திற்கும் சித்துஆநந்தவடிவ தார்ஷ்டாந்தத்திற்குமுள்ள விஷமத்தன்மையினை வாதி சங்கிக்கின்றான் :—

चिदानंदौ न एव भिन्नौ गंधाद्याः तु विलक्षणाः । इति चेत् ॥

(சு-ம்.)

சித்தும் ஆநந்தமும் பின்ன மன்று, கந்தமுதலியனவோ விலக்ஷணமாம் என்று கூறின்.

(வி-ம்.)

விலக்ஷணமாம் என்பது பரஸ்பரம் பின்னமாம்.

(அ-கை.)

முற்கூறிய விஷமத்தன்மையினைப் பரிகரித்தற்குத் தார்ஷ்டாந்திகத்தில் சித்து ஆநந்தங்களின் எந்த அபேத மிருக்கின்றதோ, அது சுபாவிகமா அதாவது சொரூபமா யிருப்பதா? அல்லது உபாதியினாலாகியதா? என்று சித்தாந்தி விகற்பஞ்செய்கின்றார் :—

तदभेदः अपि साक्षिणि वा अन्यत्र वद ॥

(க-ம்.)

அவற்றின் அபேதமும் சாக்ஷியினிடத்தி லிருக்கின்றதா? அல்லது வேறிடத்தி லிருக்கின்றதா? சொல்லு.

(வி-ம்.)

அந்தச் சித்து ஆநந்தங்களின் அபேதம் எதுவோ அது சாக்ஷியாகிய ஆத்மசொரூபத்தின்கண் ணிருக்கின்றதா? அல்லது வேறிடத்தில் அதாவது அவற்றின் உபாதிவடிவ விருத்திகளி லிருக்கின்றதா? வாதியே! அதனைச் சொல்லு என்பது பொருள். (எசு)

ரு. விகற்பத்தின் நிஷேதத்தினால் திருஷ்டாந்ததார்ஷ்டாந்தங்களின் சமத்தன்மை.

[கஙருஎ] आद्ये गंधादयोऽप्येवमभिन्नाः पुष्पवर्तिनः ।
अक्षभेदेन तद्भेदे वृत्तिभेदात्तयोर्भिदा ॥ ७७ ॥

(அ-கை.)

முதற்பக்ஷத்தில் திருஷ்டாந்ததார்ஷ்டாந்தங்க ளிரண்டன் சமத்தன்மையினைக் கூறுகின்றார்:—

आद्ये पुष्पवर्तिनः गंधादयः अपि एवं अभिन्नाः ॥

(சு-ம்.)

முதற்பக்ஷத்தில் புஷ்பத்திலிருக்கும் கந்தமுதலியனவும் இப்படி அபின்னமா யிருக்கின்றன.

(வி-ம்.)

சித்தும் ஆநந்தமுமாகிய இரண்டற்கும் சாக்ஷியினிடத்துப் பேத மில்லையென்னும் முதற்பக்ஷத்தில் புஷ்பத்திலிருக்கும் கந்தமுதலிய குணங்களும் இவ்வாறு சிதாநந்தங்களைப்போலவே ஒன்றற்கொன்று பேதமில்லாதனவா யிருக்கின்றன; ஏனெனின் வேறு இரஸமுதலியவற்றை விட்டுக் கந்தமொன்றனைக் கொண்டுபோதல் கூடாததா யிருத்தலின் என்பது தாற்பரியம்.

(அ-கை.)

விருத்திகளில் அபேத மிருக்கின்றதென்னும் இரண்டாவது பக்ஷத்தில் திருஷ்டாந்ததார்ஷ்டாந்தங்களின் சமத்தன்மையினைக் கூறுகின்றார்:—

अक्षभेदेन तद्भेदे वृत्तिभेदात् तयोः भिदा ॥

(சு-ம்.)

இந்திரியங்களின் பேதத்தினால் அக்கந்தமுதலியவற்றின் பேதத்தை ஒப்புக்கொண்டால் விருத்திகளின் பேதத்தால் அந்தச் சிதாநந்தங்களுக்குப் பேத முண்டாகும்.

(வி-ம்.)

கந்தமுதலியவற்றைக் கிரகிக்கும் கிராணமுதலிய இந்திரியங்களின் பேதத்தால் அந்தக் கந்தமுதலியவற்றினது பேதத்தினை அங்கீகரிக்கின், அவ்வாறே சிதாநந்தங்களின் கிரமமாக ஆவிற்பவித்த(வெளிப்படுத)ற்குக் காரணமான இராஜஸ சாத்துவீக விருத்திகளின் பேதத்தால் அந்தச் சிதாநந்தங்களுக்குப் பேத முண்டாகும் என்பது பொருள். (எஎ)

சு. சிதாநந்தங்களின் ஒருமைத்தோற்றத்தின் இடமும், அந்நியவிருத்திகளிலுள்ள பேதத்தின் காரணமும்.

[கஙுச] सत्त्ववृत्तौ चित्सुखैक्यं तद्वृत्तेर्निर्मलत्वतः ।
रजोवृत्तेस्तु मालिन्यात्सुखांशोऽत्र तिरस्कृतः ॥ ७८ ॥

(அ-கை.)

அப்படியானால் அப்போது சிதாநந்தங்களின் ஒருமை எங்குத் தோற்றுகின்றதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

सत्त्ववृत्तौ चित्सुखैक्यम् ॥

(சு-ம்.)

சத்துவகுணத்தின் விருத்தியில் சித்து சுகங்களின் ஒருமை தோற்றுகின்றது.

(வி-ம்.)

சுபகர்மத்தினால் உதயமாகிய சத்துவகுணத்தின் பரிணாமவடிவ புத்தியின் விருத்தியில் சித்து ஆநந்தம் என்பவற்றின் ஒருமை தோற்றுகின்றது.

(அ-கை.)

அங்குக் காரணத்தைக் கூறுகின்றார்:—

तद्वृत्तेः निर्मलत्वतः ॥

(சு-ம்.)

அந்தச் சத்துவகுணத்தின் விருத்தி சொர்ச்சமா யிருத்தலால்.

(அ-வா.)

அப்போது சித்திற்கும் ஆநந்தத்திற்கும் எதனால் பேதம் தோற்று கின்றதெனக் கூறுகின்றார்:—

रजोवृत्तेः तु मालिन्यात् अत्र सुखांशः तिरस्कृतः ॥

(சு-ம்.)

இரஜோகுணத்தின் விருத்தியோ மலினமாயிருத்தலால் இதன்கண் ஆநந்தத்தின் அம்சம் திரோதானத்தை யடைகின்றது. (எ-ள்)

எ. இருக்கின்ற சுகத்தினது அம்சத்தின் நீக்கத்தில் திருஷ்டாந்தம்.

[க௩.௫௫] तितिणीफलमत्यम्लं लवणेन युतं यदा ।

तदाम्लस्य तिरस्कारादीषदम्लं यथा तथा ॥ ७९ ॥

(அ-கை.)

இருக்கிறதாயிருந்தும் சுகாம்சம் நீங்குதலில் திருஷ்டாந்தம் கூறுகின்றார்:—

यथा अत्यम्लं तितिणीफलं यदा लवणेन युतं तदा अम्लस्य तिरस्कारात् ईषत् अम्लं तथा ॥

(சு-ம்.)

எப்படி மிகப்புளிப்பான புளியம்பழம் எப்போது உப்போடுகூடிய தாகின்றதோ, அப்போது புளிப்பு நீங்குதலால் சிறிது புளிப்பு இருக்கின்றதோ, அதுபோல இரஜோவிருத்தியிற் சுக மிருக்கின்றது.

(வி-ம்.)

எப்படிப் புளியம்பழத்தில் உப்புமுதலியவற்றின் சேர்க்கையால் மிகுதியான புளிப்பு மறைகின்றதோ, அதுபோல இரஜோகுணத்தின் சஞ்சல விருத்தியில் ஆநந்தத்தினது திரோதானம் உண்டாகின்றது * கச. என்பது பொருள். (எகூ)

* கச. எப்படி மனதிற்கு வியாகூலத்தன்மை யுண்டாயின் சமீபத்திலிருக்கின்ற நேத்திரமுதலியவற்றிற்கு விஷயங்களின் தோற்ற முண்டாகிறதில்லையோ, அதுபோலச் சஞ்சலமான இரஜோவிருத்தியினால் இருப்பதாகிய ஆநந்தாம்சத்தின் விளக்க முண்டாகிறதில்லை.

அல்லது சாமானியமாகப் பரமப்பிரேமைக்கு விஷயமாகுதலால் ஆத்மாவினது ஆநந்தத்தின் விளக்கம் எப்போதும் உண்டாகின்றது; ஆனால் விருத்தியில் பிரதிபிம்பமாகுதலால் விசேஷமாகத் தோற்றுகின்றது.

எதனால் வியக்திமாத்திர அம்சத்தின் பிரதிபிம்பத்தினைக் கிரகிப்பதும், சோபையம்சத்தின் பிரதிபிம்பத்தினைக் கிரகியாததுமான அசைகின்ற கண்ணாடியினைப்போல, இரஜோதமோகுணங்களினது விருத்திகள் சேதனாம்சத்தினது பிரதிபிம்பத்தினைக் கிரகிப்பனவாயும், ஆநந்தாம்சத்தினது பிரதிபிம்பத்தினைக் கிரகியாதனவாயு மிருக்கின்றன. ஆதலால் இரஜோதமோவிருத்திகளால் ஆநந்தாம்சம் விசேஷமாக விளங்குகிறதில்லை. ஆனால் உப்புவடிவ பிரதிபிம்பத்தால் புளியின் புளிப்பு மறைவதைப்போல இருப்பதாயிருந்தும் ஆநந்தாம்சத்தின் திரோதான முண்டாகின்றதென்பது பொருள்.

௩. யோகவிவேகங்களின் சமத்தன்மை கஅ௫-கஅஅ.
க. இரகசிய அபிப்பிராயத்தின் சங்கை.

[கஅ௫] ननु प्रियतमत्वेन परमानंदतात्मनि ।
विवेक्तुं शक्यतामेवं विना योगेन किं भवेत् ॥ ८० ॥

(அ-கை.)

இரகசிய அபிப்பிராயத்தினை வாதி சங்கிக்கின்றான்:—

ननु एवं आत्मनि परमानंदता प्रियतमत्त्वेन विवेक्तुं शक्यतां योगेन विना किं भवेत् ॥

(சு-ம்.)

அப்படியானால் இப்படி ஆத்மாவினிடத்து எப்பரமாநந்தத்தன்மையிருக்கின்றதோ, அது பிரியத்தன்மைவடிவ ஏதுவால் விவேகிக்கத்தக்கதாகுக. என்றாலும் சித்தத்தின் நிரோதவடிவ யோகமின்றி என்ன பயனுளது? ஒன்றுமில்லை.

(வி-ம்)

அப்படியானால் கூறியவிதமாக ஆத்மாவின் பரமாநந்தவடிவத்தன்மையாதுளதோ, அது பரமப்பிரீதிக்கு விஷயமாந்தன்மைவடிவ ஏதுவால் புத்திராதி கௌணாத்மா பஞ்சகோசவடிவ மித்தியாத்மா என்னும் பிரியமும் உபேக்ஷியமும் துவேஷியமுமாகிய வஸ்துக்கள் எவையோ, அவற்றினின்றும் வேறுபிரித்து அறியக்கூடியதாகுக. அவ்வாறாயினும், "இவ்விவேகம் முக்திக்குச் சாதனமன்று; அபரோக்ஷஞானவாயிலாக முக்திக்குக் காரணம் யோகம் என்று முன் கக-வது பிரகரணத்தில் சொல்லியிருத்தலால்." என்பது வாதியினது பிரசினத்தின் இரகசிய அபிப்பிராயமாம். (அ0)

௨. இரகசிய அபிப்பிராயமான உத்தரமும், சங்கை சமாதானங்களின் இரகசிய அபிப்பிராயத்தினை வெளிப்படுத்தலும்.

[கஅ௬] यद्योगेन तदेवेति वदामो ज्ञानसिद्धये ।
योगः प्रोक्तो विवेकेन ज्ञानं किं नोपजायते ॥ ८१ ॥

(வி-ம்.)

இப்போது சித்தாந்தி கூடவபிப்பிராயமுடையதாகவே உத்தரம் கூறுகின்றார்:—

यत् योगेन तत् एव इति वदामः ॥

(சு-ம்.)

எந்தப் பயன் யோகத்தினால் உண்டாகின்றதோ அதுவே விவேகத்தினால் உண்டாகின்றதென்று யாம் கூறுகின்றோம்.

(வி-ம்.)

எப்படி யோகத்திற்கு அபரோக்ஷஞானத்திற்கு ஏதுவாந்தன்மை யிருக்கின்றதோ, அவ்வாறு விவேகத்திற்கும் அபரோக்ஷஞானத்திற்கு ஏதுவாந்தன்மை யிருக்கின்றது. இதுவும் இரகசிய அபிப்பிராயமுடையதே யாம் சித்தாந்தியின் உத்தரம்.

(அ-கை.)

பிரசினம் உத்தரமென்னும் இரண்டினுள் முன்னர் இரகசியம் எதுவோ அதனை வெளிப்படுத்துகின்றார்:—

ज्ञानसिद्धये योगः प्रोक्तः । विवेकेन किं ज्ञानं न उपजायते ॥

(சு-ம்.)

எப்படி ஞானம் சித்திக்கும்பொருட்டு அதாவது உற்பத்தியாகும் பொருட்டு யோகம் சொல்லப்பட்டிருக்கிறதோ, அப்படி விவேகத்தினால் ஞான முண்டாகாதா? என்னை?

(வி-ம்.)

எப்படி அபரோக்ஷஞானத்திற்குச் சாதனமாவதாக யோகம் முன் கக-வது பிரகரணத்தில் சொல்லப்பட்டிருக்கிறதோ, அப்படி இந்த கூ-வது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட கௌணமுதலிய மூவகை ஆத்மாவினை விவேகித்தல்வாயிலாகப் பஞ்சகோசங்களின் விவேகம் யாதோ அதனாலும் ஞானம் உண்டாகவே செய்யும் என்பது பொருள். (அக)

௩. யோகவிவேகங்களின் பயனொன்றென்பதில் கீதை பிரமாணமாதல்.

[ககூருஅ] यत्सांख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।
इति स्मृतं फलैकत्वं योगिनां च विवेकिनाम् ॥ ८२ ॥

(அ-கை.)

யோகம் விவேகமென்னும் இரண்டற்கும் ஞானத்திற்கு ஏதுவாந் தன்மை யுண்டென்பதில் பிரமாணம் யாதென்னுமாசங்கைக்குக் கூறுகின்றார்:—

"सांख्यैः यत् स्थानं प्राप्यते । तत् योगैः अपि गम्यते" इति योगिनां च विवेकिनां फलैकत्वं स्मृतम् ॥

(சு-ம்.)

" சாங்கியர்களால் எந்த ஸ்தானம் அடையப்படுகின்றதோ, அந்த ஸ்தானம் யோகிகளாலும் அடையப்படுகின்றது." என்று யோகிகளுக்கும் விவேகிகளுக்கும் பலத்தின் ஒருமை ஸ்மரிக்கப்படுகின்றது அதாவது கீதாஸ்மிருதியில் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

" ஆத்மாவையும் அநாத்மாவையும் விவேகிப்பவர்களுக்கு மோக்ஷவடிவ ஸ்தானம் கிடைக்கின்றது. அந்தஸ்தானம் யோகிகளுக்கும் வாய்க்கின்றது." என்னும் கீதையின் வாக்கியத்தால் யோகிகளுக்கும் விவேகிகளுக்கும் ஞானவாயிலாக மோக்ஷவடிவ பலத்தின் ஒருமை சொல்லப்பட்டிருக்கிறதென்பது பொருள். (அஉ)

ச. அதிகாரிபேதத்தால் சாஸ்திரத்தில் யோகம் விவேகமென்னும் இரண்டையும் கூறுதல் தகுதியாதல்.

[கக௫கக] असाध्यः कस्यचिद्योगः कस्यचिज्ज्ञाननिश्चयः ।
इत्थं विचार्य मार्गौ द्वौ जगाद परमेश्वरः ॥ ८३ ॥

(அ-கை.)

அப்படியானல் விவேகம் யோகமென்னும் இரண்டற்கும் ஒரேபயனிருக்குமாயின், அப்போது சாஸ்திரங்களில் இவ்விரண்டினின்றும் ஒன்றனையே கூறுதல் தகுதியாம்; இரண்டனையும் கூறுதல் தகுதியானதன்று என்று ஆசங்கித்து, * கரு. அதிகாரிவேற்றுமையால் இரண்டனையும் கூறுதல் தகுதியுள்ளதாமென்னும் அபிப்பிராயத்தினல் கூறுகின்றார்:—

कस्यचित् योगः असाध्यः कस्यचित् ज्ञाननिश्चयः । इत्थं विचार्य परमेश्वरः द्वौ मार्गौ जगाद ॥

(சு-ம்.)

சில அதிகாரிகளுக்கு யோகம் அசாத்தியமாம். சிலருக்கு ஞானத்தின் நிச்சயம் அசாத்தியமாம். இவ்வாறு விசாரித்துப் பரமேசுவரனாகிய ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா யோகம் விவேகமென்னும் இரண்டுமார்க்கங்களையும் சொல்லத்தொடங்கினர். (அ௩)

ரு. அபரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மையினலும், இராகாதிகளில்லாமையினலும் யோகமும் விவேகமும் சமமாதல்.

[கக௫௬0] योगे कोतिशयस्तत्र ज्ञानमुक्तं समं द्वयोः ।
रागद्वेषाद्यभावश्च तुल्यो योगिविवेकिनोः ॥ ८४ ॥

* கரு. சாங்கியவிவேகம் யோகம் என்பவற்றினது அதிகாரிகளின் பேதத்தினைத் தியானதீபத்திலுள்ள சுலோகம் கஎஉ-கஎ௩-ல் பார்க்க.

(அ-கை.)

அப்படியானால் அத்தியந்தசிரமத்தினாற் சாதிக்கப்படும் யோகத்திற்கு வருத்தமின்றிச் சுலபமாய்ச் சாதிக்கத்தக்க விவேகத்திலும் மேன்மை சொல்லத்தக்கதா மென்றாசங்கித்து, அந்த யோகத்தின் மேன்மை அது அபரோக்ஷஞானத்தை யுண்டுபண்ணுவதா யிருத்தலின் சொல்லப்படுகின்றதா? அல்லது இராகத்துவேஷங்களின் நிவிருத்திக்குக் காரணமா யிருத்தலாற் சொல்லப்படுகின்றதா? அல்லது துவைதத்தின் அப்பிரதீதிக்குக் காரணமா யிருத்தலாற் சொல்லப்படுகின்றதா? என்று இவ்வாறு மூன்று விகற்பஞ் செய்து முதற்பக்ஷத்தில் யோகவிவேகங்களினது பலத்தின் சமத்தன்மையைக் கூறுகின்றார்:—

तत्र द्वयोः ज्ञानं समं उक्तं । योगे कः अतिशयः ॥

(சு-ம்.)

அங்கு இரண்டற்கும் ஞானமாகிய பயன் சமமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் வாதி! உன்யோகத்தில் அதிசயம் யாது?

(வி-ம்.)

விவேகம் யோகமென்னும் இரண்டற்கும் ஞானமாகிய பயன் "சாங்கியர்களால் எந்த ஸ்தானம் அடையப்படுகின்றதோ" என்றல் முதலிய வாக்கியங்களால் சமமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் வாதியே! உன்யோகத்தில் மேன்மை யாதுளது? எதுவு மில்லை யென்பது பொருள்.

(அ-கை.)

இரண்டாவது பக்ஷத்தைக் குறித்துக் கூறுகின்றார்:—

च रागद्वेषाद्यभावः योगिविवेकिनोः तुल्यः ॥

(சு-ம்.)

இராகத்துவேஷமுதலியவற்றின் அபாவமும் யோகிக்கும் விவேகிக்கும் சமமாம். (அசு)

சு. விவேகிக்கு இராகாதிகளின்மையைக் கூறுதல்.

[ககசுக] न प्रीतिर्विषयेष्वस्ति प्रेयानात्मेति जानतः ।
कुतो रागः कुतो द्वेषः प्रातिकूल्यमपश्यतः ॥ ८५ ॥

(அ-கை.)

விவேகியாகிய விசாரமுடையவனுக்கு இராகமுதலியன இல்லாமை எதுவோ அதனை யெடுத்துக் கூறுகின்றார்:—

"आत्मा प्रेयान्" इति जानतः न विषयेषु प्रीतिः अस्ति । रागः कुतः प्रातिकूल्यं अपश्यतः द्वेषः कुतः ॥

(அ-ம்.)

"ஆத்மா பிரியதமம்" என்று அறிகின்ற புருஷனுக்கு விஷயங்களில் பிரீதி யில்லை. ஆதலால் திட ஆசையாகிய இராகம் எங்கிருந்துண்டாகும்? பிரதிகூலத்தன்மையினைக் காணுத புருஷனுக்குத் துவேஷம் எங்கிருந்துண் டாகும்.

(வி-ம்.)

"ஆத்மா மிகவும் பிரியமானது" என்று அறிகின்ற விவேகியாகிய ஞானிபுருஷனுக்கு முதலில் விஷயங்களில் பிரீதி யில்லை. ஆதலால் அந்த அப்பிரியவிஷயங்களில் இராக முண்டாகிற தில்லை; சித்தத்திற்குச் சாதனமாகிய அநுகூலத்தன்மையின் ஞான மின்மையால். துவேஷமு மில்லை; துவேஷத்திற்குக் காரணமான பிரதிகூலத்தன்மையின் ஞானமின்மையால் * ௧௧. என்பது பொருள். (அ௫)

எ. பிரதிகூலத்தில் யோகிக்கும் விவேகிக்கும் துவேஷத்தின் சமத்தன்மையும், பிரதிகூலத்தில் துவேஷமுடையவனுக்கு அயோகித்தன்மையும் அவிவேகித் தன்மையு முளதாதல்.

[௧௩௬௨] देहादेः प्रतिकूलेषु द्वेषस्तुल्यो द्वयोरपि ।
द्वेषं कुर्वन्न योगी चेदविवेक्यपि तादृशः ॥ ८६ ॥

(அ-கை.)

அப்படியானல் விவேகிக்கு வியவகாரதசையில் தேகாதிகளுக்கு உபத்திரவத்தைச் செய்யும் பிராணிகளிடத்துத் துவேஷம் காணப்படுகின்றது என்றுசங்கித்து, அப்போது அந்தத் துவேஷம் யோகி விவேகி இருவருக்கும் சமமா மென்று பரிகரிக்கின்றார்:—

देहादेः प्रतिकूलेषु द्वेषः द्वयोः अपि तुल्यः ॥

(சு-ம்.)

தேகாதிகளுக்குப் பிரதிகூலமான துக்கத்தைத் தருபவற்றின்கண் துவேஷம் யோகி விவேகி இருவருக்கும் சமமாம்.

---

* ௧௧. (க) அஞ்ஞானம் பேதஞானத்திற்கும் காரணமாம்.

(உ) பேதஞானத்திற்கு அநுகூலஞானமும் பிரதிகூலஞானமும் காரணமாம்.

(௩) அநுகூலஞானமும் பிரதிகூலஞானமும் கிரமமாக இராகத்துவேஷங்களுக்குக் காரணமாம்.

விசாரத்தினுற் பிறந்த அபரோக்ஷஞான முடையவனுக்கு எதனுல் ஞானத்தினுல் அஞ்ஞானம் நீங்கியிருக்கின்றதோ, அதனுல் பேதஞானமும் அதன் காரியமான அநுகூலஞானப் பிரதிகூலஞானங்களும் இல்லை. அதனுலேயே இராகமும் துவேஷமும் இல்லை யென்பது கருத்து.

(அ-கை.)

வாதியே! பிரதிகூலமான தேள்முதலாக எந்தப் பாம்பு சிங்கமுதலி யன விருக்கின்றனவோ, அவற்றின்கண் துவேஷத்தைச் செய்யும் புருஷ னுக்கு அந்தக் காலத்தில் யோகித்தன்மை எப்போது உன்னால் அங்கீகரிக் கப்படவில்லையோ, அப்போது அவ்வாறு பிரதிகூலங்களில் துவேஷத்தைச் செய்யும் புருஷனது விவேகித்தன்மையினையும் அந்தக் காலத்தில் யாம் அங்கீகரிப்பதில்லை யென்று கூறுகின்றார்:—

द्वेषं कुर्वन् योगी न चेत् । तादृशः अविवेकी अपि ॥

(சு-ம்.)

துவேஷஞ்செய்யின் யோகி யாகானெனின், அப்போது அவ்வாறு துவேஷஞ்செய்பவன் விவேகியு மாகான்.

(வி-ம்.)

துவேஷஞ்செய்யும் புருஷன் எப்போது சித்தநிரோதமுடைய யோகி யாகானே, அப்போது அவ்வாறு துவேஷஞ்செய்யும் புருஷனும் அக்காலத் தில் விசாரமின்றிய அவிவேகியு மாகின்றான் * கஎ. என்பது பொருள். ()

அ. விவகாரதசையில் துவைததரிசனமும், சமாதியிலும் விவேகதசையிலும் துவைததரிசன மில்லாமையும் யோகிக்கும் விவேகிக்கும் சமமாதல்.

[கஈசுஈ] द्वैतस्य प्रतिभानं तु व्यवहारे द्वयोः समम् ।
समाधौ नेति चेत्तद्वन्नाद्वैतत्वं विवेकिनः ॥ ८७ ॥

(அ-கை.)

அப்படியானால் "விவேகிக்குத் துவைதமாகிய பிரபஞ்சத்தின் தரிசன மிருக்கின்றது; யோகிக்கோ அந்தத் துவைதத்தின் தரிசன மில்லை." என் னும் கஈகுசு-வது சுலோகத்தில் கூறிய மூன்றாவது விகற்பத்தில் யோகிக்கு விவேகியினும் மேன்மை யுளதாமென் றுசங்கித்து, விவேகிக்கு அந்தத் துவைதத்தின் தரிசனம் விவகாரதசையில் சொல்லப்படுகின்றதா? அல்லது வேறு சமாதிதசையில் சொல்லப்படுகின்றதா? என்று இரண்டு விகற்பஞ்

---

* கஎ. இங்கு இது தாற்பரியம்:—வித்துவானுக்கு ஞானத்தினால் அஞ்ஞானம் நாசமாகியும் பிராப்தவடிவப் பிரதிபந்தத்தினால் பிராப்தபோகம் வரையில் அஞ்ஞானத் தின் லேசம் மிஞ்சியிருக்கும். அதனைத் திருப்திதீபத்தின் எஉ௫-வது பக்கம் கூஉ-வது டிப்பணத்திற் காண்க அதன் வலியால் அவிசாரகாலத்தில் இராகத்துவேஷாதிவடிவ பிரபஞ்சம் பாதிதாநுவிருத்தியினால் (பொய்யென்று நிச்சயிக்கப்பட்ட பின்னிகழும் உணர்ச்சியினால்) தோற்றுகின்றது; விசாரகாலத்தில் மறைகின்றது. ஆதலால் ஞானியும் இராகத்துவேஷங்களைச் செய்வானாயின் அப்போது விவேகியாகான்; ஆனால் அவிவேகியென்னும் விசாரமில்லாதவனாகின்றான் என்க.

செய்து முதற்பக்ஷத்தில் அந்த வியவகாரதசையில் துவைதத்தினைக் காணு தல் யோகிக்கும் சமமா மென்று கூறுகின்றார்:—

व्यवहारे द्वैतस्य प्रतिभानं तु द्वयोः समम् ॥

(சு-ம்.)

வியவகாரத்தில் துவைதத்தின் தோற்றமோ யோகி விவேகி இருவருக் கும் சமமாம்.

(அ-கை.)

இரண்டாவது பக்ஷத்தினைக்குறித்து வாதி சங்கிக்கின்றான்:—

समाधौ न इति चेत् ॥

(சு-ம்.)

சமாதியில் துவைததரிசன மில்லையெனின்.

(வி-ம்.)

யோகிக்குச் சமாதிகாலத்தில் துவைதத்தின் தரிசன மில்லை யென்று உன்னால் சொல்லப்படுமாயின்.

(அ-கை)

அப்போது விவேகிக்கும் விசாரகாலத்தில் துவைததரிசனமில்லாமை சமமா மென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார் :—

तद्वत् अद्वैतत्वं विवेकिनः न ॥

(சு-ம்.)

அப்போது அதுபோல அத்வைதத்தன்மையை விவேகிப்பவனுக்கும் துவைதத்தின் தரிசனம் இல்லை.

(வி-ம்)

அதுபோல யோகிக்குச் சமாதிதசையிற்போல அத்வைதத்தன்மை யின் விவேகிக்கும் அதாவது "अद्वैतं तत्त्व" அத்வைதமே தத்துவம் அதா வது உண்மைபபொருள்" என்று சுருதியினாலும் அநுமானயுக்திகளா லும் விவேகஞ்செய்பவனுக்கும் அந்தக் காலத்தில் துவைதத்தின் தரிசன மில்லை யென்பது பொருள். (அ௭)

க. அத்வைதாநந்தத்தில் விவேகிக்குத் துவைததரிசன மில்லை யென்பதனைப் பிரதிபாதித்தலின் பிரதிஞ்ஞையும், கஅகூ-வது சுலோகத்தினால் சொல்லப்பட்ட பொருளின் சூசனையும்.

[கஅகூ] विवक्ष्यते तदस्माभिरद्वैतानंदनामके ।
अध्याये हि तृतीयेऽतः सर्वमप्यतिमंगलं ॥ ८८ ॥

(அ-கை.)

அந்தத் துவைதத்தினது தரிசனத்தினின்மை எவ்விதமா யுண்டாகு மென்றாசங்கித்து, மேல்வரும் பதின்மூன்றாவது பிரகரணத்தில் அதனை எதுயுக்திகளோடு சொல்லுவோ மென்று கூறுகின்றார் :—

तत् हि अद्वैतानंदनामके तृतीये अध्याये अस्माभिः विवक्ष्यते ॥

(சு-ம்.)

அந்தத் துவைததரிசனமின்மை அத்வைதாநந்தமென்னும் பிரஹ்மாநந்தக்கிரந்தத்தின் மூன்றாவது அத்தியாயத்தில் எம்மால் சொல்லப்படும்.

(அ-கை.)

முற்கூறிய பொருளைச் சூசிப்பிக்கின்றார் :—

अतः सर्वं अपि अतिमंगलम् ॥

(சு-ம்.)

ஆதலால் எம்மால் சொல்லப்பட்ட யாவும் அதிமங்கலமாய் அதாவது தோஷமின்றியனவா யிருக்கின்றன. (அஅ)

௯0. துவைதத்தோற்றமின்மையோடு ஆத்மதரிசனமுடையவனது யோகித்தன்மையின் சங்கையும் இஷ்டாபத்தியினால் பரிகாரமும்.

[கஙசு] सदा पश्यन्निजानंदमपश्यन्निखिलं जगत् ।
अर्थाद्योगीति चेत्तर्हि संतुष्टो वर्द्धतां भवान् ॥ ८९ ॥

(அ-கை.)

அப்படியானால் துவைதத்தின் தரிசனமின்மையோடு ஆத்மாவின் தரிசனமுடைய புருஷனுக்கு யோகத்தன்மையே யுண்டாகுமென்று வாதி சங்கிக்கின்றான் :—

निजानन्दं सदा पश्यन् । निखिलं जगत् अपश्यन् । अर्थात् योगी । इति चेत् ॥

(சு-ம்.)

நிஜாநந்தத்தினை எப்போதும் காண்கின்றவனாய் அதாவது அநுபவக்கின்றவனாய் எல்லா ஜகத்தையும் காணாதவனாய் எந்த ஞானி யிருக்கின்றானோ அவன் பொருளினால் யோகியாகின்றா னென்று கூறின்,

(அ-கை.)

சித்தாந்தி தான் விரும்பியதின் சித்தியினால் பரிகரிக்கின்றார் :—

तर्हि भवान् संतुष्टः वर्धताम् ॥

(சு-ம்.)

அப்போது வாதியே! நீ சந்தோஷத்தை யடைகின்றவனாய் விருத்தியினை யடைக. (அகூ)

கக. ஆத்மாநந்த அத்தியாயத்தின் சுருக்கமான தாற்பரியம்.

[கங-சுசு] ब्रह्मानंदाभिधे ग्रंथे मंदानुग्रहे सिद्धये ।
द्वितीयाध्याये एतस्मिन्नात्मानंदो विवेचितः ॥ ९० ॥

(அ-கை.)

ஆத்மாநந்தப்பிரகரணமாகிய அத்தியாயத்தின் தாற்பரியத்தினைச் சுருக்கமாகக் காட்டுகின்றார்:—

ब्रह्मानन्दाभिधे ग्रंथे एतस्मिन् द्वितीयाध्याये मन्दानुग्रहे सिद्धये आत्मानन्दः विवेचितः ॥

(சு-ம்.)

பிரஹ்மாநந்த மென்னும் பெயருடைய ஐந்து அத்தியாயவடிவ கிரந்தத்திலுள்ள இந்த இரண்டாவது அத்தியாயத்தில் அற்ப புத்தியுடைய அதிகாரியின் அநுக்கிரகசித்தியின்பொருட்டு ஆத்மாநந்தம் அதாவது சர்வாந்தரமாகிய பிரத்தியகாத்மாவின் சொரூபமாகிய ஆநந்தம் விவேகிக்கப்பட்டது. (கூ0)

பிரஹ்மாநந்தத்தில் ஆத்மாநந்தமென்னும்

இரண்டாவது அத்தியாயமாகிய

பன்னிரண்டாம் பிரகரணம்

முடிந்தது.

ஓம் தத்ஸத் ...

# ஸ்ரீ பஞ்சதசி.

## பிரஹ்மாநந்தத்தில் 8 அத்வைதாநந்தம்.

### மூன்றாவது அத்தியாயம்.

### பதின்மூன்றாம் பிரகரணம்.

க. பிரஹ்மத்தின் விவர்த்தமான ஜகத்தின் பிரஹ்மத்தோடு வேறுகாமையை முன்னிட்ட சக்தி அதன் காரியம் என்பவற்றின் அநிர்வசனீயத் தன்மை கஙகூ-கசகக.

க. ஆநந்தவடிவப்பிரஹ்மத்தின் விவர்த்தமான ஜகத்திற்குப் பிரஹ்மத்தோடு பேதமில்லாமை கஙகூ-கஙஎக.

க. மூன்றுவித ஆநந்தத்தினது பிரதிஞ்ஞையின் விரோதத்தினை நிஷேதித்தலும் ஆத்மாநந்தத்தினது த்வைதத்தோடுகூடியதன்மையின் சங்கையும் உத்தரமும்.

[கஙகூ] योगानंदः पुरोक्तो यः स आत्मानंद इष्यताम् ।
कथं ब्रह्मत्वमेतस्य सद्वयस्येति चेच्छृणु ॥ १ ॥

(அ-கை.)

அப்படியானால் "பிரஹ்மாநந்தம் வித்தியாநந்தம் விஷயாநந்த மென்னும் பேதத்தால் ஆநந்தம் மூன்றுவிதமா யிருக்கின்றது." என்று முதல் அத்தியாயமாகிய யோகாநந்த மென்னும் பதினோராவது பிரகரணத்தில் மூன்று ஆநந்தங்களையே பிரதிஞ்ஞைசெய்து இரண்டாவது அத்தியாய வடிவ இந்தப் பிரகரணத்தில் அந்த பிரதிஞ்ஞைசெய்யப்பட்ட மூன்று ஆநந்தங்களுக்கு வேறான ஆத்மாநந்தத்தினை நிரூபித்தலால் அந்த மூன்று ஆநந்தங்களைச் சொல்லுதலோடு விரோத முண்டாகின்றதென்ற ...த்தைக் கூறுகின்றார்:—

यः पुरा उक्तः योगानन्दः स आत्मानन्दः इष्यताम् ॥

(சு-ம்.)

முன் பதினோராவது பிரகரணத்தில் சொல்லப்பட்ட ... எதுவோ அதுவே ஆத்மாநந்தமா மென்று அங்கீகரி...

§. அத்வைதவடிவ ஆநந்தத்தினைப் பிரதிபாதிக்கும் பிரகரணம் அத்வைதாநந்த மெனப்படும்.

(வி-ம்.)

எப்படி யோகாநந்த மென்னும் பதினோராவது பிரகரணத்தின் முதல் சுலோகத்தில் பிரதிஞ்ஞைசெய்யப்பட்ட பிரஹ்மாநந்தமே யோகத்தினுண்டாகிய சாக்ஷாத்காரத்திற்கு விஷய மாகுதலால் அதற்கு யோகாநந்தத் தன்மை வியவகரிக்கப்பட்டிருக்கின்றது; நிருபாதிகமா யிருத்தலால் நிஜாநந்தத்தன்மை வியவகரிக்கப்பட்டிருக்கின்றது. அதுபோல அந்தப் பிரஹ்மாநந்தத்திற்கே கௌண மித்தியா முக்கிய ஆத்மாக்களை விவேகித்தலால் அறியத்தக்கதன்மையினைக் கூற விரும்பி அதற்கு ஆத்மாநந்தத்தன்மை சொல்லப்பட்டிருக்கிற தென்பது கருத்து.

(அ-கை.)

அப்படியானால் ஆத்மாவா யிருத்தலால் சஜாதீயமான அதாவது சாக்ஷி வடிவ முக்கிய ஆத்மாவின் சமானசாதியுடைய புத்திரன் பாரியைமுதலிய கௌணாத்மாவும் அநாத்மாவா யிருத்தலால் விஜாதீபமான அதாவது விலக்ஷணசாதியுடைய ஆகாசாதிகளுமாகிய அவற்றின் வேறான துவைதத்தோடு கூடிய ஆத்மாநந்தத்திற்கு யோகாநந்த மென்னும முதல் அத்தியாயத்தில் கூறிய அத்விதீய யோகாநந்தவடிவத்தன்மை சம்பவியாது என்று வாதி சங்கிக்கின்றான்:—

सद्वयस्य एतस्य ब्रह्मत्वं कथं इति चेत् ॥

(சு-ம்.)

துவைதத்தோடுகூடிய இந்த ஆத்மாநந்தத்திற்குப் பிரஹ்மவடிவத் தன்மை எப்படிப் பொருந்துகின்றது என்று கூறின்.

(அ-கை.)

சஜாதீயமாதலால் மதிக்கப்பட்ட புத்திராதிகௌணாத்மாவும் தேகாதி மித்தியாத்மாவுமாகிய அவை தைத்திரீயசுருதியில் கூறிய ஆகாசாதி ஜகத்தின் உள்ளா யிருத்தலாலும், ஆகாசாதிவடிவ ஜகத்து ஆநந்தத்தினும் வேறாகிய அசத்தா யிருத்தலாலும் அந்த ஆத்மாநந்தத்திற்கு அத்விதீயப் பிரஹ்மவடிவத்தன்மை பொருந்துகின்றது என்று இவ்வாறு சித்தாந்தி வெகுமானத்தோடு உத்தரம் கூறுகின்றார் :—

शृणु ॥

(சு-ம்.)

கேட்பாயாக. (க)

[கஙசுஅ] आकाशादिस्वदेहांतं तैत्तिरीयश्रुतीरितम् ।
जगन्नास्त्यन्यदानंदादद्वैतब्रह्मता ततः ॥ २ ॥

(அ-கை.)

இதுவுமது:—

तैत्तिरीयश्रुतीरितं आकाशादिस्वदेहांतं जगत् आनंदात् अन्यत् न अस्ति । ततः अद्वैतब्रह्मता ॥

(சு-ம்.)

தைத்திரீயசுருதியில் கூறிய ஆகாசமுதல் தனது தேகபரியந்தமான ஜகத்து யாதோ அது ஆநந்தத்திலும் வேறன்று. ஆதலால் ஆத்மாநந்தத்திற்கு அத்வைதப்பிரஹ்மவடிவத்தன்மை யிருக்கின்றது.

(வி-ம்.)

“तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः அந்த மந்திரத்திற் சொல்லப்பட்ட அல்லது இந்தப் பிராஹ்மணத்திற் சொல்லப்பட்ட ஆத்மாவினின்றும் ஆகாய முண்டாயிற்று” என்றல் முதலிய தைத்திரீயசுருதியினால் சொல்லப்பட்ட ஜகத்து யாதோ அது எதனால் தனது காரணமாகிய ஆத்மாநந்தத்தினின்றும் வேறல்லவோ, இக்காரணத்தால் அந்த ஆத்மாநந்தத்திற்கு அத்விதீயத்தன்மை யிருக்கின்றது என்பது அபிப்பிராயம். (௨)

௨. ஆநந்தத்தினின்றும் சிருஷ்டியைப் பிரதிபாதிக்கும் தைத்திரீயசுருதிவாக்கியத்தினைக் கூறுதலும் பலிதமும் (ஜகத்து ஆநந்தத்தினும் வேருதலும்).

[௩௩௯] आनंदादेव तज्जातं तिष्ठत्यानंद एव तत् ।
आनंदे एव लीनं चेत्युक्तानंदात्कथं पृथक् ॥ ३ ॥

(அ-கை.)

அப்படியானல் இரண்டாவது சுலோகத்தில் உதாகரணமாக்கப்பட்ட தைத்திரீயசுருதியின் வாக்கியத்தில் ஆத்மாவின் காரணத்தன்மை கேட்கப்படுகின்றது. ஆநந்தத்தின் காரணத்தன்மை கேட்கப்படவில்லை என்று ஆசங்கித்து, அவ்வாநந்தத்தின் காரணத்தன்மையினைப் பிரதிபாதிக்கும் அதே தைத்திரீயசுருதியின் “आनंदाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते ஆநந்தத்தினின்றே பிரசித்தமான இந்தப்பூதங்கள் உற்பத்தியாகின்றன.” என்றல் முதலிய பதங்களோடுகூடிய வாக்கியத்தினை அர்த்தத்தினுற் படிக்கின்றார்:-

तत् आनन्दात् एव जातं । तत् आनंदे एव तिष्ठति । च आनंदे एव लीनम् ॥

(சு-ம்.)

அந்த ஜகத்து ஆநந்தத்தினின்றே உண்டாயிற்று; அவ்வாநந்தத்திலேயே நிலைத்திருக்கின்றது; ஆநந்தத்திலேயே ஒடுங்குகின்றது.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார்:—

इति उक्तानंदात् कथं पृथक् ॥

(சு-ம்.)

இவ்வாறு கூறப்பட்ட ஆநந்தத்தினும் ஜகத்து எப்படி வேறும்? எவ்விதத்தாலும் வேறன்று.

(வி-ம்.)

இங்கு இவ்வநுமானம் சூசிப்பிக்கப்பட்டிருக்கின்றது:—விவாதத்திற்கு விஷயமான ஜகத்து ஆநந்தத்தினும் வேறன்று; அவ்வாநந்தத்தின் காரியமாதலால்; எது எதன் காரியமோ அது அதனினும் வேறன்று, மண்ணின் காரியமான கடாதிகள் மண்ணினும் வேறாகாததுபோல. (௩)

௩. குலாலனைவிட வேறான கடத்தினைப்போல ஆநந்தத்தினைவிட ஜகத்து வேறாகாமை.

[கஅஎ0] कूलालाद्धट उत्पन्नो भिन्नश्चेति न शंक्यताम् ।
मृद्वदेष उपादानं निमित्तं न कुलालवत् ॥ ४ ॥

(அ-கை.)

அப்படியானால் குலாலனினின்றும் உற்பத்தியான கடத்தினை அக்குலாலவடிவ காரணத்தைவிட வேறாகக் காணுதலால் "காரியமாயிருத்தலால்" என்னும் மூன்றாவது சுலோகத்தில் கூறிய ஏதுவிற்கு வியபிசாரித்தன்மையிருக்கின்றது, என்று ஆசங்கித்து, குலாலன் கடத்தின் நிமித்தகாரணமாயிருத்தலாலும் இங்குச் சுருதியில் ஆநந்தத்திற்கு உபாதானத்தன்மையினைக் கூறுதலாலும் ஏதுவின் வியபிசாரித்தன்மை பொருந்தாது என்று கூறுகின்றார்:—

"कुलालात् घटः उत्पन्नः च भिन्नः" इति न शंक्यतां । एषः मृद्वत् उपादानं कुलालवत् निमित्तं न ॥

(சு-ம்.)

குலாலனினின்றும் கடமுண்டாயிற்று, குலாலனைவிட வேறாயிருக்கின்றது என்றுசங்கித்தல் கூடாது; ஏனெனின் அவ்வாத்மாநந்தம் மிருத்திகையினைப்போல உபாதானமாம்; குலாலனைப்போல நிமித்தமன்று.

(வி-ம்.)

இவ்வாத்மாநந்தம் கடத்தின் உபாதானமாகிய மண்ணினைப்போல ஜகத்தின் உபாதானகாரணமாம்; கடத்தின் நிமித்தமான குலாலனைப்போல ஜகத்தின் நிமித்தகாரணமாகாது. (௪)

ச. குலாலன் கடத்திற்கு உபாதானமாதலை நிஷேதித்தலும், மிருத்திகைக்குக் கடத்தின் உபாதானத்தன்மையும், எதுவோடு எடுத்துக்கொண்ட விஷயமும்.

[கஙஎக] स्थितिर्लयश्च कुंभस्य कुलाले स्तो न हि क्वचित् ।
दृष्टौ तौ मृदि तद्वत्स्यादुपादानं तयोः श्रुतेः ॥ ५ ॥

(அ-கை.)

அப்படியானல் குலாலனுக்கும் கடத்தின் உபாதானத்தன்மை ஏதனு லில்லையென்று ஆசங்கித்து, ஸ்திதி லயங்களுக்கு ஆதாரமாதல்வடிவ உபாதானத்தின் லக்ஷண மின்மையால் குலாலனுக்குக் கடத்திற் குபாதானமாதல் இல்லை யென்று கூறுகின்றார்:—

हि कुंभस्य स्थितिः च लयः कुलाले क्वचित् न स्तः ॥

(சு-ம்.)

ஏதனல் கடத்தின் ஸ்திதியும் லயமும் குலாலனிடத்து ஓரிடத்தும் உண்டாகிறதில்லையோ, அதனல்.

(வி-ம்.)

எக்காரணத்தால் கடத்தின் ஸ்திதியும் லயமும் குலாலவடிவ ஆதார முடையன வாகிறதில்லையோ, அதனல் குலாலனுக்குக் கடத்தின் உபாதானத்தன்மை யில்லை.

(அ-கை.)

அப்போது அந்தக் கடத்தின் ஸ்திதியும் லயமும் எங்குண்டாகின்றன வெனக் கூறுகின்றார்:—

तौ मृदि दृष्टौ ॥

(சு-ம்.)

அவ்விரண்டும் மண்ணினிடத்துக் காணப்படுகின்றன.

(வி-ம்.)

அந்தக் கடத்தின் ஸ்திதியும் லயமும் அக்கடத்தின் உபாதானவடிவ மண்ணினிடத்திலேயே காணப்படுகின்றன அதாவது பிரத்தியக்ஷமாய் அறியப்படுகின்றன.

(அ-கை.)

அங்குக் கடத்தில் இப்படி மிருத்திகையின் உபாதானத்தன்மை இருக்குக. இதனல் எடுத்துக்கொண்ட ஜகத்தின் காரணமாகிய ஆநந்தத்தில் என்ன வந்தது? எனக் கூறுகின்றார்:—

तद्वत् उपादान स्यात् ॥

(அ-ம்.)

அதனைப்போல உபாதானமிருக்கின்றது.

(வி-ம்.)

எப்படிக் கடத்திற்கு மண் உபாதானமோ அப்படி ஜகத்திற்கும் ஆநந்தம் உபாதானமாகின்றது.

(அ-கை.)

ஜகத்திற்கு ஆநந்தம் உபாதானமென்பதில் காரணத்தைக் கூறுகின்றார் :—

तयोः श्रुतेः ॥

(க-ம்.)

அவை கேட்கப்படுதலால்.

(வி-ம்.)

அந்த ஜகத்தின் ஸ்திதியும் லயமும் "आनदाद्ध्येव इमानिभूतानि जायन्ते ஆநந்தத்தினின்றே இந்தப் பூதங்கள் உண்டாயின." என்னும் வாக்கியத்தில், ஆநந்தவடிவ ஏதுவுடைமை கேட்கப்படுதலால் ஜகத்திற்கு ஆநந்தம் உபாதானமாம் என்பது பொருள். (ரு)

௬. உபாதானத்தின் மூன்று பேதத்தை முன்னிட்ட இரண்டன் அவகாசமின்மை.

[கஙஎஉ] उपादानं त्रिधा भिन्नं विवर्ति परिणामि च ।
आरंभकं च तत्रांत्यौ न निरंशेऽवकाशिनौ ॥ ६ ॥

(அ-கை.)

ஆநந்தத்திற்குச் சித்தாந்தியாகிய தம்மால் அங்கீகரிக்கப்பட்ட ஜகத்தின் உபாதானத்தன்மை யாதோ அதனைச் சொல்லுதற்பொருட்டு அவ்வுபாதானத்தின் இடைப்பட்ட பேதத்தைக் கூறுகின்றார் :—

विवर्ति च परिणामि च आरंभकं उपादानं त्रिधा भिन्नं ॥

(க-ம்.)

விவர்த்தி, பரிணாமி, ஆரம்பகமென்று உபாதானம் மதபேதத்தால் மூன்றுவகையாக வேறுபட்டிருக்கின்றது.

(அ-கை.)

அந்த மூன்று பக்ஷங்களில் விவர்த்தபக்ஷத்தினை மிஞ்சவைத்தற்கு மற்றைய இரண்டு பக்ஷங்களையும் தூஷிக்கின்றார் :—

तत्र अंत्यौ निरंशे न अवकाशिनौ ॥

(க-ம்.)

அவற்றில் கடைசியான இரண்டு பக்ஷங்களும் நிரம்சமாகிய அவயவ மின்றியதில் அவகாசமுடையவன்று.

(வி-ம்.)

அம்முன்றுபக்ஷங்களில் கடைசியான ஆரம்ப பரிணாமபக்ஷங்க ளெவை யோ, அவை * ௧. நிரவயவ வஸ்துவாகிய ஆநந்தத்தில் அவகாசமுடையன வாகா. (௬)

௬. ஆரம்பவாதியினது மதத்தின் அநுவாதம்.

[௧௩௭௩] आरंभवादिनोऽन्यस्मादन्यस्योत्पत्तिमूचिरे ।
तंतोः पटस्य निष्पत्तेर्भिन्नौ तंतुपटौ खलु ॥ ७ ॥

(அ-கை.)

அவ்வாரம்பம் பரிணாமம் என்னும் இரண்டு பக்ஷங்களின் அவகாச மின்மையினையே காட்டுதற்கு முதலில் ஆரம்பவாதியின் மதத்தினை அநு வாதஞ்செய்கின்றார் :—

आरंभवादिनः अन्यस्मात् अन्यस्य उत्पत्तिं ऊचिरे ॥

(க-ம்.)

ஆரம்பவாதி எவர்களோ அவர்கள் ஒன்றினின்றும் மற்றொன்றன் உற் பத்தியைச் சொன்னார்கள்.

---

* ௧. (க) உபாதானத்தினது அவயவங்களினது சம்பந்தமுதலியவற்றால் அத னின் வேறாய காரியத்தின் உற்பத்தி **ஆரம்ப** மெனப்படுகின்றது. அது பரமாணுக் கள் கபாலங்கள் என்பவற்றின் சையோகமுதலியவற்றால் கடத்தின் உற்பத்தியாவது போலவாம்.

(உ) உபாதானத்தினது அவயவங்களின் வேற்றுத்தன்மை அதாவது அவை வேறு விதமாக ஆகுதல் **பரிணாம** மெனப்படும். அது தடாகமுதலியவற்றின் ஜலம் வேற்றுத் தன்மையாக அதாவது பிரவாகவடிவமாதலும் பால் வேற்றுத்தன்மையாக அதாவது தயிர்வடிவமாக ஆகுதலும் போலவாம்.

முற்கூறிய லக்ஷணமுடைய ஆரம்பமும் பரிணாமமும் சாவயவவடிவ உபாதானத் திற்குச் சம்பவிக்கும். நிரவயவமாகிய ஜகத்தின் உபாதானமான ஆநந்தத்திற்குச் சம்ப வியா; ஏனெனின், சம்பந்தமுதலியவற்றிலும் வேற்றுத்தன்மையிலும் அபேக்ஷிக்கப்பட்ட அவயவங்க ளில்லாமையால். ஆனால் ஆகாயத்தினைப்போல நிரவயவ ஆநந்தத்தின் விவர்த்தவடிவமாக ஜகத்து சம்பவிக்கின்றது.

(ங) அதிஷ்டானத்தினும் விஷமசத்தையுடைய அதிஷ்டானத்தின் வேற்றுத் தன்மை யாதோ அது **விவர்த்த** மெனப்படும். அது பழுதையின் விவர்த்தமான பாம் பும், ஆகாயத்தின் விவர்த்தமான நீலத்தன்மைமுதலியனவும் போலவாம்.

ஆரம்பம், பரிணாமம், விவர்த்தம் என்பவற்றின் வர்ணனத்தை இப்பிரகரணத்தின் ௭-ம் ௯-ம் ௪௯—௫௩-ம் ௫௯-ம் சுலோகங்களிற் காண்க.

(வி-ம்.)

ஆரம்பவாதிகளாகிய வைசேஷிகர்முதலியோர் எவர்களோ அவர்கள் அந்நியத்தினின்றும் அதாவது காரியத்தின் அபேக்ஷையால் வேறான காரணத்தினின்றும் அந்நியத்தின் அதாவது காரணத்தின் அபேக்ஷையால் வேறான காரியத்தின் உற்பத்தியைச் சொன்னார்கள்.

(அ-கை.)

வைசேஷிகர்முதலியோர் இவ்வாறு எதனால் சொல்லுகிறார்களெனக் கூறுகின்றார்:—

तंतोः पटस्य निष्पत्तेः ॥

(சு-ம்.)

தந்துவாகிய நூலினின்றும் படத்தின் உற்பத்தி இங்குக் காணப்படுதலால்.

(வி-ம்.)

இங்குக் காணப்படுதலால் என்பது சொல்லெச்சம்.

(அ-கை.)

இவ்வளவினால் அதாவது தந்துவினின்றும் படத்தின்உற்பத்தி காணப்படுதலால் காரிய காரணங்களினது பேதத்தின் சித்தி எப்படி யுண்டாகுமெனக் கூறுகின்றார்:—

खलु तंतुपटौ भिन्नौ ॥

(சு-ம்.)

நிச்சயமாகத் தந்துவும் வஸ்திரமும் பின்னமாம்.

(வி-ம்.)

பின்னபரிணாமமுடையனவா யிருத்தலாலும், பின்ன அர்த்தக்கிரியை யுடையனவாய் அதாவது பிரயோஜன நிமித்தமான பிரவிருத்தி யுடையனவாயிருத்தலாலும் தந்துவும் படமும் பின்னமாம் என்பது தாற்பரியம்.(எ)

அ. பரிணாமத்தின் சொரூபம்.

[கஅ௭௪] अवस्थांतरतापत्तिरेकस्य परिणामिता ।
स्यात्क्षीरं दधि मृत्कुंभः सुवर्णं कुंडलं यथा ॥ ८ ॥

(அ-கை.)

பரிணாமத்தின் சொரூபத்தினைக் கூறுகின்றார்:—

एकस्य अवस्थांतरतापत्तिः परिणामिता ॥

(சு-ம்.)

ஒன்றற்கு வேறு அவஸ்தைத்தன்மையின் அடைவு பரிணாமித்தன்மையாம்.

(வி-ம்.)

ஒரே வஸ்துவிற்கு முன்னிலையை விடுதல்பூர்வகமான வேறு அவஸ்தையின் அடைவு பரிணாம மெனப்படு மென்பது பொருள்.

(அ-கை.)

அந்தப் பரிணாமத்தினை உதகரிக்கின்றார் :—

यथा क्षीरं दधि मृत् कुंभः सुवर्णं कुंडलं स्यात् ॥

(சு-ம்.)

எப்படிப் பால் தயிராகின்றதோ, மண் கடவடிவ மாகின்றதோ, பொன் குண்டல மாகின்றதோ.

(வி-ம்.)

எப்படிப் பால், மண், பொன்முதலியவற்றிற்குப் பால்முதலிய விவகாரத்திற்குரிய தன்மையினை விட்டுத் தயிர்முதலிய வியவகாரத்திற்குரிய தன்மையின் அடைவு பரிணாம மாகின்றதோ அதுபோல. (அ)

அ. விவர்த்தத்தின் லக்ஷணமும், நிரம்சத்தில் அதன் சம்பவமும்.

[கஙஎரு] अवस्थांतरभानं तु विवर्तो रज्जुसर्पवत् ।
निरंशेऽप्यस्त्यसौ व्योम्नि तलमालिन्यकल्पनात् ॥ ९ ॥

(அ-கை.)

இப்போது விவர்த்தத்தின் லக்ஷணத்தைக் கூறுகின்றார் :—

अवस्थांतरभानं तु विवर्तः ॥

(சு-ம்.)

வேறு அவஸ்தைத்தோற்றமோ விவர்த்தமாம்.

(வி-ம்.)

மூலத்திலுள்ள ஓ என்னும் சொல்லிற்குப் பரியாயமான तु (து) சப்தம் எதுவோ அது, இந்த விவர்த்தம் முந்திய இரண்டு பக்ஷங்களினின்றும் விலக்ஷணமாதலை அறிவித்தற்பொருட்டாம். பூர்வ அவஸ்தையினை விடாமலே வேறு அவஸ்தை தோற்றுதல் விவர்த்தமாம்.

(அ-கை.)

அந்த விவர்த்தத்திற்கு உதாகரணம் கொடுக்கின்றார் :—

रज्जुसर्पवत् ॥

(சு-ம்.)

இரஜ்ஜுசர்ப்பத்தினைப்போல.

(வி-ம்.)

அது இரஜ்ஜுவடிவமாக நிலைத்துள்ள வஸ்துவிற்கே சர்ப்பரூபமான தோற்றம் விவர்த்தமாவது போலவாம்.

(அ-கை.)

அப்படியானல் விவர்த்தவடிவமான இரஜ்ஜுமுதலியவற்றிற்குச் சாவயவத்தன்மை காணப்படுதலால் நிரவயவத்தில் அந்த விவர்த்தமும் பொருந்தா தென்று ஆசங்கித்து, நிரவயவ ஆகாயமுதலியவற்றிலும் அந்த விவர்த்தம் காணப்படுதலால் நிரம்சத்தில் அது நிகழா தென்று கூறுதல் பொருந்தா தென்று கூறுகின்றார் :—

असौ निरंशे अपि अस्ति व्योम्नितलमालिन्यकल्पनात् ॥

(சு-ம்.)

இந்த விவர்த்தம் நிரம்சத்திலு மிருக்கின்றது; ஆகாயத்தில் தலத்தன்மையும் மலினத்தன்மையும் கற்பிக்கப்படுதலால்.

(வி-ம்.)

ஆகாயத்தில் தலத்தன்மையும் அதாவது கீழ்நோக்கான நீலவர்ணமுடைய கொப்பரைக்குச் சமானமான தன்மையும், மலினத்தன்மையும் அதாவது கருமையுமாகிய அவ்விரண்டன் கற்பனத்தால் அதாவது அவை ஆகாயத்தின் சொரூபத்தை அறியாத புருஷனுல் ஆரோபிக்கப்படுவனவா யிருத்தலால் இந்த விவர்த்தம் நிரம்சத்திலும் பொருந்தும் என்பது பொருள் (கூ)

கூ. நிரம்ச ஆநந்தத்தில் ஜகத்தின் கற்பிதத்தன்மைவடிவ பலிதமும், உதாகரணத்தோடு கற்பனைக்குக் காரணமான சக்தியினைக் கூறுதலும்.

[கக௭௬] ततो निरंशे आनंदे विवर्तो जगदिष्यताम् ।
मायाशक्तिः कल्पिका स्यादैंद्रजालिकशक्तिवत् ॥ १० ॥

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார் :—

ततः जगत् निरंशे आनंदे विवर्तः इष्यताम् ॥

(சு-ம்.)

அதனால் நிரம்ச ஆநந்தத்தில் ஜகத்தை விவர்த்தமாக அங்கீகரிக்க வேண்டும்.

(வி-ம்.)

அதனால் நிரம்சத்திலும் விவர்த்தம் சம்பவித்தலால் ஜகத்தானது நிரம்சமாகிய ஆநந்தத்தில் விவர்த்தம் அதாவது கற்பிதம் என்று அங்கீகரிக்கத்தக்கதா மென்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் அத்விதீய ஆநந்தத்தில் ஜகத்தின் கற்பனை பொருந்தாது; ஏனெனின் கற்பனையின் காரண மில்லாமையால் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

मायाशक्तिः कल्पिका स्यात् ॥

(சு-ம்.)

மாயாசக்தி கற்பனைக்குக் காரண மாகின்றது.

(அ-கை.)

சக்தியின் கற்பனைக்குக் காரணமாந்தன்மையினை எங்குக் கண்டாய் எனக் கூறுகின்றார்:—

ऐंद्रजालिकशक्तिवत् ॥

(சு-ம்.)

இந்திரஜாலிகனுடைய சக்தியினைப்போல.

(வி-ம்.)

இந்திரஜாலத்தினை யறியும் புருஷனிடத்துள்ள மணிமந்திராதிவடிவ மாயாசக்திக்குக் கந்தர்வநகரமுதலியவற்றினைக் கற்பிக்குந்தன்மை யிருப்பதுபோல என்பது பொருள். (க0)

௨. சேவிலித்தாயின் கதையோடு சக்தியின் அநிர்வசநீயத்தன்மை கரு௭௭-கரு௬௮.

க. இலௌகிகசக்திக்கு சக்தனோடு பேதாபேதமில்லாமை.

[கரு௭௭] शक्तिः शक्तात्पृथङ्नास्तितद्वद्दृष्टेर्न चाभिदा ।
प्रतिबंधस्य दृष्टत्वाच्छक्त्यभावे तु कस्य सः ॥ ११ ॥

(அ-கை.)

அப்படியானல் ஆநந்தவடிவ ஆத்மாவின் அதாவது பிரஹ்மத்தின் வேறன மாயாசக்தியினை அங்கீகரிக்கின், த்வைதத்தின் அடைவுண்டாகுமென்று ஆசங்கித்து, அந்த மாயை அநிர்வசனீய மாகுதலால் மித்தையாகச் சொல்லுதற்குமேல் கஉ௬-வது சுலோகத்தினல் சொல்லப்படும் இலௌகிக அக்கினிமுதலியவற்றின் சக்திக்கு முதலில் கஉஎ—கஉஎ அ-வது சுலோகபரியந்தம் பேதமாகவாவது அபேதமாகவாவது சொல்லக்கூடாத தன்மையினைக் கூறுகின்ருர்:—

शक्तिः शक्तात् पृथक् न ॥

(சு-ம்.)

சக்தி எதுவோ அது சக்தியுடையவனினும் வேறன்று.

(வி-ம்.)

எச்சக்தியானது அக்கினிமுதலியவற்றி லிருந்துகொண்டு பொறிமுதலியவற்றை யுண்டுபண்ணுவதா யிருக்கின்றதோ, அது சக்தமாகிய அதாவது சக்தியையுடைய அக்கினிமுதலியவற்றினது சொரூபத்தினும் வேருக இல்லை.

(அ-கை.)

சக்தி சக்தத்தினும் எதனல் வேறன்றெனக் கூறுகின்ருர்:—

तद्वत् दृष्टेः ॥

(சு-ம்.)

அவ்வாறு காணுதலால்.

(வி-ம்.)

அவ்வாறு அதாவது பேதமாக அசத்துத்தன்மையைக் காணுதலால் அதாவது அக்கினிமுதலியவற்றினது சொரூபத்தினும் வேருன சக்தி தோன்ருமையால் என்பது பொருள்.

(அ-கை.)

அக்கினிமுதலிய சக்தியுடையதின் சொரூபமே சக்தியா மென்பதும் இல்லை யென்று கூறுகின்ருர்:—

अभिधा न च ॥

(சு-ம்.)

அபேதமும் இல்லை.

(வி-ம்.)

சக்திக்குச் சக்தத்திலும் பேதமில்லாமையு மில்லை.

(அ-கை.)

அந்த அபேதத்தின் அபாவத்தில் ஏதுவைக் கூறுகின்றார்:—

प्रतिबंधस्य दृष्टत्वात् ॥

(சு-ம்.)

பிரதிபந்தத்திற்குக் காணப்படுந்தன்மை யிருத்தலால்.

(வி-ம்.)

மணிமந்திரமுதலியவற்றால் சக்தியின் காரியமான பொறிமுதலிய வற்றின் பிரதிபந்தத்தினைக் காணுதலால் அக்கினிமுதலிய சக்தியுடைய தன் சொரூபத்திலும் வேறாகச் சக்தி காணக்கூடியதாம் என்பது தாற்பரியம்.

(அ-கை.)

பிரதிபந்தத்தினைக் காணுதல் இருக்குக; சக்திக்குச் சக்தியுடையதனினும் வேறாந்தன்மை இல்லாதிருக்குக. இதில் தோஷம் யாதெனக் கூறுகின்றார்:—

शक्त्यभावे तु सः कस्य ॥

(சு-ம்.)

சக்தியின் அபாவ முளபோது அந்தப் பிரதிபந்தம் எதனுடையதாம்.

(வி-ம்.)

பிரத்தியக்ஷப்பிரமாணத்தினால் சித்தித்துள்ள அக்கினிமுதலியவற்றின் சொரூபம் எதுவோ, அதன் நாசவடிவ அல்லது திரோதானவடிவ பிரதிபந்தத்தின் அசம்பவ மிருக்கின்றது. ஆகலால் அந்த அக்கினிமுதலியவற்றினது சொரூபத்திலும் வேறான சக்தியினை அங்கீகரியாதபோது பிரதிபந்தமும் நிர்விஷயமாகும் அது அநிஷ்டமாம் அதாவது விரும்பப்பட்டதன்று. ஆதலால் சக்தியுடையதினும் வேறாகப் பிரதிபந்தத்திற்கு விஷயமாகும் சக்தி ஒப்பவேண்டியதா மென்பது அபிப்பிராயம். (கக)

உ. திருஷ்டாந்தத்தோடு சக்தியினது பிரதிபந்தத்தின் ஞானத்தின் உபாயம்.

[கஙஎஅ] शक्तेः कार्यानुमेयत्वादकार्ये प्रतिबंधनम् ।
ज्वलतोऽग्नेरदाहे स्यान्मंत्रादिप्रतिबंधता ॥ १२ ॥

(அ-கை.)

அப்படியானல் இந்திரிய அகோசரசக்தியின் பிரதிபந்தம் எப்படி அறியக்கூடியதா மென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

शक्तेः कार्यानुमेयत्वात् अकार्ये प्रतिबंधनम् ॥

(சு-ம்.)

சக்தி காரியத்தினல் அநுமிக்கத்தக்கதா யிருத்தலின் காரியம் நிகழாத போது பிரதிபந்தம் அறியப்படுகின்றது.

(வி-ம்)

இந்திரியங்களுக்கு விஷயமாகாததாயினும் சக்தி எதனல் அறியத் தக்கதாயிருக்கின்றதோ, அதனல் காரணத்தில் காரிய முண்டாகாதபோது பிரதிபந்தம் அறியப்படுகின்றது.

(அ-கை.)

முற்கூறிய அர்த்தத்தினைத் திருஷ்டாந்தத்தினைக் காட்டுதலால் விளக்குகின்றார்.—

ज्वलतः अग्नेः अदाहे मंत्रादिप्रतिबंधता स्यात् ॥

(சு-ம்.)

சொலிக்கின்ற அக்கினியினல் தாகம் அதாவது எரிதல் உண்டாகாத போது மந்திரமுதலியவற்றிற்குப் பிரதிபந்திக்குந்தன்மை நிகழுகின்றது.

(வி-ம்.)

உலகத்தில் சொரூபமாகக் கொழுந்துவிட்டெரியும் அக்கினியினல் தாகமுதலியவடிவ காரிய முண்டாகாதபோது மந்திராதிகளுக்குச் சக்தியினைப் பிரதிபந்திக்குந்தன்மை யுளதாகின்றது என்பது பொருள். (௧௨)

௩. மாயாசக்தியின் இருப்பில் சுவேதாசுவதரசுருதிவாக்கியம்.

[௧௩௭௯] देवात्मशक्तिं स्वगुणैर्निगूढां मुनयोऽविदन् ।
पराऽस्य शक्तिर्विविधा क्रियाज्ञानबलात्मिका ॥ १३ ॥

(அ-கை.)

இப்படி இலௌகிகசக்தியினைச் சொரூபமாகவும் பிரமாணமாகவும் கூறி, இப்போது மாயையின் இருப்பில் " ते ध्यानयोगानुगता अपश्यन् देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम् ॥ அந்த முனிவர் தியானயோகத்தினை யடைந்து, தமது காரிய

வடிவ குணங்களால் மறைபட்ட தேவாத்மாவின் சக்தியினைக் கண்டார்" என்னும் சுவேதாசுவதரவுபநிஷதத்தின் வாக்கியத்தினை அர்த்தத்தினால் படிக்கின்றார்:—

मुनयः देवात्मशक्तिं स्वगुणैः निगूढां अविदन् ॥

(சு-ம்.)

முநிவர் தமது குணங்களால் மறைபட்ட தேவாத்மசக்தியை அறிந்தார்.

(வி-ம்.)

முநிவர் அதாவது காலசுபாவமுதலிய * உ. காரணவாதங்களில் * ௩. தோஷத்தைக் காண்பவராய் ஜகத்காரணத்தினை அறியும் இச்சையி

* உ. (க) அசத்காரணவாதிகள் ஜகத்தினை அகாரண மென்று கூறுகின்றனர்.

(உ) அல்லது சிலர் ஜகத்தின் அபாவத்தினைக் காரண மென்கின்றனர்.

(௩) அல்லது சிலர் சூநியத்தினைக் காரண மென்கின்றனர்.

(௪) நையாயிகர்முதலியோர் பரமாணுமுதலியவற்றைக் காரண மென்கின்றனர்.

(௫) ஜோதிடர் காலத்தினைக் காரண மென்கின்றனர்.

(௬) சார்வாகர் சுபாவத்தினைக் காரண மென்கின்றனர்.

(௭) மீமாம்சகர் நியதியாகிய அதிருஷ்டத்தினைக் காரண மென்கின்றனர்.

(௮) பிரத்தியக்ஷவாதிகள் நேர்ந்ததைக் காரண மென்பர்.

(௯) பிரத்தியக்ஷப்பிரமாணவாதிகள் பிருதிவிமுதலிய பஞ்சபூதங்களைக் காரண மென்கின்றனர்.

(க0) சாங்கியமதஸ்தர் மூன்றுகுணங்களின் சாமியாவஸ்தைவடிவப் பிரகிருதியைக் காரண மென்பர்.

(கக) யோகிகள் ஹிரணியகர்ப்பமுதலியவடிவ அநங்கபுருஷனைக்காரண மென்பர்.

(கஉ) சிலர் காலமுதலியவற்றின் சையோகத்தைக் காரண மென்கின்றனர்.

(க௩) சிலர் பிரதிபிம்பவடிவ பரிணாமிபுருஷனைக் காரண மென்கின்றனர்.

(க௪) பிரஹ்மவாதியராகிய வேதாந்திகள் உபநிஷதங்களை யநுசரித்துப் பிரஹ்மத்தினை ஜகத்தின் காரண மென்கின்றனர்.

இவைமுதலிய அநேகவிதமான காரணவாதங்க ளிருக்கின்றன.

* ௩. காரணவாதங்களில் இந்தத் தோஷ மிருக்கின்றது:—

(க) "ஜகத்திற்கு ஒரு காரணமு மில்லை; ஆனால் காரணமின்றியே ஜகத்துண்டாகின்றது." என்னும் பக்ஷத்தில் சகலகடாதிகாரியங்களின் காரணம் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றது. ஆதலால் அதில் திருஷ்டவிரோதம் அதாவது பிரத்தியக்ஷவிரோதம் என்னும் தோஷ மிருக்கின்றது.

(உ) "ஜகத்தின் காரணம் அபாவமாம்" என்னும் பக்ஷத்தில் மலடிமைந்தனைப்போல அசத்துவடிவ அபாவத்தினின்றும் பாவவடிவ ஜகத்தின் உற்பத்தியை யங்கீகரித்தலிலும் திருஷ்டவிரோதவடிவ தோஷமே யுண்டாகின்றது.

(௩) "சூநியமே ஜகத்திற்குக் காரணமாம்," என்னும் பக்ஷத்தில் ஆகாசத்தில் புஷ்பவனமும் விதைக்காத வித்தினின்றும் தானியமுண்டாதலும்போல அசம்பவவடிவதோஷ மிருக்கின்றது.

(௪) "பரமாணு காரணம்." என்னும் பக்ஷத்தில் நிரவயவமும் ஜடமுமாகிய பரமாணுக்களின் சையோகமுதலியவற்றின் அசம்பவவடிவ தோஷ மிருக்கின்றது.

னால் * ௪. தியானயோகத்தினைக் குறித்து நிலைத்துள்ள அதிகாரியானவர் தெய்வமாகிய அதாவது சொப்பிரகாச சிதாத்மாவாகிய பிரத்தியகபின்ன பிரஹ்மம் எதுவோ அதன் தனது ஆவரணவிக்ஷேபவடிவ அல்லது காரிய

---

(௫) "காலமே காரணம்" என்னும் பக்ஷத்தில் காலமிருக்கும்போதும் எல்லாக் காரியங்களின் உற்பத்தியும் எப்போது முண்டாகிறதில்லை. ஆதலால் அகாரணத் தன்மையின் அடைவுவடிவ தோஷ மிருக்கின்றது.

(௬) "சுபாவம் காரணம்" என்னும் பக்ஷத்தில் மலடிமுதலியோரிடத்துக் கர்ப்பமுதலிய காரியத்தினை யுண்டுபண்ணும் வீரியமுதலியவற்றினது சுபாவம் கெடுதலால் வியபிசாரவடிவ தோஷ மிருக்கின்றது. (வியபிசாரம்—பிறழ்ச்சி.)

(௭) "புண்ணியபாபவடிவ அதிருஷ்டம் காரணம் என்னும் பக்ஷத்தில் இக்காரணத்தினின்றும் இக்காரியம் உண்டாகும்; இதனினின்றும் உண்டாகாது என்னும் அந்வயவியதிரேகத்தின் வியபிசாரவடிவ தோஷ மிருக்கின்றது.

(௮) "காகதாலீயநியாயம்போல நேர்ந்தது காரணம்" என்னும் பக்ஷத்தில் பிருதிவிமுதலிய பூதவடிவதர்மிகளின்றிக் கேவலம் நேர்தல்வடிவ தர்மத்திற்குக் காரணத்தன்மை அசம்பவவடிவதோஷ மிருக்கின்றது.

(௯) "பிருதிவிமுதலியபூதம் காரணம்" என்னும் பக்ஷத்தில் கடமுதலியவற்றினைப்போல ஜடமும் சாவயவமுமாகிய பூதங்களுக்கு அந்நியகாரணம் வேண்டியிருத்தலால் காரணத்தன்மையின் அசம்பவவடிவ தோஷ மிருக்கின்றது.

(௧௦) "பிரகிருதி காரணம்" என்னும் பக்ஷத்தில் கடத்தினைப்போல ஜடப்பிரகிருதிக்குக் காரியத்தில் தானே பிரவிருத்தித்தலின் அசம்பவவடிவ தோஷ மிருக்கின்றது.

(௧௧) "புருஷன் காரணம்" என்னும் பக்ஷத்தில் அசங்கமும் நிர்க்குணமுமாயிருத்தலின் வியாபாரமின்றிய அந்தப் புருஷனுக்குக் காரணத்தன்மையின் அயோக்கியத்தன்மைவடிவ தோஷ மிருக்கின்றது.

(௧௨) "அவற்றின் சையோகம் காரணம்" என்னும் பக்ஷத்தில் அது ஜடமாயிருத்தலால் அதற்கு அந்நியத்தின் அபேக்ஷைவடிவ தோஷ மிருக்கின்றது.

(௧௩) "பரிணாமிபுருஷன் காரணம்" என்னும் பக்ஷத்தில் அந்த ஜீவனுக்குச் சுகப்பிராப்தி துக்கநிவிருத்தியின் சாமர்த்திய மின்மையால் காரணமாதலின் அயோக்கியத்தன்மைவடிவ தோஷ மிருக்கின்றது.

(௧௪) "சுத்த அதாவது மாயாசக்தியின்றிய பிரஹ்மம் காரணம்" என்னும் பக்ஷத்தில் பிரஹ்மத்தின் நிர்விகாரித்தன்மை அசங்கத்தன்மை நிரவயவத்தன்மை முதலிய விசேஷணங்களின் பங்கவடிவ தோஷ மிருக்கின்றது.

இவ்வாறு அந்நியகாரண வாதங்களில் தோஷ மிருக்கின்றது. ஆதலால் மாயாவிசிஷ்ட பிரஹ்மமே ஜகத்தின் காரணமாம் என்னும் பக்ஷம் தோஷமின்றியதாம்.

* ௪. சுருதிவாக்கியத்தினால் பிரஹ்மத்தின் காரணத்தன்மையினை யறிந்தும், அதில் சம்பவத்தை யறிய இச்சித்தவராய், கூறிய முற்பக்ஷங்களில் தோஷத்தைக் கண்டு சுருதிக்கநுகூலமா யிருத்தலால் சித்தாந்தவடிவமும் குருவினாலும் வேதத்தினாலும் உபதேசிக்கப்பட்ட கேவலப்பிரஹ்மவடிவ அர்த்தத்தில் சமானவடிவ சித்தவிருத்தியின் பிரவாகவடிவ தியானத்தினை யோகசாஸ்திரத்தினை யநுசரித்துச் செய்தார்.

வடிவ ஸ்தூலஸூக்ஷ்மசரீரமாகிய குணங்களால் பிரந்தரம் மறைப்பட்ட சத்தி எதுவோ அதனைச் சாக்ஷாத்கரித்தார் என்பது பொருள்.

(அ-கை.)

அதே சுவேதாசுவதரவுபநிஷத்திலுள்ள "पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च ॥ இந்தப் பிரஹ்மத்தின் பர(மேலான)சத்தி பலவகையாகவே கேட்கப்படுன்றது. அது சுபாவிகமும் ஞானபலக்கிரியா வடிவமுமாம்." என்பது வேறு வாக்கியமாம். அதனை அர்த்தத்தினாற் படிக்கின்றார்:—

अस्य परा शक्तिः विविधा ॥

(சு-ம்.)

இந்தப் பிரஹ்மத்தின் பரசத்தி நாநாவிதமாகக் கேட்கப்படுகின்றது.

(வி-ம்.)

இந்தப் பிரஹ்மத்தின் பரசத்தி அதாவது ஜகத்தின் காரணவடிவ மேலானசத்தி பலவகையாகக் கேட்கப்படுகின்றது.

(அ-கை.)

பல்வகையாதலையே கூறுகின்றார்:—

क्रियाज्ञानबलात्मिका ॥

(சு-ம்.)

அந்தச் சத்தி கிரியை ஞானம் பலம் என்னும் வடிவினதாம்.

(வி-ம்.)

கிரியை என்பது தொழில். ஞானம் என்பது அறிவு. பலம் என்பது இச்சாசத்திக்காம்; ஏனெனின், இச்சாசத்தி ஞானசத்திகிரியாசத்திகளுக்குச் சகாயமுள்ளதாய்க் கூடவிருப்பதா யிருத்தலின். கிரியைமுதலிய சத்திகள் எதற்குச் சொரூபமா யிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட பரமேசுவரனது சத்தி எதுவோ, அது கிரியை ஞானம் பலம் என்னும் வடிவமாகச் * ரு. சொல்லப்படுகின்றது. (கரு)

---

* ரு. கிரியாசத்தி தமோகுணப்பிரதானம். ஞானசத்தி சத்துவகுணப்பிரதானம். இச்சாசத்தி இரஜோகுணப்பிரதானம். எப்படிப் புத்திரனையுடைய இரண்டு பிராதாக்களின் புத்திரர்களை புத்திரர்களில்லாத மூன்றாவது பிராதா விளையாடச் செய்கிறானோ, அதுபோலக் காரியத்தோடுகூடிய சத்துவகுண தமோகுணங்களுக்கு ரஜோகுணம் சககாரியாம். ஆதலால் இச்சாசத்தியினைப் பலவடிவமாகக் கூறினார். இம்மூன்று சத்திகளோடுகூடியது மாயாசக்தியாம்.

ச. ககஎகூ-ல் கூறிய வாக்கியம் வேதவடிவமாதலும் மாயாசக்தியில் வாசிஷ்டகிரந்தத்தின் சம்மதியும்.

[கஈ-அ0] इति वेदवचः प्राह वसिष्ठश्च तथाब्रवीत् ।
सर्वशक्ति परं ब्रह्म नित्यमापूर्णमद्वयम् ॥ १४ ॥

(அ-கை.)

இந்த கஈஎகூ-வது சுலோகத்தில் கூறிய இரண்டு வாக்கியங்களும் எங்குள்ளன வெனக் கூறுகின்றார் :—

इति वेदवचः प्राह ॥

(சு-ம்.)

இவ்வாறு அதாவது கஈஎகூ-வது சுலோகத்திற்சொன்னபடி இருக்கு வேதத்தினது சுவேதாசுவதரவுபநிஷத்துவடிவ வேதவாக்கியம் சொல்லுகின்றது.

(அ-கை.)

மாயாசக்தி சுருதிமாத்திரத்திற் பிரசித்தமென்பது இல்லை. ஆனால் வாசிஷ்டவடிவஸ்மிருதியிலும் பிரசித்தமென்று கூறுகின்றார்:—

तथा वसिष्ठः च अब्रवीत् ॥

(சு-ம்.)

அவ்வாறு வசிஷ்டரும் சொன்னார்.

(வி-ம்.)

எப்படிச் சுருதி விசித்திரமான மாயாசக்தியைக் கூறிற்றோ, அப்படியே வசிஷ்டமுநிவரும் வாசிஷ்ட மென்னும் நூலிற் கூறியிருக்கின்றனர்.

(அ-கை.)

மாயையினைக் கூறும் வாசிஷ்டகிரந்தத்தின் சுலோகங்களையே படிக்கின்றார் :—

परं ब्रह्म नित्यं आपूर्णं अद्वयं सर्वशक्ति ॥

(சு-ம்.)

பரப்பிரஹ்மம் எதுவோ அது நித்தியமும், நாற்புறமும் பூர்ணமும், அத்வயமும், சர்வசக்தியுடையதுமாம்.

(வி-ம்.)

" नित्यमापूर्णमद्वयम ॥ நித்தியமும் பரிபூரணமும் அத்வைதமுமானது" என்று பிரஹ்மத்தின் பாரமார்த்திகஸ்வரூபம் சொல்லப்பட்டது. " सर्वशक्ति சர்வசக்தியுடையதாம் " என்பது அந்த பிரஹ்மத்தின் மாயாதிகஸ்வரூபமாம். (௧)

[கூ-அக] ययोल्लसति शक्त्यासौ प्रकाशमधिगच्छति ।
चिच्छक्तिर्ब्रह्मणो राम शरीरेषूपलभ्यते ॥ १५ ॥

(அ-கை.)

இதுவருமாறு:—

यया शक्त्या उल्लसति असौ प्रकाशं अधिगच्छति ॥

(சு-ம்.)

அது எந்தச் சக்தியினால் விகாசத்தை யடைகின்றதோ அந்தச் சக்தி பிரகாசத்தை யடைகின்றது.

(வி-ம்.)

அந்த கூ-அ0-வது சுலோகத்திற் கூறிய பரப்பிரஹ்மம் எப்போது எப்போது எந்த மாயாசக்தியினால் விகாசத்தை யடைகின்றதோ அதாவது விவர்த்தவடிவ மாகின்றதோ, அப்போது அப்போது அந்தந்தச் சக்தி பிரகாசத்தினை அதாவது அபிவியக்தி யென்னும் காரியவடிவமாக வெளிப்படுதலை யடைகின்றது.

(அ-கை.)

இப்போது அந்த அபிவியக்தியினை வசிஷ்டர் இரண்டு சுலோகங்களால் விரித்துக் கூறுகின்றார்:—

रामः शरीरेषु ब्रह्मणः चिच्छक्तिः उपलभ्यते ॥

(சு-ம்.)

இராமா! சரீரங்களில் பிரஹ்மத்தின் சேதனசக்தி காணப்படுகின்றது.

(வி-ம்)

இராமா! சரீரங்களில் அதாவது தேவதிரியக்கு மனுஷ்யர்முதலிய தேகங்களில் பிரஹ்மத்தினது சேதனத்தன்மையின் வியவகாரஹேது வடிவ சக்தி காணப்படுகின்றது. (௧௫)

[கூ-அ௨] स्पंदशक्तिश्च वातेषु दार्ढ्यशक्तिस्तथोपले ।
द्रवशक्तिस्तथांभःसु दाहशक्तिस्तथानले ॥ १६ ॥

(அ-கை.)

இதுவுமது:—

च वातेषु स्पन्दशक्तिः । तथा उपले दार्ढ्यशक्तिः । तथा अंभःसु द्रवशक्तिः । तथा अनले दाहशक्तिः ॥

(சு-ம்)

*வாயுக்களில் அசைதற்கு ஏதுவான சக்தி பிரகாசத்தை யடைகின்றது. கல்லில் திடத்தன்மைக்குக் காரணமான சக்தி பிரகாசத்தை யடைகின்றது. ஜலத்தில் பிண்டமாக்கு(திரட்டு)வதற்குக் காரணமான திரவசக்தி யிருக்கின்றது. அக்கினியில் சுடுதற்குக் காரணமான சக்தி யிருக்கின்றது.*

(வி-ம்.)

*காற்றில் அசைதற்குக் காரணமான சக்தி பிரகாசத்தினை யடைகின்றது என்று சொல்லுதலால் வெளிப்படாத நிலைமையிலும் பிரஹ்மத்தில் ஜகத்தின் * சு. சத்தை காட்டப்பட்டது.* (௧௬)

* சு. இங்கு இலைது இரகசியம்:— (௧) நித்தியம், (௨) நைமித்திகம், (௩) பிராகிருதிகம், (௪) ஆத்தியந்திகம் என்னும் பேதத்தால் பிரளயம் நாக்குவகைத்தாம்.

(௧) தீபச்சிகையினைப்போல க்ஷணந்தோறும் சகலபதார்த்தங்களுக்கும் உற்பத்திக்குப் பின் எந்த நாச முண்டாகிறதோ, அது நித்தியப்பிரளயமாம். அல்லது சுழுத்தியில் சகலபதார்த்தங்களுக்கும் அவித்தையில் இலய முண்டாகின்றது. அது நித்தியப்பிரளயமாம்.

(௨) ஆயிரம் மகாயுக (சதுர்யுக) அளவுள்ள பிரஹ்மதேவனது பகல் குறையுங்கால் வாய்க்கின்ற ஆயிரயுகங்களின் இரவுவடிவ நிமித்தத்தால் சகலப்பிராணிகளின் சரீரத்தோடு மூன்றுலோகங்களின் நாச முண்டாகின்றது. அது நைமித்திகப்பிரளயமாம்.

(௩) பிரஹ்மாவின் ஆயிரவருஷங்களால் பஞ்சமகாபூதங்கள், அகங்காரம், மகத்தத்துவம் என்பவற்றிற்குத் தமது உபாதானமாகிய பிரகிருதியில் இலய முண்டாகின்றது. அது பிராகிருதிகப்பிரளயமாம்.

(௪) தத்துவஞானத்தினால் காரணசகித சகலப்பிரபஞ்சத்திற்கும் எந்தப் பாதம் உண்டாகின்றதோ, அது ஆத்தியந்திகப்பிரளயமாம். அதனையே ஆத்தியந்திகநிவிருத்தி யென்றும் கூறுவர்.

(௧-௩) முதல் மூன்று பிரளயங்களில் உபாதானத்தோடு காரியத்தின் அபாவ முண்டாகிறதில்லை. ஆனால் உபாதானத்தில் காரியம் சம்ஸ்காரவடிவமாக நிலைக்கின்றது. மறுபடியும் காலாந்தரத்தில் அதன் உற்பத்தி யுண்டாகின்றது. ஆதலால் அஞ்ஞான திருஷ்டியினால் வெளிப்படாத தசையிலாவது வெளிப்பட்ட தசையிலாவது ஜகத்தின் இருப்பிருக்கின்றது.

(௪) நான்காவது பிரளயத்தில் உபாதானத்தோடு காரியத்தின் நாச முண்டாகின்றது. மறுபடியும் அதன் உற்பத்தி யுண்டாகிறதில்லை. ஆதலால் ஞானதிருஷ்டியினால் வெளிப்படாத தசையிலாவது வெளிப்பட்ட தசையிலாவது ஜகத்தின் இருப்பு இல்லை. ஆனால் காரணத்தோடு ஜகத்தின் மூன்றுகாலத்திலும் அத்தியந்தாபாவ மிருக்கின்றது.

[கரு-அரு] शून्यशक्तिस्तथाकाशे नाशशक्तिर्विनाशिनि ।
यथांडेऽतर्महासर्पो जगदस्ति तथात्मनि ॥ १७ ॥

(அ-கை.)

இதுவுமது:—

तथा आकाशे शून्यशक्तिः विनाशिनि नाशशक्तिः ॥

(சு-ம்.)

அப்படியே ஆகாசத்தில் பிருதிவி முதலிய ஜகத்தினது அபாவத்தின் தோற்றத்திற்குக் காரணமான சூந்யசக்தி யிருக்கின்றது. விநாசமுடைய வஸ்துவில் நாசசக்தி யிருக்கின்றது.

(அ-கை.)

உற்பத்திக்கு முன் அப்பிரகடமாகிய ஜகத்தின் இருப்பில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

यथा अण्डे अंतः महासर्पः । तथा आत्मनि जगत् अस्ति ॥

(சு-ம்.)

எப்படி அண்டத்தி(முட்டையி)ல் மகாசர்ப்பம் வெளிப்படாததா யிருக்கின்றதோ, அதுபோலப் பரமாத்மாவினிடத்து ஜகத்து சம்ஸ்காரரூபமா யிருத்தலால் வெளிப்படையின்றியதாம். (கஎ)

[கரு-அசு] फलपत्रलतापुष्पशाखाविटपमूलवान् ।
ननु बीजे यथा वृक्षस्तथेदं ब्रह्मणि स्थितम् ॥ १८ ॥

(அ-கை.)

விசித்திரவடிவ அந்த ஜகத்தின் இருப்பில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

यथा फलपत्रलतापुष्पशाखाविटपमूलवान् वृक्षः ननु बीजे । तथा इदं ब्रह्मणि स्थितम् ॥

(சு-ம்.)

எப்படிப் பழம் பத்திரம் புஷ்பம் கிளை கொம்பு வேர் என்பவற்றை யுடைய விருக்ஷம் நிச்சயமான வித்தி லிருக்கின்றதோ, அதுபோல இந்த விசித்திரவடிவமுடைய ஜகத்துப் பிரஹ்மத்தில் நிலைத்திருக்கின்றது. (கஅ)

[கூஅ௫] क्वचित्काश्चित्कदाचिच्च तस्मादुद्यंति शक्तयः ।
देशकालविचित्रत्वात्क्ष्मातलादिव शालयः ॥ १९. ॥

(அ-கை.)

அப்படியானல் சர்வசக்திகளும் ஒரு இடத்திலாவது காலத்திலாவது வெளிப்படுதல் ஏன் இல்லையென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

देशकालविचित्रत्वात् क्वचित् च कदाचित् काश्चित् शक्तयः तस्मात् उद्यन्ति ॥

(சு-ம்.)

தேசகாலத்தின் விசித்திரத்தன்மையால் சிலவிடத்தும் சிலகாலத்தும் சில சக்திகள் அந்தப் பிரஹ்மத்தினின்றும் உதயமாகின்றன.

(வி-ம்.)

சிலவிடத்தும் அதாவது யாதேனும் ஓரிடத்தும், சிலகாலத்தும் அதாவது யாதானும் ஓர்காலத்தும் சில சக்திமுதலியன அந்தப் பிரஹ்மத்தினின்றும் பிரகடமாகின்றன.

(அ-கை.)

அந்தச் சக்திகளின் ஒரே இடத்திலாவது காலத்திலாவது வெளிப்படுதல் இல்லாமையில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார் :—

क्ष्मातलात् शालयः इव ॥

(சு-ம்.)

பூமியினின்றும் நெற்கள் வெளிப்படுதல்போல.

(வி-ம்.)

எப்படிப் பூமியிலுள்ள சகல வித்துக்களினிடையினின்றும் தேசவேற்றுமையிலும் காலவேற்றுமையிலும் சில வித்துகளின் முளை யுண்டாகின்றனவோ, எல்லா வித்துக்களின் முளையும் உண்டாகிறதில்லையோ, அது போலப் பிரஹ்மத்தினிடத்துள்ள சக்திகளினிடையினின்றும் தேசகாலங்களின் பேதத்தால் சில சக்திகளின் ஆவிர்ப்பாவமுண்டாகின்றது ; எல்லாவற்றின் வெளிப்படுதலும் உண்டாகிறதில்லை * எ. என்பது பொருள்.(ககூ)

* எ. எப்படிப் பூமியிலுள்ள அநேகவித வித்துக்கள் தேசகாலபேதத்தால் உதயமாகின்றனவோ, அதுபோலப் பிரஹ்மத்தினை ஆசிரயித்துள்ள மாயாசக்தியின் உள்ளடங்கிய அம்சவடிவ அநந்தசக்திகளிருக்கின்றன. அவை தேசகாலபேதத்தினால் உதயமாகின்றன. காரியவாயிலாக அநுமானத்தினலறியவும்படுகின்றன.

[கூ-அ௯] स आत्मा सर्वगो राम नित्योदितमहावपुः ।
यन्मनाङ् मननीं शक्तिं धत्ते तन्मन उच्यते ॥ २० ॥

(அ-கை.)

இப்போது ஜகத்து கற்பனைமாத்திரவடிவமாதலைக் காட்டுதற்கு அந்த ஜகத்தின் கற்பனையைச் செய்வதாகிய மனதின் வடிவத்தை முதலிற் கூறுகின்றார் :—

राम ! सर्वगः नित्योदितमहावपुः सः आत्मा यत् मनाक् मननीम् शक्तिं धत्ते तत् मनः उच्यते ॥

(சு-ம்.)

இராமா! எல்லாவற்றினிருப்பதும் நித்தியோதயமானதும் மகத்துவடிவினதுமான அந்த வர்ணிக்கப்பட்ட சுத்தாத்மா எப்போது சிறிது மனனமுடைய சக்தியைத் தரிக்கின்றதோ அப்போது மனம் எனப்படுகின்றது.

(வி-ம்.)

நித்தியோதயமும் அதாவது பிரகாசமுடையதும், மகத்தும் அதாவது தேசகாலாதி பரிச்சேதமில்லாத சொரூபமுடையதுமாகிய ஆத்மா எந்தக்காலத்தில் சிறிது தன்னையும் பிறவற்றையும் அறிவிக்கும்வடிவ மாயையின் பரிணமரூப மனனமுடைய சக்தியைத் தரிக்கின்றதோ, அப்போது மனமென்று சொல்லப்படுகின்றது. (உ0)

இ. ஜகத்தின் கற்பிதத்தன்மையில் வாசிஷ்டத்தில் கூறிய செவிலித்தாயின் கதை.

[கூ-அ௭] आदौ मनस्तदनुबंधविमोक्षदृष्टी
पश्चात्प्रपंचरचना भुवनाभिधाना ।
इत्यादिका स्थितिरियं हि गता प्रतिष्ठा-
माख्यायिका सुभगबालजनोदितेव ॥ २१ ॥

(அ-கை.)

இப்போது கற்பனையின் தன்மையினைக் கூறுகின்றார்:—

आदौ मनः । तदनु बंधविमोक्षदृष्टी । पश्चात् भुवनाभिधाना प्रपंचरचना । इत्यादिका इयं स्थितिः प्रतिष्ठां हि गता ॥

(சு-ம்.)

ஆதியில் மனது உண்டாகின்றது. அதன்பின் பந்தமோக்ஷங்களின்

திருஷ்டி யுண்டாகின்றது. பின் புவன மென்னும் பிரபஞ்சத்தின் சிருஷ்டி யுண்டாகின்றது. இவைமுதலிய இந்த ஜகத்தின் ஸ்திதி பிரதிஷ்டையினை அடைந்திருக்கின்றது.

(வி-ம்.)

ஆதியில் மனனசக்தியின் உல்லாசத்தினுல் மன முண்டாகின்றது. அந்த மனதிற்குப் பின் பந்தமோக்ஷங்களின் சிருஷ்டி அதாவது கற்பனை யுண்டாகின்றது. பின் பந்தத்தின் திருஷ்டியிலேயே புவனமாகிய பதினுன்குலோகங்க ளென்னும் பெயரையுடைய மலை நகரம் நதி சமுத்திரமுதலிய பிரபஞ்சத்தின் சிருஷ்டி அதாவது கற்பனை யுண்டாகின்றது. * அ. இத்தன்மையதாகிய இந்த ஜகத்தின் ஸ்திதி பிரதிஷ்டையை அதாவது வாஸ்தவத்தன்மையின் பிரதீதியை யடைந்திருக்கின்றது.

(அ-கை.)

கற்பிதப்பிரபஞ்சத்தின் வாஸ்தவத்தன்மையின் தோற்றத்தில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

सुभगबालजनोदिता आख्यायिका इव ॥

(சு-ம்.)

அழகியபாலகர்களின் பொருட்டுச் சொல்லப்பட்ட கதையினைப்போல.

(வி-ம்.)

எப்படிப் பாலகர்களை அறிவித்தற்பொருட்டுச் சொல்லப்பட்ட கதையானது வாஸ்தவத்தன்மையின் புத்தியை அடைந்ததோ, அதுபோல இந்த ஜகத்து அஞ்ஞானிகளுக்கு வாஸ்தவத்தன்மையின் புத்தியை யடைந்திருக்கின்றது * கூ. என்பது பொருள். (உக)

[கஙஅஅ] बालस्य हि विनोदाय धात्री वक्ति शुभां कथाम् ।
क्वचित्संति महाबाहो राजपुत्रास्त्रयः शुभाः ॥ २२ ॥

* அ. இங்கு மனது என்னும் சொல்லால் சமஷ்டி மனதுவடிவ ஹிரணியகர்ப்பன் கொள்ளப்படும். அது முதலில் உண்டாகின்றது. பின் பந்தமோக்ஷங்களின் தோற்ற முண்டாகின்றது. பின் பந்தத்தோற்றத்தின் விஷயமான பிரபஞ்சவடிவ பந்தத்தின் சிருஷ்டி யுண்டாகின்றது. அந்தப்பந்தத்தின் அபேக்ஷையால் மோக்ஷப்பிரதீதிக்கு விஷயமாகிய மோக்ஷத்தின் கற்பனை அர்த்தத்தினுல் சித்திக்கின்றது. ஆதிசப்தத்தால் ஜகத்தினுள்ளடங்கிய அநேக கற்பனைகள் உண்டாகின்றன.

* கூ. எப்படிச் செவிலியானவள் அசத்துத்தன்மையின் அபிப்பிராயத்தால் ஆரோபித்துச் சொன்ன கதை பாலகனது புத்தியில் சத்தியத்தினைப்போலத் தோற்றுகின்றதோ, அதுபோல வித்துவானுல் சம்மதிக்கப்பட்ட சுருதியானது அசத்துத்தன்மையின் அபிப்பிராயத்தினுல் ஆரோபித்துச் சொன்ன ஜகத்தானது அஞ்ஞானியின் புத்தியினுல் சத்தியத்தினைப்போலத் தோற்றியிருக்கின்றது. ஆனுல் ஒன்றும் இல்லையென்பது கருத்து.

(அன்வ.)

அதே வாஸிஷ்டகிரந்தத்தினது மூன்றாவது உற்பத்திப்பிரகரணத்தி லுள்ள கதையினைக் கூறுகின்றார்:—

बालस्य हि विनोदाय धात्री शुभां कथां वक्ति । महाबाहो क्वचित् त्रयः शुभाः राजपुत्राः सन्ति ॥

(த-ம்.)

பாலகர்களது விநோதத்தின்பொருட்டுச் செவிலி எவளோ அவள் சுபமான அதாவது மனோரஞ்சகமான கதையினைச் சொல்லுகின்றாள்:— மகாபாகுவே! ஓர் தேசத்தில் மூன்று அழகிய இராஜபுத்திரர்களிருக்கின்றனர். (௨௨)

[௧௩௮௯] द्वौ न जातौ तथैकस्तु गर्भ एव न च स्थितः ।
वसंति ते धर्मयुक्ता अत्यंतासति पत्तने ॥ २३ ॥

(அ-கை.)

இதுவுமது:—

द्वौ जातौ न । तथा एकः तु गर्भे एव च स्थितः न । ते धर्मयुक्ताः अत्यंताऽसति पत्तने वसन्ति ॥

(த-ம்.)

அவர்களுள் இரண்டு இராஜபுத்திரர்கள் பிறக்கவில்லை. ஒருவனோ கர்ப்பத்திலும் இல்லை. அந்தத் தர்மத்தோடு கூடிய மூன்று இராஜபுத்திரர்களும் அத்தியந்த அசத்தான நகரத்தில் வசிக்கின்றார்கள். (௨௩)

[௧௩௯௦] स्वकीयाच्छून्यनगरान्निर्गत्य विमलाशयाः ।
गच्छंतो गगने वृक्षान्ददृशुः फलशालिनः ॥ २४ ॥

(அ-கை.)

இதுவுமது:—

विमलाशयाः स्वकीयात् शून्यनगरात् निर्गत्य गच्छन्तः गगने फलशालिनः वृक्षान् ददृशुः ॥

(த-ம்.)

விமல அதாவது பிராந்தியின்றிய ஆசயத்தினை அதாவது அந்தக்கரணத்தினை யுடையவர்களாகிய இராஜபுத்திரர்கள் தமது சூனியநகரத்தினின்றும் புறப்பட்டுப் போகுங்கால் ஆகாயத்தில் பழத்தோடுகூடிய விருக்ஷங்களைக் கண்டார்கள். (௨௪)

[கரு-சுக] भविष्यन्नगरे तत्र राजपुत्रास्त्रयोऽपि ते ।
सुखमद्यास्थिताः पुत्र मृगयाव्यवहारिणः ॥ २५ ॥

(அ-கை.)

இதுவுமது :—

पुत्र ते त्रयः अपि राजपुत्राः अद्य मृगयाव्यवहारिणः तत्र भविष्यन्नगरे सुखं आस्थिताः ॥

(சு-ம்.)

புத்திரனே! அந்த மூன்று இராஜபுத்திரர்களும் இப்போது முயற் கொம்புவில்லினால் வேட்டையாடிக்கொண்டு திரிகின்றவர்களாய் அங்குப் பவிஷ்யத்நகரத்தில் அதாவது இனியுண்டாகும் பட்டணத்தில் சுகமாக நிலைத்திருக்கின்றனர். (உ௫)

[கரு-சுஉ] धात्र्येति कथिता राम बालकाख्यायिका शुभा ।
निश्चयं स ययौ बालो निर्विचारणया धिया ॥ २६ ॥

(அ-கை.)

இதுவுமது :—

रामः इति धात्र्या शुभा बालकाख्यायिका कथिता । सः बालः निर्विचारणया धिया निश्चयं ययौ ॥

(சு-ம்.)

இராமா! இப்படிச் செவிலி எப்போது அழகிய பாலகர்களது கதையைச் சொன்னாளோ, அப்போது அந்தப் பாலகன் விசாரமில்லாத மூடபுத்தியினால் நிச்சயத்தினை அடைந்தான். (உசு)

சு. திருஷ்டாந்தத்தினால் சித்தித்த அர்த்தத்தினைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துதல்.

[கரு-சுரு] इयं संसाररचना विचारोज्झितचेतसाम् ।
बालकाख्यायिकेवेत्थमवस्थितिमुपागता ॥ २७ ॥

(அ-கை.)

திருஷ்டாந்தத்தில் சித்தித்த அர்த்தத்தினைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துகின்றார் :—

इत्थं इयं संसाररचना विचारोज्झितचेतसां बालकाख्यायिका इव अवस्थितिं उपागता ॥

(சு-ம்.)

இவ்வாறு தோற்றுகின்ற இச்சம்சாரசிருஷ்டி விசாரமில்லாத சித்தமுள்ள புருஷர்களுக்குப் பாலகர்களது கதையைப்போலச் சித்தத்தில் ஏறுதலை அடைந்திருக்கின்றது. (உ.எ)

எ. வாசிஷ்டத்தில் கூறியதன் சமாப்தியும் மாயையினது அநிர்வசநீயத்தன்மையினைச் சொல்லுதலின் பிரதிஞ்ஞையும்.

[கா-கூஅ] इत्यादिभिरूपाख्यानैर्मायाशक्तेश्च विस्तरम् ।
वसिष्ठः कथयामास सैव शक्तिर्निरूप्यते ॥ २८ ॥

(அ-கை.)

வசிஷ்டர் கூறியதனை முடிக்கின்றார் :—

इत्यादिभिः उपाख्यानैः मायाशक्तेः च विस्तरं वसिष्ठः कथयामास ॥

(சு-ம்.)

இவைமுதலான உபாக்கியானங்களால் மாயாசக்தியின் விஸ்தாரத்தை வசிஷ்டர் சொல்லத்தொடங்கினார்.

(அ-கை.)

இப்படி மாயையின் இருப்பில் சுருதி ஸ்மிருதிவடிவ பிரமாணத்தைக் கூறி, இப்போது அந்தச் சக்தியின் அநிர்வசநீயத்தன்மையினைச் சொல்லப் பிரதிஞ்ஞை செய்கின்றார் :—

सा एव शक्तिः निरूप्यते ॥

(சு-ம்.)

அந்தச் சக்தியே நிரூபிக்கப்படுகின்றது. (உஅ)

அ. திருஷ்டாந்தத்தோடு மாயை ஜகத்துவடிவ காரியத்தினும் பிரஹ்ம வடிவ ஆசிரயத்தினும் விலக்ஷணமாதல்.

[கா-கூகூ] कार्यादाश्रयतश्चैषा भवेच्छक्तिर्विलक्षणा ।
स्फोटांगारौ दृश्यमानौ शक्तिस्तत्रानुमीयते ॥ २९ ॥

(அ-கை.)

இதுவுமது :—

एषा शक्तिः कार्यात् च आश्रयतः विलक्षणा भवेत् ॥

(த-ம்.)

இந்தச் சக்தி காரியத்திலும் ஆசிரயத்திலும் விலக்ஷணமாம்.

(வி-ம்.)

இந்த மாயாசக்தி தனது காரியவடிவ ஜகத்திலும் தனது ஆசிரயமாகிய பிரஹ்மத்திலும் விபரீதசுபாவமுடையதாகின்றது.

(அ-கை.)

மாயாசக்திக்குக் காரியத்திலும் அவ்வாறே ஆசிரயத்திலும் எந்த விலக்ஷணத்தன்மை யிருக்கின்றதோ, அதனைத் திருஷ்டாந்தத்தினால் விளக்குகின்றார்:—

स्फोटांगारौ दृश्यमानौ तत्र शक्तिः अनुमीयते ॥

(த-ம்.)

பொறியும் நெருப்பும் இரண்டும் காணப்படுவனவாம். அவற்றில் சக்தி அநுமானத்தினால் அறியப்படுகின்றது.

(வி-ம்.)

அக்கினியிலுள்ள சக்தியின் காரியவடிவ பொறியும் ஆசிரயமான நெருப்புமாகிய இரண்டும் பிரத்தியக்ஷப்பிரமாணத்தினால் அறியத்தக்கனவாம். சக்தியோ காரியவடிவ லிங்கத்தினால் அநுமானத்திற்கு விஷயமாம். ஆதலால் அக்காரியம் ஆசிரய மென்னும் இரண்டிலும் விலக்ஷணமா மென்பது பொருள். (உகூ)

கூ. சுலோகம் கஙகூ-ல் கூறிய தன்மையினை மிருத்திகையின் சக்தியிற் பொருத்துதல்.

[கஙக0] पृथुबुध्नोदराकारो घटः कार्योऽत्र मृत्तिका ।
शब्दादिभिः पंचगुणैर्युक्ता शक्तिस्त्वतद्विधा ॥ ३० ॥

(அ-கை.)

அக்கினியின் சக்தியில் சொல்லிய தன்மையினை மண்ணின் சக்தியிலும் பொருத்துகின்றார்:—

पृथुबुध्नोदराकारः घटः कार्यः । शब्दादिभिः पंचगुणैः युक्ता मृत्तिका अत्र शक्तिः तु अताद्विधा ॥

(சு-ம்.)

பருத்த பண்டிவடிவினதாகிய கடம் காரியம். சப்தமுதலிய ஐந்து குணங்களோடுகூடிய மண் ஆசிரயமாம். இதில் சக்தியோ அத்தன்மையதன்று.

(வி-ம்.)

பருத்தவட்டவடிவ வயிற்றினையுடைய வடிவம் எதற் கிருக்கின்றதோ, அத்தன்மைய கடம் காரியமாம். சப்த ஸ்பரிச ரூப ரச கந்த மென்னும் ஐந்து குணங்களையுடைய மண் ஆதாரமாம். * கO. சக்தியோ அத்தன்மையின தன்று அதாவது இரண்டினும் விலக்ஷணமானதாம். (௯0)

கO. மண்ணின் சக்தியினிடத்துக் காரியம் ஆசிரய மென்பவற்றினும் வேறாதற் றன்மையினை முன்னிட்ட அதன் அநிர்வசநீயத்தன்மை.

[கஙகூ௭] न पृथ्वादिर्न शब्दादिः शक्तावस्तु यथा तथा ।
अत एव ह्यचिंत्यैषा न निर्वचनमर्हति ॥ ३१ ॥

(அ-கை.)

கடவடிவகாரியம் மண்வடிவ ஆசிரய மென்பவற்றினின்றும் சக்தி விலக்ஷணமாதலையே கூறுகின்றார்:—

शक्तौ पृथ्वादिः न । शब्दादिः न ॥

(சு-ம்.)

சக்தியினிடத்துப் பருமைமுதலியன இல்லை; சப்தமுதலியனவு மில்லை.

(வி-ம்.)

சக்தியினிடத்து ஸ்தூலமுதலியவடிவ காரியத்தின் தர்மமு மில்லை. சப்தமுதலியவடிவ ஆசிரயத்தினது தர்மமு மில்லை. ஆதலால் சக்தி இரண்டினும் விலக்ஷணமாம்.

(அ-கை.)

அப்போது அந்தச் சக்தி எப்படி யிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

यथा तथा अस्तु ॥

(சு-ம்.)

அந்தச் சக்தி எப்படியோ அப்படி இருக்குக.

* கO. சக்தி எதனால் ஸ்தூலவட்டவடிவ வயிறுடையதன்றோ, அதனால் கடவடிவகாரியத்தினும் விலக்ஷணமாம்; சப்தாதிகுணங்களோடுகூடிய தன்று. ஆதலால் மண்வடிவ ஆதாரத்தினும் வேறாம். இதனாலேயே அநிர்வசநீயமாம்.

(அ-கை.)

"எப்படியோ அப்படி இருக்குக" என்று கூறிய அர்த்தத்தினையே விளக்குகின்றார்:—

हि अतः एव एषा अचिंत्या ॥

(சு-ம்.)

இதனாலேயே இது சிந்திக்கக்கூடாததாம்.

(வி-ம்.)

எதனால் காரியத்தினும் ஆசிரயத்தினும் விலக்ஷணமாயிருக்கின்றதோ, அதனாலேயே இந்தச் சக்தி சிந்திக்கக்கூடாததாம்.

(அ-கை.)

அப்படியானால் அப்போது சிந்திக்கக்கூடாதத்தன்மையே அந்தச் சக்திக்குச் சொரூபமாகுமென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

निर्वचनं न अर्हति ॥

(சு-ம்.)

உறுதியாய்ச் சொல்லுதற்குரியதன்று.

(வி-ம்.)

சக்தியானது பேதமாகவாவது அபேதமாகவாவது அல்லது அசிந்திய முதலிய வாக்கியங்களாலாவது எவ்விதவடிவமாகவும் சொல்லுதற்குரியதன்றென்பது பொருள். (நக)

கக. காரியத்திற்கு முன் சக்தி மறைந்திருத்தலும் காரியவடிவமாக வெளிப்படுதலும்.

[கநஅ] कार्योत्पत्तेः पुरा शक्तिर्निगूढा मृद्यवस्थिता ।
कुलालादिसहायेन विकाराकारतां व्रजेत् ॥ ३२ ॥

(அ-கை.)

அப்படியானால் கடத்திற்குக் காரணமான மண்ணின் சொரூபத்தை விட்டு வேறாகச் சக்தி யிருக்குமாயின், அப்போது மண்வடிவ காரணத்தினது சொரூபத்தினைப்போல ஏன் தோற்றுகிறதில்லை யென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

शक्तिः कार्योत्पत्तेः पुरा मृदि निगूढा अवस्थिता ॥

(சு-ம்.)

சக்தியானது காரியோற்பத்திக்கு முன் மண்ணில் மறைந்திருக்கின்றது.

(வி-ம்.)

மண்ணின் சக்தி கடாதிகாரியங்களின் உற்பத்திக்கு முன் மண்ணில் இரகசியமாய் நிலைத்திருக்கின்றது. ஆகலால் தோற்றுகிறதில்லை என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் சக்திக்கு மறைவு இருக்குமாயின், காரியத்தினது உற்பத்திக்குப் பின்னும் அந்தச் சக்தியின் பிரகடத்தன்மை இராதே என்று ஆசங்கித்து, வெளிப்படாத வெண்ணெய்முதலியன அவற்றைக் கடைதலினால் வெளிப்படுவதுபோலக் குலாலன்முதலியோரது வியாபாரத்தால் அந்தச் சக்தி வெளிப்படும் என்று கூறுகின்றார்:—

कुलालादिसहायेन विकाराकारतां व्रजेत् ॥

(த-ம்.)

குலாலன்முதலியோரது சகாயத்தால் சக்தியானது விகாரமாகிய கடமுதலியவற்றின் வடிவத்தை யடைகின்றது.

(வி-ம்.)

இங்கு முதலிய என்னும் சொல்லால் தண்ட சக்கராதிகள் கொள்ளப்படுகின்றன. (௩௨)

௩. சக்தியின் காரியம் அநிர்வசநீயமாதலை நிரூபித்தல் ௩௩—௪௪.

க. அவிசாரத்தினால் கடவடிவகாரியமும் மண்வடிவ காரணமும் அபேதமாகத் தோற்றுதல்.

[௩௩] पृथुत्वादिविकारांतं स्पर्शादिं चापि मृत्तिकाम्
एकीकृत्य घटं प्राहुर्विचारविकला जनाः ॥ ३३ ॥

(அ-கை.)

அப்படியானால் உபாதானத்தின் வேறான சக்தியின் காரியம் உளதாகவே, காரிய காரணங்களின் பேதம் எதனால் தோற்றுகிறதில்லையென்றாசங்கித்து, பேதத்தோற்றத்திற்குக் காரணமான அவிசாரத்தினால் காரிய காரணங்களின் பேதம் தோற்றுகிறதில்லை யென்று கூறுகின்றார்:—

विचारविकलाः जनाः पृथुत्वादिविकारांतं च स्पर्शादिं मृत्तिकां अपि एकीकृत्य "घटं" प्राहुः ॥

(சு-ம்.)

விசாரமின்றிய ஜனங்கள் பருமைமுதலிய விகாரபரியந்தமான காரியத்தினையும் ஸ்பரிசமுதலியவடிவ மண்ணினையும் ஒன்றுபோற்செய்து "கடம்" என்கிறார்கள்.

(வி-ம்.)

அவிவேகமுள்ள ஜனங்கள் பருமை உருட்சிமுதலியவடிவ காரியத்தினையும், சப்தஸ்பரிசாதிகுணவடிவமான காரணமாகிய மண்ணினையும் அவிசாரத்தினால் ஒன்றுபோலாக்கிக் "கடம்" என்று கூறுகின்றனர். (௩௩)

உ. சுலோகம் கஙகூ-ல் கூறிய அர்த்தம் சம்பவிக்குமாறு.

[கசOO] कुलालव्यापृतेः पूर्वो यावानंशः स नो घटः ।
पश्चात्तु पृथुबुध्नादिमत्त्वे युक्ता हि कुंभता ॥३४ ॥

(அ-கை.)

சுலோகம் கஙகூ-ல் கூறிய கடத்தினது வியவகாரத்தின் அவிசாரவடிவகாரணமுடைமை எதனால் இருக்கிறதென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

कुलालव्यापृतेः पूर्वः यावान् अंशः सः घटः नो ॥

(சு-ம்.)

குலாலனது வியாபாரத்திற்கு முந்திய எத்தனை அம்சமுண்டோ அது கடமன்று.

(வி-ம்.)

குலாலனது வியாபாரத்திற்கு முன்னிருப்பதாகிய கடமின்மைவடிவ மண்ணின் அம்சத்தினைக் கடமாக வியவகரித்தலால் அந்தக் கடத்தன்மையின் வியவகாரம் அவிசாரவடிவ காரணமுடையதாமென்பது கருத்து.

(அ-கை.)

அப்போது எந்த அம்சத்திற்குக் கடத்தன்மையிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

पश्चात् पृथुबुध्नादिमत्त्वे तु कुंभता युक्ता हि ॥

(சு-ம்.)

பின்னர்ப் பருமை உருட்சிமுதலியவற்றை யுடையதாகுங்காலத்து அதற்குக் கடத்துவம் பொருந்துகின்றது.

(வி-ரை.)

குலாலனது வியாபாரத்திற்குப் பின் பருத்த உருட்சியான வயிறு வடிவ ஆகாரத்திற்கே கடசப்தத்தின் வாச்சியத்தன்மை தகுதியாம்; ஏனெனின் கூறிய அந்த வடிவத்தினது உற்பத்திக்குப் பின்னரே கடமென்னும் சப்தத்தின் உச்சரிப்புவடிவ வியவகாரம் காணப்படுதலால் என்பது கருத்து. (கூச)

ந. கடத்தின் வாஸ்தவத்தன்மை சித்தியாமை.

[கச0க] स घटो न मृदो भिन्नो वियोगे सत्यनीक्षणात् ।
नाप्यभिन्नः पुरा पिंडदशायामनवेक्षणात् ॥ ३५ ॥

(அ-கை.)

அப்படியானால் வாஸ்தவமாகிய கடத்திற்கு அநிர்வசநியசக்தியினது காரியத்தன்மை அயுக்தமாமென்று ஆசங்கித்துக், கடத்திற்கும் பாரமார்த்திகத்தன்மை சித்தியாதென்று கூறுகின்றார் :—

सः घटः मृदः भिन्नः न । वियोगे सति अनीक्षणात । अभिन्नः अपि न । पुरा पिण्डदशायां अनवेक्षणात् ॥

(சு-ம்.)

அந்தக் கடம் மிருத்திகையினும் வேறன்று; ஏனெனின் மண்ணினின்றும் பிரிக்கப்பட்டபோது கடம் காணப்படாமையால். அந்தக் கடம் மண்ணைவிட வேறாகாதது மன்று அதாவது மண்வடிவமும் அன்று; ஏனெனின் முன் பிண்டதசையில் கடம் காணப்படாமையால்.

(வி-ம்.)

கடமானது மண்ணினும் வேறாகக் காணக்கூடாததா யிருத்தலால் மண்ணைவிட வேறாகிறதில்லை. கடம் மண்வடிவமு மன்று; பிண்ட அவஸ்தையில் அதாவது மண்திரள்வடிவமா யிருந்தகாலத்துக் காணப்படாமையால். (கூரு)

ச. சக்தியினைப்போலக் கடத்தின் அநிர்வசநீயத்தன்மையும் ஏதுவோடு பலிதமும்.

[கச0உ] अतोऽनिर्वचनीयोऽयं शक्तिवत्तेन शक्तिजः ।
अव्यक्तत्वे शक्तिरुक्ता व्यक्तत्वे घटनामभृत् ॥ ३६ ॥

(அ-கை.)

இதுவுமது :—

अतः शक्तिवत् अयं अनिर्वचनीयः ॥

(சு-ம்.)

ஆதலால் சக்தியினைப்போல இந்தக் கடம் அநிர்வசநீயமேயாம்.

(வி-ம்.)

ஆதலால் சக்தியினைப்போல அநிர்வசநீயமே கடமாம்.

(அ-கை.)

பலிதத்தைக் கூறுகின்றார் :—

तेन शाक्तिजः

(சு-ம்.)

அக்காரணத்தால் சக்தியினின்றுந்தோன்றிய கடம் சக்திகாரியமாம்.

(அ-கை.)

அப்படியானால் சக்தியும் காரியமுமாகிய இரண்டும் அநிர்வசநீயமாயிருக்க "சக்தி, காரியம்" என்னும் பேதவியவகாரம் எதனாலிருக்கின்றதெனக் கூறுகின்றார் :—

अव्यक्तत्वे शक्तिः उक्ता व्यक्तत्वे घटनामभृत् ॥

(சு-ம்.)

வெளிப்படாததன்மையில் சக்தி எனப்பட்டது. வெளிப்பட்டதன்மையில் கடம் என்னும் பெயரைத் தாங்குவதாகின்றது. (௩௬)

ஞ. முன் சக்தியின் வெளிப்படாமையிலும் பின் அது வெளிப்படுதலிலும் திருஷ்டாந்தம் (இந்திரஜாலத்தின் மாயை).

[கசா0௩] ऐंद्रजालिकनिष्ठापि माया न व्यज्यते पुरा ।
पश्चाद्गंधर्वसेनादिरूपेण व्यक्तिमाप्नुयात् ॥ ३७ ॥

(அ-கை.)

அப்படியானால் முன் வெளிப்படாத மாயாசக்தி பின் வெளிப்படுகின்றது என்று இவ்வாறு பிரசித்தமாயையின் சொரூபத்தைக் கண்டதில்லையேயெனக் கூறுகின்றார் :—

ऐंद्रजालिकनिष्ठा माया अपि पुरा न व्यज्यते । पश्चात् गंधर्वसेनादिरूपेण व्यक्तिं आप्नुयात् ॥

(த-ம்.)

இந்திரஜாலசம்பந்தியான மாயையும் முன் வெளிப்படுகிறதில்லை. பின் கந்தர்வசேனைமுதலிய வடிவத்தால் வெளிப்படுதலை அடைகின்றது.

(வி-ம்.)

முன் என்பது மணிமந்திரங்களின் பிரயோகத்திற்கு முன் என்பதாம். (௬எ)

௧. சக்தியினது காரியத்தின் மித்தியாத்தன்மையும் ஆதாரத்தினது சத்தியத்தன்மையில் சாந்தோக்கியசுருதியும்.

[௧௪0௪] एवं मायामयत्वेन विकारस्यानृतात्मताम् ।
विकाराधारमृद्वस्तुसत्यत्वं चाब्रवीच्छ्रुतिः ॥ ३८ ॥

(அ-கை.)

சக்தியினது காரியமாகிய கடத்திற்கு மித்தியாத்தன்மை யிருக்கின்றது. சக்தியின் ஆதாரமான மண்முதலியவற்றிற்குச் சத்தியத்தன்மை யிருக்கின்றது என்பது சாந்தோக்கியசுருதியிலும் சொல்லப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார் :—

एवं मायामयत्वेन विकारस्य अनृतात्मतां च विकाराधारमृद्वस्तुसत्यत्वं श्रुतिः अब्रवीत् ॥

(த-ம்)

இப்படி மாயாமயமா யிருத்தலால் விகாரத்தின் பொய்வடிவத்தன்மையினையும், விகாரத்தின் ஆதாரமான மண்வடிவ வஸ்துவின் சத்தியத்தன்மையினையும் சுருதி சொல்லத்தொடங்கியது.

(வி-ம்.)

மாயையின் காரியமாயிருத்தலால் காரியவடிவ கடாதி விகாரத்தின் மித்தியாத்தன்மையினையும், கடாதி விகாரங்களின் ஆதாரவடிவ மண்ணின் சத்தியத்தன்மையினையும் “वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् வாக்கினால் சொல்லப்பட்ட கடாதிவிகாரம் நாமமாத்திரமாய்; மண்மாத்திரமே சத்தியமாம்.” என்னும் சாந்தோக்கியவுபநிஷதசுருதி கூறியது என்பது பொருள். (௬அ)

எ. “வாக்கினால் உச்சரிக்கப்பட்ட விகாரம் பெயர்மாத்திரமாம்; மண் சத்தியமாம்.” என்னும் சுருதியை அர்த்தத்தினால் படித்தல்.

[௧௪௦௫] वाङ्निष्पाद्यं नाममात्रं विकारो नास्य सत्यता ।
स्पर्शादिगुणयुक्ता तु सत्या केवलमृत्तिका ॥ ३९ ॥

(அ-கை.)

இப்போது "வாக்கினுல் ஆரம்பிக்கப்பட்ட" என்று ௧௪௦௪-வது சுலோகத்தில் உதகரிக்கப்பட்ட சுருதிவாக்கியத்தினை அர்த்தத்தினுல் படிக்கின்ருர்:—

वाङ्निष्पाद्यं विकारः नाममात्रं । अस्य सत्यता न । स्पर्शादिगुणयुक्ता तु केवलमृत्तिका सत्या ॥

(சு-ம்.)

வாக்கினுல் உச்சரிக்கப்பட்ட விகாரம் பெயர்மாத்திரமாம்; இவ்விகாரத்திற்குச் சத்தியத்தன்மை இல்லை. ஸ்பரிசமுதலிய குணங்களோடுகூடிய கேவலமிருத்திகையே சத்தியம்.

(விம்.)

வாக்கிந்திரியத்தினுல் உச்சரிக்கப்பட்ட விகாரம் நாமமாத்திரமாம் அதாவது பெயரேயாம். இக்கடமுதலியவற்றிற்குச் சத்தியத்தன்மை அதாவது பெயரைவிட வேருன பாரமார்த்திக சொரூபத்தன்மை யில்லை. ஆனுல் அக்கடமுதலியவற்றின் ஆதாரவடிவமண்ணே சத்தியமா மென்பது பொருள். (௩௯)

அ. சக்தி அதன்காரியம் என்பவற்றின் பொய்மையிலும் ஆதாரத்தின் சத்தியத்தன்மையிலும் காரணம்.

[௧௪௦௬] व्यक्ताव्यक्ते तदाधार इति त्रिष्वाद्ययोर्द्वयोः ।
पर्यायः कालभेदेन तृतीयस्त्वनुगच्छति ॥ ४० ॥

(அ-கை.)

சக்தி அதன் காரியம் என்பவற்றின் பொய்மையிலும், அந்தச் சக்திக்கும் காரியத்திற்கும் ஆதாரமாயுள்ளதின் சத்தியத்தன்மையிலும் காரணம் கூறுகின்ருர் :—

व्यक्ताव्यक्ते तदाधारः इति त्रिषु आद्ययोः द्वयोः कालभेदेन पर्यायः तृतीयः तु अनुगच्छति ॥

(சு-ம்.)

வியக்தம், அவ்வியக்தம், அவற்றின் ஆதாரம் என்னும் மூன்றில் முதல் இரண்டற்கும் காலபேதத்தினுல் பரியாயமாம். மூன்ருவதான ஆதாரமோ அநுகூதமா யிருக்கின்றது.

(வி-ம்.)

வியக்தமாகிய கடாதிவடிவ காரியம், அவ்வியக்தமாகிய அந்தக் கடாதிகளின் காரணவடிவ சக்தி, அந்த வியக்தமும் அவ்வியக்தமுமாகிய காரியம் சக்தி யென்பவற்றின் ஆதாரவடிவ மண் என்னும் மூன்றினும், முதலிற் சொல்லப்பட்ட காரியம் சக்தி என்னு மிரண்டன் சம்பந்தியான காலங்கள் எவையோ அவற்றிற்குப் பேத மிருத்தலால் பரியாயமாகின்றது அதாவது அவைகிரமமாக உண்டாகின்றன. மூன்றாவதாகிய அவ்விரண்டற்கும் ஆதாரமான மண் எதுவோ அதுவே இரண்டிலும் நுழைந்திருக்கின்றது. இதன் கருத்து இதுவாம்—:சக்தியும் காரியமும் யாதேனும் ஓர் காலத்திருப்பனவா யிருத்தலின் அவற்றிற்குப் பொய்யாதற்றன்மை யிருக்கின்றது. ஆதாரமோ மூன்றுகாலத்து மிருப்பதா யிருத்தலின் அதற்குச் சத்தியத்தன்மை யிருக்கின்றது. (௪0)

௧. காரியவடிவ விகாரத்தின் அசத்தியத்தன்மையில் மூன்று ஏது.

[௧௪0௭] निस्तत्त्वं भासमानं च व्यक्तमुत्पत्तिनाशभाक् ।
तदुत्पत्तौ तस्य नाम वाचा निष्पाद्यते नृभिः ॥ ४१ ॥

(அ-கை.)

இப்போது காரியத்தின் அசத்தியத்தன்மையில் மூன்று ஏதுக்களைக் காட்டுகின்றார் :—

व्यक्तं निस्तत्त्वं भासमानं च उत्पत्तिनाशभाक् तदुत्पत्तौ नृभिः तस्य नाम वाचा निष्पाद्यते ॥

(சு-ம்.)

வியக்தம் எதுவோ அது தத்துவமின்றியதாய் அதாவது அசத்தாய்த் தோற்றிக்கொண்டிருக்கின்றது; உற்பத்திநாசங்களை யடைவதா யிருக்கின்றது. அதன் உற்பத்தி யுண்டாகிய பின்னர் மனிதர்களால் அதன் பெயர் வாக்கால் உண்டாக்கப்படுகின்றது.

(வி-ம்.)

வியக்த மென்னும் சொல்லிற்கு வாச்சியமாகிய கடாதி காரியங்கள் எவையோ அவை சொரூபமாக அசத்தேயாய்த் தோற்றுகின்றன. இஃது ஒரு ஏதுவாம். உற்பத்தி நாசமுடையதாகக் காணப்படுகின்றது என்பது இரண்டாவது ஏதுவாம். உற்பத்திக்குப் பின் வாக்கிந்திரியத்தாற் றோன்றிய நாமசொரூபமாக வியவகரிக்கப்படுகின்ற தென்பது மூன்றாவது ஏதுவாம். (௪௧)

[கசா0அ] व्यक्ते नष्टेऽपि नामैतन्नृवक्त्रेष्वनुवर्तते ।
तेन नाम्ना निरूप्यत्वाद्व्यक्तं तद्रूपमुच्यते ॥ ४२ ॥

(அ-கை.)

மற்றும் கூறுகின்றார் :—

व्यक्ते नष्टे अपि एतत् नाम नृवक्त्रेषु अनुवर्तते ॥

(சு-ம்.)

வியக்தம் நாசமாயினும் இந்தப் பெயர் மனிதர்களது வாயில் பின்னி கழ்கின்றது.

(வி-ம்.)

காரியத்தின் சொரூபம் நஷ்டமாயினும் இக்காரியத்தினும் வேறாகாத பெயராகிய சப்தத்தினை உச்சரிக்கும் மனிதர்களது வாயின்கண் பின்னிருக்றது.

(அ-கை.)

அந்த முகத்தில் பெயர் இருத்தலால் என்ன உண்டாகின்றதெனக் கூறுகின்றார் :—

व्यक्तं तेन नाम्ना निरूप्यत्वात् तद्रूपं उच्यते ॥

(சு-ம்.)

வியக்தமானது அந்தப் பெயரால் நிரூபிக்கப்படுவதா யிருத்தலின் அந்தப் பெயர்வடிவமாகச் சொல்லப்படுகின்றது.

(வி-ம்.)

வியக்தமாகிய காரியம் எதுவோ அது அந்த வாக்கினல் வியவகரிக்கப் படும் பெயராகிய சப்தத்தினல் வியவகரிக்கப்பட்டமையால் அந்தப் பெயரின் வடிவமே எதற்கு வடிவமா யிருக்கின்றதோ, அத்தன்மைய பெயர்வடிவமாகச் சொல்லப்படுகின்றது என்பது பொருள். இதன் தாற்பரியம் இதுவாம் :—விவாதத்திற்கு விஷயமான கடம் எதுவோ அது சப்தவடிவமாதற்குரியதாம் ; கடசப்தத்தினல் வியவகரிக்கப்பட்டதா யிருத்தலின் ; கடசப்தத்தினைப்போல. (சூஉ)

௪0. காரியத்தின் அசத்தியத்தன்மையில் அநுமானத்தை யுண்டுபண்ணுந்தன்மை.

[கசா0க] निस्तत्त्वत्वाद्विनाशित्वाद्वाचारंभणनामतः ।
व्यक्तस्य न तु तद्रूपं सत्यं किंचिन्मृदादिवत् ॥ ४३ ॥

(அ-வாக.)

இப்படி ௧௪௦௭—௧௪௦.அ-வது சுலோகங்களில் விகாரங்களின் அசத்தியத்தன்மையினைச் சாதிக்கும் மூன்று ஏதுக்களைச் சாதித்து, இப்போது அநுமானத்தினை யுண்டுபண்ணுந்தன்மையினைச் சூசிப்பிக்கின்றார்:—

निस्तत्त्वत्वात् विनाशित्वात् वाचारंभणनामतः मृदादिवत् व्यक्तस्य रूपं तत् किंचित् सत्यं न तु ॥

(சு-ம்.)

வியக்தத்தின் சொரூபம் சிறிதும் சத்தியமல்ல, தத்துவமில்லாததா யிருத்தலாலும், நாசமுடையதா யிருத்தலாலும், வாக்கினாலாரம்பிக்கப் பட்ட பெயரின் வடிவமா யிருத்தலாலும்; மண்முதலியவற்றைப்போல.

(வி-ம்.)

வியக்தமாகிய கடாதிவடிவ காரியங்களின் பருத்த உருண்டை வயிறுடைவடிவமான உருவ மெதுவோ அது சிறிதும் சத்திய மன்று; தத்துவமாகிய வாஸ்தவசொரூபம் நீங்கியதா யிருத்தலாலும், மண்ணிருக்கும் போதே விநாசத்தின் பிரதியோகி விநாசமுடையதா யிருத்தலாலும், வாக்கிந்திரியத்தினாற் றோன்றிய சப்தமாத்திர சொரூபமுடையதா யிருத்தலாலும் மண்போல. இது வெதிரேகிதிருஷ்டாந்தம். இங்கு இவ்வாறு அநுமான மிருக்கின்றது:—கடாதிவடிவகாரியம் அசத்தியமாகத்தக்கதாம்; தத்துவமில்லாததா யிருத்தலின்; எது அசத்தியமாகாதோ அது தத்துவமில்லாததாகாது; கடமுதலியவற்றிற்கு உபாதானமாகிய மண்போல என்பது கேவல வெதிரேகியநுமானமாம். இவ்வாறே மற்றைய இரண்டு ஏதுக்களிலும் * ௧௧. பொருத்துதல் தகுதியாம். (௬௩)

௧௧. கடம் அசத்தியமாகவே அதிஷ்டானம் (மண்) சத்தியமாதலைச் சம்பாதித்தல்.

[௧௪௧௦] व्यक्तकाले ततः पूर्वमूर्ध्वमप्येकरूपभाक् ।
सतत्त्वमविनाशं च सत्यं मृद्वस्तु कथ्यते ॥ ४४ ॥

* ௧௧. (க) கடாதிவடிவகாரியம் அசத்தியம் அதாவது மித்தை ஆகுதற்குரியதாம்; விநாசியா யிருத்தலால்; எது அசத்தியமன்றோ அது விநாசியு மாகாது; மண்போல.

(உ) கடாதிகாரியம் அசத்தியம்; வாக்கிந்திரியத்தினின்றும் தோன்றிய சப்தமாத்திர சொரூபமுடையதா யிருத்தலால்; எது அசத்தியமாகாதோ அது வாக்கிந்திரியத்தினின்றும் தோன்றிய சப்தமாத்திர சொரூபமுடையது மாகாது; ஆத்மாவினைப்போல. இவ்விரண்டு அநுமானங்களும் இங்குச் சூசிப்பிக்கப்பட்டிருக்கின்றன.

(அ-கை.)

இவ்வாறு காரியத்தினது அசத்தியத்தன்மையினை உபபாதனஞ்செய்து அதாவது ஏது யுக்திகளாற் கூறி, இப்போது அந்த விகாரத்தினது அதிஷ்டானவடிவ மண்ணின் சத்தியத்தன்மையினை உபபாதனஞ் செய்கின்றார்:—

व्यक्तकाले ततः पूर्वे ऊर्ध्वे अपि एकरूपभाक् सतत्त्वं च अविनाशं मृद्वस्तु सत्यं कथ्यते ॥

(சு-ம்.)

வியக்தமானகாலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் ஒருவடிவத்தை யடைகின்றதும், வாஸ்தவசொரூபமுடையதும், அவிநாசியுமாகிய மண்வடிவ வஸ்து யாதோ அது சத்திய மெனப்படும்.

(வி-ம்.)

வியக்தகாலத்திலும் அதாவது காரியத்தின் ஸ்திதிகாலத்திலும், அதற்கு முன்னும் அதாவது வியக்தமானது உண்டாவதற்கு முந்தியகாலத்திலும், பின்னும் அதாவது வியக்தத்தின் விநாசத்திற்குப் பிந்தியகாலத்திலும் ஒருவடிவமுடையதும் வாஸ்தவசொரூபத்தின் கூடவிருப்பதும் விகாரத்தோடு நாசமின்றியதுமான மண்வடிவ வஸ்து யாதோ அது "சத்தியம்" என்று சொல்லப்படுகின்றது.

இங்கு இஃது அநுமானம்:—விவாதத்திற்கு விஷயமான மண்வடிவ வஸ்து சத்தியமாதற்குரியதாம்; வாஸ்தவசொரூபத்தோடுகூடியதா யிருத்தலின்; ஆத்மாவினைப்போல. * கஉ. இவைமுதலிய அநுமானம் பொருத்தத் தக்கனவாம். (ஈச)

கஉ. கடம் அசத்தியமாயின் அது மண்ணின் ஞானத்தினல் நிவிருத்தியாதலின் சங்கை.

[கசகக] व्यक्तं घटो विकारश्चेत्येतैर्नामभिरीरितः ।
अर्थश्चेदनृतः कस्मान्न मृद्बोधे निवर्तते ॥ ४५ ॥

---

* கஉ. இங்கு முதலிய என்னும் பதத்தால் இரண்டு அநுமானங்கள் சூசிக்கப் பட்டிருக்கின்றன:—

(க) மண்வடிவ வஸ்து சத்தியமாகத்தக்கதாம்; மூன்றுகாலத்திலும் ஒருவடிவமுடையதா யிருத்தலின்; ஆத்மாவினைப்போல.

(உ) மண்வடிவ வஸ்து சத்தியமாம்; வாஸ்தவ சொரூபத்தோடுகூடியதா யிருத்தலின்; ஆத்மாவினைப்போல.

(அ-கை.)

அப்படியானல் கடாதிகாரியங்களின் சமூகம் அசத்தியமாகவே அத
ற்கு ஆரோபித இரஜதமுதலியவற்றைப்போல அதிஷ்டான மண்முதலிய
வற்றின் ஞானத்தினல் நிவிருத்தியாகும் யோக்கியதை யுண்டாகுமே
யென்று வாதி சங்கிக்கின்ருன் :—

व्यक्तं घटः च विकारः इति एतैः नामभिः ईरितः अर्थः अनृतः चेत् मृद्बोधे कस्मात् न निवर्तते ॥

(சு-ம்.)

வியக்தம், கடம், விகாரம் என்னும் மூன்று பெயர்களாலும் சொல்
லப்பட்ட அர்த்தம் எதுவோ அது எப்போது பொய்யாகுமோ, அப்போது
மண்ணின் ஞான முண்டானபோது ஏன் நிவிருத்தியாகிறதில்லை யென்று
கூறின்.

(வி-ம்.)

வியக்தமுதலிய மூன்று சப்தங்களால் சொல்லப்படுகின்ற காரியவடிவ
அர்த்தம் யாதோ அதன் காரணத்திற்கு வேருன அசத்துத்தன்மையை
யங்கிகரிக்கின், மண்வடிவ காரணத்தின் ஞானமுண்டானபோது எதனுல்
அதன் நிவிருத்தி உண்டாகிறதில்லை யென்பது வாதியின் சங்கை. (சரு)

கஎ. "இஷ்டாபத்தியாம்" என்பதாகப் பரிகரித்தல்.

[கசகஉ] निवृत्त एव यस्मात्ते तत्सत्यत्वमतिर्गता ।
ईदृङ्निवृतिरेवात्र बोधजा न त्वभासनम् ॥ ४६ ॥

(அ-கை.)

இஷ்டாபத்தியாம் அதாவது யாம் விரும்பியதின் அடைவு உண்டாகி
கின்றது என்று சித்தாந்தி பரிகரிக்கின்ருர் :—

निवृत्तः एव ॥

(சு-ம்.)

அது நீங்கியே யிருக்கின்றது.

(அ-கை.)

அதில் காரணத்தைக் கூறுகின்ருர் :—

यस्मात् ते तत्सत्यत्वमतिः गता ॥

(சு-ம்.)

எதனால் உனக்கு அந்தக் கடமுதலியவற்றின் சத்தியத்துவபுத்தி போய்விட்டதோ.

(வி-ம்.)

எக்காரணத்தால் வாதி! உனக்கு அக்கடமுதலியவற்றை விஷயஞ் செய்யும் புத்தி நஷ்டமா யிருக்கின்றதோ, அதனால் அக்கடமுதலியன நீங்கியனவா யிருக்கின்றன என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் ஆரோபிக்கப்பட்ட இரஜதமுதலியன எவையோ அவற்றின் சொரூபமே தோற்றுமை காணப்படுகின்றது ; சத்தியத்தன்மையின் புத்தி நாசமாகவில்லையே யென்றாசங்கித்து, அந்த இரஜதமுதலியவற்றின் சொரூபம் நிருபாதிகப்பிரமவடிவமா யிருத்தலால் தோற்றுதிருக்குக. இங்குச் சோபாதிகப்பிரமத்திலோ சத்தியத்தன்மையினது புத்தியின் நாசமே நிவிருத்தி யாகுமென்னும் அபிப்பிராயத்தினால் கூறுகின்றார்:-

अत्र ईदृक् एव बोधजा निवृत्तिः न तु अभासनम् ॥

(சு-ம்.)

இங்கு இவ்விதமான போதத்தினாற்றோன்றிய நிவிருத்தியினையே அங்கீகரித்தல்வேண்டும்; தோற்றுதவடிவின தன்று.

(வி-ம்.)

இங்குச் சோபாதிகப்பிரமத்தின் ஸ்தலத்தில் இவ்விதமான அதாவது சத்தியத்தன்மையினது புத்தியின் நாசவடிவமான அதிஷ்டானத்தின் யதார்த்தஞானத்தினாற்றோன்றிய நிவிருத்தியினையே அங்கீகரித்தல்வேண்டும்; சொரூபம் தோற்றுமைவடிவினதை அங்கீகரிக்கலாகாது * ௧௩. என்பது பொருள். (௪௬)

* ௧௩. இங்கு இது பிரக்கிரியையாம்:— (௧) நிருபாதிகப்பிரமம், (௨.) சோபாதிகப்பிரமம் என்னும் பேதத்தால் பிரமம் இரண்டுவகையினதாம்.

(௧) கேவலம் அஞ்ஞானத்தினாற் றோன்றிய பிரமம் யாதோ அது நிருபாதிகப்பிரமமாம். எங்ஙனம்:—இரஜ்ஜுவிலுண்டாம் சர்ப்பத்தின் பிரமமும், சுத்தியிலுண்டாம் வெள்ளியின் பிரமமும் கேவலம் அஞ்ஞானத்தினாலாகியனவாம். ஆதலால் நிருபாதிகப்பிரம மெனப்படுகின்றன

சஜாதீயஞானத்தின் சம்ஸ்காரமும், பிரமாதாவினிடத்துள்ள தோஷமும், பிரமாணத்துள்ள தோஷமும், பிரமேயத்துள்ள தோஷமும், அதிஷ்டானத்தினது சாமானிய அம்சமாகிய இதந்தையின் ஞானமும் இரஜ்ஜு சர்ப்பாதிப்பிரமத்தில் நிமித்தகாரணமாம். அவை இரஜ்ஜு அஞ்ஞானத்திற்குத் துணையாயிருத்தலின் உபாதிவடிவமாம். அவ்வாறாயினும், [௧] காரியகாலத்திருப்பது, [௨] காரியகாலத்திற்கு முன்னிருப்பது என்னும் பேதத்தால் நிமித்தகாரணம் இருவகைத்தாம்.

௪௭. தோற்றவஸ்துவின் நிவிருத்தியில் திருஷ்டாந்தம்.

[௧௪௩] पुमानधोमुखो नीरे भातोऽप्यस्ति न वस्तुतः ।
तटस्थमर्त्यवत्तस्मिन्नैवास्था कस्यचित्क्वचित् ॥ ४७ ॥

[௧] எதன் சந்நிதி யிருக்குங்கால் காரிய மிருக்குமோ, இல்லாதபோது காரிய மிராதோ, அது காரியகாலத்திருக்கும் நிமித்தமாம். அது, சுவரிலுள்ள சூரியனது பிரதிபிம்பத்தினது சந்நிதியிலுள்ள ரூபமாத்திரம் போலவாம்.

[௨] அதனின் வேறாகிய நிமித்தங்கள் எவையோ அவை காரியகாலத்திருந்து முன்னிருப்பனவாம். அது கடத்தின் தண்டசக்கரமுதலியனபோலவாம்.

காரியகாலத்திருக்கும் வடிவினதாகிய நிமித்தமே உபாதிசப்தத்திற்குப் பொருளாம். அத்தன்மைய நிமித்தம் இரஜ்ஜுசர்ப்பாதிப் பிரமஸ்தானத்தில் இல்லை. ஆதலால் அவை நிருபாதிகப்பிரமமேயாம்.

(௨) முற்கூறிய விலக்ஷணமான நிமித்தவடிவ உபாதியோடுகூடிய அஞ்ஞானத்தினாற்றோன்றிய பிரமம் எதுவோ அது சோபாதிகப்பிரமமாம். எங்ஙனம்:—[௧] கண்ணாடியில் அல்லது முகத்தில் பிரதிபிம்பத்தின் பிரமமும், ஜலத்தில் தலைகீழான புருஷனது அல்லது கரையிலுள்ள விருக்ஷங்களது பிரமமும் போல, [௨] ஆகாயத்தில் கருமையின் அல்லது கொப்பரைவடிவத்தின் பிரமமும், [௩] கானற்சலத்தின் பிரமமுமாகிய இவைமுதலியன போன்றுண்டாகும் பிரமம் உபாதியோடுகூடிய அதிஷ்டானத்தின் அஞ்ஞானத்தினாலாகியனவாம். ஆதலால் சோபாதிக மெனப்படுகின்றன.

[௧] பிரதிபிம்பஸ்தலத்தில் பிம்பம் கண்ணாடி அல்லது ஜலம் என்பவற்றின் சந்நிதி உபாதியாம்.

[௨] ஆகாசத்துள்ள கருமைஸ்தானத்தில் சூரியாதிப்பிரகாசம் இருள் என்பவற்றின் சம்பந்தம் உபாதியாம். கொப்பரைவடிவஸ்தலத்தில் பிரஹ்மாண்டத்தின் சந்நிதி உபாதியாம்.

[௩] கானற்சல ஸ்தலத்தில் மருபூமி சூரியனது கிரணம் என்பவற்றின் சம்பந்தம் உபாதியாம். இவ்வாறு தக்கவாறு உபாதியின் கற்பனையைச் செய்துகொள்க.

இவ்வாறு சொல்லப்பட்ட இருவகைப் பிரமங்களினின்றும்,

(௧) நிருபாதிகப்பிரமத்தினது ஸ்தலத்தில் அதிஷ்டானஞானத்தினால் காரியத்தோடு ஆவரணவிக்ஷேப சக்திவான சக்தியோடுகூடிய அஞ்ஞானத்தின் நாசமும் பாதமுமுண்டாகின்றன. ஆதலால் அங்கு அதிஷ்டானசேஷமே அல்லது கற்பிதத்தினது சொரூபத்தின் அபாவமே பாதத்தின் லக்ஷணமாம்.

(௨) சோபாதிகப்பிரமத்தினது ஸ்தலத்திலோ ஆவரணத்தோடுகூடிய அஞ்ஞானத்தின் ஆவரண சக்தியின் நாசமும் பாதமுமாகிய இரண்டும் உண்டாகின்றன. ஆனால் அஞ்ஞானத்தின் உபாதிவடிவ பிரதிபந்தத்தினது வசத்தால் விக்ஷேபவடிவ காரியத்தோடுகூடிய விக்ஷேப சக்திவான சக்தியின் நாசமாகிய சொரூபாபாவம் உண்டாகிறதில்லை. ஆனால் கேவலம் பாதமே உண்டாகின்றது. அதன்சொரூபமோ எரிக்கப்பட்ட வஸ்திரம் அல்லது எரிக்கப்பட்டதானியம்போல சிலகாலபரியந்தம் தோற்

(அ-கை.)

இப்படிச் சத்தியத்தன்மையினது புத்தியின் நாசத்தை எங்கே கண்டிருக்கின்றாரெனக் கூறுகின்றார்:—

नीरे अधोमुखः भातः अपि पुमान् वस्तुतः न अस्ति ॥

(த-ம்.)

ஜலத்தில் தலைகீழாகத் தோற்றினும் புருஷன் வாஸ்தவமாக இல்லை.

(வி-ம்.)

ஜலத்தில் கீழ்முகமுடையவனாகத் தோற்றினும் புருஷன் உண்மையாக இல்லை.

(அ-கை.)

அதில் அநுபவவடிவப் பிரமாணத்தைக் கூறுகின்றார்:—

कस्यचित् तस्मिन् तटस्थमर्त्यवत् आस्था क्वचित् न एव ॥

(த-ம்.)

எந்தப் புருஷனுக்கும் அதனிடத்துக் கரையிலுள்ள மனுஷனிடத்துப் போல ஆசை எவ்விடத்தும் உண்டாகிறதில்லை.

(வி-ம்.)

எந்த விவேகி அல்லது அவிவேகி புருஷனுக்கும் அந்தத் தலைகீழாகத் தோற்றும் புருஷனிடத்துக் கரையிலுள்ள புருஷனிடத்துப்போல ஆசை அதாவது சத்தியத்தன்மையின் அபிமானம் எந்தக் காலத்திலும் தேசத்திலும் இல்லை. (௪௭)

௧௫. ஆரோபிதத்தின் சத்தியத்தன்மைமாத்திரத்தால் புருஷார்த்தத்தின் சித்தியும், அது கடத்தில் சம்பவித்தலும்.

[௧௪௧௪] ईदृग्बोधे पुमर्थत्वं मतमद्वैतवादिनाम् ।
मृद्रूपस्यापरित்यागाद्विवर्तत्वं घटे स्थितम् ॥ ४८ ॥

---

றும். (௭௨௫-வது பக்கத்தின் ௬௨-வது டிப்பணியில் இதனைக் காண்க.) ஆதலால் அங்கு அதிஷ்டானத்தின் சேஷம் அல்லது ஆரோபிதத்தினது சொரூபத்தின் அபாவம் பாதத்தின் லக்ஷணமன்று; ஆனால் மித்தியாத்துவநிச்சயம் அல்லது மூன்றுகாலத்தின் மைநிச்சயம் பாதமாகிய நிவிருத்தியின் லக்ஷணமாம். இப்படி மண்ணில் கடம், பொன்னில் குண்டலம் என்பவற்றின் பிராந்திஸ்தலத்திலும் அகங்காரமுதலிய பந்தத்தின் பிராந்தியிலும் சோபாதிகத்தன்மை யிருக்கின்றது. ஏனெனின், உலக்கை முதலிய சாதனங்களின் நீங்கியிருத்தல், பிராரப்தம் என்னும் உபாதியிருக்கின்றது. ஆதலால் அங்கும் முற்கூறிய மித்தியாத்துவநிச்சயவடிவ லக்ஷணமுடைய நிவிருத்தியே சம்மதிக்கப்பட்டதாம். சொரூபத்தின் அபாவமன்று. அதிஷ்டானத்தின் சத்தியத்தன்மையின் நிச்சயவடிவமே அதிஷ்டானத்தின் மிஞ்சுதலென்று கொள்ளவேண்டும்.

(அ-கை.)

அப்படியானால் ஆரோபிதத்தினது அசத்தியத்தன்மையின் ஞான மாத்திரத்தால் புருஷார்த்தத்தினது சித்தி யுண்டாகாதென் றாசங்கித்துக் கூறுகின்றார்:—

ईदृक्बोधे अद्वैतवादिनां पुमर्थत्वं मतम् ॥

(சு-ம்.)

இவ்விதமான ஆரோபிதத்தினது அசத்தியத்தன்மையினை விஷயஞ் செய்யும் ஞானமுண்டானபோது அத்வைதவாதியினது மதத்தில் புருஷார்த்தத்தன்மை ஒப்பப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

அத்வைதவாதத்தில் ஆத்மாநந்தத்தின் வேறான சகலமும் மித்தையென்று நிச்சயஞ்செய்யவே, அத்விதீய ஆநந்தத்தின் வெளிப்படுதல்வடிவ புருஷார்த்தம் சித்திக்கின்றது என்பது அபிப்பிராயம்.

(அ-கை.)

அப்படியானால் கடம் மண்ணிலும் விவர்த்தமாதல் சித்திக்கவே அந்த மண்ணின் ஞானத்தினால் கடத்தினது சத்தியத்தன்மையின் ஞானம் நிவிருத்தியாகின்றது. ஆனால் இக்கடத்தின் விவர்த்தத்தன்மை இதுவரையிலும் சித்திக்கவில்லையே யென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

मृद्रूपस्य अपरित्यागात् घटे विवर्तत्वं स्थितम् ॥

(சு-ம்.)

மண்ணின் உருவத்தை விடாமையால் கடத்தில் விவர்த்தத்தன்மை நிலைத்துளது. (சஅ)

கக. கடகுண்டலமுதலியவற்றின் விவர்த்தவடிவத்தன்மை.

[கசகரு] परिणामे पूर्वरूपं त्यजेत्तत्क्षीररूपवत् ।
मृत्सुवर्णे निवर्तेते घटकुंडलयोर्न हि ॥ ४९ ॥

(அ-கை.)

கடத்தில் மண்ணினது சொரூபத்தினை விடாதபோதும் கடத்திற்கு மண்ணின் பரிணாமத்தன்மை யுண்டாகுமென்று சங்கித்துக் கூறுகின்றார்:-

परिणामे क्षीररूपवत् तत् पूर्वरूपं त्यजेत् ॥

(சு-ம்.)

பரிணமத்தில் பால்வடிவம்போல அந்த வுபாதானம் முன்வடிவத்தை விடுகின்றது.

(வி-ம்.)

எங்குப் பால்முதலியவற்றில் பரிணமம் அங்கீகரிக்கப்படுகின்றதோ, அங்குப் பால்முதலிய தன்மையுடைய முன்வடிவத்தின் விடுபாடு காணப் படுகின்றது என்பது பொருள்.

(அ.கை.)

அப்படியானல் விவர்த்தத்தில் உருவத்தை விடாமையை எங்குக் கண்டீர் என்று ஆசங்கித்து, மண்ணிலும் பொன்னிலும் கண்டோமென்று கூறுகின்றார்:—

मृत्सुवर्णे घटकुण्डलयोः न निवर्तेते हि ॥

(சு-ம்.)

மண்ணும் பொன்னும் கடத்திலும் குண்டலத்திலும் நிவிருத்தியாகிற தில்லை.

(வி-ம்.)

மண்பொன் என்பவற்றின் விவர்த்தமாக உண்டாகிய கடத்திலும் குண்டலத்திலும் அந்தக் கடகுண்டலங்களின் காரணவடிவ மண் பொன் என்பவற்றின் சொரூபம் நீங்குகிறதில்லை. இது பிரசித்தம் என்பது பொருள். (௪௯)

௯௭. சுலோகம் ௧௪௯-ல் கூறிய அர்த்தத்தில் சங்கையும், சமாதானமும்.

[௧௫௦] घटे भग्ने न मृद्भावः कपालानामवेक्षणात् ।
मैवं चूर्णेऽस्ति मृद्रूपं स्वर्णरूपं त्वतिस्फुटम् ॥ ९० ॥

(அ-கை.)

அப்படியானல் கடத்திற்கு மண்ணின் விவர்த்தத்தன்மை அயுக்த மாம்; ஏனெனின் கடம் அழிந்தபின் மண்டன்மை காணப்படாமையால் என்று வாதி சங்கிக்கின்றான்:—

घटे भग्ने मृद्भावः न ॥

(சு-ம்.)

கடம் நாசமாகியபோது மண்டன்மை யில்லை.

(அ-கை.)

மண்டன்மையின்மையில் வாதி காரணம் கூறுகின்றார்:—

कपालानां अवेक्षणात् ॥

(சு-ம்.)

கபாலங்கள் காணப்படுதலால் என்று கூறின்.

(அ-கை.)

கபாலங்களுக்கும் நாச முண்டாகியகாலத்து மண்டன்மையின் தோற்ற முண்டாகின்றதென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

मा एवं । चूर्णे मृद्रूपं अस्ति ॥

(சு-ம்.)

இவ்வாறு பொருந்தாது; ஏனெனின் சூரணமாகிய கபாலநாச முண்டாகியபோது மண்வடிவ மிருக்கின்றது.

(அ-கை.)

பொன்றன்மையில் அந்த மண்டன்மையிற் கூறிய வினாவே இடம் பெறுகிறதில்லை யென்று கூறுகின்றார்:—

सुवर्णरूपं तु अतिस्फुटम् ॥

(சு-ம்.)

பொன்னின் வடிவமோ மிகவெளிப்படையாம். (நூo)

கஅ. பால்முதலியவற்றில் பரிணாமித்தன்மையும், அதனால் மிருத்திகைமுதலிய விவர்த்தத்தினது திருஷ்டாந்தத்தின் ஹானியும்.

[கசகஎ] क्षीरादौ परिणामोऽस्तु पुंसस्तद्भाववर्जनात् ।
एतावता मृदादीनां दृष्टांतत्वं न हीयते ॥ ९१ ॥

(அ-கை.)

அப்படியானால் பரிணாமத்தில் திருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்ட பால், மண், பொன்முதலியவற்றினுள் மண் பொன் என்பவற்றினை விவர்த்தத்தின் திருஷ்டாந்தமாகத் தாம் அங்கீகரிக்கின், அப்போது அவற்றைப் போலப் பாலும் விவர்த்தத்தின் திருஷ்டாந்தமாதல் நேரும் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

क्षीरादौ परिणामः अस्तु । पुंसः तद्भावववर्जनात् ॥

(சு-ம.)

பால்முதலியவற்றில் பரிணாமம் இருக்குக; ஏனெனின், புருஷனுக்கு அந்தப் பால்முதலியவற்றின் * ௧௪. பாவனை யின்மையால்.

(அ-கை.)

அப்போது பாலினைப்போலவே அந்நிய கடகுண்டலாதி அவஸ்தையினை யடையும் அந்த மண் பொன் என்பவற்றிற்கு விவர்த்தத்தின் திருஷ்டாந்தத்தன்மை யுண்டாகாது என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

एतावता मृदादीनां दृष्टांतत्वं न हीयते ॥

(சு-ம்.)

இவ்வளவினால் அதாவது பால்முதலியவற்றின் பரிணாமித்தன்மையால் மண்முதலியவற்றிற்கு விவர்த்தத்தினது திருஷ்டாந்தத்தன்மை கெடுவதில்லை.

(வி-ம.)

இங்கு இஃது அபிப்பிராயம்:—பாலிற்குப் பாற்றன்மையான முன்வடிவத்தின் விடுபாட்டை முன்னிட்ட வேறு அவஸ்தைவடிவ தயிர்த்தன்மையின் அடைவு இருத்தலால் பரிணாமித்தன்மையே யுண்டு. மண்ணிற்கும் பொன்னிற்கும் கடகுண்டலாதித்தன்மைவடிவ அந்நிய அவஸ்தையின் அடைவு உண்டாகியும் முன்வடிவமாகிய மண் பொன்றன்மைகளை விடுதல் இன்மையால் * ௧௫. விவர்த்தத்தன்மையு முளது. (௫௧)

* ௧௪. தயிர், கடம்; குண்டலமென்னுந் தன்மையினை அடைந்த பால்முதலியவற்றில் புருஷனுக்கு மறுபடியும் பால்முதலியவற்றின் பாவனை யுண்டாகிறதில்லை. ஆனால் தயிர்முதலியவற்றின் பாவனை யுண்டாகின்றது. ஆதலால் அவற்றில் பரிணாமமிருக்கின்றது என்பது பொருள்.

* ௧௫. இங்கு இஃது இரகசியமாம்:-இரஜ்ஜுவினைப்போல மண்ணிற்கும் பொன்னிற்கும் அதிஷ்டானத்தை அதாவது விவர்த்தவுபாதானத்தை யங்கீகரித்துக் கடகுண்டலாதிகளுக்கு விவர்த்தத்தன்மை சொல்லப்பட்டது யாதோ அது ஸ்தூலதிருஷ்டியினு லிருக்கின்றது. ஆனால் சூக்ஷ்மதிருஷ்டியினால் விசாரிக்கின் மண்முதலியவற்றிற்குக் கடமுதலியவற்றின் அதிஷ்டானத்தன்மை பொருந்தாது. ஏனெனின், சித்தாந்தத்தில் எந்தக் கற்பிதவஸ்துவும் பிறிதோர் கற்பிதவஸ்துவிற்கு அதிஷ்டானமாவதில்லை. ஆனால் எல்லாவற்றிற்கும் அதிஷ்டானம் சேதனமேயாம். எதனால் மண்முத

௧௧. மண்ணிலும் பொன்னிலும் ஆரம்பகத்தன்மையை அங்கீகரித்தலில் தோஷம்.

[௧௪௧௮] आरंभवादिनः कार्ये मृदो द्वैगुण्यमापतेत् ।
रूपस्पर्शादयः प्रोक्ताः कार्यकारणयोः पृथक् ॥ ५२ ॥

(அ-கை.)

அப்படியானால் மண் பொன் என்பவற்றிற்குப் பரிணாம விவர்த்தங்களைப்போல ஆரம்பகத்தன்மையும் ஏன் அங்கீகரிக்கலாகாது என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

आरंभवादिनः कार्ये मृदः द्वैगुण्यं आपतेत् ॥

(சு-ம்.)

ஆரம்பவாதியின் மதத்தில் கடாதிகாரியத்தில் மண்ணிற்கு இருகுணத்தன்மை வாய்க்கும்.

(வி-ம்.)

நையாயிகர்முதலிய ஆரம்பவாதிகளின் மதத்தில் கடாதிவடிவ காரியத்தில் மண்முதலிய உபாதான திரவியத்திற்குக் காரியத்தின் வடிவத்தாலும் காரணத்தின் வடிவத்தாலும் இருமடங்காதல் வாய்க்கும். அதுபோல காரிய காரணவடிவத்தால் மண்முதலியவற்றிற்கு இருமடங்காதல் உளதாகவே குணத்தன்மைமுதலியவற்றிற்கு இருமடங்காதலும் நேரும் என்பது கருத்து.

(அ-கை.)

இந்தக்குணத்தன்மை முதலியவற்றிற்கு இருமடங்காதல் எதனாலிருக்கின்றதெனக் கூறுகின்றார்:—

रूपस्पर्शादयः कार्यकारणयोः पृथक् प्रोक्ताः ॥

(சு-ம்.)

உருவம்பரிசமுதலிய எந்தக் குணங்கள் உளவோ அவை காரியகாரணங்களில் வேறாகச் சொல்லப்படுகின்றன.

---

வியன தாமே கற்பிதமாயிருக்கின்றனவோ, அதனால் கடாதிகளுக் கதிஷ்டானமாதல் சம்பவியாது. ஆனால் இரஜ்ஜுவுபகிதசேதனம் எப்படிக் கற்பிதசர்ப்பத்திற்கு அதிஷ்டானமோ, அதுபோல மண்பொன்முதலிய தத்தம் உபாதானத்தினால் உபகிதமான சேதனம் கடகுண்டலாதி காரியத்தின் அதிஷ்டானமாம். ஆதலால் கடாதிகளில் விவர்த்தத்தன்மை விவாதமின்றிச் சித்தித்துளது. இது ஆகர (வாத) கிரந்தங்களில் எழுதப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

காரியத்திலும் காரணத்திலும் உருவமுதலிய குணங்களினது பேதத்தினை அவ்வாரம்பவாதிகளே அங்கீகரித்திருத்தலால் குணங்களுக்கு இருமடங்காதல் உள * கசு. தென்பது தாற்பரியம். (ருஉ)

உ0. சுருதியிற் கூறிய விவர்த்தத்தினது மூன்று திருஷ்டாந்தங்களைக் கூறுதலும் பிரயோஜனமும்.

[கசகசு] मृत्सुवर्णमयश्चेति दृष्टांतत्रयमारुणिः ।
प्राहातो वासयेत्कार्यानृतत्वं सर्ववस्तुषु ॥ ५३ ॥

(அ-கை.)

மண்ணும் பொன்னுமாகிய இரண்டற்குந்தான் விவர்த்தத்தில் திருஷ்டாந்தத்தன்மை யுளதோ? வெனின் இல்லையென்று கூறுகின்றார்:—

आरुणिः मृत् सुवर्णं च अयः इति दृष्टांतत्रयं प्राह ॥

(சு-ம்.)

உத்தாலகரிஷி மண், பொன், இரும்பு என்னும் மூன்று திருஷ்டாந்தங்களைச் சொன்னார்.

(வி-ம்.)

அருணரிஷியின் புத்திரராகிய உத்தாலகரென்று ஓர் இருஷி இருந்தார். அவர் “यथा सौम्यैकेन मृत्पिण्डेन சௌமிய (சுவேதகேதுவே)! ஓரே

* கசு. ஆரம்பவாதியின் மதத்தில் காரணத்துவமாகிய தந்துத்தன்மை காரியத்தன்மையாகிய படத்துவம் என்னும் வடிவினதாகிய வியவகாரத்தின் பேதத்தால் காரியகாரணத்தின் பேதம் தோற்றுகின்றது. ஆதலால் காரணவடிவமாகவும் காரியவடிவமாகவும் ஒரே காரண மிருத்தலால் காரியத்தினது சொரூபத்தில் காரணத்தின் இருமடங்காதல் உளதாகும். எப்போது காரணத்திற்கு இருமடங்காதல் உண்டாயிற்றோ அப்போது காரணத்திலுள்ள சப்த ஸ்பரிச ரூப ரஸாதிகுணமுதலியவற்றின் தர்மத்திற்கும் காரியத்திலுள்ள சப்தாதிகுணமுதலிய தர்மத்திற்கும் இருமடங்கு உண்டாதல் வேண்டும். ஆனால் இவை தந்துவின் உருவமுதலியனவாம் இவை கடத்தின் உருவமுதலியனவாம் என்றுகூறுதலும் தோற்றுதலுமாகிய வியவகாரம் காணப்படுகிறதில்லை. காரியத்தன்மை காரணத்தன்மைவடிவ வியவகாரத்தின் பேதத்தினால் எப்படிக் காரியகாரணங்கள் அபேதம் சித்திக்கிறதில்லையோ, அதுபோலத் தந்து அல்லது மிருத்திகைமுதலிய காரணத்தினின்றும் வேறுபடுத்துப் படம்கடமுதலிய காரியங்கள் தோற்றுமையால் காரியகாரணங்களின் பேதமும் சித்திக்கிறதில்லை. ஆனால் காரியகாரணங்களின் கற்பிதபேத வாஸ்தவ அபேதவடிவ அநிர்வசநீயதாதாத்மியசம்பந்தமே பொருந்துகின்றது. ஆதலால் **ஆரம்பவாதம்** அசங்கதமாம்.

மண்ணினது பிண்டத்தினை அறிதலால்" என்பதினின்றும் ஆரம்பித்து, "कार्ष्णायसमित्येव सत्यम् இரும்பு என்பதே சத்தியம்" என்பது பரியந்தம் சாந்தோக்கியத்தின் ஆறுவது அத்தியாயத்திலுள்ள வசனத்தின் சமூகத்தினால் காரியத்தினது மித்தியாத்தன்மையில் மண், பொன், இரும்பு வடிவ மூன்று திருஷ்டாந்தங்களைச் சொன்னார் என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் உத்தாலகரிஷி எதன்பொருட்டு இவ்வாறு மூன்று திருஷ்டாந்தங்களைச் சொன்னார் என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

अतः सर्ववस्तुषु कार्यानृतत्वं वासयेत् ॥

(சு-ம்.)

ஆதலால் சகலவஸ்துக்களிலும் காரியத்தினது பொய்மையை வாசனையாக்கவேண்டும்.

(வி-ம்)

ஏதனால் இப்படி முற்கூறியவிதமாக மண்முதலிய அநேகங்களில் காரியத்தின் பொய்மை அநுபவிக்கப்பட்டிருக்கின்றதோ, அதனால் பூதபௌதிகவடிவ சகல வஸ்துக்களிலும் காரியத்தின் பொய்மையை வாசனையாக்கவேண்டும் அதாவது அடிக்கடி அநுபவித்து அவ்வநுபவத்தாற்றோன்றிய சம்ஸ்காரவடிவ வாசனைக்கு விஷயமாக்கவேண்டும் என்பது பொருள்()

## உ. ஒரு காரணத்தினது ஞானத்தினால் காரியசமூகத்தினது ஞானபூர்வகப் பிரஹ்மம் ஜகத்து என்பவற்றின் சொருபமும், ஜகத்தின் உபேக்ஷையும் கசஉ0-கசஙூ0.

### க. ஒரு காரணத்தின் ஞானத்தால் காரியசமூகத்தினது ஞானத்தினைக் கூறுதல் கசஉ0-கசஉஎ.

#### க. காரணத்தினது ஞானத்தினால் காரியத்தினது ஞானத்தில் பிரமாணமும் அதில் சங்கையும்.

[கசஉ0] कारणज्ञानतः कार्यविज्ञानं चापि सोऽवदत् ।
सत्यज्ञानेऽनृतज्ञानं कथमत्रोपपद्यते ॥ ५४ ॥

(அ-கை.)

அப்படியானால் காரியத்தினது மித்தியாத்தன்மையின் ஞானமும் எதன்பொருட்டுச் சொல்லப்பட்டிருக்கிறதென்றாசங்கித்துக் காரணத்தினது ஞானத்தினால் காரியத்தினது ஞானம் சித்திக்கும்பொருட்டுச் சொல்லப்பட்டிருக்கின்றதென்னும் அபிப்பிராயத்தினால் கூறுகின்றார்:—

च कारणज्ञानतः कार्यविज्ञानं अपि सः अवदत् ॥

(சு-ம்.)

காரணத்தினது ஞானத்தினுல் காரியத்தினது ஞானத்தினையும் அவர் சொன்னுர்.

(வி-ம்.)

மண்முதலிய காரணத்தினது ஞானத்தினுல் காரியத்தின் சமுதாய வடிவ கடாதிகளினது ஞானத்தினையும் "यथा सौम्येकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात् சௌமியனே! எப்படி ஒரே மண்பிண்டத்தை அறிதலால் சகல கடாதிவடிவ காரியத்தின் சமூகமும் மண்ணில் அறியப்பட்டதாகின்றதோ" இவைமுதலிய வாக்கியசமூகங்களால் அந்த உத்தாலகரிஷி சொன்னுர் என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானுல் மண் பொன்முதலியவடிவ பாரமார்த்திக காரணத்தின் விஞ்ஞானத்தால் அவற்றின் விலக்ஷணமான கடம் பூஷணமுதலிய காரியங்களின் விஞ்ஞானம் பொருந்தா தென்று வாதி சங்கிக்கின்றுன்:—

सत्यज्ञाने अनृतज्ञानं अत्र कथं उपपद्यते ॥

(சு-ம்.)

சத்தியமான காரணத்தின் ஞான முண்டானபோது பொய்யாகிய காரியத்தின் ஞானம் இங்கு எப்படிச் சம்பவிக்கும்? (டுச)

உ. சுலோகம் கசஉ0-ல் கூறிய சங்கையின் சமாதானம்.

[கசஉக] समृत्कस्य विकारस्य कार्यता लोकदृष्टितः ।
वास्तवोऽत्र मृदंशोऽस्य बोधः कारणबोधतः ॥ ५५ ॥

(அ-கை.)

காரியத்திற்குச் சத்தியம் பொய் என்னும் இரண்டு அம்சவடிவமுமிருத்தலால் காரணத்தினது ஞானத்தினுல் காரியத்திலுள்ள சத்திய அம்சத்தின் ஞான முண்டாகின்ற தென்னும் அபிப்பிராயத்தினுற் கூறுகின்றுர்:-

समृत्कस्य विकारस्य लोकदृष्टितः कार्यता ॥

(சு-ம்.)

மண்ணேடுகூடிய விகாரத்திற்கு உலகதிருஷ்டியினுல் காரியத்தன்மையிருக்கின்றது.

(வி-ம்.)

அதிஷ்டானவடிவ மண்ணோடுகூடிய ஆரோபித கடாதிரூப விகாரத்திற்குக் காரியத்தன்மை அதாவது காரியசப்தத்திற்கு அர்த்தமாந்தன்மை உலகத்தில் பிரசித்தம் என்பது பொருள்.

(அ-கை.)

இப்படி உபாதானசக்திகவிகாரத்தின் காரியத்தன்மை இருக்குக இவ்வளவினால் "காரணத்தின் ஞானத்தினால் காரியத்தின் ஞானம் சம்பவியாது" என்னும் வினவிற்கு என்ன விடையாயிற்று? என்றாசங்கித்து, காரியத்துள்ள பருத்த உருண்டை வயிறுடைமைமுதலிய பொய்யினது ஞானத்தின் அபாவம் உண்டாயினும், காரியத்திலுள்ள சத்தியமான மண் அம்சத்தின் ஞானம் உண்டாகவே செய்கின்றதென்று பரிகரிக்கின்றார்:—

अत्र वास्तवः मृदंशः अस्य बोधः कारणबोधतः ॥

(பொ-ம்.)

இதில் வாஸ்தவம் மண் அம்சமாம். இதன் ஞானம் காரணத்தின் ஞானத்தினால் உண்டாகின்றது.

(வி-ம்.)

இந்தக் காரியத்தில் உண்மையான மண் அம்சம் எதுவோ அதன் உணர்ச்சி காரணத்தை அறிதலால் உண்டாகின்றதென்பது பொருள். ()

கூ. காரியத்துள்ள சத்திய அம்சத்தின் ஞானத்தினைப்போலப் பொய்யம்சத்தினது ஞானத்தின் பிரயோஜனமின்மை.

[கசஉஉ] अनृतांशो न बोद्धव्यस्तद्बोधानुपयोगतः ।
तत्त्वज्ञानं पुमर्थं स्यान्नानृतांशावबोधनम् ॥ ५६ ॥

(அ-கை.)

அப்படியானால் காரியத்துள்ள சத்திய அம்சத்தினைப்போலப் பொய் அம்சமும் அறியத்தக்கதா மென்று ஆசங்கித்து, பிரயோஜன மில்லாமையால் அறியத்தக்க தன்றென்று கூறுகின்றார்:—

अनृतांशः बोद्धव्यः न । तद्बोधानुपयोगतः ॥

(சு-ம்.)

பொய் அம்சம் எதுவோ அது அறியத்தக்கதன்று; ஏனெனின், அந்தப் பொய் அம்சத்தினது ஞானத்தின் பிரயோஜன மில்லாமையால்.

(அ-கை.)

பிரயோஜனத்தின் அபாவத்தினையே காட்டுகின்றார்:—

तत्त्वज्ञानं पुमर्थं अनृतांशावबोधनं न स्यात् ॥

(சா-ம்.)

தத்துவத்தின் அதாவது உண்மையம்சத்தின் ஞானமே புருஷார்த்த மாகின்றது. பொய்யம்சத்தின் ஞானம் புருஷார்த்த மாகிறதில்லை.

(வி-ம்.)

தத்துவமாகிய பாதிக்கப்படாத வஸ்துவின் ஞானமே புருஷார்த்த மாம். புருஷனது அர்த்தம் அதாவது பிரயோஜனம் எதில் இருக்கின்றதோ அது புருஷார்த்தம் என்று சொல்லப்படுகின்றது. பொய்யம்சவடிவ விகாரத்தினது ஞானம் பிரயோஜன முடையதன்று என்பது பொருள். (௫௬)

ச. சுலோகம் கசஉஉ-ல் கூறிய அர்த்தத்தில் வியப்பின்மைக்குக் காரணமாதலின் சங்கை.

[கசஉ௬] तर्हि कारणविज्ञानात्कार्यज्ञानमितीरिते ।
मृद्बोधे मृत्तिकाबुद्धेत्युक्तं स्यात्कोत्र विस्मयः ॥ ५७ ॥

(அ-கை.)

அப்படியானால் காரணத்தினது ஞானத்தினால் காரியத்தின் ஞான முண்டாகு மென்னும் அர்த்தம் கேட்பவனது புத்தியில் வியப்பிற்குக் காரணமாகும் என்னும் அபிப்பிராயமாகத் தாம் கூறியது எதுவோ அது சம்பவியாது என்று வாதி சங்கிக்கின்றான்:—

तर्हि " कारणविज्ञानात् कार्यज्ञानं " इति ईरिते । " मृद्बोधे मृत्तिका बुद्धा " इति उक्तं स्यात् । अत्र कः विस्मयः ॥

(சா-ம்.)

அப்போது "காரணத்தினது ஞானத்தினால் காரியத்தினது ஞான முண்டாகின்றது" என்று சொல்லப்படவே "மண்ணின் ஞானத்தினால் மண் அறியப்படுகின்றது" என்று சொல்லப்பட்டதாகின்றது. இதில் ஆச்சரியம் யாது?

(வி-ம்.)

மண்முதலிய காரணத்தினது ஞானத்தினால் காரியத்துள்ள மண்முதலியவடிவ சத்தியாம்சத்தின் ஞான முண்டாகின்றது என்று சொல்லவே

மண்ணினது ஞானத்தினால் மண்ணின் ஞான முண்டாகின்றது என்றுசொல் லப்பட்ட தாகின்றது. இவ்வாறாகிய சப்தத்தினால் மாத்திரம் ஆச்சரிய மிருக்கின்றது; பொருளினால் இல்லை யென்பது பொருள். (ருஎ)

ரு. சுலோகம் கசஉங-ல் கூறிய சங்கைக்குச் சமாதானம். (அஞ்ஞானிக்கு ஆச்சரியமாதல்.)

[கசஉச] सत्यं कार्येषु वस्त्वंशः कारणात्मेति जानतः ।
विस्मयो मास्त्विहाज्ञस्य विस्मयः केन वार्यते ॥ ५८ ॥

(அ-கை.)

காரியத்துள்ள சத்திய அம்சம் காரணத்தின் சொரூபமா மென்னும் விவேகமுடைய புருஷனுக்கு ஆச்சரிய மில்லையாயினும், முற்கூறியவிதமான அந்த விவேகமின்றிய புருஷர்களுக்கோ ஆச்சரிய முண்டாகவே செய்யு மென்று சித்தாந்தி பரிகரிக்கின்றார்:—

सत्यं । कार्येषु वस्त्वंशः कारणात्मा इति जानतः विस्मयः मा अस्तु । इह अज्ञस्य केन वार्यते ॥

(சு-ம்.)

அது சத்தியம். ஆதலால் காரியங்களில் எந்த வஸ்துவம்ச மிருக்கின்றதோ, அது காரணத்தின் சொரூபமேயாம் என்று அறிகின்ற புருஷனுக்கு ஆச்சரியம் உண்டாகவேண்டாம். ஆனால் இங்கு அஞ்ஞானிக்கு எந்த ஆச்சரியம் உண்டாகின்றதோ அது யாரால் நீக்கப்படும்?

(வி-ம்.)

கடாதிகாரியங்களிலுள்ள வாஸ்தவ அம்சம் எதுவோ அது மண்முதலிய காரணத்தின் சொரூபமேயாம் என்று எவர்கள் அறிகிறார்களோ அவர்களுக்கு ஆச்சரியம் உண்டாகவேண்டாம். ஆனால் தத்துவஞானமின்றிய மற்றவர்களுக்கு உண்டாகின்ற ஆச்சரியம் நீக்கக்கூடியதன்று என்பது பொருள். (ருஅ)

சு. சுலோகம் கசஉச-ல் கூறிய ஆச்சரியத்தினை வர்ணித்தல்.

[கசஉரு] आरंभी परिणामी च लौकिकश्चैककारणे ।
ज्ञाते सर्वमतिं श्रुत्वा प्राप्नुवंत्येव विस्मयम् ॥ ५९ ॥

(அ-கை.)

அஞ்ஞானிக்கு ஆச்சரிய முண்டாகின்றது என்னும் கசஉங-வதில் கூறிய அர்த்தத்தினையே வர்ணிக்கின்றார்:—

आरंभी च परिणामी च लौकिकः एककारणे ज्ञाते सर्वमतिं श्रुत्वा विस्मयं प्राप्नुवन्ति एव ॥

(சு-ம்.)

ஆரம்பவாதி பரிணாமவாதிகளும் இலௌகிகர்களாகிய பிராகிருத ஜனங்களும் ஒரு காரணத்தை அறிந்தபோது சகலகாரியமாத்திரத்தின் ஞானத்தினைக் கேட்டு ஆச்சரியத்தை அடையவே செய்கின்றார்கள்.

(வி-ப.)

ஆரம்பம் அதாவது சமவாயி அசமவாயி நிமித்தமென்னும் பெயருடைய மூன்று காரணங்களின் வேறாகிய காரியத்தின் உற்பத்தி எதுவோ அதனை எந்த நையாயிகர்முதலிய வாதிகள் கூறுகின்றார்களோ, அந்த இவ்வாதிகள் "ஆரம்பவாதிகள்" எனப்படுவர். முன் வடிவத்தை விட்டு வேறு விபரீதவடிவத்தின் அடைவுவடிவ பரிணாமத்தினை எந்தச் சாங்கியர்முதலியவாதிகள் கூறுகின்றார்களோ, அந்த வாதிகள் "பரிணாமவாதிகள்" எனப்படுவர். எவர்கள் இவ்விருவகையினையும் அறியாதவர்களாய் உலகவியவகாரத்தில் மாத்திரம் தற்பரரா யிருக்கின்றார்களோ அவர்கள் "இலௌகிகர்" என்று சொல்லப்படுகின்றார்கள். இம்மூவருக்கும் "ஒரே காரணத்தின் ஞானத்தினால் அநேககாரியங்களின் ஞானம் உண்டாகின்றது" என்னும் வாக்கியத்தினைக் கேட்டலால் ஆச்சரியம் உண்டாகவே செய்யும் என்பது பொருள். (ருகூ)

எ. ஒருகாரணத்தின் ஞானத்தினால் அநேககாரியங்களினது ஞானத்தினைப் பிரதிபாதிக்கும் சுருதியின் அபிப்பிராயம்.

[கசஉகூ] अद्वैतेऽभिमुखीकर्तुमेवात्रैकस्य बोधतः ।
सर्वबोधः श्रुतौ नैव नानात्वस्य विवक्षया ॥ ६० ॥

(அ-கை.)

அப்படியானால் சுருதியில் கேட்கப்பட்ட அர்த்தம் எத்தன்மையதோ அதனை விட்டு இவ்வாறு வியாக்கியானஞ் செய்தலில் காரணம் யாது என்று ஆசங்கித்துக் கேட்டபடியான அந்த அர்த்தத்தில் சாந்தோக்கியத்தின் வாக்கியவடிவ சுருதியின் தாற்பரியமில்லை. ஆதலால் இக்கூறியவிதமாக யாம் வியாக்கியானம் செய்திருக்கின்றோம் என்று கூறுகின்றார்:—

अद्वैते अभिमुखीकर्तुं एव अत्र श्रुतौ एकस्य बोधतः सर्वबोधः । नानात्वस्य विवक्षया न एव ॥

(த-ம்.)

அத்வைதத்தில் திருப்புவதற்கே இந்தச் சுருதியின் ஒன்றன் ஞானத்தால் எல்லாவற்றின் ஞானமுமா மென்பது சொல்லப்பட்டது; நாநாத் தன்மையின் கருத்தினால் சொல்லக்கருதியதன்று.

(வி-ம்.)

அத்வைதத்தின் ஞானத்தில் சிஷ்யனைத் திருப்புவதற்கே சாந்தோக்கியசுருதியின் ஆறாவது அத்தியாயத்தில் ஒரு காரணத்தின் ஞானத்தினால் சகல காரியங்களின் ஞானமுமாம் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால் அநேக காரியங்களினது ஞானம் சித்திக்கும்பொருட்டு *களை. சொல்லப்படவில்லை யென்பது பொருள். (௬0)

அ. சுலோகம் ௧௬௨௬-ல் கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்ததார்ஷ்டாந்தங்களோடு பலிதம்.

[௧௬௨௭] एकमृत्पिंडविज्ञानात्सर्वमृण्मयधीर्यथा ।
तथैकब्रह्मबोधेन जगद्बुद्धिर्विभाव्यताम् ॥ ६१ ॥

(அ-கை.)

இப்போது ஒரு காரணத்தின் ஞானத்தினால் சகல காரியங்களினது ஞானத்தின் திருஷ்டாந்தத்தினைக் காட்டுந்தன்மையதாகிய "यथा सोम्येकेन मृत्पिंडने सर्वं मृण्मयं विज्ञातं स्यात् சௌமியனே! எப்படி ஒரு மண்ணின் பிண்டத்தினால் எல்லாம் மண்வடிவமாக அறியப்படுகின்றனவோ" என்னும் வாக்கியத்தின் அர்த்தத்தினை நிரூபித்தலை முன்னிட்டுத் தார்ஷ்டாந்தத்தினைக் காட்டுந்தன்மையதாகிய "उत तमादेशमप्राक्षो येनाश्रुतं श्रुतं भवत्यमतं मतमविज्ञातं

---

* களை. (௧) அசத்து ஜட துக்கவடிவ அநேக அநாத்மபதார்த்தங்களின் ஞானத்தினால் பரமபுருஷார்த்தம் சித்தியாமையால் அநேக காரியங்களினது ஞானத்தின்பொருட்டுச் சுருதியானது ஒன்றன்ஞானத்தால் அநேகங்களின் ஞானம் சொல்லவில்லை; ஆனால் பிரஹ்மவடிவ காரணத்தினது ஞானத்தின்கண் பிரவிருத்தியின்பொருட்டுப் பிரஹ்மத்தினது ஞானத்தின் ஸ்துதி செய்யப்படுகின்றது. இதனாலேயே இந்தவாக்கியம் அர்த்தவாதவடிவமாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது.

(௨) அல்லது ஞானிக்குப் பிரஹ்மத்தின் வேறாகாத சாக்ஷிவடிவமாக ஞாதத்தன்மைவிசிஷ்ட அல்லது அஞ்ஞாதவிசிஷ்ட சகலபதார்த்தங்களின் ஞானம் எப்போதும் இருக்கின்றது.

(௩) அல்லது பிரஹ்மவடிவ அதிஷ்டானத்தில் கற்பித சர்வபதார்த்தங்களுக்கும் பிரஹ்மத்தினும் வாஸ்தவபேதம் இல்லை. ஆனால் பாதசாமாநாதிகரணியத்தினால் சகலபதார்த்தங்களுக்கும் பிரஹ்மத்தோடு அபேத மிருக்கின்றது. ஆதலால் ஒரு பிரஹ்மத்தின் ஞானத்தினால் அநேக பதார்த்தங்களினது ஞானம் பொருந்துகின்றது என்பது பொருள்.

विज्ञातं ॥ எதனல் கேட்கப்படாத பிற பதார்த்தங்கள் கேட்கப்பட்டன வாகின்றனவோ, மனனஞ்செய்யப்படாத மற்றவை மனனஞ்செய்யப்பட்டனவாமோ, அறியப்படாத மற்றவை அறியப்பட்டனவாமோ, அவ்வுபதேசத்தினையும் நீ குருவைநோக்கிக் கேட்டாய்'' என்னும் வாக்கியத்தின் அர்த்தத்தினைக் காட்டுகின்றவராய் ஒன்றன் ஞானத்தினல் எல்லாவற்றின் ஞானவடிவமென்னும் பிரகிருதத்திற் சித்தித்தபொருளைக் கூறுகின்றார்:—

यथा एकमृत्पिण्डविज्ञानात् सर्वमृण्मयधीः । तथा एकब्रह्मबोधेन जगद्बुद्धिः विभाव्यताम् ॥

(சு-ம்.)

எப்படி ஒரு மண்ணினது பிண்டத்தின் ஞானத்தினல் சர்வமண்மயத்தினது புத்தியுமுண்டாகின்றதோ, அதுபோல ஒரு பிரஹ்மத்தினது ஞானத்தினல் ஜகத்தின் ஞானமுண்டாமென்றறிக.

(வி-ம்.)

எப்படிக் குடம் சட்டிமுதலியவற்றினது உபாதானமாகிய மண் பிண்டத்தின் ஞானத்தினல் அந்த மண்பிண்டத்தின் காரியமாகிய சகல கடங்களின் ஞானமுமுண்டாகின்றது. இவ்வாறு எல்லாவற்றிற்கும் உபாதானமாகிய பிரஹ்மம் எதுவோ அதன் ஞானத்தினல் அந்தப் பிரஹ்மத்தின் விவர்த்தவடிவ காரியமான சகல ஜகத்தின் ஞானமுமுண்டாமென்று அறியத்தக்கதாம் என்பது பொருள். (சுக)

உ. பிரஹ்மவடிவ காரணமும் ஜகத்துவடிவ காரியமுமாகிய இவற்றின் சொருபம் கசஉஅ-கசசசு.

க. பிரஹ்மம் ஜகத்து என்பவற்றின் சுருக்கமான சொரூபமும், கூறிய சச்சிதாநந்தப் பிரஹ்மத்தின் சொரூபத்தில் தாபநீயசுருதியின் பிரமாணமும்.

[கசஉஅ] सच्चित्सुखात्मकं ब्रह्म नामरूपात्मकं जगत् ।
तापनीये श्रुतं ब्रह्म सच्चिदानंदलक्षणम् ॥ ६२ ॥

(அ-கை.)

அப்படியானல் பிரஹ்ம ஜகத்துக்களின் சொரூபத்தை யறியாவிடின், பிரஹ்மத்தின் ஞானத்தினல் ஜகத்தின் ஞானமுண்டாகுமென்று அறியக்கூடியதன்று என்று ஆசங்கித்து, அந்தப் பிரஹ்மம் ஜகத்து என்னும் இரண்டன் சொரூபத்தையும் காட்டுகின்றார் :—

सच्चित्सुखात्मकं ब्रह्म । नामरूपात्मकं जगत् ॥

(சு-ம்.)

சத்து சித்து ஆநந்தசொரூபம் பிரஹ்மமாம்; நாமரூபவடிவம் ஜகத்தாம்.

(அ-கை.)

பிரஹ்மம் சச்சிதாநந்தவடிவ மென்பதில் பிரமாணம் யாதென்றுசங்கித்துத் தாபநீயமுதலிய சுருதிகள் பிரமாணமா மென்னும் அபிப்பிராயத்தினால் கூறுகின்றார்:—

तापनीये सच्चिदानन्दलक्षणं ब्रह्म श्रुतम् ॥

(சு-ம்.)

தாபநீயத்தில் சச்சிதாநந்தலக்ஷணப் பிரஹ்மம் கேட்கப்பட்டிருக்கின்றது.

(வி-ம்.)

உத்தரதாபநீய உபநிஷத்தில் அதர்வணவேதத்தினை யுணர்ந்தப் பிராஹ்மணர்களால் முதலில் "ब्रह्मैवेदं सर्वं सच्चिदानन्दमात्रम् இந்தச் சகல ஜகத்தும் சச்சிதாநந்தமாத்திரப் பிரஹ்மமேயாம்." என்னும் இவைமுதலிய இடங்களில் பிரஹ்மத்தின் சச்சிதாநந்தவடிவத்தன்மை சொல்லப்பட்டது என்பது பொருள். (௬௨)

உ. சுலோகம் கசஉஅ-ல் கூறிய பிரஹ்மத்தின் சொரூபத்தில் வேறு சுருதிப்பிரமாணம்.

[கசஉக] सद्रूपमारुणिः प्राह प्रज्ञानं ब्रह्म बह्वृचः ।
सनत्कुमार आनंदमेवमन्यत्र गम्यताम् ॥ ६३ ॥

(அ-கை.)

சுலோகம் கசஉஅ-ல் கூறிய சுருதிக்கு வேறான சுருதிகளைக் காட்டுகின்றார்:—

आरुणिः सद्रूपं । बह्वृचः प्रज्ञान ब्रह्म । सनत्कुमारः आनंद प्राह ॥

(சு-ம்.)

உத்தாலகர் சத்துவடிவத்தைச் சொன்னார். ருக்குவேதிகளாகிய பிராஹ்மணர்கள் பிரஞ்ஞானவடிவ பிரஹ்மத்தைக் கூறுகின்றனர். சநத்குமாரர் ஆநந்தத்தைச் சொன்னார்.

(வி-ம்.)

அருணரது புத்திரரான உத்தாலகரிஷியினால் சாந்தோக்கிய சுருதியில் "सदेव सोम्य इदमग्र आसीत् காட்சிக்கினியவனே! இந்த ஜகத்து முன் சத்தாகவே இருந்தது" என்பது முதலாகச் சத்துவடிவப் பிரஹ்மம் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அதுபோல ருக்குவேதத்தின் சாகையினை அத்தியயனஞ் செய்கின்ற பிராஹ்மணர் ஐதரேயஉபநிஷத்தில் "प्रज्ञा प्रतिष्ठा प्रज्ञानं

ब्रह्म பிரஞ்ஞையாகிய பிரஹ்மசேதனம் பிரதிஷ்டையாம் அதாவது எல்லாவற்றிற்கும் ஆதாரமாம். பிரஞ்ஞானம் அதாவது அதிக அறிவு பிரஹ்மமாம்." என்று பிரஹ்மத்தின் பிரஞ்ஞானவடிவத்தன்மையினைக் காட்டுகின்றார்கள். இவ்வாறே முன் பதினோராவது பிரகரணத்தில் உதாகரணஞ் செய்யப்பட்ட சாந்தோக்கியசுருதியிலேயே ஸநத்குமாரரென்னும் குருவானவர் நாரதரென்னும் சிஷ்யருக்கு "भूमात्वेव विजिज्ञासितव्यः பூமாவாகிய பரிபூரணபிரஹ்மமோ அறியத்தக்கதேயாம் என்பது முதலாக ஆரம்பித்து, " यो वै भूमा तत्सुखम् எது பூமாவாகிய பரிபூரணமோ அதுவே சுகவடிவமாம்." என்று பூமாசப்தத்தின் வாச்சியமான பிரஹ்மத்தின் ஆநந்தவடிவத்தைச் சொன்னார் என்பது பொருள்.

(அ-கை.)

முற்கூறிய நியாயத்தினை வேறு உபநிஷதங்களிலும் அதிதேசஞ்செய்கின்றார்:—

एवं अन्यत्र गम्यताम् ॥

(சு-ம்.)

இவ்வாறே பிறஇடங்களிலும் அறிக.

(வி-ம்.)

பிற தைத்திரீயமுதலிய வாக்கியங்களால் ஆநந்தவடிவத்தன்மைமுதலியன சொல்லப்படுகின்றன என்று கண்டுகொள்ளவேண்டியதென்பது கருத்து. (சுரு)

௩. ஜகத்தின் சொரூபமான நாமரூபத்தில் சுருதி.

[கசா௬0] विचिंत्य सर्वरूपाणि कृत्वा नामानि तिष्ठति ।
अहं व्याकरवाणीमे नामरूपे इति श्रुतेः ॥ ६४ ॥

(அ-கை.)

சத்து சித்து ஆநந்தம் என்னும் பிரஹ்மத்தின் சொரூபத்தில் எப்படிச் சுருதிகள் காட்டப்பட்டனவோ அப்படி நாமரூபஜகத்தின் சொரூபத்திலும் சுருதியினைக் காட்டுகின்றார்:—

"सर्वरूपाणि विचिंत्य नामानि कृत्वा तिष्ठति" । "अहं इमे नामरूपे व्याकरवाणि" इति श्रुतेः ॥

(சு-ம்.)

"எல்லா வடிவங்களையும் சிந்தித்து அவற்றின் பெயரைச் செய்து பரமாத்மா நிலைத்திருக்கின்றார்" "நான் நாமரூபத்தை வெளிப்படுத்துவேனாக" என்னும் சுருதியினால்.

(வி-ம்.)

"सर्वाणि रूपाणि विचित्य धीरो नामानि कृत्वा अभिवदन् यदास्ते தீரராகிய பரமாத்மா சகல வடிவங்களையும் சிருஷ்டித்து, அவற்றின் பெயர்களைச்செய்து சொல்லுகின்றவராய் நிலைத்திருக்கின்றார்'' "अनेन जीवेनानुप्रविश्य नामरूपं व्याकरवाणि இந்த ஜீவவடிவமாகப் பின் பிரவேசித்து நாமரூபங்களை வெளிப்படுத்துவேனாக.'' என்று உற்பத்திசெய்யத்தக்க ஜகத்திலுள்ள நாமரூபங்களைச் சுருதியானது காட்டுகின்றது என்பது பொருள். (௬௪)

௪. சுலோகம் கசாஙo-ல் கூறிய அர்த்தத்தில் வேறு சுருதியும், அதன் கண்ணுள்ள அவ்வியாகிருதசப்தத்தின் அர்த்தமும்.

[கசாகூக] अव्याकृतं पुरा सृष्टेरूर्ध्वं व्याक्रियते द्विधा ।
अचिंत्यशक्तिर्मायैषा ब्रह्मण्यव्याकृताभिधा ॥ ६५ ॥

(அ-கை.)

அங்கு நாமரூபத்திலேயே வேறு சுருதியினை உதகரிக்கின்றார்:—

स्पृष्टेः पुरा अव्याकृतं । ऊर्ध्वं द्विधा व्याक्रियते ॥

(சு-ம்.)

சிருஷ்டிக்குமுன் இந்த ஜகத்து அப்பிரகடமாயிருந்தது. பின் இரண்டு விதமாக வெளிப்படுகின்றது.

(வி-ம்.)

பிருகதாரணியகசுருதியில் "तद्धेदं तर्ह्यव्याकृतमासीत् तन्नामरूपाभ्यामेव व्याक्रियतासौ नामायमिदं रूपः அந்தப் பிரசித்தமான இந்த ஜகத்து அப்போது சிருஷ்டிக்குமுன் அவ்வியாகிருதவடிவமாயிருந்தது. அந்த ஜகத்து நாமரூபங்களினாலேயே 'இவ்வாகாசாதிகள்' என்னும் பெயருடையதாயிருக்கின்றது. 'இது இதன்வடிவம்' என்று வெளிப்பட்டது'' என்று உண்டாகிய ஜகத்தின் நாமரூபங்களின் சொரூபம் காட்டப்பட்டதென்பது தாற்பரியவடிவ அர்த்தமாம். உற்பத்திக்குமுன் இந்த ஜகத்து அவ்வியாகிருத அதாவது வெளிப்படாத நாமரூபமுடையதாயிருந்தது. பின் சிருஷ்டியின் அவசரத்தில் இரண்டுவிதமாக அதாவது வாச்சியவாசகத்தன்மையாக வெளிப்படுத்தப்பட்டது. இது சுலோகத்தினது முற்பாதியின் பொருள்.

(அ-கை.)

இப்போது "तद्धेदं तर्ह्यव्याकृतं आसीत् அந்தப்பிரசித்தமான இந்தஜகத்து

அப்போது அவ்வியாகிருத வடிவமா யிருந்தது." என்னும் வாக்கியத்தி லுள்ள அவ்வியாகிருதசப்தம் யாதோ அதன் பொருளைக் கூறுகின்றார்:—

ब्रह्मणि अचिंत्यशक्तिः माया एषा अव्याकृताभिधा ॥

(சு-ம்.)

பிரஹ்மத்திலுள்ள சிந்திக்கக்கூடாத சக்தியாகிய மாயை அவ்வியாகிருத மென்னும் பெயருடையதாம்.

(வி-ம்.)

பிரஹ்மத்தில் சிந்திக்கக்கூடாத சக்தியாகிய மாயை எதுவோ அது அவ்வியாகிருத மென்னும் பெயருடையதாம் அதாவது அது இவ்வாக்கியத்தில் "அவ்வியாகிருதம்" என்னும் சொல்லினால் சொல்லப்பட்டிருக்கிறது என்பது பொருள். (௫௫)

ரு. "அது நாமரூபங்களினால் வெளிப்படுகின்ற" தென்பதன் பொருள்.

[கசரு௨] अविक्रियब्रह्मनिष्ठा विकारं यात्यनेकधा ।
मायां तु प्रकृतिं विद्यान्मायिनं तु महेश्वरम् ॥ ६६ ॥

(அ-கை.)

" तन्नामरूपाभ्यामेव व्याक्रियते அந்த ஜகத்து நாமரூபங்களாக வெளிப்பட்டது" என்னும் வாக்கியத்தினது பொருளைக் கூறுகின்றார்:—

अविक्रियब्रह्मनिष्ठा अनेकधा विकारं याति ॥

(சு-ம்.)

அவிக்கிரியமான பிரஹ்மத்தி லுள்ளதான அந்த மாயை அநேகவிதமாக விகாரத்தை அடைகின்றது.

(வி-ம்.)

விகாரமின்றிய பிரஹ்மத்தி லிருப்பதான அந்த மாயை ஆகாசாதி பூதமும் பிரஹ்மாண்டமுதலிய பௌதிகமுமாகிய வடிவத்தால் வெகுவிதமாகப் பரிணாமத்தை யடைகின்றது.

(அ-கை.)

மாயை பிரஹ்மத்தி லிருக்கின்றதென்னும் பொருளில் பிரமாணத்தைக் கூறுகின்றார் :—

मायां तु प्रकृतिं विद्यात् मायिनं तु महेश्वरम् ॥

(அ-ம்.)

மாயையினையோ பிரகிருதியென்று அறிக. மாயியையோ மகேசுவர னென்று அறிக.

(வி-ம்.)

முன் கச௩௧-ல் கூறிய மாயையினைப் பிரகிருதி அதாவது எதனின் றும் சகல ஜகத்தும் உண்டாகின்றதோ, அப்படிப்பட்ட உபாதானகாரணம் என்று அறிக. மாயியை அதாவது அந்தமாயைக்கு ஆசிரயமாயிருத்த லால் அந்த மாயையுடையவரை மகேசுவரன் அதாவது மாயையினை நியமிப் பவர் என்று அறிக. மாயை மாயி என்னும் இரண்டிடத்துமுள்ள ஓ என் னும் அர்த்தமுடைய तु(து) என்னும் சொல் எதுவோ அது மாயை மாயை யுடையவர் என்னும் இரண்டும் ஒன்றினென்று வேற்றுமை யுடையதென் பதனைக் காட்டும்பொருட்டாம். (சுசு)

சு. மாயாவுபகிதப்பிரஹ்மத்தின் முதற்காரியமும் (ஆகாசமும்), அதன் காரணத் தாற் கிடைத்த மூன்றுவடிவமும் தனதுவடிவமும்.

[கச௩௩] आद्यो विकार आकाशः सोऽस्ति भात्यपि च प्रियः ।
अवकाशस्तस्य रूपं तन्मिथ्या न तु तत्त्रयम् ॥ ६७ ॥

(அ-கை.)

இப்போது மாயாவுபகிதப்பிரஹ்மத்தின் முதற்காரியத்தினைக் கூறு கின்றார்:—

आद्यः विकारः आकाशः ॥

(சு-ம்.)

முதல் விகாரமாகிய காரியம் ஆகாசமாம்.

(அ-கை.)

அவ்வாகாசத்தின் காரணமாகிய பிரஹ்மத்தினின்றும் கிடைத்த மூன்றுவடிவத்தைக் கூறுகின்றார்:—

सः अस्ति भाति अपि च प्रियः ॥

(சு-ம்.)

அவ்வாகாசம் அஸ்திபாதிப்பிரியவடிவமாம்.

(வி-ம்.)

அவ்வாகாசம் சத்து சித்து ஆநந்தவடிவமா யிருக்கின்ற தென்பது பொருள்.

(அ-கை.)

அவ்வாகாசத்தின் தனது வடிவத்தைக் கூறுகின்றார் :—

तस्य रूपं अवकाशः ॥

(சு-ம்.)

அவ்வாகாசத்தின் தனது வடிவம் அவகாசமாம்.

(அ-கை.)

அந்த அவகாசம் முன் பிரஹ்மத்தினின்று கிடைத்த மூன்று வடிவத்தினும் வேறுதலைக் கூறுகின்றார்:—

तत् मिथ्या । तत् त्रयं तु न ॥

(சு-ம்.)

அவ்வவகாசம் மித்தையாம். அச்சத்துமுதலிய மூன்றுமோ மித்தையன்று; வாஸ்தவமாம்.

(வி-ம்.)

சத்துமுதலிய மூன்றும் வாஸ்தவமா மென்பது பொருள். (சுஎ)

எ. ஆகாசத்தின் நான்காவதுவடிவமான அவகாசத்தினது மித்தியாத்தன்மையில் காரணம்.

[கசுகூச] न व्यक्तेः पूर्वमस्त्येव न पश्चाच्चापि नाशतः ।
आदावंते च यन्नास्ति वर्तमानेऽपि तत्तथा ॥ ६८ ॥

(அ-கை.)

அவ்வாகாசத்தின் நான்காவதுவடிவமான அவகாசத்தின் மித்தியாத்தன்மையில் ஏதுவைக் கூறுகின்றார் :—

व्यक्तेः पूर्वम् न अस्ति एव च । पश्चात् अपि नाशतः न ॥

(சு-ம்.)

வியக்திக்கு அதாவது வெளிப்படுதற்கு முன் இல்லை. பின்னும் நாசமாதலால் இல்லை அதாவது அவ்காசம் மித்தையாம்.

(அ-கை.)

அப்படியானால் உற்பத்திநாசம் என்னும் இரண்டன் இடைப்பட்ட காலத்தில் தோற்றுகின்ற அவகாசத்திற்கு மித்தியாத்தன்மை எதனாலா மென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

आदौ च अंते यत् न अस्ति तत् वर्तमाने अपि तथा ॥

(சு-ம்.)

ஆதியிலும் அந்தத்திலும் எந்த வஸ்து இல்லையோ அவ்வஸ்து வர்த்தமானகாலத்தில் தோற்றிக்கொண்டிருந்தும் அவ்வாறே * கஅ. இல்லை. (சூ-அ)

அ. முற்கூறிய அர்த்தத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானது வாக்கியம் பிரமாணமாதல்

[கசாகூ] अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत ।
अव्यक्तनिधनान्येवेत्याह कृष्णोऽर्जुनं प्रति ॥ ६९ ॥

(அ-கை.)

சுலோகம் கசாகூச-ல் கூறிய அர்த்தத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானது வாக்கியத்தைப் பிரமாணமாக்குகின்றார் :—

"भारत ! अव्यक्तादीनि व्यक्तमध्यानि अव्यक्तनिधनानि भूतानि एव" इति कृष्णः अर्जुनं प्रति आह ॥

(சு-ம்.)

"அர்ச்சுனா! அவ்வியக்த அதாவது வெளிப்படாத முதலையுடையனவும், வெளிப்பட்ட இடையையுடையனவும், வெளிப்படுதலின்றிய ஈற்றினையுடையனவுமா யிருக்கின்றன ஆகாசாதிகளும் அண்டஜமுதலிய ஜீவர்களும்." என்று ஸ்ரீ-கிருஷ்ணபகவான் அர்ச்சுனனை நோக்கிச் சொன்னார்.

க. ஆகாயத்தில் சத்துமுதலிய மூன்றுவடிவங்க ளிருத்தலில் அநுபவப்பிரமாணமும், அவகாசமின்றியும் அவற்றின் அநுபவ முண்டாதலும்.

---

* கஅ. எப்படிப் பழுதையில் பாம்பும் அதன் ஞானமும் ஆதியிலும் அந்தத்திலும் இல்லையோ, அதனால் இடையில் தோற்றிக்கொண்டிருக்கினும் இல்லையோ, அது போலச் சிருஷ்டிக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் இல்லாததாகிய அவகாசம் அது இடையில் தோற்றினும் இல்லாததாகவே யிருக்கின்றது.

[கசாகூகூ] मृद्वत्ते सच्चिदानंदा अनुगच्छंति सर्वदा ।
निराकाशे सदादीनामनुभूतिर्निजात्मनि ॥ ७० ॥

(அ-கை.)

அவகாசத்தில் சத்துமுதலிய மூன்றுவடிவம் இருப்பதில் பிரமாணம் யாது? என்று ஆசங்கித்து அநுபவமே பிரமாணம் என்று கூறுகின்றார்:—

मृद्वत् ते सच्चिदानन्दाः सर्वदा अनुगच्छन्ति ॥

(சு-ம்.)

மண்முதலியவற்றைப்போல அச்சச்சிதாநந்தம் எப்போதும் அநுகுதமா யிருக்கின்றது.

(வி-ம்.)

இங்கு மண்ணைப்போல என்பது திருஷ்டாந்தத்தைக்காட்டுதற் பொருட்டாம். ஆதலால் கடமுதலியவற்றில் எப்படி மூன்று காலத்திலும் மண் அநுகூதமாய் அதாவது உள்ளீடா யிருக்கின்றதோ, அதுபோல அவகாசத்திலும் சத்துமுதலிய மூன்று உருவமும் அநுகூதமா யிருக்கின்றன என்பது பொருள்.

(அ-கை.)

அவகாசத்தினைவிட்டுச் சத்துமுதலிய மூன்றுவடிவமும் எப்படி அநுபவத்திற்கு விஷயமாகும் என்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

निराकाशे निजात्मनि सदादीनां अनुभूतिः ॥

(சு-ம்.)

அவகாசமின்றிய நிஜாத்மாவில் சத்துமுதலியவற்றின் அநுபவமுண்டாகின்றது. (எ0)

க0. அவகாசமின்றிச் சத்துமுதலியவற்றின் அநுபவத்தினைச் சம்பாதித்தலும் சங்கை சமாதானமும்.

[கசாகூஎ] अवकाशे विस्मृतेऽथ तत्र किं भाति ते वद ।
शून्यमेवेति चेदस्तु नाम तादृग्विभाति हि ॥ ७१ ॥

(அ-கை.)

அந்த கசாகூகூ-வது சுலோகத்திற் கூறிய அநுபவத்தினை விளக்குகின்றார்:—

अवकाशे विस्मृते अथ तत्र ते किं भाति वद ॥

(சு-ம்.)

சித்தாந்தி கேட்கின்றார்:—வாதியே! அவகாசம் மறக்கப்படின் அங்கு உனக்கு என்ன தோற்றுகின்றது? அதனைச் சொல்.

(அ-கை.)

பூர்வபக்ஷியின் பிரசினத்தைச் சித்தாந்தி அநுவதிக்கின்றார்:—

शून्यं एव इति चेत् ॥

(சு-ம்.)

சூநியமே யிருக்கின்றது என்று கூறின்.

(அ-கை.)

சித்தாந்தி அங்கிகாரஞ்செய்து பரிகரிக்கின்றார்:—

अस्तु नाम ॥

(சு-ம்.)

செவ்வையாய் இருக்குக.

(அ-கை.)

சப்தத்தினுற் சூநியமாய்ப் பொருளினால் அவகாசத்தின் அபாவவடிவ விசேஷணத்தின் விசேஷியம் அதாவது ஆதாரம் ஆகுதலால் தோற்றும் ஓர் வஸ்துவா மென்று அங்கிகரிக்கத்தக்கதா மென்று கூறுகின்றார்:—

तादृक् विभाति हि ॥

(சு-ம்.)

அத்தன்மைய ஓர் வஸ்துவே தோற்றுகின்றது.

(வி-ம்.)

இங்கு மூலத்தில் உள்ள "हि (ஹி)" என்னும் சொல் உலகப்பிர சித்தியை யறிவித்தற்பொருட்டாம். (எக)

௭௧. பிரகிருதப்பிரஹ்மசொருபத்தினைக் கூறுதலும், அதன் சத்துவடிவத் தன்மையும், நிஜசுகவடிவத்தன்மையும்.

[௧௪௩௮] तादृक्त्वादेव तत्सत्त्वमौदासीन्येन तत्सुखम् ।
आनुकूल्यप्रातिकूल्यहीनं यत्तन्निजं सुखम् ॥ ७२ ॥

(அ-கை.)

இப்படி அவகாசத்தின் விஸ்மரணத்தால் ஓர் வஸ்து மிஞ்சுக. அத ஞல் எடுத்துக்கொண்ட அவகாசமின்றிய சத்துமுதலியவற்றின் அநுபவத் தில் என்ன கிடைத்தது ? என்று ஆசங்கித்து, விசேஷியமான அவகாசத் தின் இன்மைவடிவ விசேஷணத்தின் ஆசிரயமா யிருத்தலால் தோற்றுகின்ற வஸ்துவின் சொரூபம் அங்கீகரிக்கத்தக்கதா மென்று கூறுகின்ருர் :—

तादृक्त्वात् एव तत्सत्त्वम् ॥

(சு-ம்.)

அத்தன்மையதாய் அதாவது விசேஷியமா யிருத்தலால் தோற்றுத லினலேயே அதற்குச் சத்துத்தன்மை யிருக்கின்றது.

(அ-கை.)

அந்தக் கூறிய வஸ்துவின் சுகசொரூபத்தன்மையினைக் கூறுகின்ருர்:-

औदासीन्येन तत् सुखम् ॥

(சு-ம்.)

உதாசீனத்தன்மையினுல் அது சுகவடிவமாம்.

(வி-ம்.)

உதாசீனத்தன்மைக்கு விஷய மாகுதலால் கூறிய அவ்வஸ்துவிற்குச் சுகவடிவத்தன்மை யிருக்கின்றது என்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானுல் அநுகூலத்தன்மை யின்றிய அவ்வஸ்துவிற்குச் சுக வடிவத்தன்மை எவ்வாறு இருக்கின்றதென்று ஆசங்கித்துக் கூறுகின்ருர்:-

आनुकूल्यप्रातिकूल्यहीनं यत् तत् निजं सुखम् ॥

(சு-ம்.)

அநுகூலத்தன்மை பிரதிகூலத்தன்மைகளின்றி யிருப்பது எதுவோ அது நிஜசுகமாம். (எ௨)

கடு. சுலோகம் கசஈ௯அ-ல் கூறிய நிஜசுகத்தினைச் சம்பாதித்தலும், நிஜதுக்கத்தின் இன்மையும்.

[கசஈ௯௬] आनुकूल्ये हर्षधीः स्यात्प्रातिकूल्ये तु दुःखधीः ।
द्वयाभावे निजानंदो निजदुःखं न तु क्वचित् ॥ ७३ ॥

(அ-கை.)

அதே நிஜவடிவத்தினை உபபாதனஞ் செய்கின்றார் :—

आनुकूल्ये हर्षधीः । प्रातिकूल्ये तु दुःखधीः । द्वयाभावे निजानंदः स्यात् ॥

(சூ-ம்.)

அநுகூலத்தன்மையில் சந்தோஷவுணர்ச்சி யுண்டாகின்றது; பிரதிகூலத்தன்மையிலோ துக்கவுணர்ச்சி யுண்டாகின்றது. இரண்டுமின்மையில் நிஜாநந்த முண்டாகின்றது.

(அ-கை.)

அப்படியானால் நிஜாநந்தத்தினைப்போல நிஜதுக்கமும் ஏன் உண்டாகாதென்று ஆசங்கித்துத் துக்கத்தில் நிஜவடிவத்தின் சித்தியின்மையினால் நிஜதுக்கம் பொருந்தாதென்று கூறுகின்றார் :—

निजदुःखं तु क्वचित् न ॥

(சூ-ம்.)

* ககூ. நிஜதுக்கமோ ஓரிடத்தும் இல்லை. (எகூ)

---

ககூ "இது சுகம்" என்னும் ஞானமின்றிச் சுகத்தின் சத்தை ஓரிடத்துமில்லை. ஆதலால் ஞானவடிவ ஆத்மாவின் வேறாகிய சுகத்தின் சொரூபம் காணப்படாமையால் இலௌகிகசுகமும் ஆத்மசொரூபமேயாம். விஷயமாகுதலால் எது விளங்குகின்றதோ அது விருத்திவடிவ உபாதியினாலாகியதாம். இவ்வாறு துக்கம் ஆத்மசொரூபம் அன்று; ஏனெனின் துக்கத்தின் ஆத்மசொரூபத்தன்மையில் பிரத்தியக்ஷாதிவடிவ எப்பிரமாணமும் காணப்படவில்லை.

எப்புருஷனும் "நான் துக்கவடிவினன்" என்று அநுபவிக்கிறதில்லை. சுகத்தின் ஆத்மசொரூபத்தன்மை(ஞானவடிவத்தன்மை)யில் "விஞ்ஞானம் ஆநந்தம் பிரஹ்மமாம்" என்பவை முதலிய அநேகசுருதிவடிவ முதன்மைப் பிரமாணங்களுண்டு. ஆத்மாதான் பரமப்பிரியத்திற்கு விஷயமாதலானது எல்லோருடைய அநுபவத்தினாலும் சித்தித்துள்ளது. அது ஆத்மாவின் சுகவடிவத்தன்மையின்றிச் சம்பவியாது. ஆதலால் ஆத்மா சுகவடிவமேயாம். எனக்குச் சுகமுண்டாகுக என்று சுகத்தின் விஷயத்தன்மை யாது தோற்றுகின்றதோ அது பிராந்தியினால் சித்தித்ததாம். ஏனெனின், அஞ்ஞானிகள் சுருதிமுதலியவற்றால் சித்தித்த சுகத்தின் ஆத்மவடிவத்தன்மையை அறியாதவர்களாய்ச் சுக ஆத்மாக் (சித்தம்சங்)களின் பிரதிபிம்பத்தினைக் கிரகிக்கும் விருத்திவாயிலாக இந்தச்சுக ஆத்மாக்களின் சம்பந்தத்தினை அடைந்து, சுகத்தினை ஆத்மாவினதாக (மமதையின் விஷயமாக)க்கொண்டு சந்தோஷத்தை அடைகின்றார்கள்.

இப்படிச் சுகத்தினைப்போல துக்கத்தில் ஆத்மசொரூபத்தன்மை சித்தித்தலின்மையின் நிஜதுக்கம் உலகத்திலாவது சாஸ்திரத்திலாவது ஓரிடத்தும் கண்டதில்லை.

கட. க்ஷணிக சுகதுக்கங்களினது மானஸத்தன்மை.

[கசசο] निजानंदे स्थिरे हर्षशोकयोर्व्यत्ययः क्षणात् ।
मनसः क्षणिकत्वेन तयोर्मानसतेष्यताम् ॥ ७४ ॥

(அ-கை.)

அப்படியானல் நிஜாநந்தம் எப்போதும் ஆநந்தவடிவமா யிருத்தலால் எப்போதும் சுகமே யுண்டாகும்; துக்க முண்டாகா தென்று ஆசங்கித்து அந்த நிஜாநந்தம் நித்தியமாயினும், அதனைக் கிரகிக்கும் மனம் க்ஷணிகமா யிருத்தலால் மனதினுலாகிய அந்தச் சுகதுக்கங்களுக்கும் க்ஷணிகத் தன்மை யிருக்கின்றது என்று கூறுகின்றார் :—

निजानन्दे स्थिरे हर्षशोकयोः क्षणात् व्यत्ययः । मनसः क्षणिकत्वेन तयोः मानसता इष्यताम् ॥

(சு-ம்.)

நிஜாநந்தம் ஸ்திரம் அதாவது நித்தியமாயினும் சுகதுக்கங்களுக்கு க்ஷணத்தில் மாறுதலான பரிணும முண்டாகின்றது; மனம் க்ஷணிகமா யிருத்தலால். அந்தச் சுகதுக்கங்களுக்கு மனதினுற்றோன்றியதன்மை அங்கீகரிக்கத்தக்கதாம். (எச)

கசு. திருஷ்டாந்தத்தினுல் சித்தித்த அர்த்தத்தைத் தார்ஷ்டாந்தத்தில் பொருத்துதலும், ஆகாசத்தில் சம்பாதிக்கப்பட்ட அர்த்தத்தினை வாயுமுதல் தேகபரியந்தம் அங்கீகரித்தலும்.

[கசசக] आकाशेऽप्येवमानंदः सत्ताभाने तु संमते ।
वाय्वादिदेहपर्यंतं वस्तुष्वेवं विभाव्यताम् ॥ ७५ ॥

(அ-கை.)

சுலோகம் கசஙகூ-ல் கூறிய நிஜாத்மவடிவ திருஷ்டாந்தத்தில் சித்தித்த அர்த்தத்தினைத் தார்ஷ்டாந்தமான ஆகாசத்தில் பொருத்துகின்றார் :—

एवं आकाशे अपि आनंदः । सत्ताभाने तु संमते ॥

(சு-ம்.)

இவ்வாறு நிஜாத்மாவில் சொல்லியபடி ஆகாசத்திலும் ஆநந்த மிருக்கின்றது. சத்தையும் விளக்கமுமோ சம்மதமாம்.

(வி-ம்.)

சத்தையும் விளக்கமும் ௧௪௩௯-௧௪௩௩-அ-வது சுலோகங்களில் உன்னால் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றனவாகலின் உபபாதனஞ் செய்யத்தக்கனவன்றென்பது பொருள்.

(அ-கை.)

ஆகாசத்தில் சொல்லப்பட்ட (௧௪௩௩-வது சுலோகத்தினால் சொல்லப்பட்ட) அர்த்தமானது வாயுமுதல் சரீரபரியந்தமான வஸ்துக்களில் அங்கீகாரஞ்செய்தற் குரியதாமென்று கூறுகின்றார் :—

एवं वाय्वादिदेहपर्यंतं वस्तुषु विभाव्यताम् ॥

(சு-ம்.)

இவ்வாறு வாயுமுதல் தேகபரியந்தமான வஸ்துக்களில் பாவிக்கப்படுக. (எரு)

கரு. வாயுமுதலியவற்றின் அசாதாரணதர்மம்.

[௧௪௪௨] गतिस्पर्शौ वायुरूपं वह्नेर्दाहप्रकाशने ।
जलस्य द्रवता भूमेः काठिन्यं चेति निर्णयः ॥ ७६ ॥

(அ-கை.)

அங்கு வாயுமுதலியவற்றின் அசாதாரண அதாவது அவ்வவற்றிற்குரிய தர்மங்களை இரண்டு சுலோகங்களால் காட்டுகின்றார் :—

गतिस्पर्शौ वायुरूपं । वह्नेः दाहप्रकाशने । जलस्य द्रवता च । भूमेः काठिन्यं । इति निर्णयः ॥

(சு-ம்.)

கதியும் (செல்லுதலும்) ஸ்பரிசமும் வாயுவின் வடிவமாம். அக்கினிக்குத் தாகமும் பிரகாசமும் வடிவமாம். ஜலத்திற்கு நெகிழ்ச்சி வடிவமாம். பூமிக்குக் கடினத்தன்மை வடிவமாம். இது நிச்சயம். (எசு)

[௧௪௪௩] असाधारण आकार औषध्यन्नवपुष्यपि ।
एवं विभाव्यं मनसा तत्तद्रूपं यथोचितम् ॥ ७७ ॥

(அ-கை.)

இதுவுமது :—

औषध्यन्नवपुषि अपि असाधारणः आकारः । एवं तत्तद्रूपं यथोचितं मनसा विभाव्यम् ॥

(சு-ம்.)

ஔஷதி அந்நம் சரீரம் என்பவற்றிலும் அசாதாரணவடிவம் அதாவது அவ்வவற்றின் தர்ம மிருக்கின்றன. இவ்வாறே அந்தந்த வஸ்துவின் உருவத்தை அதாவது அசாதாரணவடிவத்தைத் தக்கபடி மனதினால் பாவிக்கவேண்டும். (எஎ)

௧௬. சச்சிதாநந்தத்தின் வியாப்திவடிவ பலிதத்தைக் கூறுதல்.

[௧௪௪௪] अनेकधा विभिन्नेषु नामरूपेषु चैकधा ।
तिष्ठंति सच्चिदानंदा विसंवादो न कस्य चित् ॥ ७८ ॥

(அ-கை.)

பலித்த பொருளைக் கூறுகின்றார் :—

अनेकधा विभिन्नेषु नामरूपेषु च एकधा सच्चिदानंदाः तिष्ठंति । कस्यचित् विसंवादः न ॥

(சு-ம்.)

அநேகவிதத்தால் வேறுபட்ட நாமரூபங்கள் எவையோ அவற்றின் சமானமான சத்து சித்து ஆநந்தங்கள் நிலைத்திருக்கின்றன. இதில் ஒருவருக்கும் * உ௦. விவாத மில்லை. (எஅ)

௩. பலத்தோடு நாமரூப ஜகத்தின் உபேக்ஷை ௧௪௪௫-௧௪௫௦.

௧. ஏது திருஷ்டாந்தங்களோடு நாமரூபங்களின் கதி (கற்பிதத்தன்மை).

[௧௪௪௫] निस्तत्त्वे नामरूपे द्वे जन्मनाशयुते च ते ।
बुद्ध्या ब्रह्मणि वीक्ष्यस्व समुद्रे बुद्बुदादिवत् ॥ ७९ ॥

(அ-கை.)

அப்போது தோற்றுகின்ற நாமரூபங்களுக்குக் கதி அதாவது தசை

---

* உ௦. வேறுவேறான நாமத்திலும் ரூபத்திலும் வியவகாரகாலத்தில் அஸ்தி பாதி பிரியவடிவமாகச் சமானமாய்த் தோற்றும் சச்சிதாநந்தவடிவப் பிரஹ்மத்தின் சாமானியவடிவம் எதுவோ அதில் ஆஸ்திக அல்லது நாஸ்திகவாதிகளுக்காவது இலௌகிக ஜனங்களுக்காவது விவாத மில்லை. ஏனெனின், அவற்றின் அங்கீகாரமின்றிக் "கடம் இருக்கிறது, கடம் விளங்குகிறது, கடம் பிரியமா யிருக்கின்றது" என்றல் முதலிய நாமரூபவியவகாரம் சித்தியாமையின் பிரசங்க முண்டாகும் என்பது கருத்து.

(பிலே) யாது என்று ஆசங்கித்துக் கற்பிதத்தன்மையே நாமரூபத்தின் கதியா மென்று கூறுகின்றார் :—

नामरूपे द्वे निस्तत्त्वे ॥

(சு-ம்.)

நாமரூப மிரண்டும் தத்துவமின்றியனவாம் அதாவது கற்பிதமாம்.

(அ-கை.)

நாமரூபத்தின் கற்பிதத்தன்மையில் ஏதுவைக் கூறுகின்றார் :—

च ते जन्मनाशयुते समुद्रे बुद्बुदादिवत् बुध्या ब्रह्मणि वीक्ष्यस्व ॥

(சு-ம்.)

அந்த நாமரூபங்கள் உற்பத்திநாசத்தோடு கூடியனவாம். ஆகலால் அவற்றைச் சமுத்திரத்தில் * உக. குமிழிமுதலியவற்றைப்போலப் புத்தியி ஞல் பிரஹ்மத்தில் மித்தையாகக் காண்க. (எகூ)

உ. பிரஹ்மஞானத்தினுல் நாமரூபங்களைத்தானே விடுதலின் சித்தி.

[கசசகூ] सच्चिदानंदरूपेऽस्मिन्पूर्णे ब्रह्मणि वीक्षिते ।
स्वयमेवावजानंति नामरूपे शनैः शनैः ॥ ८० ॥

(அ-கை.)

அந்த நாமரூபத்தின் கற்பிதத்தன்மையால் என்ன உண்டாகின்ற தெனக் கூறுகின்றார் :—

सच्चिदानंदरूपे अस्मिन् पूर्णे ब्रह्मणि वीक्षिते नामरूपे शनैः शनैः स्वयं एव अवजानंति ॥

(சு-ம்.)

சச்சிதாநந்தவடிவ இந்தப் பூரணப்பிரஹ்மம் சாக்ஷாத்கரிக்கப்பட்ட போது நாமரூபங்களை மெல்ல மெல்ல முமுக்ஷுவானவன் தானே விடுகின் றான். (அ0)

---

* உக. முதலியவென்னும் சொல்லால் நுரை அலை முதலியனவும் கொள்ளப் படும். எப்படிக் குமிழிமுதலியன சமுத்திரத்தினும் பின்னமு மன்றோ, அபின்னமு மன்றோ, பின்னுபின்னமான இருவடிவமுமன்றோ, அதனுல் அநிர்வசநீய மாதலின் உற்பத்திநாச முடையனவா யிருத்தலால் சமுத்திரத்தில் கற்பிதமாமோ, அதுபோல் நாமரூபமும் அநிர்வசநீயமாதலாலும் உற்பத்திநாச முடையனவா யிருத்தலாலும் பிரஹ் மத்தில் கற்பிதமாம்.

க. பிரஹ்மஞானத்தினது திடத்தன்மையின்பொருட்டுச் சிரவணமுதலிய வற்றைப்போல நாமரூபமான துவைதத்தினை விடுதல் செய்யத்தக்கதாமெனல்.

[கசசஎ] यावद्यावदवज्ञा स्यात्तावत्तावत्तदीक्षणम् ।
यावद्यावद्वीक्ष्यते तत्तावत्तावदुभे त्यजेत् ॥ ८१ ॥

(அ-கை.)

பிரஹ்மஞானத்தின் திடத்தன்மை துவைதத்தினை விடுதலைமுன்னிட்டதாயிருத்தலின் சிரவணமுதலியன செய்யத்தக்கனவாதல்போல மித்தியாத்தன்மையினால் துவைதத்தின் நிராதரமும் ஜிஞ்ஞாசுவினால் செய்யத்தக்கதாம் என்று கூறுகின்றார் :—

यावत् यावत् अवज्ञा स्यात् । तावत् तावत् तदीक्षणं । यावत् यावत् तत् वीक्ष्यते । तावत् तावत् उभे त्यजेत् ॥

(சு-ம்.)

எவ்வளவுக் கெவ்வளவு நாமரூபத்தின் விடுதல் உண்டாகின்றதோ, அவ்வளவுக் கவ்வளவு அந்தப் பிரஹ்மத்தின் தரிசன முண்டாகும். எவ்வளவுக் கெவ்வளவு அந்தப் பிரஹ்மம் காணப்படுகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு நாமரூபங்க ளிரண்டனையும் விடுகின்றான். (அக)

உ. துவைதத்தினை விடுதலும் பிரஹ்மத்தினை அறிதலுமாகிய இவற்றின் அப்பியாசத்தினது ஜீவன்முத்திவடிவ பயன்.

[கசசஅ] तदभ्यासेन विद्यायां सुस्थितायामयं पुमान् ।
जीवन्नेव भवेन्मुक्तो वपुरस्तु यथा तथा ॥ ८२ ॥

(அ-கை.)

நாமரூபங்களை விடுதலும் பிரஹ்மதரிசனமுமாகிய இவ்விரண்டினது அப்பியாசத்தின் பயனைக் கூறுகின்றார் :—

तदभ्यासेन विद्यायां सुस्थितायां अयं पुमान् जीवन् एव मुक्तः भवेत् । वपुः यथा तथा अस्तु ॥

(சு-ம்.)

அவ்விரண்டன் அப்பியாசத்தால் வித்தையாகிய பிரஹ்மஞானம் செவ்வையாய் நிலைத்தபோது இப்புருஷன் ஜீவித்துக்கொண்டிருக்கும் போதே முக்தனாகின்றான். சரீரம் எப்படியோ அப்படி இருக்குக. (அஉ

௯. பிரஹ்மாப்பியாசத்தின் சொரூபம்.

[கசசக] तच्चिंतनं तत्कथनमन्योऽन्यं तत्प्रबोधनम् ।
एतदेकपरत्वं च ब्रह्माभ्यासं विदुर्बुधाः ॥ ८३ ॥

(அ-கை.)

இப்போது பிரஹ்மாப்பியாசத்தின் சொரூபத்தைக் கூறுகின்றார் :—

तच्चिंतनं । तत्कथनं । अन्योन्यं तत्प्रबोधनं । च एतदेकपरत्वं बुधाः ब्रह्माभ्यासं विदुः ॥

(சு-ம்.)

அந்தப் பிரஹ்மத்தின் சிந்தனமும், அந்தப் பிரஹ்மத்தினைப் பேசுதலும் ஒருவருக்கொருவர் அந்தப் பிரஹ்மத்தினைப் போதித்தலுமாக இவ்வாறு ஒரே பிரஹ்மத்தின் தற்பரத்தன்மையினைப் பண்டிதர்கள் பிரஹ்மாப்பியாச மென்று அறிகிறார்கள்.

௬. நிரந்தரம் நீண்டகாலம் ஆதரவோடு அப்பியசித்தலால் அநாதித்துவைத வாசனையின் நிவிருத்தி சம்பவித்தல்.

[கச௫0] वासनानेककालीना दीर्घकालं निरंतरम् ।
सादरं चाभ्यस्यमाने सर्वथैव निवर्तते ॥ ८४ ॥

(அ-கை.)

அப்படியானால் அநாதிகாலந்தொட்டுத் தோற்றுகின்ற யாதொரு ஜகத்துண்டோ, அது யாதேனுமோர்காலத்துச் செய்யப்பட்ட ஞானத்தின் அப்பியாசத்தினால் எப்படி நிவிருத்தியாகும் என்று ஆசங்கித்து, நெடுங் காலம்வரையில் இடைவிடாது ஆதரவோடு சேவிக்கப்பட்ட அப்பியாசத்தினால் அநாதிகாலத்ததாயிருந்தும் துவைதம் நீங்கவேசெய்கின்றதென்று கூறுகின்றார்:—

अनेककालीना वासना दीर्घकालं निरंतरं च सादरं अभ्यस्यमाने सर्वथा एव निवर्तते

(சு-ம்.)

அநாதிகாலத்து வாசனை அதாவது பிரபஞ்சத்தின் சம்ஸ்காரம் நெடுங் காலம் நிரந்தரம் ஆதரவோடு முன் கசசக-வது சுலோகத்திற் சொல்லப்

பட்ட பிரஹ்மாப்பியாசம் செய்யப்பட்டபோது முற்றும் * உஉ. நீங்குகின்றது. (அ௪)

ங. ஒரே பிரஹ்மத்திற்கு மாயையினால் அநேகவடிவம் சம்பவிக்கும் என்பதோடு ஜகத்தில் அநுகூதமாயுள்ள பிரஹ்மத்திற்கு ஜகத்தில்லாததன்மையும் க௯ரு-க௯௭.

க. ஒரே பிரஹ்மத்திற்கு மாயையினால் அநேக காரியவடிவத்தன்மை சம்பவித்தல் க௯ரு-க௯ரு.

க. ஒரு பிரஹ்மத்திற்கு அநேகத்தன்மை திருஷ்டாந்தத்தால் சம்பவித்தல்.

[க௯ரு] मृच्छक्तिवद्ब्रह्मशक्तिरनेकाननृतान्सृजेत् ।
यद्वा जीवगता निद्रा स्वप्नश्चात्र निदर्शनम् ॥ ८५ ॥

(அ-கை.)

அப்படியானால் ஒரு பிரஹ்மத்திற்கு அநேக வடிவங்களோடுகூடிய ஜகத்திற்குக் காரணமாந்தன்மை சம்பவியாதென்று ஆசங்கித்து, மாயையோடுகூடிய ஒரு பிரஹ்மத்திற்கு அநேக வடிவங்களோடுகூடிய ஜகத்திற்குக் காரணமாந்தன்மை பொருந்துகின்றதென்று கூறுகின்றார்:—

मृच्छक्तिवत् ब्रह्मशक्तिः अनेकान् अनृतान् सृजेत् ॥

(சு-ம்.)

மண்ணின் சக்தியினைப்போலப் பிரஹ்மத்தின் சக்தியாகிய மாயையாதோ, அது அநேக அதாவது வெவ்வேறு பொய்வஸ்துக்களைச் சிருஷ்டிக்கின்றது.

(வி-ம்.)

இங்குப் பொய்வஸ்துக்களையென்பதற்குத் தனது காரியங்களையென்பது பொருள்.

(அ-கை.)

அப்படியானால் மண்ணின் சக்தியானது மண்ணின் சமான சத்தையுடையதாயிருத்தலின் அநேக காரியங்களுக்கு ஏதுவாதலாலும், பிரஹ்

* உஉ. எப்படி அநாதிகாலத்துப் பர்வதத்திலுள்ள இருள் ஓர் காலத்துக் கொழுத்தப்பட்ட தீபத்தினால் நிவிருத்தியாகின்றதோ, அதுபோல அநாதிகாலத்துத் துவைதப் பிரமம் நெடுங்காலம் வரையில் (ஒருவருஷம் இரண்டுவருஷம்) நிரந்தரம் (சிலநாள் அல்லது வியவகாரவடிவ இடையின்றி) ஆதரவோடு ஓர்காலத்துச் செய்யப்பட்ட க௯௪கு வது சுலோகத்திற்கூறிய ஞானப்பியாசத்தினால் நீங்குகின்றது.

மத்தின் சக்தி மித்தையா யிருத்தலால் அநேகங்களுக்கு ஏதுவாதலை யங்கீகரித்தலாலும் இந்த மண்ணினது சக்தியின் திருஷ்டாந்தம் விஷமமாம் அதாவது தார்ஷ்டாந்தத்தை அநுசரியாததா மென்று * உ௲. ஆசங்கித்து அந்நியதிருஷ்டாந்தவடிவ பக்ஷத்தினைக் கூறுகின்றார்:—

**यद्वा अत्र जीवगता निद्रा च स्वप्नः निदर्शनम् ॥**

(சு-ம்.)

அல்லது இங்கு ஜீவனிடத்துள்ள நித்திரையும் சொப்பனவடிவமுமான திருஷ்டாந்த முளது. (அரு)

உ. திருஷ்டாந்தத்தினை விளக்குதலோடு தார்ஷ்டாந்தமும்.

[கசருஉ] **निद्राशक्तिर्यथा जीवे दुर्घटस्वप्नकारिणी ।**
**ब्रह्मण्येषा स्थिता माया सृष्टिस्थित्यंतकारिणी ॥ ८६ ॥**

(அ-கை.)

சுலோகம் கசருக-ல் கூறிய திருஷ்டாந்தத்தினை விளக்குகின்றார்:—

**यथा जीवे निद्राशक्तिः दुर्घटस्वप्नकारिणी ॥**

(சு-ம்.)

எப்படி ஜீவனிடத்துள்ள நித்திராசக்தியானது நிகழ்தற்கரிய சொப்பனத்தினைச் செய்வதா யிருக்கின்றதோ.

(அ-கை.)

தார்ஷ்டாந்திகத்தைக் கூறுகின்றார்:—

**ब्रह्मणि स्थिता एषा माया सृष्टिस्थित्यंतकारिणी ॥**

(சு-ம்.)

அதுபோலப் பிரஹ்மத்திலுள்ள இந்த மாயையானது ஜகத்தின் உற்பத்திஸ்திதிநாசங்களைச் செய்வதா யிருக்கின்றது. (அசு)

---

* உ௲. கசகஎ-வது சுலோகத்தின் கரு-வது டிப்பணத்தில் சொல்லியபடி மண்ணுபகித (மண்ணினால் வரையப்பட்ட) சேதனமே கடத்தின் விவர்த்தவுபாதானமாம். அது பாரமார்த்திக சத்தையுடையதா யிருக்கின்றது. கடவடிவத்தால் பரிணாமத்தையடைந்த மண்ணின் சக்தி வியாவகாரிக சத்தையுடையதாம்; இதனால் உபாதானத்தின் சமானசத்தையுடைய தன்று. ஆதலால் இந்தத் திருஷ்டாந்தம் விஷமமன்று அவ்வாறாயினும் அச்சித்தாந்தத்தை யறியாதவர்களான ஸ்தூலதிருஷ்டி யுடையவர்களதாம் இச்சங்கை.

௩. நித்திராசக்தியின் நிகழ்தற்கரியதனைச் செய்யுந்தன்மை.

[கச௫௩] स्वप्ने वियद्गतिं पश्येत्स्वमूर्द्धच्छेदनं यथा ।
मुहूर्ते वत्सरौघं च मृतपुत्रादिकं पुनः ॥ ८७ ॥

(அ-கை.)

நித்திராசக்தியின் நிகழ்தற்கரியதன்மையினையே காட்டுகின்றார்:—

'यथा स्वप्ने व्यद्गतिं । स्वमूर्धच्छेदनं । च मुहूर्ते वत्सरौघं । मृतपुत्रादिकं पुनः पश्येत् ॥

(சு-ம்.)

எப்படிச் சொப்பனத்தில் ஆகாயத்திற் செல்லுதலையும், தன் தலையினை வெட்டிக்கொள்ளுதலையும், இரண்டு கடிகையளவுள்ள சொப்பனகாலத்தில் வருஷங்களின் கூட்டங்களையும் காண்கின்றானோ, மரித்துப்போன புத்திராதியரை மறுபடியும் காண்கின்றானோ அதுபோல. (அஎ)

௪. சொப்பனத்தின் நிகழ்தற்கரியதன்மையில் காரணம்.

[கச௫௪] इदं युक्तमिदं नेति व्यवस्था तत्र दुर्लभा ।
यथा यथेक्ष्यते यद्यत्तत्तद्युक्तं तथा तथा ॥ ८८ ॥

(அ-கை.)

சொப்பனத்தின் நிகழ்தற்கரியதன்மையில் ஏதுவைக் கூறுகின்றார்:—

"इदं यक्तं । इदं न" इति व्यवस्था तत्र दुर्लभा । यत् यत् यथा यथा ईक्ष्यते । तत् तत् तथा तथा युक्तम् ॥

(சு-ம்.)

"இது யுக்தம், இது யுக்தமன்று." என்னும் நியமம் அங்குத் துர்லபமாம். எந்த எந்த வஸ்து எப்படி எப்படிக் காணப்படுகின்றதோ அந்த அந்த வஸ்து அப்படி அப்படிப் பொருத்தமுள்ளதாம். (அஅ)

௫. சுலோகம் கச௫௩-ல் கூறிய அர்த்தத்தினைக் கைமுதிகநியாயத்தால் விளக்குதல்.

[கச௫௫] ईदृशो महिमा दृष्टो निद्राशक्तेर्यदा तदा ।
मायाशक्तेरचिंत्योऽयं महिमेति किमद्भुतम् ॥ ८९ ॥

(அ-கை.)

சுலோகம் கச௫௩-ல் கூறிய அர்த்தத்தினைக் கைமுதிகநியாயத்தால் விளக்குகின்றார்:—

यदा निद्राशक्तेः ईदृशः महिमा दृष्टः । तदा मायाशक्तेः अयं अचिंत्यः महिमा । इति किं अद्भुतम् ॥

(சு-ம்.)

எப்போது நித்திராசக்திக்குச் சுலோகம் ௧௪௫௩-ல் கூறிய இத்தன்மைய மகிமை காணப்பட்டதோ, அப்போது மாயாசக்திக்கு இச்சிந்திக்கக்கூடாத மகிமையுளது என்பதில் ஆச்சரியம் யாது? எதுவு மில்லை. (௮௯)

௯. பிரஹ்மத்திலுள்ள மாயை ஜகத்துக்குக் காரணமாதலில் திருஷ்டாந்தம்.

[௧௪௫௫] शयाने पुरुषे निद्रा स्वप्नं बहुविधं सृजेत् ।
ब्रह्मण्येवं निर्विकारे विकारान्कल्पयत्यसौ ॥ ९० ॥

(அ-கை.)

பிரயத்தினமின்றிய அதாவது கிரியையின்றிய பிரஹ்மத்திலுள்ள மாயை ஜகத்திற்குக் காரணமாதலில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

शयाने पुरुषे निद्रा बहुविधं स्वप्नं सृजेत् । एवं निर्विकारे ब्रह्मणि असौ विकारान् कल्पयति ॥

(சு-ம்.)

எப்படிப் படுக்கையிலுள்ள ஜீவனிடத்து நித்திரை வெகுவிதமான சொப்பனத்தினைக் கற்பிக்கின்றதோ, அதுபோல நிர்விகார அதாவது கிரியையின்றிய பிரஹ்மத்தில் இந்த மாயை அநேகவிதமான விகாரவடிவ காரியங்களைக் கற்பிக்கின்றது. (௯0)

௭. ஜடசேதனங்களின் பேதத்தோடு மாயையினலாக்கப்பட்ட பதார்த்தங்கள்.

[௧௪௫௬] खानिलाग्निजलोर्व्यंडलोकप्राणिशिलादिकाः ।
विकाराः प्राणिधीष्वंतश्चिच्छाया प्रतिबिंबिता ॥ ९१ ॥

(அ-கை.)

மாயையினலாக்கப்பட்ட பதார்த்தங்களைக் காட்டுகின்றார்:—

खानिलाग्निजलोर्व्यण्डलोकप्राणिशिलादिकाः विकाराः ॥

(சு-ம்.)

ஆகாயம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி, * ௨௪. பிரஹ்மாண்டம்,

---

* ௨௪. மாயாவிசிஷ்ட சேதனவடிவ மகேசுவரனினின்றும் முதலில் அபஞ்சீகிருத அதாவது சூக்ஷ்மபஞ்சபூதங்களின் உற்பத்தி யுண்டாகின்றது. அவற்றினின்றும் பதினறுகலைவடிவ லிங்கமான தசேந்திரிய பஞ்சப்பிராணமனவடிவ சூக்ஷ்ம சரீரத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. சமஷ்டிவடிவ சூக்ஷ்மசரீரத்திற்கு அபிமானியாய் இந்த மகேசுவரனே ஹிரண்யகர்ப்பர் சூத்திராத்மா முதலியனவாகச் சொல்லப்படுகின்றார்.

பதினன்குலோகம், ஜங்கமஜீவவடிவ பிராணிகள், ஸ்தாவரஜீவர்களான கல் முதலான இவை மாயையின் காரியமான விகாரங்களாம்.

(அ-கை.)

அப்படியானல் சகல சராசரமான சரீரங்களிலும் பஞ்சபூதத்தின் காரியமாந்தன்மை சமானமாயிருக்கச் சில சரீரங்களுக்குச் சேதனத்தன்மையும் சில சரீரங்களுக்கு ஜடத்தன்மையும் எதனுலிருக்கின்றதென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

प्राणिधीषु अंतः चिच्छाया प्रतिबिंबिता ॥

(சு-ம்.)

பிராணிகளது புத்தியில் உள்ளே சேதனத்தின் சாயை பிரதிபிம்ப வடிவத்தை அடைகின்றது.

(வி-ம்.)

பிராணிசரீரங்களில் தம்மிடத்துள்ள அந்தக்கரணங்களில் சேதனத்தின் பிரதிபிம்பம் அதாவது சிதாபாஸம் இருத்தலால் சேதனத்தன்மை இருக்கின்றது. பிராணனில்லாத பிறசரீரங்களில் அச்சிதாபாஸமில்லாமையால் ஜடத்தன்மை யிருக்கின்றது என்பது பொருள். (கூக)

உ. ஜடசேதனவடிவ ஜகத்தில் அநுசூதமான பிரஹ்மத்திற்குப் பலத்தோடு ஜகத்தின்றியதன்மை கசாரு அ-கூசாஎக.

க. ஜடசேதனங்களினது விபாகம் பிரஹ்மத்தினு லாக்கப்பட்டதாகாமை.

[கசாரு அ] चेतनाचेतनेष्वेषु सच्चिदानंदलक्षणम् ।
समानं ब्रह्म भिद्येते नामरूपे पृथक् पृथक् ॥ ९२ ॥

---

அந்த ஹிரணியகர்ப்பர் ஜலப்பிரதானமான ஐந்து பூதங்களைச்சிருஷ்டித்து அவற்றில் உபாசகர்களால் அநுஷ்டிக்கப்பட்ட கர்ம உபாசனைகளின் சூக்ஷ்மபரிணமவடிவ தனது வீரியத்தினை விட்டார். அந்த வீரியம் ஜலப்பிரதான பஞ்சபூதங்களின்பேரில் இருந்துகொண்டு தயிரின் கட்டியினைப்போல் ஆயிற்று. பின் காலத்தினுல் கனமும் கடினவடிவமு மாயிற்று. இந்தக்கடினம் பிருதிவி யாயிற்று. அதனின்றும் வெளிப்பட்ட சாரம் பெரிய பிரஹ்மாண்டகோள மாயிற்று. அது கோழியின் முட்டைக்குச் சமமான வடிவமுடையதா யிருக்கின்றது. இதில் எழுலோகங்களும் நிலைத்திருக்கின்றன. காய்ந்த சுரைக்காயைப்போலக் காற்றினுலடிக்கப்பட்ட அந்தப்பிரஹ்மாண்டம் பிரஹ்மதேவனது சம்வத்ஸரவடிவ காலத்தினுல் குக்குடத்தின் (கோழி) முட்டையினைப் போலப் பேதித்தலை யடைந்தது. அதனுள் இந்த ஏழுலகவடிவ சரீரத்தைத் தாங்கிய விராட்புருஷன் வெளிப்பட்டான்.

(அ-கை.)

அப்படியானால் சேதன ஜடங்களின் பேதம் யாதோ அது எல் லே ரய வடிவப் பிரஹ்மத்தினலாக்கப்பட்டதாகா தென்று ஆசங்கித்து, பிரஹ்மம் சகல ஜடசேதனமாத்திரத்தின் உபாதானமாதலால் எங்கும் சமானமாகுதலின் இவ்வாறு பொருந்தாது என்று கூறுகின்றார்:—

एषु चेतनाचेतनेषु सच्चिदानन्दलक्षणं ब्रह्म समानं । नामरूपे पृथक् पृथक् भिद्येते ॥

(சு-ம்.)

இச்சேதனசேதனங்களில் சச்சிதாநந்த லக்ஷணமுடைய பிரஹ்மம் * உடு. சமமாம். நாமரூபங்கள் வேறுவேறு தன்மையினை யடைகின்றன. (கூஉ)

உ. பிரஹ்மம் ஜடசேதனங்களில் சாதாரணமாதலில் ஏது.

[ககஙிக] ब्रह्मण्येते नामरूपे पटे चित्रमिव स्थिते ।
उपेक्ष्य नामरूपे द्वे सच्चिदानन्दधीर्भवेत् ॥ ९३ ॥

(அ-கை.)

பிரஹ்மம் ஜடசேதனங்களில் சமானமாதலில் ஏதுவைக் கூறுகின்றார்:—

पटे चित्रं इव ब्रह्माणि एते नामरूपे स्थिते ॥

(சு-ம்.)

படத்தில் சித்திரம் கற்பிதமாதல்போலப் பிரஹ்மத்தில் இந்நாமரூபங்கள் கற்பிதமாம்.

(வி-ம்.)

பிரஹ்மம் சர்வ கற்பனைக்கும் ஆதாரமா யிருத்தலால் எல்லாவற்றின் கணுள்ளதன்மை யிருக்கின்றது என்பது பொருள்.

---

* உடு. எங்கு இரஜ்ஜுவினிடத்துப் பத்துப்புருஷர்களுக்கு ஒருவனுக்குச் சர்பம் ஒருவனுக்கு மரத்தின்வேர் ஒருவனுக்கு மாலை ஒருவனுக்கு ஜலதாரை என்று இவ்வாறு பத்துவிதப்பிராந்தி யுண்டாகின்றதோ, இங்குச் சர்ப்பமுதலிய கற்பிதவிசேஷ அம்சங்கள் ஒன்றற்கொன்று வியபிசாரியாகுதலால் வேறுவேறு யிருக்கின்றன. இதந்தை அதாவது இதுவெனுந்தன்மைவடிவ சாமானிய அம்சம் வியபிசாரமல்லாத தாகுதலின் எல்லாவற்றிலும் சமானமாயிருக்கின்றது. அதுபோலக் கற்பித விசேஷ அம்சமாகிய நாமரூபம் ஒன்றற்கொன்று வியபிசாரியா யிருத்தலின் வேறு வேறும். பிரஹ்மத்தின் சாமானிய அவடிவமாகிய சச்சிதாநந்தம் (அஸ்திபாதிப்பிரியம்) அவ்வியபிசாரியா யிருத்தலின் எங்கும் சமானமாம்.

(அ-கை.)

அந்த எல்லாவற்றிலுமுள்ள பிரஹ்மம் எவ்விதமாக அறியப்படுகின்றது என்னும் ஆசங்கையுண்டாகக் கற்பித நாமரூபங்களை விட்டபோது அதிஷ்டானப்பிரஹ்மம் அறியப்படுகின்றது என்று கூறுகின்றார்:—

नामरूपे द्वे उपेक्ष्य सच्चिदानंदधीः भवेत् ॥

(சு-ம்.)

நாமரூபங்களிரண்டையும் உபேக்ஷிக்க அதாவது மித்தியாத்தன்மையினால் விட சச்சிதாநந்தப்பிரஹ்மத்தின் ஞான முண்டாகின்றது. (கூ௩)

௩. சுலோகம் கசூ௫கூ-ல் கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்தம்.

[கசகூ0] जलस्थेऽधोमुखे स्वस्य देहे दृष्टेऽप्युपेक्ष्य तम् ।
तीरस्थ एव देहे स्वे तात्पर्यं स्याद्यथा तथा ॥ ९४ ॥

(அ-கை.)

சுலோகம் கசு௫கூ-ல் கூறிய அர்த்தத்தில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

जलस्थे अधोमुखे स्वस्य देहे दृष्टे अपि तं उपेक्ष्य । तीरस्थे स्वे देहे एव तात्पर्यं यथा स्यात् । तथा ॥

(சு-ம்)

எப்படி ஜலத்திலுள்ள தலைகீழான முகமுடைய தன்தேகத்தைப் பார்த்தும், அந்த ஜலத்திலுள்ள தேகத்தினை யுபேக்ஷித்துக் கரையிலுள்ள தனது தேகத்தினிடத்திலேயே புருஷனது தாற்பரிய முண்டாகின்றதோ அதுபோலவாம்.

(வி-ம்)

எப்படி ஜலத்தில் கீழ்முகமான தேகம் காணப்படினும் அந்த ஜலத்திலுள்ள தேகத்தில் ஆதரவை விட்டுக் கரையிலுள்ள அதனின் விபரீதமான வேற்றுமுகமுடைய தனது தேகத்தில் புருஷனுக்கு எப்படி எனது என்னும் உணர்ச்சியுண்டாகின்றதோ, அதுபோல நாமரூபங்கள் காணப்படினும், அவற்றில் சத்தியத்தன்மைப்புத்தியாகிய ஆதரவை விட்டுச் சச்சிதாநந்தப் பிரஹ்மத்தில் யான் என்னும் புத்தி யுண்டாகின்றது என்பது பொருள். ()

௪. சகல ஜனங்களுக்கும் பிரசித்தமான வேறு திருஷ்டாந்தம்.

[கசகூக] सहस्रशो मनोराज्ये वर्तमाने सदैव तत् ।
सर्वैरुपेक्ष्यते यद्वदुपेक्षा नामरूपयोः ॥ ९५ ॥

(அ-கை.)

இப்போது எல்லோருக்கும் தெரியும்படியான வேறு திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

यद्वत् सहस्रशः मनोराज्ये वर्तमाने तत् सर्वैः सदा एव उपेक्ष्यते नामरूपयोः उपक्षो ॥

(சு-ம்.)

எப்படி ஆயிரக்கணக்கான மனோராஜ்யம் அதாவது மனதினலாக்கப்பட்ட வஸ்து இருக்குங்காலத்தும் அது எல்லோராலும் எப்போதுமே உபேக்ஷிக்கப்படுகின்றதோ, அதுபோல நாமரூபங்களின் உபேக்ஷை செய்யத்தக்கதாம்.

(வி-ம்.)

இங்கு உபேக்ஷை "செய்யத்தக்கதா" மென்பது வருவிக்கப்பட்டது. (கூரு)

ரு. பிரபஞ்சத்தின் விசித்திரத்தன்மையில் திருஷ்டாந்தமும் சித்தாந்தமும்.

[கசகூஉ] क्षणे क्षणे मनोराज्यं भवत्येवान्यथान्यथा ।
गतं गतं पुनर्नास्ति व्यवहारो बहिस्तथा ॥ ९६ ॥

(அ-கை.)

பிரபஞ்சத்தின் விசித்திரத்தன்மையில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

क्षणे क्षणे अन्यथा अन्यथा मनोराज्यं भवति एव । गतं गतं पुनः न अस्ति ॥

(சு-ம்.)

கணத்துக்குக்கணம் வேறு வேறு விதமாக மனோராஜ்யம் உண்டாய்க்கொண்டே யிருக்கின்றது. சென்று போன மனோராஜ்யம் மறுபடியும் இல்லை.

(அ-கை.)

தார்ஷ்டாந்திகத்தினைக் கூறுகின்றார்:—

तथा बहिः व्यवहारः ॥

(சு-ம்.)

அதுபோல வெளிவியவகார மிருக்கின்றது. (கூசா)

௬. சித்தாந்தத்தின் விவரணம்.

[௧௪௯௭] न बाल्यं यौवने लब्धं यौवनं स्थाविरे तथा ।
मृतः पिता पुनर्नास्ति नायात्येव गतं दिनम् ॥ ९७ ॥

(அ-கை.)

அதே ௧௪௯௨-வது சுலோகத்தில் கூறிய தார்ஷ்டாந்தத்தினையே கூறுகின்றார்:—

बाल्यं यौवने न लब्धं । तथा यौवनं स्थाविरे । मृतः पिता पुनः न अस्ति । गतं दिनं न आयाति एव ॥

(சு-ம்.)

பாலியாவஸ்தை யௌவனத்தில் கிடைக்கிறதில்லை. அதுபோல யௌவனம் விருத்தாவஸ்தையில் கிடைக்கிறதில்லை. மரித்த பிதா மறுபடியும் இருக்கிறதில்லை. சென்ற நாள் மறுபடியும் வருகிறதேயில்லை. (௯௭)

௭ ஜகத்தினது க்ஷணிகத்தன்மையின் சமாப்தியும், அதன் க்ஷணிகத்தன்மையினைச் சாதித்தலில் பிரயோஜனமும்.

[௧௪௯௮] मनोराज्याद्विशेषः कः क्षणध्वंसिनि लौकिके ।
अतोस्मिन्भासमानेऽपि तत्सत्यत्वधियं त्यजेत् ॥ ९८ ॥

(அ-கை.)

துவைதஜகத்தின் க்ஷணிகத்தன்மையினை முடிக்கின்றார்:—

क्षणध्वंसिनी लौकिके मनोराज्यात् कः विशेषः ॥

(சு-ம்)

க்ஷணமாத்திரத்தினால் நாசமாவதாகிய இலௌகிக வெளி வியவகாரத்தில் மனோராஜ்ஜியத்தினும் வேறுபாடு யாது உளது? எதுவும் இல்லை.

(அ-கை.)

ஜகத்தின் க்ஷணிகத்தன்மையினைச் சாதிக்கலில் பிரயோஜனத்தைக் கூறுகின்றார்:—

अतः अस्मिन् भासमाने अपि तत्सत्यत्वधियं त्यजेत् ॥

(சு-ம்.)

ஆதலால் இந்தப்பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருக்கினும் அதிற் சத்தியத்தன்மைப்புத்தியினை விடவேண்டும். (கூ௯)

அ. இலௌகிகத்தின் உபேக்ஷையில் பிரஹ்மபுத்தியினது ஸ்திரத்தன்மையின் இலாபமும், இவ்வாறாகியகாலத்து ஞானியினது வியவகாரத்தின் சம்பவமும்.

[கச௬கூ] उपेक्षिते लौकिके धीर्निर्विघ्ना ब्रह्मचिंतने ।
नटवत्कृत्रिमास्थाय निर्वहत्येव लौकिकम् ॥ ९९ ॥

(அ-கை.)

அப்படியானால் இலௌகிக வெளிவியவகாரத்தின் உபேக்ஷை யுண்டாக என்ன இலாபம் உண்டாகின்றதென்று ஆசங்கித்து, இலௌகிகத்தின் உபேக்ஷை யுண்டாயின் பிரஹ்மத்தில் புத்தி ஸ்திரமாகின்றது. இது இலாபமாமென்று கூறுகின்றார்:—

लौकिके उपेक्षिते धीः ब्रह्मचिंतने निर्विघ्ना ॥

(சு-ம்.)

இலௌகிக வெளிப்பிரபஞ்சம் உபேக்ஷிக்கப்படின் புத்தி பிரஹ்ம சிந்தனத்தில் நிர்விக்கின (ஸ்திர)மாகின்றது.

(அ-கை.)

எப்போது ஜகத்தின் உபேக்ஷை யுண்டாயிற்றோ, அப்போது ஞானியின் வியவகாரம் எப்படி யுண்டாமென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

नटवत् कृत्रिं आस्थाय लौकिकं निर्वहति एव ॥

(சு-ம்.)

நடனாகிய வேஷதாரியினைப்போல ஞானி கிருத்திரிம ஆஸ்தையினால் அதாவது கற்பித சத்தியபுத்தியினால் இலௌகிகவியவகாரத்தினை * உசு. நிர்வகிக்கின்றான். (கூகூ)

* உசு. எப்படி நடன் தனது வயிறுவளர்த்தற்பொருட்டுப் புலியின் வேஷத்தைத் தரித்துச் சிறுவர்களைப் பயமுறுத்துகின்றானோ, ஆனால் அவர்களுள் எவரையும் புசிக்க விரும்புகிறதில்லையோ, ஸ்திரீயின் வேஷத்தைத் தரித்து நான் ஸ்திரீ யென்று சொல்லுகின்றவனானாலும், தன்னை ஸ்திரீயென்று மதித்துப் புருஷனது இச்சையைச் செய்கிறதில்லையோ, ஆனால் இதனை மேலுக்குக் காட்டுகின்றானோ, அதுபோல ஞானி தேகேந்திரியங்களினால் “நான் மனிதன், பிராஹ்மணன், பார்க்கின்றேன், கேட்கின்றேன், செய்கின்றேன், புசிக்கின்றேன், சுகி, துக்கி, அறிகின்றேன், அறியேன்.” என்னும் இவை முதலிய அத்தியாசத்தினாலாகிய வியவகாரத்தை மேலுக்குச் செய்கிறவனாயினும், உள்ளே அசங்கநிர்விகார கர்த்திருத்வாதி தர்மமின்றிய பிரத்தியக பின்ன பிரஹ்மவடிவமாகத் தன்னை மதிக்கின்றான். ஆதலால் வியவகாரம் செய்கின்றவனாயினும் ஞானி நிர்விகாரமா யிருக்கின்றான்.

க. ஞானிக்கு வியவகாரமுள்ளபோது சாக்ஷியாகிய ஆத்மா நிர்விகாரமாதலில் திருஷ்டாந்தம்.

[கசூசுசு] प्रवहत्यपि नीरेऽधः स्थिरा प्रौढशिला यथा ।
नामरूपान्यथात्वेऽपि कूटस्थं ब्रह्म नान्यथा ॥ १०० ॥

(அ-கை.)

அப்படியானால் ஞானிக்கு வியவகாரம் அங்கீகரிக்கப்படின் விகாரித் தன்மை வாய்க்குமென்று ஆசங்கித்து, புத்தி வியவகாரமுடையதாயினும் அந்தப் புத்தியின் சாக்ஷியாகிய ஆத்மா நிர்விகாரமா மென்று திருஷ்டாந் தத்தோடு கூறுகின்றார்:—

नीरे प्रवहति अपि अधः प्रौढशिला यथा स्थिरा । नामरूपान्यथात्वे अपि कूटस्थं ब्रह्म अन्यथा न ॥

(சு-ம்.)

எப்படி ஜலம் ஓடிக்கொண்டிருக்கும்போதும் கீழே யுள்ள பெருங்கல் அசையாதிருக்கின்றதோ, அதுபோல நாமரூபங்களுக்கு வேறாகிய தன்மை யுண்டாகியபோதும் கூடஸ்த னென்னும் நிர்விகாரமாகிய பிரஹ்மம் வேறு விதமாகாது.

(வி-ம்.)

ஜலம் மேலே ஒழுகிக்கொண்டிருக்கினும் அதன்கீழுள்ள பெருங்கல் லானது அசையாதிருப்பதுபோலப் புத்தி வியவகாரஞ்செய்யினும், ஞானி பிரஹ்மாத்மவடிவமா யிருத்தலால் வியவகாரஞ் செய்கிறதில்லை யெனபது பொருள். (க00)

கO. அகண்டப்பிரஹ்மத்தில் அதனின் விலக்ஷணமான ஜகத்துத் தோற்றுவதில் திருஷ்டாந்தம்.

[கசூகூஎ] निश्छिद्रे दर्पणे भाति वस्तुगर्भं बृहद्वियत् ।
सच्चिद्घने तथा नानाजगद्गर्भमिदं वियत् ॥ १०१ ॥

(அ-கை.)

அப்படியானால் அகண்டப்பிரஹ்மத்தில் அந்தப் பிரஹ்மத்தினும் விபரீதமான ஜகத்துத் தோற்றுதல் எவ்வாறு கூடுமென்றாசங்கித்து, வெளி யின்றிய கண்ணாடியில் எப்படி அவகாசத்தோடு வஸ்துவின் தோற்ற முண் டாகின்றதோ, அதுபோல அகண்டப்பிரஹ்மத்தில் அதனின் வேறான ஜகத்தின் தோற்ற முண்டா மென்று கூறுகின்றார்:—

निरिछद्रे दर्पणे वस्तुगर्भं बृहत् वियत् भाति । तथा सच्चिद्घने नाना-जगद्गर्भं इदं वियत् ॥

(சு-ம்.)

எப்படி அவகாசமின்றிய கண்ணாடியில் கடாதிவஸ்துக்களைத் தன்னுள்ளடக்கிய பெரிய ஆகாயம் தோற்றுகின்றதோ, அதுபோலச் சச்சிற்கனமான பிரஹ்மத்தில் பிருதிவியாதி நாநா ஜகத்தைக் கர்ப்பத்திலுடைய இவ்வாகாசம் தோற்றுகின்றது. (௧0௧

௧௧. அதிருசியப்பிரஹ்மத்தில் ஜகத்துத் தோற்றுதலில் திருஷ்டாந்தம்.

[௧௪௬௮] अदृष्ट्वा दर्पणं नैव तदंतस्थेक्षणं तथा ।
अमत्वा सच्चिदानंदं नामरूपमतिः कुतः ॥ १०२ ॥

(அ-கை.)

அப்படியானால் அதிருசியமான பிரஹ்மத்தில் எப்படி ஜகத்தின் தோற்றமுண்டாமென்று ஆசங்கித்து, சச்சிதாநந்தத்தின் தோற்றத்தை முன்னிட்டே ஜகத்தின் தோற்றமுண்டாகின்றதென்று திருஷ்டாந்தத்தோடு கூறுகின்றார்:—

दर्पणं अदृष्ट्वा तदंतस्थेक्षणं न एव । तथा सच्चिदानन्दं अमत्वा नाम-रूपमतिः कुतः ॥

(சு-ம்.)

எப்படிக் கண்ணாடியைப் பாராது அதன் உள்ளிருக்கும் வஸ்துவடிவை பிரதிபிம்பத்தினைக் காணுதல் இல்லையோ, அதுபோலச் சச்சிதாநந்தப் பிரஹ்மத்தினை மதியாது அதாவது நிச்சயிக்காது நாமரூபத்தின் புத்தி அதாவது ஞானம் எங்கிருந்துண்டாகும்? எக்காரணத்தாலும் முண்டாகாது. (௧0௨)

௧௨. நாமரூபங்கள் தோற்றும்போதும் நிர்விஷயப்பிரஹ்மம் தோற்றுதலின் உபாயம்.

[௧௪௬௯] प्रथमं सच्चिदानंदे भासमानेऽथ तावता ।
बुद्धिं नियम्य नैवोर्ध्वं धारयेन्नामरूपयोः ॥ १०३ ॥

(அ-கை.)

அப்படியானால் நாமரூபங்களும் தோற்றிக்கொண்டிருத்தலால் நிர்விஷய அதாவது நிஷ்பிரபஞ்சப்பிரஹ்மத்தின் தோற்றம் எப்படி யுண்டாம்? என்று ஆசங்கித்து அந்தப் பிரஹ்மம் தோற்றுதலின் உபாயத்தினைக் கூறுகின்றார்:—

प्रथमं सच्चिदानन्दे भासमाने अथ तावता बुद्धिं नियम्य ऊर्ध्वं नामरूपयोः न एव धारयेत् ॥

(சு-ம்.)

முதலில் சச்சிதாநந்தப்பிரஹ்மம் தோற்றிக்கொண்டிருக்க, அதன் பின் அவ்வளவு புத்தியைக் கிரகித்துப் பின் நாமரூபத்தில் புத்தியை வைக்கலாகாது.

(வி-ம்.)

சச்சிதாநந்தவடிவப்பிரஹ்மத்தில் கற்பிதமான நாமரூபவடிவப்பிரபஞ்சத்தில் சச்சிதாநந்தமாத்திரத்தினைப் புத்தியினால் கிரகித்து நாமரூபங்களில் புத்தியை * உஎ. வைக்கலாகாது. (கOசு)

கரு. பலிதத்தைக் கூறுதல்.

[கசுஎO] एवं च निर्जगद्ब्रह्म सच्चिदानंदलक्षणम् ।
अद्वैतानंद एतस्मिन्विश्राम्यंतु जनाश्चिरम् ॥ १०४ ॥

(அ-கை.)

பலித்த பொருளைக் கூறுகின்றார்:—

एवं च निर्जगत् ब्रह्म सच्चिदानंदलक्षणं । एतस्मिन् अद्वैतानन्दे जनाः चिरं विश्राम्यन्तु ॥

(சு-ம்.)

இவ்வாறுசெய்யவே ஜகத்தின்றிய பிரஹ்மம் சச்சிதாநந்தலக்ஷண முடையதாகச் சித்திக்கின்றது. இவ்வத்வைதாநந்தத்தில் ஜீனங்களாசுக்கள் நெடுங்காலம் இளைப்பாறுக.

---

* உஎ. எப்படிச் சுவரிலுள்ள கண்ணாடியில் வீட்டின் வாயிலோடுகூடியதாய் எதிரிலுள்ள சபாமண்டலத்தின் பிரதிபிம்பத்தினைப் பார்த்து, அதில் புருஷன் சத்தியத்தன்மைப்புத்தியினைச் செய்கின்றானே, "இது கண்ணாடி" என்னும் அதிஷ்டான ஞானமுண்டாகிய பின் கண்ணாடியிலுள்ள அவித்தையின் ஆவரணவேதுவான சக்தி கெடுதலால் பிரதிபிம்பத்தில் சத்தியத்தன்மையின் புத்தி நிவிருத்தியாகின்றதோ, ஆனால் கண்ணாடி பிம்பங்களின் சந்நிதிவடிவ பிரதிபந்தத்தால் பாதிக்கப்படும் விக்ஷேபவேதுவான சக்தி யிருத்தலால் பிரதிபிம்பத்தின் தோற்றம் உண்டாகின்றதோ, அங்கு எப்படிப் புருஷன் தோற்றுகின்ற பிரதிபிம்பத்தினை அநாதரஞ்செய்து கண்ணாடியில் புத்தியை வைக்கின்றானே, அதுபோலத் தோற்றும் நாமரூபங்களை அநாதரஞ்செய்து சச்சிதாநந்தமாத்திரத்தில் புத்தியினை நிறுத்தவேண்டும்.

(வி-ம்.)

இவ்வாறாகவே நிஷ்பிரபஞ்சப்பிரஹ்மம் சச்சிதாநந்தலக்ஷணமுடைய தாகச் சித்திக்கின்றதென்பது பொருள். (க0ௗ)

கச. அத்தியாயத்தினது அர்த்தத்தின் முடிவு.

[ககசஎக] ब्रह्मानंदाभिधे ग्रंथे तृतीयोऽध्याय ईरितः ।
अद्वैतानंद एव स्याज्जगन्मिथ्यात्वचिंतया ॥ १०५ ॥

(அ-கை.)

இப்போது அத்வைதாநந்தமென்னும் பதின்மூன்றாவது பிரகரணமாகிய அத்தியாயத்தின் அர்த்தத்தினை முடிக்கின்றார்:—

ब्रह्मानन्दाभिधे ग्रन्थे तृतीयः अध्यायः ईरितः । जगन्मिथ्यात्वाचिंतया अद्वैतानन्दः एव स्यात् ॥

(சு-ம்.)

பிரஹ்மாநந்தமென்னும் பெயருடைய கிரந்தத்தில் மூன்றாவது அத்தியாயத்தினால் சொல்லப்பட்டதானது ஜகத்தினது மித்தியாத்தன்மையின் விசாரத்தினால் அத்வைதாநந்தமேயாகின்றது. (க0௫)

பிரஹ்மாநந்தகிரந்தத்தில்

அத்வைதாநந்தமென்னும்

பதின்மூன்றாம்பிரகரணம்

முடிந்தது.

---

ஓம்தத்ஸத்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ பஞ்சதசி.

## பிரஹ்மாநந்தத்தில் $ வித்தியாநந்தமென்னும் நான்காவது அத்தியாயமாகிய பதினைஞ்காம்பிரகரணம்.

க. வித்தியாநந்தத்தின் சொரூபத்தோடு அதனால் நீக்கத்தக்க துக்கத்தின்விபாகம் கசள௨—கசஅ௰.

க. வித்தியாநந்தத்தின் சொரூபமும் அதன் இடைப்பட்ட பேதமும் கசள௨-கசளச.

க. முன்பின் கிரந்தங்களின் சம்பந்தம்.

[கசள௨] योगेनात्मविवेकेन द्वैतमिथ्यात्वचिंतया ।
ब्रह्मानंदं पश्यतोऽथ विद्यानंदो निरूप्यते ॥ १ ॥

(அ-கை.)

இப்போது கக-வது பிரகரணமுதலாகச் சென்றபிரகரணங்களிலும், இந்தப் பதினைஞ்காவது பிரகரணத்திலும் கூறிய கிரந்தங்களின் சம்பந்தத்தினைக் கூறுகின்றார்:—

योगेन आत्मविवेकेन द्वैतमिथ्यात्वचिंतया ब्रह्मानन्दं पश्यतः अथ विद्यानन्दः निरूप्यते ॥

(சு-ம்.)

யோகத்தினாலும் ஆத்மாவின் விவேகத்தினாலும், துவைதமாகிய பிரபஞ்சத்தினது மித்தியாத்தன்மையின் சிந்தனைத்தாலும் பிரஹ்மாநந்தத்தினைச் சாக்ஷாத்கரிக்கின்ற வித்துவானுக்கு உதயமாகும் வித்தியாநந்தம் இப்போது இந்தப் பதினைஞ்காவது பிரகரணத்தில் நிரூபிக்கப்படுகின்றது.

௨. வித்தியாநந்தத்தின் சொரூபமும், அதன் இடைப்பட்ட பேதத்தின் பிரதிஞ்ஞையும்.

[கசள௩] विषयानंदवद्विद्यानंदो धीवृत्तिरूपकः ।
दुःखाभावादिरूपेण प्रोक्त एष चतुर्विधः ॥ २ ॥

(அ-கை.)

வித்தியாநந்தத்தினது சொரூபத்தினைக் கூறுகின்றார்:—

$. வித்தையாகிய தத்துவஞானத்தினின்றும் ஆவிர்ப்பாவத்தையடையும் நால்வகை ஆநந்தங்களைப் பிரதிபாதிக்கும் பிரகரணம்.

विषयानन्दवत् विद्यानन्दः धीवृत्तिरूपकः ॥

(சு-ம்.)

விஷயாநந்தத்தினைப்போல * க. வித்தியாநந்தமும் புத்திவிருத்தி வடிவமாம்.

(அ-கை.)

அந்த வித்தியாநந்தத்தின் அவாநதரபேதத்தைக் கூறுகின்றார்:—

दुःखाभावादिरूपेण एष चतुर्विधः प्रोक्तः ॥

(சு-ம்.)

துக்கத்தின் அபாவமுதலியவடிவமாக அதாவது சொரூபத்தின் பேதத்தால் இந்த வித்தியாநந்தம் நான்குவிதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ங. வித்தியாநந்தத்தினது இடைப்பட்ட நான்குபேதத்தினது சொரூபம்.

[ககளச] दुःखाभावश्च कामाप्तिः कृतकृत्योहमित्यसौ ।
प्राप्तप्राप्योहमित्येव चातुर्विध्यमुदाहृतम् ॥ ३ ॥

(அ-கை.)

வித்தியாநந்தத்தின் நான்குவிதத்தன்மையினையே காட்டுகின்றார்:—

दुःखाभावः च कामाप्तिः "अहं कृतकृत्यः" इति असौ "अहं प्राप्तप्राप्यः" इति एव चातुर्विध्यं उदाहृतम् ॥

---

* க. முன் பிரஹ்மாநந்தத்திலுள்ள யோகாநந்தப்பிரகரணத்தின் கஉஉக-வது சுலோகத்திற் சொல்லியபடி பிரஹ்மாநந்தம் வாசனாநந்தம் விஷயாநந்தம் என்னும் பேதத்தால் ஆநந்தம் மூன்றுவகையினதேயாம், இவற்றின் வேறாகிய ஆநந்தம் இல்லை என்று பிரதிஞ்ஞை செய்யப்பட்டிருக்கிறது. அங்கு வித்தியாநந்தம் புத்திவிருத்திவடிவமாயிருத்தலால் விஷயாநந்தத்தின் உள்ளடங்கியதாக எண்ணப்பட்டிருக்கின்றது. அவ்வாறாயினும் விசாரித்துப்பார்க்குமிடத்து வித்தியாநந்தம்யாதோ அது அவ்வாநந்தங்களினும் வேறாகிய நான்காவதான விலக்ஷணாநந்தமாம். எனெனின் விஷயாநந்தத்தின் அநுபவமோ முன் பிரஹ்மாமுதல் கீடபரியந்தமான ஜந்துக்களின் அநேக ஜன்மங்களில் செய்யப்பட்டிருக்கின்றது. அதுபோலச் சுழுத்தியிலுள்ள பிரஹ்மாநந்தம் சும்மாவிருக்கும் நிலையிலுள்ள வாசனாநந்தம் என்பவற்றின் அநுபவமும் அநேக ஜன்மங்களிலிருந்த சுழுத்தியிலும் சும்மாவிருக்கும் நிலையிலும் செய்யப்பட்டிருக்கின்றது. ஆனால் வித்தியாநந்தத்தின் அநுபவம் முன் ஒருபோதும் செய்யப்படவில்லை; ஆனால் இந்த ஞானியின் சரீரத்திலேயே அநுபவம் செய்யப்படுகின்றது. ஆதலால் அந்த வித்தியாநந்தம் விலக்ஷணாநந்தமாம். ஆவரணமின்றிய பரிபூரணமான விருத்தியோடுகூடிய ஆநந்தம் எதுவோ அது விலக்ஷணாநந்தமெனப்படும். அதுவே வித்தியாநந்தமாம். இந்த விலக்ஷணாநந்தத்தினது லக்ஷணத்தின் பரீக்ஷை ஸ்ரீபாலபோதத்தின் ககூ0-வது டிப்பணியில் எழுதப்பட்டிருத்தலின் இங்கு எழுதப்படவில்லை.

(சு-ம்.)

க. துக்கமின்மை, உ. சகல போகங்களின் அடைவுவடிவ பூர்ணகாமத்தன்மை, ௩. "நான் கிருதகிருத்தியன்" என்னும் வடிவினதாகிய இக்கிருதகிருத்தியத்தன்மை, ௪. "நான் பிராப்தப்பிராப்பியன்" என்னும் வடிவினதாகிய இந்தப் பிராப்தப்பிராப்பியத்தன்மை என்னும் பேதத்தால் இந்த வித்தியாநந்தத்திற்கு நான்குவகைமை சொல்லப்பட்டிருக்கின்றது. (௩)

உ. வித்தையினால் நிவிருத்திசெய்யத்தக்க ஆத்மபேதத்தோடு துக்கத்தின் சொரூபம் கசுஎரு-கசுஅ௦.

க. நிவிருத்திக்கக்கூடிய துக்கத்தின் விபாகமும், வித்தையினால் இவ்வுலகத்தினது துக்கத்தின் நிவிருத்தியில் பிருகதாரணியகத்தினது வாக்கியத்தின் சம்மதியும்.

[கசுஎரு] ऐहिकं चामुष्मिकं चेत्येवं दुःखं द्विधेरितम् ।

निवृत्तिमैहिकस्याह बृहदारण्यकं वचः ॥ ४ ॥

(அ-கை.)

நிவிருத்திக்கக்கூடிய துக்கத்தினைப் பிரிக்கின்றார்:—

ऐहिकं च आमुष्मिकं च इति एवं दुःखं द्विधा ईरितम् ॥

(சு-ம்.)

இவ்வுலகசம்பந்தி பரலோகசம்பந்தி யென்னும் பேதத்தால் துக்கம் இருவகையினதாகச் சொல்லப்பட்டது.

(அ-கை.)

ஐகிகத்தினது நிவிருத்தி பிருகதாரணியகவுபநிஷத்தின் வாக்கியத்தினால் சொல்லப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

ऐहिकस्य निवृत्तिं बृहदारण्यकं वचः आह ॥

(சு-ம்.)

ஐகிக அதாவது இவ்வுலகசம்பந்தமுள்ள துக்கத்தின் நிவிருத்தியினைப் பிருகதாரணியக வாக்கியம் கூறுகின்றது. (சு)

உ. அந்த நான்காவது சுலோகத்திற் கூறிய சுருதிவாக்கியத்தினைப் படித்தல்.

[கசுஎசு] आत्मानं चेद्विजानीयादयमस्मीति पूरुषः ।

किमिच्छन्कस्य कामाय शरीरमनुसंज्वरेत् ॥ ५ ॥

(அ-கை.)

அந்தத் திருப்திதீப முழுவதிலும் வியாக்கியானஞ் செய்யப்பட்ட பிருகதாரணியகசுருதியினது வாக்கியத்தினைப் படிக்கின்றார்:—

पुरुषः आत्मानं "अयं अस्मि" इति चेत् विजानीयात् । किं इच्छन् कस्य कामाय शरीरं अनुसंज्वरेत् ॥

(சு-ம்.)

புருஷன் ஆத்மாவை "இது நான்" என்று அறிவானாயின், அப்போது எந்தப் போக்கியத்தை இச்சிக்கின்றவனாய் எந்தப் போக்தாவினது காமத்தின்பொருட்டுச் சரீரத்தைப் பின்பற்றி ஜ்வரமாகிய சந்தாபத்தை அடைவான்? அடையான் என்பது பொருள். (௫)

௬. ஆத்மாவினிடத்துச் சோகசம்பந்தத்தினைக் காட்டுதற்கு ஆத்மாவின் பேதத்திலும் ஜீவத்தன்மையிலும் நிமித்தம்.

[௧௨௭௭] जीवात्मा परमात्मा चेत्यात्मा द्विविध ईरितः ।
चित्तादात्म्यात्त्रिभिर्देहैर्जीवः सन्भोक्तृतां व्रजेत् ॥ ६ ॥

(அ-கை.)

ஆத்மாவினிடத்துச் சோகத்தின் சம்பந்தத்தினைக் காட்டுதற்கு அவ்வாத்மாவின் பேதத்தினைக் கூறுகின்றார்:—

जीवात्मा च परमात्मा इति आत्मा द्विविधः ईरितः ॥

(சு-ம்.)

ஜீவாத்மா பரமாத்மாவென்னும் பேதத்தால் ஆத்மா இருவகையாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

(அ-கை.)

ஆத்மாவின் ஜீவத்தன்மையில் நிமித்தத்தினைக் கூறுகின்றார்:—

त्रिभिः देहैः चित्तादात्म्यात् जीवः सन् भोक्तृतां व्रजेत् ॥

(சு-ம்.)

மூன்று தேகங்களோடு சேதனத்தின் தாதாத்மியத்தால் சேதனவடிவ ஆத்மா ஜீவனாய்ப் போக்திருத்தன்மையினை அடைகின்றது.

(வி-ம்.)

சைதன்னியத்திற்கு ஸ்தூல சூக்ஷ்ம காரணவடிவ மூன்று சரீரங்களோடு ஒருமைப்பிரம முண்டாகுங்கால் சேதனத்திற்குப் போக்திருத்வ முண்டாகின்றது. அந்தப் போக்தா "ஜீவன்" என்று சொல்லப்படுகின்றான். (கூ)

ச. பரமாத்மாவின் சொரூபமும், அதற்குப் போக்கியவடிவத்தன்மையினது அடையின் கிரமமும், போக்திருத்துவமுதலியன இல்லாமையில் காரணமும்.

[கசஎஅ] परात्मा सच्चिदानंदस्तादात्म्यं नामरूपयोः ।
गत्वा भोग्यत्वमापन्नस्तद्विवेके तु नोभयम् ॥ ७ ॥

(அ-கை.)

இப்போது பரமாத்மாவின் சொரூபத்தைக் கூறுகின்றார்:—

परात्मा सच्चिदानन्दः ॥

(சு-ம்.)

பரமாத்மா சச்சிதாநந்தசொரூபமாம்.

(அ-கை.)

அந்தப் பரமாத்மாவிற்குப் போக்கியவடிவத்தன்மையினது அடையின் கிரமத்தைக் கூறுகின்றார்:—

नामरूपयोः तादात्म्यं गत्वा भोग्यत्वं आपन्नः ॥

(சு-ம்.)

அந்தப் பரமாத்மா நாமரூபங்களில் தாதாத்மியத்தினை யடைந்து போக்கியவடிவத்தன்மையினை அடைந்திருக்கின்றனர்.

(வி-ம்.)

நாமரூபங்களினது கற்பனைக்கு அதிஷ்டானமாருதலால் அந்த நாமரூபங்களோடு ஒருமைப்பிரமத்தினை யடைந்து போக்கியத்தன்மையினை அடைகின்றான் என்பது பொருள்.

(அ-கை.)

போக்திருத்தன்மைமுதலிய அதாவது போக்தாவாதற்குரியதன்மைவடிவ தர்மமின்மையில் காரணம் கூறுகின்றார்:—

तद्विवेके तु उभयं न ॥

(சு-ம்.)

அவற்றினின்றும் வேறுபிரிக்கப்பட்டபோது இரண்டும் இல்லை.

(வி-ம்.)

அந்த மூன்றுசரீரம் ஜகத்து என்பவற்றினின்றும் வேற்றுமையுணர்ச்சிவடிவ விவேகஞ்செய்யப்பட்டபோது போக்தாபோக்கியவடிவம் இரண்டும் இல்லையென்பது பொருள். (எ)

ஒ. சுலோகம் கசஎஅ-ல் கூறிய அர்த்தத்தினை விவரித்தல்.

[கசஎகூ] भोग्यमिच्छन्भोक्तुरर्थे शरीरमनुसंज्वरेत् ।
ज्वरास्त्रिषु शरीरेषु स्थिता न त्वात्मनो ज्वराः ॥ ८ ॥

(அ-கை.)

இப்பிரகரணத்தின் ஐந்தாவது சுலோகமுதல் கூறிய அர்த்தத்தினை வர்ணிக்கின்றார்:—

भोक्तुः अर्थे भोग्यं इच्छन् शरीरं अनुसंज्वरेत् । ज्वराः त्रिषु शरीरेषु स्थिताः आत्मनः तु ज्वराः न ॥

(சு-ம்)

போக்தாவின்பொருட்டுப் போக்கியத்தினை அதாவது போகசாமக்கிரிவடிவ விஷயத்தினை இச்சித்துச் சரீரத்தைப்பற்றி ஜ்வரத்தை அடைகின்றான். அந்த ஜ்வரங்கள் மூன்று சரீரங்களினும் நிலைத்துள்ளனவாம். ஆத்மாவை விஷயஞ்செய்வனவாகா ஜ்வரங்கள். (அ)

கூ. மூன்று சரீரத்திலுமுள்ள ஜ்வரத்தின் பிரிவு.

[கசஅ0] व्याधयो धातुवैषम्ये स्थूलदेहे स्थिता ज्वराः ।
कामक्रोधादयः सूक्ष्मे द्वयोर्बीजं तु कारणे ॥ ९ ॥

(அ-கை)

எந்தச்சரீரத்தில் எந்த ஜ்வர மிருக்கின்றது என்று ஆசங்கித்து, ஸ்தூலதேகத்திலுள்ள ஜ்வரங்களைக் காட்டுகின்றார்:—

धातुवैषम्ये व्याधयः स्थूलदेहे स्थिताः ज्वराः ॥

(சு-ம்.)

கபவாதபித்தங்களாகிய தாதுக்கள் வேறுபட்டபோதுண்டாம் வியாதிகள் ஸ்தூலதேகத்திலுள்ள ஜ்வரங்களாம்.

(அ-கை.)

இலிங்கதேக காரணதேகங்களிலுள்ள ஜ்வரங்களைக் கூறுகின்றார்:—

कामक्रोधादयः सूक्ष्मे । द्वयोः बीजं तु कारणे ॥

(சு-ம்.)

காமக்குரோதாதிகள் சூக்ஷ்மசரீரத்துள்ள ஜ்வரங்களாம். இவ்விரண்டு சரீரத்துள்ள இரண்டு ஜ்வரங்களுக்கும் வித்தான சம்ஸ்காரம் காரணசரீரத்துள்ள ஜ்வரமாம். (௯)

உ. வித்தியாநந்தத்தின் க. துக்கநிவிருத்தி உ. சர்வகாமாப்தி என்னும் அவாந்திரபேதம் ௧௭௮௧—௧௫௦௮.

க துக்கத்தின் இன்மை ௧௭௮௧—௧௭௮௮.

க. முற்கூறியதன் விளக்கம்.

[௧௭௮௧] अद्वैतानंदमार्गेण परात्मनि विवेचिते ।
अपश्यन् वास्तवं भोग्यं किं नामेच्छेत्परात्मवित् ॥ १० ॥

(அ-கை.)

இப்போது ஐந்தாவது சுலோகத்தில் உதகரிக்கப்பட்ட சுருதியினது தாற்பரியத்தினைச் சொல்லும் விருப்பால் முற்கூறிய அர்த்தத்தினையே அதாவது ஆத்மாநந்த அத்வைதாநந்தங்களையே விளக்குகின்றார்:—

'अद्वैतानन्दमार्गेण परात्मनि विवेचिते भोग्यं वास्तवं अपश्यन् परात्मवित् किं नाम इच्छेत् ॥

(சு-ம்.)

முற்கூறிய அத்வைதாநந்தவழியால் பரமாத்மா விவேகிக்கப்பட்டபோது போக்கியமான ஜகத்தை வாஸ்தவமாகக் காணாது பரமாத்மாவையுணர்ந்தவன் அதாவது தத்துவஞானி எந்தப் * உ. போக்கியத்தை விரும்புவான்?

* உ. ஞானிக்குப் போக்கியவிஷயமில்லாமையால் போக்கியங்களில் இச்சையில்லாமை எது அதன் விசேஷநிரூபணத்தினைத் திருப்திதீபத்திலுள்ள ௧௩௭-௧௯௩-வது சுலோகங்களில் காண்க.

(ஸி-ம்.)

அத்வைதாநந்த மென்னும் மூன்றாவது அத்தியாயத்தில் முற்கூறிய விதமாக மாயையின் காரியமான நாமரூபங்களினின்றும் சச்சிதாநந்தவடிவ பரமாத்மாவை வேறாக அறிந்தபோது “सर्वं प्रपंचं मिथ्या எல்லாப்பிரபஞ்சமும் மித்தை” என்று அறிகின்றவனாய்த் தத்துவஞானி காந்தப்பிரசித்தமான போக்கியத்தை விரும்புவான்? எதையும் விரும்பான். (க0)

உ. ஞானிக்கு ஜ்வரமுதலியவற்றினது சம்பந்தத்தின் இன்மை.

[கசஅஉ] आत्मानंदोक्तरीत्यास्मिन् जीवात्मन्यवधारिते ।
भोक्ता नैवास्ति कोऽप्यत्र शरीरे तु ज्वरः कुतः ॥ ११ ॥

(அ-கை.)

அந்த அத்வைதாநந்தத்திற்கு முந்திய ஆத்மாநந்த அத்தியாயத்திற் கூடியபடி ஜீவாத்மாவினது சொரூபத்தின் அசங்க நிர்விகாரதைதன்னிய வடிவம் நிச்சயிக்கப்பட்டபோது இச்சைசெய்கிறவனில்லாமையால் ஜ்வர முதலியவற்றின் சம்பந்த மில்லை யென்று கூறுகின்றார்.—

आत्मानंदोक्तरीत्या अस्मिन् जीवात्मनि अवधारिते अत्र शरीरे कः अपि भोक्ता न एव अस्ति । तु ज्वरः कुतः ॥

(சு-ம்.)

ஆத்மாநந்த மென்னும் பன்னிரண்டாவது பிரகரணத்தில் சொல்லிய படி. இந்த ஜீவாத்மா நிச்சயிக்கப்பட்டபோது இந்தச் சரீரத்தில் ஒரு *ந. போக்தாவும் இல்லையெனின் ஜ்வரம் எங்கிருந்துண்டாகும்? (கக)

ந. இந்த லோகத்தின் ஜ்வரத்தையும் அத்வைதாநந்தமென்னும் மூன்றாவது அத்தியாயத்திற் செய்யப்பட்ட துக்காபாவத்தின் நிரூபணத்தையும் கூறுதல்.

[கசஅந] पुण्यपापद्वये चिंता दुःखमामुष्मिकं भवेत् ।
प्रथमाध्याय एवोक्तं चिंता नैनं तपेदिति ॥ १२ ॥

(அ-கை.)

இப்போது பரலோகசம்பந்தியான தாபத்தினைக் காட்டுகின்றார்:—

पुण्यपापद्वये चिंता आमुष्मिकं दुःखं भवेत् ॥

---

* ந. போக்தாவினது அபாவத்தின் விசேஷநிரூபணம் திருப்திதீபத்திலுள்ள ககஉ-உஉஉ வது சுலோகங்களிற் காண்க.

(த-ம்.)

புண்ணியம் பாபம் என்னும் இரண்டினும் உள்ள சிந்தையானது பர லோகசம்பந்தி துக்கமாகின்றது.

(அ-கை.)

அந்தப்புண்ணியபாபங்களின் சிந்தைவடிவ பரலோகசம்பந்தியான துக்கத்தின் அபாவம் முதல் அத்தியாயமாகிய யோகாநந்த மென்னும் பதினோராவது பிரகரணத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

प्रथमाध्याये एव "एनं चिंता न तपेत्" इति उक्तम् ॥

(த-ம்.)

முதல் அத்தியாயத்திலேயே "ஞானியைச் சிந்தை தபிக்கச்செய்கிறதில்லை." என்று பிரஹ்மாநந்தத்துள்ள யோகாநந்தத்தின் ரு-கூ சுலோகங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. (௧உ)

௪. ஆகாமிகர்மத்தினை விஷயஞ்செய்யும் சிந்தையின் அபாவம்.

[௧௪அ௪] यथा पुष्करपर्णेऽस्मिन्नपामश्लेषणं तथा ।
वेदनादूर्ध्वमागामिकर्मणोऽश्लेषणं बुधे ॥ १३ ॥

(அ-கை.)

அப்படியானால் ஞானிக்குப் பிராரப்தகர்மத்தினை விஷயஞ்செய்யும் புத்தியுண்டாகவேண்டாம். ஆனால் ஆகாமியாகிய செய்யப்படுகின்ற கர்மத்தினை விஷயஞ்செய்யும் சிந்தை உண்டாகவே செய்யுமென்றாசங்கித்து, "तद्यथा पुष्करपर्णः அது எப்படித் தாமரையிலையில் ஜலம் பற்றுகிறதில்லையோ" என்றல் முதலிய சுருதிகளில் ஞானிக்கு ஆகாமிகர்மத்தின் சம்பந்தத்தினை நிராகரித்தலால் அவ்வாகாமிகர்மத்தினை விஷயஞ்செய்யும் சிந்தை இல்லை என்று கூறுகின்றார்:—

यथा अस्मिन् पुष्करपर्णे अपां अश्लेषणं । तथा वेदनात् ऊर्ध्वं बुधे आगामिकर्मणः अश्लेषणं ॥

(த-ம்.)

எப்படித் தோற்றுகின்ற இக்கமலபத்திரத்தில் ஜலம் பற்றுகிறதில்லையோ, அதுபோல ஞானத்திற்குப்பின் ஞானியினிடத்து ஆகாமிகர்ம பற்றுகிறதில்லை. (௧

டு. ஞானிக்குச் சஞ்சிதகர்மத்தினை விஷயஞ்செய்யும் சிந்தை இல்லாமை.

[கசஅடு] इषीकातृणतूलस्य वह्निदाहः क्षणाद्यथा ।
तथा संचितकर्मास्य दग्धं भवति वेदनात् ॥ १४ ॥

(அ-கை.)

"तद्यथेषिकातूलमग्नौ प्रोतं प्रदूयेतैवं हास्य सर्वे पाप्मानः प्रदूयंते எப்படி இஷீகை யென்னும் புல்விசேஷத்தின் பஞ்சு அக்கினியில் போடப்பட்டு எரிகின்றதோ, அதுபோல நிச்சயமாக இந்த ஞானியின் சகல பாபங்களும் பஸ்மமாகின்றன." என்னும் சுருதியினை ஆசிரயித்துச் சஞ்சிதகர்மத்தினை விஷயஞ்செய்யும் சிந்தையும் ஞானிக்கில்லை யென்று கூறுகின்றார்:—

यथा इषीकातृणतूलस्य क्षणात् वह्निदाहः तथा अस्य संचितकर्मवेदनात् दग्धं भवति ॥

(சு-ம்.)

எப்படி இஷீகைப்புல்லின் பஞ்சு க்ஷணத்தில் அக்கினியினால் எரிந்து போகின்றதோ; அதுபோல இந்த ஞானியின் சஞ்சிதகர்மம் ஞானத்தினால் எரிக்கப்பட்டதாகின்றது. (கச)

கூ. சுலோகம் கசஅச-கசஅடு-ல் கூறிய அர்த்தத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானது வாக்கியம்.

[கசஅசு] यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।
ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥ १५ ॥

(அ-கை.)

சுலோகம் கசஅங-ல் கூறிய அர்த்தமாகிய கர்மாபாவத்தில் பகவானாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானது கீதையின் நான்காவது அத்தியாயத்திலுள்ள ௩எ-வதும் பதினெட்டாவது அத்தியாயத்துள்ள கஎ-வதுமாகிய சுலோக வடிவ வாக்கியத்தினைப் பிரமாணமாக்குகின்றார்:—

अर्जुन! यथा समिद्धः अग्निः एधांसि भस्मसात् कुरुते । तथा ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात् कुरुते ॥

(சு-ம்.)

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்லுகின்றார்:— அர்ச்சுனா! எப்படிக் கொழு

௬. சாந்தவிருத்திகளில் சுகத்தின் தாரதம்மியத்தன்மை.

[கடுடுௌ] काम्यलाभे हर्षवृत्तिः शांता तत्र महत्सुखम् ।
भोगे महत्तरं लाभप्रसक्तावीषदेव हि ॥ १७ ॥

(அ-கை.)

இதுவுமது:—

काम्यलाभे शांता हर्षवृत्तिः तत्र महत् सुखं । भोगे महत्तरं । लाभप्रसक्तौ ईषत् एव हि ॥

(சு-ம்.)

விரும்பிய பதார்த்தம் கிடைத்தபோது சந்தோஷவடிவ சாந்தவிருத்தியுண்டாகின்றது. அதில் பெருத்த சுக முண்டாகின்றது. அதின் போகத்தில் அதனினும் பெரிதான சுக முண்டாகின்றது. கிடைத்ததின் சையோகத்தில் அற்பமே சுக முண்டாகின்றது. (கஎ)

௪. சுகமாத்திரத்திற்குப் பிரஹ்மத்தின் பிரதிபிம்பத்தன்மையும் அந்தர்முகமான சாந்தவிருத்திகளில் பிரதிபிம்பத்தின் பிரசித்தியும்.

[கடுடு௪] महत्तमं विरक्तौ तु विद्यानंदे तदीरितम् ।
एवं क्षांतौ तथौदार्ये क्रोधलोभनिवारणात् ॥ १८ ॥

(அ-கை.)

இதுவுமது:—

विरक्तौ तु महत्तमं तत् विद्यानन्दे ईरितं । एवं क्षांतौ तथा औदार्ये क्रोधलोभनिवारणात् ॥

(சு-ம்.)

விஷயவைராக்கியத்திலோ *௬. மகத்தம (எல்லாவற்றினும் பெருத்த) சுக முண்டாகின்றது. அது வித்தியாநந்த மென்னும் க௪-வது பிரகரணத்தில் சொல்லப்பட்டது. இவ்வாறே க்ஷமையிலும் உதாரத்தன்மையிலுமாம்; குரோதம் உலோப மென்னும் பிரதிபந்தம் நீங்குதலால். (கஅ)

*௬. ஞானிக்கு இச்சையின் அபாவவடிவ வைராக்கியத்தால் மகத்தம அதாவது நிரதிசயசுக முண்டாகின்றது. அதனை க௪கூஉ—கடு௦டு சுலோகங்களிற் காண்க.

[௧௫௫௫] यद्यत्सुखं भवेत्तत्तद्ब्रह्मैव प्रातीर्बिंबनात् ।
वृत्तिष्वंतर्मुखास्वस्य निर्विघ्नं प्रतिबिंबनम् ॥ १९ ॥

(அ-கை.)

இதுவுமது:—

यत् यत् सुखं तत् तत् ब्रह्म एव प्रतिबिंबनात भवेत् ॥

(சு-ம்.)

எந்த எந்தச் சுக முண்டாகின்றதோ அது அது பிரஹ்மமே பிரதிபிம்பித்தலா லுண்டாகின்றது அதாவது அது அது பிரஹ்மாநந்தத்தின் அம்சமாம்.

(அ-கை.)

இவ்வாறு சூக்ஷ்மைமுதலிய அந்தர்முகவிருத்திகளில் பிரஹ்மாநந்தத்தின் பிரதிபிம்பம் பிரசித்தமா மென்று கூறுகின்றார்:—

अन्तर्मुखासु वृत्तिषु अस्य निर्विघ्नं प्रतिबिंबनम् ॥

(சு-ம்.)

அந்தர்முகவிருத்திகளில் இந்தப் பிரஹ்மத்தினது ஆநந்தத்தின் நிர்விக்கின அதாவது விளக்கமான பிரதிபிம்பம் உண்டாகின்றது. (௧௯)

ஙு. பிரஹ்மத்தின் சொரூபமான சச்சிதாநந்தத்தின் ஸ்மரணமும் அவற்றினுள் கல்முதலியவற்றில் சத்துமாத்திரத்தின் சித்தியும்.

[௧௫௫௬] सत्ता चितिः सुखं चेति स्वभावा ब्रह्मणस्त्रयः ।
मृच्छिलादिषु सत्तैव व्यज्यते नेतरद्द्वयम् ॥ २० ॥

(அ-கை.)

இப்போது எல்லாவிடத்திலும் பிரஹ்மத்தினது சொரூபத்தின் அநுபவத்தினைக் காட்டுதற்பொருட்டு அந்தப் பிரஹ்மத்தின் சொரூபத்தினை நினைப்பூட்டுகின்றார்:—

सत्ता चितिः च सुखं इति त्रयः स्वभावाः ब्रह्मणः । मृच्छिलादिषु सत्ता एव व्यज्यते इतरत् द्वयं न ॥

(சு-ம்.)

இருக்கிறதென்னுந்தன்மை, சித்து, ஆநந்தம் என்னும் மூன்று சுபாவமும் பிரஹ்மத்தினுடையவாம். அவற்றுளொன்றும் மண்கல்முதலிய ஜடவஸ்துக்களில் சத்தையே பிரகடமாகின்றது. மற்ற சித்து ஆநந்தமென்னும் இரண்டும் வெளிப்படுகிறதில்லை:

(வி-ம்.)

மண்கல்முதலியவற்றில் சத்துமாத்திரமே வெளிப்படுகின்றதென்பது பொருள். (20)

சு. கோரமூடங்களில் சத்து சித்து இரண்டும், சாந்தத்தில் மூன்றும் பிரசித்தமாதலும், சொல்லப்பட்ட பிரபஞ்சத்தோடுகூடிய பிரஹ்மத்தின் சூசனமும்.

[கஉ௲] सत्ता चितिर्द्वयं व्यक्तं धीवृत्त्योर्घोरमूढयोः ।
शांतवृत्तौ त्रयं व्यक्तं मिश्रं ब्रह्मेत्थमीरितम् ॥ २१ ॥

(அ-கை.)

இதுவுமது:—

घोरमूढयोः धीवृत्त्योः सत्ता चितिः द्वयं व्यक्तं शांतवृत्तौ त्रयं व्यक्तम् ॥

(சு-ம்.)

கோரமூடமான புத்திவிருத்திகளில் சத்தையும் சித்தும் இரண்டும் பிரகடமாகின்றன. சாந்தவிருத்தியில் சத்தை சேதனம் ஆநந்தம் என்னும் மூன்றும் வெளிப்படுகின்றன.

(வி-ம்.)

கோரமூடமென்னும் இரண்டு விருத்திகளினும் சத்தையும் சேதனமும் இரண்டும் பிரகடமாகும். சாந்தவிருத்தியில் சத்து சித்து ஆநந்தம் என்னும் மூன்றும் ஆவிர்ப்பாவத்தை யடையும்.

(அ-கை.)

இப்படி சப்பிரபஞ்சப்பிரஹ்மம் சொல்லப்பட்டதென்று கூறுகின்றார்.—

इत्थं मिश्रं ब्रह्म ईरितम् ॥

(சு-ம்.)

இவ்வாறு அதாவது முற்கூறியபடி மிசிர அதாவது விருத்தியாதி (உக)
பிரபஞ்சத்தோடுகூடிய பிரஹ்மம் சொல்லப்பட்டது.

உ. நிஷ்பிரபஞ்சப்பிரஹ்மத்தினது ஞானத்தின் ஏதுவும் மாயையின் விபாகத்தோடு பிரஹ்மவித்தைவடிவ பிரஹ்மத்தின் தியானமும் கருருஅ-கருளக.

க. நிஷ்பிரபஞ்சப்பிரஹ்மத்தினைச் சொல்லுதலோடு மாயையினது சொருபத்தின் விபாகம் கருருஅ-கருகூ0.

க. மிசிரமில்லாத பிரஹ்மத்தினது ஞானத்தின் காரணமான ஞானத்தையும் யோகத்தையும் கூறுதல்.

[கருருஅ] अमिश्रं ज्ञानयोगाभ्यां तौ च पूर्वमुदीरितौ ।
आद्येऽध्याये योगचिंता ज्ञानमध्याययोर्द्वयोः ॥ २२ ॥

(அ-கை.)

அமிசிரப்பிரஹ்மம் எதனலறியப்படுகின்றதென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

अमिश्रं ज्ञानयोगाभ्यां तौ च पूर्वं उदीरितौ ॥

(சு-ம்.)

அமிசிர அதாவது கலப்பின்றிய பிரஹ்மம் ஞானயோகங்களால் அறியப்படுகின்றது. அவ்விரண்டும் முன் சொல்லப்பட்டன.

(வி-ம்.)

அந்த ஞானமும் யோகமும் முன்னரே சொல்லப்பட்டிருக்கின்றனவென்பது பொருள்.

(அ-கை.)

அந்த ஞானயோகங்கள் முன் எங்குச் சொல்லப்பட்டிருக்கின்றனவென்று, ஆசங்கித்து யோகமானது போகானந்தமென்னும் முதல் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதென்று கூறுகின்றார்:—

आद्ये अध्याये योगचिंता ॥

(சு-ம்.)

முதல் அத்தியாயத்தில் யோகத்தின் விசாரம் இருக்கின்றது.

(அ-கை.)

அந்தயோகாநந்தத்திற்குப் பிந்திய இரண்டத்தியாயங்களில் ஞானம் சொல்லப்பட்டிருக்கின்றது என்று கூறுகின்றார்:—

द्वयोः अध्याययोः ज्ञानम् ॥

(சு-ம்.)

ஆத்மாநந்தம் அத்வைதாநந்தமென்னும் இரண்டத்தியாயங்களிலும் ஞானம் சொல்லப்பட்டிருக்கின்றது. (உ.உ.)

உ. மாயையின் சொரூபமும் அதில் அசத்துத்தன்மை ஜடத்தன்மைகளின் ஸ்தானமும்.

[கஙுஙுக] असत्ता जाडचदुःखे द्वे मायारूपं त्रयं त्विदम् ।
असत्ता नरशृंगादौ जाडचं काष्ठशिलादिषु ॥ २३ ॥

(அ-கை.)

அப்படியானால் சத்து சித்து ஆநந்தம் பிரஹ்மவடிவமாகவே: மாயைக்கு வடிவம் யாது? என்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

असत्ता जाड्यदुःखे द्वे इदं त्रयं तु मायारूपं । नरशृंगादौ असत्ता । काष्ठशिलादिषु जाड्यम् ॥

(சு-ம்.)

அசத்துத்தன்மையும், ஜடத்தன்மை துக்கமென்னும் இரண்டுமாகிய இம்மூன்றுமே மாயையின் வடிவமாம். அவற்றினின்றும் மனிதக்கொம்பு முதலியசொரூபமில்லாதவற்றில் அசத்துத்தன்மை யிருக்கின்றது. கட்டைகல்முதலிய அநிர்வசநீயவஸ்துக்களில் ஜடத்துவ மிருக்கின்றது.

(வி-ம்.)

மனிதக்கொம்புமுதலியவற்றில் அசத்துத்தன்மை யிருக்கின்றது. மண் கல்முதலியவற்றில் ஜடத்துவ மிருக்கின்றது என்பது விவேகம். (உங)

ங. துக்கத்தின் ஸ்தானமும், கஙுஙுக-வது சுலோகத்திற் கூறப்பட்ட மாயையின் தோற்றத்தோடு சாந்தமுதலியவற்றில் மிசிரப் பிரஹ்மத்தின் தோற்றத்தில் காரணமும்.

[கஙுசுo] घोरमूढधियोर्दुःखमेवं माया विजृंभिता ।
शांतादिबुद्धिवृत्त्यैक्यान्मिश्रं ब्रह्मेति कीर्तितम् ॥ २४ ॥

(அ-கை.)

துக்கமெங்குளதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

घोरमूढधियोः दुःखम् ॥

(சு-ம்.)

கோரமூடபுத்திவிருத்திகளில் துக்கமிருக்கின்றது.

(அ-கை.)

இவ்விதமாக எல்லாவிடத்திலும் மாயை தோற்றுகின்றதென்று கூறுகின்றார்:—

एवं माया विजृंभिता ॥

(சு-ம்.)

இவ்வாறு மாயை விசிரும்பித்திருக்கின்றது அதாவது பிரகாசத்தை அடைகின்றது.

(அ-கை.)

சாந்தமுதலியவிருத்திகளில் பிரஹ்மத்தின் மிசிரத்தன்மை அதாவது பிரபஞ்சத்தோடுகூடியதன்மை முன் எது கருளஉ-ல் கூறப்பட்டதோ அதில் காரணம் யாதெனக் கூறுகின்றார்:—

शांतादिबुद्धिवृत्त्यैक्यात् "मिश्रं ब्रह्म" इति कीर्तितम् ॥

(சு-ம்.)

சாந்தமுதலிய புத்திவிருத்திகளோடு அபேதமாயிருத்தலால் "மிசிரப்பிரஹ்மம்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (உச)

உ விருத்தியோடுகூடிய மூன்றுவிதமும் விருத்தியின்றிய ஒருவிதமுமான பிரஹ்மத்தின் தியானம் கருசுக-கருசுரு.

க. சுலோகம் கருகூ முதற் சொல்லப்பட்ட அர்த்தத்தின் பிரயோஜனமும் (பிரஹ்மத்தியானமும்), அதன்றன்மையும்.

[கருசுக] एवं स्थितेऽत्र यो ब्रह्म ध्यातुमिच्छेत्पुमानसौ ।
नृशृंगादिमुपेक्षेत शिष्टं ध्यायेद्यथायथम् ॥ २५ ॥

(அ-கை.)

இந்த முற்கூறிய அர்த்தத்தினைச் சொல்லுதல் எதன்பொருட்டென்றாசங்கித்து, பிரஹ்மத்தினது தியானத்தின்பொருட்டாமென்று கூறுகின்றார்:—

एवं स्थिते अत्र यः ब्रह्म ध्यातुं इच्छेत् असौ पुमान् ॥

(சு-ம்.)

இவ்வாறு (பிரஹ்மமாயைகளின் சொரூபம்) நிலைக்கவே இங்கு எந்த மந்தபுத்தியுடைய அதிகாரி புருஷன் பிரஹ்மத்தினைத் தியானிக்க இச்சிக்கின்றானோ அப்புருஷன்.

(அ-கை.)

மனிதக்கொம்புமுதலியவற்றை உபேக்ஷித்து அதாவது பெயரை மறந்து வேறிடத்தில் பிரஹ்மத்தின் நிரந்தரம் சிந்தித்தலாகிய தியானம் செய்யவேண்டுமென்று கூறுகின்றார்:—

नृशृंगादिं उपेक्षेत । शिष्टं यथायथं ध्यायेत् ॥

(சு-ம்.)

மனிதக்கொம்புமுதலியவற்றை உபேக்ஷை செய்யவேண்டும். மிஞ்சியிருக்கும் பிரஹ்மத்தினை உள்ளவாறு தியானிக்கவேண்டும் அதாவது நிரந்தரம் சிந்திக்கவேண்டும். (உரு)

உ. சுலோகம் கடுசுக-ல் கூறிய தியானம் மூவகையாதல்.

[கடுசுஉ] शिलादौ नामरूपे द्वे त्यक्त्वा सन्मात्रचिन्तनम् ।
त्यक्त्वा दुःखं घोरमूढधियोः सच्चिद्विचिंतनम् ॥ २६ ॥

(அ-கை.)

"வேறிடத்தில் பிரஹ்மத்தின் தியானம் செய்யவேண்டு" மென்று கடுசுக-வது சுலோகத்திற் சொல்லப்பட்டது. அது எந்த இடத்தில் எப்படிப் பிரஹ்மத்தின் தியானம் செய்யுத்தக்கதாமெனக் கூறுகின்றார்:—

शिलादौ नामरूपे द्वे त्यक्त्वा सन्मात्रचिंतनम् ॥

(சு-ம்.)

கல்முதலியவற்றில் நாமரூபங்கள் இரண்டையும் விட்டுச் சத்துமாத்திரத்தின் சிந்தனம் செய்யவேண்டும்.

(அ-கை.)

கோரமூடவிருத்திகளில் துக்கத்தினை விட்டுச் சத்துச்சித்துவடிவத்தின் சிந்தனம் செய்யவேண்டியதா மென்று கூறுகின்றார்:—

घोरमूढधियोः दुःखं त्यक्त्वा सच्चिद्विचिंतनम् ॥

(சு-ம்.)

கோரமூடவிருத்திகளில் துக்கத்தினை விட்டுச் சத்துச்சித்துக்களின் சிந்தனம் செய்யவேண்டும். (உசு)

[கடுசுஙு] शांतासु सच्चिदानंदांस्त्रीनप्येवं विचिंतयेत् ।
कनिष्ठमध्यमोत्कृष्टास्तिस्रश्चिंताः क्रमादिमाः ॥ २७ ॥

(அ-கை.)

சாத்துவிகவிருத்திகளில் சத்து சித்து ஆநந்த மென்னும் மூன்றும் தியானஞ்செய்யத்தக்கனவா மென்று கூறுகின்றார்:—

एवं शांतासु सच्चिदानन्दान् त्रीन् अपि विचिंतयेत् ॥

(சு-ம்.)

இவ்வாறு சாந்தவிருத்திகளில் சத்துச் சித்து ஆநந்தம் என்னும் மூன்றினையும் சிந்திக்கவேண்டும்.

(அ-கை.)

இம்மூன்றுவிதமான தியானத்திற்கும் சமத்துவ மிருக்கின்றதா? வென இல்லை யென்று கூறுகின்றார்:—

इमाः तिस्रः चिंताः क्रमात् कनिष्ठमध्यमोत्कृष्टाः ॥

(சு-ம்.)

இந்த கடுசுஉ-வது சுலோகமுதற்கூறிய மூன்று தியானங்களும் கிரமமாகக் கனிஷ்டம் மத்தியமம் உத்தமம் எனப்படும். (உஎ)

ரு. நிர்க்குணப்பிரஹ்மத்தின் தியானத்தில் அநதிகாரிக்கு கடுசுஉ-வது சுலோகத்திற் கூறிய தியானத்தில் அதிகார முண்மை.

[கடுசுசு] मंदस्य व्यवहारेऽपि मिश्रब्रह्मणि चिन्तनम् ।
उत्कृष्टं वक्तुमेवात्र विषयानंद ईरितः ॥ २८ ॥

(அ-கை.)

இப்போது நிர்க்குணப்பிரஹ்மத்தின் தியானத்தில் அதிகாரமில்லாத புருஷர்களின் அநுக்கிரகத்தின்பொருட்டு அவர்களுக்கு மிசிரப்பிரஹ்மத்தின் தியானத்தில் அதிகார முண்டு என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்:—

मन्दस्य व्यवहारे अपि मिश्रब्रह्मणि चिंतनं उत्कृष्टं वक्तुं एव अत्र विषयानन्दः ईरितः ॥

(ப-ம்.)

ஸ்தூலபுத்தியுடைய புருஷனுக்கு * எ. வியவகாரத்திலும் மிசிரப் பிரஹ்மத்தினைச் சிந்தித்தல் சிரேஷ்டமா மென்பதனைச் சொல்லுதற்கே இந்த வேதாந்தப்பிரகரணத்தில் விஷயாநந்தம் சொல்லப்பட்டிருக்கின்றது. (உ௮)

ச. விருத்தியின்றிய தியானமும் ௧௫௯௨-வது சுலோகமுதல் கூறிய அர்த்தத்தின் சூசனமும்.

[௧௫௯௫] औदासीन्ये तु धीवृत्तेः शैथिल्यादुत्तमोत्तमम् ।
चिंतनं वासनानंदे ध्यानमुक्तं चतुर्विधम् ॥ २९ ॥

(அ-கை.)

இப்படி விருத்தியோடுகூடிய மூன்றுவிதத் தியானத்தைக் கூறி விருத்தியின்றிய தியானத்தினைக் கூறுகின்றார்:—

औदासीन्ये तु धीवृत्तेः शैथिल्यात् वासनानंदे चिंतनं उत्तमोत्तमम् ॥

(ப-ம்.)

உதாசீனத்தன்மையிலோ புத்திவிருத்தியின் தளர்ச்சியால் வாசனாநந்தத்தில் சிந்தித்தல் எதுவோ அது உத்தமோத்தமாம் அதாவது கூறிய மூன்று தியானத்தினும் அதிகமாம்.

(அ-கை.)

சுலோகம் ௧௫௯௨-வது முதல் கூறிய அர்த்தத்தினைச் சூசனை செய்கின்றார்:—

चतुर्विधं ध्यानं उक्तम् ॥

(ப-ம்.)

இவ்வாறு நான்கு விதமான தியானம் சொல்லப்பட்டது. (உ௯)

*எ. எந்த மந்தமதியுடைய அதிகாரிக்கு விசாரத்தின் வலியால் விருத்திமுதலிய பிரபஞ்சத்தினை நிஷேதித்துச் சுத்தசச்சிதாநந்தப்பிரஹ்மத்தினை அறிதற்குச் சக்தியில்லையோ, அவன் விருத்திமுதலிய பிரபஞ்சவடிவ வியவகாரத்தில் சச்சிதாநந்தத்தினைக் கிரமமாகச் சிந்தித்துப் பின் அப்பியாசபலத்தால் எங்கும் சச்சிதாநந்தப்பிரஹ்மத்தினை அறியக்கூடும். இக்காரணத்தால் இங்கு விஷயாநந்தம் சொல்லப்பட்டிருக்கின்றதென்பது கருத்து.

௧. சுலோகம் [illegible] முதல் கூறிய தியானம் பிரஹ்மவித்தையாதல்
க[illegible].

௨. சுலோகம் [illegible] கூறிய தியானத்தின் தியானத்தன்மையின் விசேஷித்த
போக பிரஹ்மவித்தியாத்தன்மையும் அதன் உற்பத்திக்கிரமமும்.

[கடுஅ] न ध्यानं ज्ञानयोगाभ्यां ब्रह्मविद्यैव सा खलु ।
ध्यानेनैकाग्र्यमापन्ने चित्ते विद्या स्थिरीभवेत् ॥ ३० ॥

(அ-கை.)

இஃது என்னை தியானத்தின் அவாந்தரபேதமா? வென அல்ல வென்று கூறுகின்றார்:—

ज्ञानयोगाभ्यां ध्यानं न ॥

(சு-ம்.)

ஞானம் யோக மிரண்டு மிருத்தலால் இது தியான மன்று.

(அ-கை.)

அப்போது இது யாது என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

सा खलु ब्रह्मविद्या एव ॥

(சு-ம்.)

அது நிச்சயமாகப் பிரஹ்மவித்தையேயாம்.

(அ-கை.)

இந்தப் பிரஹ்மவித்தை எப்படி யுண்டாயிற் றென்று ஆசங்கித்துக் கூறுகின்றார்:—

ध्यानेन ऐकाग्र्यं आपन्ने चित्ते विद्या स्थिरीभवेत् ॥

(சு-ம்.)

தியானத்தினால் ஏகாக்கிரத்தன்மையினை அடைந்த சித்தத்தில் வித்தையாகிய ஞானம் ஸ்திரமாகின்றது. (௩௦)

௨. இந்தத் தியானத்தின் பிரஹ்மவித்தியாத்தன்மையில் ஏது.

[கடுகூ] विद्यायां सच्चिदानंदा अखंडैकरसात्मताम् ।
प्राप्य भांति न भेदेन भेदकोपाधिवर्जनात् ॥ ३१॥

(அ-கை.)

இதன் வித்தியாத்தன்மையில் ஏதுவைக் கூறுகின்றார்:—

विद्यायां सच्चिदानन्दाः अखण्डैकरसात्मतां प्राप्य भांति । भेदेन न । भेदकोपाधिवर्जनात् ॥

(சு-ம்.)

*அ. ஞானத்தில் சத்துச் சித்து ஆநந்தவடிவமான பிரஹ்மத்தின் ஸ்வபாவங்கள் அகண்டைகரஸவடிவத்தன்மையினை அடைந்து விளங்குகின்றன; பேதமாக விளங்குகிறதில்லை; ஏனெனின், பேதத்தைச் செய்யும் உபாதிகளின் நிஷேதமிருக்தலால். (௩௧)

௩. பிரஹ்மாம்சத்தினைப் பேதிக்கும் உபாதி(விருத்தி)யும், அதனைப் பரிகரிக்கும் உபாயமும்.

[௩௰௨] शांता घोराः शिलायाश्च भेदकोपाधयो मताः ।
योगाद्विवेकतो वैषामुपाधीनामपाकृतिः ॥ ३२ ॥

(அ-கை.)

"பேதிக்கும் உபாதிகளின் நிஷேதத்தால்" என்று ௩௰௧-வது சுலோகத்திற் சொல்லப்பட்டது. அந்தப் பேதிக்கும் உபாதிகளையே கூறுகின்றார்:—

शांताः घोराः च शिलायाः भेदकोपाधयः मताः ॥

(சு-ம்.)

சாந்தவிருத்திகளும், கோரவிருத்திகளும், மூடக்கல்முதலியனவும் பேதிக்கும் உபாதிகளாக மதிக்கப்பட்டிருக்கின்றன.

(அ-கை.)

இவ்வுபாதிகளின் நீக்கம் எந்த உபாயத்தினால் நீங்குமென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

योगात् वा विवेकतः एषां उपाधीनां अपाकृतिः ॥

(சு-ம்.)

சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மைவடிவ யோகத்தினால் அல்லது விவேகத்தினால் இவ்வுபாதிகளின் நீக்கமுண்டாகின்றது. (௩௨)

---

*அ முதல் தியானகாலத்தில் சத்து சித்து ஆநந்தம் என்னும் பிரஹ்மத்தின் சுபாவங்கள் உபாதிகளின் பேதத்தால் வேறுவேறாகத் தோற்றுகின்றன. பின் தியானத்தின் அப்பியாசத்தினால் ஏகாக்கிரமாகிய சித்தத்தில் விசாரத்தினால் உபாதிகள் நீங்குதலால் சச்சிதாநந்தங்கள் அகண்ட ஏகரஸமாய்த் தோற்றுகின்றன. ஆதலால் இது பிரஹ்மவித்தையேயாம்; தியானம் (உபாசனை) அன்று என்பது பொருள்.

௪. பலிதார்த்தத்தினைக் கூறுதல்.

[௧௫௩௩] निरूपाधिब्रह्मतत्त्वे भासमाने स्वयंप्रभे ।
अद्वैते त्रिपुटी नास्ति भूमानंदोऽत उच्यते ॥ ३३ ॥

(அ-கை.)

பலிதார்த்தத்தினைக் கூறுகின்றார்:—

स्वयंप्रभे अद्वैते निरूपाधिब्रह्मतत्त्वे भासमाने त्रिपुटी न अस्ति । अतः भूमानन्दः उच्यते ॥

(சு-ம்.)

சுவயம்பிரகாசமும் அத்வைதரூபமுமாகிய நிருபாதிகப்பிரஹ்மதத்துவம் தோற்றுங்கால் திரிபுடி தோற்றுகிறதில்லை. ஆதலால் இந்தப் பூமாவாகிய பிரஹ்மம் ஆநந்தமெனப்படுகின்றது.

(வி-ம்.)

ஞாதா, ஞானம், ஞேயமென்னும் திரிபுடியின் தோற்றமின்மையால் இந்தப் பூமா அதாவது தேசகாலவஸ்துவினாலாகிய பரிச்சேதமின்றிய பிரஹ்மம் ஆநந்தமெனப்படுகின்றது. (௩௩)

௫. கிரந்தத்தின் சமாப்தி.

௧௫௩௪] ब्रह्मानंदाभिधे ग्रंथे पंचमोऽध्याय ईरितः ।
विषयानंद एतेन द्वारेणांतः प्रवेश्यताम् ॥ ३४ ॥

(அ-கை.)

கிரந்தத்தினை முடிக்கின்றார்:—

ब्रह्मानन्दाभिधे ग्रंथे पञ्चमः अध्यायः ईरितः विषयानन्दः एतेन द्वारेण अन्तः प्रवेश्यताम् ॥

(சு-ம்.)

பிரஹ்மாநந்தமென்னும் ஐந்து அத்தியாயவடிவ கிரந்தத்தில் ஐந்தாவது அத்தியாயம் கூறியது விஷயாநந்தமாம். இவ்விஷயாநந்தவடிவவாயிலால் பிரஹ்மாநந்தத்தினுள் பிரவேசிக்குக. (௩௪)

௯. கிரந்தத்தின் முடிவில் ஆசீர்வாதவடிவ மங்கலம்.

[க௫௭௦] प्रीयाद्धरिहरोऽनेन ब्रह्मानंदेन सर्वदा ।
पायाच्च प्राणिनः सर्वान्स्वाश्रितांश्शुद्धमानसान् ॥ ३५ ॥

(அ-கை.)

இதுவுமது:—

अनेन ब्रह्मानन्देन हरिहरः सर्वदा प्रीयात् च स्वाश्रितान् शुद्धमानसान् सर्वान् प्राणिनः पायात् ॥

(சு-ம்.)

இந்தப் பிரஹ்மாநந்தத்தின் நிரூபணத்தினால் ஹரிஹரர் அதாவது விஷ்ணுவினும் வேறாகாத சிவன் எப்போதும் பிரசன்னராகுக. தன்னை ஆசிரயித்த சுத்தமனதுடைய சகல பிராணிகளையும் ஜநநமரணாதிவடிவ சம்சாரத்தினின்றும் இரக்ஷிக்க. (௫௫)

தஞ்சமென் றடைந்த மாந்தர் சனனநோய் சபிக்கும் மேலோன்
றஞ்சைமா நகரில் விண்டுத் தனிப்பெயர் தாங்கி யார்க்கு
மெஞ்சலி லின்ப வீட்டை யினிதருள் குரவன் காக்க
வஞ்சக மிலாத விந்த மாவுரை தழைக்கு மாறே.

பிரஹ்மாநந்தத்தில்
ஐந்தாவது அத்தியாயமாகிய,
விஷயாநந்த மென்னும்
பதினைந்தாம் பிரகரணம் முடிந்தது.

## ॥ समाप्तोऽयं ग्रंथः ॥

# ஸ்ரீ பஞ்சதசி

## முற்றிற்று.

